கால்டுவெல்

# திருநெல்வேலி சரித்திரம்

மொழியாக்கம்

பேராசிரியர் ந.சஞ்சீவி

பேராசிரியர் கிருட்டிணா சஞ்சீவி

காவ்யா

கால்டுவெல் திருநெல்வேலி சரித்திரம் காவ்யா

பேராசிரியர் ந.சஞ்சீவி அவர்களுக்கு
வரலாற்றில் பெரிதும் ஈடுபாடு உண்டு.
விடுதலைக்கு வித்திட்ட வீரர்களைப்
பற்றியும் விரிவாக எழுதியுள்ளார்.
இந்நூலை அவர் தன் துணைவியாரோடு
சேர்ந்து எழுதி முடித்திருக்கிறார்.
இது கால்டுவெல்லின் ஆங்கில
நூலின் மொழியாக்கமாகும்.
- காவ்யா சண்முகசுந்தரம்

# தென்பாண்டித் திருநாடு

அல்லது

# திருநெல்வேலி வரலாறு

(1881)

சேலம்

பிஷப். டாக்டர் கால்டுவெல்

(1814-1891)

96 ஆண்டுகட்குப் பின் வெளிவரும்

முதல் தமிழாக்கம்

பேராசிரியை திருமதி. கிருட்டிணா சஞ்சீவி, எம்.ஏ., பி.டி.,
பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி, எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி
டிப். மானிடவியல்
டிப். அரசியல் - ஆட்சியில்.

(1977)

## பதிப்புரை

பேராசிரியர் ந. சஞ்சீவி எனது முனைவர் பட்டத்துக்கான வழிகாட்டி மட்டுமன்று; ஒரு மகனைப் போன்று என்னை நேசித்தவர்; ஒரு நண்பரைப் போன்று அறிவுரை கூறியவர். அவரோடு ஐந்தாண்டு காலம் மாணவராகவும், பத்தாண்டு காலம் நண்பராகவும் வாழும் பேறு எனக்குக் கிடைத்தது. அதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன். இந்நூலாக்கம் அவருக்கு நான் செய்யும் நன்றிகடன் மட்டுமன்று, எனக்கே நான் செய்து கொள்ளும் கடமை என்று கருதுகிறேன்.

நான் திருநெல்வேலிக்காரன். திக்கெல்லாம் புகழ் பரப்பும் திருநெல்வேலி என்பதில் எனக்கு பெரிதும் பெருமை உண்டு. எனது சீமையைப் பற்றி கால்டுவெல் எழுதியது என் மண்ணுக்குக் கிடைத்த மகத்தான சிறப்பு. என் பேராசிரியர் ஆங்கிலத்தில் உள்ள நூலைத் தமிழில் மொழியாக்கம் செய்ததில் எனக்கு இரட்டிப்பு பெருமை கிடைத்தது.

பேராசிரியர் ந. சஞ்சீவி வரலாற்றின் மீது பெரிதும் ஈடுபாடு கொண்டவர். இவர் பூலித்தேவர், கான்சாகிபு, மருது சகோதரர்கள், வேலூர் புரட்சி பற்றிய விடுதலை போராட்ட வரலாற்றினை விரிவாக எழுதியுள்ளார். அவர் தம் துணைவியாரோடு சேர்ந்து மொழியாக்கம் செய்ததே இந்நூல். இது தமிழ் வரலாற்று உலகிற்கு ஒரு நன்கொடை. இவர்கள் இலக்கியத் தம்பதிகள் மட்டுமன்று; இலட்சிய தம்பதிகளும் கூட.

இவர்களது அருமை புதல்வியார் முனைவர் எழிலரசியும் அவரது துணைவர் முனைவர் பாலசுப்பிரமணியமும் இந்நூல் வெளிவர அனுமதியும் ஆதரவும் தந்தனர். சத்யகங்கை இதழில் இது தொடராக வந்தது. அவற்றைச் சேகரித்து ஒழுங்கு படுத்தி வைத்திருந்தனர். இதற்காக தமிழ் உலகமும் திருநெல்வேலிக்காரர்களும் பெரிதும் கடன்பட்டுள்ளனர். காவ்யா சார்பாக அவர்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்.

இவ்வாண்டு போலவே, இனி தொடர்ந்து ஆண்டு தோறும் இரு நூல்கள் வெளியிடும் ஆசை எனக்குண்டு. இதற்கு வாசகர்களின் உதவி தேவை. உங்களது ஒத்துழைப்பே எங்களுக்கு உற்சாகம் தரும்.

அன்புடன்
காவ்யா சண்முகசுந்தரம்.

## அணிந்துரை

பிஷப் டாக்டர் கால்டுவெல்லின் திருநெல்வேலி சரித்திரம் என்னும் ஆங்கில மூலநூலின் முதல் தமிழாக்கமாகத் 'தென் பாண்டித் திருநாடு' என திரு.பகீரதன் அவர்களின 'சத்ய கங்கை'யில் 1970 முதல் 1976 வரை வெளியானதே இத்தொடர். பேராசிரியர் ந.சஞ்சீவி அவர்களைப் பற்றி அறிந்தோர்க்கு இந்த ஆண்டுகள் பற்றிய நினைவுகளும் மறையாமல் நினைவிருக்கும்.

இத்தமிழாக்க நூலைப் பற்றிய உணர்வுப் பிணைப்புகள் பேராசிரியர் அவர்களின் வேறெந்த நூல்களைவிடவும் எனக்கு மிக அதிகமாக உண்டு. இத்தமிழாக்கம் பேராசிரியர் அவர்களின் துணைவியார் எனது தாய் பேராசிரியை திருமதி.கிருட்டிணா சஞ்சீவி அவர்களின் முழு முதல் முயற்சியாகும். நகலகங்கள் புழக்கத்தில் இல்லாத 1950களில் கையெழுத்துப் படியாக எடுக்கப்பட்டு என்னிடம் இன்னும் பத்திரமாக உள்ள மூல நூல் முழுமையும் காணும் போதெல்லாம் என் கண்களைக் கசிய வைக்கும். இந்த மூல நூல் படியெடுப்பும் அதற்கான தமிழாக்கமும் 1955ல் நான் என் தாயின் மடியில் இருந்த காலத்தில் நடந்தது என்பதை நான் அறிந்ததே இந்நூலுடனான எனது உணர்வுப் பிணைப்புகளுக்கான காரணமாகும்.

இத்தொடர் சத்ய கங்கையில் வெளியான போது நானும் இத்தொடரின் ரசிகையானேன். மூல நூலின் சுவை சிறிதும் சிதையாமல் கவனமெடுக்கப்பட்டிருக்கும் இந்நூலின் சுவையை இடையிடையே வரும் பேராசிரியர் டாக்டர்.ந.சஞ்சீவி அவர்களின் திறனாய்வுக் குறிப்புகள் அதிகரிப்பதாகவே எண்ணுகின்றேன்.

மூல நூலில் காணப்படும் சத்ய கங்கையில் வெளிவராத

ஐந்து பிற்சேர்க்கைகளும் இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளன. பதினைந்து ஆண்டுகள் காத்திருந்து அச்சேறிய இத்தொடர், அதுபோல் இருமடங்கு காலம் கழித்து காவ்யாவின் துணையுடன் நூல்வடிவம் கொண்டுள்ளது. காவ்யாவிற்கும், முனைவர் திரு. சண்முகசுந்தரம் அவர்களுக்கும் அவரது கனவுகளை நனவாக்கும் அவரது துணைவியார்க்கும் எங்கள் நன்றி என்றும் உரியது.

எழிலரசி பாலசுப்பிரமணியன்.

நவம்பர் 2004

# இயல் - 1

## பழங்காலம் முதல் பிரிட்டிசு ஆட்சி தோன்றிய காலம் வரை பண்டைக்காலம் பற்றிய புறச்சான்றுகள்

### வரலாற்று மூலங்களின் குறைபாடுகள்

இந்தியாவிலுள்ள பல மாவட்டங்களின் பழைய வரலாறு பற்றிய உறுதியான செய்திகள் மிகக் குறைவாகவே உள்ளன. மெய்ப்பொருளியல், காவியம், நீதி, கணிதம், சிற்பம், இசை, நாடகம், சிறப்பாகச் சமய ஆராய்ச்சி அல்லது யோகப் பயிற்சி, மெய்ப்பொருட் சிந்தனைகள், மெய்ப்பொருள் ஆய்வு என்பனவற்றில் இந்தியர்கள் விருப்பமுடையவர்களாயிருந்த போதிலும் வரலாற்றைப் பற்றி அவர்கள் ஒரு சிறிதும் கவலைப்படவில்லை என்பது பேருண்மையாகும். 'ஹிஸ்டரி' என்னும் மேனாட்டுச் சொல்லின் மூலப்பொருள் 'ஆராய்ச்சி' என்பதுதான். ஆனால், இந்துக்கள் (இந்தியர்கள்) ஆராய்ச்சி புரிய ஒருபோதும் அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை. (இது பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு - ந.ச.) இந்திய வீரவரலாற்றுக் காவியங்களில் அல்லது புராணங்களில் 'ஆராய்ச்சி' என்னும் பெயரில் போற்றத்தக்க செய்தி எதுவும் இல்லை. சில காரணங்களால் இந்தியாவிற்குட்பட்ட பகுதிகளில் எழுதப்பட்டு அவற்றின் உரிமையெனப் போற்றப்படும் வரலாறுகளே இந்தியாவில் தோன்றிய வரலாறுகளாய் இருக்கின்றன. அவை காஷ்மீரின் ராஜதரங்கினி[1], இலங்கையின் மகாவமிசம்[2] என்பன. உண்மையில் இந்நூல்களில் கவிதைக் கற்பனைகளும், விவரங்கள் பற்றிய நுணுக்கங்களில் தெளிவின்மையும் மிகுதி. ஆயினும், மொத்தத்தில் அவற்றை வரலாற்றுச் சார்புடையவை என்று ஏற்றுக் கொள்ளலாம். இந்தியாவில் வழிவழித் தோன்றிவந்த கற்பனைத் தத்துவங்களின் ஆட்சியால்

---

*1. ராஜதரங்கினி - ராஜாக்களின் ஓடை, கி.பி. 1148இல் எழுதப் பட்டது.*

*2. மகாவமிசம் (வடமொழி வம்சா) பெருங்கோ மரபு கி.பி. 459, 477க்கு இடையே எழுதப்பட்டது.*

நடைமுறையில் வரலாறும் (இலக்கியத்தில்) விளக்கம் பெறாத பகுதியே ஆகிவிட்டிருக்குமோ? இதுவும் அதற்கு ஒரு காரணமாயிருக்கலாம். ஆயினும், தலைமுறைத் தலைமுறையாகப் பொதுமக்கள் காவிய அணிகளில் கொண்டிருந்த விருப்பமே இதற்கு முக்கியக் காரணமாகும். அரசன் ஒருவனது வரலாற்றிலோ, அல்லது நாட்டின் வரலாற்றிலோ நடந்த எந்த ஒரு நிகழ்ச்சியையும் அது நடந்தவாறே எழுதி வைத்தல் அவர்கட்கு உற்சாகமற்றதாகவே தென்பட்டது. (தமிழில் சங்கப் பாடல்கள் தவிர - ந.ச.). காவியப் புலவனது வளமான கற்பனைத் திறம் மட்டினறித் தொழிற்படின், அதே பொருளை இன்னும் சுவையுள்ளதாகச் செய்யலாம் என்று மக்கள் கருதினார்கள். எக்காரணமாயிருந்தபோதிலும், இந்தியாவிலுள்ள எப்பகுதியின் பழைய வரலாற்றுத் தொடர்பான உண்மை கிடைத்தாலும், அவை ஒவ்வொரு மாவட்டத்துக்கும் உரிமையான இந்திய இலக்கியச் செல்வர்கள் வாயிலாகத் தோன்றியிருக்கும் செய்யுள், உரைநடை இலக்கியங்களின் மூலம் கிட்டாது. ஆனால், நாணயங்கள், கல்வெட்டுகள், பிற நாட்டவர்கள் எழுதிவைத்துள்ள புத்தகங்களின் வாசகங்கள் மூலம் மட்டுமே அவை கிடைக்கும் என்பது மறுக்க இயலாத உண்மையாகும். சான்றாகச் சோழ பாண்டியர்களின் பழைய வரலாறுகளைப் பற்றிய விளக்கத்தைச் சிங்களவரின் மகாவமிசம் தருகிறது. தென் இந்திய வரலாறு பற்றிய சுவையான சில செய்திகட்கு நாம் கிரேக்க - வடநாட்டு முகம்மதிய - ஐரோப்பிய கிறித்தவ வழிப்போக்கர்கட்கு (பயணிகட்கு) மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

1879 ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் யான் நிகழ்த்திய சொற்பொழிவின் ஒரு பகுதியை இங்கு எடுத்துக்காட்டுவது பொருத்தமாகும்.

வரலாற்றுக் கல்வி, பழைய இலக்கிய ஆராய்ச்சி, நாட்டின் கல்வெட்டு ஆராய்ச்சி ஆகிய இவை கற்றறிந்த உள்நாட்டாரால் ஒழுங்கான முறையில் மேற்கொள்ளப்பட்டாலன்றி, ஒரு போதும் முழுமையை அடைய இயலாது. தேசியப் பெருஞ் சிறப்பு வாய்ந்த முடிவுகளைக் காண்பது என்பதும் இயலாது. பிழையற்ற வகையில் வரலாற்றைக் காணும் ஊக்கம் படைத்த, ஐரோப்பிய முறையில் பயிற்சி பெற்ற கற்றறிந்த கல்கத்தா, பம்பாய் மக்களுட் சிலர், ஏற்கெனவே இவ்வகை ஆராய்ச்சித் துறையில் பயனளிக்கத் தக்கபடி ஈடுபட்டுள்ளனர். தென்னாட்டு அறிஞர்களும் இந்த அறிவாராய்ச்சிப் பந்தயத்தில் பின்னடையக் கூடாது என்ற உறுதியை மேற்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.



இதுவரை தெரியாமலும் கருதாமலும் விடப்பட்ட கல்வெட்டுகளைத் தேடுதல் வேண்டும். அவற்றுள் பெரும்பாலானவை ஒவ்வொரு கிராமத்தின் கோயில்களின் உட்புறச் சுவர்களிலும் காணப்படும். அவற்றைக் கவனித்து அறிதல் மூலமாகக் கற்றறிந்த பகுதிவாழ் மக்கள் தங்கள் நாட்டின் வரலாற்று ஆராய்ச்சிக்குச் சிறந்த தொண்டு புரியலாம். கல்வெட்டுக்களிலிருந்தும் நாணயங்களி லிருந்தும் உருவாகும் பழைய இந்திய வரலாறே சிறப்புடையது. புகழ்பெற்ற கற்பனைக் கதைகள், காவியக் கட்டுக் கதைகள் முதலியவை எந்தப் பெயரால் போற்றப்பட்டபோதிலும் அவை புறக்கணிக்கப்பட வேண்டும். இதனால், இழப்பு ஏற்படாதது மட்டுமின்றி, மிக்க நன்மையும் விளையும். நம்பிக்கை அற்ற வழிகாட்டியைவிடச் சொந்த அறிவே மிகச் சிறந்தது. ஏற்கெனவே கல்வெட்டுக்களை ஐரோப்பியர்கள் தேடி அவற்றிற்கு விளக்கம் தரும் முறையில் சிறிது வேலை செய்திருக்கின்றனர். இவை கல்கத்தா, பம்பாய் முதலிய இடங்களைவிடச் சென்னையில் மிகக் குறைவான முறையில் செய்யப்பட்டுள்ளன. ஆனால் ஐரோப்பியர் சிலர் எவ்வாறு தம்மையே அதற்காகக் காணிக்கையாக்கி ஊக்கத்துடன் இத்துறையில் உழைக்கின்றார்களோ, அவ்வாறே கற்றறிந்த உள்நாட்டவரும் உழைக்க முற்படின், அவர்கள் செய்ய வேண்டுபவை பல இருக்கின்றன; என்றும் இருந்து கொண்டு இருக்கும். இந்தியாவில் வசித்துவரும் ஐரோப்பியர்களுக்கு இல்லாத பல வசதிகள் உள்நாட்டாருக்கு இருக்கின்றன. சூரிய வெப்பத்திற்கு அவர்கள் அஞ்ச வேண்டுவதில்லை. எந்த இடத்தில் பழமையானதைக் கண்டாலும், எவ்வித இடையூறுமின்றிப் பயணத்தின் போது தங்கி ஆராய்வதற்கு வசதி உண்டு. மேலும், ஐரோப்பியர்கள் கோவில்களின் வெளிச்சுவரில் உள்ள கல்வெட்டுக்களை ஆராய்வதோடு மட்டும் மனநிறைவு அடைய வேண்டியதுதான். ஆனால், உள்நாட்டார் கோவில்களின் உட்புறச் சுவர்களிலுள்ளவற்றையும் ஆராயலாம். மதிப்புள்ள உள்நாட்டுக் குடும்பத்தினர் பலர் தம்மிடமிருக்கும் செப்பேடுகளை ஐரோப்பியர்களுக்கு ஆராய்ச்சிக்காகக் கொடுக்க மறுக்கிறார்கள். ஆனால், உள்நாட்டார் எளிதில் இச் செப்பேடுகளை ஆராய இயலும் (உள்நாட்டார்க்கும் இவ்வகையில் ஏமாற்றமே! - ந.ச.). இம்மாநிலத்தின் தமிழ் மாவட்டங்களிலுள்ள கற்றறிந்த தமிழர் ஒவ்வொருவருக்கும் புதைபொருள் ஆராய்ச்சித் துறையில் எளிமையான - ஆனால் இன்றியமையாத - வேலை இருக்கிறது. எனவே, காலங்கடக்குமுன் ஒவ்வொருவரும் பொதுவாக இழந்துவிட்டதாகக் கருதப்படும் மாநிலத் தாய்மொழியிலுள்ள பல புத்தகங்களைத் தேடிக் கண்டுபிடிக்க

வேண்டும். பழங்காலத் தமிழ்ப் புத்தகங்களின் பெயர்கள் மட்டுமே நிலைத்து நிற்கின்றன. அதற்கு முன்பு பல புத்தகங்கள் எழுதப்பட்டிருக்க வேண்டும்; ஆனால், அவற்றின், பெயர்கள் கூட மறைந்துவிட்டன. தமிழ் இலக்கியத்திற்கு இளமைப் பருவமே இல்லாதது போலத் தோன்றுகிறது; கிரேக்கர்களின் கல்வித் தேவதையாகிய மினர்வா ஜூப்பிடரின் தலையினின்றும் முழு வளர்ச்சியுடனும், போர்க்கோலத்துடனும் புறப்பட்டது போன்றிருக் கிறது. இதற்குக் காரணம், மொழியின் இளமைப்பருவத்தைக் காட்டும் ஒவ்வொரு நூலும் அழிந்து போய்விட்டதே என்பது தெரிகிறது. கற்றறிந்த உள்நாட்டார் மடங்களிலும் வீடுகளிலும் கருத்துடன் தேடினால், அம்முயற்சிக்குச் சிறந்த பரிசாக மதிப்புள்ள சில உண்மைகள் கண்டுபிடிக்கப்படலாம் (ஒவ்வொரு தமிழனும் உன்னி உன்னி உடல் குன்னி குன்னிச் செயல்பட ஒளிகாட்டும் உயர் மொழிகள்-ந.ச.).

### மதுரையினின்றும் வேறுபடாத திருநெல்வேலி மாவட்டம்

திருநெல்வேலி வரலாற்றில் பழங்கால வரலாற்றைக் கருதும் போது ஏற்படும் தொல்லை இந்த மாவட்டம் தனியாக இராமையே. இது பாண்டிய நாட்டின் தென் பகுதியாகவே அமைந்திருந்தது. இம்மாவட்டம், சோழர்கள், ஆதி முகம்மதியர்கள், நாயக்கர்கள் முதலியவர்களின் ஆட்சியின் கீழும் பாண்டியர் ஆட்சியிலிருந்தது போலவே இருந்தது.

ஏறக்குறைய கி.பி.1744 இல் ஆர்க்காட்டு நவாபுவின் ஆட்சியின் கீழிருந்த நாடுகளுடன் மதுரை நாடும் அதைச் சார்ந்த மாவட்டங்களின் பகுதிகளும் சேர்க்கப்பட்டன. அதன் பின்பே திருநெல்வேலி மாவட்டம் முதற்கண் வரியீட்டுச் செயல்களுக்காக மட்டும் மதுரையினின்றும் வேறான தனி மாவட்டமாகக் கருதப்பட்டது. மதுரையினின்றும் வேறுபட்ட திருநெல்வேலி மாவட்டத்திற்கு இலக்கியத் தமிழில் தென்பாண்டி - பாண்டி நாட்டின் தெற்குப் பகுதி - எனப் பொருள்படும் பெயர் இருந்தது. ஆனால், இது கொடுந்தமிழ் பேசப்பட்டு வந்த தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிருநாடுகளுள்ளும் ஒன்றைக் குறிக்கிறது. எனவே, தாமிரபரணி ஆற்றின் தெற்கே பரவியுள்ள திருநெல்வேலி மாவட்டம் முழுவதையும் இது குறிக்கின்றது என்று சொல்லவியலாது. திருநெல்வேலியின் தென்மேற்கிலும் கன்னியாகுமரியின் வட மேற்கிலும் பரவியிருக்கும் தமிழ்ப் பகுதியாகிய தென் திருவாங்கூர் நாடாகிய நாஞ்சில்நாட்டை இது குறிப்பதாகச் சிலர் கருதுகின்றனர். திருநெல்வேலி முழுவதும் தமிழே பேசப்பட்டு வந்தது. தமிழ்



பேசப்பட்டு வந்த நிலப்பகுதியின் தென் எல்லையாகக் கன்னியாகுமரி தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறது. மேலும், தெற்கே கடலானதால், தமிழ்நில எல்லை இன்னும் தெற்கே அதிகமாகப் பரவியிருக்க இயலாது. ஆனால், நாஞ்சில் நாட்டின் கல்வெட்டுகளிலிருந்து நான் அறிந்த வரையில் தமிழே இங்குப் பேசப்பட்டு வந்தது.

### திருநெல்வேலியின் பழங்குடிமக்கள்

திருநெல்வேலிப் பழங்குடி மக்களைப் பற்றி இதுவரை ஒன்றும் தெரியவில்லை. அவர்கள் யாராயிருந்தபோதிலும் ஆரியர்களாக மட்டும் இருந்திருக்க முடியாது. மலையாளத்தில் தலையரசர்கள் (மலை ராஜாக்கள்) என்றும், தமிழில் காணிக்காரர்கள் (பரம்பரையான நில உரிமையாளர்கள்) என்றும் வழங்கப்படும் மலைவாசிகள் நீலகிரி மலையிலுள்ள தோடர்களைப் போன்று சமவெளிப் பகுதியின் பழங்குடி மக்கள் வழிவந்தவர்களல்ல. ஆனால், அவர்கள் பழனி மலையிலுள்ள மலைவகுப்பினரைப் போன்று பின்னாள்களில் தமிழராக்கப்பட்ட தாழ்ந்த சமவெளிப்பகுதி மக்களின் வழியினரென்பது தெரிகிறது. அவர்கள் பகைவர்களால் மலைப்பகுதிக்குத் துரத்தப்பட்டிருக்க வேண்டும்; அல்லது உரிமையாகவே அப்பகுதியிலிருந்து குடியேறியிருக்க வேண்டும். மேலும், பழங்குடிகள் புதியவர்களாய்க் குடியேறியவர்களுடன் இரண்டறக் கலந்துவிட்டமையால், இப்பொழுது அவர்களைப் பிரித்துக் காண்பது அரிதாயுள்ளது. ஓரளவு இப்பொழுது பழங்குடிகளின் சிறந்த பிரதிநிதிகளாகக் கருதப்படக் கூடியவர்கள் நெடுங்காலம் வருத்தப்பட்டுவரும் சமுதாய நிலையில் மிகத் தாழ்த்தப்பட்டவர்களாகிய பறையர்களும் பள்ளர்களும் ஆவார்கள். பிறநாட்டின் பல பகுதிகளிலிருந்து குடியேறிய சாதியினரைப் பற்றிய போற்றத்தக்க பெருமைவாய்ந்த செவிவழி வந்த கதைகளையும் நாம் அவ்வப்போது கேட்கலாம். சான்றாக, பிராமணர்கள் வடக்கிலிருந்து வந்தவர்கள் என்ற செய்தியில் சிறிதும் ஐயமில்லை. நாயக்கர்களும், மற்ற தெலுங்கு சாதியினர்களும் வடக்கிலிருந்து வந்தவர்களே என்பதிலும் ஐயமில்லை. பொதுவாக வேளாளர்கள் சோழநாட்டிலிருந்தும் மறவர்கள் இராமநாதபுரத்திலிருந்தும், சாணார்கள் (சான்றோர்கள் - ந.ச.) இலங்கையிலிருந்தும் வந்தவர்கள் என்பது கருதப்படுகிறது. இத்தகைய கதைகள் மக்கள் இனநூலுக்குரிய உண்மைச் செய்திகளல்ல என்பது உண்மை. ஆனால், பள்ளர்களும் பறையர்களும் நாட்டிற்குள் குடிவந்தவர்கள் என்ற செவிவழிக் கதை எக்காலத்திலும் இல்லை என்பது குறிப்பிடத்தக்க உண்மையாகும்.

இவ்வாறு செவிவழிக் கதைகள் இச்செய்தியைப் பற்றி ஒன்றும் கூறாது விட்டுவிடுவதால், நாம் இப்போது காணும் பல்வேறு சாதியினரையும் கூட்டத்தினரையும் குறிக்கும் குடியேற்ற மக்களின் கூட்டங்கள் வருவதற்கு முன்பே அந்த மாவட்டங்களில் பள்ளர்களும் பறையர்களும் இருந்தார்களென ஊகிக்கலாம். குடியேறிய கூட்டத்தினரின் பழைமையைப் போன்றே இப்போது அவர்களுக்கு வழங்கிவரும் பெயர்களும் பழைமையுடையனவாய் இருக்க வேண்டிய அவசியமில்லை. 'பறையர்கள்' என்பது 'பறையடிப்பவர்கள்' என்று பொருள்படும். பள்ளமான நிலத்தில் வேலை செய்து கொண்டிருந்த மக்களைப் 'பள்ளர்' என்று குறிப்பிட்டமை தெரிகிறது. இந்த இரு பெயர்களும் ஒருவாறு வளர்ந்த சமுதாயத்தோடு அவர்களைத் தொடர்புபடுத்துகின்றன. அவர்கள் உண்மையில் பழைமையான சாதியினராய் இருப்பின், வேடர்கள் என்று சாதாரணமாக வழங்கப்படும் கொடிய சாதியினரைப் போலவே வேட்டையாடியும், புன்செய் பயிர்களைப் பயிர் செய்தும் மாவட்டங்களில் குடியேறியிருக்க வேண்டும். மக்கள் இன நூலின்படி உழுது பயிர் செய்யும் தொழிலே வேளாளர்களின் சிறந்த தொழிலாய் இருந்தது. 'வேளாளர்' என்பதன் பகுதியாகிய 'வேள்' என்பது, நீர்ப்பாசனத்திற்குப் பயன்படும் தண்ணீர் என்ற பொருளில் வரும் வெள்ளம் என்ற சொல்லின் பகுதியாகிய 'வெள்' என்பதோடு பொருந்தி இருக்கிறது. எனக்கு இப்போது தெரிந்தவரை திருநெல்வேலியின் பழங்குடி மக்களைப் பற்றிய மிகுதியான குறிப்புகள் சேரமாதேவி, புதுக்குடி என்ற இடங்களுக்கருகில் கண்டெடுக்கப்பட்ட சூல (மூவிலை வேல் - ந.ச.) ஆயுதங்களேயாகும். டாக்டர் ஜாகோர் (Dr. Jagor) என்பவரால் அவை பெர்லினுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. அவ்வாயுதங்களின் பக்கங்களும் வடிவங்களும் சமன் செய்யப்பட்டிருந்ததால் இவை நாகரிகத்தின் சிறு முன்னேற்றத்தைக் குறித்தன. இவை நவீனக் கற்காலத்திற்குப் பொருத்தமானவாய் உள்ளன. திருநெல்வேலியில் ஏறக்குறைய எல்லா இடங்களிலிருந்தும் கிடைக்கும் முதுமக்கள் தாழியின் மதிப்பும் மறையும் (இரகசியமும்) எவையாயினும், அவை பழங்காலத்தின் நினைவுச்சின்னங்கள் என என்னால் மதிப்பிட இயலவில்லை. மட்பாண்ட வேலையின் உயர்வையும் சிலபோது அம்மட் பாண்டங்களிலிருந்து கிடைக்கும் செப்பு நகைகள் முதலியவைகளையும் பார்க்கும்போது அம்மட் பாண்டங்களில் இறந்தவர்களைப் புதைத்துவந்த மக்கள் யாராயிருந்த போதிலும் எவ்வளவு காலத்திற்கு முந்தி வாழ்ந்தவர்களாயிருந்த போதிலும் - நாகரிகமடைந்த பிரிவினராயிருந்தார்கள் என்பது உறுதியாகிறது.[1]



## முதுமக்கள் தாழிகள்

மேலே குறிப்பிட்ட கல் கருவிகளைப் போன்ற பழங்கால நினைவுக்குறிகள் இன்னும் நிலைத்திருந்தால், அவை தாமிரபரணி நதிக்கரையிலே இருந்திருக்க முடியாதென நான் கருதுகிறேன். ஏனெனில், ஆரம்பத்திலேயே அப்பகுதி அடிக்கடி தண்ணீர் தேங்கியும், சகதியாகவுமிருந்ததால் மக்கள் அதைத் தங்கள் இருப்பிடமாக்கிக் கொண்டிருக்க இயலாது; ஆனால் நதியின் பழங்காலத்துக் கரையாய் அமைந்திருக்கும் சமவெளிப் பகுதியின் இருமருங்கிலுமுள்ள மணற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம். இப்பகுதிபோன்றிருக்கும் புதுக்குடிக்கருகிலுள்ள ஆதித்த நல்லூரில் அதிகப்படியான முதுமக்கள் தாழிகள் முதலியன கிடைக்கின்றன. மனிதன் அந்த மாவட்டங்களில் தோன்றுவதற்கு முன்பே நிலமானது சிறுகச் சிறுக ஆனால் உறுதியாகக் கடல் மட்டத்திற்குமேல் உயர்ந்து கொண்டே வந்திருக்க வேண்டும் என்று நான் நம்புவதால், கடலுக்கு அருகே பழங்கால நினைவுக்குறிகள் எதுவும் கிடைக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. வரலாற்றுக் காலமெல்லாம் பூமியின் உயர்ச்சி அதிகமாகிக் கொண்டே வந்திருக்கிறது என்பது மெய்ப்பிக்க இயல்வது. நகரமும் பழைமையான துறைமுகமுமாகிய குலசேகரப் பட்டினத்திற்கருகே கடற்கரை ஓரத்தில் கடற்கிளிஞ்சில் இனம் நிறைந்து உண்டாக்கப்பட்ட மணற்கற்களில் உடைந்து போன மட்பாண்டத் துண்டங்கள் புதைந்து கிடப்பதைக் காணலாம். கடற்கரையிலிருந்து சுமார் ஒரு மைல் தொலைவிலிருந்து கிடைத்த மட்பாண்ட மாதிரிக்கல் ஒன்று என்னிடமிருக்கிறது. இக்காலத்தில் பயன்பாட்டிலிருக்கும் மட்பாண்டங்களைப் போன்றே இருக்கும் மாதிரிக்கல் அம்மட்பாண்டத்தின் அளவிறந்த பழைமையைக் குறிக்காமல், அண்மையில் தோன்றிய மணற்கல்லின் சில பகுதிகளின் தோற்றத்தையே குறிக்கின்றது.

## தாமிரபரணி ஆறு

திருநெல்வேலியின் உயர்ந்த நாகரிகம் பிறந்த வரலாறு எழுதப்படின் அதில் திருநெல்வேலியின் பெரிய ஆறாகிய தாமிரபரணி மிகச்சிறந்த மதிப்பான இடம் பெறும் என்பதில் எனக்கு ஐயமில்லை. நாகரிகமற்ற கறுத்த ஆதிக்குடி மக்களைவிட வடக்கே இருந்த உயர்ந்த சாதி மக்களைக் குடும்பம் குடும்பமாக அவ்வாற்றின் கரைகளிலே குடியேற வைத்தது இவ்வாறு தந்த வளத்தால் விளைந்த நெல்லேயாகும். மற்ற இந்திய ஆறுகளைப் போலல்லாமல் இந்த ஆறு

1. *பிற்சேர்க்கை பார்க்க.*

காவிரியாற்றைப் போன்று தென்மேற்கு, வடகிழக்குப் பருவக்காற்று மழையால் ஆண்டிற்கு இரு முறை தண்ணீர் கரைபுரண்டோடி முழுவெள்ளத்துடன் காட்சியளிக்கும். அது சிறிய செழிப்புவாய்ந்த வண்டல்மண் சமவெளியில் பாய்ந்து ஓடுகிறது. இப்பகுதி இயற்கை ஆற்றல்கள் இப்போதிருந்ததைவிட வலிவுள்ளனவாய் இருந்த காலத்தில் (இயற்கை வளத்தின் நிலையையும் காலக்கண் கொண்டு ஓப்பீடு செய்யும் கால்டுவெல்லாரின் உணர்வை என்னென்று போற்றுவது - ந.ச.) இவ்வாற்றாலேயே ஏற்பட்டுப் பிற்காலத்தில் வண்டல்மண் படிந்த பகுதியாகியது. அது வேகமற்றுத் தடைபடாத ஆறாய்க் கடலைநோக்கி ஒரு படுகை வழியாக மெல்ல ஓடுகிறது. இப்படுகை ஆண்டாண்டுதோறும் மிகமிக ஆழமான பள்ளத்தாக்காகி வேளாண்மைக்குதவாத பகுதியாவதற்குப் பதிலாக, ஆண்டாண்டு தோறும் சிறிது சிறிதாக வண்டல்மண் படிய ஆரம்பித்தது. அதனால், நாளடைவில் அவ்வாறு பாயும் கீழ்ப்பாதிப் பகுதியில் பாளையங்கோட்டைக்கும் கடலுக்கும் இடையே செயற்கைக் கரைகள் கட்டி, அவை வழியாக அவ்வாறு ஓடும்படிச் செய்ய வேண்டியதாயிற்று. எனவே, ஆரம்பத்திலேயே இல்லாவிட்டாலும் அந்த மாவட்டங்களில் மனித நடமாட்டம் ஏற்பட்டு அவர்களும் ஒழுங்காக வேளாண்மை செய்து, நீர்ப்பாசன வசதியால் நெற்பயிரிட ஆரம்பித்து முதற்கொண்டு இத்தகைய ஆறு குடியேற்ற மக்களின் கருத்தைக் கவர்வதாயிற்று.

## தாமிரபரணியின் தோற்றம்

தாமிரபரணி ஆறு 'பொதிகை' என வழங்கப்படும் திரிகோணமலையில் தோன்றுகிறது. பொதியம் அல்லது பொதிய மாமலை என்பதற்கு (பொதிந்து கிடக்கும்) இரகசியமான இடம் என்பது பொருள் (கால்டுவெல் கண்ட இவ்வேர்ச் சொல் விளக்கம், சித்தர் ஆய்வாளருக்குச் சிறந்த அமிழ்தம் - ந.ச.). அது பற்றிய விளக்கம் பின்தொடரும். சிறிய மலைகளாகிய ஐந்து தலைகளையுடைய ஐந்து தலைப் பொதிகையினின்றும் வேறாக்கிக் குறிப்பிடுவதற்காகப் பெரிய பொதிகை என்று அம்மலை அப்பகுதியில் வழங்கப்படுகிறது. திருநெல்வேலி மலைத்தொடரில் 6800 அடி உயரமுள்ள இந்த மலையே அதிக உயரமானது. உள்நாட்டுப் புலவர்களால் பாண்டியர்களின் மலை என்று புகழப்பெற்றது. இதனால், பாண்டிய அரசனுக்குப் 'பொதிகைத் தலைவன்' என்ற சிறப்புப் பெயரும் ஏற்பட்டது. இதன்மேல் உற்பத்தியாகி வரும் தாமிரபரணி ஆறு சமவெளியில் பாய்வதற்கு முன்னே பெரும்படியான மலைநாடுகளில் ஓடிப் பாய்வதற்கேற்றவாறு இந்த மலையானது மற்ற மலைகளைவிட ஏறக்குறையப் பத்து மைல்



தூரம் பின்புறம் பரவலாய் அமைந்துள்ளது. திருநெல்வேலியின் தலைநகராகிய பாளையங்கோட்டையிலிருந்து பார்த்தால் பொதியம் நன்றாகத் தெரியும். மலைத் தொடரின் மேற்குப் பக்கத்திலுள்ள திருவாங்கூரின் தலை நகராகிய திருவனந்தபுரத்திலிருந்து பார்த்தால் இது இன்னும் தெளிவாகத் தெரியும். அகத்திய மாமுனிவர் தென்னாட்டை நாகரிகமடையச் செய்த பின்னர் (? ! - ந.ச.) உலகத்தினின்றும் விலகி இம்மலையிலுள்ள எட்டாத குகையினுள் தமது இருப்பிடத்தை அமைத்துக் கொண்டமையால் இம்மலை சாதாரணமாக 'அகஸ்தியர் மலை' (அகத்தியர் பற்றி ஒரு தனிப்பெரும் கலைக்களஞ்சிய ஆராய்ச்சியே இன்று தேவை. இவ்வாராய்ச்சியின் விளைவாக இனங்கொள்கைகள் முதலாக மெய்ப்பொருளியல் ஈறாகப் பல விளக்கமுறும். இது தமிழாராய்ச்சிக்கு மட்டுமின்றி, இந்திய மனிதகுல மேம்பாட்டிற்கே இன்றியமையாதது - ந.ச.) என்றே வழங்கப்படுகிறது. அல்லது, ஆங்கிலேயர்களால் 'அகஸ்தியர்' என்று மட்டுமே வழங்கப்படுகிறது. அகஸ்தியர் தமது இருப்பிடத்தை மந்திர வலிமையால் அரண் செய்து கொண்டமையால் அம்மலையானது மனிதனுக்கு எட்டாதது என்று உள்நாட்டாரால் நெடுங்காலம் நம்பப்பட்டு வருகிறது. ஆனால், ஐரோப்பியர் அடிக்கடி அம்மலை உச்சிக்குச் சென்று வழி ஏற்படுத்தினர். சில ஆண்டுகட்கு முன்னர் வானிலை ஆராய்ச்சி நிலையம் ஒன்று மலையுச்சியினருகே திருவாங்கூர் மன்னரின் வானியலறிஞராகிய டாக்டர் ப்ரௌன் என்பவரால் கட்டப்பட்டது. ஓராண்டுக்கு மலையுச்சியில் 300 அங்குலம் மழை பெய்ததாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. மலைக்கும் கடலுக்குமிடையே பாதித் தூரத்திலுள்ள பாளையங்கோட்டையில் 27 அங்குலத்திற்குக் குறைவான மழையும் திருநெல்வேலிச் சமவெளியில் பொதுவாகச் சராசரி 25 அங்குல மழையும் பெய்கிறது.

இதனாலேயே குறைவான மழையாலும் அதிகமான வெப்பத்தினாலும் அதிக தண்ணீர்வற்றிப் போவதாலும் திருநெல்வேலி சமவெளிகள் மிக வறண்டும் உலர்ந்தும் இருந்த போதிலும், தாமிரபரணி வற்றாத வளமான தண்ணீருடன் ஆண்டில் இருமுறை வெள்ளத்துடன் கடலை நோக்கிப் பாய்கின்றது. அது பாயும் செம்மையான நிலங்களில் ஏராளமான தானியங்களை இருமுறை பயிரிடத்தக்க செழுமையைக் கொடுக்கின்றது. இது காரணமாக, நிலத்தின் விலைமதிப்பிற்கேற்ற வரித் தொகை வரவில் திருநெல்வேலிக்கும் தஞ்சாவூருக்குமிடையே மிகுந்த ஏற்றத் தாழ்வு இருப்பினும், திருநெல்வேலி தஞ்சாவூருக்கு அடுத்த நிலையைப் பெற்றிருக்கிறது.

**இந்திய இலக்கியங்களில் தாமிரபரணியைப் பற்றிய குறிப்புகள்**

லெஸ்ஸன் (Lessen) என்பவர் தமது 'இண்டிஸ்சி ஆல்டார்துனிஸ்கண்டி' (Indische Alter thuni skunde Vol. I) என்னும் நூலில் புகழ்பெற்ற பெயரையுடைய சிறந்த நதி என்று இதைக் குறிப்பிடுகின்றார். இதன் நீளத்தைப் பார்க்குமிடத்து இது உற்பத்தியாகுமிடத்திலிருந்து கடலில் கலக்கும் வரை ஏற்படும் வளைவுகளையும் சேர்த்து 70 மைல்களே உள்ள இந்த ஆறு நிச்சயமாக மிகச் சிறிய ஆறென மதிக்கப்படும். ஆனால், இது அளிக்கும் பயன்களைப் பார்க்குமிடத்து, இந்திய நதிகளுள் உயர்ந்த ஓர் இடத்தைப் பெற்றிருக்கிறது. மிகப் பழைய காலத்திலேயே இதன் பெயர் இந்தியாவில் மிக்க புகழ் பெற்றிருந்தது என்று தெரிகிறது. இது பழம் பாடல்களில் பெயர் பெற்றிருப்பதால், 'மிகப் பழமையான ஆறு' என்று வழங்குவதற்குத் தகுதியைப் பெற்றுள்ளது என அறிகிறேன். பல புராணங்களின் நிலவளம் கூறும் பகுதிகளில் இந்திய நதிகளுள் இதன் பெயரும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது குறிப்பாகப் புண்ணிய நதியென அந்தக் காலத்தில் போற்றப்பட்டிருந்தது என்பதும் தெரிகிறது. இது 'மலையம்' என்ற மலையில் உற்பத்தியாகின்றது என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே, இது தென்மலைத் தொடர்ச்சியில் மலையத்தை அடையாளம் காண உதவுகிறது. 'மலயா' என்ற வடமொழிச் சொல் 'மலை' என்ற திராவிடச் சொல்லைக் குறிக்கிறது. அதைப் பற்றிய பழமையானதும் முக்கியமானதுமான குறிப்பு வடமொழியிலுள்ள மகாபாரதத்தில், 'குந்தியின் மகனே! (தர்மன், பாண்டவ உடன்பிறப்பாளருள் மூத்தவன்) மோட்சத்தை அடையக் கடுந்தவம் புரிந்த தேவர்களின் ஆசிரமத்திலிருந்த தாமிரபரணியின் பெருமையைப் பற்றி மேலும் நான் உனக்கு நினைவு படுத்துகிறேன்' - (ஆரணிய பருவம்) எனக் குறிக்கப்பட்டிருக்கிறது.

பிற்காலத்தில் இரகுவமிசத்தில் தாமிரபரணியைப் பற்றிய மிகக் கவர்ச்சியான பாடல் ஒன்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது வருமாறு: அவர்கள் (பாண்டியர்கள்) தாமிரபரணி ஆறு கலக்கும் கடலிலிருந்து திரட்டப்பெற்ற மிகச் சிறந்த முத்துகளை இரகுவின் முன் அவர்களுடைய காணிக்கையாக வைத்துத் தலை வணங்கினார்கள் (50). இதிலிருந்து 'தாமிரபரணி ஆறு பாண்டி நாட்டிலிருந்தது; தாமிரபரணி கடலுடன் சேருமிடத்தில் முத்து எடுக்கப்பட்டது,' என அக்காலத்திலேயே அறிந்திருந்தார்கள் என்பது தெரிகிறது. இப்பாடலின் ஆசிரியராகிய புகழ்பெற்ற காளிதாசர், கிறித்து பிறப்பதற்கு முந்திய நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று எண்ணுகிறார்கள். சிலர், கிறித்து பிறந்த



பல நூற்றாண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவர் என்றும் கூறுகின்றனர். (கால ஆராய்ச்சியில் கால்டுவெல் நடுநிலை போற்றத்தக்கது! - ந.ச.)

**தாமிரபரணியின் புண்ணிய தீர்த்தங்கள்**

இந்தியர் இந்த ஆற்றில் நீராடுவதன் சமய மேம்பாட்டில் இன்னும் நம்பிக்கை கொண்டுள்ளனர். நதியின் ஒவ்வொரு பகுதியும் புண்ணியமுடையது. ஆனால், இக்காலத்தில் நதியின் மேற்பக்கத்திலுள்ள நீர்வீழ்ச்சியில் நீராடுதலைச் சிறந்த புண்ணியச் செயல் என்று எண்ணுகிறார்கள்.

இந்த ஆற்றில் இரண்டு நீர்வீழ்ச்சிகள் உள்ளன. ஒன்று, பொதியமலைச் சாரலிலுள்ள 'வான தீர்த்தம்' (வாணன் என்ற அசுரனால் இப்பெயர் பெற்றது); மற்றொன்று 90 அடி உயரமுள்ள புகழ்பெற்ற பாபநாசம் (பாவத்தை அழிப்பது). பாபநாசமானது சாதாரணமாகக் கல்யாண தீர்த்தம் - கல்யாணி (பார்வதி நீராடும் புண்ணிய தீர்த்தம்) என்று வழங்கப்படுகிறது. ஆனால், சிலர் கல்யாணி தீர்த்தம் என்பது, அகஸ்தியருக்குப் பார்வதி பரமேசுவரின் திருமணக்காட்சி காட்டப்பட்ட இடமாதலின், 'திருமண புண்ணிய தீர்த்தம்' என்றும் கூறுகின்றனர். இந்த நீர்வீழ்ச்சி தாமிரபரணி, மலையிலிருந்து சமவெளியில் பாயுமிடத்திலிருக்கிறது. வானதீர்த்தத்தின் அருகில் பாம்பன் அருவி என்று வழங்கப்படும் மற்றொரு சிறந்த நீர்வீழ்ச்சியும் உண்டு. தூரத்திலிருந்து பார்ப்பதற்குப் பாம்பைப் போன்று நீண்டு வளைந்த தோற்றமுடையதாய் இருப்பதால், பாம்பன் நீர்வீழ்ச்சி, பாம்பன் அருவி என்னும் பெயர் பெற்றது. இந்த நீர்வீழ்ச்சி, மேல் 500 அடி உயர அருவி, கீழ் 200 அடி உயர அருவி என்னும் இரு நீர்வீழ்ச்சிகளாலாகியது. புகழ்பெற்ற இந்நீர்வீழ்ச்சி முக்கிய ஆற்றிலில்லாமல் ஐந்து தலைப் பொதிகையில் உற்பத்தியாகிவரும் கிளையாற்றில் அமைந்துள்ளது.

**குற்றால அருவிகள்**

தாமிரபரணி கடலுடன் கலக்குமிடத்தில் அதில் வந்து கலக்கும் வடகிளையாறாகிய 'சித்திராநதி', கொச்சைத் தமிழில் சித்தாறு என்று வழங்கப்படும், மிக அழகிய சிறிய ஆறாகும். குற்றாலத்தில் இவ்வாற்றிலுள்ள நீர்வீழ்ச்சி மிகவும் புகழ்பெற்றது. வெவ்வேறு காரணங்களால் ஐரோப்பியர்களும் இந்தியர்களும் இந்த நீர்வீழ்ச்சியில் குளிப்பதில் மிக விருப்புடையவர்களாயுள்ளார்கள். உலகத்திலேயே மிக அருமையானதும் தூய்மையானதுமான நீராடுதுறை குற்றாலமே என்று துணிந்து கூறுதல் சற்றும் மிகையாகாது (பேராசிரியர் கால்டுவெல்லும் திக்கெட்டும் புகழும் 'திருநெல்வேலிக்காரர்' ஆகிவிட்டார் பாருங்கள் !

- ந.ச.). குற்றாலத் தலபுராணத்தில் குற்றாலத்திற்கு இருவிதப் பெயர்கள் வழங்குகின்றன. (ஒன்று 'த்த' என்ற எழுத்துகளுடனும், மற்றொன்று 'ற்ற' என்ற எழுத்துக்களுடனும்). 'குத்தாலம்' என்பதுதான் அச்சொல்லின் வடிவம் எனின் 'அச்சந்தரும் அத்திமரம்' என்று பொருள்படும். அப்பெயர் குத்தால மரத்தருகேயுள்ள கோவில் அல்லது கிராமத்தைக் குறிக்கும். குத்தாலம் என்ற சொல் வடமொழியிலுள்ளதெனக் கூறப்படுகிறது. (அதில் என்ன வியப்பு ! இயற்கை - ந.ச.). ஆனால், எந்த வடமொழி அகராதியிலும் இச்சொல்லின் சுவட்டைக் கூட என்னால் காண இயலவில்லை (அந்தோ! - ந.ச.). பொது வழக்கிலிருக்கும் 'குற்றாலம்' என்ற சொல் ஆலம் என்பதைக் குறிக்கும். ஆலம், அறிவு; உண்மையில் 'குற்றின் விஷம்' அதாவது 'பாவத்தின் அழிவு' என்ற பெயர்ப் பொருளுடன் பொருந்தியிருக்கிறது. ஆலம் என்பது வடமொழிச் சொல்லான 'ஹாலஹாலா' என்பது 'ஹாஹாலா', 'நாசகரமான விஷம்' என்பதன் திரிபு. இந்தப் பெயரே இவ்விடத்தின் தலபுராணத்தில் பொதுவாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. குற்று என்ற சொல் எந்த அகராதியிலும் இல்லை. ஆனால் பாபத்தைக் குறிக்கும் மிகச் சாதாரணமான தமிழ்ச் சொற்களுள் ஒன்று 'குற்றம்' என்பது. இது பொருளளவில் ஒன்றுதான். குற்றாலத்தின் மூன்றருவிகளின் கீழ்ப்பாகம் வட அருவி - வடக்கிலிருக்கும் நீர்வீழ்ச்சி - என்று உள்நாட்டாரால் வழங்கப்படுகிறது. மொத்தத்தில் இது 180 அடி உயரமுள்ள இரண்டு அருவிகளாலாகியது. இவ்வருவி விழும் மடுவிற்குப் பொங்கு மாங்கடல் - பொங்குகின்ற கடல் - என்பது பெயர். இதன் ஆழம் 38 அடி. மற்றோர் அருவி செம்பகாதேவி தீர்த்தம் (ஷண்பகாடவி - செண்பகக் காட்டிலிலுள்ள புண்ணிய தீர்த்தம்) என்று வழங்கப்படுகிறது. வடமொழிச் சொல்லாகிய 'ஷண்பகா' என்பதன் திரிபே செண்பகம் என்ற தமிழ்ச்சொல். மூன்றாவது அருவி தேனருவி - தேன் நீர்வீழ்ச்சி. குற்றாலத்தின் இலக்கியப் பெயர் 'திரிகூடம்' என்பது. 'மூன்று பீடபூமிகளை அல்லது பீடங்களை உடையது' என்று இப்பெயர்க்குப் பொருள் கூறலாம். குற்றாலத்தில் ஏலம் முதலியவை பயிரிடப்படுவது 1800 ஆம் ஆண்டில் காசாமேஜர் (Mr. Casamajor) என்பவரால் தொடங்கப்பட்டது (பார்க்க: டாக்டர் சேதுப்பிள்ளை - 'ஊரும்பேரும்' (1956, ப. 1427 - ந.ச.).

### தாமிரபரணியின் கூடு துறை (சங்கமத்துறை - கூடுமிடம்)

தாமிரபரணியாற்றின் செலவு, மலைகளிலுள்ள நீர் வீழ்ச்சிகள் முதலியவைகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குப் பல காலங்களுக்கு முன்பே தாமிரபரணி கடலில் கூடுமிடத்தைப் பற்றிப் பழங்கால



இந்தியர்கள் அறிந்திருந்தார்கள். மகாபாரத காலத்தில் தேவர்கள் தாமிரபரணி ஆறும் கடலும் சேருமிடத்தில் தவம்புரிந்தமை கூறப்படுவதே மக்கள் அந்த இடத்தில் புண்ணிய நீராடித் தவம் புரிந்தார்கள் என்று நான் முடிவுசெய்ய ஏதுவாகிறது. திருநெல்வேலியிலுள்ள நாகரிகமடைந்த மக்கள் முதன்முதல் அங்குள்ள கொற்கையிலேதான் குடியேறினார்கள் என்று தெரிகிறது. அங்கேதான் இந்த ஆற்றுக்குத் தாமிரபரணி என்னும் பெயர் வழங்கப்பட்டுப் புகழ்பெற்றது.

### தாமிரபரணி என்னும் பெயரின் பொருளும் தோற்றமும்

தாமிரபரணி என்ற பெயரிலேயே அதன் பொருள் விளக்கமாய் உள்ளது. ஆனால், இந்த இடத்தில் அப்பொருள் பொருத்தமானதாய் இல்லை. 'தாமிர' என்பது சிவப்பு எனப் பொருள்படும். பரண என்பதிலிருந்து வந்த பரணி என்பது இலை - இலைகளையுடையது - அதாவது, தாமிரபரணி என்பது சிவப்பு இலைகளைக் கொண்ட ஒரு மரம் என்று பொருள்படலாம். ஆனால், இந்தப் பெயர் ஆற்றிற்கு ஆகி வருவது பொருத்தமாய் இல்லை. எனவே, ஏதாவது ஒரு நிகழ்ச்சியோ அல்லது கதையோ இப்பெயர் வரக் காரணமாய் இருக்க வேண்டு மென்பது தெரிகிறது. இந்தப் பெயரே இலங்கையில் பழம்பெயராய் இருந்தது என்பது கருதத்தக்கது. கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன் முற்காலத்துப் புத்த மதத்தினரால் அது தம்பரபன்னி (Tambapanni) என்று வழங்கப்பட்டது என்பது ஜிர்னாரில் (Girnar) உள்ள அசோக மன்னன் கல்வெட்டிலிருந்து தெரிகிறது. மகா அலெக்சாண்டரின் காலத்தில் இந்தியாவிற்கு வந்த கிரேக்கர்கள் தகவலறிவு பெறும் ஊக்கத்துடன் இந்தியாவைப் பற்றியும் அதிலுள்ள நாடுகளைப் பற்றியும், அந்நாட்டில் வாழும் மக்களைப் பற்றியும், அதன் அருகே உள்ள நாடுகளைப் பற்றியும் விசாரிக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது இந்தியாவை அடுத்துப் பெரியதொரு தீவு உள்ள தென்பதும் அதன் பெயர் தப்ராபனி (Taprobane) என்பதும் அறிந்தார்கள். தப்ராபனி என்பது தம்பாபன்னி (Tambapanni) என்பதன் தவறான உச்சரிப்பேயாகும். 'அழகான தீவு' என்ற (இலங்கு என்ற பழந்தமிழ்ச் சொல்லுக்கு விளங்கு என்ற பொருள் இருத்தல் கருதத்தக்கது - ந.ச.) பொருளில் 'லங்கா' என்றே இலங்கை வழங்கப்பட்டிருக்கிறது. சிங்களம் என்று அதைப் பிற்காலத்துப் பௌத்த எழுத்தாளர்கள் குறிப்பிட்டார்கள். அச்சொல் சிகாளம் (Sikalam), சிலாம் (Silam), சிலந்திப் (Seiendib), செரன்திப் (Serendib), சீலன் (Zeelan), சிலான் (Cayloun), சிலோன் (Ceylon) என்று காலப்போக்கில் வரிசையாக மாறுதலடைந்தது. ('திப்'

என்பது தீவைக் குறிக்கும் 'தீபிகா' என்ற வடசொல்லின் அராபியத் திரிபு). சிலாம் (Silam) என்பதிலிருந்து தமிழ் இலாம் (Ilam) பிறந்தது (இந்தியத் தரையோடு தொடர்புடையது என்னும் கருத்தில் இழுக்கப்பட்டது ஈழம் என்றும் ஈழவரோடு தொடர்புடையதால் ஈழம் என்று பெயர் பெற்றது என்றும் கூறுவர். இலங்கைக்கு செலத் தீவு என்ற பெயரும் உண்டு. - ந.ச.). 'சிம்ஹா' (Simha) என்பது சிங்கம். 'சிம்ஹலா' என்பது சிங்கத்தின் நாடு; அதாவது, சிங்கத்தைக் கொன்றவர்களது நாடு அல்லது சிங்கத்தைப் போன்ற மனிதர்கள் வாழும் நாடு என்று பொருள்படும். தம்பாபன்னி அல்லது வடமொழியில் சரியாக எழுதப்பெற்ற பெயராகிய தாம்ரபரணி (Tamraparini) என்பது விஜயனும் அவனுடைய கூட்டத்தினரும் இலங்கையில் குடியேறிய முதற் நிலப்பகுதிக்கு இடப்பட்ட பெயர் என்பதும் அப்பெயரிலிருந்து முழுத்தீவிற்கும் அப்பெயர் வந்தது என்பதும் மகாவமிசத்தில் குறிக்கப்பட்டுள்ளன.[1] இந்தக் குடியிருப்பு, சிலோனின் மேற்குக் கடற்கரையிலுள்ள புட்லம் (Putlam) என்ற ஊரின் அருகே உள்ளது என்பது தெரிகிறது. இது ஏறக்குறைய திருநெல்வேலியின் முக்கிய ஆற்றின் கூடுதுறைக்கு எதிரே அமைந்துள்ளது. இந்த இரு பெயர்களும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பாஸ்டனும் இங்கிலாந்தின் பாஸ்டனும் போல, பொதுவான ஒரு மூலத்திலிருந்து வந்திருக்க வேண்டும். ஒன்று மற்றொன்றிலிருந்து தோன்றியிருக்க வேண்டும் என்று உறுதியாகக் கொள்ளலாம். ஆற்றின் பெயர் குடியேற்ற நாட்டின் பெயரிலிருந்து பிறந்திருக்கலாம். அல்லது குடியேற்ற நாட்டின் பெயர் ஆற்றின் பெயரிலிருந்து பிறந்திருக்கலாம். 'இவற்றுள் எதன் பெயர் பழைமையானது?' என்பதே கேள்வி. திருநெல்வேலியிலுள்ள தாமிரபரணி ஆற்றின் கூடுதுறையிலுள்ள ஒரு குடியேற்ற நாடானது அம் மக்களால் இலங்கைக் கடற்கரையின் எதிர்ப்புறத்தில் நிறுவப்பெற்ற மற்றொரு குடியிருப்பிற்கு ஆகிவந்தது எனலாம். அல்லது விஜயன் கீழ்வந்த ஆரிய வீரர்கள் சிலோனில் குடியேறிய பின்னர்த் திருநெல்வேலி கடற்கரையிலும் புதியதொரு குடியிருப்பை ஏற்படுத்தி அக்கரையிலுள்ள முக்கிய ஆற்றுக்குத் தாங்கள் வசித்துவந்த நகரத்தின் பெயரையே வைத்திருக்கலாம் என்றும் கொள்ளலாம். பெரிய முக்கிய நிலப்பரப்பிலிருந்து சிறிய தீவுகளுக்குக் குடியேறுதல் என்பதே பொதுவான இயற்கை வழியாகும். பழங்காலத்திலேயே இதற்கு மாறாகவும் சிலபோதுகளில் நடந்திருப்பது தெரிகிறது. பின்னாள்களைப் போலவே பழங்காலத்திலும் இத்தகைய குடியேற்றங்கள் நடந்தன

1. டர்னரின் (Turnour) மகாவமிசம், ப. 57 பார்க்க.



என்பதற்கு அறிகுறியாகத் திருநெல்வேலியிலும் மேற்குத் தொடர்ச்சி மலையிலும் உள்ள சில சாதிகளின்பால் சிங்களத் தொடர்பை நினைவு படுத்தும் மரபுகளும் பெயர்களுங்கூட அமைந்துள்ளன. விஜயனும் அவனுடைய வீரர்களும் பாண்டியர்களுடன் திருமண உறவு ஏற்படுத்திக் கொண்டார்கள் என்பது கூறப்படுகிறது. இதனால் தாமிரபரணி ஆற்றின் சங்கமத்துறையிலுள்ள பாண்டியர்களின் பழந்தலைநகராகிய கொற்கையும் அவர்களுக்கு அறிமுகமாயிருக்க வேண்டும். எனவே, சிங்கள அகதிகளாகிய அவர்களாலேயே 'தாமிரபரணி' அப்பெயர் பெற்றிருக்க வேண்டும். எப்படியாயினும் சிவப்பு இலைகளையுடைய மரம் அதாவது தாமிரபரணி என்பது முதலில் மரத்திற்காகிப் பின்பு நகரத்திற்காகிப் பின்பு மாவட்டத்திற்காகிப் பின்னர் ஆற்றிற்கு ஆகியிருக்க வேண்டும். (சிறந்த மரங்களினின்றும் கிராமங்கள் பெயர் பெறுவது இந்தியாவிலுள்ள பொது வழக்கமாகும்.) (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐவகை நிலங்கள் பற்றியே இத்தகைய எதிரும் புதிருமான ஆராய்ச்சி உண்டு - ந.ச.). ஆனால், ஆரம்பத்திலேயே அப்பெயர் அவ்வாற்றிற்கு ஆகிவந்திருக்குமென்று கூறுவது அவ்வளவு பொருத்தமன்று. லாஸன் என்பவர் 'சிவப்புத் தாமரைகளையுடைய நீர்த் தேக்கம்' என்று தாமிரபரணிக்குப் பொருள் கூறுகிறார். ஆனால், இத்தகைய விளக்கத்திற்கு ஒரு சிறிதும் அடிப்படை இல்லை. தமிழ்ச் செய்யுள் இலக்கியங்களில் அச் சேர்க்கைச் சொல்லின் முதற் பகுதி விடப்பட்டு விட்டது. அந்த ஆறு 'பொருணை' அதாவது பரணி என்று மட்டும் வழங்கப்படுகிறது. ஐரோப்பியர்கள் தாமிரபரணி எனத் தவறுதலாக உச்சரித்தும் எழுதியும் வருகிறார்கள். ஆனால், இரண்டாவது பகுதியாகிய பரணி என்பதைப் பூர்ணி என்று எழுதும் பழைய வழக்கத்திலிருந்து இத்தவறுதல் வந்திருக்க வேண்டும்.

### தாமிரபரணியின் கிரேக்கப் பெயர்

தாலமியின் (Ptolemy) காலத்தில் கிரேக்கர்கள் இந்த ஆற்றைச் சோலன் (Solen) என்றே வழங்கினார்கள். இது மிக விந்தையானது. ஏனெனில், கிரேக்கர்கள் சிலோனை பல நூற்றாண்டுகள் வரை தப்ராபனி (Taprobane) என்றே வழங்கி வந்தார்கள். சிலோனின் பெயரைப் போலவே ஆற்றின் பெயரும் இருப்பதால், அதையும் தப்ராபனி என்றே வழங்கியிருக்க வேண்டுமென்று யாரும் எண்ணுவர். கிரேக்க வணிகர்கள் தென்னிந்தியாவிற்கு வந்தபொழுது தாமிரபரணி என்ற பெயர் அந்நதிக்குச் சாதாரணமாக வழங்கப்படவில்லை என்றே நாம் எண்ண இடமிருக்கிறது. ஆனால், இது மகாபாரதத்திலுள்ள பெயர்

வழக்கத்திற்கு முரணாயுள்ளது. கிறித்து பிறந்த ஆண்டிலிருந்து கணக்கிடப்படும் காலத்திலே தான் தென்னிந்தியாவில் கிரேக்க வணிகர்களின் வியாபாரத் தொடர்பு ஏற்பட்டது. இதைவிடப் பழைமையான காலத்தது மகாபாரதம். மகாபாரதத்தில் இவ்வாற்றைப் பற்றி வரும் பகுதியை மட்டும் பிற்காலத்தவர்கள் தனிப்பட்ட காரணங்களாற் புதிதாகச் சேர்த்திருப்பார்கள் என்று எண்ணத்தக்க ஏதுவில்லை. புராணங்களில் பூகோளக் காரணங்கள் பற்றி வரும் பெயர்ப் பட்டியலிலும் இவ்வாற்றின் பெயர் சாதிசமயச் சார்பற்றதாகவே காணப்படுகிறது. எனவே, கிரேக்கர்கள் இவ்வாற்றைச் சோலன் என்று வழங்கியபோதிலும் உள்நாட்டவராலேனும் அல்லது பிராமணர்களாலேனும் இது தாமிரபரணி என்றே வழங்கப்பட்டு வந்திருக்க வேண்டுமென்பது தெரிகிறது. இதை எவ்வாறு விளக்குவது? முக்கிய ஆற்றின் பழைய பெயர் சிலாறு (Sylaur) என்றும் அதுவே இப்பொழுது கிளையாற்றின் பெயராய் இருக்கிறது என்றும் லாஸன் என்பார் கருதுகிறார். ஆனால், சிலாறு என்னும் பெயர் ஏதேனும் இருப்பதாகவோ, என்றேனும் அத்தகைய பெயர் வழக்கிலிருந்ததாகவோ தெரியவில்லை. சுமார் 1810 ஆம் ஆண்டுவரை ஆங்கிலேய அலுவலர்களால் சித்தாறு (Sittaur) என்று வழங்கப்பட்ட ஆறே அத்தகைய தவறுதலான பெயராகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டுமென்று நான் எண்ணுகிறேன். 'த்' என்னும் எழுத்திற்குப் பதிலாக 'ல' என்னும் எழுத்து வந்திருப்பதே தவறுதலுக்குக் காரணம். நம் காலத்தில் இந்த ஆறு சாதாரணமாகச் சிற்றாறு என்றே எழுதப்படுகிறது. இது சித்தாறு அல்லது சிற்றாறு அதாவது சிறிய ஆறு என்பதைக் குறிக்கும். கிளை ஆறு மிகக் குறைவான மலை நாடுகளில் பாய்வதால் முக்கிய ஆறாய் இருந்திருக்க இயலாது என்பது வெளிப்படை. சோலன் என்ற சொல்லுக்குக் கிரேக்க மொழியில் பொருள் இருப்பதால் அது கிரேக்கச் சொல் என்று கொள்ளலாம். அதன் ஒரு பொருள் 'கிளிஞ்சில் மீன்' என்பது; இப்போதைப் போல முன்பு அதிகப் படியான கிளிஞ்சிற்சங்குகள் கூடுதுறையில் கிடைத்ததால் கிரேக்கர்கள் அப்பெயரை வழங்கியிருக்கலாம் என்று நாம் கொள்வது இன்னும் சற்றுத் தெளிவான விளக்கத்தைத் தரக் கூடும். இக்காலம் வரை வாணிகத்திற்குப் பயன்படும் ஏராளமான சங்குகள் தாமிரபரணி ஆற்றின் கூடுதுறைக்கு அருகேயுள்ள கடலிலேதான் காணப்படுகின்றன. அங்கே கூடுதுறை உருவாகிக் கொண்டிருந்த பழங்காலத்திலேயே கணக்கற்ற சங்குகள் கிடைத்தன என்பதற்கு அண்மையில் வயல்களின் வண்டல் மண்ணிற் புதைந்து கிடக்கும் சங்குகளே சிறந்த சான்றாகும். இந்தியா முழுவதும் சங்குகள் இசைக் கருவியாகப் (ஒலி செய்யும் கருவியாக) பயன்பட்டு



வருகின்றன; வட இந்தியாவில் இச்சங்குகள் அணிகள் (நகைகள்) செய்யத்தக்க பொருளாக மிகுதியாய்ப் பயன்படுகின்றன. சோலன் நதி 'பெட்டிகோ' (Bettigo) மலையில் தோன்றுகிறது என்று கிரேக்கர்கள் கூறுகிறார்கள். தாமிரபரணி ஆறு பிறக்கும் 'பொதிகை மலை'யையே இந்தப் பெயர் குறிப்பதாக அவர்கள் எண்ணியிருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். இது வாயிலாக 'மலயம்' என்று புராணங்கள் கூறுவதுபோலக் கிரேக்கர்கள் 'பெட்டிகோ' என்று குறிப்பிடும் தாமிரபரணி உற்பத்தியாகும் மலையைத் தென்மலைத் தொடர்ச்சியோடு இனம் கண்டு கொள்ள ஏதுவாகிறது. (ஒரு ஆற்றைப்பற்றி எவ்வளவு விவரங்களை ஆசிரியர் தேடித் தருகிறார் என்பது ஆராய்ச்சி மாணவர் எண்ணிப் பார்த்துப் பின்பற்ற வேண்டிய ஒன்று. அடியேன் 'ஆறும் பேரும்' பற்றி எழுதிவரும் ஆராய்ச்சி நூல் விரைவில் வெளிவரும். இதற்கிடையில் 'கலைக் களஞ்சியம்' (V : 575) (6, 5, 8) தரும் பின்வரும் குறிப்பு காணத்தக்கது: 'நம்மாழ்வார் பொருநல் வடகரை' தொலைவில்லிமங்கலம் என்று பொருநையைப் பொருநல் என வழங்குகிறார். 'பொருந்தம்' என்பதே 'பொருநை' என மருவியது. பொருந்தம் என்பது பொருந்துதல் என்னும் பொருளதாக இருக்கலாம். பெரிய புராணத்தில் பாண்டியநாட்டைத் 'தண்பொருந்தப் புனல்நாடு' என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். முதல் இராசராசனுடைய 28ம் ஆண்டு (1013) வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றில் சீவலப்பேரியை அடுத்துச் சித்திரா நதி கலக்கும் தாமிரபருணி நதிப்பகுதி தண்பொருந்தம் என்று வழங்கியுள்ளது - ந.ச.).

## சேர சோழ பாண்டியர்

வடமொழியில் திராவிடர்கள் என்று வழங்கப்படும் தமிழ் மக்கள் பழைய காலத்தில் சேர சோழ பாண்டியர்கள் என்ற மூன்று பெரும் பிரிவினராய்ப் பிரிக்கப்பட்டிருந்தார்கள். இப்பெயர் வரிசையால் நாடு தட்பவெப்ப நிலையை ஒட்டியே பிரிக்கப்பட்டிருந்தது என்பது தெரிகிறது. (சே-சோ-பா என்ற அகரவரிசை காரணமாகவும். மூவருள் சேரர் முதியோர் என்பதாலும் இருக்கலாம். புறம் - 2 - ந.ச.). மேலும், இதனால் அக்காலத்து நிலைமையில் பாண்டியர் மிக உயர்ந்த நிலையிலிருந்தனர் என்பது ஊகிக்க இயல்கிறது. இவ்வூகம் உண்மைக்கு உகந்ததாகவும் தோன்றுகிறது. தமிழ் மொழியிலுள்ள கதைகளின்படி சேர சோழ பாண்டியர் மூவரும் உடன் பிறந்தார்; ('உடன் பிறந்தே கொல்லும் நோய்!' - ந.ச.). தாமிரபரணி கூடுதுறையிலுள்ள கொற்கையில் இம்மூவரும் முதன்முதல் ஆட்சி செலுத்தி வந்தனர். கொற்கைக்கருகிலுள்ள முக்காணி (மூவர் சொத்து) என்ற இடத்தில்

இம்மூவரும் முதன் முதல் ஆட்சி செலுத்தி வந்தனர். கொற்கைக் கருகிலுள்ள முக்காணி (மூவர் சொத்து) என்ற இடத்தில் இம்மூவருக்கும் சொந்தமான பொது நிலங்கள் இருந்தன. காலப் போக்கில் பிரிவினை ஏற்பட்டது. பாண்டியன் தன் சொந்த வீட்டிலேயே தங்கிவிட்டான். சேரனும் சோழனும் பொருள் தேடி வெளியே சென்று வடக்கிலும் மேற்கிலும் தம் சொந்த அரசுகளை அமைத்தனர். இத்தமிழ்க் கதையின் எதிரொலி போன்றே அரிவமிசத்திலும் பல புராணங்களிலும் கதைகள் இருக்கின்றன. அதாவது, துருவாச முனிவரின் வளர்ப்பு மகனும், சந்திர மரபு சத்திரியர்களின் இளவரசனும் ஆகிய துஷ்யந்தன் அல்லது அக்ரிதா என்பவனுக்குப் பாண்டியன், கேரளன், கோளன், சோழன் என்ற நால்வர் ஆண் மக்களாய் இருந்தனர் (! - ந.ச.). இங்கே குறிப்பிடப்பட்ட கோளன் யார் என்பது தெளிவாய் இல்லை. அவன் மத்திய இந்தியாவிலுள்ள கோளர்களுக்கு அல்லது கோளனுக்கு மூதாதையாயிருப்பானோ! இது மிகவும் பொருத்தமற்றது. கோளன் என்பது கோளம் அல்லது கொளத்து நாடு - வடமலபார் என்பதுடன் பொருந்தி இருக்கிறது என விளக்கம் தரப்படுகிறது. இந்த விளக்கம் கடினமானது எனினும், நான் பார்த்தவற்றுள் இதுவே அறிவிற்கு உகந்த காரணமெனத் தெரிகிறது.

**பாண்டியர்கள்**

பாண்ட்யா (Pandya) என்ற வடமொழிச் சொல் தமிழில் பாண்டியன் என்று எழுதப்படுகிறது. இன்னும் முழுதும் தமிழாக்கப்பட்ட சொல்லாகப் பாண்டி என்ற சொல் தென்னிந்தியா முழுவதிலும் சாதாரணமாக வழங்கி வருகிறது. பாண்ட்யா என்ற சொல்லுக்கு நான் தமிழிலிருந்து மூலம் காணவில்லை (ஏன்? பழந்தமிழில் பண்டு என்றால் பழைய என்று பொருளாயிற்றே! - ந.ச.). மலையாளத்திலுள்ள பழைமையான பாண்டு என்பதும் எனக்குப் பொருத்தமாகத் தோன்றியது. எனினும், பாண்டவ சகோதரர்களின் தந்தையின் பெயராகிய பாண்டு என்ற வடமொழிச் சொல்லிலிருந்தே இச்சொல் பிறந்ததெனக் கருதுகிறேன். பாண்டுவின் வழிவந்தவர் என்ற பொருளில் 'பாண்ட்யா' என்ற சொல் அமைந்திருப்பதாகப் பாணினியின் அடுத்த வாரிசான காத்தியாயனர் குறிப்பிட்டிருப்பதாகப் பேராசிரியர் மாக்ஸ் முல்லர் (Max muller) தெரிவித்தார். புகழ் பெற்ற பாண்டவ உடன்பிறப்பாளரின் உறவினர்கள் என்ற உரிமை கொண்டாடவே பாண்டிய அரசர்கள் அப்பெயரைத் தங்களுக்கு அமைத்துக் கொண்டார்கள் என்பது தெளிவு. இந்த உறவுக்குச் சான்று காட்டவே பாண்டிய அரசனின் மகளை அருச்சுனன் மணந்தான் என்ற எழுத்தும் கற்பனையும் எழுந்துள்ளன. பாண்டிய அரசைப் பற்றிய பழைமையான



- மறுக்க முடியாத - மேற்கோள் வடநாட்டு வரலாற்றுச் சான்றுகளில் சிறந்த கி.மு.250 ஆம் ஆண்டின் அசோகர் கல்வெட்டு ஒன்றில் இருக்கிறது.

**பாண்டியர்களுடன் அருச்சுனன் புரிந்துகொண்ட கலப்புத் திருமணத்தின் தொடர்பு**

மகாபாரதத்தின் ஆதிபருவத்தில் இத்திருமணத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது தெரிகிறது. வடமொழி மூலத்தில் இந்த அரசன் பாண்டியன் என்ற பெயருடையவனாயில்லை. சாதாரணமாகச் சித்திரவாஹனா என்றே குறிப்பிட்டிருக்கிறது. அவனது நகரம் மதுரையன்று; மணிபுரா. மோனியர் வில்லியம்ஸ் என்பவரின் வடமொழி அகராதியில் இந்நகரம் கலிங்க நாட்டிலுள்ளதாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்நகரம் பாண்டியர்களின் நாட்டிலோ, அன்றி அதை அடுத்தோ இல்லை. அவ்வரசன் மகளின் பெயர் சித்திராங்கதை என்பது. அருச்சுனன் அப்பெண்ணை மணந்து கொண்டு, அவன் சபதப்படியே புருவாகன் என்ற பிள்ளை பிறக்கும் வரை மணிபுராவிலேயே தங்கினான். தமிழில் உள்ள மகாபாரதத்தின் உரையாக்கம் மணிபுராவை மதுரை என்றும், சித்திரவாகன் பாண்டிய அரசன் என்றும், அவனே மதுரையை ஆண்டுவந்த பாண்டிய அரசர் வரிசையில் இரண்டாம் அரசனாயிருந்த மலயத்துவசன் என்றும் துணிந்து குறிக்கின்றது. தென்னிந்திய வெளியீடாகிய மகாபாரத மூலத்தில் இது தொடர்பாகச் சொல்லப்பட்ட ஒரு நிகழ்ச்சி மட்டும் இல்லை என்றால், பாரதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தவர் இவ்வாறு கூறியது முற்றிலும் தேவையற்ற கற்பனை என்று சொல்லலாம். பாண்டவ உடன்பிறப்பாளர்களுள் ஒருவனாகிய சகாதேவன் தனது திக்குவிசயத்தின் போது மணிபுரத்திற்குச் சென்று அருச்சுனன் மனைவியும் அவன் மைத்துனியுமாகிய சித்திராங்கதையை வரவேற்றான் என்பது சபாபருவத்தில் கூறப்பட்டிருக்கிறது. இச்செய்தியில் மணிபுரம் பாண்டியனின் இருப்பிடமெனவும், சகாதேவன் பாண்டிய மன்னனிடம் விலையுயர்ந்த பரிசுகளைப் பெற்றான் எனவும் வர்ணிக்கப்பட்டுள்ளது. இச்செய்தி தமிழ் மொழி பெயர்ப்பாளரின் நேர்மையைப் புலப்படுத்துகிறது. ஆனால், துரதிருஷ்டவசமாகப் பேராசிரியர் வில்சன் வடவிந்திய மகாபாரதப் பிரதிகளில் இச்செய்தி கூறப்படவில்லை என்று கூறுகிறார். அவரிடமிருந்த சொந்தப் பிரதி ஒன்றில் மட்டிலுமின்றி, காசியிலிருந்த ஐந்து பிரதிகளைக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தும் ஒன்றிற்கூட அச்செய்தி இல்லை. எனவே, தமிழ் மொழி பெயர்ப்பாளரின் கருத்து முற்றிலும்

பிழையுடையதாய் இருக்கிறது. மேலும் பேராசிரியர் வில்சன் அருச்சுனனுடைய மனைவி பாண்டியன் மகளல்லள் என்றும் மணிபுரியின் பாம்பரசனின் மகள் என்றும் குறிப்பிட்டுள்ளதெனக் கூறுகிறார். (அருச்சுனன் பாண்டியன் மகளையே மணந்தான் என்பதை ஐயுறுவாரை மறுத்து உயர்திரு. மு. இராகவையங்கார் தனிக்கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். பார்க்க: ஆராய்ச்சித் தொகுதி, பக். 70-78 - ந.ச.)

### பழைமையான பாண்டிய விருதுகள்

பாண்டவ உடன்பிறப்பாளர்களுடன் உறவு ஏற்படுத்திக் கொள்வதற்கு முன்பே பாண்டிய மரபு இருந்தமை கூறப்படுகிறது. ஏனெனில், பாண்டியனுக்குப் பதிலாக மாறன் என்பது அவ்வரசவழித் தலைவனின் மிகப் பழைமையான பெயராய் இருந்திருக்க வேண்டுமென்பது தெரிகிறது. பழைய கல்வெட்டுகளில் பாண்டிய அரசர்களின் விருதுகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது மாறன் என்ற சொல்லே அவ்வரிசைப் பட்டியலின் தொடக்கமாய் இருக்கிறது என்பதை நான் கண்டுள்ளேன். மேலும், கொற்கையில் ஒரு பகுதி பாண்டிய மங்கலம் என்று வழங்கப்படாமல் மாறமங்கலம், 'மாறனின் வளமைபொருந்திய சொத்து' என்றும் வழங்கப்படுகிறது என்பதையும் நான் கண்டறிந்தேன். இப்பெயர்கள் மாறன் - கொற்கை, பாண்டியன் - மதுரை என்று இணைந்தே இருப்பது தெரிகிறது. 'கொற்கை ஆளி, கொற்கையை ஆண்டவன்' என்ற விருது பாண்டிய வமிசத்தைத் தோற்றுவித்தவனாகக் கருதப்படும் குலசேகரனுக்கு வெற்றிவேற்கை ஆசிரியனாகிய மற்றொரு பாண்டியனால் வழங்கப்பட்டுள்ளது.

### பாண்டியர்களுடன் பண்டைச் சிங்களவர்களின் உறவு

தாமிரபரணி என வழங்கப்பட்ட இலங்கையின் (சிலோன்) அரசன் திருமணம் மூலம் பாண்டியர்களுடன் உறவு ஏற்படுத்திக் கொள்வதற்காகத் தூதுவர்களை அனுப்பினான் என்று சொல்லப்படுவதால் தாமிரபரணியின் கூடுதுறையிலுள்ள கொற்கை கி.மு. ஆறாம் நூற்றாண்டிலேயே பாண்டியர்களுடைய இருக்கையாய் இருந்திருக்க வேண்டும். அதேகாலத்தில் தென் மதுரையில் பாண்டியர்கள் வசித்து வந்தார்களென்றும் அங்கேயே அரசாட்சி செய்துவந்தார்கள் என்றும் கூறப்படுகிறது. 'மகாவமிசம்' என்னும் நூல் இயற்றப்பட்ட காலத்தில் கொற்கை என்ற இடமே மறைந்து விட்டது. எனவே, இது காலக்கணித இடர்ப்பாடாகவே இருக்க வேண்டும். அப்பொழுது ஆண்ட பாண்டிய மன்னன் யார் என்பது குறிப்பிடப்படவில்லை. பாலி மொழியில் வரையப்பட்டுள்ள



மகாவமிசத்தில் குறிப்பிடப்படும் அவன் பெயர் இந்தியாவில் வழங்கப்பட்ட பெயரினின்றும் சிறிது வேறுபட்டதாயிருக்கிறது. அவன் சிலபோது 'பாண்டவோ' (Pandavo) என்றும் வழங்கப்பட்டான். 'பாண்டவோ' என்பது பாண்டவர்களையே குறிப்பது உண்மை. பாண்டு என்பது பாண்டவர்களின் தந்தையாரைக் குறிக்கும் பெயர்; கதையின் படி விசயன் முதன் முதலில் ஒரு யக்ஷிணியை (இயக்கர்களின் அரசி) மணந்து கொண்டான். ஆனால், பிறகு மானிட மனைவி வேண்டுமென்று நாட்டிற்குள் தன் ஏவலரை விட்டுப் பெண்தேடச் செய்தான்; மானிட மனைவியை மணந்து கொள்வதால் மண்ணுலகில் தனக்கு ஒரு நாடும் அரசபதவியும் கிடைக்கும் என நம்பினான். அவன் விரும்பியது போலப் பாண்டிய அரசன் தன் மகளை அவனுக்குத் திருமணம் முடித்துவைத்தான். அப்பெண்ணுடன் இலங்கைக்குச் சென்று பெண் சுற்றத்தை விசயனின் நண்பர்களுக்கு மணம் முடித்து வைத்தான். கதையின்படி விசயனுக்குப் பிள்ளைகள் இல்லை. எனவே, தன்னுடைய தம்பி மகனைத் தனக்குப் பின் வாரிசாக நியமித்தான். இவ்விளவரசன் பாலிமொழியில் பாண்டு வமிசதேவன் என்று வழங்கப்பட்டான். இதிலிருந்து அவன் பெயர் பாண்டு வமிசதேவன் என்பதை அறியலாம். அவன் வடவிந்தியாவிலுள்ள நகரமாகிய சிம்மபுரத்திலிருந்து, விசயன் வந்தது போலவே வந்தான் என்று சொல்லப்பட்டபோதிலும், அவன் உண்மையில் பாண்டிய வமிசத்து இளவரசனே என்று சொல்வதில், பெரும்பிழை இல்லை. இவ்வமிசத்தின் நான்காம் இளவரன் 'பாண்டுகபாயா' எனப்படுவதால், இப்பெயரும் பாண்டியர்களுடைய தொடர்புடையதாயிருப்பதற்கு எடுத்துக் காட்டாயுள்ளது. மற்றும் பாண்டியப் பெயர்களையுடைய (திருநெல்வேலி இளவரசர்கள்) இருவர் பெயரால் இலங்கையில் புகழ் பெற்றிருக்கும் மூன்று நீர்த்தேக்கங்கள் கட்டப்பட்டிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது. அதனால், மதுரைக் கடற்கரையை அல்லது திருநெல்வேலி மக்களிடமிருந்து பழைய சிங்களவர்கள் நீர்ப்பாசனத்திற்காக நீர்த்தேக்கங்களைக் கட்டும் கலையைக் கற்றுக் கொண்டிருப்பார்கள் என்று நாம் முடிவு செய்யலாமல்லவா? விசயன் தன் பாண்டிய மாமனாருக்கு ஆண்டுக்கு இரு இலட்ச ரூபாய் பெறுமானமுள்ள சங்குகள், முத்துகள் முதலியவைகளைக் கொடுத்தான் என்பதும் சொல்லப்படுகிறது. இதனால், பாண்டியர்களுக்கு இலங்கை மக்கள் கப்பம் செலுத்திவந்தார்கள் என்று பொருள் கொள்ளலாமா? ஆனால், இச்செய்திகளினின்றும் ஒன்று மட்டும் உறுதியாகிறது. அதன்படி இலங்கையில் ஆரிய நாகரிகம் கி.மு.500க்குப் பின் நுழைந்திருத்தல் இயலாது. அக்காலத்திற்கு முன்பே விசயனும்

அவனைச் சார்ந்த வீரர் கூட்டமும் இலங்கைக்கு வந்திருக்க வேண்டும். இந்நிகழ்ச்சிக்கு முன்பே பாண்டிய அரசு விளக்கம் பெற்றிருந்திருக்க வேண்டும் என்பதே பழைமையான சிங்களவர் கொண்டிருந்த நம்பிக்கை என்பது தெரிகிறது. இதனால், ஆரிய நாகரிகம் பாண்டி நாட்டில் அல்லது கொற்கையில் முதன்முதல் பரவிய காலம் மிகப் பழைய காலம் என்பது தெரிகிறது. இது ஏறக்குறைய கி.மு.700 என்று நாம் கூறலாம். தாய்நாட்டிலிருந்து இலங்கை பழைய காலத்தில் அடிக்கடி தமிழர்களால் படையெடுக்கப்பட்டு வந்தது. படையெடுத்து வந்தவர்கள் பொதுவாகப் பாண்டியர்கள் அல்லர்; சோழர்களே என்பது தெரிகிறது.

**இராமாயணத்தில் திருநெல்வேலி**

இராமாயணத்தில் திருநெல்வேலியிலுள்ள இடமென்று சொல்லப்படும் ஒரே இடம் மகேந்திரம். இது 'மகேந்திரகிரி' என்று இந்தியர்களால் சாதாரணமாக வழங்கப்படுகிறது. மலைத்தொடரின் தென்கோடிப் பகுதியின் மிக உயர்ந்த மலையாகிய இம்மகேந்திரகிரி, அகஸ்தியர் மலைக்குத் தெற்கிலுள்ளது. ஆனால், இது சம்பந்தமாக வழங்கப்பட்ட கதை, வானரக் கடவுளாகிய அனுமான் இலங்கைக்குத் தாவியது இந்த இடத்திலிருந்துதான் என்பதைக் குறிக்கிறது. பூகோள வரையறையின்படி குறிப்பிட்ட இடங்களைக் காண்பது இயலாத செயல்.

**பாண்டியர்களைப் பற்றிய கிரேக்கக் குறிப்புகள்**

மகா அலெக்சாண்டருக்குப் பின் பட்டத்திற்கு வந்த செலுக்கஸ் நிகேட்டர் என்பவரின் அரசியல் தூதுவராக இக்காலப் பாட்னாவிற்கு அருகிலுள்ள பாடலிபுத்திரம் என்னுமிடத்தில் பிராசி (பிரஷிய அல்லது கிழக்கத்திய) என்ற நாட்டின் அரசனாகிய சந்திரகோட்டல் (சந்திரகுப்தன்) என்பவனுடைய அரசவைக்குச் சுமார் கி.மு.302ல் வந்தார். அவர் இந்தியாவிலுள்ள ஒரு நாடாகிய பாண்டைய (Pandaia) என்பதைப் பற்றி எழுதியிருக்கிறார். இந்த நாடு இந்திய ஹெர்குலிஸ் என்னும் கிருஷ்ணன் மகன் பெயரால் இப்பெயர் பெற்றது என்று கூறுகிறார். அவருக்கு இச்செய்தியைத் தெரிவித்தவர்கள் பாண்டியர்களை நினைத்தே கூறியிருக்கின்றார்கள் என்பதில் ஐயமில்லை. கலிங்கம், ஆந்திரம் பற்றிக் கேள்விப்பட்ட ஆசிரியர் பாண்டியர்களைப் பற்றியும் கேள்விப்பட்டிருப்பார் என்பதில் ஐயமில்லை. தனக்குத் கூறப்பட்ட கதைகளை அவர் தவறாகப் புரிந்து கொண்டார் என்பது உண்மை. ஆனால், பாண்டி நாட்டிற்குப் பெயர் வரக்



காரணம் அந்நாட்டை ஆண்ட அரசர்களின் பெயரே என்று அவர் கருதியது சரியே. மேலும், எவ்வளவு தவறாக இருப்பினும் கிருஷ்ணன் கதைகளோடு பாண்டியர் பெயர்களையும் அவர் தொடர்புபடுத்தியது ஓரளவிற்குச் சரிதான். அந்நாட்டைப் பற்றி மெகஸ்தனிஸ் என்பவர் கூறியுள்ள ஒவ்வொரு செய்தியும் - முக்கியமாக, முத்துகள் அங்கே கிடைத்தன என்ற செய்தி - அந்நாட்டைப் பாண்டி நாடென அறியப் பெரிதும் உதவுகின்றது: சிறப்பாக முத்துக் குளித்தல் நடைபெற்ற முக்கிய இடங்கள் இருந்த கடற்கரைப் பகுதியாகிய திருநெல்வேலி அல்லது பாண்டி நாட்டின் தென்பகுதியை அடையாளம் காண உதவுகிறது.

இது பற்றிப் பொய்யும் மெய்யும் கலந்த செய்திகளை உண்மையென நம்பிக் கூறியுள்ள மெகஸ்தனிஸின் மொழிகளைப் பிளினி (Pliny) என்பார் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார். அதை இங்கு எடுத்துக் கூறுவது இன்பந் தருவதாகும்.

''அவன் (இந்திய ஹெர்குலிஸ்) தான் தேவன் என்ற முறையில் மனைவியர் பலரை மணந்துக் கொண்டான். அதனால் அவனுக்கு கணக்கற்ற மைந்தர்கள் இந்தியாவில் ஏற்பட்டார்கள். எனினும், பெண் ஒருத்தியே பிறந்தாள். அந்தப் பெண்ணின் பெயர் பாண்டைய (Pandaia) என்பது. அவள் பிறந்த இடத்திற்கும் ஹெர்குலிஸ் அவளுக்கு வழங்கிய அரசிற்கும் அவள் பெயரே இடப்பட்டது. மேலும், அவள் 500 யானைகள், 4000 குதிரை வீரர்கள், 1,30,000 காவலர்கள் அடங்கிய படைகளைத் தன் தந்தையிடமிருந்து பெற்றாள்.''

இந்திய எழுத்தாளர் சிலர் மேலும் ஹெர்குலிஸ் பற்றிப் பின்வருமாறு கூறுவர்:

''ஹெர்குலிஸ் உலகத்தைச் சுற்றிவந்தான். அப்பொழுது நிலத்திலும் நீரிலும் பயணம் செய்து அங்கெல்லாம் நிறைந்திருந்த தீய பூதங்களையும் தாக்கி வென்று, சமுத்திரத்திலிருந்து பெண்டிர் அணிந்து கொள்ளற்குரிய ஓர் அணியையும் கண்டெடுத்தான். இன்றும் இந்திய வணிகர்கள் சந்தைக்குத் தங்கள் பொருள்களைக் கொண்டு வரும் போது அதை ஆர்வத்துடன் வாங்கிச் செல்வார்கள். கிரேக்க நாட்டுச் செல்வர்கள் பண்டைக் காலந்தொட்டே அதை அணிந்து வந்தார்கள். இன்றும் உரோமை நாட்டுச் செல்வர்கள் மிகுந்த ஆர்வத்துடன் அதை வாங்குகிறார்கள். அந்தப் பொருள் கடல்முத்தே. அது இந்தியாவில் மரகதம் என்று வழங்கப்படும். ஆனால், ஹெர்குலிஸ் அதன் அழகில் ஈடுபட்டு, அதை அணிந்து கொள்ளும் அணியெனக் கருதி எல்லாக்

கடல்களிலுமுள்ள முத்துகளையும் இந்தியாவிற்குக் கொண்டுவந்து தன் மகளை அதனால் அணி செய்ய எண்ணினான்''. (ஸ்வன்பேக்ஸினுடைய (Schwanback) மெகஸ் தனிஸ் என்பதன் மக்ரிண்டில் (Mccrindle) மொழி பெயர்ப்பு).

வேறொரு கிரேக்க எழுத்தாளரால் மெகஸ்தனிஸிலுள்ள மற்றொரு பகுதி நமக்குக் கிடைத்துள்ளது. அதில் பாண்டி நாட்டின் உண்மை நிலை, அதன் அரசியல் ஆட்சி பற்றிய சில முக்கிய செய்திகள் கூறப்படுகின்றன. அவை வருமாறு:-

''ஹெர்குலிஸிற்கு இந்தியாவில் ஒரு பெண் பிறந்தாள். அவளை அவன் 'பாண்டைய' என்று வழங்கினான்; இந்தியாவில் தென்பகுதியில் கடல் வரை பரவியிருந்த இடத்தை அந்தப் பெண்ணிற்குக் கொடுத்தான். அவளது ஆட்சிக்குட்பட்ட மக்களை 365 கிராமத்தினராக்கி ஒவ்வொரு கிராமத்தினரும் ஒவ்வொரு நாளும் கஜானாவிற்கு அரச காணிக்கையைக் கொண்டு வந்து கொடுக்கும்படிக் கட்டளையிட்டான். அதனால், ஒவ்வொரு நாளும் காணிக்கை செலுத்தி வருபவர்களின் உதவியால் அவ்வப்போது காணிக்கை செலுத்தத் தவறியவர்களை வற்புறுத்திப் பணம் பிரிக்க (வசூல் செய்ய) வசதி ஏற்படும் என்று எண்ணினான்''.

மெகஸ்தனிஸின் இந்திய மக்களைப் பற்றிய புத்தகத்தில் சொல்லப்பட்டிருப்பதை ஒட்டி பிளினி பாண்டிய என்ற ஓர் இனத்தைப் பற்றி எழுதியிருக்கிறார். இவர் கூறும் பாண்டியர்கள் எங்கிருந்தார்கள் என்று குறிப்பிட்டாலும் அவர்கள் மேற்கண்ட பாண்டியர்களே என்பதில் ஐயமில்லை. இந்திய மக்களில் பாண்டியர்கள் மட்டுமே பெண்டிரால் ஆளப்பட்டு வந்தனர் என்று அவர் கூறுகிறார். இதுவரை அது உண்மையன்று என்பது தெரிகிறது. அது மதுரையை ஆண்ட பாண்டியர்களுக்குப் பொருந்துமானால் மலையாளக் கடற்கரையிலுள்ள விந்தையான சமூக வழக்கங்களுக்கும் பொருந்தும். ஏனெனில். அங்கு ஒவ்வொரு மரபினரின் சொத்தும் பெண் வழியின் ஆட்சியிலே இருந்து வருகிறது. மெகஸ்தனிஸ் காலத்தில் இல்லாவிட்டாலும் பிளினி காலத்திலேனும் மதுரைப் பாண்டியர்கள் இப்பகுதியிலே குடியேற்ற நாடுகளைப் பெற்றிருந்தார்கள். 'மத்தியதரை வாணிப சாலையான மதுரா (Mediterranean emporuim of Modoura) - விலிருந்து நெடுந்தூரத்தில்' மேற்குக் கடற்கரையின் ஒரு பகுதி அவர் காலத்தில் - அதாவது கி.பி. 77ல் பாண்டியன் (Pandion) என்ற அரசனது ஆட்சிக்குட்பட்டிருந்தது என்று பிளினி விளக்கமாகக் கூறுகிறார். எனினும், இந்தப் பெயரும் அப்பகுதியின் அருகிலுள்ள மற்ற



பெயர்களும் தமக்குப் புதியனவாய் இருக்கின்றன என்றும் கூறுகிறார். பாண்டியன் (Pandion) என்ற அரசனுடைய மக்களும் முன்பு விவரித்த பாண்டிய (Pandaia) அரசனின் மக்களே என்பதற்குத் தக்க சான்றுகள் அவரிடம் இல்லை.

**அகஸ்தஸ் என்ற அரசனிடம் பாண்டியரின் தூதுவர்**

கிறிஸ்து பிறந்த ஆண்டுகளில், அலெக்சாண்டர் வழி வந்தோரின் ஆட்சிக் காலத்திற்கும் கிரேக்கர்களின் வாணிகம் இந்தியாவில் ஆரம்பித்த காலத்திற்கும் இடையே பாண்டி நாட்டைப் பற்றிய - முக்கியமாகத் திருநெல்வேலியைப் பற்றிய - செய்தி ஒன்றையும் கிரேக்கர்கள் நமக்குத் தெரிவிக்கவில்லை. ஆயினும், இச்சமயத்தில் நமக்கு வேறு நற்செய்தி கிடைத்துள்ளது. அகஸ்தஸ் என்ற அரசனிடம் அரசியல் தூதரை அனுப்பிய இந்திய அரசன் போரஸ் என்பவன் அல்லன். பாண்டியர்களின் அரசனாகிய பாண்டியன் (Pandiyan); தமிழில் பாண்டியன் என்று வழங்கப்பட்ட அரசனே என்று நான் எண்ணுகிறேன். அரசியல் தூதரின் பழைய விவரங்கள் கி.பி.20ல் ஸ்டிராபோ (Strabo) என்பவரால் தரப்பட்டுள்ளன. பொதுவாக இவ்வரசியல் தூதரைப்பற்றி எழுதும் கிரேக்கர் தவிர யார் அந்த இந்தியன் என்னும் விவரத்தைத் தெரிவிக்கவில்லை. 'பாண்டிய அரசனிடமிருந்து அரசியல் தூதர் வந்தனர் - அல்லது மற்றவர்கள் கூறுவதுபோல (இவர்கள் கருத்து ஸ்டிராபோவுக்கு உடன்பாடல்ல என்பது வெளிப்படை) போரசிடம் வந்தனர்' என்று ஸ்டிராபோ கூறுகிறார். 'மற்றவர்கள்' என்று ஸ்டிராபோவால் குறிப்பிடப்பட்டவருள் ஒருவர் நிக்கோலஸ் டமாசெனஸ் (Nicolaus Damascenus) என்பவர். இவர் தூதர்களை நேரிலே தாமே பார்த்ததைக் கூறியுள்ளார். அலெக்சாண்டரின் இந்தியப் படையெடுப்புகளைப் பற்றிக் கூறும் வரலாற்று ஆசிரியர்கள் மூலம் போரஸ் அரசனது பெயர் ஐரோப்பாவில் பல நூற்றாண்டுகள் வரை பரவியிருந்தது. அதனால் இந்திய அரசருள் ஒவ்வொருவரும் போரசின் வழிவந்தோர் என்ற தவறுதலான எண்ணத்தைக் கிரேக்கர்கள் கொண்டிருந்தது இயற்கையே. ஆனால், பாண்டியன் என்ற பெயர் அதுவரை அறியப்படவுமில்லை; கண்டு பிடிக்கப்படவுமில்லை. யுஸெபியஸ் (Eusebius) என்னும் வரலாற்று நூலில் கி.பி.320ல் இந்திய அரச தூதரைப் பற்றிய செய்தியுள்ளது. எனினும், சாதாரண கிரேக்க வரலாற்றிலும் அதன் ஆர்மீனியன் மொழி பெயர்ப்பிலும் யாரிடமிருந்து இத்தூதர் வந்தனர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. நல்வினைப் பயனாக யுஸுபியஸால் எழுதப்பட்ட அப்பெயர், கிரேக்க வரலாற்றை முடிவுறச் செய்யக்

கி.பி.800ல் ஜியார்ஜியஸ் சிஸ்செல்ஸ் (Georgius Syncellus) என்பவரால் எழுதப்பட்ட புத்தகங்களில் இருப்பது தெரிகிறது. அவர் 'நூற்றெண்பத்தைந்தாவது ஒலிம்பிய விளையாட்டுகள்' என்ற தலைப்பில் பின்வருமாறு எழுதியுள்ளார்:

> ''இந்தியர்களின் அரசனாகிய பாண்டியன் அகஸ்தஸிடம் அவனுக்கு நண்பனும் கூட்டாளியும் ஆவதற்கு விரும்பி அரச தூதரை அனுப்பினான்''

என்னும் இந்தச் செய்தியானது பாண்டியர்களுடைய சமுதாய அரசியல் முன்னேற்றத்தையும் அது அடைந்திருந்த உன்னத நிலையையும் காட்டுகிறது. சிறப்பாக இது கொற்கையிலும் முத்துக்குளித்தல் சம்பந்தமாக மலையாளக் கடற்கரையில் நடைபெற்ற அயல்நாட்டு வாணிகத் தொடர்பையும் விளக்க வல்ல சான்றாயுள்ளது. அலெக்சாண்டரின் வழி வந்தோருக்கும் வடவிந்திய அரசர்களுக்குமிடையே நிலைத்திருந்த அரசியல் உறவானது முடிந்தபின் ஐரோப்பியர்களுடைய கூட்டுறவின் பயன்களை உணர்ந்தவர்கள் இந்திய இளவரசர்களாகிய பாண்டியர்களே ஆவார்கள்.

**கொற்கையைப் பற்றிக் கிரேக்கர்கள் கூறும் செய்திகள்**

நம் நாட்டு எழுத்தாளர்கள் வணிகர்கள் முதலியவர்களிடமிருந்து தெரிவதை விட மிகுதியாகக் கொற்கையைப் பற்றிய செய்திகள் கிரேக்கர்களிடமிருந்து கிடைக்கின்றன. சுமார் கி.பி.80ல் இந்தியாவிற்கு வந்த கிரேக்க அறிஞனும், எரித்திரேயன் அல்லது செங்கடலைச் சுற்றி மரக்கலத்தில் வந்தவனுமாகிய (இதனால் செங்கடலின் வாயிலிருந்து வங்காளக் குடாக்கடல் வரையுள்ள அரபிக்கடல் முழுவதும் தெரிய வந்தது) பெரிப்புளூஸ் மாரிஸ் எரித்தரேஸ் (Periplus Maris Erigthrace) என்பவர் கொற்கையைப் பற்றி எழுதியுள்ளார். கி.பி. 130ல் வாழ்ந்த நிலநூல் அறிஞரான தாலமியும் அதைப் பற்றிக் கூறியுள்ளார். இவர்களால் கொற்கை, வணிக நிலையம் என்று வழங்கப்பட்டது. பெண்டிங்கரால் கண்டுபிடிக்கப்பட்ட பழைய நிலப்படங்களில் (maps) இந்தியாவிலுள்ள சில இடங்களுள் இதுவும் ஒன்றாகும். இந்நிலப் படங்கள் எழுதப்பட்ட காலம் இன்னதென்பது தெரியவில்லை. ஆசியப் பகுதிகளைக் கூர்ந்து நோக்குங்கால் இதன் ஆசிரியர் தாலமியுடன் பழகியவரென்பது தெரியவில்லை. ஆகையால், அவர் தாலமிக்கு முந்திய காலத்தினராய் இருக்கலாம். ஐரோப்பியப் பகுதிகளைச் சேர்ந்த சில இடங்கள் பிற்காலத்தவையாய் இருக்கின்றன. பெரிப்புளூசின் ஆசிரியரும் தாலமியும் பாண்டி நாட்டில் அக்காலத்தில் முத்துக்



குளிக்கும் முக்கிய இடமாகக் கொற்கை இருந்தது என்பதை ஒப்புக் கொள்கின்றனர். தாலமி, கோலன் நதியின் வடக்கே கொற்கை உள்ளது என்று கூறுகிறார். கன்னியாகுமரியைச் சுற்றி வந்த கிரேக்கர்கள் வந்து இறங்கிய முதல் துறைமுகப்பட்டினமும் திருநெல்வேலிக் கடற்கரையிலுள்ள இடமென்று முதன்முதல் குறிக்கப்பட்ட இடமும் கொற்கையே ஆகும். மன்னார் குடாக் கடல் கொற்கையின் பெயராலேயே 'கொற்கைக்குடா' என்று கிரேக்கர்களால் வழங்கப்பட்டதிலிருந்து இது மிக முக்கிய இடமெனக் கருதப்பட்டு வந்தமை தெரிகிறது. பெண்டிங்கர் அட்டவணையில் கோல்லிஸ் இண்டோரம், இந்தியாவின் கோல்லிஸ் (colcis) என்று குறிப்பிட்டார்கள். இதற்குக் காரணம், கருங்கடலிலுள்ள பழக்கப்பட்ட கோல்லிஸினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதே. தமிழிலும் கிரேக்க மொழியிலும் 'கொற்கை' என்னும் இடப்பெயர், ஒரே உச்சரிப்பை உடையதாகவே இருக்கிறது. 'கொல்கை' என்பதில் இன்னோசையின் பொருட்டுக் கொற்கை என்று 'ல' கரத்திற்குப் பதில் 'ற' கரமிட்டு உச்சரிக்கிறார்கள் (புணர்ச்சி விதியும் - ந.ச.). ஆனால் மேற்குக் கடற்கரையில் அதைக் கொல்கை என்றே வழங்குகிறார்கள். திருச்செந்தூர் கோவிலிலுள்ள தமிழ்க் கல்வெட்டு ஒன்றில் கொல்கை என்றே செதுக்கப்பட்டிருப்பதை நான் கண்டேன். இந்த இடம் மூன்று அல்லது நான்கு மைல் கடலிலிருந்து உட்புறத்திலிருக்கிறது. ஆனால் ஒரு காலத்தில் இப்பட்டினம் கடற்கரையிலேயே இருந்தது; அதற்கு முன் காலத்திலும் கடற்கரையிலேயே இருந்தது என்பதற்கான பல சான்றுகள் இருக்கின்றன. இது ஒரு காலத்தில் முத்து வாணிபத் தலைநகராயும், நகராட்சியில் தலைமையிடமாயும் இருந்தது என்பதைத் தெற்கில் இதன் அருகே எஞ்சி இருக்கும் மக்களிடமிருந்து தெரிந்து கொண்டேன் (களப்பணி ஆய்வுக்கும் கால்டுவெல் வழிகாட்டி! - ந.ச.). பிறகு கடல் கொல்கையிலிருந்து விலகித் தள்ளி வந்தபோது கடற்கரையும் நாளடைவில் உயர்ந்து வந்ததால், கடலுக்கும் கொல்கைக்கும் இடையே ஒரு புதிய வாணிப நகரம் ஏற்பட்டது. இது இடைக் காலத்தில் மிக்க புகழ்பெற்ற இடமாய் விளங்கியது. இதுதான் காயல் என்பது. கொல்காய் என்பதும் கொல்கை என்பதும் ஒன்றே என்பதை உணர்ந்து கொண்டால்தான் மேற்கொண்டு அவற்றின் ஒற்றுமையைப் பற்றி நாம் அறிய இயலும். 'கொல்' என்பதற்குத் தமிழில் 'கொலை செய்' என்பது பொருள் 'கை' என்பது கரம். எனவே 'கொல்கை' என்பது 'கொலை செய்யும் கை' எனப் பொருள்படும் (தவறான பொருள் - ந.ச.). சேனைக்கு அரசாளுபவரின் முதல் ஆயுதமாக நாகரிகமற்ற காலத்திலிருந்த இலக்கியப் பெயர் கொலை செய்யும் கை என்பது; கை

என்பதற்கு இடம் என்ற பொருளும் உண்டு. (1. உதாரணமாக பொதி - கை, மறைந்திருக்கும் இடம் (இயற்கை இன்னும் சிறந்த எடுத்துக்காட்டு - ந.ச.). கொற்கை உற்பத்தியாகிவரும் மலையின் பெயர் கொல்லூன். ஒழுங்காகக் கொள்ளிடம், கொலை செய்யும் இடம் - என்பதோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இந்த இரு சொற்களின் பொருளும் 'கொல்கை'யில் இருப்பதால் தமிழ்மொழி அக்காலத்திலிருந்து இக்காலம்வரை மாறாதிருக்கின்றது என்பதை நாம் அறியலாம் (அதனால் தான் கன்னித்தமிழ் என்ற புகழ் - ந.ச.). இவ்விரு சொற்களும் கூட்டுச் சொற்களாய், சந்தியால் இனிமையான ஓசையுடன் இணைக்கப்பட்டிருக் கின்றன. ஆனால், இச்சொற்கள் அதே நிலையிலேயே இருக்கின்றன. ('கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று' (சிலம்பு. 6:162) என்ற இளங்கோ அடிகளின் வரியைக் கால்டுவெல் அறிந்திருந்தால் ஆற்றின் ஆற்றல் பற்றிய இயற்கையான பொருள் கொண்டிருப்பார் - ந.ச.).

தென் திருநெல்வேலி உட்பட்ட கரையும் தென் திருவாங்கூர் உட்பட்ட கரையும் பெரிப்புளூஸின் ஆசிரியரால் 'பரிலியா' என்று வழங்கப்பட்டன. குயிலானுக்குத் (Quilon) தெற்கேயுள்ள சிவப்பு மலைகள் என்று வழங்கப்படும் இடத்திலிருந்து கன்னியாகுமரி மட்டுமல்லாமல் கொற்கையும் சேர்ந்த பகுதியே அது. பரலியா என்பது கரை எனப் பொருள்படும் கிரேக்கச் சொல். இது கிரேக்கர்கள் அயல்நாட்டுப் பெயர் ஒன்றை எழுதுவது போலத் தெரியவில்லை. ஏனெனில், தாலமி என்பவர் பல பரலியாக்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இப்பெயரால் வழங்கப்பட்ட கரையில் தாலமியால் குறிக்கப்பட்ட நாடாகிய தென் திருவாங்கூராகிய 'ஆய் நாடு'ம் தென் திருநெல்வேலியிலுள்ள காரையும் சேர்ந்திருந்தன. காரையைப் பற்றி எழுதும் ஆசிரியர் ஒருவர் மற்றப் பரலியாக்களில் வசித்து வந்தார். காரை என்பது கரை என்று தமிழில் பொருள்படும். இது கரைத்தல் என்பதன் வினைப்பகுதி. இது பரலியா என்ற கிரேக்க சொல்லுக்குச் சரியான பொருளைப் பெற்றிருப்பது தெளிவாகிறது. இன்றுவரை திருநெல்வேலிக் கரையின் பெரும்பாகங்கள் கரைச்சுற்று (கரையைச் சுற்றியுள்ள பகுதி என்று வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது. வடக்கே செம்படவருள் ஒரு பிரிவினர் கரையர், கரைமக்கள் என்று வழங்கப்படுகின்றனர்) (கரையாளர் என்ற சாதிப்பெயரும் கருதத்தக்கது - ந.ச.). கரையைச் சுட்டும் இத்தமிழ்ச் சொல் தாலமியினால் குறிக்கப்பட்டுள்ள பல இடங்களுக்குப் பெயராய் அமைந்திருக்கிறது. ஆனால், இப்பெயருள்ள இடங்கள் இன்னும் கண்டுபிடிக்கப்பட வில்லை. உதாரணமாக 'பெரிங்கரை'யைக் கருதலாம். இச்சொல்லில்



'ரி'கரத்திற்குப் பதிலாக 'ரு'கரத்தை இட்டுப் 'பெருங்கரை' என்று கூறினால், எழுத்திற்கு எழுத்து இப்போதைய தமிழ்ச் சொல்லோடு ஒத்திருக்கும். இதன் பொருள் 'பெரிய கடற்கரை' என்பது.

**கிரேக்கர்கள் அறிந்த கன்னியாகுமரி**

கன்னியாகுமரி இப்பொழுது திருநெல்வேலியிலில்லாமல் திருவாங்கூரில் (இந்நிலை இப்பொழுது இல்லை - ந.ச.) உள்ளது. முன்காலத்தில் பாண்டி நாட்டின் தென்கோடியாய் இருந்த திருநெல்வேலியிலேதான் அது இருந்தது. திருநெல்வேலி எல்லைக்கு அருகிலுள்ள இடமாயும் மிகப் பெயர் பெற்ற ஓர் இடமாயுமிருப்பதால், இதைப்பற்றிக் கிரேக்கர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதைக் குறிப்பிடப் பெரிதும் விரும்புகிறேன். அதைக் கொமாரிய அக்ரான், கொமரியா முனை என்று தாலமியும், 'கொமரி' அல்லது 'கொமார்' என்று பெரிப்புளூஸின் ஆசிரியரும் குறிப்பிடுகிறார்கள். பெரிப்புளூஸின் ஆசிரியர், பகாரிக்கும்பின் பிரகாஸ் (அல்லது சிவப்பு) மலை தென்திசையில் தென்படுகிறது. அதன் அருகே பாண்டிய அரசர்களுக்குச் சொந்தமான முத்துக்குளித்தல் நடைபெறுகின்ற இடத்திலேயுள்ள பரலியா என்று வழங்கப்பட்ட மற்றொரு நாடும், கொல்கை என்ற பெயருடைய நகரமும் உள்ளன. இதன்படி முதலிற் காணப்பட்ட இடம் பாலிடா என்று வழங்கப்பட்டது. இதற்கு ஒரு நல்ல துறைமுகமும் அதன் கரையில் ஒரு சிறிய கிராமமும் இருக்கின்றன. இதையடுத்து அதே பெயரையுடைய முனையும் துறைமுகப்பட்டனமு மாகிய கொமார் என்ற இடமும் உள்ளன. தங்கள் வாழ்க்கையைச் சமயத்திற்கு உரியதாக்குபவர்கள் இங்கு வந்து தீர்த்தமாடித் துறவறத்தில் ஈடுபடுவார்கள். ஒரு காலத்தில் பெண் கடவுள் இங்குத் தங்கி தீர்த்தமாடியதாகச் சொல்லப்படுவதால் பெண்களும் இவ்வாறு செய்வதுண்டு. கொமாரையிலிருந்து தெற்கே முத்துக்குளிக்கும் தொழில் நடக்கும் கொல்கை (கொற்கை) வரை இந்நாடு பரவியிருந்தது. தண்டிக்கப்பட்ட குற்றவாளிகள் இத்தொழிலைச் செய்துவந்தார்கள். பாண்டிய அரசன் முத்துக்குளித்தலில் உரிமையுடையவன். கொல்கை (கொற்கை) வரை ஒரு குடாவைச் சுற்றிப் பரவியிருந்த மற்றொரு கரையின் உட்புறத்தில் ஆரகலான் என்னும் மாவட்டம் அமைந்துள்ளது. எபியடோரஸ் என்னும் தீவினருகே கிடைக்கும் முத்துகள் இந்த இடத்தில் மட்டுந்தான் கிடைக்கின்றன. ஆசிரியர் பெண்கடவுள் தீர்த்தமாடித் தங்கியிருப்பதாகச் சொல்லப்படுகிறது என்று கூறுவதால், இதற்கான சான்றை எழுத்துவாயிலாக எங்கேனும் கண்டுபிடித்திருப்பார் என்பது அறியக் கிடக்கின்றது. எப்படியாயினும், அத்தகைய வழக்கம்

இருந்ததாகவும் அது நம்பப்பட்டு வந்ததாகவும் அவர் குறிப்பிடுகின்றார். பெண்கடவுள் துர்க்கை அல்லது குமரியின் வரத்திற்காகச் செய்யப்படும் இம்மாதாந்தரத் தீர்த்தமாடும் வழக்கம் இப்பொழுதும் கன்னியாகுமரியில் தொடர்ந்து செய்யப்பட்டு வருகிறது. ஆனால், முற்காலத்தைப் போன்று தீவிரமாகச் செய்யப்படுவதில்லை. இந்த இடத்திற்குப் பெயர் 'குமாரி' அதாவது 'கன்னி' என்ற வடமொழிச் சொல்லிலிருந்தே வந்தது. இது துர்க்கைக் கடவுளின் மற்றொரு பெயராகும். துர்க்கையே அவ்விடத்தின் சிறந்த தெய்வம். ஆனால், தெளிவான தமிழிலுள்ள 'குமார்' என்ற சொல்லிலிருந்தே இப்பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். சாதாரணத் தமிழில் 'கொமாரி' என்பது 'குமரி' என்றாயிற்று. முனைக்கு அருகே வாழும் மக்களின் கொச்சைத் தமிழில் கன்னி என்பது குமாரி அல்லது கொமாரி இரண்டுமல்ல. ஆனால் 'கொமார்' என்று உச்சரிக்கப்பட்டு வரும் 'குமார்' என்னும் சொல்லே கன்னியைக் குறிக்கின்றது. வடமொழிப் பெயரின் கொச்சைத் தமிழ்த் திரிபாகிய இச்சொல், பெரிப்புளூஸின் ஆசிரியர் அந்த இடத்திற்குக் கொடுத்திருக்கும் பெயருடன் ஒத்திருக்கிறது. (இப்போதும் திருநெல்வேலி மாவட்டத்தில் கன்னிப் பெண்களைக் 'குமரு' என்று குறிக்கும் வழக்கம் உள்ளது. மேலும் பழந்தமிழர் தோன்றியதாகக் கருதப்படும் இடத்தின் பெயர் வடமொழியிலிருந்து வந்திருக்குமா? - ந.ச.). கிரேக்க மாலுமிகள் கண்ட இக்கன்னியாகுமரி முனையிலுள்ள துறைமுகம் கடலின் படையெடுப்பால் இருந்த இடம் தெரியாமல் முழுகிவிட்டது. ஆனால், நல்ல தண்ணீருள்ள கிணறு ஒன்றுமட்டும் மலைகளின் இடையில் கடலிலிருந்து சிறிது தொலைவில் இருக்கிறது.

தமிழ்க் குமாரி, வடமொழிக் குமாரி இரண்டும் புராண ஆசிரியர்களால் இந்தியாவின் ஏழு புண்ணிய நதிகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. தீபகற்பத்தின் தென்பகுதிக்கும் அதே பெயர் வழங்கப்படுகிறது. பரதன் மகளாகிய குமாரியினால் இப்பெயர் ஏற்பட்டது என்று சொல்லப்படுகிறது. முதல் இந்திய அரசனாகிய பரதன் மகள் குமாரி. அவள் தந்தையால் தென்னாட்டிற்கு அரசியாக்கப்பட்டாள். குமரிக் கடற்கரையின் தலைவன் அதாவது 'குமாரி சர்ப்பன்' என்பது பாண்டிய அரசனது பெயர். ஏனெனில், குமரியை அடுத்துள்ள நிலங்கள் அத்தனையும் பாண்டியனைச் சேர்ந்தது. தாமிரபரணி, குமரி ஆறு என்று வழங்கப்பட்டது என்றும் கொள்ளலாம். ஆனால், குமாரி என்ற பெயர் இலக்கியங்களில் எந்த நதியையும் குறிக்கும் பெயராய் இல்லையாதலால் அவ்வாறு இருக்க இயலாது (கால்டுவெல் சங்கநூல்களை அறியார். அதனால் புறம். 67-6 அவர் பார்க்கவில்லை!



- ந.ச.). கன்னியாகுமரியில் ஏற்கெனவே ஒரு நதி - உண்மையான நதி - புனித நதி - இருந்ததென்றும், அங்கு மக்கள் தீர்த்தமாடினார்கள் என்றும் உள்நாட்டார் செவிவழிச் செய்தியாகக் கூறுகின்றார்கள். ஆனால், இந்த நதி. கடலினால் விழுங்கப்பட்டுவிட்டது. பெரிப்புளூஸில் தெளிவாக எழுதப்பெற்ற செய்தி இல்லாவிடில், இது நம்பப்படலாம். ஆனால் அறிஞரான கிரேக்கரின் வார்த்தைகளுக்குள்ள உண்மையை எதிர்க்கவல்ல எந்த அகநாட்டு (உள்நாட்டு) மரபுவழிக் கதையும் இல்லை. எனவே, பழங்காலத்தில் மக்கள் ஆற்றில் தீர்த்தமாடாமல் கடலிலேயே தீர்த்தமாடினார்கள் என்பது தெளிவு. (கால்டுவெல் சிலப்பதிகாரம், மணிமேகலை நூல்களை அறியார்! - ந.ச.). இதைத் தவிரப் பாண்டியனுக்குக் கொடுக்கப்பட்ட பட்டம் இந்த எண்ணத்திற்கு மாறான சான்று தருகிறது. ஏனெனில் 'சர்ப்பன்' (சர்ப்பன்' என்பது 'சேர்ப்பன்' என்பதன் மரூஉ-ந.ச.) என்பது கடற்கரையைக் குறிக்கின்றது. நதிக்கரையையன்று. 'குமாரி சர்ப்பன்' என்பது 'குமரிக்கடற்கரையின் தலைவன்' என்று பொருள்படும். மேலும், கன்னியாகுமரியில் குமரியின் பெயரால் மக்கள் தீர்த்தமாடுவது பரத அரசனின் மகளுக்காக அன்று; குமரி என்றும் வழங்கப்படும் துர்க்காதேவிக்காகவே. கன்னியாகுமரியில் துர்க்கையின் சிறப்புப் பெயர் பகவதி. தனிப்பட்ட ஆதாரங்களினின்றும் ஊகிக்கப்பட்டு நிலைநிறுத்தப்படாத செய்திகளுக்கு அகநாட்டு (உள்நாட்டு) மரபுவழிக் கதைகள் எவ்வளவு நம்பிக்கையற்ற செய்திகளைத் தருகின்றன என்பதற்குக் கன்னியாகுமரியைப் பற்றிய இக்கிளைக் கதை ஒரு சான்றாகும் (1. இப்படிப்பட்ட கதைகள் யாரால் - ஏன் - படைக்கப்பட்டன என்பதும் எண்ணிப் பார்க்கவேண்டிய ஒன்று. 2. கால்டுவெல் போன்றோர் பழந்தமிழ் நூல்களைப் பார்த்தறியா நிலையில் செய்யும் ஆய்வுகளும் சிறுமையுடையனவே! - ந.ச.).

### கிரேக்கர்கள் கண்ட பாம்பன்

பாம்பனைப் பற்றிக் கிரேக்கர்கள் கூறியவற்றை இங்கே கூறுவது பொருத்தம் உடையதாகும். பாம்பன் என்பது புகழ் பெற்ற இராமேசுவரக் கோவில் அமைந்துள்ள தீவாகும். ஆனால், பாம்பன் கன்னியாகுமரியைப் போன்று திருநெல்வேலி எல்லையைக் கடந்து இருக்கிறது. கன்னியாகுமரி திருவாங்கூரிலுள்ளது (கால்டுவெல் காலத்தில்! - ந.ச.). மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த இராமநாதபுர குறுநில மன்னர் ஆட்சியில் (ஜமீந்தாரியில்) உள்ளது பாம்பன். கொரி என்ற தீவு அர்காலின் குடா அல்லது பால்கன் நீரிணைப்பி (ஜலசந்தி) லிருப்பதாகத் தாலமி வருணித்துள்ளார். மற்றோர் இடத்தில் இதை

'முனை' என்று அவர் குறிக்கின்றார். இத்தீவு பாம்பன் தீவாகவே இருப்பின், அவருடைய இருவகை விளக்கமும் உண்மைதான். ஏனெனில், பாம்பன் நீண்ட ஒடுக்கமான தீவாய் அமைந்து பரந்த மணற்பாங்கான நிலத்தில் முடிகின்றது. கால்மியர் முனைக்கும் பாம்பன் தீவிற்கும் இடையேயுள்ள வளைகுடா இராமனது வில் (தனுசு) என்று கற்பனையாய் வழங்கப்படுகிறது. இவ்விரு கோடிகளாகிய முனைகளிலும் சிறப்பானது பாம்பன் தீவின் முனையிலுள்ள இராமேசுவரத்திலிருக்கும் கோடிதான். கோடி என்ற சொல் அயல்நாட்டவரின் உச்சரிப்பால் 'கோரி' என்று திரிந்தது. மிக உயர்ந்த மதிப்புள்ள எண்ணாகிய கோடி (எண்ணிக்கையின் எல்லை - கோடி! - ந.ச.) 'குரோர்' என்று அயலவரால் உச்சரிக்கப்பட்டு எழுதப்படும் எளிமையை எண்ணும்போது 'கோடி' 'கோரி'யாக மாறியதன் காரணம் புலப்படும். கிரேக்கர்களுடைய கொரியைப் பற்றி ஒன்றும் அறியாமலேயே போர்ச்சுக்கீசியர்கள் அதே நிலமுனையை 'கேப் ராமனா கொரு' என்று வழங்கியது குறிப்பிடத்தக்கது (கால்டுவெல் தம்மவர் குற்றம் குறையையும் எடுத்துக்காட்டும் குணமே குணம்! - ந.ச.).

மன்னர் குடாவிலிருந்து பால்கன் நீரிணைப்பு (ஜலசந்தி) அல்லது தொண்டித் துறைமுகத்திற்குப் போகும் கப்பல்கள் நுழையும் வழி இப்பொழுது நேராய் இருப்பினும் முன்பு திருகலாய் அமைந்திருந்த ஆதாம்பால மலைத்தொடரின் இடையே செல்லும் கால்வாயின் அமைப்புக் காரணமாகப் 'பாம்பைப் போன்றது' என்ற பொருளில் அத்தீவிற்குப் பாம்பன் தீவு என்று பெயர் ஏற்பட்டது (ஆற்றுப் பெயர் ஆய்வுக்குப் புவியியல் அறிவு இன்றியமையாதது - ந.ச.). தீவின் கிழக்குக் கரையோரமாயுள்ள புகழ் பெற்ற கோவில் இராமேசுவரம். சைவர் கருத்துப்படி 'ராமேசுவரன்' என்ற பெயர் அமையக் காரணம் இராமனால் ஈசுவரன் போற்றி வழிபடப்பட்ட கடவுளை - சிவனை - அது குறிப்பதாகும். 'இராமேசுவரன்' என்ற கூட்டுச் சொல்லின் பிற்பகுதியாகிய ஈசுவரன் என்ற சொல் பெரும்பாலும் சிவனையே குறிக்கிறது. இப்பெயருடன் ஒத்துள்ள மற்றொரு பெயர் இராமநாதன். 'இராமனாகிய தலைவன்' என்ற பொருளுடைய இச்சொல் இராமநாதபுரம் என்ற சொல்லின் முற்பகுதியாகும். இந்த இராமநாதபுரம் குறுநில மன்னன் ஆட்சியின் (ஜமீந்தாரியின்) தலைநகரம். இந்த இராமநாதபுரம் குறுநில மன்னன் ஆட்சி (ஜமீந்தாரி)யிலேயே பாம்பன் அமைந்துள்ளது. இவ்வாறு இராமன் சிவபிரானை வழிபட்டது அவன் இலங்கையினின்றும் திரும்பி வந்தபோது நிகழ்ந்ததென நம்பப்படுகிறது.



தாலமிக்கு முன் தோன்றிய பல கிரேக்க ரோம புவியியல் நூல்களில் 'கோலிஸ்' என்ற பெயர் முக்கிய இடம்பெறுகின்றது. தாலமி காலத்தில் 'கோலிஸ்' என்பது மறைந்து அதற்குமுன் அறியப்படாத ஒன்றாய் இருந்த 'கொரி' என்ற பெயர் ஏற்பட்டது. 'கோரிஸ், கொரி' என்னும் இரண்டும் ஒன்றே என்பதிலும், இவை இரண்டும் பாம்பன் தீவின் முனை அல்லது இராமேசுவரம் என்பதையே குறிக்கின்றன என்பதிலும் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. பொருள் தொடர்பை ஒட்டிப் பார்க்கும்போது இது இலங்கைக்கு அருகேயுள்ள இந்தியாவின் முனை என்று பிளினி கூறுகிறார் என்பது தெரிகிறது. இலங்கைக்கும் இந்திய முனைக்கும் இடையே ஆழமற்ற கடலே உள்ளது. இது இந்தியாவின் தென்கோடி முனை என்றும் மதிக்கப்பட்டதால், கன்னியாகுமரியைக் குறிக்குமோ என்ற ஐயம் ஏற்படலாம். ஆனால், தாலமிக்கு முன்பு கன்னியாகுமரி ஒரு நாட்டின் முனையெனக் கருதப்படவில்லை. ஆனால், பம்பானியஸ் மேலா என்பவர், 'கொலிஸ்' என்பவன் தேவதூதன் என்று வருணிக்கிறார். இந்திய மொழிகளில் கோலி என்பதற்கும் இதே பொருள்தான் இருக்கிறது. அவர் தென் கடற்கரையின் கிழக்குக் கோடி முடியுமிடமென்று எண்ணுகிறார். அவர் கூற்றின்படி இந்தியாவிலிருந்து கிழக்கே நெடுந்தொலைவு இது பரவியிருந்தது. (மேலுள்ள கால்டுவெல் கருத்துகள் - சிறப்பாகத் தாலமிக்கு முன்பு கன்னியாகுமரி ஒரு நாட்டின் முனையெனக் கருதப்படவில்லை என்ற கருத்து குமரிக்கண்ட மறைவு பற்றிய எண்ணங்கட்கு ஏற்றம் தரவல்லது! - ந.ச.).

### கிரேக்கர்கள் கண்ட பாண்டியரும் மதுரையும்

பாண்டிய அரசர்கள் கிரேக்கர்களால் 'பாண்ட்யன்' என்று வழங்கப்பட்டார்கள் என்பதை முன்பே கூறியுள்ளேன். அவர்கள் மக்களையும் 'பாண்ட்யன்கள்' என்று வழங்கினார்கள். அரசனது பெயராலேயே மக்களும் வழங்கப்பட்டமையால் இவ்வாறு அவர்கள் குறிப்பிட்டுள்ளது சரியானதே. அரசன் பாண்டியன் என்றும் மக்கள் பாண்டியர்கள் என்றும் வழங்கப்பட்டார்கள். மதுரையை 'மொதௌரா' என்றும் 'அரசகம்' 'வீரபாண்டியன் நகரம்', 'பலிலியன் பாண்ட்யன்ஸ்' என்றும் தாலமி குறிப்பிட்டிருக்கிறார். பிளினி மதுரையை 'மொதுரா' என்று குறிப்பிடுகிறார். வடமேற்கு இந்தியாவில் கண்ணன் பிறந்த இடமாகிய மதுராவினின்றும் பிரித்துக் காட்டுவதற்காக மதுரையைத் 'தென் மதுரை' என்று வடமொழியில் குறிப்பிடுகிறார்கள். கிரேக்கர்கள் இதை 'மெதேரா' என்றும், தாலமி 'கடவுளரின் மெதௌரா' என்றும் நாகரிக ஆங்கிலத்தில் 'முத்ரா' என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதே

பெயர் கொண்ட மற்றோர் இடமும் இருக்கிறது. இலங்கைக்குத் தெற்கே மதுரா என்பதொன்றுள்ளது. 'கிழக்கு ஆர்ச்சிபெலாகோ'வில் 'மதுரா' என்று வழங்கப்படும் சிறிய தீவு உள்ளது. இத்தீவு இந்தியாவிலிருந்து சென்ற பிராமணி குடியேற்ற மக்களால் இப்பெயர் பெற்றது.

**தென்னிந்தியாவிற்குக் கிரேக்க உறவு ஏற்பட்ட காலம்**

ரோமர்கள் எகிப்தைக் கைப்பற்றிய காலத்தில் கிரேக்க வணிகர் இந்தியாவிற்கு வந்தனர் என்று தாலமியும் மற்றவர்களும் கிரேக்க வணிகர்களிடமிருந்து பெற்ற செய்திகளினின்று அறியக் கிடக்கின்றது. இந்தியாவில் காணப்படும் பழைய ரோம நாணயங்கள் அகஸ்தஸ் அரசன் காலத்தவை. மலையாளக் கடற்கரையில் ரோமப் பேரரசின் பொற்காசுகள் மிக அதிகமாகச் சில ஆண்டுகட்குமுன் கிடைத்தன. அவற்றில் அகஸ்தஸ் காலப் பழைய நாணயங்களும் நீரோவுடைய காசுகள் சிலவும் சேர்ந்த முப்பது வகைப்பட்ட நாணயங்களின் விவரங்களை ஒரு கட்டுரையில் நான் எழுதியுள்ளேன். (இவ்வாறு கால்டுவெல் எழுதிய பல்வேறு கட்டுரைகளையும் தொகுத்து வெளியிடல் பயன்தரும். - ந.ச.) 1851 இல் இக்காசுகளுக்கு உரிமையாளராகிய திருவாங்கூர் பேரரசரால் திருவாங்கூரில் இக்கட்டுரை பதிப்பிக்கப்பட்டது. அரிசியின் கிரேக்கச் சொல்லாகிய 'ஒரிஸா' முதன்முதல் அரிசி ஐரோப்பாவில் பழக்கத்திற்கு வந்தபோது ஏற்பட்டது. தவிடு நீங்கிய நெல்லுக்கு இங்கே அரிசி என்ற பெயரும் உள்ளது என்பதை ஐயப்படலாகாது. இக்காலம் போலவே முன்பும் அரிசி ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. ஐரோப்பாவிற்கு அரிசி ஏற்றுமதி செய்யப்பட்டுவந்த துறைமுகங்களில் எல்லாம் மிகச் சிறந்த - கிரேக்கர்களுக்குப் பழக்கப்பட்ட - துறைமுகம் தாமிரபரணியின் கழிமுகப் பகுதியிலுள்ள கொற்கை (கொல்கை) துறைமுகமாகும். கிரேக்கர்களுக்கு முன் இந்தியாவின் வியாபாரம் பெனிஷியர்களிடமும் பெர்ஷியர்களிடமும் இருந்தது. உலகத்திலும் பழைய எழுத்து வடிவானக் குறிப்புகளிலுள்ள மிகப் பழைமையான தமிழ்ச் சொல் மயிலின் பெயராகும். இது ஹீப்ரு அரசு பாடபுத்தகங்களிலும் வரலாறுகளிலும் (சுமார் கி.மு. 1000 இல்) ஓபிரிலிருந்து பெனிஷியர்கள் தங்கள் பெரிய வியாபாரக் கப்பற் கூட்டத்தின் ஒரு பகுதியாகிய சாலமோனுடைய கப்பல்களில் கொண்டுவரப்பட்டது என்றுள்ளது. வியாபாரப் பொருள்களின் பட்டியலிலும் காணப்படுகிறது. ஹீப்ருவிலுள்ள 'தூக்' என்ற சொல், தமிழ்த் 'தோகை' என்ற சொல்லிலிருந்து வந்தது. கிரேக்க மொழியிலுள்ள மிகப் பழைமையான தமிழ்ச் சொல் கருவப்பட்டையின் பெயராகும். இது சுமார் கி.மு. 400இல் பெர்ஷியர்களிடமிருந்து எடிசியாஸ் என்பவனால் அறியப்பட்டது. இது கார்பியன் என்பதன் பகுதியான கார்பி தமிழ் மலையாளத்தில் கறிப்பு, பருப்பு, அல்லது கருவ என்ற கருவப் பட்டையின் பொதுப் பெயரோடு இணைந்திருக்கிறது என்பதில் ஐய மில்லை (கால்டுவெல் ஒப்பிலக்கணத்தின் முன்னுரைப் பகுதியில் ஐரோப்பிய மொழிகளில் தமிழ்ச் சொற்கள் பற்றிக் கூறியுள்ளமை காண்க. - ந.ச.).



கிரேக்கர்களின் வீரத்திற்கும் துணிவிற்கும் சான்றாக உள்ள ஒரு கதையை எடுத்துக் கூறாமல், தென்னிந்தியாவில் ஏற்பட்ட கிரேக்கர்களின் வியாபார உறவைப் பற்றிய வரலாற்றை என்னால் முடிக்க இயலாது (கால்டுவெல்லுக்குத் தான் கருத்துகளைச் சொல்வதில் அவ்வளவு ஆர்வம்! இதுவே ஆய்வாளரின் அடிப்படைப் பண்பு! - ந.ச.). மாலுமிகளின் திசை காட்டும் கருவி கண்டுபிடிக்காத காலத்தில் மரக்கலங்கள் கடற்கரையை ஒட்டியே பயணம் செய்ய வேண்டியிருந்தால், பெனிஷியர்களின் காலத்திலிருந்து ஓபிருக்குக் கடல் வழியாகச் செல்ல மூன்று ஆண்டுகளாகும். செங்கடலிலிருந்து இந்தியாவின் மேற்குக் கரைக்குப் பயணம் செய்ய இவ்வளவு கால அளவு ஆகாவிடினும், பயணம் நீண்டதாகவும் தொந்தரவுகள் நிறைந்ததாகவும் இருக்கும். நாளடைவில் ஹிப்பாலஸ் என்ற கிரேக்க மாலுமி தென்மேற்குப் பருவக்காற்று எத்தனை மாதங்களுக்குப் பலமாக ஒரே திசையில் வீசுகிறது என்பதைக் குறித்துக் கொண்டு, கொலம்பஸின் துணிவிற்குச் சமமான துணிவோடு வீசும் காற்றின் திசையிலேயே துணிந்து மரக்கலத்தைச் செலுத்தி, தான் அடைய எண்ணிய இடத்தருகே அமைந்துள்ள மேற்குக் கடற்கரையைப் பத்திரமாக அடைந்தான். கடற்பயணம் செய்ய விருப்புற்ற மற்றக் கிரேக்கர்களும் மகிழ்ச்சியோடு அவன் மேற்கோளைப் பின்பற்றினார்கள். அவனது துணிவான செயலின் நினைவாகத் தென்மேற்குப் பருவக்காற்றை ஹிப்பாலஸ் என்றே வழங்கிவந்தனர்.

தென்னிந்தியாவில் மிக அக்கறைகொண்ட கடைசிக் கிரேக்கர் கோமஸ் இண்டிகோ பிளிடஸ் என்பவர் கி.பி.535 இல் 'கிறிஸ்டியன் டோபோகிரபி' என்ற தனது நூலில் இலங்கையைப் பற்றியும் மலையாளக் கரை அல்லது மிளகு வரும் 'மேல்' என்ற பகுதியைப் பற்றியும் சுவையான செய்திகளைக் குறிப்பிடுகின்றார். ஆனால் அல்வினையால் (தீவினையால்) திருநெல்வேலி அல்லது கிழக்குக் கடற்கரை பற்றி அவர் ஒன்றும் கூறவில்லை.

★

# இயல் - 2

## பாண்டியர் ஆட்சியின் ஆரம்ப முதல் விசயநகர ஆட்சியின் வானுயர் காலம் வரை

### பாண்டி நாட்டின் எல்லைகள்

சேர சோழ பாண்டிய நாடுகளாகிய மூன்று தமிழ்நாடுகளின் எல்லைகள், பரப்புகள் முதலியவைகளைப் பற்றிச் சில புவியியல் செய்யுள்கள் வழக்குமுறையிலுள்ளன. இச்செய்யுள்கள் அதிகாரபூர்வமானவையென்றும் இலக்கிய உயர்வுடையவை என்றும் தமிழ்மக்கள் மதிக்கின்றார்கள். பாண்டி நாட்டைப்பற்றிக் கூறும் செய்யுளின்படி, பாண்டி நாட்டின் வடக்கே வெள்ளாறும் தெற்கே கன்னியாகுமரியும் கிழக்கே மன்னார்குடாக்கடல் பால்கன் நீரிணைப்பு (ஜலசந்தி) அல்லது தொண்டி வளைகுடாக் கடலும், மேற்கே உயர்ந்த பெரு வழியும் எல்லைகளாயமைந்திருந்தன. இவற்றுள் கிழக்கு எல்லையாகிய கடலைப்பற்றிச் சிறப்பாகக் கூற ஒன்றுமில்லை. பாண்டிநாடு பற்றிய செய்யுளில் பாண்டி நாட்டின் வடவெல்லை வெள்ளாறு என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. சோழநாடு பற்றிய செய்யுளிலும் சோழநாட்டின் தென்னெல்லை வெள்ளாறு என்பது குறிப்பிடப்படுகிறது. போட்டியும் சச்சரவும் நிரம்பிய இருபிரிவினராகிய சோழ பாண்டியரிடையே இருந்த இப்பொது எல்லை அடிக்கடி மாறிக் கொண்டேயிருந்திருக்க வேண்டும். ஒரு காலத்தில் முழுப் பாண்டி நாடும் சோழநாட்டுடன் இணைந்திருந்தது என்பது நாம் அறிந்ததேயாகும். தொடர்ந்த போரினால் அலுப்படைந்த சோழ பாண்டியர் தமக்குள் ஒரு நன்னாளில் ஒரு திருமணம் வாயிலாகச் சமாதானம் (அமைதி) செய்து கொண்டனர். அப்போது இருசாராருடைய பேராளர்களும் (பிரதிநிதிகளும்) கூடி வெள்ளாற்றைப் பொது எல்லையாக்கினர். அந்நிகழ்ச்சியை நிலைபேறுடையதாக்க வேண்டுமென்றெண்ணிய இருநாட்டுப் பேராளர்களும் (பிரதிநிதிகளும்) புலவர்களை வெள்ளாறு பொது எல்லையானது பற்றிச்



செய்யுள் இயற்றச் செய்தனர் (எல்லைத் தொல்லை! தொல்லையானதுதான்! தொல்லை என்பதற்குப் பழமையானது என்றும் பொருள்! இந்தத் தொல்லைக்குப் புலவர்களும் தொல்லை! அவர்களும் மனிதர்கள் தானே! - ந.ச.). பொது எல்லையாகக் கொள்ளப்பட்ட வெள்ளாறு போர்ட்டோ நோவோ (பரங்கிப்பேட்டை - ந.ச.). அருகில் கடலில் கூடும் வெள்ளாறு அன்று. ஏனெனில், இது சோழ நாட்டிலேயே மிக்க செழுமை கொழித்த பகுதியாகிய தஞ்சாவூரைச் சோழ நாட்டிலிருந்து பிரித்துவிடுகின்றது. இங்கே சொல்லப்பட்ட வெள்ளாறு, திருச்சிராப்பள்ளியிலுள்ள மருங்காபுரிக்கு அருகில் மலைகளில் தோன்றி, தென்கிழக்கில் புதுக்கோட்டை மாநிலம் (சமஸ்தானம்) வழியாய் ஓடிக் காலிமியர் முனைக்குத் தெற்கேயுள்ள பால்கன் நீரிணைப்பில் (ஜலசந்தியில்) கடலுடன் கலக்கிறது. நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள், பெண்கள் தங்களுடைய நாட்டு எல்லையாகிய வெள்ளாற்றைக் கடந்து செல்வது தீக்குறி (அபசகுணம்) என்று கருதி வந்த பழமையான வழக்காறு இந்த வெள்ளாறு, அதே வெள்ளாறுதான் என்பதை உறுதிப்படுத்துகிறது. (பார்க்க: 1, சோமலெ - 'செட்டிநாடும் தமிழும்', 2. வயி. இராமநாதன் செட்டியார் - 'நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு' - ந.ச.) இந்த ஒற்றுமைப்படி, திருச்சிராப்பள்ளி சோழர்களுக்கேயன்றி, பாண்டியர்களுக்கு உரிமையாவதன்று; பழங்காலத்தில் திருச்சிக்கருகேயுள்ள உறையூர் (சங்க இலக்கியம் போற்றும் உறந்தை - ந.ச.) டாலமியால் ஒர்தௌரா என்று வழங்கப்படுவது, பழைய சோழர்களின் தலைநகராயிருந்தது என்பதில் ஐயமில்லை. நாயக்கர் காலத்திலேதான் திருச்சிராப்பள்ளி மதுரை அரசர்களின் மாநிலத்தின் (இராச்சியத்தின்) ஒரு பகுதி ஆயிற்று (பார்க்க: அ.கி. பரந்தாமனார் - 'மதுரை நாயக்கர் வரலாறு'). பிற்கால நாயக்கர்களின் தலைநகரெனக் கருதப்பட்டு வந்தது மதுரையன்று; திருச்சிராப்பள்ளியே. பாண்டி நாட்டின் தென்னெல்லை கன்னியாகுமரியாயிருந்தது. செய்யுள் இயற்றப்பட்ட காலத்தில் பாண்டிநாடு பரவியிருந்த மேற்குக் கோடி, பாண்டி நாட்டின் எல்லையாகிய 'பெருவழி' என்று வழங்கப்பட்டது. மற்றொரு செய்யுளில் அதே வழி 'வழுதிகால்' பாண்டிய மன்னன் வழி - என்று வழங்கப்படுகிறது.[1] (பாண்டிய அரசனது இலக்கியப் பெயர் 'வழுதி' என்பது. கால் என்பது வழி. அச்சன்கோவில் என்பது சிவன் கோவில். அச்சன் - அப்பன், தகப்பன். இங்குக் குறிப்பிடப்பட்ட தகப்பன் சிவன். அப்பன் என்பதற்குப் பதிலாக அச்சன் என்ற சொல் பழக்கத்திலிருந்ததாகப் பழந்தமிழ் இலக்கணத்தில் மேற்கு நாடாகிய திருவாங்கூர் அதாவது குடநாட்டுத் தமிழுக்கு எடுத்துக்காட்டாகச்

சொல்லப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது (தொல். சொல். 400, உரை - ந.ச.). ஆரிகன் காவு என்றால் ஆரியர்களின் காவல்காரன், ஆரியன் அல்லது ஆர்யா, அதாவது ஹரிஹரபுத்ரா, ஐயனார் என்ற சுத்தமான தமிழ்ப் பெயரையுடையவர். எல்லைக் காவலரென எண்ணப்பட்டு வந்தது. 'காவு' என்பது தமிழ்க் 'காவல்' அதாவது 'காவற்காரன்' என்பதன் மலையாளச் சொல் (கா என்னும் ஓரெழுத்து ஒரு மொழிக்குச் சோலை என்ற பொருளும் உண்டு. கா என்பது காவல் என்றும் திரிந்து வழங்கும். எடுத்துக் காட்டு: திருவானைக்காவல் - ந.ச.).

இது குற்றாலத்திற்கு அருகிலுள்ள மலைகள் வழியாகத் திருவாங்கூருக்குச் செல்லும் கணவாய் வழியாய் அமைந்துள்ளது. குறிப்பிட்ட இக்கணவாய் 'அச்சன்கோவிற் கணவாய்' என்று குறிப்பிடப்படுகிறது. பிற்காலத்தில் இவ்வழி பயனற்றதாகிவிட்டது. அம் மலைகளிடையேயுள்ள இப்போதைய கணவாய் 'ஆரியன்காவு' என்பது. கன்னியாகுமரிக்கு வடமேற்கே தென் திருவிதாங்கூரிலுள்ள மாவட்டமாகிய நாஞ்சில் நாடு முழுவதும் பாண்டிய நாட்டிற்குள் அடங்கியிருந்தது. அச்சன் கோவில் கணவாய்க்கு நுழையும் வழி திருவாங்கூர் என்று வழங்கப்படும் நகருக்கு மேற்கே உள்ளது. இச்சிறு நகரத்தின் பெயரே திருவாங்கூர். இதுவே நாட்டிற்கும் பெயராயிற்று. நாஞ்சில்நாட்டுக் கல்வெட்டுகள் இக்கூற்றின் உண்மையை விளக்குகின்றன. (நாஞ்சில் நாட்டின் விரிவான வரலாற்றிற்குச் சென்னைப் பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் கே.கே. பிள்ளையின் 'சுசீந்திரம் கோயில்' என்று ஆராய்ச்சிப் பெருநூல் காண்க - ந.ச.).

நாம் பார்த்தபடி சோழர்களும் பாண்டியர்களும் பொது எல்லையை ஒப்புக் கொண்டார்கள். அதே போலச் சேர பாண்டியர்கள் பொது எல்லையை ஒப்புக் கொள்ள விரும்பவில்லை. ஏனெனில், அச்சன் கோவில் கணவாய் பாண்டிய நாட்டிற்கு மேற்கு எல்லையாகவும், சேரனுடைய செய்யுளில் சேர நாட்டின் கிழக்கு எல்லை தென்காசி அச்சன்கோவில் கணவாய் அன்று என்றும் கூறப்படுகிறது. இதன்படி, குற்றாலத்தையும் சேர்த்துத் திருநெல்வேலி வட்டத்தி (தாலுக்கா)லுள்ள தென்காசியின் பெரும்பகுதி திருவாங்கூரைச் சேரும். தென்காசி ஒரு காலத்தில் திருவாங்கூரைச் சேர்ந்ததாய் இருந்திருக்கக் கூடும். ஆனால், கல்வெட்டுகள் 15, 16 ஆம் நூற்றாண்டுகளிலேனும் அது பாண்டியர்கள் பிடியிலிருந்ததென்று கூறுகின்றன. பாண்டிய மாநிலத்தின் மேற்குக் கோடி எல்லையை அச்சன்கோவில் கணவாய்க்குப் பதிலாகத் தென்காசியெனக் கொண்டால், பழைய அரச வழியின் நகரமாகிய திருவாங்கூர் நகரம் திருவாங்கூருக்கு உரியதாய் இருக்கும். ஆனால், நாஞ்சில்நாடு முன் போலப் பாண்டிநாட்டின் ஒரு பகுதியாகவே இருக்கும். மற்றொரு சேரனுடைய செய்யுள் சேரநாட்டின் மேற்கு எல்லை செங்கோட்டை என்று கூறுகிறது. இது இப்போதிருக்கும் அமைப்புக்குச் சரியாய் உள்ளது. இப்போது திருநெல்வேலிக்கும் திருவாங்கூருக்கும் இடையேயுள்ள எல்லை செங்கோட்டை நகர் வழியே செல்கிறது என்று நான் நம்புகிறேன். முற்காலத்தில் அது கிழக்கே சற்றுத் தள்ளி அமைந்திருந்ததால் முழு நகரமும் திருவாங்கூருக்குச் சொந்தமாயிருந்தது. செங்கோட்டை வட்டம் (தாலுக்கா) என்று வழங்கப்படும் செங்கோட்டை நகருக்கும் மலைகளுக்குமிடையேயுள்ள மாவட்டம் முதலில் பாண்டியர்களுக்குச் சொந்தமாயிருந்ததென்பது தெரிகிறது; ஆனால், பல நூற்றாண்டுகள் வரையில் திருவாங்கூரின் பகுதியாயிருந்தது. சிறிது காலம் இது ஆர்க்காட்டு நவாபுவின் வசத்திலும் பின்னர்த் திருவாங்கூர்ப் பேரரசர் வசத்திலுமிருந்தது (பார்க்க : பிற்சேர்க்கை); ஆனால், இறுதியில் 1809 இல் திருவாங்கூருடன் இணைக்கப்பட்டது. அச்சன்கோவில் கணவாய்க்குத் தெற்கிலேயே செங்கோட்டை அமைந்திருப்பதால், அதுவே பாண்டிய நாட்டின் மேற்குக் கோடியெனக் கருதுவதற்கும் தகுதியுடையதாயிருக்கிறது.



மூன்று நாடுகளின் பரப்பளவும் வெவ்வேறு பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன. அதன்படி சேரநாடு 800 சதுரமைல்; சோழநாடு 240 சதுரமைல்; பாண்டி நாடு 560 சதுரமைல்.

## பாண்டிய அரசர்கள்

நாம் முன்னரே பார்த்ததுபோல அசோகரின் கல்வெட்டுகள், மகாவமிசத்திலிருக்கும் குறிப்புகள், மகாபாரதம், மெகஸ்தனிசின் குறிப்புகள் முதலியவைகளினின்றும், கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே பாண்டி நாடும் பாண்டிய அரச வழியும் தோன்றிய வரலாற்றை அறிய இயல்கின்றது. இக் குறிப்புகளிலிருந்தே அரச பரம்பரை ஒன்று தோன்றியிருந்தது என்பதை உறுதியாகத் தீர்மானிக்கலாம். ஆனால், எந்த அரசனது பெயரும் கிட்டவில்லை. அவர்கள் காலத்தில் கிறித்து பிறந்தபின் கிரேக்க நிலநூல் வரைந்த குறிப்புகளினின்றும் பாண்டிய மாநிலம் இருந்ததுடன் அது இந்திய அரசு நிலங்களிடையே மிகச் சிறந்த நிலையையடைந்திருந்தது என்பதும் புலனாகிறது. எனினும், அக்குறிப்புகளிலிருந்தும் எந்தப் பாண்டிய அரசன் பெயரும் தெரியவில்லை. கிரேக்கர்களின் வருகைக்குப் பின்னும் மகாவமிசம் எழுதப்பட்ட காலத்திற்கு முன்னும் கிடைத்துள்ள அடுத்த நம்பிக்கைக்குரிய குறிப்பு வராகமிகிரர் எழுதிய 'பிருகத் சம்கிதா'

என்னும் நூலில் உள்ளது. வராக மிகிரர், கி.பி.404-இல் வாழ்ந்த இந்திய வானவியல் அறிஞர். 'பிரகத்சம்கிதா' அவரது வானவியல் அல்லது சதக நூலாகும். (டாக்டர் கெர்ன் மொழிபெயர்ப்புப் பார்க்க). தற்செயலாக அவர் பாண்டிய அரசன், தாமிரபரணி ஆறு, சங்கு, முத்துக் குளித்தல் முதலியவைகளைப் பற்றிக் குறித்துள்ளார். மகாபாரதம் புராணங்கள் முதலியவற்றில் கூறப்பட்டிருப்பது போல அந்நூலில் சோழர்களினின்றும் வேறாகத் 'திராவிடர்' என்பார் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களைப் பாண்டியர்கள் என்றுதான் கொள்ள வேண்டும். கிரேக்க இந்திய அறிஞர்களால் குறிக்கப்படாத பாண்டிய அரசர்களுடைய வரிசை ஒன்றைப் பாண்டியனுடைய ஆதாரங்களினின்றும் நான் தயாரித்துக் கொடுப்பதில் மிக்க மகிழ்ச்சியடைகிறேன். ஆனால், உள்நாட்டுக் கவிஞர்கள், பாணர்களால் குறிக்கப்பட்டிருக்கும் பாண்டிய அரச வரிசையிலிருக்கும் எந்தப் பெயரிலும் எனக்கு நம்பிக்கை இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். (எந்த மொழியிலும் இந்த நிலை உண்டு. பதரிலிருந்து மணியைப் பிரிப்பதே விருப்பமுடைய ஆய்வாளர் வேலை. அதில் சோர்வுக்கு இடம் ஏது - ந.ச.). பாண்டியர்கள், அவர்களைப் பற்றிய செய்திகள் முதலியவைகளைப் பற்றிய புறச்சான்றுகளைப் பற்றிச் சொல்ல நான் தயாராகவுள்ளேன். ஆனால், நாணயங்களிலிருந்தும் கல்வெட்டுகளிலிருந்தும், அதேகாலத்து நம்பிக்கையான செய்திகள் கிட்டாததால் உள்நாட்டிலேயே தயாரிக்கப்பட்ட அரச வரிசையை நம்புவதோ ஒப்புக்கொள்வதோ பெரும்பிழையாகும். இதைப் பற்றித் தெளிவாக அறிய விரும்புபவர்கள் வில்சனுடைய 'பாண்டிய அரசின் வரலாற்றுக்குறிப்பு' (Professor Wilson's, Historical sketch of the kingdom of pandya) என்னும் நூலையும், நெல்சனுடைய 'மெஜுரா மானுவல்' பகுதி - 2 பக்கம் 3ல் (Nelson's Madura Manual Part II, p.3) உள்ள 'மதுரைத் தலபுராணச் சுருக்கம்' (Abstract of the madura Sthala purana) என்னும் பகுதியையும், பாண்டிய அரச வழியைத் தோற்றுவித்தவரெனக் கருதப்படும் குலசேகர அரசனிலிருந்து குப்ஜன் அல்லது சுந்தரன் என்ற கடைசி அரசன் வரை உள்ள அரச வரிசையுடன் சேர்த்துப் படித்துக் கொள்ளலாம். இந்நூல்களை மேற்போக்காக ஆராய்ந்தாலும் இவை முழுவதும் கட்டுக்கதைகளாகவே உள்ளது தெரியும். மதுரையைப் பற்றிய மற்றொரு தமிழ்ப்புராணம் திருவிளையாடற் புராணம். அது நம்பவியலாத அதிசயங்களடங்கிய மூலத்தைவிட அதிகமான கட்டுக் கதைகள் நிரம்பியவை (கிறித்துவ சமய பைபிளும் பிற எச்சமய காப்பியங்களும்? - ந.ச.). அதன் மொழிபெயர்ப்பு, கவிஞனும்



அரசனுமாகிய அதிவீரராமபாண்டியனது வேண்டு கோளின்படி செய்யப்பட்டது என்று சொல்லப்படுவதால், அவனது காலம் 16 ஆம் நூற்றாண்டின் இறுதிக்காலமாயிருக்க வேண்டும். மதுரை அரசர்கள் வரிசையிலுள்ள எல்லா அரசர்களுடைய பெயரும் அக்காலத்தவருடைய முழுக் கற்பனை என்று வாதாட நான் முன்வரவில்லை. கல்வெட்டுகளினால் உண்மை நிறுவப்படும் வரையில் (இன்று வரை இது செய்யப்படவில்லை - ந.ச.). அவற்றின் வரலாற்று மதிப்பு நம்பக்கூடியதன்று. இப்போதைக்கு அவை கிறித்துவுக்கு முன் தோன்றிய கலிடோனிய அரசர்களின் படங்கள் எடின்பரோவிலுள்ள ஹோலி ரோட் பாலஸின் சுவர்களைப் அலங்கரிப்பதைப் போன்ற நிலையிலுள்ளன என்று அஞ்சுகின்றேன் (ஆசிரியரின் ஒப்புள்ளம் போற்றத்தக்கது - ந.ச.). எனவே, இப்பொழுது அந்த வரிசைப்பட்டியல்களைக் கவனியாது விட்டுவிடுவது நலமெனக் கருதுகிறேன். இதுவரை - எனக்குத் தெரிந்தவரை - அவ்வரிசையிலுள்ள ஒரே ஒரு பெயர்மட்டும் நாணயத்தின் மூலம் உறுதிப்படுகிறது. சமர கோலாகலன், போர்முழக்கம் செய்பவன் (இது அவன் பெயர் என்பதைவிட அவனுக்கிட்ட விருது என்றே தோன்றுகிறது) என்ற அப்பெயரையே சர் வால்டர் எலியட்டுக்குச் சொந்தமான ஒரு நாணயத்தில் கண்டேன். ஆனால் அந்தக் காலம் தெரியவில்லை. இது ஆராய்ச்சித் துறையைச் சார்ந்தது. ஆனால், அத்துறையில் மிகச் சிறிய அளவிலேயே செயல்கள் நடைபெறுகின்றன (90 களாகியும் ?! - ந.ச.).

ஆதியில் தோன்றிய பாண்டிய அரசர்களுடைய பழைய வரிசையின் இறுதி அரசர் இருவரின் பெயர்கள் ஒரு கல்வெட்டிலிருப்பது சிதம்பரத்திலுள்ள டாக்டர் பர்ன்வெல் என்பவரிடமிருந்து அறிந்த செய்தி வாயிலாகத் தெரிகிறது. அவர்கள் விக்கிரம பாண்டியனும் அவன் மகன் வீரபாண்டியனுமாவார்கள். அந்த வீரபாண்டியன் ராஜேந்திர சோழனால் முறியடிக்கப்பட்டான். (அச்சோழன் வீரசோழன் என்றும் கோப்பரகேசரி வர்மன் என்றும் வழங்கப்பட்டான்.) நாம் அறிந்துள்ளது போல இது 1064 இல் நடந்தது. ஆனால், விக்கிரம பாண்டியன், வீரபாண்டியனுடைய ஆட்சிக்காலம் இதற்கும் முந்திய காலம். எனவே, அவர்கள், பாண்டி நாட்டைச் சோழர்கள் கைப்பற்றிய காலத்திற்கு முந்தியவர்கள். பாண்டிய அரசர் பலர் 'வீரன்' என்ற பெயரையுடையவராயிருந்தனர். ஆனால், அவர்களுள் ஒருவனே மிக்க புகழ் வாய்ந்தவனாய் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், பல சிற்றூர்கள் அப்பெயருடன் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. வீரபாண்டிய பட்டணம், வீரபாண்டியபுரம் என்பன எடுத்துக்காட்டுகள் (ஊர்ப் பெயர்கள் வரலாற்றுக்கு உதவுவது

காண்க - ந.ச.). மேலும், வீரபாண்டிய அளவுகோல் ஒன்று அக்காலத்தில் அரசாட்சியில் பயன்படுத்தப்பட்டு வந்தது என்பது அறியப்படுகின்றது.

### சோழர்களின் ஆதிக்கம்

சோழர்கள் பாண்டிநாடு முழுவதையும் கைப்பற்றியிருந்தார்கள் என்பதைப் பற்றி மதுரைப் புராணத்தில் எவ்விதக் குறிப்பும் இல்லை. மதுரை அரச வரிசையில் எந்தச் சோழ அரசனது பெயரும் இல்லை. புராணங்கள் எழுதப்பட்டதோ, அன்றிச் சோழர்களுடைய ஆதிக்கம் தொடங்குவதற்கு முன்பே அரச வரிசை முடிக்கப்பட்டதோ இதற்குக் காரணமாய் இருக்க இயலாது. ஏனெனில், அரச வரிசையிலுள்ள கடைசி அரசன் குப்சன் அல்லது சுந்தரன். இவன் கி.பி.1064 இல் தன் அரசாட்சியைப் பாண்டி நாட்டில் தொடங்கியது முதல் சோழ அரசனாகிய இராசேந்திர சோழன் காலத்திற்கு ஏறக்குறைய 200 ஆண்டுகட்குப் பின்னரே நெடுங்காலம் ஆட்சி செய்தான். இராசேந்திர சோழன் பாண்டிய பேரரசைப் போர் வெற்றியால் பெற்றானா, அல்லது வற்புறுத்தலின்றி ஒப்புதலினால் பெற்றானா என்பது ஐயப்பாடாயுள்ளது. ஆனால், அவன் வெற்றியால் அந்நாட்டைக் கைப்பற்றியிருத்தல் இயலாதென்று நான் நினைக்கிறேன். ஏனெனில், கன்னியாகுமரிக்கு அருகேயுள்ள ஒரு பழங்கோவிலிருந்து அவன் காலத்து இரு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. ஒன்று, அவன் ஆட்சிக்காலத்தில் நான்காவது ஆண்டைக் குறிக்கும் காலம்; மற்றொன்று, ஐந்தாவது ஆண்டைக் குறிப்பது. இவற்றில் துங்கபத்திரை நதிக்கரையிலுள்ள சாளுக்கிய மரபைச் சேர்ந்த சைன அரசனாகிய அவமல்லனை வென்றமை குறிக்கப்பட்டிருக்கிறது. இதே போலப் பாண்டி நாட்டையும் போரிட்டு வென்று கைப்பற்றியிருப்பின், அந்நிகழ்ச்சியும் இதில் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். சோழ நாட்டில் வாழ்பவனாகிய இராசேந்திர சோழன் பாண்டி நாட்டைத் தன் எல்லையுடன் இணைத்துக் கொண்டான் என்னுங் கூற்றிற்கு மதிப்பில்லை. ஏனெனில், சிற்றரசர்களைக் கூட அவர்களுடைய கவிஞர்களும் பாணர்களும் தங்கள் அரசன் மாற்றார் அனைவரையும் வெற்றி கண்டதாகப் புகழ்வது வழக்கம். வெற்றிகண்ட அல்லது சமரசமாய் இணைத்துக் கொண்ட பகுதிகளிலுள்ள கோவில்களில் கிடைக்கும் கல்வெட்டுகளில் இருக்கும் செய்தியோடு ஒப்பிடும்போது அவற்றின் மதிப்பு மிகவும் மாறுபடுகிறது. பழைய அரசனுடைய குடிமக்களாயிருந்தபோது அவனைப் பற்றி எழுதியவர்கள் இன்று வந்த புதிய அரசர்களைப் புகழ்வதில் ஈடுபடுவார்கள் (முக்காலத்துக்கும் - இக்காலத்துக்கும் - எக்காலத்துக்கும் உரிய உண்மை போலும்! - ந.ச.).



சோழர்கள் பாண்டிய நாட்டைப் பிடித்தார்கள் என்ற செய்தி மக்கள் மனத்திலிருந்து அறவே அகன்றுவிட்டது குறிப்பிடத்தக்கது. அதைப் பற்றிக் கேள்வியுள்ள ஒரு தமிழனைக்கூட நான் சந்திக்கவில்லை. (1. வாழுந் தமிழனை வைத்தும் ஆய்ந்திருக்கிறார் பாதிரியார்! 2. 'பொதுமக்கள் நினைவு குறுகியது' என்பது ஒரு ஆங்கிலப் பழமொழியின் கருத்து - ந.ச.). எனினும் இது ஐயத்தின் சிறு நிழலுக்கும் இடமில்லாத செய்தியாகும். அதற்கு ஆதாரமான கல்வெட்டுகள் நாட்டில் நிறைந்து கிடக்கின்றன. இராஜேந்திர சோழனும் கிழக்குப் பகுதிச் சாளுக்கியரின் வரியுரிமையாகக் கலிங்கநாடு அல்லது வடசர்க்காரை ஆண்டமையாகக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. திருநெல்வேலியின் ஒவ்வொரு பகுதியிலும், பாண்டி நாட்டின் ஒரு பகுதியாக அக்காலத்தில் கருதப்பட்டு வந்த தென் திருவாங்கூரிலுள்ள கோட்டாறு வரையிலுமுள்ள பகுதியிலும் இராசேந்திரனுடைய ஆட்சிக்கால கல்வெட்டுகள் கிடைக்கின்றன. (கல்வெட்டுகள் கிடைக்கும் வரலாற்றாய்வுக்குத் துணை). சாதாரணமாக அவன் இராசேந்திர சோழன் என்று வழங்கப்பட்டு வந்தான். ஆனால், ஒரு கல்வெட்டில் பிற்காலத்தில் இருந்த சாதாரண வழக்குகளை ஒட்டி இரு மரபுகளின் பெயர்களும் கலந்து இராசேந்திர சோழ பாண்டியன் என்று குறிக்கப்பட்டுள்ளது (அருமை. சிவராமகிருஷ்ணன் என்பது போல! - ந.ச.). அவன் நாற்பத்தொன்பது ஆண்டுகள் ஆட்சி செலுத்தியது தெரிகிறது. எனது திருநெல்வேலிக் கல்வெட்டுகளுள் ஒன்று, அவனது முப்பதாம் ஆண்டு ஆட்சிகாலத்தியது (வரலாற்று ஆய்வுக்குக் கல்வெட்டு எவ்வளவு இன்றியமையாததாய் இருக்கிறது - ந.ச.).

தமிழ்க் கவிஞராகிய கம்பர் புகழ்பெற்ற தமது இராமாயண காவியத்தை அவன் காலத்தில் அரங்கேற்றினாரெனச் சில கதைகள் கூறுகின்றன. இராசேந்திரனுக்குப் பின்வந்த குலோத்துங்க சோழன் காலத்தில் அரங்கேற்றியதாக மற்றும் சில கதைகள் கூறுகின்றன. ஆனால் இக்காவியம் இராசேந்திரன் காலத்தில் தொடங்கப்பட்டுக் குலோத்துங்கன் காலத்தில் முடிக்கப்பட்டிருக்கலாம். மேற்சொன்ன இரு கதைகளுள் எதை உண்மை என்று ஏற்றுக் கொண்டாலும், கி.பி.886 இல் பாடப்பட்டதாகக் கூறும் பாடல் நம்பத்தக்கது அன்று. ஏனெனில், அப்பாடல் குறிப்பிடும் காலம், 250 ஆண்டுகளுக்கு முற்பட்டதாய் உள்ளது. புத்தமித்திரர் என்ற புத்த இலக்கண ஆசிரியர் கம்பரைப் பற்றிக் கூறுகின்றார். டாக்டர் பர்ன்வெல் நம்புவதுபோலப் புத்தமித்திரர் எழுதிய இலக்கண நூல் உரிமையாக்கப்பட்ட வீரசோழனும் இராசேந்திர சோழனும் ஒருவனாய் இருந்தால், புத்தமித்திரரும் இராசேந்திர சோழன்

காலத்தில் வாழ்ந்தவரென்பது தோன்றுகிறது. தென் திருவிதாங்கூரில் கோட்டாற்றிலுள்ள சிவன் கோயில் கல்வெட்டில் இராசேந்திர சோழன் பெயர் சிவன் என்ற பெயருடன் ஒன்றியிருக்கிறது. மும்முடி தாங்கிய சோழனுடைய சிறந்த நகராகிய கோட்டாற்றில் தெய்விகத் தன்மை பொருந்திய 'ராசேந்திர சோழேசுவரனு'க்காக இந்தக் கோவில் குலோத்துங்க சோழனால் கட்டப்பட்டது. 'இராசேந்திர சோழேசுவரன்' என்ற சொற்றொடர் வாயிலாக இராசேந்திர சோழன் பெயர் சிவனுடன் இணைக்கப்பட்டமை தெரிகிறது. அல்லது, இராசேந்திர சோழனால் வணங்கப்பட்ட சிவன் என்றும் பொருள் படலாம் (இராமேசுவரம் என்பது போல - ந.ச.).

இந்தக் கோவிலிலும் தெற்கேயுள்ள மற்றக் கோவில்களிலும் இராசேந்திர சோழனுக்கு உரிமையாக்கப்பட்ட பல இனாம்களின் ஆதாரங்களை நான் பார்வையிட்டேன். அவற்றுள் ஒன்று, சுந்தரபாண்டியனுடையது. அதன் மூலம் சுந்தர பாண்டியன் இராசேந்திரனுக்கு முன் வாழ்ந்தவனல்லன் என்பதும், அவனுக்குப் பின் வாழ்ந்தவன் என்பதும் தெளிவாகின்றன. ஆகவே சுந்தரபாண்டியனது பெயர் மதுரை அரசு வரிசையிலிருப்பதால், இராசேந்திர சோழனது பெயரும் அவனுக்குப் பின்வந்த சோழ அரசர்களுடைய பெயர்களும் அந்த வரிசையில் இருந்திருக்க வேண்டும்.

**கம்பன் காலம்**

கி.பி.1112 இல் இராசேந்திரனுக்குப்பின் குலோத்துங்க சோழன் பட்டத்திற்கு வந்ததைச் சளுக்கியக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. டாக்டர் பர்ன்வெல், அவனது ஆட்சிக்காலம் 1128 இல் தொடங்கியது என்று கூறுகிறார். அவனது அரசாட்சியின் நாற்பத்து நான்காம் ஆண்டு தேதியிட்ட கல்வெட்டொன்று என்னிடம் உள்ளது. அதன் மூலம் அவன் நெடுங்காலம் அரசோச்சியிருக்க வேண்டும் என்பது தெரிகிறது. அவனுக்குப் பின் வந்த சோழர் அல்லது சோழ பாண்டிய அரசர்கள், கரிகாற்சோழன், வீரசோழன், விக்கிரம சோழன் என்பது புலனாகிறது. மேற்கண்டவருள் ஒவ்வோர் அரசரும் சில கல்வெட்டுகளில் 'சோழ பாண்டியர்' என வழங்கப்படுகின்றனர். அவர் அனைவரும் இராசேந்திர சோழனுக்குப் பின் வந்தவரே; பாண்டிய வமிசத்தின் கடைசி அரசனான சுந்தரபாண்டியனுக்கு முன் வாழ்ந்தவர்கள் என்பதைத் தவிர அவர்கள் காலத்தைப் பற்றி வேறு எவ்வித விவரமும் எனக்குக் கிட்டவில்லை.

சிறந்த விஷ்ணு பக்தராகிய இராமானுசரின் வாழ்க்கையில் சம்பந்தப்பட்டவனென்று சோழர்கள் கதையில் கரிகாற் சோழனது பெயர் முக்கியமான இடம் பெற்றிருக்கிறது. ஆனால், திருநெல்வேலிக் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டிருக்கும் கரிகாற்சோழன் இவன்தானா அல்லது இப்பெயரையே கொண்ட மற்றொருவனா என்பது துணிவாகத் தெரியவில்லை. தஞ்சாவூரை ஆண்ட கரிகாற்சோழன் சுமார் கி.பி.950 இல் இருந்தவன் என டாக்டர் பர்ன்வெல் குறிப்பிடுகிறார். திருநெல்வேலிக் கரிகாலனைப் போலவே குலோத்துங்க சோழனுக்குப் பின்வந்த எவர்க்கும் இது மிக முந்திய காலமாயுள்ளது. இராமானுசரைத் துன்புறுத்திய கரிகாற்சோழன் காலத்திற்கும் இது முந்தியதாய் இருக்கின்றது. கரிகாலனுடைய தொல்லைகளினின்றும் தப்பியோடிய இராமானுஜர் அவரால் ஜைன மதத்தினின்றும் வைணவமதத்திற்கு மாற்றப்பட்ட துவார சமுத்திர பல்லாள அரசனாகிய பிட்டிதேவனது அரசவையை அடைந்தார் என்பது கூறப்படுகிறது. இந்த அரசன் வைஷ்ணவனான பிறகு 'விஷ்ணுவர்த்தனன்' என்ற புதுப்பெயரை ஏற்றுக் கொண்டான். இச்சம்பவம் எப்பொழுதும் 12 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நடந்ததாகவே கூறப்படுகிறது. ரைஸ் என்பவர் அக்காலம் கி.பி.1117 என்று மைசூர் கல்வெட்டில் குறிக்கிறார். இது தென்னிந்திய வரலாற்றிலேயே மிக முக்கியமான நூற்றாண்டாகும். ஏனெனில், இதுதான் நம்பக்கூடிய சரியான தேதிகளைக் குறிக்கிறது. மேலும், இந்த ஆண்டிற்கு முன்னும்பின்னும் உள்ள காலத்தைக் கணக்கிட இயலும். உதாரணமாக தமிழ்க் காவியமாகிய இராமாயண காவியத்தின் ஆசிரியராகிய கம்பர் தாமியற்றிய சடகோபர் அந்தாதியில் இராமானுஜரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். கம்பரது காலம் கி.பி.1100 ஆக இருக்கலாம். ஏதோ ஓர் இராமாயண நினைவுப் பாடல் கூறுவது போலக் கி.பி.886 ஆய் இருக்கவியலாது என்பதை நாம் அறிவோம். (பார்க்க: கம்பன் காவியம் - எஸ். வையாபுரிப்பிள்ளை). 12 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சோழ நாட்டில் கரிகாற்சோழன் என்பவன் வாழ்ந்ததே தெரியவில்லை. சூழ்நிலையைப் பார்க்கும்போது இராசேந்திர சோழன், விக்கிரமசோழன், குலோத்துங்க சோழன் ஆகிய மூவரும் முந்தியவரே. ஆனால், அதே பெயரையுடைய சிறந்த சைவ இளவரசன் ஒருவன் உள்நாட்டிலேயே இராசேந்திரன் இறந்ததற்கும் குலோத்துங்கள் பட்டத்திற்கு வந்ததற்குமிடையே உள்ள காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும். ஆயினும் கரிகாலன் இராமானுசரைக் கொடுமைப் படுத்தியதாகக் கூறப்படுவது கர்ணபரம்பரைக் கதையே. ஆதலால், அது ஒரு முக்கியமான செய்தி அன்று. விஷ்ணுவர்த்தனுடைய சமயமாற்றக் காலத்திற்குத் தக்க கல்வெட்டுச் சான்றுகள் இருக்கின்றன.

இக்காலத்தில் சோழ பாண்டிய அரச வரிசையில் குலசேகர

தேவன் அரசனாய் இருந்தானெனக் கூறுகிறார்கள். இவன் மகம்மதிய வரலாற்று ஆசிரியர் கூறுவது போலச் சுந்தர பாண்டியனுக்கு முன் பட்டத்திற்கு வந்தவனும் அவர் கூற்றின்படி அவனுக்குத் தந்தையுமாகிய காளேசதேவன் என்பவனாய் இருக்கக் கூடும். நான் குலசேகரனுடைய பல கல்வெட்டுகளைத் திருநெல்வேலியிற் கண்டிருக்கிறேன். அவற்றுள் ஒன்று திருநெல்வேலி கோவிற்சுவர்களுள் இருக்கிறது. மதுரை மாவட்டத்திலுள்ள திருப்புவனத்திலிருந்து கிடைத்தனவென்று சர் வால்டர் எலியட்டு என்பவர் சேகரித்து வைத்திருக்கும் கல்வெட்டுகளுள் இரண்டு உள்ளன. ஆனால், அவற்றுள் எதிலும் அவர் சோழரென்றோ அல்லது பாண்டியரென்றோ குறிக்கப்படவில்லை. இதே பெயரையுடைய இருவர் இருந்தனரா அல்லது ஒருவர் தாமா என்பது உறுதியாகத் தெரியவில்லை. இப்பெயரையுடையவர் ஒருவர், கி.பி.1173 இல் சிங்களவர்களால் வெல்லப்பட்டார் என்றும், மற்றவர் கி.பி.1310 இல் அவர்களை வென்று புத்தபிரானின் பல நினைவுச் சின்னங்களைக் கைப்பற்றிக் கொண்டு வந்தார் என்றும் கூறப்படுகிறது. இச்செய்திக்குக் காரணம் சிங்களவர்களுடைய சாசனங்களில் ஏற்பட்ட காலக் குழப்பமே என்ற எண்ணமே தோன்றுகிறது. மேலும், இப்பெயரையுடைய ஒரு அரசன் இருந்திருக்க வேண்டும் என்று வால்டர் எலியட்டு என்பவர் சாளுக்கியர்கள் நாட்டில் கண்ட கல்வெட்டுகளிலிருந்து அந்த ஒருவனே பெரிய அரசனாயும் அகன்ற எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பை ஆட்சி செய்தவனாயும் இருக்க வேண்டுமென்பது தெரிகிறது. குலசேகரதேவன் சோழ பாண்டிய வரிசையில் இடம்பெற வேண்டுமெனின், வீர பாண்டியன் என்று வழங்கப்படும் அரசர் பலருள் ஒருவனுக்கு இதைவிட முந்திய காலத்தைக் குறிப்பது அவசியமாயிருக்கிறது. குலசேகரனுடைய கல்வெட்டு ஒன்றில் வீரபாண்டியனுடைய அளவு கோலால் நிலங்கள் அளக்கப்பட்டு உபயோகத்திலிருந்தன என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. இது வீரபாண்டியன் குலசேகரனுக்கு ஒரு தலைமுறை அல்லது இரு தலைமுறைகளுக்கு முந்தியவன் என்பதை உணர்த்துகின்றது. ஆனால், அவன் சோழ பாண்டியனா, அல்லது இராசேந்திர சோழனுக்கு முந்திய பழைய பாண்டிய வரிசையிலுள்ள கடைசி அரசனா என்பது இன்றுவரை உறுதியாகத் தெரியவில்லை.

**சோழபாண்டியர்கள்**

தஞ்சாவூரிலிருந்து சேகரித்த சோழபாண்டிய அரச பரம்பரையைப் பற்றிய செய்திகளை டாக்டர் பர்னல் அன்பு கூர்ந்து



எனக்குத் தெரிவித்துள்ளார். அவை திருநெல்வேலி மதுரை நகரங்களிலுள்ள சாதனங்களின்றும் முடிவு செய்யப்பட்ட பல செய்திகளுடன் பொருத்தமாயுள்ளன. பழைய பாண்டிய வமிசத்தினர், சோழர், சோழ பாண்டியர் மூவரும் பகை அரசவழியினர் என்றும், ஒவ்வொருவரும் வாய்ப்பு ஏற்பட்டபொழுது தம்மைச் சார்ந்தவர்களால் தாமே வல்லமை மிக்கவர் என்று குறிக்கப்பட்டார் என்றும் கூறப்படும் ஆதார பூர்வமான நம்பிக்கைச் செய்திகளால் அவர்களுள் முரண்பாடுகள் இருந்தன என்பது தெரிகிறது.

இந்தக் காலத்தில் புகழ்வாய்ந்தவனாய் இருந்தவன் இராசேந்திர சோழன். டாக்டர் பர்னல் கண்டுள்ள காலம், என்னுடையதோடு பொருந்தியிருப்பது கண்டு மிக மகிழ்கிறேன்! அவனுடைய கல்வெட்டுகளிலேயே அவன் பெயர் வீரசோழன், முதல் குலோத்துங்க சோழன், இராச ராசேந்திர சோழன், இராசேந்திர சோழன், நரேந்திர சோழன், இராசராச நரேந்திர சோழன் என்று பலவிதமாகக் குறிக்கப்பட்டுள்ளது. அவன் கோப்பரகேசரி வர்மன் என்றும் வழங்கப்பட்டான் என்பதும் கூறப்படுகிறது. 'கோ - அரசன்; 'பரகேசரி' என்பது அந்நியர்களுக்குச் சிங்கம் என்ற பட்டப்பெயராகவே இருக்க வேண்டுமே தவிர உண்மைப் பெயராய் இருத்தலியலாதென்று நான் எண்ணுகிறேன். இதே பெயர் பல அரசர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது என்றும் நான் அறிகிறேன். செவிவழிக்கதையிலுள்ள இராசேந்திர சோழனும் திருநெல்வேலிக் கல்வெட்டுகளில் காணப்படும் இராசேந்திர சோழனும் ஒருவனே என்று நான் கூறியதுபோல அவன் 1064 முதல் 1113 வரை நாற்பத்தொன்பது ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என்றும், மேற்கண்ட எல்லா விருதுகளும் ஒருவனைக் குறிப்பிடுவனவே என்றும், தஞ்சையிலும் மாமல்லபுரத்துக் கற்கோவில் ஏழனுள் வராகசாமி கோவிலிலும் கிடைத்த கல்வெட்டுகள் குறிப்பதாக டாக்டர் பர்னல் எண்ணுகிறார்.

இளவரச வீரன் அல்லது இராசேந்திர சோழனைப் பற்றிய மேலும் சில குறிப்புகளை அவர் பின்வருமாறு கூறுகின்றார்:

1079 இல் அவனுக்கு முடிசூட்டுவிழா நடந்தது. 11 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அழிந்து போனது என ஆல்பிரூனி (Al-Biruni) என்பவர் கூறும் தஞ்சாவூரை அவன் மீண்டும் பெற்றிருக்க வேண்டும். பழைய சாளுக்கியர்களின் வீரப்பிரதாபங்களும் புகழ்ச்சிகளும் இச்செய்தியை உறுதியாக்குகின்றன. உண்மையில் அவர்கள் அவற்றிற்கு உரியவர்களே. இவன் பிராமணர்களையும் சைவசமயத்தையும் ஆதரித்தான் என்பது தெரிகிறது. ஆனால்,

இலக்கண ஆசிரியராகிய புத்தமித்திரர் இராசேந்திரனது நினைவாகத் தமது நூலிற்கு 'வீர சோழியம்' என்று பெயரிட்டிருப்பதால் இவன் புத்த மதத்தினருக்குச் சலுகைகள் காட்டிவந்திருக்க வேண்டுமென்பதும் தெரிகிறது (எப்படியெல்லாம் டாக்டர் கால்டுவெல் ஆராய்கிறார் என்பதைப் பாருங்கள்! - ந.ச.).

அரசர் பட்டியலில் அடுத்த பெயர் சுந்தர பாண்டிய சோழன் என்பது. இவன் இராசேந்திர சோழனுக்குச் சகோதரன் என்றும் அவனால் மதுரை அரச பீடத்தில் அமர்த்தப்பட்டான் என்றும் கூறப்படுகிறான். அப்படியானால், இவன் அரசனாய் இருந்தான் என்பதைவிட அரசப் பிரதிநிதியாய் இருந்தான் என்பதே பொருத்தமாகும். சுந்தர பாண்டிய சோழனது ஆட்சிக்காலத்திலேற்பட்ட தேதி இல்லாத ஒரு கல்வெட்டைத் திருநெல்வேலியிற் கண்டேன். மிகப் பிற்காலத்தவனாய் இருக்க வேண்டுமென்று நான் எண்ணியபோதிலும் இக்கல்வெட்டிற்குரிய அரசன் சுந்தரபாண்டியனே எனக் கருதுகிறேன், சுந்தர சோழ பாண்டியனது உண்மைப் பெயர் கங்கைகொண்ட சோழன் அல்லது கங்கைகொண்டான் என்பது. திருநெல்வேலி இரயில் மார்க்கத்தில் ஒரு இரயில் நிலையத்தைக் கொண்ட கிராமத்தின் பெயராகக் கங்கை கொண்டான் என்ற பெயர் இன்றும் நின்று நிலவுகின்றது (ஊர்ப்பெயர் வரலாற்றுக்கு உதவுகிறது! - ந.ச.). கருவூரிலுள்ள கல்வெட்டிலிருந்து இவன் சுந்தரபாண்டியன் என்ற பெயரை வைத்துக் கொண்டான் என்பது தெரிகிறது.

இராசேந்திர சோழனுக்குப்பின் வந்த விக்கிரமசோழன் என்னும் அவன் பதினைந்து ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என்றும், அவனுக்குப்பின் குலோத்துங்க சோழன் என்று திருநெல்வேலிக் கல்வெட்டுகளிலெல்லாம் காணப்படும் இரண்டாம் குலோத்துங்க சோழன் பட்டத்திற்கு வந்தான் என்றும் டாக்டர் பர்னல் வரிசைப்படுத்துகிறார்.

1128ல் விக்கிரம சோழனுக்குப்பின், குலோத்துங்க சோழன் அரசுரிமை ஏற்றான் என்று அவர் கூறுவதால், இராசேந்திரன் சிறப்புக்கும் குலோத்துங்கன் முடிசூட்டிற்கும் இடையே பதினைந்தாண்டுகள் இடைக்காலம் இருந்தது என்பது தெரிகிறது. சாளுக்கியக் கல்வெட்டுகளின் படி நாம் பார்த்தது போல இராசேந்திரனுக்குப்பின் உடனே குலோத்துங்கன் பட்டத்திற்கு வந்தான்.

**சுந்தர பாண்டியன்**

மதுரையை ஆண்ட மற்ற எல்லா அரசர்களைக் காட்டிலும் சுந்தர பாண்டிய தேவனைப் பற்றிய செய்திகள் மிகுதியாக நமக்குக் கிட்டுகின்றன. மதுரைத் தலபுராணம், திருத்தொண்டர் புராணம் என்னும் இரண்டிலுமுள்ள கற்பனைக் கதைக் குறிப்புகள் மட்டுமின்றி, வரலாறு சம்பந்தப்பட்ட சிங்களவர்களுடைய குறிப்புகளிலும் மகம்திய வரலாற்று ஆசிரியர்களாகிய வாசப், ரசீதுதீன், அமீர் குஸ்ரு என்பவர்களின் இந்திய வரலாறுகளினின்றும் தக்க குறிப்புகள் நமக்குக் கிட்டுகின்றன. வெனீஷியப் பிரயாணியாகிய மார்க்கபோலோவின் நினைவுக் குறிப்புகளிலும் நமக்கு இது பற்றிய செய்திகள் கிட்டுகின்றன. எனினும், ஏராளமாகத் தோன்றும் இச்செய்திக் குவியல்களிலும் சிக்கறுக்க இயலாத பல குழப்பங்கள் உள்ளன. சுந்தரபாண்டியன் என்ற பெயரால் பாண்டிய அரசர் பலர் இருந்தனர் என்பது கருதப்படுகிறது. ஆயினும், இக்கருத்து உண்மைக்குப் பொருந்தியதன்று. வரலாற்றில் இத்துணைப் புகழ்வாய்ந்த இடம் பெறத்தக்கவனும் பல கல்வெட்டுகளினால் நாடாளும் வேந்தனாகக் குறிப்பிடத்தக்கவனும் ஒரே சுந்தரபாண்டியனாகவே இருந்திருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நமக்குக் கிடைத்துள்ள பல செய்திகளினின்றும் சுந்தரபாண்டியனைப் பற்றி உண்மையானவை யாகவும் ஒப்புக் கொள்ளக் கூடியனவாகவும் உள்ள குறிப்புகளை மட்டும் தேர்ந்தெடுக்க முயற்சி செய்வதே நம் கடமை.



1. முதலில் அவன் சைவனாய் இருந்து, பிறகு சைனனாய் மாறியமை புலனாகிறது. சோழ இளவரசியாகிய சுந்தரனுடைய மனைவியின் அழைப்பிற்கிணங்கச் சோழநாட்டைச் சேர்ந்த சிறந்த சைவ ஞானியாரகிய ஞானசம்பந்தர் மதுரைக்கு வந்து இயற்றிய பல அற்புதங்களின் மகிமையால் இறுதியாக அவன் சைவசமயத்திற்கே மாற்றப்பட்டான் என்பதும் தெரிகிறது. இச்சந்தர்ப்பத்தில் எண்ணாயிரம் சமணர்களை அவன் கழுவேற்றினான் என்பது கூறப்படுகிறது. இந்தச் சைவ சமய மாற்றத்திற்கு முன் அவன் கூனனாய் இருந்தான் எனவும், எனவே குப்ஜன் அல்லது கூனன் என்று வழங்கப்பட்டானெனவும், மதமாற்றத்திற்குப் பின் கூன் நிமிர்ந்துவிட்டதெனவும், அதனால் அவன் பெயர் அழகன் என்று பொருள்படும் சுந்தரன் என்று மாற்றப்பட்ட தெனவும் கதை வழங்குகிறது. ஆனால், கல்வெட்டுகளிலிருந்து அவன் ஆட்சி செலுத்த ஆரம்பித்த காலத்திலேயே சுந்தரன் என்று வழங்கப்பட்டான் என்பது தெரிகிறது. எனவே குப்ஜன் அல்லது கூனன் என்ற பெயர் 'கேலிப் பெய'ராகவே இருந்திருக்க வேண்டும்.

2. பழைய பாண்டிய அரசபரம்பரை அல்லது சோழ பாண்டிய அரசர்களில் கடைசி அரசனாய் அவன் இருந்தமை தெரிகிறது. அவன்

பெயர் அரச பட்டியல் ஒவ்வொன்றிலும் இறுதியில் இருக்கிறது. மற்றப் பெயர்கள் யாவும் - அல்லது பெரும்பான்மைப் பெயர்கள் யாவும் - வெறுங்கற்பனைப் பெயர்களாயிருப்பினும், இறுதியிலிருக்கும் அவன் பெயர் வரலாற்றுத் தொடர்புடையதாயிருக்கலாம் என்றே தோன்றுகிறது. ஐயத்திற்குரிய இச்செய்தியானது, சுந்தர பாண்டியன் இறந்த பிறகு மதுரை இராச்சியம் மகம்மதியர்கள் வசமாயிற்று என்ற செய்தியைக் கூறும் மகம்மதிய வரலாற்று ஆசிரியர்கள் வாக்கால் உறுதியான செய்தியாய் மாறுகிறது. இதுபற்றி எல்லா உள்நாட்டுக் கதைகளும் மகம்மதியர்களின் செய்திகளோடு பொருந்தியுள்ளன. சுந்தரனது வாழ்நாளிலேயே மகம்மதியர்கள் தங்கள் பலத்தைப் பெருக்கிக் கொண்டு வந்தார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. கடந்த சில ஆண்டுகளுக்குள் (1300-இல் எழுதப்பட்டது) 'சுந்தர் பந்தி' தேவனாய் இருந்தான். அவன் தன் சகோதரர் மூவருடன் வெவ்வேறு வழிகளில் வலிமையடைந்தான். அவனுடைய மந்திரியாயும் ஆலோசகனாவும் இருந்த ஷெயிக் ஜமாலு தீனுடைய சகோதரனான மாலிக் அல்துகி உதீன் (Malic-altakikuddin) வசமே பாதன், மேல் பாதன், காயல் முதலியவைகளின் ஆட்சியையும் ஒப்படைத்திருந்தான்' என்று ரஷிதுதீன் என்பவர் எழுதுகிறார். இக்குறிப்பில் மார்க்கபோலோவின் சுந்தர் பந்தி தேவனையும் அவனுடைய உடன்பிறந்தோர்களையும் காணலாம். '692 அல்லாகிஸ்டி ஆண்டில் (கி.பி.1293) தேவன் இறந்தான். அவனுடைய செல்வமும் உடைமைகளும் அவனுடைய எதிரிகள் வசமாயின. அவனுக்குப்பின் வந்த ஷெயிக் ஜமாலுதீன் எழுநூறு எருது வண்டி பாரமுள்ள நகை முதலியவற்றைப் பெற்றான் என்பது கூறப்படுகிறது. பெர்ஷிய வரலாற்று ஆசிரியராகிய வாகபுவும் சுருக்கமாக இதே விவரத்தைத் தருகிறார். இந்த வேற்றுமை பெருந்தவறுடையதன்று. இரு செய்திகளும் ஓரளவு உண்மையானவை யேயாகும். ஏனெனில், முன்னமே மந்திரியே உண்மையான ஆட்சியை நடத்திவந்தமையால் அவனுடைய உடன்பிறந்தான் பெயரளவில் அரசுரிமையை ஏற்றிருத்தல் கூடும். கூன் பாண்டியன் எனப்பட்ட சுந்தர பாண்டியன், மதுரையிலுள்ள ஒரு மசூதிக்கு அளித்திருந்த மானியத்தைக் கி.பி.1573-இல் வீரப்ப நாயகன் நிரந்தர மானியமாக மாற்றினான் என்று நெல்சனுடைய மதுரை மானுவலிலுள்ள ஒரு கல்வெட்டிலிருந்து நாம் அறிகிறோம்.

இதனால், சுந்தரபாண்டியனது அரசவையில் மகம்மதியர் களுக்குச் செல்வாக்கு இருந்ததென்பது தெரிகிறது. ஓர் அங்குல இடம் பெற்றாலும், அதை ஒரு கெஜமாகப் பெருக்குமளவிற்கு விரைந்து மகம்மதியர்களின் அதிகாரம் அந்தக் காலத்தில் பரவிவந்தது (நடை நன்று - ந.ச.).



### சுந்தர பாண்டியன் மகம்மதியர்களை ஆதரித்த காரணம்

தன் வாழ்நாளிலேயே இராச்சியத்தின் முக்கிய இடங்களை மகம்மதியர்களின் வசம் விட்டுவைக்கும் நிலைக்குச் சுந்தர பாண்டியன் முழுமையும் மகம்மதியர் வசப்பட்டதற்கான காரணம் மிகச் சுவையானது. வரலாற்றுத் தொடர்பான உண்மையாக ஒப்புக் கொள்ளக் கூடியதாயின் வாசபு குறிப்பிடும் காரணமே சிறந்த காரணமாய் இருக்கும். காலக் குறிப்பிலுள்ள வேற்றுமையே அதை ஒப்புக் கொள்வதற்கு இடையூறாய் இருக்கிறது. வாசபு தமது முக்கிய நிகழ்ச்சியைச் சரியாகக் குறிப்பிட்டபோதிலும், காலத்தைத் தவறு தலாகக் குறிப்பிடுகின்றார் என்று கொண்டால், இந்த இடையூற்றைத் தவிர்த்துவிடலாம். அவருடைய செய்திகள் நுட்பமானவையாகவும் உண்மையின் சாயலை உடையனவாகவுமிருக்கின்றன. அவற்றின்படி, காளதேவரெனும் குலசேகரதேவருக்கு மைந்தர் இருவர் இருந்தனர். ஒருவன் பட்டத்திற்கு உரியவனாகிய சுந்தரன்; மற்றவன் பட்டத்திற்கு உரிமையற்ற வீரபாண்டியன். வீரபாண்டியன் தந்திரத்திலும் நெஞ்சுறுதியிலும் சிறந்தவனாய் இருந்தமையால், அவனுடைய தந்தை அவனையே தனக்குப்பின் வாரிசாக நியமித்தான். இது சுந்தரனுக்குக் கோபமூட்டியது. அதனால், அவன் தன் தந்தையைக் கொன்றுவிட்டுத் தானே பட்டத்திற்கு வந்தான். இதற்குப்பின் வீரன் படைதிரட்டிச் சுந்தரனுடன் போர் புரிந்தான். முதலில் வீரன் தோற்று எதிரிகள் வசம் சிக்கினான். ஆனால், குலசேகரன் மகள் வயிற்று மகனான பெருமாளின் துணை கொண்டு சுந்தரனை எதிர்த்தான். இதற்கு அஞ்சிய சுந்தரன் டில்லிக்கு ஓடி அங்கே அல்லாவுதீன் பாதுகாப்பில் இருந்துவந்தான். அதற்குப்பின் வீரபாண்டியன் நிரந்தரமாக நாட்டை ஆட்சிபுரிந்தான் என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகிறார்கள். சிங்களவருடைய குறிப்பு களும் இந்தச் செய்திகளில் சிலவற்றைக் கூறுகின்றன. இரண்டு குறிப்பு களும் வீரன் பட்டத்திற்கு வந்தவரையிற் பொருத்தமாயிருக்கின்றன. உண்மையான பாண்டிய அரசர்களுடைய பட்டியலின் கடைசியில் சுந்தரபாண்டியன் பெயர் இருப்பதாலும், அவனுக்குப்பின் மகம்மதியர் ஆட்சிபுரிந்தனர் என்று இருப்பதாலும் சுந்தரபாண்டியன் டில்லி யிலிருந்து முகம்மதியப் படைகளைத் தன்னோடு கூட்டிக் கொண்டு வந்து மீண்டும் தன் அரியணையைக் கைப்பற்றி இருக்கலாம். அரியணையை மீண்டும்பெற அழைத்துவந்த மகம்மதியப் படைகளே அவனுடைய அதிகாரம் முழுமையையும் கைப்பற்றப் போது மானவையாய் இருந்திருக்க வேண்டும் என்று நான் முடிவு செய்கிறேன். எனினும், சுந்தரன் இறந்த பிறகு பட்டத்திற்கு வந்த அவன் தம்பியின் பங்கில் ஏராளமான சொத்துகள் சேர்ந்தன என்றும் மாலிக்-ஐ-

ஆஜாம்-தகி உதீன் முன்போலவே முதல் அமைச்சனாய் - உண்மையில் நாட்டை அரசு செலுத்துபவனாய் - இருந்தான் என்றும் அவன் பதவியில் அவன் மகன் சுராஜுதீனும், பேரனான நிஜாம் உதீனும் வாரிசாய் வந்தனர் என்றும் வாசபு கூறுவதால், வீரபாண்டியன், சுந்தரபாண்டியனுக்குப் பின்னும் வாழ்ந்து அரசு செலுத்தியிருக்க வேண்டுமென்பது தெரிகிறது.

அல்லாவுதீன் படையெடுத்து வந்தபோது வீரபாண்டியன் சுந்தரபாண்டியன் இருவரும் மலபாரின் அரசராய் இருந்தனர் என்று மற்றொரு மகம்மதிய வரலாற்றாசிரியராகிய அமிர் குஸ்ரு என்பவர் கூறுகிறார். படையெடுப்புப் பற்றி அவர் தரும் குறிப்புகள் வருமாறு: 'மாலிக் நாய்பு அல்லது மாலிக்காபூர் தலைமையில் வந்த அல்லாவுதீன் படையானது, 1310 ஆம் ஆண்டு நவம்பரில் டில்லியை விட்டுப் புறப்பட்டது. அப்படை பல்லவ அரசனுடைய தலைநகராகிய துவார சமுத்திரத்தை நொறுக்கியது. மேலுள்ள நாடுகளைப் பற்றிய செய்திகளை விசாரிப்பதற்காக அவன் பண்ணரி என்ற இடத்தை அடைந்து அங்குத் தங்கினான் என்றும் சொல்லப்படுகிறது. அப்பொழுது மலபாரை ஆண்டுவந்த மூத்தவனான வீரபாண்டியனுக்கும் அதுவரை ஒற்றுமையாகவே அரசாட்சி புரிந்து வந்த இளையவனான சுந்தரபாண்டியனுக்கும் பகை ஏற்பட்டு ஒருவர் மீது ஒருவர் படையெடுத்ததை அறிந்த துவார சமுத்திரராய் இருந்த பல்லாலதேவன் அவர்களுடைய காலியான இரு நகரங்களின் மேல் படையெடுத்துச் சென்று அங்குள்ள வியாபாரிகளைச் சூறையாடினான் என்பதும், ஆனால் மகம்மதியப்படைகளின் முன்னேற்றத்தைக் கேள்வியுற்றுத் தன் சொந்தநாடு திரும்பினான் என்பதும் அறிவிக்கப்பட்டன. துவார சமுத்திரத்தைக் கைப்பற்றியபின் மாலிக் நாயுபின் படை இருவருள் மூத்தவனாகிய மஞ்சள்முகத்துப் பீர்ராயின் தலைநகரை நோக்கிச் சென்றது. அந்நகரத்தைக் கைப்பற்றி எல்லாவற்றையும் அவன் அழித்தான்; பின்பு பிர்துவிலிருந்து கான் வரை முன்னேறினான்; பின்பு இளையவனாகிய சுந்தரபாண்டியன் வசித்து வந்த மதுரையை நோக்கி விரைந்தான். ஆனால், இரண்டு மூன்று யானைகளை மட்டும் விட்டுவிட்டு இராணிகளுடன் ராய் ஓடிவிட்டதால், வெற்றுநகரத்தையே அவன் கண்டான். யானைகளைக் கைப்பற்றிக் கொண்டு அவைகளிருந்த கோவிலுக்கும் தீ வைத்தனர். இதன் பிறகு மாலிக்காபூர் டில்லிக்குத் திரும்பினான்.

**எலியட்ஸின் 'மகம்மதிய சரித்திரக்காரர்கள்'**

மாலிக்காபூரின் படையைக் கண்டதும் மலபார் அரசன் காடுகளில் மறைந்து கொண்டான் என்று வாசபு கூறுகிறார். மாலிக்காபூர்



இராமேஸ்வரம் வரை முன்னேறி எல்லா நாடுகளையும் கைப்பற்றி அங்கே ஒரு மசூதியையும் கட்டினான் என்று பெரிஸ்டா என்பவர் கூறுகிறார். இராமேஸ்வரம் அல்லது பாம்பனிலுள்ள மகம்மதியர்களுக்கிடையே மாலிக்காபூர் ஒரு மசூதியைக் கட்டிய கதை நிலவவில்லை.

மகம்மதிய சரித்திராசிரியர்களின் செய்திப்படி இருபது ஆண்டுக் காலத்தில் மலபாரில் சுந்தரபாண்டியன் என்ற பெயரையுடைய அரசர் இருவர் இருந்தனர் என்பது தெரிகிறது. இது காரணமாக முக்கியமாக மார்க்கபோலோவின் சுந்தர் பந்தியும் கல்வெட்டுகளிலுள்ள சுந்தரபாண்டியனும் ஒருவனே என்று ஒப்புக் கொள்ளக் கர்னல் யூல் மறுக்கிறார் எனது திராவிட ஒப்பு இலக்கண நூலின் இரண்டாவது பதிப்பில் மீண்டும் இச்செய்தியைப்பற்றி நன்கு ஆராய்ந்து (பிற்சேர்க்கை பார்க்க) எனக்கு முன் கொண்டுவரப்பட்ட மறுப்புகளுள் சிலவற்றிற்குத் தக்க பதில் கூறியுள்ளேன்; 13 ஆம் நூற்றாண்டின் இறுதியில் மதுரையைச் சுந்தர பாண்டியன் ஆண்டுவந்தான் என்றும் மலபாரின் பாண்டிய சோழ நாட்டின் முதன்மையான தலைவன் என்ற பொருளில் தேவர் என்று வழங்கப்பட்டான் என்றும் இரண்டு மகம்மதிய சரித்திராசிரியர்களும் தெளிவாகக் கூறுகின்றார்கள். வெவ்வேறு வழிகளில் தங்களைப் பலப்படுத்திக் கொண்டு ஆட்சிக்கு வந்த நான்கு (அல்லது ஐந்து) உடன் பிறந்தார்களுள் இவன் மட்டும் தேவர் என்று வழங்கப்பட்டான். மேலும், இவன் ஏராளமான செல்வத்தைப் பெற்றிருந்தான் என்பது கூறப்படுகிறது. மார்க்கபோலோவும் அவனுடைய உடன்பிறந்தார்களைப் பற்றிக் கூறும்போது மட்டும் முடிசூடிய அரசன் என்று குறிப்பிடுகிறார். அவனை வேறு படுத்திக் காட்டுவதற்காகவே பந்தி என்ற விருதை அவர் அளித்திருக்கிறார். இதிலிருந்து சில காரணங்களால் அவன் மிகச் சிறந்தவனெனக் கருதப்பட்டான் என்பது தெரிகிறது. சுந்தரனுடைய கல்வெட்டுகளில் அவன் சகோதரர்கள் பகிர்ந்து கொண்டிருந்தார்கள் என்பதைப் பற்றியோ, அல்லது அவனும் அவனுடைய உடன்பிறந்தார்களும் வகித்துவந்த பதவி அவர்கள் பரம்பரை உரிமை வழிப் பெறப்பட்டு வலுவில் அடையப்பெற்றது என்பது பற்றியோ ஒருவிதச் செய்தியும் இல்லை. ஆனால், இச்செய்திகள் அவர்கள் கல்வெட்டுகளில் இடம் பெற்றிருக்க வேண்டியன அல்ல. அவனுக்கு உடன் பிறந்தார்கள் இருந்தார்கள். அவர்கள் அவனுடன் சேர்ந்து அதிகாரத்தைக் கைப்பற்றினார்கள் என்ற எண்ணத்திற்கு ஒவ்வாத செய்திகள் கல்வெட்டுகளிலும் மரபுவழிக் கதைகளிலும் இல்லை. இவற்றை எல்லாம் சேர்த்துப் பொருத்தமாகச் செய்ய ஒரு வகையில் சுந்தர பாண்டியன் மட்டும் பாண்டிதேவராகவோ

அல்லது முதன்மையான தலைவனாகவோ இருந்திருக்க வேண்டும் என்று கொள்வதே தேவை. அவனுடைய பெயரே கல்வெட்டுகளில் இருக்கின்றன. இதில் எனக்குத் தோன்றுவது போலவே எவ்விதக் குறிப்பிட்ட இடையூறும் இருக்கவியலாது. சுந்தரபாண்டியனைப் பற்றிக் கூறும் தேதியிட்ட கல்வெட்டு ஒன்றை கண்டுபிடிக்கும்வரை மகம்மதிய சரித்திராசிரியர் கூறும் சுந்தரும் மார்க்கபோலோவின் செந்தரும் சைவசமயத்திற்கு மீண்டும் மாறிய சுந்தரன் அல்லது கூன் பாண்டியனும் ஒருவராகவே இருக்கக் கூடும் என்பதை ஏற்றுக் கொள்ளாததற்குத் தகுந்த மதிப்புள்ள காரணம் ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. திரு. மூர், தமது திருச்சிராப்பள்ளி மானுவலில் இவ்விவாதத்தைப் பற்றிய சுருக்கத்திற் கூறுவதாவது:

சுந்தர பாண்டியனைப் பற்றிக் கூறும் பல கல்வெட்டுகளின் பிரதிகளைத் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலிருந்து நான் பெற்றேன். அவை அவன் நாட்டின் இந்தப் பகுதியையும் மதுரையையும் ஆண்டனன் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. ஆனால், அவற்றில் தேதி இல்லாததால் அவன் எக்காலத்தவன் என்ற சிக்கலான கேள்விக்குத் தக்க பதில் தரவில்லை.

**மலபார்**

மபார் என்பதற்கு வழி என்பது சாதாரணப் பொருள். சிலோனுக்கு அருகேயுள்ள சோழமண்டலக் கடற்கரைப் பகுதிக்குப் பழங்காலத்து அராபிய வியாபாரிகள் வைத்த பெயரே அது, ஐரோப்பியாவினின்றும் இலங்கைக்குச் செல்வதற்குரிய எளிய வழியாகவும் அது இருந்தது. ‘கொல்ல’த்திலிருந்து நெல்லூர் வரை பாண்டிய சோழ நாடுகளையும் அவற்றிற்குட்பட்ட கடற்கரைப் பிரதேசம் முழுவதையும் அது குறித்தது. 1286இல் குயாலிகான் அரசனுக்குக் கப்பம் கட்டும் தூரநாடுகளில் ஒன்றாக மபார் (மாபரா) இருந்தது என்று சீனர்களின் சரித்திரக் குறிப்புகள் கூறுகின்றன. 1280 ஆம் ஆண்டிலும் அதைத் தொடர்ந்த ஆண்டுகளிலும் மலபாருடன் சீன அரசியல் உறவு கொண்ட வியப்பும் சுவையும் மிக்க செய்திகளைப் பாந்தியர் என்பவர் தருகின்றார். மற்றக் குறிப்புகளுடன் சீன நூல்கள் ஐந்து சுல்தானிய சகோதரர்களைப் பற்றியும் சமலேட்டிங் ஜமால் உத்தீன் என்ற தூதுவரை மலபாரிலிருந்து மங்கோலிய அரசவைக்கு அனுப்பியதைப் பற்றியும் குறிக்கின்றன (கர்னல் யூலின் மார்க்கபோலோ, 2-273).

ஒன்பதாம் நூற்றாண்டில் மகம்மதிய அராபியர்கள் மலபார் கரையில் முதன் முதலில் குடியேறியது தெரிகிறது. பிறகு அவர்கள்



கிழக்குக் கடற்கரையிலும் இலங்கையிலும் பரவியிருக்க வேண்டும். திருநெல்வேலியிலுள்ள காயல் பட்டினமே கிழக்குக்கடற்கரையிலுள்ள அவர்களின் முக்கியக் குடியேற்றமாகும். ஹநிதன் அராபியர்கள் என்னும் தென்னராவியாவிலுள்ள சபாயியர்கள் கிரேக்கர்களின் வருகையைப் பின்பற்றி முன்பே இந்தியக் கடற்கரைக்கு அடிக்கடி வந்துள்ளார்கள். அந்த அராபி வியாபாரிகளின் வழிவந்த கலப்பினத்தவர்கள் மேற்குக் கடற்கரையில் மாப்பிள்ளைகள் என்றும் கிழக்குக் கடற்கரையில் லப்பைகள் என்றும் வழங்கப்பட்டார்கள். சாதாரணமாகத் தமிழ்மக்கள் அவர்களைத் துலுக்கர் (துருக்கியர்) அல்லது ஜோனகர் (யவனர்) என்று வழங்கி வந்தார்கள். மாரிக்கன் அல்லது மாராகன் என்பது அவர்களுடைய சாதாரண பட்டப்பெயர். இச்சொல் கப்பலோட்டி எனப் பொருள்படும். இது அவர்கள் முதலில் மாலுமிகளாய் இருந்தார்கள் என்பதைக் குறிக்கின்றது. இது உண்மையே. அவர்களுக்கு ஹிந்துஸ்தானி மொழி தெரியாது. ஆனால், அவர்கள் வாழ்ந்து வந்த நாட்டின் தாய்மொழியாகிய தமிழ் அல்லது மலையாள மொழியையே பேசி வந்தார்கள். ஹிந்துஸ்தானி பேசுகிறவர்களாகிய முகம்மதியர்கள் - பட்டானியர்களும் மற்றவர்களும் - வடவிந்தியாவிலிருந்து வந்து முழுதும் வேறுபட்ட தனி இனத்தினராய் வாழ்ந்தார்கள்.

**காயல்**

மத்திய காலத்தில் திருநெல்வேலி சரித்திரத்தில் ஏற்பட்ட மிக்க சுவையான நிகழ்ச்சி கி.பி.1292ல் மார்க்கபோலோ காயலுக்கு வருகை புரிந்ததாகும்.

மார்க்கபோலோ என்ற நூலில் (2வது வால்யூம், 307ல்) கர்னல் யூல் கூறியிருப்பதைத் தெரிவிக்கின்றேன்:

“இப்போது மறந்துவிடப்பட்ட காயல், சென்னை மாகாணத்திலுள்ள கடற்கரைப் பகுதியாகிய திருநெல்வேலி மாவட்டத்தில் சிறந்த துறைமுகமாய் விளங்கியது. நம் நூல் ஆசிரியர் காலத்தவராகிய ரஷித் உத்தீன் அது மலபாரின் துறைமுகமாய் இருந்தது என்று குறிப்பிடுகின்றார். ஆனால், அந்தப் பெயர் பவால், கபால் (பார்க்க. ! எல்லியட் 1 பக். 69-72) என்று பிரதிகள் எடுக்கும்போது ஏற்பட்ட கவனக்குறைவால் தவறுதலாக எழுதப்பட்டது. கவாட்ரிமியஸ் அப்தூர் ரஸாக்கின் வெளியீட்டிலும் காபில் என்று தவறுதலாகப் பிரதி செய்யப்பட்டுள்ளது. ‘செரந்திப்’ அல்லது ‘சிலோன்’ என்று வழங்கப்படும் தீவிற்கு எதிரில் ஒரு ஓரத்தில் அமைந்துள்ள இடம் என்றும் அதையே தாம் மலபாரெனக் கருதுவதாகவும் அவர்

குறிப்பிடுகின்றார் (பக்.19). முத்துக்குளித்தல் நடைபெறுமிடமாகிய ககிலா என்று நிக்கோலா கான்டி அதைக் குறிப்பிடுகிறார் (பக்.7). வாஸ்கோடகாமா தமது முதற்கப்பல் பயணத்தின் போது அந்த இடம் காயல் என்றிருந்ததென்றும் அது முசல்மான் அரசனது சமஸ்தானமாய் இருந்ததென்றும் கிறிஸ்தவர்கள் அங்கிருந்தார்கள் என்றும் தாம் அறிந்ததாகக் கூறுகிறார். இங்கே முத்துகள் மிகுதியாய்க் கிடைத்தன. கியோவன்னி எம்போலிகாயப்டோவர்திமா பர்போஸாவைப் போலவே முத்துக் குளித்தல் நடைபெறுமிடம் என்பதைக் கண்டதாகக் கூறுகிறார். இக்குறிப்புகளால் அது அந்நாளிலும் செல்வந்தர்களான மகம்மதிய வியாபாரிகள் நிறைந்த சிறந்த துறைமுகப் பட்டினமாய் இருந்தது என்றும், மலபார் சோழமண்டலம் வங்காளம் முதலிய இடங்களினின்றும் பல கப்பல்கள் அங்கு அடிக்கடி வந்தன என்றும் அறிகிறோம். கடைசியாக நாம் சான்று காட்டிய ஆசிரியர்கள் காலத்தில் அது கௌலாமி (குயிலான்) அரசன் வசமிருந்தது. அவன் பெரும்பாலும் காயலில் தங்கியிருந்தான்.

''ஒரு காலத்தில் மிக்க புகழ்வாய்ந்த இந்தத் துறைமுகத்தின் உண்மையான இடத்தை இன்றுவரை வெளியான எந்தப் புத்தகமும் அடையாளம் கண்டு குறிப்பிட்டதாகத் தெரியவில்லை என்று நான் நினைக்கிறேன். எனக்கு முந்தியவர்களைப் போலவே நானும் இன்றும் இருந்துவரும் காயல்பட்டினமே அந்த இடமாய் இருந்ததாக எண்ணினேன். இது பற்றி உறுதியும் சுவையும் நிறைந்த செய்திகளை எனக்குக் கூறிய டாக்டர் கால்டுவெல்லின் அன்பிற்கு யான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்''. அவர் மேலும் எழுதுவதாவது:

மார்க்கபோலோவின் காயல் 'பழைய காயல்' என்று அங்குள்ளோரால் பொதுவாக வழங்கப்படும். தவறுதலாகக் 'கோயில்' என்று இந்திய இராணுவப் படத்தில் குறிக்கப்பட்டிருக்கும் காயல், தாமிரபரணி ஆற்றின் கரையில் அது கடலொடு கலக்குமிடத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் அமைந்திருக்கிறது. காயல் என்ற தமிழ்ச் சொல்லிற்குக் 'கடற்கழி', 'கடலில் சேரும் ஆழமில்லாத நீர்நிலை' என்பது பொருள். ஆற்றின் கூடு (சங்கமத்) துறையருகேயே இதைப் போன்ற பல காயல்கள் அல்லது கடற்கழிகள் இருப்பதைப் படங்களிற் காணலாம். இவற்றுள் பல காயல்கள் ஏறக்குறைய முழுதும் வரண்டுவிட்டன. அவற்றுள்ளும் பல காயல்களில் உப்பளங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. காயலின் எல்லையில் கட்டப்பட்ட ஒரு நகரத்திற்கு இயற்கையாகக் 'காயல்' என்ற வழக்குப் பெயர் வழங்கப்பட்டிருக்க வேண்டும். இதே காரணத்தால் இதை அடுத்துள்ள



இடத்திற்கும் 'புன்னைக்காயல்' என்ற பெயர் வழங்கப்பட்டிருக்க வேண்டும். காயல்களுக்கருகேயுள்ள இரண்டு இடங்களின் பெயர்களாகிய காயல்பட்டினம், சோனகாபட்டினம் என்பன இதற்கு நம்பிக்கையூட்ட உதவுகின்றது.'

**காயல் நகரம்**

1861 இல் கொற்கைக்குச் சென்ற நான் கிரேக்கர்களுடைய கொல்கையே கொற்கை என்பதை அறிந்தேன். இந்த ஒற்றுமையால் என் ஊக்கம் அதிகரித்தது. அதே சமயத்தில் கொற்கைக்கும் கடலுக்கும் இடையே பாதித் தூரத்தில் 'பழைய காயல்' என்று வழங்கப்படும் முக்கியமல்லாத ஓர் இடம் மார்க்கபோலோ கூறும் 'காயல்' ஆகும் என்ற முடிவிற்கு வந்தேன்.

மத்திய காலத்தில் இந்தியாவின் கிழக்குக் கடற்கரை ஓரத்தில் மிகவும் புகழ்வாய்ந்த நகரமாயும் துறைமுகமாயுமிருந்தது இதுவே. இதற்குப் பிறகு ஏறக்குறைய பத்து ஆண்டுகட்குப் பின்னரே கர்னல் யூல் மார்க்கபோலோ புத்தகத்தைத் தயாரித்துக் கொண்டிருந்த பொழுது வெளியிட்டேன். கொற்கை, காயல் என்னும் இரண்டு இடங்களும் தாமிரபரணி ஆற்றுக் கழிமுகப் பூமியில் அமைந்திருக்கின்றன. கொற்கை கடலிலிருந்து ஐந்து மைல் தூரத்திலும் காயல் இரண்டு மைல் தூரத்திலும் உள்ளன. ஆனால், இவை முதலில் கடற்கரையிலேயே இருந்தன. அதே சுற்றுவட்டாரத்தில் அத்தகைய புகழ்பெற்ற இரண்டு இடங்களைக் கண்டுபிடித்தது குறிப்பிடத்தக்கதெனத் தோன்றுகிறது. ஆனால், அதே சமயத்தில் அருகிலுள்ள இடங்களின் நிலவியலை ஆராயின், ஏன் அவை அவ்வாறு புறக்கணிக்கப்பட்டன என்பது விளங்குகிறது. ஆற்றின் கூடு (சங்கமத்) துறையினருகே கடலில் வண்டல்மண் சேர்ந்துவிட்டதால், அல்லது கடற்கரை உயர்ந்தமையால், அல்லது இரண்டு காரணங்களாலும் நாளடைவில் கொற்கை உள்நாட்டுள் ஒதுக்கப்பட்டதால் கடல் வாணிகத்திற்கான வசதிகள் இல்லாதுபோயின. இதற்கு மாறாகக் கடலில் சேரும் ஆழமில்லாத் நீர்நிலை என்ற பொருள்படும் காயல் என்ற பட்டினம், கடற்கரை மட்டத்திற்கு உயர்ந்து மேலும் பெரிய அளவில் வளர்ச்சியடைந்தது. இப்போதோ காயல் ஒரு சிறிய கிராமமாய்க் குறுகிவிட்டது. அதில் மகம்மதியர்கள் பாதிப் பகுதியிலும் ரோமன் கத்தோலிக்கச் செம்படவர்கள் பாதிப் பகுதியிலும் வசித்து வருகின்றார்கள். அதனருகே அதைவிடச் சிறிய ஒரு கிராமத்தில் பிராமணர்களும் வேளாளர்களும் வசித்து வருகின்றார்கள்.

பின்வருவது மார்க்கபோலோ கண்ட காயல் - கர்னல் யூல், 305 -

'காயல் நகரத்தைப் பற்றியது' என்ற தலைப்பில் எழுதியுள்ளது:

காயல் பெரியதும் சிறந்ததுமானதொரு நகரம். அது ஐந்து உடன் பிறந்த அரசர்களுள் ஒருவனாகிய அஷர் (ஈஸ்வரன்) என்பவனுக்குச் சொந்தமாயிருந்தது. மேற்கே ஹார்மஸ், கிஸ் (பெரிஷியன் குடாவிலுள்ள ஒரு தீவு), ஆடன், அராபியா முழுவதிலுமிருந்து குதிரைகளையும் மற்றச் சாமான்களையும் விற்பதற்காக வரும் எல்லாக் கப்பல்களும் இந்த நகரத்திற்குத்தான் வரும். ஆகையால், இது அருகிலுள்ள நாடுகளிலிருந்து திரளான மக்கள் வந்து சந்திக்குமிடமாய் மாறியது. எனவே, காயல் நகரத்தில் வியாபாரம் மிகுதியாய் நடந்தது. அரசன் ஏராளமான செல்வம் உடையவனாயிருந்தான். விலைமதிக்கவியலாத எண்ணற்ற அணிகளால் அவன் தன்னை அணிசெய்து கொண்டிருந்தான். அவன் பெரிய சமஸ்தானங்களை உடையவனாயும் தன் ராஜ்யத்தை நேர்மை நியதியுடன் நடத்துபவனாயுமிருந்தான்; அயல் நாட்டவருக்கும் வியாபாரிகளுக்கும் அதிக சலுகைகள் காட்டினான். அதனால் அவனுடைய நாட்டிற்கு வருகை செய்வதில் அவர்கள் மிக்க மகிழ்ச்சியடைந்தார்கள். அக்காலத்தில் பல மனைவிகளையுடையவனை மக்கள் அதிகமாகப் போற்றினமையால், அந்த அரசனுக்குச் சுமார் முந்நூற்று மனைவியர் இருந்தனர்.

'காயல் மலபாரின் முக்கியத் துறைமுகப்பட்டினமாய் விளங்கியமையால், மலபார் அதன் வியாபாரம் முதலியவைகளைப் பற்றி மார்க்கபோலோ தரும் செய்திகள் காயலுக்கும் உண்மையில் பொருந்துவனவாயுள்ளன. காயலை ஆண்டவன் சுதந்தர அரசனல்லன். அவன் அக்காலத்தில் மலபார் நாட்டையும் பாண்டிய சோழ நாடுகள் முழுவதையும் ஆண்டு வந்தவனும், மார்க்கபோலோவால் 'சுந்தரர் பண்டி தேவர்' என்று வழங்கப்படுபவனுமாகிய சுந்தரபாண்டியதேவன் தம்பி. அவனே காயலின் பிரதிநிதியாயும் இருந்தான். காயலுக்குச் சற்றுப் புறத்தே அமைந்துள்ள மாறமங்கலம் என்ற இடத்தில், சுந்தரபாண்டியனைப் பற்றிய கல்வெட்டுகளை நான் பார்த்தேன்' என்று போலோ தொடர்ந்து கூறுகின்றார்.

'இங்கே குதிரைகளை வளர்ப்பதில்லை. எனவே, நாட்டின் பெரும்பகுதியான செல்வம் குதிரைகளை வாங்குவதில் வீணாகிவந்தது. கிஸ், ஹார்மஸ், தோபர் (ஈமான் கடற்கரையிலுள்ள தாபர்), சோயர் (ஓமனிலுள்ள சுகர்), ஏடன் முதலிய இடங்களிலுள்ள வியாபாரிகள் ஏராளமான குதிரைகளை இந்த அரசனும் இவனுடைய நான்கு உடன் பிறப்பாளர்களுமுள்ள நாட்டின் எல்லைகளுக்குக்



கொண்டு வந்தார்கள் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில், ஒவ்வொரு குதிரையும் ஐந்நூறு தங்கச் சக்கிகள் நூறு வெள்ளிக்காசுகளின் மதிப்பிற்குமேல் (அதாவது ரூ.2200) (கால்டுவெல் காலத்தில்! - ந.ச.). விலையானதாலும் ஒவ்வோர் ஆண்டும் அதிக எண்ணிக்கையுள்ள குதிரைகள் விற்கப்பட்டதாலும் அவ்வாறு கொண்டுவந்தார்கள். இந்த அரசனும் ஒவ்வோராண்டும் இரண்டாயிரம் குதிரைகளுக்கும் அதிகமாக வாங்கினான். இவனைப் போலவே அரசர்களாய் இருந்த இவனுடைய நான்கு உடன்பிறப்பாளர்களும் வாங்கினார்கள். ஒவ்வோர் ஆண்டிலும் அத்தனை குதிரைகள் தேவையாயிருந்தன. சரியாகக் கவனிக்கப்படாமையாலும் குதிரையை எப்படி வைத்துக் கொள்ள வேண்டுமென்பதை மக்கள் அறியாததாலும் குதிரைலாடக்காரர்கள் இல்லாமையாலும் குதிரைகள் மிகுதியாய் இறந்தன. குதிரை வியாபாரிகள் குதிரை லாடக்காரர்களை ஒருபோதும் தங்களுடன் அழைத்து வருவதில்லை. அப்படி இங்கு வருகின்றவர்களையும், தங்களுடைய அதிகப் படியான குதிரை வியாபாரத்தைக் குறைத்து அதனால் ஆண்டுதோறும் கிடைக்கின்ற பெரிய லாபத்திற்குக் குறைவு ஏற்பட்டுவிடுமென்று குதிரை வியாபாரிகள் தடுத்துவிடுவார்கள். கப்பல்களில் அவர்கள் குதிரைகளைக் கொண்டுவந்தார்கள் (கர்னல் யூலின் 'மார்க்கபோலோ', தொகுதி - 285).

ரஷிஉதீனும் வாசபுவும் குதிரை வியாபாரச் செய்திகளைப் பற்றி ஒரேவிதமான விளக்கங்களைத் தந்துள்ளனர். இந்த அத்தியாயத்தில் போலோவிற்குக் குதிரைகளோடு இருக்கும் நெருங்கிய பழக்கத்தைப் பார்க்கும்பொழுது அவனே குதிரை வியாபாரத்திற்கு அதிகாரியாயிருக்க வேண்டுமென்று யாரும் ஐயுறுதல் கூடும். 'ஒவ்வோர் ஆண்டும் தன்னாலேயே வளர்க்கப்பட்ட 1400 சிறந்த குதிரைகளைக் கையிஸ் தீவிலிருந்து மலபாரில் கொண்டு வந்து இறக்குமதி செய்ய வேண்டும் என்று மாலிக்-உல்-இஸ்லாம் ஜமாலுதீனுக்கும் வியாபாரிகளுக்கும் ஓர் ஒப்பந்தம் இருந்தது! என்று வாசபு கூறுகிறார். ......... அன்றியும், பெரிஷியாத் தீவுகளிலுள்ள காலிப், லாசிரா, பாரெயின், ஹர்மஸ், கலாடு போன்ற இடங்களிலிருந்து அவனால் முடிந்த அளவு அதிகமான குதிரைகளை இறக்குமதி செய்ய ஒப்புக் கொண்டான். பழைய கணக்குப்படி ஒரு குதிரையின் விலை 220 தினார் செம்பொன் என்று முடிவு செய்யப்பட்டது. இவ்விலைக்குக் குதிரையைக் கொடுக்க ஒப்புக் கொண்டமையால், ஏதேனும் ஒரு குதிரை இறக்க நேரிட்டால் அதன் விலை அரசாங்க கஜானாவிலிருந்து செலுத்தப்பட வேண்டும். அடாபக் அபுபெக்கர் ஆட்சிக் காலத்தில் இந்த இடங்களிலிருந்து மலபார்,

கம்பாயத்து மற்றும் அவற்றின் அருகேயுள்ள மற்றத் துறை முகங்களுக்குப் பத்தாயிரம் குதிரைகள் ஆண்டுதோறும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இவ்வாறு ஏற்றுமதி செய்யப்பட்ட குதிரைகளின் மொத்த விலை 22,00,000 தினார்கள். அவர்கள் அக்குதிரைகளை நாற்பது நாள்கள் குதிரை லாயங்களிலே முளைக்குச்சிகளில் கயிறுகளால் கட்டி வைத்துத் தீனியளித்துக் கொழுக்க வைத்தார்கள். அதற்குப் பிறகு அக்குதிரைகளுக்குச் சரியாகப் பயிற்சி அளிக்காமலே அவைகளுக்குத் தகுந்த சேணங்களும் அதோடு பிணைக்கப்பட்ட உலோக லாடம்கூட இல்லாமலும் அசுரர்களைப் போல அவைகளின் மேலேறிச் சவாரி செய்தார்கள். சீக்கிரத்திலேயே மிக்க திடமும் உறுதியும் சுறுசுறுப்பும் வேகமும் உற்சாகமுள்ள குதிரைகள் மெலிந்து சக்தியற்றுப் பயனில்லாதவை ஆயின. சுருங்கக் கூறின், அவை ஒன்றுக்கும் உதவாததையாயின எனலாம். ஆகையால் அவர்களுக்கு ஆண்டுதோறும் புதுக்குதிரைகள் வரவழைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது (எலியட்டு, தொகுதி 3-34).

போலோவினால் குறிப்பிடப்படும் விலை ஐநூறு தினார்களுக்குச் சரியாக இருப்பதுபோலத் தோன்றுகிறது. அக்காலத்தில் ஆசியாவில் விலையுயர்ந்த உலோகங்களின் மதிப்பிற்குத் தகுதியாக இது நூறு மார்க்கு வெள்ளி நாணயத்திற்குச் சமமாகும். வாசபு கூறும் விலை இருநூற்று இருபது தினார் செம்பொன், இவ்விலைக்குச் சற்றும் பொருந்தாததாயிருக்கிறது. ஆனால், உண்மையில் அவ்வளவு பொருத்தமற்றதன்று; ஏனெனில், செம்பொன் தினார் என்று சொல்லப்படும் நாணயம் இரண்டு தினார்களின் நாணய மதிப்பிற்கே சமமாய் இருக்குமென்று தோன்றுகிறது.

மார்க்கபோலோ காலத்தில் வாழ்ந்தவராகிய பெர்ஷிய வரலாற்று ஆசிரியர் வாசபு மபாரைக் கீழ்க்காணுமாறு வருணித்துள்ளார். அதாவது நான் எண்ணுவதுபோல் இவர் குறிப்பிடும் மலபார் என்பது மபாரின் துறைமுகமாகிய காயல்.

'சின்', 'மசின்' என்ற வடசீனா தென்சீனா நாட்டின் வினோதப் பொருள்களும் இந்து சிந்து பிரதேசங்களின் அழகு மிக்கப் பொருள்களும் ஏற்றப்பட்ட 'ஜங்க்ஸ்' என்று சீனர்களால் வழங்கப்படும் பெரிய கப்பல்கள் மலைகள் போன்று காற்றாகிய இறக்கைகளுடன் பாய்விரித்துத் தண்ணீர் மட்டத்தில் மிதந்து சென்று அங்கே எப்பொழுதும் போய்ச் சேர்ந்து கொண்டே இருக்கும். பெரிஷியன் வளைகுடாவிலுள்ள தீவுகளின் செல்வம் முக்கியமாக ஈராக்கு, குராசன் என்னும் இடங்களிலிருந்து ரம்மின், ஐரோப்பா வரை உள்ள மற்ற



நாடுகளின் அழகும் அலங்காரமும் மலபாரிலிருந்து பின்பற்றப்பட்டன. அதற்கு ஏற்றதுபோன்று மபார் இந்தியாவுக்கு நுழைவாயில்போன்று அமைந்திருந்தது (மார்க்கபோலோ, 2-269).

பின் காண்பவை முத்துக்குளித்தல் பற்றி மார்க்கபோலோ விவரிக்கும் வருணனை:

முத்துக்குளித்தல்: 'மார்க்கபோலோவாலும் அராபியர்களாலும் அக்காலத்திற் கூறப்பட்ட மபார் என்ற சொல்லில், நாம் பார்த்ததுபோல, சோழமண்டலக்கரையில் பெரும் பகுதியும் சேர்ந்திருந்தது. ஆனால், மபாரின் முத்துக்குளித்தலைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது மபாரின் தென்பகுதியையே சிறப்பாக அச்சொல் குறிக்கிறது என்று நாம் அறிந்து கொள்ள வேண்டுமென்று நான் நினைக்கிறேன். இத்தென் மபார் பகுதி இராமேஸ்வரத்திலிருந்து கன்னியாகுமரி வரை மன்னர் வளைகுடாவின் கிழக்குக் கரையாய் அமைந்திருந்தது. இராமநாதபுரத்தின் கரையில் நடந்துவந்த முத்துக் குளித்தல் அவ்வளவு புகழ் பெற்றிருக்கவில்லை. போலோ அத்துறைமுகத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறாரேயன்றி அதற்குப் பெயரிடவில்லை. எனவே, அத்துறைமுகம் கீழ் கரைக்கு அருகிலோ அன்றியும் கீழ்க்கரையைச் சார்ந்தோ இருந்திருக்க வேண்டும். அல்லது பெரிய பட்டணம் என்ற இடமாய் அது இருந்திருக்கலாம். அந்த இடம் இப்பொழுது உள்நாட்டில் சில மைல் தூரத்திலிருக்கிறது. ஆனால், அதன் புகழெல்லாம் முற்றும் மங்கி மறைந்துவிட்டது' என்று ('இபுபாடொ பாடன் என வழங்கும் அந்தப் பட்டணம்' என்பது இந்த இடமா?) மார்க்கபோலோ எழுதுகிறார்.

கப்பலில் செய்லான் (இலங்கை) தீவை விட்டுப் புறப்பட்டு மேற்குத் திசையில் அறுபது மைல் சென்றால், மகா இந்தியா என்று வழங்கப்படும் மபார் என்னும் பெரிய மாகாணத்துக்கு நீங்கள் வருவீர்கள். அது இந்தியத் தீவுகளிலெல்லாம் மிக்ச் சிறந்தது. அது இந்தியப் பெருநிலத்திலேயே அமைந்திருக்கிறது. அந்த மாகாணத்தில் ஒரு வயிற்று உடன்பிறப்பாளர்களாகிய ஐந்து அரசர்கள் இருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். நான் ஒவ்வொருவரைப் பற்றியும் முறையாக உங்களுக்குச் சொல்கிறேன். அம்மாகாணம் உலகத்திலேயே முதன்மையான சிறப்புடைய பகுதியாகும். மாகாணத்தின் முனைப்பகுதியை ஐந்து அரச உடன் பிறப்பாளர்களுள் ஒருவராகிய முடிமன்னர் சுந்தர பாண்டித் தேவர் ஆண்டு வந்தார். அவர் நாட்டில் அவர்கள் மிகச்சிறந்த உயர்ந்த மதிப்புள்ள முத்துகளைக் கண்டார்கள். அவற்றை அவர்கள் எவ்வாறு பெற்றார்கள் என்பதை நான் கூறுகிறேன். அந்த இடத்தில் செய்லானுக்கும் (இலங்கைக்கும்) முக்கிய

நிலப்பகுதிக்கும் இடையே கடல் ஒரு குடாவை உண்டாக்குகிறது என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். அந்தக் குடாவைச் சுற்றிலும் தண்ணீரின் ஆழம் பத்து அல்லது பன்னிரண்டு 'பாதங்க'ளுக்கு (அதாவது 60 அல்லது 72 அடி) அதிகமாய் இல்லை. முத்துக்குளிப்பவர்கள் பெரியவும் சிறியவுமான தங்கள் மரக்கலங்களைச் செலுத்திக் கொண்டு இந்தக் குடாவிற்குள் செல்வார்கள். ஏப்பிரல் மாத ஆரம்பத்திலிருந்து மே மாதத்தின் பாதிவரை அவர்கள் அங்கேயே தங்கி விடுவார்கள். அவர்கள் முதலில் பெட்டிலால் என்று வழங்கப்படும் இடத்திற்குச் செல்வார்கள். பின்னர் குடாவின் உட்புறத்தை நோக்கி அறுபது மைல் செல்வர். அங்கு அவர்கள் நங்கூரம் பாய்ச்சிப் பெரிய மரக்கலன்களிலிருந்து இறங்கி, சிறு படகுகளில் ஏறிக் கொள்வார்கள். பல வியாபாரிகளும் அவர்களுடன் செல்வார்கள். அவ்வியாபாரிகள் வெவ்வேறு கூட்டங்களாகப் பிரிந்து செல்வார்கள். ஒவ்வொரு கூட்டத்தினரும் பலரை ஏப்பிரலிலிருந்து மே மாதம் பாதிவரை சம்பளத்திற்கு அமர்த்திக் கொள்வார்கள். முதலில் கிடைக்கும் முத்துகளில் பத்தில் ஒரு பங்கை அரசனுக்குத் திறை செலுத்த வேண்டும். தண்ணீருக்குள் முத்துகளைத் தேடுவதில் முனைந்திருக்கும் முத்துக்குளிப்பவர்களைப் பெரிய மீன்கள் துன்புறுத்தாதவாறு மந்திரத்தால் அவைகளைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கும் மனிதர்களுக்கு அவர்கள் குளித்தெடுக்கும் முத்துகளில் இருபதில் ஒரு பங்கைக் கொடுக்க வேண்டும். இந்த மீன்மந்திரம் செபிப்பவர்கள் அமியமன் (பிராமணர்) என்று வழங்கப்படுவார்கள். அவர்களுடைய மந்திரம் பகல் பொழுதில் மட்டும் சக்தியுடையதாயிருக்கும்; ஏனெனில், இரவில் மந்திரங்களைத் தளர்த்தி மீன்கள் தம் விருப்பம் போல எல்லாவித இடையூறுகளையும் விளைக்கும் படி விட்டுவிடுவார்கள். இந்த அபியமனர்களுக்கு மிருகங்கள் பறவைகள் முதலிய ஒவ்வோர் உயிருள்ள பொருளையும் எப்படிக் கட்டுப்படுத்துவதென்பது தெரியும். முத்துக்குளிப்பவர்கள் சிறுபடகுகளில் ஏறி வந்ததும் தண்ணீருக்குள் குதித்து ஆழத்திற்கு நீந்திச் செல்வார்கள். அங்கு அவர்களால் இயலும் வரையில் தங்கியிருப்பார்கள். அங்கு முத்துகளுடைய சிப்பிகளைக் கண்டு அவைகளைத் தொகுத்துத் தங்கள் இடுப்புடன் கட்டியிருக்கும் வலைப்பையில் இட்டுக் கொண்டு அந்தப் பையுடன் கடல் மட்டத்திற்கு வருவார்கள். பிறகு மீண்டும் நீரில் மூழ்குவார்கள். அவர்களால் மூச்சுப்பிடிக்க இயலாதென்ற நிலை ஏற்படும் பொழுது மறுபடியும் அவர்கள் தண்ணீருக்குமேலே வருவார்கள்; சிறிது நேரத்திற்குப்பின் மறுமுறையும் முழுகுவார்கள். இவ்வாறு நாள் முழுதும்



முழுகிமுழுகி வெளிவருவார்கள். அந்தச் சிப்பிகள் கிளிஞ்சல் அல்லது கடற்பூச்சி (Oysters and sea-hoods) களைப் போன்றிருக்கும். அந்தச் சிப்பிகளில் சிறியதும் பெரியதுமான ஒவ்வொருவிதமான முத்துகள் சிப்பி மீனின் சதையோடு ஒட்டிக் கொண்டிருக்கும். இந்த முறையில் மிகுதியாக முத்துகள் சேகரிக்கப்படுகின்றன. அவற்றிலிருந்துதான் உலகெங்கும் பரவியுள்ள முத்துகள் உண்மையில் வரப்பெற்றன. அந்தச் சமஸ்தானத்தின் அரசன் அந்த முத்துகளில் தனக்குச் சேர வேண்டிய பகுதியைப் பெற்றே மிகப் பெரிய செல்வத்தையடைந்திருக்கிறான் என்று நான் சொல்வேன். மே மாதத்தின் பாதி நாள்கள் கடந்ததும் முத்துச்சிப்பிகள் அங்கு அகப்படுவதில்லை. ஆயினும், அந்த இடத்திலிருந்து சுமார் முந்நூறு மைல் தூரத்திற்குச் சென்றால், அங்கு முத்துகள் கிடைக்கின்றன என்பதும் உண்மைதான். ஆனால், அவை அங்குச் செப்டம்பர் மாதத்திலும் அக்டோபர் மாதப் பாதியிலும் கிடைக்கின்றன. (முத்துக்குளித்தல் பற்றிய விரிவான ஆராய்ச்சிக்கு அண்ணாமலை பல்கலைக்கழக வெளியீடான திரு. அருணாசலம் எழுதியுள்ள நூல் காண்க - ந.ச.).

**மார்க்கபோலோவின் காயல்**

இப்பொழுது மார்க்கபோலோவின் காயலுக்கே திரும்புவோம். இக்காலத்தில் இந்த இடம் போலோவினால் வருணிக்கப்பட்ட 'சிறந்த பெரும் பட்டினத்திற்கு மிக்க ஒப்புமையுடைய தோற்றமுள்ள தாயிருப்பது ஐயமாயிருந்த போதிலும் அதன் ஒப்புமை அங்கே இன்னும் கண்டுபிடிக்கப்பட்டு வரும் பழம்பெருமையை உணர்த்த வல்ல புனித சின்னங்களால் உறுதியாக்கப்பட்டு வருகிறது. ஏனெனில் இப்போதைய காயல் கிராமத்தின் வடக்கே இரண்டு மூன்று மைல் தூரத்தில் ஒன்றரை மைல் தூரம் உள்நாட்டிற்குள் ஏரக்குறைய மாறமங்கலம் வரை முழுப் பகுதியும் உடைந்த சீனக் களிமண் ஓடுகளாலும் எஞ்சிய மட்பாண்டங்களாலும் நிறைந்திருக் கின்றன. இது மார்க்கபோலோ குறிக்கும் காயலுக்கும், அதன் வியாபாரம் காயலுடன் மகம்மதிய சரித்திர ஆசிரியர்களால் குறிப்பிடப்படும் மபார் கடற்கரைத் துறைமுகத்தின் ஒற்றுமைக்கும் சிறந்த ஆதாரங்களாய் விளங்குகின்றது. அச்செய்திகளின்படியே அராபியக் கடற்கரையிலிருந்தும் பெர்ஷியன் குடாவிலிருந்தும் எண்ணற்ற மரக்கலங்கள் அடிக்கடி காயலுக்கு வந்து சென்றன. அங்கே சீனக் கப்பல்களாகிய ஜங்குகளும் வந்தன. அத்தகைய சீனஜங்கு ஒன்றிலேதான் மார்க்கபோலோ வந்து இறங்கினார். அதேபோல் திறந்தவெளியில் எல்லா இடங்களிலிருந்தும் அராபிய மண்பாண்டங்களின் உடைந்த துண்டுகளையும் பலவிதத்

தரங்களிலும் எல்லா வடிவங்களிலும் நிறங்களிலும் செய்யப்பட்ட சீனக் களிமண் பாண்டங்களையும் நான் தொகுத்து வைத்திருக்கிறேன். நான் விரும்பியிருந்தால், ஒரு பகற்பொழுதிலேயே ஒரு வண்டிச் சுமையளவு அப்பொருள்களை எளிதாக நான் சேகரித்திருக்க இயலும் (பாதிரியாரின் ஆராய்ச்சிக் காதலே காதல்! - ந.ச.). ஆனால், நொறுங்கிய துண்டுகளை ஒன்றுசேர்த்துப் பாத்திரத்தின் உருவத்தை ஊகிக்க முடியாத அளவு அம்மட்பாண்டத் துண்டுகள் நிலத்தை உழுததனாலும், எருதுகளின் கால்களில் மிதிபட்டும் பல சிறு துண்டுகளாய் நொறுங்கியிருந்தன. ஒரு நாள், நான் துணிகரமாக அப்பிரதேசத்தின் ஒரு முழு பகுதியைக் குழிவெட்டும் ஒரு கூட்டத்தினரைக் கொண்டு தோண்டச் செய்தேன். இப்போதைய பூமி மட்டத்திற்கு மூன்று அடி ஆழத்தின் கீழே ஒரு வீட்டின் சுண்ணாம்பும் காரையிடப்பட்ட தரையும் அவர்கள் கண்டார்கள். ஆனால் அதில் முக்கியமான பொருள் ஒன்றும் கிட்டவில்லை. சாதாரணமாக அப்பகுதியை ஒரே நாளில் ஒழுங்காக நுட்பத்துடன் ஆராய இயலாது. ஒரு மாத காலம்வரை அகழ்ந்து எடுக்கக்கூடிய அவ்வளவு பெரிய பரப்புடைய இடம் காயல். காயலிலும் கொற்கையிலும் அதன் அருகிலுள்ள இடங்களிலுமிருக்கும் மக்கள் காயலுக்கும் சீனாவிற்கும் நடந்த வியாபாரத்தைப் பற்றியும் அதன் சிறப்பையும் மறந்து விட்டார்கள். அப்பிரதேசம் முழுவதிலும் கிடைக்கின்ற உடைந்த சீன மட்பாண்டங்களின் துண்டுகள் அச்செய்தியை அவர்கள் நினைவு கூறும்படி செய்யக் கூடிய அளவு இருந்தும் மக்கள் அதை மறந்து விட்டார்கள். சமீபகாலம் வரை அரேபியாவும் பெர்ஷியன் குடாவும் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தமையால் அங்குள்ள மக்கள் அவ்வியாபாரத்தைப் பற்றிய தெளிவான செய்தியை மட்டும் அறிந்திருப்பதை உணர்ந்தேன். காயல் துறைமுகமாகப் பயன்படாது புறக்கணிக்கப்பட்டு விட்ட காலத்தில் ஐரோப்பிய வியாபாரிகள் ஐயமில்லாமல் போர்ச்சுகீசியர்கள் அங்கு வாழ்ந்து வந்தார்கள் என்பதைப் பற்றிய மரபும் இருந்தது. மார்க்கபோலோவின் காயலைக் காயல்பட்டினத்தோடு ஒப்பிடாமலிருக்கக் கவனம் செலுத்தவேண்டுமென்று நான் ஏற்கெனவே கூறியுள்ளேன். இக்காயல்பட்டினத்தின் கரையருகே உள்ள மற்றொரு நகரில் இப்போது பெரிய பரப்புடைய புதிய இடத்தில் சுமார் ஏழாயிரத்துக்கு அதிகமான மகம்மதியர்கள் இருக்கின்றார்கள். கடல் அருகிலேயே மற்றொரு சிறிய துறைமுகம் இருக்கிறது. அது காயல் பட்டினத்திற்குச் சிறிது வடக்கே அமைந்துள்ளது. தேசப்படங்களில் அதன் பெயர் 'பின்னகாயல்' என்று வழங்கப்படுகிறது. ஆனால், உண்மையில் அதன் பெயர் 'புன்னைக் காயல்' என்பதே. ஆனால், அந்த



இடங்கூட அண்மைக்காலத் தோற்றத்தையுடையது. காயல் பட்டினத்தைப் போலவே இங்குள்ள பல வியாபாரிகள் தங்களுடைய முன்னோர்கள் காயல் பட்டணத்திலிருந்து போர்ச்சுகீசியரின் வருகையைத் தொடர்ந்து முதலில் காயலிலிருந்து வந்ததாகக் கூறுகிறார்கள். (இப்போது காயலில் முகமதியர்கள் மிகுதி. அவர்களிடம் 'சூரியகாந்தி'யைப் 'பொழுது வணங்கி' என்பதுபோலக் குறிக்கும் பல இனிய - எளிய - தனித்தமிழ்ச் சொற்கள் இப்போதும் பேச்சுத் தமிழில் உண்டு என்பதை மறைந்த ஆராய்ச்சி அறிஞர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் தெரிவித்துள்ளார் - ந.ச.).

### மகம்மதியர்களின் ஆட்சி

இபின் படுடா என்ற டில்லி அரசர்களின் மகம்மதிய சேவகன் 1348-49 இல் தன் எஜமானது வியாபார விஷயமாக ஆண்டுதோறும் செல்கின்ற சீன ஜங்கு ஒன்றில் குயிலானுக்குச் செல்கின்ற வழியில், மலபாருக்கு (கொல்லம்) வந்தான். மபார் முழுவதும் பாண்டிய சோழ நாடுகளும் சேர்ந்து மகம்மதிய அரசர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்ததைக் கண்டான். 1311 இல் காபர் படையெடுப்பிலிருந்து இந்நாடு மகமதியர் ஆட்சிக்குட்பட்டிருந்தது. இருபது முப்பது வருடங்களாக டில்லி அரசர்களால் நியமிக்கப்பட்ட கவர்னர்களால் நாடு ஆளப்பட்டு வந்தது. நாளடைவில் அக்கவர்னருள் ஒருவனாகிய ஜலாலுதீன் ஹாஸன் என்ற பெயருடைய ஷெரிப்பு அல்லது சையது, மகம்மதியருக்கு எதிராகப் புரட்சி செய்து சுதந்திரமடைந்தான். இந்தச் சூழ்நிலை பெரிஷ்டாவினால் குறிப்பிடப்படுகிறது. மகம்மதியர்களின் ஆட்சி மிகவும் உறுதியாக நிலைநாட்டப்படவில்லை என்று தோன்றுகிறது. ஏனெனில், இபின்படுடா அங்கே ஏற்கெனவே பல உள்நாட்டுப் புரட்சிகள் ஏற்பட்டிருந்தன என்றும், மபாரில் இறங்கியவுடன் அங்கு அரசு செலுத்திவந்த சுல்தான் ஓர் அந்நியருடன் (அநேகமாய் அவன் நாடு கடத்தப்பட்ட பாண்டிய அரசர்களின் எஞ்சிய பிரதிநிதியாகவோ அல்லது அவனிடம் பரிவு கொண்டவனாகவோ இருந்திருக்க வேண்டும்) சண்டை செய்து கொண்டிருந்ததைக் கண்டான். சுல்தானின் எதிரிகளுள் பெரும்பாலோர் இராமநாதபுரத்து மறவர்களாயிருக்க வேண்டும். ஏனெனில் சிலோனிலிருந்து மன்னார் குடாவிற்குச் செல்லும் கடல்மார்க்கத்தில் ஆழமற்ற கடலின் துறைமுகத்தில் கப்பல் உடைந்தது. அப்பொழுது அவன் எங்குக் கரை ஏறினானோ அதற்கு அருகில் இராமநாதபுரத்தில்தான் சுல்தான் இருக்க வேண்டுமென்று உணர்ந்தான். இந்நாடு மறவர்கள் நிறைந்த நாடு. மறவர் வீரப்பரம்பரையினர். அவர்கள் சிறிய முகம்மதிய இளவரசர்

களுக்கு நெடுங்காலம் அடங்கி இருப்பார்கள் என்று சொல்வதற்கில்லை. இந்த முகம்மதியர் ஆட்சியைப் பற்றி டெய்லரின் சரித்திரக் கையெழுத்துப் பிரதிகளில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவர்கள் ஆட்சி 1323 ஆம் ஆண்டிலிருந்து 1370 ஆம் ஆண்டு வரை - அதாவது, 47 வருடங்கள் வரை நீடித்ததாகக் கூறப்படுகிறது. இக்கால அளவில் சுதந்திர மகம்மதிய அரசாட்சிக் காலமும் சேர்க்கப்பட்டிருக்கலாம். மேலும், மகம்மதியர்களால் வெல்லப்பட்டு டில்லிக்கு அனுப்பப்பட்ட பாண்டிய அரசன் பெயர் பராக்கிரம பாண்டியன் என்பது கூறப்படுகிறது. இபின்படுடா மலபார் சுல்தான்கள் மதுரையிலிருந்து அரசாட்சி செய்தார்கள் என்று கூறுகிறார். அரசனுடைய அரண்மனையும் அங்குதான் இருந்தது. அவர் மதுரை மிகப் பெரிய நகரமாகவும் டில்லியைப் போன்றே விசாலமாகவும் இருந்ததாகக் கூறுகிறார்.

### துவார சமுத்திர விஜயநகர ராஜ்யங்கள்

சோழ பாண்டியர்களின் ஆட்சி 12 ஆம் நூற்றாண்டில் பலவீனமடைய ஆரம்பித்ததிலிருந்து தென்னிந்தியாவில் துவாரசமுத்திர விஜய நகர ராஜ்யங்கள் மிக்க வலிமையடைந்து உன்னத நிலையிலிருந்தன. மதுரை திருநெல்வேலி முதலியவற்றின் மத்தியகால சரித்திரத்தைச் சரியானபடி அறிந்து கொள்வதற்குத் துவாரசமுத்திர விஜயநகர அரசுகளின் விவரங்களையும் குறிப்பிட வேண்டுவது அவசியம்.

### துவார சமுத்திரம்

தமிழ் இலக்கியத்திலும், கல்வெட்டிலும் துவார சமுத்திரம் என்ற பெயரை நான் காணவில்லை (புறநானூற்றில் வரும் 'துவரை ஆண்ட' என்ற பகுதியைக் கால்டுவெல் அறியார் - ந.ச.). ஆனால், வலிமை வாய்ந்த தெலுங்கு அரசபரம்பரையினரான விஜயநகர அரசர்களுக்குப் பிறகு பலம் வாய்ந்த; கன்னடிய அரசபரம்பரையினர் ஆதிக்கத்திற்கு வந்தனர் என்பது மட்டும் உண்மையான செய்தியாகும். இது சில காலங்களில் புகழ் பெற்ற மைசூர் அரசபரம்பரை என்று வழங்கப்படுகிறது. ஆனால், மைசூர் என்ற பெயர் நெடுங்காலத்திற்குப் பிந்தியது. அது சரியாக உண்மையில் வழக்கு முறையில் கன்னடர் அதாவது கன்னடிய அரசபரம்பரை என்று கூறப்படுகிறது. இதன் ஆங்கிலப் பெயரான 'கனரிஸ்' என்பதற்குக் கருநடம் அல்லது கருநாடகம் என்பதன் சுருக்கப் பெயராகிய கன்னம் அல்லது கன்னரா என்பதற்கும் உள்ள சம்பந்தத்தைக் குறிக்கவே இப்பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. கருநடம் என்பது முதலில் கறுப்புநாடு - அதாவது பருத்தி விளையும் கறுப்புமண் நிறைந்த நாடு - என்பதைக் குறித்திருக்கலாம். பிந்திய பெயர் நம்முடைய பெயராகிய கர்நாடிக்கு என்பதோடு எல்லா விதங்களிலும் ஒப்புமையுடையதாயிருக்கிறது. ஆனால், அது மலைத் தொடர்ச்சிக்கு மேலே இருக்கும் மைசூரும் அதைச் சேர்ந்த உயர்ந்த பீடபூமியையும் குறிக்கிறது. இக்கன்னட அரச பரம்பரையின் தலைநகரம் துவார சமுத்திரமாயிருந்தது. இது மைசூர் நாட்டின் மத்தியில் உள்ளது; சீரங்கப்பட்டணத்திற்கு வடமேற்கே சுமார் 105 மைலில் உள்ளது. துவார சமுத்திரம் என்ற பெயர் மைசூர் நாட்டின் எல்லாக் கல்வெட்டுகளிலும் 'தொரசமுத்திரம்' என்று எழுதப்பட்டிருக்கிறது. 'துவார' என்பதன் மருஉவே 'தொர' என்பது. அவ்விடத்திற்கு இக்காலப் புதுப்பெயர் ஹளபீடு அல்லது ஹளியபிடு என்பது. இதன் பொருள் பழைய இருப்பிடம் என்பது. ஹளபிடுவிலுள்ள பழைய கோவிலிருக்கும் சிலை ஒன்று புகழ் பெற்ற பொர்குசனிடமிருந்து கிடைத்தது. (இந்த இடத்தையும் இங்குள்ள ஒப்புயர்வற்ற கலைச் சிற்பங்களையும் சென்ற கோடை விடுமுறையில் நேரில் சென்று பார்த்தேன். தமிழ் - ப கன்னடத்தில் ஹ ஆகும். பால், ஹாலு என்று மாறுவது போல அப்படியே தமிழ் வ கன்னடத்திலும் வேறு சில வடமொழிகளிலும் ப ஆகும். எனவே பழவீடு ஹளபீடு ஆயிற்று - ந.ச.). துவார சமுத்திர அரசபரம்பரையினர் ஹோய்சலர்கள் அல்லது சாதாரணமாகப் பலாலர்கள் என்று வழங்கப்பட்டனர். இந்தப் பெயர் பராக்கிரமமுடையவன் என்ற பொருளில் 'பலா' என்பதிலிருந்து தோன்றியது. சிலகாலம் வரை தெற்கேயுள்ள சோழ பாண்டியர், மற்றுமுள்ள பழங்கால அரசபரம்பரையின் நாடுகளையும் வெற்றிகண்டு முதன்மையான ஆதிக்கம் செலுத்தி வந்தனராகையால் இப்பெயர் ஏற்பட்டது.

இந்தப் பரம்பரையின் முதல் அரசன் பிட்டிதேவன். இவன் பெரும் பரப்புள்ள மாவட்டங்களை வென்று தன் ஆதிக்கத்திற்குட்படுத்தினான். இவன் ஜைனமதத்தினன்; இராமானுஜாச்சாரியாரால் ஜைன மதத்தினின்றும் வைணவ மதத்திற்கு மாற்றப்பட்டவன். மதமாற்றத்திற்குப்பின் இவன் பெயர் 'விஷ்ணுவர்த்தனன்' என மாறியது. இவன் மதமாற்றம் ஏறக்குறைய 1117 இல் ஏற்பட்டது. இராமானுஜர் கடும் சைவனான கரிகாற்சோழன் செய்த சித்திரவதைக்குப் பயந்து நாடு கடந்து ஓடினார் (இதற்கு ஆதாரம்? - ந.ச.). இதற்கு முன்பே விஷ்ணுவர்த்தனன் தென்னிந்தியாவில் பலமிக்க அரசனாகிவிட்டான். அவனும் சோழ பாண்டிய கேரளர்களை அடக்கியதாகக் குறிப்பாகக் கூறியுள்ளான். தெற்கே இக்காலத்தில் கன்னடியர்கள் சிறப்படைந்ததைப் பற்றிய ஆதாரங்கள் - முக்கியமாக முகம்மதிய

சரித்திர ஆசிரியர்களின் வாக்கால் உறுதிப்படுத்தப்பட்ட ஆதாரங்கள் மட்டும் இல்லையானால், இவ்வாக்குமூலத்திற்கு மதிப்பேயிருந்திராது.

அல்லாவுதீன் தேவகிரியை வென்றபோது, 1295 இல் முகம்மதியர்கள் தக்ஷிணத்தில் (தக்காணத்தில்) தோன்றினார்கள். இரண்டாவது பட்டாணிய அரச பரம்பரையைச் சேர்ந்த கில்ஜி வமிசத்து இரண்டாம் அரசனான அல்லாவுதீனின் தளகர்த்தனான ஹஸார் தினரி - பெரும் பாலும் மாலிக்காபூர் என்று வழங்கப்படுபவன் - தலைமையில் வந்த மகம்மதியச் சேனை பல்லால இராஜ்யத்தை முற்றுகையிட்டது. பெரிய போர் 1311 இல் நடந்தது. அதில் பல்லால அரசன் தோற்கடிக்கப்பட்டுச் சிறைபிடிக்கப்பட்டான். துவார சமுத்திரம் சூறையாடப்பட்டது. பகைவன் தங்கத்தை ஏராளமாகத் தன் நாட்டிற்கு எடுத்துச் சென்றான். தென்னிந்தியா முழுவதையும் வெற்றி கண்டுவர மாலிக்காபூர் அனுப்பப்பட்டான். அக்காலத்தில் துவார சமுத்திரத்திலிருந்து கைப்பற்றப்பட்ட ஏராளமான பொருளின் பேராசையே தென்னிந்தியா முழுவதையுமே வெற்றி காணத் தூண்டியது. துவார சமுத்திரத்தைப் பிடித்த பின்பு மாலிக்காபூர் மலபாரை நோக்கிப் படையெடுத்தான். மகம்மதிய சரித்திர ஆசிரியரான பெரிஷ்டாவைப் போலவே அவனும் மலபாரை துவாரசமுத்திர அரசுக்குட்பட்ட பாளையமாகவே எண்ணினான். ஜெனரல் வில்க்ஸ் (General Wilks) என்பாரால் மலபார் என்ற பெயர் எந்த இடத்தைக் குறிக்கிறதென்பதைக் கண்டுபிடிக்க இயலவில்லை. ஆனால், இப்பொழுது மலபார் என்ற சொல் விளக்கமாகச் சோழ பாண்டிய அரசுகள் அல்லது பொதுவாகச் சோழ மண்டலக் கரையைக் குறிக்கிறது. துக்ளக்கு வமிசத்தைச் சேர்ந்த மூன்றாம் முகம்மதுவால் 1326ல் மற்றொரு முறை துவாரசமுத்திர நகரம் அழிக்கப்பட்டது. ஆனால், பல்லால அரசு முழுவதும் அழிக்கப்படவில்லை. பல்லாலர்கள் தலைநகரைத் தொன்மூலுக்கு (தும்கூர்) மாற்றிக் கொண்டார்கள். இது சீரங்கப்பட்டணத்திற்கு ஒன்பது மைல் வடக்கேயுள்ளது. விஜயநகர அரசர்கள் 1336 இல் எழுச்சியடைந்த பிறகும் பல்லால அரசர்கள் 1387 ஆம் ஆண்டு வரை சில அதிகாரங்கள் செலுத்த அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

இவ்வாறு நவபல்லாலர் என்று வழங்கப்பட்ட ஒன்பது முக்கிய இளவரசர்கள் அடங்கிய வலிமைமிக்க மரபின் ஆட்சி முடிவடைந்தது. இந்த மரபின் ஆரம்பத்தில் மிகச் சிறிய நாட்டையே பெற்றிருந்தனர். ஆனால் பின்வந்த அரசர்கள் தங்கள் வலிமையினால் கருநாடகம் முழுவதையும் கிருஷ்ணா நதிவரை வெற்றி கொண்டார்கள். மேற்கே துளுவமும் கிழக்கே திராவிடமும் (முக்கியமாகச் சோழபாண்டியருடைய



நாடுகளையும் சேர்த்துத் தமிழ்நாடு) வடகிழக்கே தெலுங்கானாவின் ஒரு பகுதியும் இந்த நாட்டிற்கு எல்லைகளாக இருந்தன (ரைஸின் மைசூர் கல்வெட்டுகள்).

திருநெல்வேலியில் எங்குச் சென்றாலும் எந்த முக்கியமான உத்தியோகப் பதவிகளும் அல்லது எந்த முக்கியமான வேலைகளும் கன்னடியன் அல்லது கானரிஸ் மனிதனால் முறையே நிரப்பப்பட்டும் செயல்பட்டும் வந்தன (அரசன் எவ்வழி அவ்வழி ......! - ந.ச.). அதற்கு உதாரணம் கன்னடியன் அணைக்கட்டு (கன்னட நாட்டுச் செல்வன் ஒருவன் நெல்லை நாட்டிற் போந்து தாமிரபருணி ஆற்றில் ஓர் அணை கட்டி அதன் நீரைக் கால்வாய்களின் வழியாகக் கொண்டு சென்று பயிர்த்தொழிலைப் பேணினான் என்று பழங்கதை ஒன்று வழங்குகிறது. அவ்வாற்றில் மூன்றாம் அணைகட்டு, கன்னடியன் அணை என்று இன்றும் வழங்குவது அதற்குச் சான்றாகும். அக்கன்னடியன் நெல்லை நகரத்தின் அருகே பெரியதோர் ஏரியும் கட்டி அதற்குக் கன்னடியப்பேரேரி என்று பெயரிட்டான்[1] - பேராசிரியர் - டாக்டர் ரா.பி. சேதுபிள்ளை - ஊரும் பேரும் பக்.23). இதைக் கட்டிய கன்னடிய மனிதன் பாளையங்கோட்டையிலுள்ள கோட்டையின் பழைய பகுதி ஒன்றைக் கட்டியமை கூறப்படுகிறது. அது மதுரையில் நாயக்கர்கள் ஆட்சி தொடங்குவதற்கு முந்திய காலத்தவரைச் சேர்ந்தது. அச்சமயத்தில் தெற்கே முழுவதும் துவாரசமுத்திரத்தை ஆண்ட கன்னடிய அரசர்கள் வெற்றி பெற்றிருந்தார்கள். அதனால் அவர்கள் ஆட்சி உன்னத நிலையிலிருந்தது என்று முடிவு செய்யத்தக்க காரணம் இருக்கிறது.

**விஜயநகரம்**

துவாரசமுத்திரம் வீழ்ச்சியடைந்ததும் விசயநகரம் தோன்றலாயிற்று. நகரமும் மாகாணமும் தென்னிந்தியாவிலுள்ள எல்லா மாகாணங்களையும்விட மிக்க புகழும் வலிமையும் பெற்று விளங்கின. இது 1336இல் வாரங்கல்லிலிருந்து வந்த இரண்டு அகதிகளால் தோற்றுவிக்கப்பட்டது. வாரங்கல் என்பது 'ஒரு தனிக்கல்' என்ற பொருளில் ஒருகல்லு என்ற பெயருடையது! (ஓரங்கல் - வாரங்கல்லாயிற்று - ந.ச.). மகம்மதியர்களால் 1323 இல் பிடிக்கப்பட்ட பிறகு நிஜாம் நாட்டுடன் சேர்க்கப்பட்டது. அவர்களுடைய பெயர்கள் ஹரிகரர், புக்கர் என்பன. ஹரிகரர் என்பவர் தம் பெயரை ஹரிஹரர்

---

*1. நாளடைவில் அவ்வேரியும் அதைச் சார்ந்த ஊரும் கன்னடியப்பேரி என்று மருவி வழங்கலாயின.*

என்றே வைத்துக் கொண்டார். அவர்கள் மகரிஷி மாதவரிடமிருந்து மிக்க உதவி பெற்று வந்தமை கூறப்படுகிறது.

ரைஸின் மைசூர்க் கல்வெட்டில் கொடுக்கப்பட்ட அரசர்களின் வரிசைப் பட்டியல்:

| கல்வெட்டு | | சின்ன பசவண்ண கலைஞானர் | கொங்குதேச ராஜாக்கள் |
|---|---|---|---|
| 1039 -1047 | சாலர், ஹொய்சலர், | 984 - 1043 | ... |
| | வினயாதித்தர் | 1043 - 1073 | -1068 |
| 1065- | இரேயங்கா, பெரியங்கா, வீரங்கா | 1073 - 1114 | ... |
| 1117 -1138 | பிட்டிதேவர், விஷ்ணுவர்த்தனர், திரிபுவனமல்லர் | 1114 - 1145 | 1099 -1147 |
| 1142 -1191 | விஜயநரசிம்மர், வீரநரசிம்மர் | 1145 - 1188 | 1147 -1174 |
| 1191 -1207 | வீரபல்லாலர், | 1188 - 1233 | 1174 - |
| 1223 | வீரநரசிம்மர் | 1233 1249 | 1237 |
| 1252 | சோமர், வீரசோமேஸ்வரர் | 1249 - 1268 | 1237 - 1283 |
| 1262 -1287 | வீரநரசிம்மர் | 1268 - 1308 | 1283 - 1313 |
| 1310 | பல்லாலதேவர் | ...... | ..... |

அவர்கள் தலைநகரம் வித்தியா நகரம் அல்லது விசயநகரம் என்று வழங்கப்பட்டது. கல்விக்கு இருப்பிடமான நகரம் என்ற முதற்பெயரே வித்தியா நகரம் என்றும் மகரிஷி வித்யாரண்யா இந்நகரம் தோன்றக் கர்த்தாவாய் இருந்ததால் அவர் நினைவாக இந்நகருக்கு இப்பெயர் சூட்டப்பட்டது என்றும் ரைஸ் என்பார் கூறுகிறார். வித்தியாநகரம் மருவிற்று. இதுவே மகம்மதிய சரித்திர ஆசிரியர்களால் 'பிஜநகர்' என்றும் ஆதிகால மேல்நாட்டவர்களால் 'பிஸ்நகர்' என்றும் குறிப்பிடப்படுகிறது. மேலும், இது கன்னடிய மொழியில் உண்மையில் ஆற்றின் மறுகரையிலுள்ள ஒரு கிராமமாகிய யானைக்குழி என்ற பொருளில் ஆனகுண்டு (குண்டு என்றால் பள்ளம் என்று தமிழ்ப் பொருள் - ந.சு.) என்று பொதுவாக வழங்கப்படுகிறது. இப்போது பல்லாரி மாவட்டம் அமைந்துள்ள 'பம்பா' அல்லது துங்கபத்திரை நதிக்கரையில் விசயநகரம் கட்டப்பட்டது. ஹம்பிக்கருகில் இந்நகரின் எஞ்சிய அழிந்த பகுதிகளின் அழகு, இது உன்னத நிலையிலிருந்தபோது இராயர்களின் அழகு மிக்க தலைநகராய் இருந்தது என்பதைக் காட்டுகிறது.

பரம்பரையாய் விசயநகர அரசர்கள் பட்டத்திற்கு வந்த செய்தியும்



காலமும் மிக்க குழப்பமான நிலையில் கொடுக்கப்பட்டுள்ளன. பல கல்வெட்டுகளை ஆராய்ச்சி செய்ததன் அடிப்படையில் தயாரிக்கப் பட்ட கீழ்க்காணும் வரிசைப்பட்டியல் ஏறக்குறைய சரியானது என்று ரைஸ் கூறுகிறார்.

| | கி.பி. |
|---|---|
| ஹரிஹரர், ஹக்கா, கரியப்பா | 1336 - 1350 |
| புக்கர், வீரபுக்கண்ணா | 1350 - 1379 |
| ஹரிபாரா | 1379 - 1401 |
| தேவராயர், விஜயராயர், விஜயபுக்கர் | 1401 - 1451 |
| மாலிக் அர்ஜுனா, வீரமல்லண்ணா, பிராததேவர் | 1451 - 1465 |
| விருபாக்ஷர் | 1465 - 1479 |
| நரசா, நரசிம்மர் | 1479 - 1487 |
| வீரநரசிம்மர், இம்மடி நரசிங்கர் | 1487 - 1508 |
| கிருஷ்ணராயர் | 1508 - 1530 |
| அச்சுதராயர் | 1530 - 1542 |
| சதாசிவராயர் (ராமராஜர், ராஜப்பிரதிநிதி அரசுரிமையை 1565 வரை ஆக்கிரமித்தவர்) | 1542 - 1573 |
| ஸ்ரீரங்கராயர் (திருமலராயர், ராமராஜாவின் சகோதரர் 1566) | 1574 - 1587 |
| வீரவேங்கடபதி முதலியவர்கள் | 1587 - |

டாக்டர் பர்னலின் விஜயநகர அரசபரம்பரைப் பட்டியல் கீழ் வருமாறு : (See Dravidian Palaeography, P.55). 'IV' விஜய நகர ராயர்கள் சுமார் 1320 முதல் 1565 வரை - பல ஆதாரங்களினின்றும் என்னால் திருத்தப்பட்ட அரசபரம்பரை வரிசை கீழ்வருமாறு (என்னுடைய, வம்காப்ராமணா; பக். VI காலம் பற்றிய குறிப்புகள்).

சங்கம யாதவ குடும்பத்தையும் சந்திரவமிசத்தையும் சேர்ந்தவர்கள்! !

ஹரியப்பா (1336 - 1350) புக்கர் I (1350 - 1379) - இவர் கௌராம்பிகாவை மணந்து கொண்டார்.

ஹரிஹரர் (1379 - 1401)

புக்கா II (1401 - 1418) இவர் திப்பம்
மாவை மணந்து கொண்டார்.

கிருஷ்ணராஜா

தேவராஜா், வீரதேவர் அல்லது விரூபதி (1418 - 1434) இவர் படாமம்பா மற்றும் மல்லம்பாவை மணந்து கொண்டார்

விஜயர் (1434 - 1454) மற்றும் பலர்
பிட்டதேவர் (1456 - 1477)
மல்லிகார்ஜுனர் (1481 - 1487)
ராமசந்திரர் (1487 - )
விருபாக்ஷர் (1488 - 1490) நரசிம்மர் (1490 - 1508)

வீரநரசிம்ம அச்சுரர் (1534 - 42) கிருஷ்ணராஜா (1508 - 1530)

சாதசிவர், வைசிராய் ஜே.டி. காஸ்புரோவுடன் 1546ம் ஆண்டில் உடன்படிக்கை செய்து கொண்டார். சதாசிவர் சிறுவராய் இருந்த போதே பட்டத்திற்கு வந்தார். முப்பது ஆண்டுகள் வரை இந்த நாடு மூன்று உடன் பிறப்பாளர்களால் ஆட்சி செய்யப்பட்டு வந்தது. அம்மூவரும் இரக்கமற்றக் கொடுங்கோலர்கள். அவர்கள் உரிமையுள்ள அரசனைச் சிறையில் அடைத்து விட்டார்கள் ஆண்டுக்கொருமுறை அவனை மக்களுக்குக் காட்டிவிட்டு அவர்கள் தங்கள் மனம் போல் - தாங்கள் விரும்பியவாறு - அரசாட்சி புரிந்தார்கள். இம்மூன்று சகோதரர்களும் சிறையிலடைத்து வைத்திருந்த அரசனுடைய தந்தையின் மூன்று தளகர்த்தர்கள். தகப்பன் இறந்ததும், இளவரசன் குழந்தையாய் இருந்ததால் அவர்கள் அரசுரிமையைக் கைப்பற்றினார்கள்.

வீரப்ப நாயக்கர்

| | | |
|---|---|---|
| ராமராஜர் (1565-ல் கொல்லப் பட்டார்) | திம்மன் (திருமலைபொம்மன்) 1567ல் அரச பீடத்தைப் பென்னகொண்டாவுக்கு மாற்றியவன் | பெங்கட்ரா இவன் 1565ல் கொல்லப் பட்டான். கான்டே வின்படி (VII, 2, 8) அவனுடைய |



பெயர் வெட்கட ராயன்

| | |
|---|---|
| ரங்கராஜா (? 1572 - 1585) | வெங்கடபதி (? 1585 - 1614) சந்திரிகிரியில் ( 1746) |

'வீரராமர்' (?) என்னும் இப்பெயர் கல்வெட்டுகளில் காணப்படுகிறது.

ஆனால், வெங்கடபதி அப்பரம்பரையின் கடைசி அரசர்.

இப்பரம்பரையிலுள்ள முந்திய அரசர்கள் 14 ஆம் நூற்றாண்டு இறுதிக்கு முன் தென்னிந்தியா முழுவதையும் வென்றார்கள். ஆனால், அவர்கள் சிலகாலம் வரை பாண்டிய வமிசத்தின் கடைசி உண்மையான அரசர்களைத் தொந்தரவு செய்யாது அவர்களே ஆட்சிபுரியும்படி விட்டுவிட்டார்கள். 16 ஆம் நூற்றாண்டில் - சுமார் 1540ல் அவர்கள் மதுரை, தஞ்சாவூர், செஞ்சி முதலிய இடங்களில் நாயக்கர்கள் என்று வழங்கப்பட்ட தங்கள் பிரதிநிதிகளை நியமித்தார்கள். 17 ஆம் நூற்றாண்டில் இந்த நாயக்கர்கள் சுதந்தர அரசர்களாய் ஆட்சி புரிந்தார்கள். தஞ்சாவூரை ஆண்ட கடைசி நாயக்க அரசர் வீரராகவர். வெள்ளித்தட்டு ஒன்றில் செதுக்கப்பட்ட சாசனத்தின் மூலம் நாகப்பட்டினத்தை அவர் டச்சுக்காரர்களுக்கு அளித்தார் என்பது தெரிகிறது. இச்சாசனம் இன்னும் பட்டேவியா மியூஸியத்தில் இருக்கிறது. சூறையாடுகின்ற இந்தத் தலைவர்கள் தங்களோடு அழைத்துவந்த கலகக்காரர்களின் மீது ஆதிகாலப் போர்ச்சுகீசியக் கிறிஸ்தவர்கள் அதிகமாகக் குற்றம் சாட்டி வந்தார்கள். இக்கலகக்காரர்கள் 'படகர்கள்' என்பப்பட்டார்கள். ஆனால், இவர்கள் 1544 வரை தென் கோடியை அடையவில்லை.

இந்த இரு சிறு பட்டியலுக்கும் பல சிறுசிறு வேற்றுமைகள் இருப்பதைக் காணலாம். மிக்க புகழுடன் அரசாட்சி புரிந்த அவ்வமிசத்து அரசர்களின் காலம் - உதாரணமாகக் கிருஷ்ணராய் காலம் - இரண்டு பட்டியலிலும் ஒன்றாய் இருக்கிறது. ஒவ்வொரு பட்டியலும் ஏறக்குறையச் சரியானது என்று அதனதன் ஆசிரியர்களால் கூறப்படுகிறது.

விசயநகர அரசர்கள் எப்பொழுதும் இராஜாக்கள் என்று வழங்கப்படாமல், இராயர்கள் என்றே வழங்கப்பட்டார்கள். இரண்டின் பொருளும் ஒன்றுதான்.[1] தமிழிலுள்ள இராயர் என்ற சொல்

திராவிடமொழிகளில் பன்மைப் பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது. எனினும், மரியாதைப் பெயராக ஒருமைக்கே அப்பெயர் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. துவார சமுத்திர அரசர்களின் மொழி கன்னடம். ஆனால், விசய நகரத்தைத் தோற்றுவித்தவர்கள் தெலுங்கு மொழி பேசுபவர்கள். ஆகையால், அவர்கள் இராஜ்யம் முழுவதிலும் தெலுங்கை ஆட்சிமொழியாக்கினார்கள். அவர்கள் தங்களை நிலைநிறுத்திக் கொண்ட நாட்டின் மாவட்டங்கள் மைசூரின் ஒரு பகுதியன்று. ஆனால், அது கன்னட நாட்டின் ஒரு பகுதி அல்லது கன்னட மொழி பேசப்படும் நாடு ஆகும். கன்னட மாவட்டத்தின் மத்தியில் புதிய தெலுங்கு அரசமரபு, தெலுங்கு நீதிமன்றம் ஒன்றை நிறுவியது. இது தெலுங்கு இராணுவத்தால் ஆதரிக்கப்பட்டு வந்தது. இங்கிருந்து தென் பகுதிகள் பலவற்றிலும் தொகுதி தொகுதியாகத் தெலுங்கர் குடியேறவும் படையெடுப்புகள் நிகழ்த்தவும் துணைபுரிந்தனர். விசயநகரத் தெலுங்கு தளகர்த்தர்களால் மதுரை பிடிக்கப்பட்டதும் திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி மாவட்டங்கள் முழுவதும் தெலுங்கு பாளையக்காரர்களும் குடியேற்ற மக்களும் நிறைந்ததன் காரணத்தை இந்நிகழ்ச்சி விளக்குகிறது. கிருஷ்ணராயருடைய ஆட்சிக்காலத்திலேதான் விசயநகரம் மிகுந்த முக்கியத்துவத்தை அடைந்தது. அவர் 1508 முதல் 1530 வரை ஆட்சி செலுத்தினார். அவருடைய ஆட்சிக் காலம் ஏறக்குறைய இந்த இருகால வரையறைக்குள்ளேதான் இருக்க வேண்டுமென்பது உறுதி. விசயநகர மாகாணம் கிருஷ்ணா நதிக்குத் தெற்கே ஏற்பட்ட இந்திய மாகாணங் களுக்கெல்லாம் மிக்க வலிமையுடையதாயிருந்தது. கிருஷ்ணராயர் மிக்க திறமையாளர்; மாகாண அரசர்களில் புகழ்வாய்ந்தவர்; மிக்க வெற்றி பெற்றவர் என்று நன்கு மதிக்கப்பட்டு வந்தார். அவர் தெலுங்கு இலக்கியத்தைப் பெரிதும் ஆதரித்தார் என்று புகழப்படுகின்றது. 1520 இல் மகம்மதியர்கள் கிருஷ்ணராயரால் கடுமையாகத் தோற்கடிக்கப்பட் டார்கள். அது காரணமாக அதிலிருந்து அதிக காலம் மகம்மதியரை அடிக்கடி அடக்கியே வந்தனர். அவர் காலத்திற்குப் பின் ராஜ்யம் பலவீனமடைய ஆரம்பித்தது. அவருக்குப் பிறகு புகழில் சிறந்தவர் நரசிம்மர் அல்லது வீரநரசிம்மராயர் என்பவர். இவர் கிருஷ்ணராயருக்கு முந்திய காலத்தில் ஆட்சி செய்தவர். இவர் ஆட்சி 1487இல் ஆரம்பித்தது. இவரே இவ்வரச பரம்பரையின் முதல் அரசர் என்றும்,

*1. விஜய நகர ராயர்கள் தென்னிந்தியாவில் மிக்க பலம் வாய்ந்த அர சர்களாய் இருந்தமையால், புதிய தமிழ் ஏற்பாட்டின் பொருளில் சீசர் என்ற சொல்லுக்குச் சரியான பதமே ராயர் என்பது (மொழி மாற்றத்தில் அரசியல் செல்வாக்கு காண்க - ந.ச.)*



சோழபாண்டிய நாடுகளை வெற்றி கண்டு நாட்டைப் பரப்பினார் என்றும் வரலாறு கூறுகிறது. சந்திரகிரி வேலூர்க் கோட்டைகள் இவரால் கட்டப்பட்டன என்று சொல்லப்படுகிறது. ஆயினும் சிலர் இக்கோட்டைகள் நரசிம்மருக்குப்பின் வந்த கிருஷ்ணராயரால் கட்டப்பட்டன என்று சொல்கின்றனர். இக்காலத்தில் இந்து இராஜ்யமாகிய விஜயநகரம் வலிமையடைய ஆரம்பித்தது. இதன் வளர்ச்சி, முகம்மதியப் படையெடுப்புகள் தெற்கே பரவாமல் தடுக்கக் கூடிய அரணாய் அமைந்தது. இந்த அரண் இரண்டு நூற்றாண்டுகள் வரை மிக்க பயனுடையதாய் இருந்தது. அதற்குப் பிறகு மகம்மதியர்களை அடக்கத்தக்க வலிமையை விசயநகர அரசு இழந்து விட்டது.

**விசயநகர அரசின் முடிவு**

நரசிம்மராயருடைய ஆட்சிக்காலத்தில் இந்தியாவில் முதன் முதல் போர்ச்சுகீசியர் வந்திறங்கினார்கள். 1498 இல் அவர்கள் கள்ளிக்கோட்டையில் வந்து இறங்கினார்கள். 1311 இல் நாம் முன்பே பார்த்ததுபோல மலபாரின் அதாவது சோழ மண்டலக்கரையின் பாண்டிய சோழ அரசர்கள் கன்னட அரசனாகிய துவாரசமுத்திர அரசனுக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்பதை மகம்மதியர்கள் அறிந்தார்கள். போர்ச்சுகீசியர் வந்த காலத்தில் உண்மையில் சுதந்தர நாடாய் இருந்தது, விஜய நகர அரசு ஒன்றுதான். அவர்கள் சோழமண்டலக் கரையைக் ‘கோரமண்டல் கோஸ்டு’ என்று வழங்கினார்கள். இராயர்களின் ராஜ்யத்தை ஐந்தாவது மாகாணமென விவரித்தனர். இந்த மாவட்டம் கொல்லத்திலிருந்து (கொயிலான்) ஒரிஸ்ஸா வரை பரவி இருந்ததென எண்ணினார்கள். அவர்களுக்கு முந்திய அராபியர்களால் கூறப்பட்ட மபாரைவிட இது பரப்பளவில் பெரியதாய் இருந்தது. ஆதிகாலப் போர்ச்சுகீசியர்கள் தென்னிந்தியா முழுவதையும் ‘நரசிங்க ராஜ்யம்’ என்று குறிப்பிட்டார்கள்; அக்காலத்தில் அரச பீடத்திலிருந்த அரசராகிய புகழ்வாய்ந்த இராயருடைய பெயரை வைத்தே வழங்கினார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

1576இல் பார்போஸா என்பவர் பின்வருமாறு கூறுகிறார்:

‘இந்த ஆற்றுக்கு அப்பாலிருந்து நரசிங்க அரசு ஆரம்பிக்கிறது. இது ஐந்து மிகப் பெரிய மாகாணங்களாலாகியது. ஒவ்வொரு மாகாணத்திலும் அதனதன் சொந்த மொழி வழக்கிலிருந்தது. முதல் மாகாணம் மலபார் கரை ஓரமாய் அமைந்திருந்தது. இது துளு நாடு அல்லது தென் கன்னடத்தின் புதிய மாகாணம் என்று வழங்கப்பட்டது.

இதன் பொருள் துளுவநாடு என்பது. மற்றொன்று உள்நாட்டில் அமைந்திருந்தது. மற்றொன்றின் பெயர் தெலிங்கம் என்பது; இது ஒரிஸ்ஸா ராஜ்யத்துடன் இணைந்திருந்தது. மற்றொன்று கன்னடம், அதில் பிரசித்திபெற்ற பிஸ்நாகா நகரம் இருக்கிறது. அதற்கு அப்பால் தமிழ் மொழி பேசும் சோழமண்டல ராஜ்யம் இருந்தது' (கர்னல் யூல், டாக்டர் பர்னல் என்னும் இருவரின் India in Antiquary for June 1879).

பார்போஸாவின் மூன்று செய்திகளிலிருந்து இந்த வாசகத்தின் குறிப்பு எடுக்கப்பட்டதாக எழுத்தாளர்கள் கூறுகிறார்கள். விசயநகர இராஜ்யம் சிலசமயங்களில் கர்நாடகம் என்று வழங்கப்படுகிறது. சில சமயங்களில் 'கர்நாடிக்கு' என்றும் மற்றும் சில சமயங்களில் சிதைந்து 'கனரா' என்றும் வழங்கப்பட்டது.

மகம்மதியர்களின் பலம் பெருகி வந்த காலத்தில் இந்துக்களின் அரசுகள் தங்கள் சந்தர்ப்பங்களைத் தீவழிப்படுத்தி, தங்கள் ஆற்றலை எல்லாம் உள்நாட்டுப் போர்களிலே செலவழித்தன. நாளடைவில் 1564இல் விசயநகரத்தை ஆண்டு வந்த இராமராயர், மிக்க இறுமாப்புடையவராயிருந்தார். அதனால், வடக்கே இருந்த மகம்மதிய அதிகாரிகள் ஆத்திரங் கொண்டார்கள்; சண்டை மூண்டது. இராமராயர் தோற்கடிக்கப்பட்டு, அந்த இளவரசர்களின் சதியால் கொல்லப்பட்டார். அவர் வீழ்ச்சியடைந்த பெரும்போர் 1565 ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் 25 ஆம் தேதி தலைக்கோட்டையில் நடைபெற்றது. அதேசமயத்தில் விசயநகரமும் சிறிதும் இரக்கமின்றி நாசமாக்கப்பட்டது. தமிழ்நாட்டிலுள்ள தென்மாவட்டங்களில் ஏராளமான தெலுங்கு குடியேற்ற மக்கள் வந்து புகுந்தது அச்சமயத்திலேதான் என்று நான் ஆண்டைக் குறிப்பிட்டிருக்கிறேன். தமிழ் மாவட்டங்களில் தெலுங்கு மரபுவழியைச் சேர்ந்த மக்கள் குறைந்தது ஒரு கோடி இருக்கலாம். இத்தெலுங்கர்களின் மூதாதைகள் முகம்மதியர்களால் மிகவும் துன்புறுத்தப்பட்டார்கள். அத்தொல்லையினின்றும் தப்புவதற்காக அம்மக்கள் தெலுங்கு அரசர்களால் ஆளப்பட்டு வந்த மதுரை, தஞ்சாவூர் முதலிய இடங்களுக்குத் தற்காப்பிற்காகக் கூட்டங்கூட்டமாய் வந்து சேர்ந்தார்கள்.

இந்தக் குடியேற்ற மக்கள் பொதுவாக எப்படித் தோன்றி வளர்ந்தார்கள் என்பதற்குத் தக்க சான்று திருநெல்வேலியிலுள்ள எட்டையபுரத்து ஜமீன்தார்கள் குடும்பத்தில் பரம்பரையாகப் பாதுகாக்கப்பட்டு வரும் குறிப்புகளேயாகும். உள்ளூர்க் குடும்பச் சரித்திரத்திலடங்கியுள்ள செய்திகளின் சுருக்கம் வருமாறு:



விரயநகர அரசரான அன்னதேவ ராஜர் மகம்மது அல்லாவுதீனால் முறியடிக்கப்பட்டதும், எட்டையபுரம் ஜமீன்தார்களின் மூதாதையார் சந்திரகிரிக்குத் தப்பி ஓடினார். அவருடன் ஆயுதமணிந்த உறவினர் அறுபத்துநால்வரும், ஆயுதமணிந்த முந்நூறு வீரர்களும், ஆயிரம் வேலைக்காரர்களும் மற்றும் சில கணக்குப்பிள்ளைகளும், மற்றவர்களும் சேர்ந்து சென்றார்கள். அவர்கள் மதுரையை ஆண்ட அதிவீர பராக்கிரம பாண்டிய ராஜாவிடம் அகதிகளாய்ச் சென்று அடைந்தார்கள். அதிவீரபராக்கிரம பாண்டியர் அவர்களைக் கள்ளர் நாட்டில் ஏற்பட்ட கலகங்களை அடக்க நியமித்தார். அதற்குப் பிரதிநிதியாக அவர்களுடைய வாழ்க்கைக்குத் தேவையான கிராமங்கள் கொடுக்க இசைந்தார். இச்சம்பவம் 1423க்கும் 1443க்குமிடையே நடந்தது என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. காலப்போக்கில் அவர்கள் தென்பாகத்தில் குடியேறித் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள பல கிராமங்களைக் கைப்பற்றினார்கள். அவ்வாறு கைப்பற்றிய கிராமங்களுள் ஒன்றிற்கு எட்டையபுரம் என்று பெயரிட்டு அதைத் தங்களுடைய தலைநகராக்கிக் கொண்டார்கள்.

இக்குறிப்புகளில் வரலாற்று நிகழ்ச்சி மாறுபாடுகள் இருக்கின்றன. விசயநகரம் அல்லாவுதீனால் கைப்பற்றப்படவில்லை. 1311 இல் அல்லாவுதீனுடைய தளகர்த்தனான மாலிக்காபூரினால் துவாரசமுத்திரம் கைப்பற்றப்பட்ட நிகழ்ச்சியையே அது குறிக்கலாமென எண்ணுகிறேன். விஜயநகர அரசர்களுள் கடைசி அரசர் அன்னதேவராஜர் அல்லர். ஆனால், 1656 இல் தட்சிணை மகம்மதிய இளவரசர்களால் முறியடிக்கப்பட்டுக் கொல்லப்பட்ட இராமராஜரே இவ்வமிசத்தின் கடைசி அரசர்.

1645இல் மகம்மதியர்கள் சந்திரகிரியைக் கைப்பற்றினார்கள். முக்கிய நிகழ்ச்சிகளில் இருப்பதுபோலக் கதைகளிலிருந்து பொதுவான குறிப்புகளையே சரியென்று ஒப்புக் கொள்ள இயலும்.

விஜயநகர அரசு அழிந்ததே தவிர, அதன் அரச மரபு முழுவதும் அழிக்கப்படவில்லை. அக்குடும்பத்தினருக்கு வேறோர் இடத்தில் புதிதாகத் தங்கள் ஆதிக்கத்தை நிறுவத்தக்க வலிமை இருந்தது. ஆகையினால், பெனு கொண்டாவுக்கு அரண் கட்டி அதை ஒரு மலைக்கோட்டையாக மாற்றினார்கள். இந்தப் பெனுகொண்டா விஜயநகரத்தைப் போலவே புதிய பல்லாரி மாவட்டத்தில் பெங்களூருக்கு வடக்கே தொண்ணூற்று ஏழு மைலில் இருக்கும் உயர்ந்த மலையாகும். அடிவாரத்தில் பெரிய அரணுடன் ஒரு நகரத்தை ஏற்படுத்தினார்கள். அங்கு அவ்வரசர்கள் ஒரு நூற்றாண்டு வரை

அதிகாரத்துடன் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் கிருஷ்ணாநதிக்குத் தெற்கே முக்கியமாக நாயக்கர்களால் ஆளப்பட்டுவந்த மதுரை தஞ்சாவூர் முதலிய இடங்கள் உட்பட எல்லா இடங்களிலும் தங்கள் மூதாதையர்களின் பரம்பரை உரிமை உண்டு என நம்பிவந்ததால், ஆண்டு வந்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு பல பாளையக்காரர்கள் சுதந்தர அரசர்களாய் மாறினார்கள். அவர்கள் விஜயநகர அரச வாரிசின் எஞ்சியவர்களாகப் பெயரளவில் சக்தியிழந்தவர்களாய் இருந்தார்கள். புதிய சுதந்தர அரசர்களுள் மிக முக்கியமானவர் மைசூர் அரசர். எஞ்சிய பழைய அரச வாரிசுப் பிரதிநிதிகளுள் ஒருவர் சந்திரகிரி அரசர். 1640 ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் 1 ஆம் நாள் ஆங்கிலேயர்கள் இந்தச் சந்திரகிரி அரசர்களுள் கடைசி அரசரிடமிருந்து ‘மதராஸ்’ நகர நிலப்பரப்பை மானியமாகப் பெற்றார்கள். இந்த அரசருடைய தளகர்த்தன் பெயர் சென்னப்பன் என்பது. அந்த நகர மக்களால் அந்நகரம் சென்னப்பன் பட்டணம் (சென்னைப் பட்டணம்) என்று வழங்கப்பட்டது. 1645இல் சந்திரகிரி அரச பரம்பரை இறுதியாக முகம்மதியர்களால் அழிக்கப்பட்டது.

தென்னிந்தியாவில் ஆதிக்கம் செலுத்திய பலம்வாய்ந்த அரச பரம்பரைகளின் சரித்திரங்களின் குறிப்புகள் தெளிவாய் இருந்தபோதிலும் பல செய்திகள் ஐயமாயுள்ளன. 11 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மதுரை திருநெல்வேலி முதலிய இடங்களில் ஆட்சிபுரிந்துவந்த பாண்டியர்களே தென்னிந்தியாவில் பல இடங்களில் வலிமையுள்ளவர்களாயிருந்தார்கள். 11 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்த சோழர்கள் முதன்மையிடத்தை அடைந்தார்கள். அவர்கள் நேரடியாகவும் பிரதிநிதிகள் மூலமாகவும் இரண்டு நூற்றாண்டுகள் வரை ஆட்சிபுரிந்தார்கள். அவர்கள் திருவாங்கூரின் தமிழ்ப் பகுதி அல்லது தென்பகுதியும் உட்பட ஒரிஸ்ஸாவிலிருந்து கன்னியாகுமரிவரை அமைந்துள்ள முழுச் சோழமண்டலக் கரையை ஆண்டுவந்தார்கள். சோழர்கள் அல்லது சோழபாண்டியர்கள் தென்பகுதி முழுவதையும் புகழோடு ஆட்சிபுரிந்த இறுதிக்காலத்தில் துவாரசமுத்திரத்தில் பல்லால அரசவமித்தினர் நாட்டைக் கைப்பற்றினர். ஆனால், அவர்கள் எத்தகைய அதிகாரத்தினால் அவ்வாறு கைப்பற்றினார்கள் - அல்லது அடக்கினார்கள் - என்பது சந்தேகமாயிருந்தது. 14 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியின் ஆரம்பத்தில் தென்பாகம் சிறிதுகாலம் வரை மகம்மதியர்கள் கைவசமிருந்தது. பின்பு அரசாட்சியின் அதிகாரம் முழுவதும் விசயநகர அரசர்கள் கைவசமாயின. இவர்கள் பல்லால அரசர்கள். சோழ அரசர்கள் அடைந்திருந்த உடைமைகளையும் பலத்தையும்விடச் சிறந்த



பலமுடையவர்களாய் ஆட்சி புரிந்தார்கள். இவர்கள் ஏறக்குறைய இரண்டு நூற்றாண்டுகள் தங்களுக்குரிய அதிகாரத்தைச் செலுத்தி வந்தார்கள். 16 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வேறு எந்த அரசாட்சியும் தென்னிந்தியாவில் உன்னதநிலை அடைந்திருந்ததாகச் சொல்ல இயலாது. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை ஆர்க்காட்டு நவாபு தென்னிந்தியாவின் ஆட்சியில் பங்கெடுத்துக் கொள்ளும்வரை வேறு எவரும் புகழடையவில்லை.

★

# இயல் - 3

## கி.பி. 1365 - 1731

## பிற்காலப் பாண்டியர் ஆட்சியும் நாயக்கர் அரசும்

### இரண்டாம் முறையாக அரியணை ஏறிய பாண்டிய அரசர்கள்

முகம்மதிய ஆட்சியைப் புறங்கண்டபின் 'பாண்டிய மன்னர்' என்று தங்களை வழங்கிக்கொண்ட அரச மரபினர் மீண்டும் தமது பழமையான அரசுரிமையை ஏற்கலாயினர். 1311 இல் முகம்மதியர் ஆட்சி தொடங்கியது. 1348 இல் அது உன்னத நிலையை அடைந்திருந்தது என்று இபுபடுடா என்பவர் கூறுகிறார். ஆனால், புதிய பாண்டிய அரச மரபைச் சார்ந்த ஒருவன் ஒருவேளை அம்மரபின் முதலரசனாகவும் இருந்திருக்கக் கூடியவன் - காலத்துக் கல்வெட்டு ஒன்றைக் கோட்டாற்றில் நான் கண்டேன் (பாதிரியாரின் ஆராய்ச்சி உழைப்பை உன்னுக. ந.ச.). இக்கோட்டாறு முன்பு பாண்டி நாட்டின் ஒரு பகுதியாயிருந்தது. இப்போது தென் திருவிதாங்கூரிலிருக்கின்றது. கி.பி.1370க்குச் சரியான சக ஆண்டு பராக்கிரம பாண்டிதேவன் ஆட்சியின் ஐந்தாவது ஆண்டு என்று கூறப்படுகிறது. எனவே, பராக்கிரம பாண்டியன் 1365 இல் பட்டத்திற்கு வந்திருக்க வேண்டும். புதிய அரசமரபின் ஆட்சி தொடங்கிய காலத்தை இச்சம்பவம் சரியாகக் கணக்கிட உதவுகிறது.

மகம்மதியர்களை எதிர்க்கத் தேவையான உதவி எதையும் பாண்டியர்கள் பெற்றார்களா என்பது உறுதியாகத் தெரியவில்லை. ஆனால், அவர்கள் பெற்றார்கள் என்று கருதலாம். அவர்கள் தனித்திருந்து போரிட்டு விடுதலை அடைந்திருக்க இயலாது என்பது முடியாததன்று. பரம்பரை வரலாறு கன்னட தளகர்த்தர்களிடமிருந்து உதவி பெற்றதாகக் குறிப்பிடுகிறது. திரு. டெய்லர் என்பவரால் வெளியிடப்பட்டுள்ள வரலாற்றுச் சார்புடைய ஆவணங்கள் ஒன்றில் கனரிஸ் அல்லது கன்னட தளகர்த்தனாகிய மைசூர்த் தளகர்த்தரான கம்பண உடையார் மதுரையை முற்றுகையிட்டு முகம்மதியர்களை



அடக்கினாரென்பது கூறப்படுகிறது. Mss என்ற இதழில் இந்தத் தளகர்த்தர் முதல் விஜயநகர இராயராகிய புக்கராயரின் பேராளன் (பிரதிநிதி) என்பது கூறப்படுகிறது. 1350 இல் புக்கர் விஜயநகர அரசர் ஆனார். துவார சமுத்திரக் கன்னட அரசர்களுக்கு முந்திய கடைசி அரசர்களால் ஆளப்பட்டு வந்த பல மாகாணங்களின் தனி உரிமையில் ஒரு பகுதியைப் புதிய விஜயநகர அரசிற்காக உரிமை கொண்டாடி புக்கர் கைக்கொள்ள நினைத்தது சரி என்று தோன்றுகிறது. ஆகையால் இக்குறிப்புகளிலிருந்து விஜயநகர அரசர்களிடமிருந்து உதவிபெற்ற போதிலும் இரண்டாவது வரிசை பாண்டிய அரசமரபு முகம்மதியர்களை வளரவிடாது தடுத்தது என்று துணிவுடன் முடிவு கூறலாம். முஜகிட் ஷா என்பவர் 1374 இல் விஜயநகரம் கன்னியாகுமரிக்கு இடைப்பட்ட நாடுகளைச் சூறையாடி மாலிக்காபூரைப் போல் இராமேசுவரத்திற்கு முன்னேறினார். இது நடக்கக் கூடியதாகத் தோன்றவில்லை. அப்படியே அவர் செய்திருந்தாலும் அந்த முற்றுகை மிகவும் அழிவு செய்வதாய் இருந்திருக்க வேண்டும். ஆனால், அப்பேரழிவிற்கு அறிகுறியாக எந்தத் தடயமும் கிடைக்கவில்லை.

பாண்டிய அரசர்களின் இரண்டாவது வரிசைப் பட்டியலைப் போல் எதையும் தயாரிக்க என்னால் இயலவில்லை. நல்வினைப் பயனாகக் கல்வெட்டுகளை எல்லாம் அரசனின் ஆட்சிக்கால ஆண்டில்மட்டும் குறிப்பிடாது சக அல்லது சில ஒப்புக்கொள்ளப்பட்ட நூற்றாண்டளவில் குறிப்பிடும் பழக்கம் வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் தெலுங்கு கன்னட நாடுகளிலும் இருந்து வந்திருக்கிறது. ஆனால், தீவினைப் பயனாக இப்பழக்கம் பழைய பாண்டி நாட்டில் ஏற்படவில்லை. ஆகையால், நான் சேகரித்த இக்கால வரையறைக்குட்பட்ட சில குறிப்புகளும் வரலாற்று வழியாக உண்மையென்று உணர்த்துவதற்கு ஏதுவில்லாமற் போயிற்று. அவற்றுள் ஒன்றுமட்டும் - நாம் ஏற்கெனவே கூறியிருப்பது போல - தென் திருவிதாங்கூரிலிருக்கிறது. அக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள அரசனே அடுத்து வந்த அரசன், பொன்னன் பெருமாள் பராக்கிரம பாண்டியன். அவன் ஆட்சிக்கு வருவதற்குமுன் அறுபது ஆண்டு இடைவெளி நிரப்பப்படாமலே இருக்கிறது. அவனது ஆட்சி சக ஆண்டிற்குச் சரியான கி.பி.1431 ஆகும். தென்காசிக் கோவிலுக்கு எதிரேயுள்ள தூணிலிருக்கும் கல்வெட்டில் இச்செய்தியை நான் கண்டேன் (எப்படி அந்நாளில் கால்டுவெல் செய்த ஆராய்ச்சி! இந்நாளில் நாம் எதற்குத் தூணைப் பயன்படுத்துகிறோம்? - ந.ச.) பொன்னம்பெருமாள் பராக்கிரம பாண்டியனைப் பற்றிய அக்கல்வெட்டு ஒருவிதப் பேரறிவிப்பாகும். ஏனெனில், இக்கோயில் பதினேழு

ஆண்டுகளுகுள் கட்டிமுடிக்கப்பட்டது. இவ்வளவு குறைந்த கால அளவில் அவ்வேலையை மனிதர்கள் செய்திருக்க இயலாது. அது தெய்விக வேலையே ஆகும் என்னும் அளவிற்கு அக்கல்வெட்டு ஒரு பேரறிவிப்பாய் அமைந்துள்ளது. தென்காசி மக்களால் கூறப்படும் பழமரபுச் செய்தியிலிருந்து இடைவெளியின் பாதிப்பகுதியை நிரப்பலாம். அதாவது, இக்கோவிலைக் கட்டிய பொன்னம்பெருமாள் பராக்கிரம பாண்டியன் என்பவன் தன் தகப்பனாகிய காசிகண்ட பராக்கிரம பாண்டியனுக்குப் பின் அரசுக்கு வந்தான். அவன் காசிக்குச் சென்று வந்தமையால் காசிகண்ட பராக்கிரம பாண்டியன் எனப் பெயர் பெற்றான். அவனையடுத்து வந்த அரசன் வீர பாண்டியன். தாமிரபரணியின் வடகரையிலுள்ள திருவைகுண்டத்தில் அவன் காலத்து இரண்டு கல்வெட்டுகளை நான் கண்டேன். அவை இரண்டும் வெவ்வேறு காலத்தவையாயினும், அவனுடைய ஆட்சிக்காலம் 1437 இல் ஆரம்பித்தது என்னும் செய்திக்கு இரண்டிலும் சான்று இருக்கிறது. அவனுக்கு முந்தியவர்களின் ஆட்சிக்காலம் மிகக் குறுகிய காலமாயிருந்தது. நாம் முன் பார்த்ததுபோல் அது 1431 இல் தொடங்கி, 1437இல் முடிவடைந்தது. கல்வெட்டுகளில் குறிப்பிடப்படும் அடுத்த அரசன், மற்றொரு வீரபாண்டியன். மெக்கன்ஸி சுவடியின்படி, 1475 இல் அவன் ஆட்சி தொடங்கியது. 1490 இல் அவன் அரசு செலுத்தியது ஒரு கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. குற்றாலம் கோவிலிலுள்ள கல்வெட்டில் நான் கண்ட அடுத்த அரசன் பெயரும் பராக்கிரம பாண்டியன் என்பது. அவன் 1516 இல் ஆட்சி தொடங்கினான். இடைவெளியின்றி அடுத்தாற்போலப் பட்டத்திற்கு வந்தவன் விக்கிரம பாண்டியன். 1543 இல் அவன் ஆட்சி தொடங்கியது. அவனை அடுத்து உடனே பட்டத்திற்கு வந்தவன் வல்லபதேவன். அவன் அதிவீரராம பாண்டியன் என்றும் வழங்கப்பட்டான். குற்றாலத்திலுள்ள கல்வெட்டொன்றின்படி அவன் ஆட்சி 1565 இல் ஆரம்பித்தது. அவனது நாற்பதாவது ஆண்டே - அதாவது 1605 ஆம் ஆண்டே கல்வெட்டில் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. தென்காசியிலுள்ள அவனுடைய மற்றொரு கல்வெட்டு 1562 இல் அவன் ஆட்சி தொடங்கியதாகக் கூறுகிறது. அந்தக் கல்வெட்டிலிருந்து அவன் அதிவீரராமபாண்டியன் என்றுதான் வழங்கப்படுகிறானே தவிர, வல்லபதேவன் என்ற பெயர் அவனுக்கு இல்லை என்பது தெரிகிறது. தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒரு மடத்தைச் சேர்ந்த செப்புப் பட்டயம் ஒன்றின் படி அதிவீரராமன் 1610 இல் இருந்திருக்க வேண்டுமென டாக்டர் பர்னல் தெரிவிக்கிறார். இச்செய்தியின்படி அவன் ஆட்சிக்காலம் அதிகமாக நீடிக்கிறது. ஆனால், அதில் ஒன்றும் ஐயமில்லை. அதே



பட்டயம் அவனுக்குப்பின் சுந்தர பாண்டியன் பட்டத்திற்கு வந்ததாகக் கூறுகிறது. சுந்தர பாண்டியனின் ஆட்சிக்குப்பின் முப்பதாவது ஆண்டு தேதியிட்ட செப்புப் பட்டயம் ஒன்று டாக்டர் பர்னலிடமிருந்தது. இது கி.பி.1623 ஆம் ஆண்டினது. திருநெல்வேலியிலேயே நான் கண்ட கல்வெட்டுகளால் இதுவரை கிடைத்த செய்திகளிலிருந்து அதிவீரராமன் அந்த மரபின் கடைசி அரசன் என்பது தெரிகிறது. எப்படியாயினும், அவன் கலைஞன்; பண்பாடுடையவன்; புகழ்பெற்ற கவிஞனும் ஆவன். அவனுடைய கவிகள் அவனுக்கு அமரத்தன்மை அளித்தன என்று கூறலாம்.

புகழ்பெற்ற செவிவழிக் கதைகளும் வாக்குமூலங்களும் பழைய வரலாற்றுச் செய்திகளும் கல்வெட்டுகளிலிருந்து தொகுக்கப்படும் செய்திகளுடன் ஒப்பிடப்படும்பொழுது அவை நம்பக்கூடியனவாய் இல்லை (இப்படி கால்டுவெல் ஒரே போடாகப் போடுவது தவறு என்பதை இன்று அறியாதார் இல்லை! - ந.ச.). நில அளவையாளராய் இருந்த டார்ண்புல் என்பவர் கர்னல் மக்கன்சிக்காக 1820 இல் விசாரித்தறிந்து கொடுக்கின்ற செய்திகளோடு மேலே கொடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுச் செய்திகளை ஓர் உதாரணமாக எடுத்துக் கூறலாம். பாளையங்கோட்டையில் 1877 இல் அச்சிடப்பட்ட அவருடைய திருநெல்வேலி நிலவியல்-புள்ளியியல் குறிப்பேடு (Geographical and statistical - Meneoir of Tirunevelly, என்னும் ஆங்கிலப் புத்தகத்தில் 25 ஆம் பக்கத்தைப் பார்க்க.) உண்மையில் சுமார் 1823 இல் முடிக்கப்பட்ட சுவையான இந்த நினைவுகள் இந்தியக் காரியாலயத்திலிருந்து ஆர்.கே. பக்கிள் என்ற முன்னாள் திருநெல்வேலிக் கலெக்டரால் ஐம்பதுக்கும் மேற்பட்ட ஆண்டுகளாகக் கவனிப்பாரற்றுக் கிடந்த அப்புத்தகம் கண்டெடுக்கப்பட்டது (எப்படி! - ந.ச.). தென்காசியின் நகரம், பழைய கோவில், பழமையான கோட்டை முதலியவைகளைப்பற்றிக் கூறும் குறிப்புகளில் டாக்டர் பர்னல் இந்த இடத்துடன் நேரடியாகவோ பேராளர்கள் வாயிலாகவோ தொடர்பு கொண்டிருந்த பாண்டிய அரசர் பலரின் பெயர்களை அவர்கள் காலத்துடன் சேர்த்துக் குறித்திருக்கிறார். இக்கணக்கின்படி அதிவீரராமபாண்டியன் கி.பி.199 இல் ஆட்சி தொடங்கினான் என்பது குறிக்கப்பட்டுள்ளது. ஆனால், அவன் காலத்துத் தமிழ்க் கல்வெட்டுகள் அவன் ஆட்சி 1562 இல் தொடங்கியது என்று கூறுகின்றன. குற்றாலக் கோவிலிலுள்ள அதேபோன்ற ஒரு வடமொழிக் கல்வெட்டு சுமார் 1565 இல் அவன் ஆட்சி தொடங்கியதாகக் கூறுகிறது. அதேபோல், தன் ஆட்சிக் காலத்தில் தென்காசிக் கோவில் கட்டிய பொன்னம் பெருமாள் பராக்கிரம பாண்டியன் ஆட்சி 1309 இல் தொடங்கியதாக டாக்டர்

டார்ன்புல்லின் அறிவிப்புகள் கூறுகின்றன. அக்கோவிலின் எதிரிலுள்ள முன்னமே குறிப்பிட்ட தூண் கல்வெட்டு அவன் ஆட்சி 1431 இல் ஆரம்பித்ததாகக் கூறுகிறது.

பின் வந்த அந்தப் பாண்டிய மரபு அரசர்களின் நீண்ட ஆட்சிக்காலம் முழுவதும் விஜயநகர அரசர்கள் தங்கள் அதிகாரத்தை அதிகமாகச் செலுத்தி வந்தார்கள் என்பது தெரிகிறது. ஆனால், அவர்கள் பாண்டிய அரசர்களின் உள்நாட்டுச் செயல்களில் தலையிட்டதாகத் தெரியவில்லை என்று நான் நினைக்கிறேன். அவ்வப்போது படை உதவியும் கப்பத் தொகையும் பெற்றுக் கொள்வதுடன் மனநிறைவு அடைந்திருந்தனர். அதற்குப் பதிலாக அவ்வரசர்கள் அயல் நாட்டுப் படையெடுப்புகளிலிருந்து அவர்கள் அதிகாரத்திற்குட்பட்ட இடங்களைக் காத்து வந்தார்கள். அவர்கள் தங்களுக்குள் மனம்போனவாறு சண்டை செய்து காலங்கழிக்காமல் அடிக்கடி கண்காணிக்கப்பட்டு வந்தார்கள்.

**மதுரை நாயக்கர்கள்**

நெல்சனின் மதுரை மானுவலில் நாயக்கர்களின் சரித்திரம் முழுமையும் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் அதில் திருநெல்வேலியைப் பற்றிய குறிப்புகள் மிகக் குறைவாய் இருக்கின்றன. அதில் கூறப்பட்டுள்ள செய்திகளில் உள்நாட்டார் செவிவழிச் செய்தியை நம்பி எழுதப்பட்டவைகளும் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டவைகளும் எவ்வளவு தூரம் உண்மையான செய்திகள் என்பது ஐயப்பாட்டுக்குரியதுதான். அதில் கூறப்பட்டுள்ள நாயக்கர் வரலாற்றின் முக்கியச் செய்திகள் உண்மையானவை என்பதில் ஐயமில்லை. அவை சரி என்று ஒப்புக் கொள்ளவும் தகுதியுடையவை. ஆனால் உண்மையாக நாம் நம்பக்கூடிய செய்திகளும் ஆண்டுகளும் ரோமன் கத்தோலிக்க மதக்குருக்களால் மதத் தலைவர்களுக்கு எழுதப்பட்ட கடிதங்களினால் உறுதிப்படுகின்றன என்று எனக்குத் தோன்றுகிறது. அக்காலத்தில் எழுதப்பட்ட இக்கடிதங்களுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டுள்ளோம். இந்தச் செய்தி மூலம் 1600க்கு முந்திய காலத்திற்குரியவற்றைக் குறிப்பிடவில்லை. எடுத்துக்காட்டாக, விசுவநாத நாயக்கரின் ஆட்சியைப் பற்றிய செய்திகளை எல்லாம் நெல்சன் டெய்லரின் வரலாற்றுக் கையெழுத்துப்படிகளிலிருந்தும் மக்கன்ஸி தொகுத்தவைகளிலிருந்தும் எடுக்கப்பட்டிருப்பதால் வழிவழிக் கதை வரலாற்றைவிட இவை மோசமானவை என்று எனக்குத் தோன்றுகிறது. இந்நூற்றாண்டின் வரலாற்றில் ஆரம்பத்திலிருந்து ஏறத்தாழப் பாதிக்கு மேற்பட்ட காலம்வரை விவரிக்கப்படும் நாயக்கர்களைப் பற்றிய



செய்திகளில் உண்மை பாதி, கற்பனை பாதி. அத்தகையவர்களின் பண்பு நலங்களைப் பற்றியும் ஆங்கிலக் கலெக்டரின் குறிக்கோள்களைப் பற்றியும் விவரிக்கப்படும் செய்திகள் முழுக் கற்பனைக் கதையைவிடச் சிறிது நம்பத் தக்கன என்று எண்ணுகிறேன் (அறிவியல் வளர்ந்தால் கற்பனை குறையும் அன்றோ? - ந.ச.).

நாயக்கர்களின் ஆட்சி அறிவிப்புகள் பொதுவாக 1559 இல் ஏற்பட்டதாகக் கூறப்படுகின்றன. ஆனால் அத்தேதி மிக பிற்காலத்து உள்நாட்டு ஆதாரங்களைச் சார்ந்தே இருக்கிறது. அந்தத் தேதியில் விஜயநகர ஆதிக்கம் பெரிதும் பலமிழந்து விட்டதால் இதற்கு முன்பாகவே நாயக்கர்கள் மதுரை நிகழ்ச்சிகளில் குறுக்கிட்ட சம்பவம் ஏற்பட்டிருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. அதாவது, அவை சுமார் 1559 இல் கிருஷ்ணராயர் ஆட்சிக் காலத்தில் - நடைபெற்றிருக்க வேண்டும். 1553 இல் எழுதப்பட்ட புகழ்வாய்ந்த பிரான்ஸில் சேவியரின் கடிதங்களினின்றும் படகர்களாகிய வடுகர்கள் அல்லது நாயக்கர்கள் உள்நாட்டுப் பகுதிகளை எல்லாம் ஏற்கனெவே வசப்படுத்திவிட்டார்கள் என்பதையும் கன்னியாகுமாரிவரை தென்கடற்கரை முழுவதையும் கைப்பற்ற அவர்கள் முயன்றார்கள் என்பதையும் தவிர வேறு எந்தச் செய்தியும் தெளிவாய் இல்லை! இந்த நிலையை ஒப்புக் கொண்டால், இருபது ஆண்டுகள்வரை கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்கு முன்வரை அது 1520 வரை நடந்த நிகழ்ச்சிகளைத் தேட வேண்டுவது இன்றியமையாததாகும்.

தெற்கே ஆட்சி புரிந்து வந்த பாண்டிய அரசன் தன் எதிரியை அடக்க விஜயநகர அரசனின் உதவியை நாடியதால் அவன் முதன்முதல் தென்னிந்திய நிகழ்ச்சிகளில் தலையிட்டான். தஞ்சாவூர் அரசன் பாண்டியனை வென்று அவன் நாட்டைக் கைப்பற்றினான். அதனால், சுந்தரபாண்டியன் முன்பு டில்லிக்கு ஓடியதுபோலப் பாண்டியன் விஜயநகரத்திற்கு ஓடிச் சரண் புகுந்தான். தஞ்சாவூர் அரசன் பெயர் வீரசேகரன். மதுரை அரசன் பெயர் சந்திரசேகரன். இந்தப் பெயர்களை நான் உண்மையானவையல்ல என்று தான் நினைக்கிறேன். இந்த வேண்டுகோளுக்கிணங்கி விஜயநகர அரசன் தன்னுடைய தளகர்த்தனான நாகம்ம நாயக்கனைக் கொண்டு சோழ அரசனைத் துரத்திவிட்டுப் பாண்டியனுக்கு அவன் மூதாதையர்களின் அரசுரிமையை வழங்கினான். இங்குக் கூறப்பட்டிருப்பதுபோல் உண்மையில் நடந்திருக்குமானால், இங்குக் குறிக்கப்பட்டிருக்கும் பாண்டிய அரசன் பராக்கிரம பாண்டியனாய் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், அவனே 1516 இல் ஆட்சியைத் தொடங்கினவன்.

நாகம்ம நாயக்கன் தானே முழு உரிமை அரசனென்று அறிக்கை செய்தான் என்றும், அதனால் அவன் மகனாகிய விசுவநாதநாயக்கன் தன் தகப்பனை அடக்கிவரச் சென்றானென்றும் குறிப்பிடப்படுகிறது. இந்த அரச நன்றிக்கு மெச்சி விசுவநாதனுக்கு விஜயநகர அரசின் மேற்பார்வையில் மதுரைக் கவர்னர் அல்லது லெப்டினண்டு பதவி அளிக்கப்பட்டது. ஆனால், அவன் தன் தந்தையைப் போல அரசனை எதிர்த்துத் தன்னைச் சுதந்தர அரசனாக்கிக் கொள்ளவில்லை. ஆனால், அரச சலுகையினால் கொடுக்கப்பட்ட அதிகாரமும் பதவியும் விசுவனாதனை முழு உரிமை அரசனாக்கிவிட்டதுமின்றிப் பதினைந்து தலைமுறைவரை அரசுரிமை அதிகாரமும் கிடைக்கச் செய்தது. விசுவநாத நாயக்கன் வலிமையும் அரசியல் அறிவும் நிரம்பப் பெற்றவன். அவனது ஆற்றலினால் தான் மதுரை முற்றுகையிடப்பட்டதென்று கூறப்படுகிறது. தஞ்சாவூர் அரசனிடமிருந்து திருச்சிராப்பள்ளியும் கைப்பற்றப்பட்டது என்று கூறப்படுகிறது. அவன் திருச்சிராப்பள்ளியை மதுரை நாட்டுடன் இணைத்தான். ஆர்க்காட்டு நவாபுவின் உன்னத ஆட்சிக்காலம் வரை இரு நாடுகளும் ஒன்றாகவே இருந்தன. 'பலம் வாய்ந்த ஐந்து பாண்டவர்கள்' என்று வழங்கப்பட்ட உடன்பிறந்தார்களால் ஆளப்பட்டுவந்த திருநெல்வேலியையும் வென்றான் விசுவநாதன்.

மதுரையிலிருக்கும் அளவிற்கு அதிகமாகப் பாளையக்காரர்கள் திருநெல்வேலியில் இல்லையென்றாலும் அங்கிருந்த பாளையக் காரர்கள் போதுமானவர்களாயிருந்தார்கள். திருநெல்வேலியில் இப்பொழுது இருபத்து இரண்டு சமீன்தாரிகள் (குறுநில அரசுகள்) இருக்கின்றன. மதுரையில் மிகப்பெரிய இராமனாதபுரம் சிவகங்கை குறுநில அரசுகளையும் சேர்த்து இருபத்தாறு குறுநில அரசுகள் இருக்கின்றன. நெல்சனுடைய செய்திக் குறிப்புகளிலிருந்து பொதுவாகப் பாண்டி நாட்டில் பாளையக்காரர்களின் ஆட்சியை ஏற்படுத்தியவன் விசுவநாத நாயக்கனே என்றும் நாட்டில் அமைதி நிலவச் செய்ய அவன் புறப்பட்டபொழுது பாளையக்காரர் அல்லது குறுநில அரசர்களை (சமீந்தாரிகளை) நியமித்தான் என்றும் நான் கருதுகிறேன்.

### தென்னிந்தியாவில் பாளையக்காரர்களின் தோற்றம்

விசுவநாதன் தென் மாவட்டங்களில் குடியிருப்புகள் அதிகமானவுடன் தன்னால் தோற்றுவிக்கப்பட்ட அரசமரபு நிலைப்பதற்காக நாட்டின் நலனைப் பற்றி அங்குள்ள முக்கிய மானவர்களுடன் கலந்து ஆலோசித்து எல்லா மக்கட்



சமுதாயத்தினிடமும் தன் ஆட்சி பரவுவதற்கான வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ள விரும்பினான். ஆனால், இவ்வாறு செயற்படுவது மிகவும் கடினமானதாயிருந்தது. அவன் தன்னுடன் தன்னைச் சார்ந்திருந்த தன் சாதியைச் சேர்ந்த மக்கள் கூட்டத்தை மதுரைக்கு அழைத்து வந்தான். அக்கூட்டம் பணிவுடனும் நன்றியுடனும் நடந்து கொண்டது. இச்செயலை விசுவநாதன் திறமையுடன் செய்து முடித்தான்.

ஆனால், அவர் அனைவரும் பேராசையுடன் பெரும் பரிசுகளை எதிர் நோக்கி நின்றனர். அவர்களுக்குத் தாராளமாகப் பரிசுகள் அளிக்கப்படாவிட்டால் அவனுக்கு எதிரிகளாய் இருப்பார்கள்போல் இருந்தது. அக்காலத்தில் அங்குப் பழைய மரபுவழிப் படைத்தலைவர்கள் இருந்தார்கள். அவர்கள் போதுமான நிலப்பரப்பையும், அதை ஆட்சிபுரியத் தேவையான வலிமையையும் பெற்றிருந்தார்கள். அவர்களுடைய நல்லெண்ணமும் நல்லுறவும் அவனுக்கு மிகவும் தேவைப்பட்டன. ஆனால், அவற்றைப் பெறுவது மிகக் கடினமாயிருந்தது. அவர்கள் தலைமுறை தலைமுறையாக நெடுங்கால ஆட்சியின்மையால் முறையின்றிக் குழப்பம் விளைத்து இலாபம் ஈட்டுவது எப்படி என்பதை நன்றாக அறிந்திருந்தார்கள். தெலுங்கு அரசன் ஒருவன் குறுக்கிட்டு வேலை செய்வதை அவர்கள் எரிச்சலுடன் கவனித்து வந்தார்கள். அவர்களும், நாடும் அதன் அதிகார உரிமையும் கொடுக்கப்படும் என்று எதிர்நோக்கும் எண்ணமே நகைப்புக்கு இடமாய்த் தோன்றியது. மேலும் கவர்னர் சம்பளத்தையும் அலுவற்பணிகளையும் தன்னைச் சூழ்ந்த தன் இனத்தவரில் தகுதியுள்ளவருக்கே தன்பரிசாகக் கொடுத்து வந்தான். இதனால் அவர்கள் கவர்னரைச் சூழ்ந்துள்ள வேற்றுநாட்டவரைப் பொறாமையுடனும் வெறுப்புடனும் பகை உணர்ச்சியுடனும் மதித்து வந்தார்கள். அன்றியும், பாண்டியர்களைச் சார்ந்தவர்கள் வறுமை நிலையில் மிக்க மனக்குறை அடைந்திருந்தார்கள். அவர்கள் காலத்தினால் எல்லாவற்றையும் அடைய முடியுமென்றும், அமைதியாலும் சமாதானத்தாலும் ஒன்றும் பெற முடியுயாதென்றும் நம்பி வந்தார்கள். இறுதியாக, அவர்கள் முரட்டுத்தனமும் குழப்பமுடைய தெலுங்கு கன்னட இனத்தைச் சேர்ந்த சாகசக்காரர்கள் (இப்படி கால்டுவெல் கூறுவது ஏன்? - ந.ச.). அவர்களுடைய மூதாதையர்கள் நாட்டின் வடக்கு மேற்குப் பகுதிகளைப் பலமாக கைப்பற்றிக் கொண்டிருந்தார்கள். ஆனால், யாருக்கும் கப்பம் செலுத்தவில்லை. அவர்களது அடக்கமற்ற ஆத்திரத்தினால் நேர்மையான பலம் வாய்ந்த அரசிற்கும் இடையூறு ஏற்பட்டது. இத்தகைய எல்லா வகுப்பு மக்களின் குழப்பமான விருப்புகளையும்

ஒருமைப்படுத்துதல், அவர்களது வேற்றுமைகளை வேரறுத்தல், அவர்களின் நல்லெண்ணங்களைப் பெறுதல் முதலிய பணிகள் விசுவநாதனுடைய கடமைகளாய் இருந்தன. இச்செயல்களை எல்லாம் அவன் அறிமுகமற்ற நாட்டில் அதுவும் கையில் காசின்றி - செய்ய வேண்டியிருந்தது. கடைசியாக அவன் வெற்றியடைய ஒரு வழியைக் கண்டுபிடித்தான். ஒவ்வோர் இனமக்களிலும் மிக்க செல்வாக்குப் பெற்றவர்களை உத்தியோகத்தாலும் வேறுவகை உயர்வாலும் மேன்மைப் படுத்துவதும் அதற்குப் பதிலாக அவர்களும் அவர்களுடைய மரபினரும் விசுவநாதனிடமும் அவனுடைய மரபினரிடமும் அரச நன்றியுடன் (ராஜ விசுவாசத்துடன்) நடந்து கொள்வதாக வாக்குறுதி பெறுவதும் என்பதே அவ்வழியின் நோக்கம். காலச் சூழ்நிலைக்கு இதைப்போன்று வேறு எதுவும் நன்மையான செய்கையாய் இருந்திருக்க இயலாது என்றாலும், அது எல்லாவிதமான இடையூறுகளையும் உண்டாக்கி முடிவில் நாயக்க அரச பரம்பரையே கவிழ்ந்துவிடுவதற்குப் பெரிய காரணமாயிற்று. அதன் விபரம் வருமாறு:

மதுரைக் கோட்டைக்கு எழுபத்து இரண்டு கொத்தளங்கள் இருந்தன. இப்பொழுது முதலில் ஒவ்வோர் அரணும் குறிப்பிட்ட ஒவ்வொரு தலைவனின் அதிகாரத்தில் விடப்பட்டது. அவனவன் வமிசத்தினரும் எந்தக் கணத்திலும் எந்தச் சூழ்நிலையிலும் அந்த உத்தியோகத்திற்கு உரிமையுடையவர்கள். அவன் ஆண்டுதோறும் குறிப்பிட்ட கப்பத்தைக் கட்டவும் ஆளுநருடைய (கவர்னருடைய) படைக்குக் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள படைவீரர்களை எப்பொழுதும் தயாராக வைத்திருந்து கொடுக்கவும் நாட்டின் குறிப்பிட்ட ஒரு பகுதி முழுவதிலும் ஆளுநரின் ஆணைப்படியே அமைதி நிலவச் செய்யவும் கடமைப்பட்டவன். இப்பணிகளையும் மற்ற வேலைகளையும் செய்வதாக வாக்குறுதி கொடுத்த தலைவனுக்கு விசுவநாத நாயக்கனும் அரிய நாயக்கனும் அவன்பால் வைத்திருந்த மதிப்பிற்கு ஏற்பவும் அவன் வகித்த பதவி நிலைக்கு ஏற்பவும் சில கிராமங்கள் அடங்கிய நாட்டின் ஒரு பகுதி மானியமாக வழங்கப்பட்டது. அவர்களுக்குப் பாளையக்காரர் என்ற பட்டமும் வழங்கப்பட்டது. இவற்றுடன் ஒவ்வொரு மானியக்காரருக்கும் மதிப்புள்ள பரிசுகள் வழங்கப்பட்டன. விருதுகளும் சலுகைகளும் கவர்னரின் சட்டப்படி ஆடம்பரமான சடங்குகளின் மூலம் அளிக்கப்பட்டன. இதுதான் புகழ்பெற்ற மதுரை பாளையக்காரர்களின் தொடக்கம். அப்பாளையக்காரர்களில் சிலருடைய சந்ததியார் இன்று பழைய உத்தியோகமும் அதிகாரமும் அற்றவர்களாயிருப்பினும், தங்கள் மூதாதையரின் மானியத்தை அனுபவித்து வருகின்றனர்.



மதுரையிலும் திருநெல்வேலியிலும் உள்ள பாளையக்காரர் அனைவரும் இந்த முறையிலே நாயக்க அரசனால் நியமிக்கப்பட்டவர்களே. அந்த நாயக்க அரசன் அவ்வமிசத்தை நிறுவினவனாகக் கருதப்படும் விசுவநாதன் தானா அல்லது வேறு ஒருவனா என்பது பேரைய்யப்பாடாய்த் தோன்றுகிறது. நெல்சன் ஆதாரமாக நம்பின சாசனங்கள் சரித்திர சம்பந்தமற்றவை அல்லது குறைந்த வரலாற்றுத் தொடர்புடையவை என எனக்குத் தோன்றுகிறது. பாளையக்காரர்களின் தோற்றம் - நாயக்கர் ஆட்சிக்காலத்திலேதான் தோன்றியது என்பதை மட்டுந்தான் நாம் ஏற்றுக் கொள்ள முடியுமென்று நான் எண்ணுகிறேன். மிகச் சில குறுநில மன்னர் (ஜமீந்தார்கள்) சிறப்பாக இராமநாதபுரம் சேதுபதி தவிர - தங்கள் நாடுகளும் தலைமைப் பதவியும் நாயக்கர்கள் காலத்திற்கு முந்தியவர்களாகிய பழைய பாண்டிய அரசர்களால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது என ஆணைவழிக் கூறலாம்.

**பாளையக்காரர்களின் நிலைமை**

அருகிலுள்ள மாகாணங்களில் ஏற்பட்ட தெலுங்கர் குடியேற்றப் பகுதிகளின் தலைவர்களுக்கு அங்குள்ள பழைய மக்களைப் பயமுறுத்திப் பணியவைப்பதற்காக விசயநகர அரசனால் பாளையக்காரர் என்ற விருது வழங்கப்பட்டது என்று ஜெனரல் வில்க்ஸ் என்பார் கூறுகிறார். ஆனால், எந்த அரசன் பெயரையும் குறிப்பிடவில்லை. பாளையக்காரர் என்பதற்குப் 'பாளையத்தை உடையவர்' என்பது பொருள்; போர் அனுபவத்திற்காக மானியம் பெற்றவன் என்றும் மற்றொரு பொருளும் உண்டு. தமிழ்ப் பாளையக்காரர் என்ற பெயரே 'போலிகார்' என ஆங்கிலப் பெயரானதாகத் தெரியவில்லை. அது தெலுங்கிலுள்ள 'பலேகாடு' அல்லது கன்னடத்திலுள்ள 'பலேகாரா' என்று அதே பொருளில் வழங்கப்பட்ட சொற்களிலிருந்து பிறந்திருக்க வேண்டும். 'காடு', 'கார' என்ற சொற்கள் 'காரர்' என்ற சொல்லுக்கு ஏற்ற தெலுங்கு கன்னடச் சொற்களாகும். அதே போலப் 'பாளையத்தை உடையவன்' என்ற பொருளை உணர்த்தும் ஆங்கிலச் சொல்லாகிய 'பொள்ளம்' என்பது தமிழ்ச் சொல்லாகிய பாளையத்திலிருந்து வந்திருக்க முடியாது; தெலுங்குச் சொல்லாகிய 'பாளமு' என்பதிலிருந்துதான் வந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது (இதன் 'அடிச்சொல்' - ந.ச.). விசய நகரப் பாளையக்காரன் முப்பத்து மூன்று கிராமங்களுக்குத் தலைவனாய் இருந்தான். ஆனால், தமிழ்நாட்டில் அந்த எண்ணிக்கையில் எந்த அரசாட்சியும் இருந்ததாகக் காணப்படவில்லை. பாளையக்காரர்

முதலில் கன்னட நாட்டில் 'உடையவர்கள்' என்ற பொருளைக் குறிக்கும் 'உடையார்' என்று வழங்கப்பட்டதெனச் சொல்லப்படுகிறது. இப்பெயர் தமிழ்நாட்டிலுள்ள ஜமீந்தார்களைக் குறிக்க அடிக்கடிப் பயன்படுத்தப்பட்டு வந்தது. சில சமயங்களில் பழைய அரசர்களின் விருதுகளுடன் இப்பெயர் சேர்க்கப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகளிலும் நான் கண்டேன்.

மதுரையை ஆண்டவர்களால் பாளையக்காரர்கள் நியமிக்கப்பட்டதன் பலனை நோக்கும்போது கொடுமையும் பேராசையுமுடைய பாளையக்காரனால் நாடு முழுவதையும் ஆட்சி செய்வதென்பது - அதிலும் பொதுவாகப் பாளையக்காரர்கள் இருந்த நிலைக்கு அத்தகைய ஆட்சி பயனுடையதாயிருந்ததென்பது - சொல்ல இயலாது. பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் 1801 இல் இறுதியாகக் கீழ்ப்படியும்வரை இந்த நிலைமையே நீடித்திருந்தது. அவர்களுக்குள் சண்டையில்லாதபோது அவர்களிடமிருந்து மைய அரசுக்கான கப்பத்தைப் படைகளின் உதவியின்றிப் பெறவியலாது. இதனால் மானக்கேடும் மிகுந்த செலவும் ஏற்பட்டன.

(ஆறாம் இயலில் பாளையக்காரர்களின் பிற்கால நிலைமையைப் பற்றிக் குறிக்கப்பட்டிருக்கும் ஒரு குறிப்பைப் பார்க்க.)

மதுரை அரசர்கள் பாளையக்காரர்களை நியமித்ததன் பலனைப் பற்றி மேலே கூறப்பட்ட விவரத்திற்குப் பிறகு இம்முறையால் ஏற்பட்ட தீங்குகளைப் பற்றி விவரமாகத் தம் திருநெல்வேலி மானுவலில் ஸ்டூவர்ட்டு என்பவர் கூறுகிறார். 'இடைக்காலத்தில் ஐரோப்பாவில் ஏற்பட்டிருந்த மானிய முறைக்கும் இந்தக் குறைபாடு செல்லுபடியாகும். இத்தகைய மானியங்களால் நாடு செழிப்புற்றிருந்த காலத்தில் நன்மை ஏற்பட்டது எனலாம். அடிக்கடி அடக்குமுறை அநீதியான ஆட்சி இடையிடையே கலந்திருந்தபோதிலும், அயலவர்களின் படையெடுப்பிலிருந்து நாட்டைக் காப்பாற்றுதல், உள்நாட்டு ஒழுங்கு முன்னேற்றம் இவை ஓரளவிற்கு நிலை நிறுத்தப்பட்டன. இன்றேல், அத்தகைய அமைதியை நிலை நிறுத்தியிருக்க இயலாது என்று அவர் கூறுகிறார். எந்தப் பாளையக்காரனைப் பற்றியும் ஒரு நல்ல வார்த்தைகூட இல்லை என்ற செய்தியை ஸ்டூவர்ட்டின் வாக்கிலிருந்து மகிழ்ச்சியுடன் (இரத்த உறவு கால்டுவெல்லையும் கைவிடல்லை! - ந.ச.). நான் எடுத்துக் கூறுகிறேன். அவர்களுடைய குறைபாடான செயல்களைப் பற்றி அவர் வினவவில்லை. அதற்கு இணையானதொரு வரலாற்று நிலையை எடுத்துக் கூறுகிறார். இடைக்காலத்தில் ஐரோப்பாவிலிருந்த மானியப் பிரபுக்களை விடப் பாளையக்காரர்களின்



குறைச்செயல்கள் ஒழுங்குடையனவாகவும் துணிவுள்ளனவாகவும் இருந்தன. இவர்களின் தகுதிகள் சரியானவையாய் இல்லை. ஏனெனில், ஐரோப்பாவிலும் சரி, தென்னிந்தியாவிலும் சரி அயல் நாட்டு எதிரிகளை, மிக்க முயற்சியுடன் எதிர்த்தனர் என்று சொல்லப்படுகின்ற அயலார், உண்மையில் வேற்று நாட்டவரல்லர். அந்தந்த நாடுகளின் அரசுரிமைக்கு உரியவர்களே அவர்கள். ஸ்காட்டுலாந்து பீடபூமியிலும் ரைன் நதிக்கரையிலும் இருந்த பாளையக்காரர்கள் திருநெல்வேலிப் பாளையக்காரர்களைப் போல் மத்திய அரசாங்கத்தின் ஆட்சிக்குட்படும் வரை உள்நாட்டு ஒழுங்கும் முன்னேற்றமும் ஒரு சிறிதும் நிலைநிறுத்தப்படவில்லை.

மதுரை நாயக்கர்களின் வரலாற்றிலிருந்து நான் கண்ட திருநெல்வேலியுடன் சம்பந்தப்பட்ட மற்ற நிகழ்ச்சிகள் வருமாறு:

'அரிய நாயக்க முதலி நாட்டில் அமைதியை நிலை நாட்டியதும் நாயக்க அரசனாகிய குமார கிருஷ்ணப்பன் (அல்லது கிருஷ்ணம்மா) தானே நாட்டை கைப்பற்றிக் கொண்டு பாளையக்கோட்டைக்குக் கிழக்கே ஒரு நகரத்தை ஏற்படுத்தி, 'கிருஷ்ணபுரம்' என்று தன் நினைவாக அதற்குப் பெயர் வழங்கினான் என்று சொல்லப்படுகிறது. இந்தச் செய்தியை உள்நாட்டுச் சான்றுகள் ஆதரிக்கவில்லை. இந்தக் கிருஷ்ணாபுரம் கோவில் மயிலேறும்பெருமாள் என்ற முதலியாரால் கட்டப்பட்டதெனத் தோன்றுகிறது. இவன் முதலில் சைவனாய் இருந்து பிறகு கிருஷ்ணனை வழிபட்டு அவன் தாசனாக - வைணவ பத்தனாக - மாறினான். இக்கோவிலின் வேலைபாடுகள் பேரழகுடையவை. கிருஷ்ணப்பாவின் புதிய நகரம் நிறுவிய வேலை வெற்றிகரமாக நடைபெற்றதை அறிந்து மேற்குத் திசையில் அதேபோன்ற மற்றொரு நகரமும் ஏற்படுத்தியதாகக் கூறப்படுகிறது. இது கடையம் கிருஷ்ணாபுரம் (கடையத்தருகே இருக்கின்ற கிருஷ்ணாபுரம்) என்று வழங்கப்பட்டது. இது தென்காசிக்கும் பிரம்மதேசத்திற்கும் இடையே அமைந்துள்ளது. கிருஷ்ணப்பன் 1573 இல் இறந்தான். (நெல்சன் பக். 105).

'திருமலை நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் இப்போது இன்னவையென்று கண்டுபிடிக்க இயலாத சில காரணங்களால் திருநெல்வேலி மாவட்டத்திலிருக்கும் எட்டயபுரத்திலுள்ள வலிமைமிக்க பாளையக்காரன் ஒருவன் மற்றப் பாளையக்காரருடன் சதிக் கூட்டத்தில் சேர்ந்து அவன் தலைமையில் அந்த அரசனை எதிர்த்தான். இராமநாதபுரப் பாளையக்காரனாகிய சேதுபதி, எல்லாப் பாளையக்காரர்களுக்கும் தலைவன், எனவே இக்கலகக்காரர்களை

அடக்கும் படி சேதுபதி அனுப்பப்பட்டான். அவனும் தனக்கிட்ட வேலையை மிக நிறைவாகச் செய்து திரும்பினான். கலகக்காரர்களின் தலைவன் கொல்லப்பட்டான். மற்றவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டார்கள். சில மாதங்களில் எங்கும் அமைதி நிலவியது. இந்தத் தொண்டுக்காக அந்தச் சேதுபதிக்கு மன்னார் கோவிலுக்கு அருகேயுள்ள ஒரு பெரிய துண்டு நிலம் பரிசாக அளிக்கப்பட்டது. முத்துக்குளித்தலைக் கவனிக்கும் வேலையும் அவனிடம் விடப்பட்டது. முத்துக் குளித்தல் அரசக் கருவூலத்துக்கு அதிகப்படியானப் பணத்தை வழங்கி வந்தன (நெல்சன் எழுதிய 'மதுரை').

பாம்பன் தீவுக்கு வடக்கே முத்துக்குளித்தலால் வரும் வருமானம் இராமநாதபுரச் சேதுபதியின் உரிமையாகி விட்டது. பரம்பரையாகக் கன்னியாகுமரியின் பெரும்பாகம் வரை நடைபெறும் முத்துக்குளித்தல் வருமானம் முன்னைப் போலவே அரசன் சொத்தாய் இருந்தது. திருச்சிராப்பள்ளியைத் தலைநகராக்கியவுடன் இத்தகைய ஆணையரை நியமிக்க வேண்டுவது மிகவும் இன்றியமையாததாயிற்று.

சேரமாதேவிக்கருகிலுள்ள ஒரு கல்வெட்டில் 17 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வீரராகவ முதலியார் என்ற ஒருவரைக் காரியகர்த்தர் அல்லது வீரப்ப நாயக்கரின் பிரதிநிதி என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

திருமலையின் தம்பி குமாரமுத்து என்பவன் பட்டத்திற்கு வர உரிமை கொண்டாடினான்; ஆனால், சில உடன்படிக்கையின் படி தன் உரிமையை விட்டுவிட்டு அதற்குப் பதிலாகச் சிவகாசி மாவட்டத்தையும் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மற்ற எல்லைகளையும் பெற்றுக் கொண்டான்.

1700 இல் எழுதப்பட்ட பிரஞ்சு கிறிஸ்தவப் பாதிரியாரின் கடிதத்தில் சில காலத்திற்குமுன் திருநெல்வேலிக் கரையிலுள்ள ஒரு பெரிய காட்டில் புலிகள் அதிகமாய் வசித்தன. அவற்றின் எண்ணிக்கை மிக அதிகமாய் இருந்ததால், அவை அக்காட்டுக்கருகே வசிக்கும் மக்களை இரவில் எங்கும் வெளியே செல்லவிடாது துன்புறுத்தி வந்தன. ஒவ்வொரு கிராமத்திலும் காவல் வைக்கப்பட்டது. பெரிய நெருப்பை வளர்த்து அந்த அரக்க விலங்குகளைத் துரத்தினார்கள். பகல் நேரத்திலும் பயணம் செய்பவர்கள் கேடில்லாமலிருக்க இயலாது. பலர் மறைந்து போயினர். அவர்கள் ஐயமறப் புலிகளால் தனியான இடங்களில் கொல்லப்பட்டு வந்தார்கள். மலைப்பிரதேசத்திற்கு



அருகில் தவிர மதுரை திருநெல்வேலி மாவட்டங்களில் பல ஆண்டுகள் வரை புலியே இல்லை என்ற செய்தியிருப்பதால் இது குறிப்பிடத்தக்கது. 1700 இல் புலிகள் கடற்கரை ஓரமாக அதிகமாய் வசித்து வந்தன என்பதால், அக்காலத்தில் அப்பகுதியில் மக்கள் மிகக் குறைவாய் இருந்தார்கள் என்பதும் இந்நாளைப்போல் அந்நாளில் ஒழுங்குபடுத்தப்பட்ட வழிகள் இல்லை என்பதும் தெரிகின்றன.

**நாயக்கர்களின் பட்டியல்**

டெய்லரும் நெல்சனும் பின்பற்றி வந்த நம்பகமான செய்திகளின்படி மதுரை நாயக்க அரசர்களின் பட்டியலும், அவர்கள் பட்டத்திற்கு வந்த ஆண்டுகளும் கீழே காண்பவை. நாயக்கர்களின் ஆட்சி ஏறக்குறைய சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பாவது, தொடங்கியிருக்க வேண்டுமென்று நான் குறிப்பிட்டிருந்ததைப் படிப்போர் நினைவுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

| | |
|---|---|
| விசுவநாத நாயக்கர் | கி.பி. 1559 |
| குமாரகிருஷ்ணப்ப நாயக்கர் | " 1563 |
| பெரியவீரப்ப நாயக்கர் | " 1573 |
| இரண்டாம் விசுவநாத நாயக்கர் | " 1573 |
| லிங்கைய நாயக்கர்; விசுவப்ப நாயக்கர் | " 1595 |
| முத்துகிருஷ்ணப்ப நாயக்கர் | " 1602 |
| முத்துவீரப்ப நாயக்கர் | " 1609 |
| திருமலை நாயக்கர் | " 1623 |
| முத்து அழகாத்திரி நாயக்கர் | " 1659 |
| சொக்கநாத நாயக்கர் | " 1662 |
| ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் | " 1682 |
| மங்கம்மாள் (இராணி, அரசப் பிரதிநிதி) | " 1689 |
| விசயரங்க சொக்கநாத நாயக்கர் | " 1704 |
| மீனாட்சி அம்மாள் (இராணி, அரசப் பிரதிநிதி) | " 1731 |
| சந்தாசாகிபுவின் ஆக்கிரமிப்பு | " 1736 |

இதுவரை நாயக்கர் மரபில் புகழ்பெற்ற அரசர் திருமலை நாயக்கர். இவர் 1623 முதல் 1659 வரை அரசு செலுத்தினார். மதுரையில் கட்டப்பட்டுள்ள கட்டடங்களினின்றும் அவருக்குக் கட்டடங்கள் கட்டுவதில் விருப்பம் மிகுதி என்பது தெரிகிறது. இதற்குச் சிறந்த சான்றாக இன்றும் சிறப்புற்று விளங்குவது முகம்மதிய பாணியில் கட்டப்பட்ட அவருடைய இடிந்த அரண்மனையேயாகும். இப்போது அரண்மனை என்று வழங்கப்படுவது முதலில் கொலுமண்டபத்தைவிடச் சிறிது சிறப்புடையதாயிருந்தது. அவர்

இதைவிடச் சிறிய மற்றோர் அரண்மனையைத் திருநெல்வேலியிலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரில் கட்டினார். இதன் அமைப்பும் சிறப்புமிக்க கட்டடவேலைகள் நிரம்பியது. இந்த அரண்மனையில் அவர் இடையிடையே தங்குவதற்கு விரும்பினார் என்று சொல்லப்படுகிறது. மதுரை அரண்மனையின் எஞ்சிய பாகங்கள் இப்போது நீதிமன்றங்களுக்கும் மற்ற பொதுநலக் காரியாலயங்களுக்கும் பயன்படுத்தப்படுகின்றன. திருமலை நாயக்கர் ஆட்சியின் பெரும்பகுதி அரசியல் தன்மையற்ற முறையற்ற சண்டைகளினால் களங்கமடைந்தது. நாயக்க மரபில் குறிப்பிடத்தக்க புகழ்வாய்ந்த அடுத்த அரசி அரசுப் பிரதிநிதி இராணி மங்கம்மாள். இவள் 1689 முதல் 1704 வரை ஆட்சி புரிந்தாள். இவளுடைய பேரன் குழந்தையாய் இருந்தமையால், அவனை அரசப் பிரதிநிதியாய் நிலைபெறச் செய்தாள். திருநெல்வேலியிலிருந்து மதுரையிலும் அதற்கடுத்த மாவட்டங்களிலும் இவள் புகழ் பரவியது. இவள் நாடெங்கும் சாலைகளை அமைத்தாள். சாலையின் இருமருங்கிலும் நிழல் தரும் மரங்களை நடச் செய்தாள். கிணறுகளை வெட்டுவித்தாள்; சத்திரங்கள் கட்டுவித்தாள்; மதுரை அரச மரபினர் என்றும் செய்தறியாத பல நலன்களை மக்களுக்காகச் செய்தாள். அதனால், இவளது பெயர் இன்னும் மங்காது புகழ்பெற்றுள்ளது. நாடெங்குமுள்ள இவள் கட்டுவித்த மரச்சாலைகளுக்கு இவளுடைய பெயரே வழங்கலாயிற்று. சான்றாகக் குற்றாலத்திற்கருகேயுள்ள மரச்சாலைகள் மங்கம்மாளின் பெயர் பெற்றுள்ளன என்பதை நான் அறிந்தேன். இவ்வளவு நன்மைகளும் செய்தமையால் இவளே எல்லாவற்றையும் செய்தாள் என்று கருதப்படுகிறது.

### நாயக்கர்களின் விருதுகள்

நாயக்க அரசர்கள் தங்களை மதுரை அரசர்கள் என்று ஒரு போதும் வழங்கிக் கொள்வதில்லை என்பது குறிப்பிடத் தகுந்தது. அவர்கள் 'மகாராயலு, விஜயநகர அரசர்களின் சேனாபதிகள் என்பதைத் தவிர, வேறு எதையும் விரும்பவில்லை. அவர்கள் விஜயநகர அரசனுக்குக் கப்பம் கட்ட மறுத்த போதும், அவனுக்கு எதிராகப் போர் தொடுத்த போதும் கூட இதைவிடச் சிறந்த ஒரு விருதைத் தாங்கள் அடைய விரும்பவே இல்லை. அவர்கள் எல்லா மாநிலங்களையும் கைப்பற்றி அரசனுக்குரிய எல்லா வலிமையும் அடைந்துங்கூட ஏதோ ஆண்டவனிடம் பணிவன்பு காட்டும் பரம்பரைப் பண்பு காரணமாக, அவர்கள் அந்தப் பெயரை வைத்துக் கொள்ளவில்லை. இக்காலத்தில் பாண்டிய வழியின் கடைசி அரசர்கள் உரிமைப்படி மதுரை நாட்டில் 1607 வரை வாழ்ந்து பேரளவிற்கு ஆட்சிப்புரிந்தார்கள் என்பதை அறிந்துள்ளோம். ஆனால், இக்காலத்தில் நாயக்கர்களும் ஆட்சியில் இருந்து வந்துள்ளார்கள். வடமொழியில் 'நாயகா' என்பது தலைவனைக் குறிக்கும் சொல். ஆனால், தென்னிந்தியாவில் அதே பெயர் தெலுங்கு சாதியாரைக் குறிக்கும் பரம்பரைப் பெயராகப் பயன்பட்டு வந்தது. தெலுங்கில் 'நாயுடு' என்பதும் தமிழில் 'நாயக்கன்' என்பதும் ஆண்பால் ஒருமைப் பெயராக வழங்கப்பட்டு வந்தன. 'நாயனார்', 'நாயர்' என்ற சொற்களும் ஒப்புநோக்கத் தக்கன. நாயக்கர்களுள் பல பிரிவுகள் இருந்தன. மதுரை அரசர் பரம்பரையைச் சேர்த்த சாதிப் பிரிவினர்களான வடுகநாயக்கர்கள், சாதாரணமாக வடுகர்கள் அதாவது, படகர்களைப் காப்பாற்றுபவர்கள் என்று வழங்கப்படுவார்கள். மதுரை நாயக்க அரசர்கள் பொதுவாகத் தமிழ்நாட்டிலும் சிறப்பாகத் தென்பகுதியிலும் 'கர்த்தர்கள்' என்று வழங்கப்பட்டார்கள். மக்கள் இந்தக் கர்த்தர்கள் காலத்தில் இன்ன இன்ன நிகழ்ந்தன என்று கூறுகிறார்கள். கர்த்தர்கள் என்ற தமிழ்ச் சொல் 'செய்பவன்', 'பிரதிநிதி' என்ற பொருள்களைக் குறிக்கும் வட சொல்லாகிய கர்த்தர் என்பதன் பன்மை. இவ்விருது 'அரசன்' என்ற விருதைவிடக் குறைந்த மதிப்புடையது என்றாலும், 'நாயகா' என்ற சாதாரண சாதி விருதை விடக் கர்த்தர்கள் என்ற விருது அரசுக்குரிய பெருமையைப் புலப்படுத்தத் தகுதியுள்ளதாயிருக்கிறது. கர்த்தா என்ற விருதிற்கு இவ்விடத்தில் உரிய சிறந்த பொருள் 'உயர்தர விசாரணை அதிகாரி' என்பது.

### நாயக்கர் ஆட்சியின் சிறப்புகள்

பாண்டிய சோழ அரசர்களைப் பற்றி அறியக்கூடிய செய்திகளைவிட அதிகமான செய்திகள் நாயக்க அரசர், அவர்களைப் பற்றிய அரசாட்சி, வேறு சிறப்புகள் இவைகளைப் பற்றியும் அறியக் கிடைப்பது நம் நல்வினையே ஆகும். பாண்டியர்களும் சோழர்களும் தங்கள் காலத்து ஆட்சியைப் பற்றி ஒரு சில - ஏன் - எந்தவிதமான உறுதியான குறிப்புகளையும் விட்டுச் செல்லவில்லை. ஆகையால், சோழ பாண்டியர்கள் நீதி வழுவா முறையில் சிறப்புடன் ஆட்சி செய்திருக்க வேண்டும் என்பது நாம் உய்த்துணர வேண்டியிருக்கிறது. அவர்கள் வாழ்ந்த காலம் புலவர்பாடும் புகழமைந்த காலமாய்ப் பொலிவுற்றிருந்தது. அப்புலவர்கள் அக்காலத்தைப் பற்றிக் குறைந்த வரிகள் விதிக்கப்பட்ட பொன்னான காலம் என்றும் அடக்குமுறைக் கொடுங்கோன்மையற்ற காலம் என்றும், மாதம் மும்மாரி பெய்த காலம் என்றும், எங்கும் இன்பம் நிரம்பிய காலம் என்றும் வருணித்துள்ளார்கள். ஆனால், நாயக்க அரசர்கள் அரசோச்சிய அப்பழைய நாள்களில்

அவர்களது நாட்டில் வாழ்ந்து வந்த ஐரோப்பிய மதபோதகர்கள் அவர்களைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார்கள். அதில் நாயக்க மன்னரின் அரசியல் வாழ்வும் தனிப்பட்ட வாழ்வும் ஆராய்ந்து அம்பலப்படுத்தப்பட்டுள்ளன. ஆகவே, இக்காலத்து ஐரோப்பிய அறிஞர்களின் முறையான - முறையுள்ள வரையறைப்படி மட்டுமின்றி, ஆணையார்ந்த இந்து முகம்மதிய நூல்களில் கூறப்பட்டுள்ள நீதி முறைப்படியும் நாயக்கர்கள் தங்கள் அரசியற் கடமைகளினின்றும் தவறிவிட்டார்கள் என்பது தெரிகிறது. நாயக்கர் ஆட்சியில் குடி, கொலை, கொள்கை, அநீதி, ஒழுக்கமின்மை, உள்நாட்டுக் குழப்பம் முதலியன மிதமிஞ்சியிருந்தன. எனினும், அரச பீடத்திலிருப்பவர்கள் ஆலயங்கட்கும் தெய்வங்கட்கும் ஏராளமான மானியங்கள், பரிசுகள் முதலியன வழங்கிப் பார்ப்பனர், புலவர் முதலியவர் தங்களைப் புகழ்ந்து பேசச் செய்தார்கள். அதனால், மக்கள் தங்கள் குறைகளை வெளிப்படுத்திக் கொள்ள வசதியின்றிப் பொறுமையாக அவர்களுடைய முறையற்ற ஆட்சியைப் பொறுத்துக் கொண்டே இருந்தார்கள்.

நாயக்கர்களுக்கு முந்திய பரம்பரையில் வந்தவர்களுடைய ஆட்சியைவிட நாயக்கர் ஆட்சி மோசமானது என்று நாம் எண்ணத்தக்க காரணங்கள் இல்லையாதலால், பாண்டிய சோழ அரசர்களின் ஆட்சியின் சிறப்புகளைப் பற்றி உயர்வான எண்ணம் கொள்ள இயலாது. பாண்டிய சோழர் ஆட்சிக் காலத்திலோ அல்லது நாயக்கர்களின் ஆட்சிக் காலத்திலோ, சாலை எதுவும் அமைக்கப்படவில்லை. அக்காலத்தில் சாலைகள் என்று வழங்கப்பட்டவை நாட்டுப்புறங்களின் குறுக்கில் செல்லும் ஒற்றையடிப் பாதைகளே. சில இடங்களில் அவற்றின் இரு புறங்களிலும் மரங்கள் வரிசையாய் இருக்கும். அக்காலத்து மக்களுக்குப் பாலம் என்பது அறியப்படாத ஒரு பொருள். நீதிபதிகளோ, இல்லை (இது கால்டுவெல்லின் தமிழிலக்கிய அறியாமையைக் காட்டுகிறது. - ந.ச.). தலைநகரில் மட்டும் அரசனே நீதிமன்றத்தில் பார்ப்பன யோசனையாளர்களின் உதவியால் நீதி வழங்கி வந்தான் (பிற்கால தமிழ் நாட்டின் நிலை - ந.ச.). பார்ப்பனர்களுக்கு மட்டும் பள்ளிக் கூடங்கள் இருந்தன. மற்றவர்களுக்கு இல்லை (அதனால் வந்த வினைதான் இன்னும் தீரவில்லை - ந.ச.). வியாபாரம் போற்றி வளர்க்கப்படவில்லை. வியாபாரிகள் செல்வர்களாவதைக் காட்டிக் கொள்ளத் துணியவில்லை. எங்கும் மருத்துவ நிலையம் இல்லை. யாதொன்றிற்கும் முடிவு காண வேண்டுமெனில், அரசனுடைய விருப்பு பொறுப்பின்படியேதான் ஒவ்வொன்றும் முடிவு செய்ய வேண்டும். அல்லது சாதிச் சட்டம் அல்லது வழக்கம் என்ற இரும்புச் சம்மட்டியின் வலிமையால் முடிவு



செய்யப்படும். தங்கள் முன்னோர்களை விட உரிமையாகவும் சிறப்பாகவும் மகிழ்ச்சியாகவும் வாழ முடியும் என்ற எண்ணமே மக்கள் மனத்தில் தோன்றியதாகத் தெரியவில்லை (பார்ப்பனக் கொடுமை தந்த 'பரிசு'கள் இவை - ந.ச.). இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாட்சி தோன்றும் வரை மக்களின் உயர்வுக்காக எந்தவிதமான கடின முயற்சியும் எடுக்கப்படவில்லை. உழவுத் தொழில் ஒன்றுதான் அந்நாளைய பொது வேலையாய் இருந்தது. இத்துறையிலும் மக்கள் அதிக முயற்சி எடுத்து வெற்றி கண்டனரே அன்றி நாடாளும் மன்னர் எவ்விதப் பொறுப்பும் ஏற்றுக் கொள்ளவில்லை. முக்கிய ஆறுகளில் அணைகள் கட்டப்பட்டன. முக்கியமாகத் தாமிரபரணியில் ஓர் அணை கட்டப்பட்டது. நாடு முழுவதும் நீர் நிலைகள் நிறைந்திருந்தன. (நாயக்கர் வரலாறு பற்றி பேராசிரியர் சத்தியநாத ஐயர் முதன் முதலாக ஆங்கிலத்தில் விரிவாக எழுதிய நூல் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாகக் கிடைக்கிறது. அதை அடியொற்றிப் பேராசிரியர் அ.கி. பரந்தாமனார் தமிழில் எழுதிய 'நாயகர் வரலாறு' பாரி நிலைய வெளியீடாகக் கிடைக்கிறது. 'தமிழ்நாட்டில் பத்துக் குறிப்பு' பற்றி திரு. அருணாசலம் எழுதிய ஆராய்ச்சி நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாகக் கிடைக்கிறது. இவை மூன்றும் படிக்கத் தக்கன - ந.ச.).

### தாமிரபரணி அணைக்கட்டு

தாமிரபரணியில் எட்டு அணைக்கட்டுகள் உள்ளன. அணைக்கட்டு என்ற தமிழ்ச் சொல்லில் 'அணை' என்பது நீர்த்தேக்கம் என்றும், 'கட்டு' என்பது கட்டப்பட்டது என்றும் பொருள்படும். (அணைக்கட்டு என்ற சொல் ஆங்கில மொழியில் அப்படியே கடன் சொல்லாக ஏறிவிட்டதால் இந்த விளக்கம் தருகிறார் கால்டுவெல்). அவற்றுள் ஏழு, ஆங்கிலேயர்கள் திருநெல்வேலிக்கு வருவதற்கு முன்னரே கட்டப்பட்டவை.

1. அவற்றுள் மிக உயர்ந்ததை அணைக்கட்டு (ஆங்கிலத்திலும் புகுந்த தமிழ்ச் சொல் - ந.ச.) என்பதை விட நீர்த்தேக்கம் என்றே சொல்லலாம். இதை உள்நாட்டு மக்கள் 'தலை அணை' அதாவது முதல் அணைக்கட்டு என்று வழங்கி வந்தார்கள். தாமிரபரணி பாபநாசம் அருவியிலிருந்து விழுந்து குறுகலான மலையிடுக்கு வழியே செல்கிறது. அம் மலையிடுக்குப் பாதை பெரிய கூழாங்கற்களாலும் பெரிய சங்கிலிக் கற்பாறைகளாலும் தடுக்கப்பட்டிருக்கிறது. மலைகளில் துவாரங்கள் செய்யப்பட்டு அவைகளில் கம்பங்கள் செருகப்பட்டிருக்கின்றன. அவை பெரும்பாலும் பனை மரங்களே.

இந்தக் குறுக்குக் கம்பங்களின் அருகே சிறுசிறு காடுகள் உண்டாக்கப்பட்டன. இவ்வாறு தண்ணீர் இரு கரைகளிலுமிருந்தும் கால்வாய்களுக்குப் பாய்ச்சப்பட்டன.

2. அணைக்கட்டுகளிலேயே மிக்க பழமைவாய்ந்தது என்று சொல்லப்படுவது நதியுண்ணி அணைக்கட்டாகும். இது அம்பாசமுத்திரத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் உள்ளது. இது பெரிய சிமெண்டு பூசப்படாத கற்களால் கட்டப்பட்டுள்ளது. ‘நதியுண்ணி’ என்பது ‘நதியைக் குடிப்பது’ என்று பொருள்படும். இந்த அணைக்கட்டைச் சேர்ந்த கல் ஒன்று ஆற்றுப் படுகையில் இப்பொழுது இருக்கிறது. அதில் இவ்வணைக்கட்டு மிகவும் அண்மைக் காலத்திலேதான் கட்டப்பட்டது என்பது தெரிகிறது. கல்வெட்டுக் கூறுவதாவது: ‘நதியுண்ணி அணை கொல்லம் ஆண்டு சாலிவாகன ஆண்டிற்குச் சமமான கி.பி.1759 இல் கான்சாகிபுவின் அறக்கொடையாகக் கட்டப்பட்டது. கானசாகிபு என்பவன் புகழ்பெற்ற மகம்மது யூசுப்கான் ஆவான். அக்காலத்தில் அவன் ஆட்சிப் பீடத்திலிருந்தான். அவனைப் பற்றிப் பின்னர் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் உள்ளன. இவ்வணைக்கு அருகேயுள்ள சில உள்ளூர் வாழ்நர் அந்த அணைக்கட்டு முதலில் பழைய பாண்டிய அரசர்களால் கட்டப்பட்டது என்றும் பின்னர்க் கான்சாகிபு அதைச் செப்பனிட்டுப் பலப்படுத்தினானென்றும் கூறுகிறார்கள்.

3. மிக்க புகழ்வாய்ந்த அணைக்கட்டு ஆங்கிலேயர்களால் கனடியன் அணைக்கட்டு என்று வழங்கப்பட்ட அணைக்கட்டாகும். இதன் பொருள் கன்னட இனத்தவன் ஒருவனால் கட்டப்பட்டது என்பது. இது அம்பாசமுத்திரத்திற்கு எதிரில் இருக்கிறது. அந்தக் கன்னடியன் சம்பந்தப்பட்ட இக்காலக் கதைகள் பல உள்ளன. அந்தக் கன்னடியன் உள்ளூர்த் தேவதையின் அருளால் மிக்க செல்வம் பெற்றான் என்றும் அத்தேவதை அவனுடைய செல்வத்தை ஓர் அணைக்கட்டுக் கட்டுவதில் செலவிடும்படி கட்டளையிட்டதாகவும் அக்கதைகளுள் ஒன்று கூறுகிறது. எல்லா அணைக்கட்டுகளும் ஒருவனாலே கட்டப்பட்டன என்று மற்றொரு கதை கூறுகிறது. ஒரு பசு வழிகாட்டியாக அனுப்பப்பட்டதென்றும் அப்பசு எங்கெல்லாம் படுத்து எழுந்ததோ அங்கெல்லாம் ஒவ்வொரு அணைக்கட்டுக் கட்டப்பட்டதென்றும் கூறப்படுகிறது. அந்தப் பசு அம்பாசமுத்திரத்திற்கும் கடலுக்கும் இடையே ஆறு இடங்களில் படுத்தெழுந்ததாகவும் அதன்படி தெய்வக் கட்டளையால் பெற்ற நிதியிலிருந்து அந்தக் கன்னடியன் ஆறு அணைக்கட்டுகளைக் கட்டினான். (இப்படி முயல், கருடன் போன்றவற்றின் விந்தைச் செயல்களைக் கொண்டு கோட்டை முதலியன அமைக்கப்பட்டன என்ற செய்திகளும் உண்டு. - ந.ச.). கன்னடியன் அணைக்கட்டு என்ற பெயருடைய அந்த அணைமட்டும் கன்னடியனொருவனால் கட்டப்பட்டதென்பதும் அவ்வணையிலிருந்து செல்லும் கால்வாய்களின் போக்கைக் காட்டுவதற்காகவே அப்பசு அனுப்பப்பட்டதென்பதும் கதையின் வேறொரு பாகத்தால் விளங்குகின்றன. அப்பசு எங்கெங்குச் சென்றதோ அங்கங்கெல்லாம் கால்வாய் வெட்டப்பட்டது. எங்கெங்கு அது படுத்ததோ, அங்கெல்லாம் நீர்த்தேக்கங்கள் கட்டப்பட்டன. உண்மைப் போன்ற இக்கதைகளினின்றும் அறியப்படுகின்ற ஒரே ஒரு குறிப்பான செய்தி அந்தக் கன்னடியன் பொதுநல எண்ணமுள்ளவன் என்பதே. அநேகமாய் இவன் மதுரை அரசின் பிரதிநிதியாய் இருக்க வேண்டுமென்பதும் இப்போதைக்கு அறியக் கிடக்கிறது.



இவ்வணைக்கட்டுக் கட்டப்பட்ட காலம் தெரியவில்லை. ஆனால், அதன் காலம் பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து 16 ஆம் நூற்றாண்டு இறுதிக்குள் எந்தக் காலமாகவேனும் இருக்கலாம் என்று கூறலாம். கால்வாய்க்கு அருகேயுள்ள சிறு கோவிலில் ஒரு கல்வெட்டு உள்ளது. அதில் 17 ஆம் நூற்றாண்டின் ஆரம்பகாலம் குறிக்கப்பட்டுள்ளது. அணைக்கட்டு அருகேயே ஒரு சிறு கோவில் உள்ளது. அங்கு ஜூன் மாதம் ஐந்தாம் தேதி உள்ளூர்த் தேவதைக்கு ஆண்டு தோறும் பலிகள் கொடுக்கப்பட்டன. அன்றைய தினத்தில் கால்வாயில் தண்ணீர் செல்ல நீர்க்கால்கள் பல ஆடம்பரங்களுடன் திறக்கப்படும். அதே கன்னடியனால் சேரன்மா தேவியில் ஒரு சத்திரம் கட்டப்பட்டுள்ளதென்பது சொல்லப்படுகிறது.

சங்குண்ணி மேனன் எழுதியுள்ள திருவாங்கூர் சரித்திரத்தில் மற்றொரு கதை குறிக்கப்பட்டுள்ளது.

குண்ணாடியர் என்று சாதாரணமாக வழங்கப்படும் தெலுங்குப் பார்ப்பனர் ஒருவர் வேலூர் மகாராஜா பிரதா பருத்திரனிடமிருந்து நன்கொடையாக அதிகமான தங்க நாணயங்களைப் பெற்றார் என்றும், அந்தப் பார்ப்பனர் திருவடி தேசத்தில் (திருவாங்கூர்) உள்ள ஒரு மலையில் வசித்துவந்த அகஸ்திய முனிவரின் அறிவுரையால் தாமிரபரணி ஆற்றின் குறுக்கே ஓர் அணைக்கட்டுக் கட்டியதாகவும் (அது இன்றும் உள்ளது), அதிலிருந்து வேளாண்மைக்காகக் கால்வாய்கள் சுமார் இருபத்தொரு மைல் அகலத்திற்கு

வெட்டியதாகவும், மிஞ்சிய பணத்தில் சேரன்மா தேவியில் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள பார்ப்பனர்களுக்கு நாள்தோறும் சாப்பாடு போடுவதற்காக ஒரு சத்திரம் கட்டினான் என்றும் இச்செப்புச் சாசனத்தை வைத்திருந்தவரை, அச்சத்திரத்திற்கு நிலையான மேற்பார்வையாளராக நியமித்ததாகவும் கூறுகிறது.

அந்த ஆசிரியர் செப்புச் சாசனத்திலுள்ள வாசகத்தின் கருத்தையே கூறுகின்றார்:

இக்குறிப்பிட்ட செப்புச் சாசனம் எங்களால் ஈட்டப்பட்டது. இது நாராயணப்பய்யா என்பவரால் எழுதப்பெற்றது. இவர் குண்ணாடியர் குடும்பத்தைச் சேர்ந்தவர்; பார்ப்பன பரத்வாஜ கோத்திரத்தைச் சேர்ந்தவர்; ரிக்வேத உபாசகர். இவர் வேலூரை ஆண்டுவந்த மகாராஜா கஜபதி பிரதாபருத்ர ராயரிடமிருந்து கலாபுருஷதனம் என்ற நன்கொடையைப் பெற்றார். அவ்வாறு பெற்ற இவர் தர்மம் செய்யத் தீர்மானித்துப் பணத்துடன் திருப்பதியை அடைந்தார். அங்கு வேங்கடாசல சுவாமியை வேண்டி அத்தெய்வத்தின் அருள் பெற்றார். அக்கடவுளின் ஆணைப்படி தென்னாடாகிய திருவடி தேசத்தைச் (திருவாங்கூர்) செப்பனிட்டார். இத்தேசத்திலுள்ள மலபாசல மலையில் அகஸ்திய முனிவரைச் சந்தித்தார். அவர் உத்தரவுப்படி பார்ப்பனர்களின் நலனுக்காக விவசாய வாய்க்காலை வெட்டினார். எஞ்சிய பணத்தில் பார்ப்பனர்களின் தினசரி உணவிற்காக ஒரு சத்திரம் கட்டத் தீர்மானித்தார். அதன்படி, தாமிரபரணியின் தென்கரையில், சேரன் மாதேவிக்கு மேற்குப் பக்கத்தில் உள்ள அழகிரியப்பசாமி கோவிலுக்கருகே ஒரு கட்டடம் கட்டினார். கோபாலப்பிள்ளையின் தந்தையாராகிய நாராயணப்பிள்ளை பார்ப்பனர்! ஸ்ரீவத்ச கோத்ரம். யஜுர் வேத உபாசகர். சேரன் பெருமாள் ராஜாவினால் கட்டப்பட்ட பழைய கிராமம் அல்லது பார்ப்பன கிராமத்தில் வசித்து வந்தார். அவர் இந்தச் சத்திரத்தை மேற்பார்வை செய்யும் பொருட்டு இச்சாசனத்தின் மூலம் நிரந்தர மானியதாராக நியமிக்கப்பட்டார். இது சிரவண நட்சத்திரம், பஞ்சமி ஆஷாட மாதம், சௌமியநாம ஆண்டு (கலி 3342) கி.பி. 242 அன்று பதிவு செய்யப்பட்டது. இச்சத்திரத்தின் நிருவாகத்திற்காக 2587 கலியுகராமன் மதுரை வெள்ளைப் பணங்கள் (இந்நாணயம் இன்றும் திருவாங்கூர் நோட்டாய் இருக்கிறது) பெறுமான நிலங்களும் துண்டுநிலம் ஒன்று 135 பணங்கள் பெறுமான ஒன்பது துண்டு நிலங்களும் மானியமாக எழுதப்பட்டுள்ளன. அன்றியும், தினப்படிச் செலவிற்கான கட்டணங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. மேற்பார்வையாளர் நாராயணப்பிள்ளைக்குச் சம்பளமாக ஒரு



குறிப்பிட்ட தொகையும் எழுதப்பட்டுள்ளது (இப்படிப் பார்ப்பனர்கள் சங்க காலம் முதல் பெற்ற பேறுகள் கோடிகோடி! - ந.ச.).

இந்தச் சத்திரத்தின் பயன்பாட்டிற்காகத் திருவாங்கூரிலிருந்து மிளகு அனுப்பப்பட்டு வந்தது. மிளகு திருவாங்கூரின் விளைபொருள். அதை அரசனுடைய அனுமதியின்றி வாங்க இயலாது. எனவே, அது இலவசமாகக் கொடுக்கப்பட்டு வந்தது. 970 எம்.இ. ஆண்டில் (கி.பி.1795 இல்) கிழராமராஜா இறப்பதற்கு மூன்று ஆண்டுகட்கு முன்பு அதற்குப் பதிலாக 180 கலிப்பணங்கள் சத்திரத்திற்குச் செலுத்தப்பட வேண்டுமென்று ஆணையிட்டான். இன்றும் அப்பணம் செலுத்தப்பட்டு வருகிறது.

அணைக்கட்டின் தோற்றத்தைப் பற்றிய இக்குறிப்பு, கற்பனைக் கதைதான். மற்றவைகளைப் போன்றே இதுவும் நம்பத் தகுந்ததன்று; ஆயினும், கன்னடியனுடைய சிறப்புகளைப் பற்றிய செய்திகளைத் தெளிவாக்குகின்றது. செப்புச் சாசனத்திலிருந்து அவன் பார்ப்பனன் என்பது உறுதியாய்த் தெரிகின்றது. இச்சம்பவம் நடந்த காலம் கி.பி.242 என்று தகட்டில் குறிக்கப்பட்டுள்ள முழுவதும் கற்பனையே. திருநெல்வேலியிலுள்ள கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட கல்வெட்டு எதிலும் கலியுக ஆண்டுக் குறிப்போ அல்லது கூபிடரின் ஆண்டுக் குறிப்போ பயன்படுத்தப்பட்டிருப்பதை நான் காணவே இல்லை. செப்புச் சாசனத்திலுள்ள ஒரு வாக்கின்படி இத்தேதியே எதிர்மாறாய் இருக்கிறது. கன்னடிய அல்லது கன்னடப் பார்ப்பனன் இந்த நன்கொடையை எந்த அரசனிடமிருந்து பெற்றானோ, அவன் பழைய பாண்டிய சேர சோழ அரசர்களுள் எவனும் அல்லன். ஆனால், அவன் இக்காலத்தைச் சேர்ந்த ஓர் அரசன்; வேலூர் இராயர் பிரிவைச் சேர்ந்தவன். 1564 இல் விஜயநகர அரசு மகம்மதியர்களால் வெற்றிகண்டபோது முறியடிக்கப்பட்ட வர்களைச் சார்ந்த வலிமையுள்ள இளவரசர் பலர் பல இடங்களில் தம் நாடுகளை ஏற்படுத்திக் கொண்டனர். அத்தகைய தலைநகர்களுள் ஒன்றே வேலூர். 1623 முதல் 1659 வரை மதுரையை ஆண்ட நாயக்கர்களில் மிகச் சிறந்த அரசராகிய திருமலை நாயக்கர், வேலூர் இராயரைத் தமக்குக் கப்பம் கட்டும் தலைவராக ஏற்றுக் கொண்டார். பிரதாபருத்திரர் என்பது தெலுங்கு பரம்பரையில் வழங்கிவரும் சாதாரணப் பெயர். இதனால் அணைக்கட்டுக் கட்டப்பட்ட காலம் அண்மைக் காலமாகத்தானிருக்க வேண்டுமென்பது தெரிகிறது.

4. அடுத்த அணைக்கட்டு அரியநாயகபுரம். அரிய நாயகர் என்பவர் நாயக்கர் சரித்திரத்தின் ஆதிகாலத்தில் மிகச் சிறப்பு வாய்ந்தவர்.

ஆனால் இந்த அணைக்கட்டின் தோற்றத்திற்கும் இந்த அரியநாயகருக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. ஆனால் அணைக்கட்டின் அருகிலுள்ள கிராமத்தின் பெயரால் இதற்கும் அப்பெயர் ஏற்பட்டது.

5. ஐந்தாவது அணைக்கட்டு, சுத்தமல்லி என்பது. திருநெல்வேலி நகரத்திற்கும் சுற்றுப்புறங்களுக்கும், அங்கு நடைபெறும் உழவுத் தொழிலுக்கும் தேவையான தண்ணீரை இந்தச் சிறந்த அணைக்கட்டே வழங்குகிறது.

6. பழவூரிலுள்ள அணைக்கட்டு ஆறாவதாகும். இது பாளையங்கோட்டைக்கும் அதற்கருகிலுள்ள இடங்களுக்கும் தண்ணீர் வசதி அளிக்கிறது. பாளையங்கோட்டையிலிருந்து வரும் கால்வாய், பாளையம் கால்வாய் என்று வழங்கப்படுகிறது. பழைய பாளையங்கோட்டையின் கோட்டையும் இவ்வாய்காலும் கன்னடிய பாளையக்காரன் ஒருவன் பெயராலேதான் இப்பெயர் பெற்றன. பின்னே கூறப்பட்ட கன்னடியன் முந்தியவனுடைய வழிவந்தவன். பழவூர் என்பது ஆற்றின் இடக்கரையிலே அமைந்திருக்கிறது. ஆனால், இப்பெயர் பெற்ற கால்வாய் அதிலிருந்து வலக்கரைப் பக்கம் ஓடுகிறது.

7. தாமிரபரணியிலுள்ள எல்லா அணைக்கட்டுகளிலும் அதிகப்படியான நெல் விளைச்சலுக்குத் தேவையான தண்ணீரைக் கொடுப்பது மருதூர் அணைக்கட்டேயாகும். இது பாளையங்கோட்டைக்குக் கிழக்கே சில மைல் தூரத்திலிருக்கிறது. இந்த அணைக்கட்டு 1792 இல் எறக்குறைய முற்றும் திரும்பக் கட்டப்பட்டது. கல்வெட்டொன்றில் கூறப்பட்டபடி இது டோரின் என்பவர் கலெக்டராய் இருந்த காலத்தில் புதுப்பிக்கப்பட்டது. கர்னல் கால்டுவெல்லினால் 1807 இல் மறுபடியும் அவ்வணைக்கட்டில் அதிகமான திருத்தங்கள் செய்யப்பட்டன.

8. இறுதியாகப் புதுக்குடிக்கும் திருவைகுண்டத்திற்கும் இடையே கடலுக்கு மிகவும் அருகில் உள்ளது எட்டாவது அணைக்கட்டாகும். லெப்டினண்ட் ஷெப்பர்டு என்பவரால் சில ஆண்டுகட்கு முன்புதான் இவ்வணைக்கட்டு கட்டப்பட்டது. இந்த இடத்தில் ஆற்றின் அகலம் 800 கஜம். அணைக்கட்டின் மதிப்பு, பதினோராயிரங்கள் (அந்நாளில்!). தாமிரபரணியிலுள்ள இந்த ஓர் அணைக்கட்டுதான் முற்றும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் கட்டப்பட்டது என்றாலும், பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் நாடு வந்தபொழுது எல்லா அணைக்கட்டுகளுமே திருத்திக் கட்டப்பட்டன.



**திருநெல்வேலிக் கரையில் போர்ச்சுகீசியர்**

1498 ஆம் ஆண்டு, மேத் திங்கள், 20 ஆம் நாள் போர்ச்சுகீசியர் கள்ளிக்கோட்டையில் வந்து இறங்கினர். முதல் ஐரோப்பிய மாலுமியாகிய வாஸ்கோடகாமா என்பவர் நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக் கொண்டு இந்தியாவிற்கு வந்தார். அவர் தலைமையில் வந்த மூன்று மரக்கலங்களில் போர்ச்சுகீசியர் வந்தனர். வாஸ்கோடகாமா அடுத்த ஆண்டே ஐரோப்பாவிற்குத் திரும்பிவிட்டார். அங்கு அவர் தம் பயணத்தின் போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றியும் தாம் கண்ட அதிசயங்களைப் பற்றியும் ஒரு குறிப்புத் தயாரித்துத் தம் அரசனுக்கு அளித்தார். அதில் அவர் திருநெல்வேலிக் கரையிலுள்ள காயல் என்னும் ஓர் இடத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். அங்கு முத்து அகப்படுவதாகவும் அது மகம்மதிய அரசருக்கு உரிமைப்பட்டிருப்பதாகவும் தாம் கேள்விப்பட்டதாக அதில் கூறுகிறார். அதற்குப் பிறகு சில காலங்கழித்துக் கொல்லம் அரசன் காயலில் வசித்ததை நாம் கண்டோம். அது உண்மையாக இருக்க வேண்டும்; ஏனெனில், வாஸ்கோடகாமா காலத்தில் அந்த இடத்தை ஆண்டு வந்தவன் மகம்மதியன். பரவர்கள் தங்களைக் காப்பாற்றுமாறு மகம்மதியர்களைக் கேட்டுக் கொண்டமையால் மகம்மதியன் அரசனாக வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. மற்ற ஆதாரங்களிலிருந்து அக்காலத்தில் கடற்கரையோரமாக மகமதியர் அதிகமாகவும் வலிமையுடையவர்களாகவும் இருந்தார்கள் என்பது நமக்குத் தெரிகிறது. செவிவழியாகவும் காயலின் கடைசி அரசன் மகம்மதியன் என்றே நான் கேள்விப்பட்டேன்.

இந்தியாவில் போர்ச்சுக்கீசியரின் முதற்குடியேற்ற நாடு கொச்சி. அங்கு அவர்கள் 1502 இல் ஓர் ஆலையைக் கட்டினார்கள்; அடுத்த ஆண்டில் அங்கு ஒரு கோட்டையையும் கட்டினார்கள். அக்காலம் முதற்கொண்டு அவர்கள் முழு இந்தியக் கடற்கரைக்கும் நடைமுறையில் எசமானர்களாகி விட்டார்கள். விரைவிலேயே அவர்கள் எல்லா மூரிஷ் மரக்கலங்களிலும் அதாவது, எல்லா மகமதிய மரக்கலங்களிலும், எது போர்ச்சுகீசிய அனுமதிச் சீட்டைப் பெற மறுத்ததோ, அதைத் துரத்தியடித்தார்கள். சிறிது காலத்திற்குப் பிறகு போர்ச்சுகீசியத் தலைவனாகிய பார்பொஸா என்பவன் கிழக்கே பல இடங்களுக்குப் பயணம் செய்தான். 1571 இல் காயல் கொல்லம் அரசனுக்குச் சொந்தமாயிருந்ததென்றும், அவ்வரசன் பொதுவாக அங்கேயே தங்கியிருந்தான் என்றும் கூறியிருக்கிறான். கொல்லம் அரசராயிருந்தவர் பிற்காலத்தில் இப்போது கூறப்படும் திருவாங்கூர் அரசர் எனப் பெயர் சூட்டிக் கொண்டார் என்பதை நாம் அறிய

வேண்டும். 1293 இல் மார்க்கபோலோ கொல்லம் இராச்சியத்தையும் திருவாங்கூர் இராச்சியத்தையும் வேறுபடுத்தித் திருவாங்கூர் இராச்சியத்திற்குக் குமரி இராச்சியம் என்று பெயர் வழங்கியதாகக் கூறுகிறார். போர்ச்சுகீசியர் வந்திறங்கிய சமயத்தில் திருவாங்கூருடன் கொல்லம் இணைந்திருந்தது. பார்போஸா கண்டது போல, காயலிலிருந்த கொல்லம் அரசன் திருவாங்கூரை ஆளும் அரசனே என்றால், திருவாங்கூர் அதிகாரவர்க்கத்தின்படி அவன் ஸ்ரீவீரரவிவர்மாவாகத்தான் இருக்க வேண்டும். பார்போஸா கண்ட அரசன் உண்மையில் ஆட்சி செய்யும் அரசன்தானா என்பது ஐயமாயிருக்கிறது. ஏனெனில், அவன் உடன்பிறந்தார் அனைவரும் பொதுவாக 'ராஜா' என்றே வழங்கப்படுவர். அன்றியும், சின்னாளில் அதாவது சேவியர் காலத்தில், காயலில் வசித்துவந்தவன் இராஜாவின் உறவினன் என்பதை நாம் அறிகிறோம். எப்படியாயினும் பழங்காலப் போர்ச்சுகீசியர் காயல் திருவாங்கூர் அரசனுடையது என்று மதித்து வந்தனர் என்பது வெளிப்படையாய்த் தெரிகின்றது. திருவாங்கூர் அரசனே தென் திருநெல்வேலி நாடு முழுவதற்கும் சரியான வாரிசுதாரர் என்றும் கருதப்பட்டது. இது திருநெல்வேலி வாய்மொழி வரலாற்றிற்கும் கல்வெட்டிற்கும் பொருத்தமாய் உள்ளது. பெரும்பாலும் திருச்செந்தூர் கோவிலில் அகப்பட்ட ஆவணங்களில் இக்கருத்தே இருக்கின்றது. அக்காலத்தில் பாண்டிய அரசர் நசிந்துவிட்டனர். மதுரை நாயக்கர்கள் இன்னும் தங்கள் ஆட்சியைப் பலப்படுத்தவில்லை. எனவே, இயற்கையாகத் திருவாங்கூரின் எல்லைக்கருகேயுள்ள இடங்களின் அரசன் திருநெல்வேலியின் தென்பகுதியையாவது தன் ஆட்சிக்குட்படுத்த சமயம் பார்த்திருந்தான்.

1577 இல் போர்ச்சுகீசியர் இலங்கையிலுள்ள கொழும்பில் ஒரு கோட்டையையும் குடியேற்ற நாட்டையும் ஏற்படுத்தினர். 1522 இல் இவர்கள் மயிலாப்பூர் அல்லது சாந்தோமிற்குக் கொச்சியிலிருந்து ஒரு தூதுக்குழுவை அனுப்பினர். சாந்தோம் சென்னையில் உள்ளது. அங்கு அர்ச். தாமஸ் என்பவரின் உடல், சின்னமலை என்னுமிடத்திலுள்ள கோவிலில் காப்பாற்றப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டு அதைத் தேடி அக்குழுச் சென்றது. அதற்கு அவர்கள் திருநெல்வேலிக் கடற்கரை முழுவதையும் அடிப்புகுத்தி, வாஸ்கோடகாமாவினால் அறிவிக்கப்பட்ட இலாபகரமான முத்துக் குளித்தலையும் தங்கள் வசப்படுத்தியிருக்க முடியும் என்பதை நாம் ஐயுற இயலாது. இம்முத்துக்குளித்தல் வரலாற்றுக் காலம் தொட்டு அன்றுவரை கடற்கரைப் பகுதியில் நடைபெற்று வந்தது.



## போர்ச்சுகீசியரின் முதற்படையெடுப்பு

செம்படவ மக்களாகிய பரவர்களின் பிரதிநிதிக் கூட்டம் மூர்கள் அல்லது முகம்மதியர்களுக்கு எதிராகத் தங்களுக்கு உதவிபுரியுமாறு போர்ச்சுகீசியரின் உதவியை நாடிக் கொச்சி சென்றபோதுதான் 1532 இல் ஆதார பூர்வமான போர்ச்சுகீசியர் படையெடுப்பு திருநெல்வேலிக் கடற்கரைமீது ஏற்பட்டது. அக்காலத்தில் கடற்கரையில் மிக முக்கியமான இடம் இப்போது முகம்மதியர்கள் வசித்துவரும் காயல்பட்டினமாகும். இதற்கும் பழைய காயல் பட்டினத்திற்கும் அடிக்கடி பெயரளவில் குழப்பம் ஏற்படும். கொச்சிக்குச் சென்ற பிரதிநிதிக் கூட்டத்தில் 70 பேர் இருந்தனரென்பது சொல்லப்படுகிறது. அவர் விண்ணப்பத்தில் அவர்கள் வெற்றி கண்டார்கள். எனவே, படையெடுப்புத் தயாராகியது. கொச்சியிலிருந்த வைக்கன் தளபதியாகிய பாதர் மிச்சல்வால் என்பவரும் கடற்படைக் கப்பலில் சில பாதிரிகளுடன் சென்றார். சில ஆண்டுகட்குப் பின் அவர் 'கன்னியாகுமரி கிறிஸ்தவர்களின் உண்மைத் தகப்பனாகி' விட்டாரென்று சேவியர் வருணிக்கின்றார். கொச்சியிலுள்ள போர்ச்சுகீசியருக்கு விடுத்த வேண்டுகோள் வெற்றியடையவே பரவர்கள் தங்கள் நாட்டில் போர்ச்சுகீசியரின் வேதத்தைத் தழுவ விருப்பமுடையவர்களாயிருப்பதாகப் புதிதாக மதம் மாறிய ஜோண்டிகுரூஸ் என்ற உள்நாட்டவர் ஒருவருடைய யோசனைப் படி தெரிவிக்கப்பட்டது. கொச்சியிலேயே பாதர் வாஸ் தூதுக் குழுவிலுள்ள அனைவரையும் முறைப்படி மதமாற்றினர். போர்ச்சுகீசியர் மகம்மதியர்களை வென்ற பின்பு வாஸ், கடற்கரைக்குச் சென்ற போது முப்பது கிராமங்களில் வசித்துவந்த 20,000 பரவர் மதம் மாறினர் என்று சொல்லப்படுகிறது. இந்தச் சூழ்நிலைகளைப் பார்க்கும் பொழுது 1532 இல் திருநெல்வேலிக் கடற்கரையில் போர்ச்சுகீசியர் தமது ஆதிக்கத்தை நிலைநிறுத்தத் தொடங்கினர் என்று நாம் கூறுவதில் தவறில்லை. மகமதியத் தலைவர் கொல்லப்பட்டு அவர்களுடைய வலிமை அழிக்கப்பட்டது என்று சேவியர் எழுதுகிறார். 1542 இல் அவர் கடற்கரைக்கு வருகை புரிந்த போது முத்துக்குளித்தல் முழுவதும் போர்ச்சுகீசியர் வசமாயிற்று. சேவியர் காலத்தில் போர்ச்சுகீசியர் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டிய இடங்கள் மணப்பேடு, புன்னைக்காயல், தூத்துக்குடி, வேம்பார் என்பவை. ஆனால், டாக்டர் பார்னல் எனக்குத் தெரிவித்த பழைய போர்ச்சுகீசிய எழுத்தாளர்களின் குறிப்பின்படி 1582 வரை புன்னைக்காயல் அவர்களது முக்கியக் குடியேற்ற நாடாயிருந்ததென்பதும் தூத்துக்குடி முக்கியமற்ற ஓர் இடமாய்

இருந்ததென்பதும் தோன்றுகின்றன.

### படகர்களின் எதிர்பாராத படையெடுப்பு

மூர்களை வெற்றி கண்ட நாளாகிய 1532க்கும் சேவியர் கடற்கரையில் வசித்த முதல் ஆண்டாகிய 1542க்கும் இடையே புதிய எதிரிகள் தோன்றினார்கள். மகமதியரைவிட அவர்கள் மிக்க பலம் வாய்ந்தவர்கள். போர்ச்சுகீசியர்களுக்கே அவர்களை அடக்குவது கடினமாய் இருந்தது. அவர்களுக்குப் படகர்கள் என்பது பெயர். அவர்கள் அடிக்கடி சூறையாடிய பிறகு ஏற்பட்ட நிலையைப் பற்றி மிகப் பரிதாபமாகவும் இரக்கமாகவும் சேவியர் தம் கடிதங்களில் எழுதியிருக்கிறார். சேவியர் அவர்களை அடக்கமற்ற கொள்ளைக்காரர்கள் என்று குறிப்பிடுகிறார். மற்றோர் ஆசிரியர் அவர்கள் வரி வசூலிப்பவர்கள் என்று எழுதுகிறார். அதைப்பற்றி நாம் பின்பு கவனிப்போம். ஏனெனில், வரி வசூலித்தல், கொள்ளையடித்தல் என்ற இரண்டு குணங்களையுமுடையவர்கள் தென்னிந்தியாவில் கர்நாடக அரசர்களிடமிருந்து கிழக்கு இந்தியக் கம்பெனியாரிடம் ஆட்சி வரும் வரை மிகச் சாதாரணமாகத் தொடர்ந்து இருந்துவந்தார்கள். குமரி முனைக்கு அருகிலுள்ள ஒரு கிராமத்தில் படகர்களின் கொள்ளையினால் ஏற்பட்ட பயங்கர நாசங்களைச் சேவியரே நேரில் கண்டார். அதனால், போர்ச்சுகீசியக் குடியேற்ற நாடுகள் கூட ஒரு வேளை தாக்கப்படலாமென்ற சந்தேகம் இருந்து வந்தது.

இந்தப் படகர்கள் யார்? படகர்கள் என்ற பெயர் வடுகர்களை அதாவது நாயக்கர்களைக் குறிக்கிறது என்பதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறேன். கன்னடத்தில் அவர்கள் பெயர் படகர் என்பது. இதன் சாதாரணப் பொருள் 'வடநாட்டவன்' என்பது. தெலுங்கு நாயக்கர்கள் வடக்கிலிருந்து வந்தமையால், அவர்களைத் தமிழ்நாட்டிலுள்ளவர்கள் வடநாட்டவர் என்று வழங்கினார்கள். நாயக்கர்கள் பிரிவில் வடுகர்கள் என வழங்கப்பட்டவர்கள் திருமலை நாயக்கரின் இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களது சாதிப் பட்டப்பெயர் 'நாயக்கர்' அல்லது 'நாயுடு' என்பது. மற்ற நாயக்கர்களிலிருந்து தங்களைப் பிரித்துக் காட்டவும் பொதுவாகவும் அவர்கள் 'வடுகர்கள்' எனப்பட்டார்கள். அக்காலத்துக் கிறிஸ்தவ எழுத்தாளர் ஒருவர், படகர்கள் அரசனுடைய வரிவசூல் செய்யும் தண்டற்காரர்கள் என்றும், கொடுமையும் இறுமாப்பும் நிறைந்த கூட்டத்தினர் என்றும், அவர்கள் பொதுவாக நாயர்கள் என்று வழங்கப்பட்டார்கள் என்றும் விளக்கியுள்ளார். இங்கு மேற்குக் கடற்கரையில் வசித்துவந்த இந்த எழுத்தாளர் தமிழ்ச் சொல்லான நாயக் அல்லது நாயகாவுக்குப் பதிலாக



மலையாளச் சொல்லாகிய நாயர் என்பதைத் தவறுதலாகப் பயன்படுத்தியுள்ளதாகத் தெரிகிறது. மற்ற குறிப்புகள் யாவும் உண்மை. அவர் குறிப்பிட்டுள்ள செய்திகளில் 'அரசவரி' என்பது மிக முக்கியமான செய்தியாகும். இதனால், விசயநகர இராயர்கள் வரி வசூலித்தார்கள் என்பது தெரிகிறது (இவர்களைப் போர்ச்சுகீசியர் நரசிங்க அரசர்கள் என்று கூறுவது வழக்கம்). தங்கள் எசமானர்களிடமிருந்து சுதந்தரமடையாத தளகர்த்தர்கள் மூலமாக மதுரையிலும் மற்ற இடங்களிலிருந்தும் வரி வசூல் செய்யப்பட்டு வந்தது. கடற்கரை ஓரமாயுள்ள கிறித்தவப் பரவர்கள் கிராமத்தைப் படகர்களின் கொடுமைகளினின்றும் காப்பாற்ற பலவிதமான முயற்சிகளைச் சேவியர் மேற்கொண்டார். திருவாங்கூர் அரசருடைய ஆட்சிக்குட்பட்ட கிறித்தவப் பரவ மக்களுக்காக உடன்பாடு செய்தது அத்தகைய முயற்சிகளுள் ஒன்றாகும். சேவியர் இந்த அரசனை இக்குவிடிபிரிமஸ் என்ற வினோதப் பெயரிட்டு வழங்குகிறார். இப்பெயரில் விளக்கம் தரத்தக்க ஒரு பகுதி இறுதியிலுள்ள 'பிரிமஸ்' என்ற சொல்தான். இது ஒருவேளை திருவாங்கூர் அரசர் ஒவ்வொருவர் பெயருக்குப் பின்னும் தொடர்கின்ற படைவீர (க்ஷத்திரிய)ப் பட்டப்பெயராகிய 'வர்மா' என்பதைக் குறிக்கலாம். திருவாங்கூர் அரச வரிசைப் பட்டியலின்படி அக்காலத்திலிருந்த அரசரின் பெயர் உதயமார்த்தாண்ட வர்மா என்பது. அவர் 1537 முதல் 1560 வரை அரசாண்டார். இப்பட்டியலிலுள்ள எந்தப் பெயரும் எந்தத் தமிழ்ப் பெயரும் 'அக்கிரமம்' என்ற சொல்லுக்கேற்ற குணங்கள் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. ஒரு சமயம் சேவியருடைய கடிதங்களைப் பெயர்த்தெழுதியவர் தவறுதலாக அவ்வாறு எழுதியிருக்கலாம். அந்த அரசருக்குச் சிலகாலத்திற்கு முந்திய திருவாங்கூர் அரசராகிய வீர ரவியை இப்பெயர் குறிப்பிடுமா?

சேவியர் அந்த அரசரைத் திருவாங்கூரின் மிகப் பெரிய அரசர் என்று வருணிக்கிறார்; தென்னிந்தியா முழுவதும் அந்த அரசர் அதிகாரத்திற்குட்பட்டிருந்ததெனவும் கூறுகிறார். கொடுமைக்குள்ளாகிய பரவர்களை அந்த அரசருடைய குடிகள் என்று குறிப்பிடுகிறார். அந்த அரசரைச் சேர்ந்த நெருங்கிய உறவினன் டேயில் (இந்த இடத்தின் பெயர் டாயில், டேல் அல்லது தாலா என்பது. மணப்பாடியிலிருந்து 6 மைல் தூரத்திற்கும் கடற்கரையிலுள்ள மீன்பிடிக்கும் கிராமமாகிய தலை என்ற ஊரை இப்பெயர் குறிப்பிடலாம். என்றாலும், ஒரு திருவாங்கூர் அரசனுடைய உறவினன் ஏழ்மை நிறைந்த மீன்பிடிக்கும் கிராமத்தில் வசித்து வந்தான் என்றால் அதை நம்புவது கடினந்தான். அதை விடப் பார்போஸா அரசனையே கண்ட காயலில் அவ்வுறவினன் வசித்து வந்தான் என்பது இயற்கைதான். காயல் என்பதே டாயல் என்று எழுத்துப்

பிழையுடன் எழுதப்பட்டிருக்க வேண்டும்). அதாவது காயலில் வசித்து வந்ததாகவும் கூறுகிறார். இதிலிருந்து திருவாங்கூர் அரசருக்குக் கடற்கரைமீது இருக்கின்ற நேர்மையான உரிமையைவிடச் சிறிது அதிக உரிமை இருந்ததென்பது தெளிவாகிறது. அவர் பரவர்களுக்காக இரக்கப்பட்டார் என்றாலும் கூட உண்மையில் உதவி அளிப்பதற்கு விருப்பமற்றிருந்தார். அடுத்த ஆண்டில் திருவாங்கூரே படகர்களால் முற்றுகையிடப்பட்டது. அப்போது படகர்களின் படை வலிமை யுடையதாயிருந்தது. மேலும் கடற்கரைச் செம்படவர்களை எதிர்க்கச் சென்ற போதிருந்ததைவிட அதிக ஆயுத பலமுடையவர் களாயுமிருந்தனர். சில குறிப்புகளின் படி படகர்கள் படைதாக்கிய ஆபத்து நேரத்தில் எதிரிகளின் முன் திடீரென்று சேவியர் தோன்றினமையால் படகத் தலைவர்களுக்குள் குழப்பம் ஏற்பட்டுத் திருவாங்கூர் அரசர் காப்பாற்றப்பட்டமையால் அவர் தம் படை வீரரைக் காட்டிலும் சேவியருக்கு பெரிதும் கடமைப்பட்டவராய் இருந்தார். இம்முறை படகர்கள் திருவாங்கூரைக் கைப்பற்ற முடியாது போயிற்று. ஆனால், அக்காலத்திற்குப் பிறகு திருநெல்வேலியில் திருவாங்கூர் அரசரின் ஆதிக்கத்தைப் பற்றி நாம் கேள்விப்படவில்லை. அவ்வப்போது மதுரை நாயக்க அரசர்கள் திருவாங்கூர் அரசரிடமிருந்தே கப்பம் வசூலிக்கும் உரிமையைப் பெற்றார்கள் என்றாலும், கட்டாயப்படுத்தப்பட்ட பொழுதுமட்டும் திருவாங்கூர் அரசர் கப்பம் கட்டினார் என்பது ஒப்புக் கொள்ளப்படுகிறது. படகர்களுக்கும் பரவர்களுக்குமிடையே இக்குழப்பங்கள் நேர்ந்த காலத்தில் பாண்டிய அரசர்களின் இரண்டாவது வமிசவரிசை அரசர்கள் நாடு முழுவதையும் ஆண்டு வந்தார்கள். என்னிடம் அகப்பட்ட கல்வெட்டு ஒன்றின்படி அக்காலத்தில் ஆட்சிபுரிந்த பாண்டிய அரசர் விக்கிரம பாண்டியர் என்பது தெரிகிறது. ஆனால், அவரைப் பற்றி யாரும் அக்கறை கொள்ளவில்லை; அவரை மதிக்கவுமில்லை.

விசயநகர இராயர்களின் பிரதிநிதிகளாயும் தூதர்களாயுமிருந்த படகர்கள் திருநெல்வேலிக் கடற்கரையில் வசித்துவந்த சாதுகளாயிருக்கலாம். உள்நாட்டு வெளிநாட்டுக் கிறிஸ்தவர்களைக் கடற்கரையினின்றும் விரட்ட அவர்கள் தீர்மானித்ததாகச் சொல்லப்படுகிறது. எப்பொழுது இத்தீர்மானம் ஏற்பட்டது? மதுரை நாயக்கர்களே பிற்காலத்தில் ராபர்ட் - டி - நொபிலி என்பவருக்கும் அவரால் மதம் மாற்றப்பட்ட கிறித்தவர்களுக்கும் மதுரையிலேயே இடம் கொடுக்க வில்லையா? அப்படியானால், அதே போலக் கிறிஸ்தவப் பரவர்களுக்கு ஏன் இடம் கொடுக்க இசையவில்லை? பரவர்கள் மதம் மாறியது மட்டுமின்றி, தேசிய மாற்றமும் அடைந்தார்கள் என்பதே



அதற்குக் காரணமாயிருக்க வேண்டும். சேவியரே தம் நண்பருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் பரவர்களைப் போர்ச்சுகீசிய மேன்மைதங்கிய அரசரின் குடிகள் எனக் கூறுகிறார். மீன்பிடிக்கும் கடற்கரையிலுள்ள சிவில் கொலை நியாயமன்றங்கள் எல்லாம் போர்ச்சுகீசியரால் கைப்பற்றப்பட்டது. எல்லாக் கடன்களும் வரிகளும் முத்துக் குளித்தலிலிருந்து கிடைக்கும் அதிகமான இலாபமும் போர்ச்சுகீசிய வைசிராயினால் நியமிக்கப்பட்ட கவர்னரால் வசூலிக்கப்பட்டன என்பதைத் தவிர, வேறு எந்தக் கருத்தும் இரண்டு ஆண்டுக்காலம் அங்கு வாழ்ந்த சேவியராலோ, மற்றவர்களாலோ எழுதப்படவில்லை. போர்ச்சுகீசியர்கள் உள்நாட்டு அரசர் யாருடைய இசைவும் பெறாமலே தங்கள் குடியேற்ற நாடுகளை உருவாக்கினார்கள். முத்துக்குளிக்கும் கடற்கரை முழுவதையும் ஆட்படுத்தி அங்கும் அவர்கள் விருப்பம்போலக் குடியேற்ற நாடுகளை நிறுவி, பரவர்களுக்குப் போர்ச்சுகீசிய மக்கள் என்ற ஆபத்தான சிறப்பு உரிமையையும் வழங்கினார்கள். எனவே, படகர்கள் அல்லது மதுரை நாயகர்கள் திரும்பத் திரும்பப் பயங்கரமாகப் பரவர்களைத் தாக்கினார்கள். போர்ச்சுகீசியருக்கு வரியோ கப்பமோ கொடாமல் தங்களுக்கே அவைகளைக் கொடுக்குமாறு பரவர்களை வற்புறுத்தினார்கள். சேவியர் தம் விசுவாசிகளைப் படகர்களின் கொடுமையினின்றும் காப்பாற்ற பலவழிகளை மேற்கொண்டார்; எனினும், பரவர்களை அவர்களிட மிருந்து கேட்கப்பட்ட வரியைச் செலுத்தும்படியோ மதுரை அதிகாரத்தினருக்கு அடங்கியிருக்கும்படியோ அவர் யோசனை கூறிய செய்தியோ இடம் பெறவில்லை.

பொதுவாகக் கடற்கரை குமரிக்கரை என்று சேவியரால் வழங்கப்பட்டது. அக்கரை ஓரத்தில் உள்ள கிராமங்களுக்குச் சென்ற போது குமரிக் கிராமங்களிலும் திரிந்து அலைந்து கொண்டு வந்தார். அப்போது மதம் மாறிய கிறித்தவர்கள் குமரி மக்களைக் கிறித்தவர்களாக மாற்றினார்கள். பின்பு எவ்வாறோ அக்கரை சாதாரணமாகப் பெங்காரியா என்று வழங்கப்பட்டது. முத்துக்குளித்தலைக் குறிக்கும் 'மீன்சலாபம்' என்பதே இதன் பொருள். இதை நடத்தும் கடற்கரையிலுள்ள போர்ச்சுகீசியத் தலைவனுக்கு 'முத்துச் சலாபத் தலைவன்' என்ற பெயர் ஏற்பட்டது. அந்தக் காலத்திலே முத்துக்குளித்தலில் ஏற்பட்ட இலாபங்களை அனுபவித்த போர்ச்சுகீசியர் அவர்களுக்குப் பின்வந்த டச்சுக்காரர்களைவிட ஆகூழாளர்கள். ஏனெனில், டச்சுக்காரர்கள் முத்துக்குளித்தலில் உண்டான இலாபத்தில் ஒரு பகுதியை மதுரை நாயக்கருக்கோ அல்லது இராமநாதபுர சேதுபதிக்கோ செலுத்த வேண்டியிருந்தது. ஆனால், போர்ச்சுகீசியர் காலத்தில் அவர்கள்

சிலகாலம் மிக்க வலிமை வாய்ந்தவர்களாயும் உள்நாட்டு அரசர்கள் வலிமையிழந்தவர்களாயும் இருந்தமையால் முத்துக் குளித்தலில் உண்டான இலாபம் அனைத்தையும் போர்ச்சுகீசியரே துய்க்கட்டும் என விட்டுவிட்டனர். போர்ச்சுகீசியர் வலிமையிழந்த காலத்தில் நாயக்கர்கள் அதிகார பலம் பெற்ற போது வேறுவிதமான ஒப்பந்தம் செய்யப்பட்டது.

குரேரியா எழுதிய 'கடற்கரையிலுள்ள மதபோதகர்களின் உறவு' என்ற புத்தகத்தில் (1604 இல்) நாயக்கர்கள் அந்த நாட்டின் குடிகளாய் இருந்தார்கள் என்றும், அவர்கள் மதுரையைத் தலைநகராக் கொண்டிருந்தார்கள் என்றும் குறிப்பிடுவதால், கடற்கரையில் போர்ச்சுகீசியரின் ஆதிக்கம் பலவீனமடைந்துவிட்டது என்பது தெளிவாகின்றது. மற்றொரு நம்பகமான இடத்திலிருந்து 1609 இல் பரவர்கள் தங்கள் கடமைகளை மதுரை அரசாங்கத்தின் பிரதிநிதிகளுக்குச் செலுத்தியதாகச் சொல்லப்படுகிறது. அக்காலத்தில் அவர்கள் போர்ச்சுகீசியருக்குக் கப்பம் செலுத்தவில்லை. பிஷப்பு பாரட்டி என்பவர் 1615 இல் மக்கள் மதுரை நாயக்கர்களால் பெரிதும் துன்புறுத்தப்பட்டார்கள் என்று குறை கூறியிருக்கின்றார்.

**புன்னைக்காயல்**

போர்ச்சுகீசியர் இந்தியாவிற்கு வந்திருந்த சுமார் ஐம்பது ஆண்டுகள் வரை புன்னைக்காயலே அவர்களது முக்கியக் குடியேற்ற நாடாய் இருந்தது. 'புன்னை' என்பது இந்திய நாட்டுப் புன்னைமரம். காயல் என்பது கடலை நோக்கிச் செல்லும் ஆழமில்லாத ஏரி ஆகும். பழைய காயல் தாமிரபரணியின் வடக்கே அமைந்துள்ளது. புன்னைக்காயல் தெற்கே கடற்கரைக்கு வலப்புறத்திலே கடல்வாயிலுக்கருகே அமைந்துள்ளது. இப்போது அது மீன்பிடிக்கும் கிராமமாய் உள்ளது. ஆனால், அதன் பழம்பெருமையை உணர்த்தவல்ல சில அறிகுறிகளும் அங்குக் காணப்படுகின்றன. ஐரோப்பிய மாளிகைகள் பண்டகசாலைகள் இவற்றின் அஸ்திவாரங்களின் சுற்றுச்சுவர்கள் மட்டும் இன்றும் காட்சியளிக்கின்றன. அங்கோ, போர்ச்சுகீசியர் காலத்துக் கோட்டையிருந்ததும் முற்றுகையிடப்பட்டதும் சண்டை நடந்ததும் தோல்வியுற்றதுமாகிய யாவற்றையும் பற்றிய தெளிவான செவிவழிக்கதை இன்றும் வழங்குகிறது. இக்கதை வரலாற்றுக் குறிப்பில் 1552 ஆம் ஆண்டு நிகழ்ச்சி சேவியருக்குப் பின்வந்த பாதர் அந்தோனியோவை அவர் எதிரிகள் கொலை செய்ததைப் பற்றிய கதையும் வழங்குகிறது.

சேவியர் காலத்துப் புன்னைக்காயலைப் பற்றிய பின் வரும்



செய்திகளுக்காக நான் டாக்டர் பர்னலுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். அவர் பழைய போர்ச்சுகீசிய எழுத்தாளர் களிடமிருந்து பெரும்பாலும் டிசௌசாவிடமிருந்து சேகரித்துக் கொடுத்திருக்கிறார்.

1551 - இரு மருத்துவசாலைகளையும் கல்விச் சாலைகளையும் புன்னைக்காயலில் நிறுவினர்.

1552 - கடற்கரையில் முக்கிய இடமாகிய புன்னைக்காயலில் ஒரு மண் கோட்டை இருந்தது. அந்தக் கோட்டை படகர்களால் கைப்பற்றப்பட்டது. கௌண்டிஹோ என்ற முத்துச் சலாபத் தலைவன் தோற்கடிக்கப்பட்டான்.

1553 - புன்னைக்காயல் கள்ளிக்கோட்டையில் இருந்து வந்த கடற்படையால் மீட்கப்பட்டது.

1560 - ஐம்பது பேர்களடங்கிய இராணுவக்கோட்டை புன்னைக் காயலில் இருந்தது.

1563 - 1563க்குப் பிறகு சீசர் பிரடரிக் என்பவர் கடற்கரைக்கு வந்த போது முத்துக் குளிப்பவர்களைக் காணப் போர்ச்சுகீசிய அரசனுடைய பிரதிநிதிகளைக் கண்டு உத்தரவுபெற வேண்டியிருந்தது. ஆகவே, மதுரை நாயக்கர்கள் அதுவரை அதிக வலிமையடைய வில்லை.

1570 - முத்துக்குளிக்கும் கரையில் பெரும்பஞ்சம் ஏற்பட்டது. பாதர் ஹியரிகுவெஸ் என்பவர் பஞ்ச நிவாரண விடுதிகளை ஏற்படுத்திச் சிலவற்றில் ஐம்பது பேருக்குத் தினந்தோறும் உணவு வழங்கியதுடன் செபஸ்டியான் என்னும் கிறிஸ்தவ முத்துக்குளிப்பவருக்குப் பத்தில் ஒரு பங்கு முத்துச்சிப்பிகளைக் கொடுத்தார்.

1578 - பாதர் ஜோவா டிபாரியா என்பவர் தமிழ் எழுத்துக்களை அச்சாக வெட்டி மதசம்பந்தமான சில புத்தகங்களை அதே ஆண்டில் திருநெல்வேலி கடற்கரையாகிய பெஸ்காரியாக் கரையில் அச்சிட்டார் என்று டிசௌசா கூறுகிறார். அப்புத்தகங்கள் கிறிஸ்தவ போதக நூல்கள் பிளஸ் சாங்க்டோரியம் அதாவது முத்திபெற்றவர்கள் வாழ்க்கையின் சிறு குறிப்புகள் முதலியவை.

பாலினஸ் என்ற அர்ச். பார்த்தலோமியோவும் கொச்சியைப் பற்றி அதே குறிப்பைக் கொடுத்திருப்பது தெரிகிறது. 1577 இல் கொச்சியில்

ஜோனஸ் கௌசால்வ்ஸ் என்ற பொது உடன்பிறப்பாளன் ஒருவன் மலையாளத் தமிழ் எழுத்துகளை அச்சாக வெட்டிக் கிறித்துவ மதபோதக நூல்களை அச்சிட்டான். அடுத்த ஆண்டு பிளாஸ் சாங்டோரியம் தொடர்ந்து வெளியாயிற்று என்று குறிப்பிடுகிறார். எழுத்தாளர் இருவரும் ஒரே செய்தியை உறுதியாக எழுதியிருப்பது வியப்புத்தான். இதில் ஏதாவது ஒன்றை ஏற்றுக் கொண்டு மற்றொன்றை விட்டுவிட வேண்டுமாயின், அதில் அதிகார வழியான ஒன்றை ஏற்றுக் கொள்வது நல்லது. டிசௌஸா பாலினஸிக்கு முந்திய நூற்றாண்டாகிய 17 ஆம் நூற்றாண்டில் கையெழுத்துப்படியிலிருந்து அவர் தமது புத்தகத்தைத் தொகுத்தமையாலும், அதில் திருநெல்வேலி தொடர்புற்றிருந்ததாலும், அதையே உண்மையானதாக ஏற்றுக் கொள்ளலாம். சோழமண்டலக்கரையில் முதலில் அச்சிடல் ஏற்பட்டதால், அது ஓர் அரிய நிகழ்ச்சியாகும். ஆனால், அது தொடர்ந்து செய்யப்பட்டதா என்பது தெரியவில்லை. அடுத்தபடியாக 1679 இல் தமிழ் எழுத்துக்கள் அச்சிடுவது கொச்சி நாட்டிலுள்ள அம்பலக்காடு என்னுமிடத்தில் நடந்ததாகக் கேள்விப்படுகிறோம்.

### முத்துக்குளித்தல்

சீசர் பிரடரிக்குக் காலத்தில் முத்துக்குளித்தலின் விவரத்தைப் பற்றி அவரே கூறும் செய்தியை நான் இங்குச் சேர்க்கிறேன். பிரடரிக்குக் குறிப்பிடும் கரையில் உள்ள முத்துக்குளிக்கும் இடம் காயல் ஒன்றுதானாகையால், காயலிலிருந்தோ அல்லது புன்னைக்காயலிலிருந்தோதான் அவர் முத்துக்குளித்தலைப் பார்வையிட்டிருக்க வேண்டும். சீசர் பிரடரிக்கு என்பவர் வெனிஸ் நாட்டு வணிகர். மார்க்கபோலோவின் நாட்டைச் சேர்ந்தவர். 1563 இலிருந்து 1581 வரை பதினெட்டு ஆண்டுகள் அவர் இந்தியாவில் இருந்தார். அவர் திருநெல்வேலிக்குச் சென்றதும் முத்துக்குளித்தலை 1563 ஆம் ஆண்டிலோ அல்லது அதை அடுத்த அண்மைக்காலத்திலோ தான் பார்வையிட்டிருக்க வேண்டும்.

### மன்னார் வளைகுடாவில் நடைபெற்ற முத்துக்குளியல்

கன்னியாகுமரியிலிருந்து காயலைச் சார்ந்த தாழ்ந்த கடற்கரைப் பூமியும் இலங்கைத் தீவும் முத்துக்குளிக்கும் இடமென்று வழங்கப்பட்டன. ஒவ்வோர் ஆண்டும் முத்துக் குளித்தல் மார்ச்சு அல்லது ஏப்ரலில் ஆரம்பித்து ஐம்பது நாட்கள் வரை நடைபெறும். முத்துக்குளித்தல் ஒவ்வோர் ஆண்டும் ஒரே இடத்திலேயே நடைபெறுவதில்லை; வெவ்வேறு இடங்களில் நடைபெறும்; ஆனால்,



ஒரே கடற்கரையிலேயே நடைபெறும். முத்துக்குளிக்கும் பருவம் ஆரம்பித்தவுடன் தண்ணீரில் எந்த இடத்தில் அதிகப்படியாக முத்துச்சிப்பிகள் இருக்கிறதெனக் கண்டுபிடித்துவரச் சிறந்த முத்துக்குளிப்பவர் சிலரை அனுப்புவார்கள். பிறகு முத்துக்குளிக்கும் இடத்திற்கு நேரே கடலைநோக்கிப் பல வீடுகள், கடைத்தெரு முதலியவைகளைக் கற்களாலேயே கட்டி முத்து நகர் ஒன்றை அமைப்பார்கள். இந்நகரம் முத்துக்குளித்தல் முடியும் வரை இருக்கும். இந்நகரத்திற்குத் தேவையான வசதிகள் அனைத்தும் செய்து கொடுக்கப்படுகின்றன. சிலசமயங்களில் இந்நகரம் ஏற்கெனவே மக்கள் வசிக்குமிடங்களுக்கருகே அமைக்கப்படும்; சில சமயங்களில் மனிதர் வசிக்காத வெற்று இடங்களில் அமைக்கப்படும். முத்துக்குளிப்பவர் அனைவரும் அந்நாட்டைச் சேர்ந்த கிறித்தவரே. கடற்கரையிலுள்ள அர்ச். பாலின் சீடர்களுடைய கோவிலுக்கும் போர்ச்சுகல் அரசருக்கும் குறிப்பிட்ட ஒரு வரி செலுத்தப்பட்ட பின் அந்த முத்துக்குளிப்பவர்கள் முத்துக்குளிக்கும் வேலையில் ஈடுபட அனுமதிக்கப்படுவார்கள். நான் பயணம் செய்யும்போது ஓர் ஆண்டு அங்கு இருக்க நேர்ந்தது. அப்பொழுது முத்துக்குளித்தலின்போது பின்பற்றப்படும் முறையை நான் கண்டேன். அது வருமாறு:-

'முத்துக்குளித்தல் தொடர்ந்து நடைபெறும் பொழுது மூன்று அல்லது நான்கு மறைவான படைவீரர் எப்பொழுதும் முத்துக் குளிப்பவர்களைக் கடல் கொள்ளைக்காரர்களிடமிருந்து காப்பாற்றுவதற்காக அங்கேயே காவல் இருப்பார்கள். வழக்கமாக முத்துக்குளிக்கும் படகுகள் மூன்று அல்லது நான்கு சேர்ந்து கூட்டமாகச் செல்லும். இப்படகுகள் வெனிஸ் நகரிலுள்ள மாலுமிப்படகுகளைப் போலிருக்கும். ஆனால், அவற்றைவிடச் சிறியனவாகவும் எழுவர் அல்லது எண்மரைக் கொள்ளக்கூடியனவாகவும் இருக்கும். ஒரு நாட்காலை அதிக எண்ணிக்கையுள்ள இப்படகுகள் புறப்பட்டு 15 அல்லது 18 பாகங்கள் (90 அல்லது 108 அடி) ஆழமுள்ள தண்ணீரில் நங்கூரம் பாய்ச்சி நிற்கும். இந்தக் கடற்கரைப் பிரதேசங்களின் கடலில் ஆழமே அவ்வளவுதான் இருக்கும். நங்கூரம் பாய்ச்சியபின் அவர்கள் ஒரு முனையில் பெரிய கல் கட்டப்பட்ட கயிற்றைக் கடலைநோக்கி வீசுவார்கள். பிறகு ஒருவன் தன் காதுகளை நன்றாக இறுக்கி மூடி உடம்பெல்லாம் எண்ணெய் தடவிக் கொண்டு, கழுத்திலோ அல்லது இடக்கையிலோ ஒரு கூடையைத் தொங்கவிட்டுக் கொண்டு கயிற்றின் வழியாகவே கடலுக்குக் கீழே சென்று, அவனால் எவ்வளவு வேகமாகப் பொறுக்க இயலுமோ அவ்வளவு வேகமாக முத்துச் சிப்பிகளைப் பொறுக்கிக் கூடையை நிரப்பிக் கொள்வான். கூடை நிரம்பியவுடன்

அவன் கயிற்றை ஆட்டுவான். படகிலிருக்கும் அவன் நண்பர்கள் கூடையுடன் அவனை மேலே இழுப்பார்கள். முத்துக்குளிப்பவர்கள் இதே விதத்தில் ஒருவரை அடுத்து ஒருவராக வரிசையாய் முழுகி, அந்தப் படகில் முத்துச்சிப்பிகள் நிரம்பும்வரை எடுத்துக் கொண்டு மாலை நேரத்தில் முத்துக்கிராமத்திற்குத் திரும்புவார்கள். பிறகு ஒவ்வொரு கூட்டத்தினரும் தனித்தனியே தூரத்தில் தத்தம் முத்துச்சிப்பிகளைக் குவிப்பர். அதனால், கடற்கரை ஓரத்தில் பெரிய முத்துச்சிப்பிக் குவியல்கள் வரிசையாகத் தொகுக்கப்பட்டவை போன்று காட்சியளிக்கும். இக்குவியல்களை முத்துக்குளித்தல் முடியும் வரை தொடமாட்டார்கள். பிறகு ஒவ்வொரு கூட்டத்தினரும் தத்தம் குவியல்களுக்கருகே உட்கார்ந்து சிப்பிகளைத் திறப்பர். இச்சமயத்தில் முத்துச்சிப்பியினுள் இருக்கும் பூச்சி இறந்து உலர்ந்துவிடுவதால் இவ்வேலை மிக எளிதாயிருக்கும். ஒவ்வொரு சிப்பியிலும் முத்து இருந்தால், அக்குவியல் மிக லாபகரமானது. ஆனால், வெறுஞ்சிப்பிகளும் அதிகமாய் இருக்கும். சிடினி (சேட்டுகள்) என்று வழங்கப்படுபவர்கள் முத்து ஆராய்வதைக் கற்றறிந்திருப்பவர்களை இங்கு வேலைக்கு அமர்த்தி முத்துகளின் எடை அழகு திறன் முதலியவைகளை வகைப்படுத்தி மதிப்பிட்டு நான்கு பிரிவுகளாகப் பிரிப்பார்கள். முதல்தர முத்துகள் போர்ச்சுகல் ஆயா (aia) என்று வழங்கப்படும். அவை போர்ச்சுகீசியருக்காக வாங்கப்படும். இரண்டாவது வகை வட்டமாய் இராது. அதற்கு வங்காள ஆயா எனப் பெயரிடுவர். மூன்றாவது பிரிவு இரண்டாவதைவிட மட்டமானது. அது கன்னடா ஆயா என்று வழங்கப்படும். இது பிஜநகர் அல்லது நரசிங்காவில் விற்கப்படுவதால் அதற்கு அந்த நாட்டின் பெயர் வழங்கப்படுகிறது. நான்காவது வகை மிகவும் மட்டமானது. இது கம்பாயா ஆயா. ஆயா என்பதன் பொருள் என்ன என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஹியா அல்லது குதிரை என்பது முதல் சிறந்த எட்டுவகை முத்துகளுக்கு இடப்பட்ட பெயராகும். இவை கி.மு.306 இல் அசோக சக்கரவர்த்திக்குத் துவேனி பிரதிகூசா என்ற அரசனால் அனுப்பப்பட்டன. (எமர்சன் டென்னட்டின் 'சிலோன்' என்னும் நூலைப் பார்க்க). சீசர் பிரடரிக்கினுடைய வகைகளும் ஏறக்குறைய அந்தந்த நாட்டின் ஆயா என்றுதான் வழங்கப்பட்டிருக்கின்றன. ஒரு சமயம் ஆயா என்ற சொல், வரி என்ற பொருளைக் குறிக்கும் 'ஆயம்' என்ற சொல்லாயிருக்குமோ! தூத்துக்குடி வணிகர்கள் போர்ச்சுகீசியர்கள் முதலியவர்களுக்குரிய வரியை முத்துகளாகவே செலுத்தியமையால், அவர்களுடைய எண்ணம் இதுவாயிருக்கலாம். ஆயா என்று வழங்கப்படும் இவை நாட்டிற்குள் விற்கப்படும். இவ்வாறு



பிரிக்கப்பட்ட முத்துக்கள் ஒவ்வொன்றிற்கும் விலை குறிக்கப்படும். பலநாடுகளிலிருந்தும் வணிகர்கள் பணத்துடன் வந்து காத்துக் கொண்டிருப்பார்கள். சில நாள்களில் எடைக்கும் தகுதிக்கும் தக்கவாறு எல்லா முத்துக்களையும் வியாபாரிகள் வாங்கிக் கொள்வார்கள்.

திருநெல்வேலி மக்கள் தொகை கணக்கீடு பற்றிய குறிப்புகளை எழுதிய ஆசிரியர் தம் புத்தகத்தில் மேலே கண்ட செய்தியையும் சேர்த்திருக்கிறார். அவர் முத்துக்குளித்தலைப் பார்வையிட்டு முந்நூறு ஆண்டுகளுக்குமுன் எழுதப்பட்டிருக்கின்ற முத்துக்குளித்தல் முறைப்படிதான் இன்றும் அது நடைபெறுகிறது என்றும் தெளிவாகாத சில காரணங்களால் இப்பொழுது தீவினையால் கரைகள் வியாபாரத்திற்குச் சிறந்த விலையுயர்ந்த முத்துக்களைக் கொடுப்பதில்லை என்றும் குறிப்பிட்டிருக்கிறார் (தமிழ் நாட்டில் முத்துக்குவியல் பற்றி அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாகிய திரு எஸ். அருணாசலம் அவர்கள் நூல் காண்க. - ந.ச.).

### போர்ச்சுகீசியர் ஆட்சியில் தூத்துக்குடி

கொச்சியிலிருந்து வந்த கப்பற்படை கடற்கரையிலுள்ள மகம்மதியர்களை அடக்கி வென்றதும் அதில் வந்து இறங்கிய பாதர் மிச்சல் வாஸும் அவருக்கு உதவி செய்ய துணைவந்த துறவிகளும் பரவர்களை மதம் மாற்றியபொழுது, 1532 இல் போர்ச்சுகீசியர் முதன்முதல் தூத்துக்குடியில் தோன்றினர். அவர்களால் மதம் மாற்றப்பட்டவர்களின் எண்ணிக்கை சுமார் 20,000 என்றும் அவர்கள் கன்னியாகுமரியிலிருந்து வடக்கேயுள்ள முப்பது கிராமங்களில் வசித்து வந்தார்கள் என்றும் கூறப்படுகிறது. அத்தகைய கிராமங்களுள் ஒன்று தூத்துக்குடிக் கிராமம். ஆனால், எப்பொழுது அங்கு நிலையான போர்ச்சுகீசியக் குடியேற்றம் ஏற்பட்டது என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. 1543 இல் புகழ்பெற்ற சேவியர் தூத்துக்குடிக்கு வந்தபொழுது அங்கே ஒரு போர்ச்சுகீசியக் கவர்னர் இருந்தார். எனவே அவர்கள் குடியேற்றத்தை ஏற்படுத்தியது 1532 முதல் 1542 வரை உள்ள பத்து வருடகால அளவிற்குள்ளேதான் இருக்க வேண்டும். ஆனால், 1532 முதல் சுமார் ஐம்பது ஆண்டுகள் வரை மதம் மாற்றப்பட்ட பரவர்களைப் போலவே தூத்துக்குடி மக்களும் போர்ச்சுகீசிய மக்கள் என்று மதிக்கப்பட்டார்கள்.

தூத்துக்குடி என்ற இடத்தின் சரியான ஆங்கிலப் பெயர் 'டூட்டி கொரின்' என்பது (மொழி நூலறிஞர் கால்டுவெல்லா இப்படி எழுதுவது? - ந.ச.). ஐரோப்பியர்களின் உச்சரிப்பில் தூத்துக்குடி என்பதிலுள்ள

இறுதிவல்லின இகரம் ரகரமாக ஒலிக்கப்பட்டதால் தூத்துக்குடிக்கு இப்பெயர் ஏற்பட்டது. இதேவிதமாகவே அருகிலுள்ள மற்றோர் ஊரின் பெயராகிய மணப்பாடு என்பது 'மணப்பார்' என்றாயிற்று. டூட்டிகொரின் என்பதிலுள்ள கடைசி னகர மெய் ஓசைநயம் காரணமாகச் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். அதேபோலக் கொச்சி என்பது கொச்சின் ஆகவும் குமரி என்பது கோமரின் எனவும் மாறின (எப்படி அமைதி). தூத்துக்குடி என்ற சொல்லுக்குக் 'கிணறுகள் தூர்த்து நிரப்பப்பட்ட நகரம்' என்பது பொருள், தூத்து என்பது சரியான தமிழில் 'தூர்த்து' என வழங்கும். கிணற்றை நிரப்பித் தரைமட்டமாக்குதல் என்பது இதன் பொருள். குடி என்பது வசிக்குமிடம். அதாவது, நகரம். இந்தச் சொல்லிலக்கணம் சரியோ தவறோ, ஆனால் ஏறக்குறையத் தகுதியானப் பொருளைத் தருகிறது. ஏனெனில், பழைய கிணறுகளைத் தூர்த்து விட்டுப் புதிய கிணறுகளை வெட்டுவது தூத்துக்குடியில் நாள்தோறும் நடைபெறும் நிகழ்ச்சியாகும். தூத்துக்குடி சாதாரண கிராமந்தான். போர்ச்சுகீசியர் வருகைக்கு முன் சிறிது வியாபாரமும் இங்கு நடைபெற்று வந்தமை தெரிகிறது. ஆனால், போர்ச்சுகீசியர் இவ்விடத்தைப் பெரிதும் விரும்பித் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம், இங்குத் துறைமுகம் இருந்ததுதான். சோழ மண்டலக் கடற்கரையிலேயே இது ஒன்றுதான் முழு இயற்கைத் துறைமுகம். எல்லாப் பருவக்காற்றுகளிலிருந்தும் இத்துறைமுகம் தீவுகளாலும் மணல் மேடுகளாலும் இயற்கையிலேயே காப்பாற்றப்பட்டிருந்தது. ஆனால், தீவினைப் பயனாக இதன் ஆழம் மிகக் குறைவாயிருந்தமையால், இங்கு அறுபது டன் எடையுள்ள கப்பல்கள் மட்டுமே மிதக்கும். இந்தக் குறைபாடு மட்டும் இல்லாதிருந்தால், தூத்துக்குடி சென்னையையும் மிஞ்சிவிடும். எனவே, போர்ச்சுகீசியர் சில காலம் வரை புன்னைக்காயலைத் தமது முக்கிய நிலையமாக வைத்துக் கொண்டனர். ஆனால், அங்குத் துறைமுகத்திற்கான எவ்விதப் பொருத்தமும் இல்லாமல் திறந்த வெட்ட வெளி சாலை ஒன்றுதான் இருந்தது. ஆகையால், சுமார் 1580 ஆம் ஆண்டில் போர்ச்சுகீசியர் தூத்துக்குடியைத் தலைமைக் குடியேற்ற நகர் ஆக்கிக் கொண்டனர். பழம் போர்ச்சுகீசியர் பயன்படுத்திய மரக்கலங்கள் ஐரோப்பாவில் கட்டப்பட்டன. எனினும், அவை பெரிய உருவமுள்ள நல்ல நாட்டு மரக்கலங்களைவிட மிகப் பெரியனவல்ல. அதனால் அவை துறைமுகத்திற்குள் சுமையை ஏற்றி இறக்க வசதியுள்ளனவாய் இருந்தன. மேலும் இப்போது இருப்பதைவிட மிகக் குறைவான ஆழமே அத்துறைமுகத்திலிருந்திருக்க வேண்டும். இச்செய்தி உத்தேசமன்று; உறுதியானதேயாகும். ஏனெனில், பல ஆண்டுகளாகக் கடற்கரை வேகமாய் உயர்ந்து வருவதை நிறுவத்தக்க பல சாட்சியங்கள் இருக்கின்றன.



கலங்கரை விளக்கம் அமைக்கப்பட்டிருக்கின்ற முக்கியமான தீவு பாண்டியன் தீவு என்று வழங்கப்படுகிறது. இந்தத் தீவிற்கு வெளியேயுள்ள ஆழமற்ற தண்ணீரில் கடல் நுரைக்கல் அதிகமாகக் கிடைக்கின்றது. தூத்துக்குடி நகரத்தில் மக்கள் தரையைத் தோண்டினால் இரண்டு அடி ஆழத்தில் ஒரு மெல்லிய படிவை (அடுக்கு) கண்டனர். அங்குக் காணப்பட்ட சிறிய தானியம் போன்ற மணற்கற்களை உள்நாட்டு மக்கள் உப்புக்கல் என்று கூறுவார்கள். கடல்நீரில் இந்நிலம் மூழ்கிய பொழுது மேற்படலம் கடினமானதால் ஏற்பட்டதே இந்த உப்புக் கல். அதற்குக் கீழுள்ள படலம் பெரிய தானிய அளவுள்ள கற்கள் மேலும், சிறிய கற்கள் கீழுமாக வண்டல் தெளியும் போது ஏற்படுவது போலக் கடல் மணல் இருப்பதை நாங்கள் கண்டோம். கடல் மணல், கிளஞ்சில்கள், ஆழமான கடலிலுள்ள கிளிஞ்சில்கள் முதலியன மேல்மட்டத்திலோ அல்லது அதற்குச் சில அங்குலங்கள் கீழேயோ இருக்கின்றன. இத்தகைய மணல் பாளையங்கோட்டைக்குச் செல்லும் வழியில் ஐந்தாவது மைல் கல்லருகே உள்ள கொரம்பள்ளம் வரை அமைந்திருக்கின்றது.

மற்ற இடங்களில் இருப்பதுபோலக் கடற்கரை முழுவதிலும் இந்த உப்புக்கல் விளைவு இருக்கிறது. உள்நாட்டில் அரை மைல் தூரம் வரை கூட இது காணப்படுகிறது. அதில் அதிகமாக இக்காலக் கிளிஞ்சில்கள் நிறைந்துள்ளன. ஆனால், உப்புக்கல்லருகே உள்ள கிளிஞ்சில்கள் உறுதியான கற்களாகவே உருமாறியிருக்கின்றன. மேல் பரப்பிலே கிடக்கும் கிளிஞ்சில்கள் கடினமாகி உருமாறுவதில்லை. பல கிளிஞ்சில்கள் அப்படியே இருக்கின்றன. சிலவற்றின் இயற்கை வண்ணங்கூடப் பழுதடையாமலிக்கிறது. அவற்றுள் சங்குகள், விலங்குகளின் உப்புப் போன்ற ஓடுகள் (Pectens), கிளிஞ்சில்கள், சில முத்துச் சிப்பிகள் இருப்பதைக் கண்டேன். கோரம்பள்ளம் மதகுக்கருகிலுள்ள இடங்களில் நான் இந்தச் சங்கு முதலியவைகளைக் கண்டேன். இப்பகுதி தூத்துக்குடியிலுள்ள தற்போதைய கடல்மட்டத்திற்கு மேலே 11 அடி உயரமுள்ளதாயிருக்கிறது. சங்குகள் சாதாரணமாக 7 பாகம் (42 அடி) ஆழமுள்ள தண்ணீரில் காணப்படுகின்றன. ஆனால், நாம் 5 பாகம் குறைவான ஆழமாக எடுத்துக் கொள்ளலாம். இவற்றின் வழக்கமான இருப்பிடம் 30 அடி ஆழந்தான் என்று அளவிடப்பட்டிருக்கிறது. இந்தக் குறைவான ஆழம் 11 பாகமானால் குறைந்தது 40 அடி ஆழத்தில் அவை காணப்படும். ஏனெனில், அந்தக் காலத்தில் தூத்துக்குடியில் கடலின் ஆழம் தூர்ந்தபோது கொரம்பள்ளத்திலுள்ள கடலடியிலே இந்தக் கிளிஞ்சில் மீன்கள் வசித்து வந்தன. இந்த முடிவைத் தூத்துக்குடிவாசிகள்

செவிவழிக் கதையின் பேரால் உறுதிப்படுத்துகின்றார்கள். கொரம்பள்ளம் வரை சமுத்திரம் பொங்கிவந்த போது முதன்முதல் தூத்துக்குடி இங்கேதான் கட்ட ஆரம்பிக்கப்பட்டது. ஆனால், கடல் வரம்பு உள்ளே செல்லச் செல்லக் கிழக்குப் பக்கமாகவே தள்ளித்தள்ளி அவர்கள் வீடுகளைக் கட்டிக் கொண்டார்கள். இப்போது தூத்துக்குடி இருக்கும் இடம் வரை அவ்வாறே வீடு கட்டிக் கொணடே சென்றனர். இந்தத் தூத்துக்குடி வெள்ளையர் வருகை வரையில் அங்கேயே இருந்தது. கொரம் பள்ளத்திலுள்ள பூமியின்மேல் காணப்படும் கடற்கிளிஞ்சில்களுக்குக் காரணம் சொல்ல இயலாத மக்கள், இந்தக் குறிப்பைக் கற்பனை செய்து வாய்மொழிக் கதையாய்க் கூறுகிறார்கள் என்று தோன்றுகிறது. நிலம் உயர ஆரம்பித்த காலம், இக்கதை கூறுவதுபோல, அவ்வளவு சமீப காலமாய் இருக்க இயலாதென்று நான் நினைக்கிறேன். ஆனால், ஒருவேளை திருநெல்வேலியில் மக்கள் வசிக்கத் தொடங்கிய காலத்திற்குப்பின் கடல் மேடிட்டிருக்கலாம் (பின் குறிப்புப் பார்க்க IV).

**தூத்துக்குடியைப் பற்றிய நம்பத்தக்க குறிப்புகள்**

தூத்துக்குடியில் போர்ச்சுகீசியர் குடியேற்றத்தை நிறுவியதைப் பற்றிய முதல் நம்பகமான செய்தியைச் சேவியரின் கடிதங்களில் நான் கண்டேன். அக்கடிதம், 1542 முதல் 1544 வரை தூத்துக்குடியிலிருந்தோ அதற்கு அருகேயுள்ள இடங்களிலிருந்தோ எழுதப்பட்டிருக்கின்றன. அப்பொழுது தூத்துக்குடியில் ஒரு கவர்னர் இருந்தார். அவரே கடற்கரையிருந்த மற்றக் குடியேற்ற நாடுகளுக்கும் கவர்னராய் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், சேவியர் தம் உதவியாளராகிய பிரான்ஸிஸ் மான்ஹியாசுக்கு எழுதிய கடிதங்களில் கவர்னரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுதுதெல்லாம் ஒருமையிலேயே எழுதுகின்றார். இதே அலுவலர்கள் பிற்காலத்தில் முத்துக்குளித்தலின் தலைவரென வழங்கப்பட்டிருக்கலாம். தூத்துக்குடியைப் பற்றிய முக்கியமான கடிதம் அதன் அழிவைப் பற்றியும் குறிப்பிடுகிறது. அக்கடிதம் அலந்தாளியிலிருந்து 1544 செப்டம்பர் 5 ஆம் தேதி எழுதப்பட்டுள்ளது. இந்த ஊர் பரவர்களின் சிறிய கிராமம். இது திருச்செந்தூருக்குத் தெற்கே மூன்று மைலில் உள்ளது. தூத்துக்குடி கவர்னரைப் பயங்கர படகர்கள் (மதுரை நாயக்கர்கள்) தாக்கினார்கள். இச்செய்தியைத் தரும் சேவியருடைய கடிதம் புன்னைக்காயலிலிருந்த மான்ஹியாஜுக்கு எழுதப்பட்டிருந்தது. "இப்பொழுதுதான் தூத்துக்குடி கவர்னரைப் பற்றிய இரங்கத்தக்க செய்தியைக் கேள்வியுற்றேன். அவருடைய கப்பல் தீக்கிரையாக்கப்பட்டிருக்கிறது. கரையிலிருந்த அவருடைய வீட்டிற்கும் நெருப்பு வைக்கப்பட்டது. அவரிடமிருந்து எல்லாப் பொருள்களையும் கொள்ளைக்காரர் பறித்துக் கொண்டனர். அவர் மனமுடைந்து அனாதையாய்த் தீவிற்குத் திரும்பினார். தருமத்தின் பெயரால் உன்னை நான் வேண்டுகின்றேன். பறந்து சென்று அவர் துயரம் துடை. உன்னுடன் கூட உன்னால் முடிந்தவரை புன்னைக்காயலில் உள்ள உன் ஆள்கள் அத்தனை பேர்களையும் உடன் அழைத்துச் செல். அங்கிருக்கும் எல்லா மரக்கலங்களிலும் உணவுப் பொருள்களை நிரப்பிக் கொண்டு முக்கியமாகக் குடிதண்ணீர் சேகரித்துக் கொண்டு செல். தாமதம் செய்யாது புறப்படு. ஏனெனில், சிறிது தாமதங்கூடத் துன்பத்தின் எல்லையிலுள்ள அவனுக்குப் பயனில்லாது போய்விடும். கம்பத்தூர் பெம்பாரி (பெம்பாரி என்பது 'வேம்பாறு' என்பதை ஒத்திருக்கிறது. நெடுநாளைக்கு முன்பாகவே சிலரால் தூரத்திலுள்ள கோயம்புத்தூர் என்று வழங்கப்படும் 'கம்பத்தூர்' காயற்பட்டினத்திற்கு அருகேயுள்ள கொம்புகீரையர் என்ற முத்துக் குளிக்கும் கிராமம் என்பதைக் கண்டுபிடித்தேன்.)யிலுள்ள படங்கர்களுக்கும் (தலையாரிகளுக்கும்) படங்காடு என்பதற்குப் பட்டங்கட்டி பட்டத்தை உடையவன் - என்பது பொருள்). பரவர் தலைவனுக்கு இப்படிப்பட்ட பெயரும் உண்டு) அவசரமாக நான் கடிதம் எழுதியுள்ளேன். அதில் அவர்கள் கவர்னருக்குச் செய்ய வேண்டிய கடமையின் இன்றியமையாமையும் அவர்களாலான எல்லா உதவிகளையும் உனக்குச் செய்யும்படியும் தெரிவித்திருக்கிறேன். உணவு, நல்ல தண்ணீர் முதலியவைகளைப் பல மரக்கலங்களில் நிரப்பச் செய். பல மரக்கலங்கள் அனுப்பப்பட வேண்டுமென நான் விரும்புகிறேன். இம்மரக்கலங்கள் கவர்னர் அங்கே துரத்தப்பட்டது போலத் துன்பத்திற்குள்ளாகித் துரத்தப்பட்டு மலைகளில் ஒளிந்திருக்கும் பலவிதமான மக்களையும் நாட்டிற்கு அழைத்துவரப் பயன்படும் என்று எழுதியுள்ளார். மேலும், 'அதே துன்பம் எல்லாக் கிறித்தவர்களையும் பிடித்திருக்கிறது' என்றும் குறிப்பிடுகிறார். அறிந்து கொள்ள இயலாத காரணங்களால் சீக்கிரத்திலேயே இத்தகைய துன்பங்களுக்கு ஒரு முடிவு ஏற்பட்டது.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு சேவியர் மான்ஹீயஸுக்கு திரும்பவும் எழுதுகிறார்: 'நாடு கடத்தப்பட்ட முத்துக் குளிப்பவர்களாகிய கிறிஸ்தவர்களின் வீட்டைக் கைப்பற்றியிருக்கும் யாருக்கும் முத்துக்குளியலில் வேலை கொடுக்க வேண்டாமென்று நான் கூறியதாக என் பர்மோஸாவிடம் கூறு. (அப்பொழுது அவரே கவர்னர் அல்லது முத்துக் குளிப்பவர்க்குத் தலைவர்). இது பற்றி எனக்கு அரசரும் வைஸ்ராயும் அதிகாரம் அளித்திருக்கின்றமையால், நான்

இதை உறுதியாகத் தவிர்க்க எண்ணுகிறேன். "சேவியரின் வாசகத்தைக் கவனிக்கும்போது அவர் அதிகமான அதிகாரங்கள் பெற்ற அரச கமிஷனராயிருந்திருக்க வேண்டுமென்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அதே சமயத்தில் போர்ச்சுகல் அரசனிடமிருந்து முத்துக்குவியல் வேலை முழுவதும் கிறிஸ்தவர் வசமாய் இருக்க வேண்டுமென அதிகாரப்பூர்வமான கட்டளையையும் பெற்றார்.

முன்போலவே கீழ்க்காணும் தூத்துக்குடி பற்றிய செய்திகளுக்கு நான் டாக்டர் பர்னலுக்கு மிக்க கடப்பாடுடையேன்.

சேவியர் கடற்கரையிலிருந்த காலமாகிய 1544 இல் கிறிஸ்தவர்கள் அதிகமாக வசித்துவந்த இடங்கள் தூத்துக்குடியும் மணப்பாடுமாகும் என்று 1560 இல் எழுதிய கொரியா என்பவர் கூறுகிறார்.

1582 இல் தூத்துக்குடியில் ஒரு கிறிஸ்தவக் கோவில் கட்டப்பட்டதென டிசௌஸா கூறுகிறார். அது நோஸா சென்ஹாராடா பெய்டாடி என்பவருக்கு உரிமையாக்கப்பட்டது என்றும் முதல் பூசை அன்று 600 பேர் திருவமுது (உணவு) பெற்றனர் என்றும் அதில் கூறியிருக்கிறது. இந்தப் பெயர் தவறான பெயராயிருக்கலாமென்று தோன்றுகிறது. இக்கோவில் தொடர்பான பெயரை 'ரோமன் கத்தோலிக்க மதபோதகர்' என்ற அத்தியாயத்தில் 1600 இல் குவரிரோ எழுதிய வாசகத்தை நோக்குக.

1596 இல் ஏற்பட்ட லஞ்சோடன் உலகப்படத்தில் காயல் மட்டும் இருக்கிறது. தூத்துக்குடி குறிக்கப்படவில்லை. அதற்குப் பதிலாக முத்துக்குளித்தல் தலைவனைப் பற்றிய குறிப்பை மட்டும் அவர் கொடுத்திருக்கிறார்.

தூத்துக்குடி, மணப்பாடு, புன்னைக்காயல், கொம்பு கீரையூர், ஆலந்துளை, காயல், தாளை, வீரபாண்டியன் பட்டணம், வேம்பாறு, குரிம் (புதுக்குடி), திருச்செந்தூர் பட்டினம் முதலிய இடங்கள் கடற்கரையிலும் அதை அடுத்துள்ள பகுதிகளிலும் இருப்பதை நான் கண்டேன்.

1658 இல் டச்சுக்காரர்கள் போர்ச்சுகீசியரிடமிருந்து தூத்துக்குடியைக் கைப்பற்றியதைப் பற்றி பல்டியஸ் கூறுகிறார். கடற்கரையிலிருந்து கிறிஸ்தவ கோயில்களைப் பற்றியெல்லாம் எழுதியிருக்கின்ற அவர் போர்ச்சுகீசியக் குடியேற்ற நாட்டைப் பற்றி எதுவும் கூறவில்லை. அக்காலத்தில் போர்ச்சுகீசியர் ஆதிக்கத்தைத் தொடங்கும் போது கடற்கரையிலிருந்த இடம் தூத்துக்குடி ஒன்றுதான்



என்று நாம் கொள்ள வேண்டும். தூத்துக்குடியில் கோட்டை அரண் கட்டப்படவில்லை என்று பாஸ்டியஸ் கூறுகிறார். 1700க்கு முன் டச்சுக்காரர்கள் தூத்துக்குடியில் ஒரு கோட்டை கட்டியதாகச் சொல்லப்படுவதால், அவர் அவ்வாறு எண்ணுகிறார் போலும்! எனினும், அதற்கு முன்பாகவே இப்போது உயர்சாதித் தமிழ்மக்கள் வசிக்கும் நகரப் பகுதி வாடி அதாவது அடைக்கப்பெற்றது என்று வழங்கப்பட்டது. போர்ச்சுகீசியர் காலத்திலும் டச்சுக்காரர்கள் காலத்திலும் தூத்துக்குடியின் முக்கிய வாணிகங்கள் இலங்கையுடன் நடைபெற்று வந்தன.

போர்ச்சுகீசியர் காலத்து நினைவுச் சின்னங்களாகத் தூத்துக்குடியிலிருப்பது ஒன்றும், கோவா கிறிஸ்தவக் கோவிலில் மற்றொன்றும் உள்நாட்டு ரோமன் கத்தோலிக்கப் பெண் ஒருத்தியின் சமாதிக்கல் ஒன்றுமாகும். 1618இல் நாட்டப்பட்ட இக்கல்லில் அப்பெண்ணின் பெயர் போர்ச்சுகீசியப் பெயராய்ப் பொறிக்கப்பட்டுள்ளது. தூத்துக்குடியிலுள்ள பழமையானப் பொருள் மிகப் பெரிய பாபாப் மரம். அது கிறிஸ்தவக் கோவிலுக்கு அருகே உள்ளது. அம்மரம் பூர்வீக அராபிய வணிகர்களால் நடப்பட்டிருக்க வேண்டும். அம்மரம் கிறிஸ்தவக் கோவில் கட்டப்படுவதற்கு முன்பே அங்கு இருந்ததென வாய்மொழிக் கதை கூறுகிறது. பாபாப் என்பது ஒரு ஆப்பிரிக்க மரம். அதை நீக்கிரோக்கள் 'மங்கிபிரட்' என்று வழங்குவார்கள். தூத்துக்குடி வாசிகள் அதைப் 'பெயரில்லா மரம்' என்று வழங்குகிறார்கள்.

#### டச்சுக்காரர் ஆட்சியில் தூத்துக்குடி

1595இல் முதன்முதல் டச்சு வியாபாரக் கப்பல் கிழக்கு நோக்கிப் புறப்பட்டது. 1602 இல் முதல் டச்சுக்கப்பல் இலங்கைக்கு வந்தது. அந்த ஆண்டிலிருந்து 1658 வரை போர்ச்சுகீசியர் இலங்கையிலிருந்தும் சோழமண்டலக் கடற்கரையிலிருந்தும் வெளியேற்றப்பட்ட காலம் வரை டச்சுக்காரர்களும் போர்ச்சுகீசியரும் ஓயாத போரில் ஈடுபட்டிருந்தனர். தூத்துக்குடியைப் பிடிப்பதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன் 1655 இல் டச்சுக்காரர்கள் கொழும்பைக் கைப்பற்றினார்கள்.

டச்சுக்காரர்களுக்கு வேம்பாறு, வைப்பாறு, புன்னைக் காயல், பழைய காயல், மணப்பாடு, கன்னியாகுமரி முதலிய இடங்களில் வர்த்தகசாலைகள் இருந்தன. தலைமை வர்த்தக சாலைகளிலிருந்து நெடுந்தூரத்தில் உள்நாட்டிற்குக் கூட உதாரணமாக ஆழ்வார் திருநகரியைப் போன்ற இடங்களில் பல வாணிபசாலைகள் இருந்தன.

நெடுங்காலத்திற்குப்பின் தூத்துக்குடியில் கவர்னரைவிடச் சிறப்புப் பொறுப்புகள் அதிகாரங்கள் வாய்ந்த ராஜப் பிரதிநிதியை நியமித்தனர். டச்சுக்காரர்கள் போர்ச்சுகீசியரைப் போன்று கடற்கரைச் செம்படவராகிய பரவர்களை ஆளும் ஆட்சி அதிகாரத்தைக் கேட்க வில்லை. ஆனால், அவர்களுடைய ஆதரவாளர்களும் காப்பாளர்களுமாய் இருந்தார்கள். எனவே, பரவர்கள் உள்நாட்டு இந்து மகம்மதிய அரசர்களின் படையெடுப்புக் கொடுமைகளினின்றும் காப்பாற்றப்படுவதற்காக அருகிலுள்ள டச்சுக்காரருடன் நட்புரிமையுடன் வாழ வேண்டியிருந்தது. டச்சுக்காரர் வருகைக்கு முன்பு பரவர் சாதியைச் சேர்ந்தவர்களின் தலைவனாகிய சாதித் தலைவன் வீரபாண்டியன் பட்டத்திலிருந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால், சாதித் தலைவனுக்கு இருக்கின்ற செல்வாக்கைப் பயன்படுத்திக் கொள்ள எண்ணிய டச்சுக்காரர்கள் சாதித் தலைவனைத் தூத்துக்குடியிலேயே வசிக்குமாறு தூண்டினார்கள்.

1700 இல் பிரஞ்சு மதபோதகரான தவத்திரு மார்ட்டினின் ஒரு கடிதம் லாக்மானுடைய 'கிறிஸ்தவ மதபோதகரின் பயணங்கள்' என்பதில் வெளியிடப்பட்டுள்ளது. அதில் அவர் தூத்துக்குடி 50,000 மக்களுக்கு மேல் வாழும் செழிப்பான நகரம் என்பதை விவரித்துள்ளார். மக்கள் தொகையைப் பற்றி அவர் குறிப்பிடும் கணக்கை நான் ஐயுறுகிறேன். இப்பொழுது அது கடற்கரையிலே மிகச் செழிப்பான நகரமாய் விளங்குகிறது. புகைவண்டி இறுதி நிலையமாயுமிருக்கிறது; நகராட்சியால் ஆளப்பெறுகிறது. ஆயினும் 1871 இல் எடுத்த மக்கள் தொகைக் கணக்குப்படி மக்கள் தொகை 11,000 க்கும் குறைவாகவே உள்ளது. அதே ஆசிரியர் கடற்கரையிலுள்ள ஒரே இயற்கைத் துறைமுகம் தூத்துக்குடிதான் என்று எழுதியுள்ளார். இங்குப் புயற்காலங்களில் ஐரோப்பிய மரக்கலங்கள் பத்திரமாய் இருக்கும். அதிலிருந்து இப்போதிருப்பதைவிட அப்பொழுது ஆழம் அதிகமாய் இருந்ததோ அல்லது ஐரோப்பிய மரக்கலங்கள் சிறியனவாய் இருந்தனவோ, அல்லது இரண்டும் சேர்ந்திருந்தனவோ. ஏதோ ஒரு காரணத்தால், 1700 இல் ஐரோப்பிய மரக்கலங்கள் துறைமுகத்திற்குள் நுழைந்தன என்பது தெரிகிறது. அவர் மேலும் கூறுவதாவது: 'கடல் வழியாகத் தூத்துக்குடிக்குச் செல்பவர்களுக்கு அது அழகிய ஒரு நகரமாய்க் காட்சி அளிக்கின்றது. அங்குள்ள இரண்டு தீவுகளிலும் மிக உயரமான கட்டடங்கள் நிழல் தருமாறு அமைந்துள்ளன. டச்சுக்காரர்கள் சில ஆண்டுகளுக்குப்பின் அதே போல உள்நாடுகளிலிருந்து வரும் விக்கிரக ஆராதனைக்காரர்களின் அவமதிப்பினின்றும் தங்களைக் காத்துக் கொள்ள ஒரு சிறிய கோட்டையும் கட்டப்பட்டது. கடற்கரை ஓரத்திற் பல விரிவான பண்டகசாலைகள் கட்டப்பட்டன. அவை



அனைத்தும் மிக அழகான தோற்றமுடையனவாயிருந்தன. ஆனால், அவற்றைப் பார்க்க வந்தவன் கரையில் இறங்கியவுடனே எல்லா அழகும் மறைந்துவிடும். அதிகமாகப் படல்களாலாகிய வீடுகளே நிறைந்த ஒரு பெரிய நகரத்தைத் தவிர அங்கு வேறு எதையும் பார்க்க இயலாது. டச்சுக்காரர் தூத்துக்குடியிலிருந்து போதுமான வரிவசூல் செய்து வந்தனர். முழு முத்துக்குளித்தல் கடற்கரையும் பாதி மதுரை அரசருக்கும் மற்றவை மறவர் இளவரசனுக்கும் உரிமையாயிருந்தன. இம்மறவ நாட்டு இளவரசன் மதுரை அரசனுக்குக் கப்பம் கட்டுபவன். ஆனால் அவன் விரைவிலேயே மதுரை அரசனை வேரோடு அசைத்து ஆட்டங்காணச் செய்துவிட்டான். சில ஆண்டுகளுக்குப் பிறகு முத்துக் குளித்தல் கரையின் முழு உரிமையையும் அதைச் சார்ந்த நாடுகளின் அதிகாரத்தையும் விலைபேசி வாங்க டச்சுக்காரர்கள் முயன்றார்கள். இக்காரணத்தால் டச்சுக்காரர்கள் மறவ நாட்டரசரிடம் மிக அழகிய பரிசுகளுடன் ஒரு திறமையுள்ள தூதுவரை அனுப்பி வைத்தார்கள்.

இளவரசரோ பரிசுகளைப் பெற்றுக் கொள்வதே தகுதியானது என்று ஏற்றுக் கொண்டு, பல கருத்துகளுக்கு வாக்களித்தார். ஆனால், அவர் வாக்குப்படி நடந்து கொள்ள வில்லை.

அதற்குள் டச்சுக்காரர்கள் மதுரை அரசரிடமிருந்து திருநெல்வேலிக் கடற்கரை முத்துக்குளிப்பிடங்களின் அதிகாரங்களைப் பெற்றுவிட்டார்கள். அதனால், முத்துக்குளிக்க அனுமதிபெறும் கட்டண வருமானத்தில் அவர்களுக்குப் போதுமான வருமானம் வந்தது. முத்துக்குளிக்க விண்ணப்பிக்கும் ஒவ்வொருவருக்கும் தலைக்கு அறுபது எகுகள் (இதை எழுதிய ஆசிரியர் பிரஞ்சுக்காரரானதால், அக்காலத்தில் வழக்கிலிருந்த பிரஞ்சு நாணயத்திலேயே மதிப்பைக் குறிப்பிடுகிறார். எகு என்பது ஐந்து பிராங்குகள் மதிப்புள்ளது. இக்காலத்தில் அந்த நாணயம் வழக்கற்று விட்டது) வரிவிதிக்கப்பட்டிருந்தது. சில சமசமயங்களில் அனுமதிக்கப்படும் ஒவ்வொரு படகிற்கும் அதிகப்படியான வரி விதிப்பதும் உண்டு. இவ்வாறு அனுமதி பெற்ற மரக்கலங்கள் அறுநூறு அல்லது எழுநூறாயிருக்கும். சங்கு, சிப்பி எடுத்தலும் அதே முத்துக்குளிக்கும் வரையறைக்குட்பட்டிருந்தது. இதனாலும் நல்ல லாபம் கிடைத்தது. மதுரையில் நெய்யப்பட்ட துணிகளை வாங்கிக் கொண்டு அவற்றிற்குப் பதிலாக ஜப்பான், தோல், மொலுகா வாசனைத் திரவியங்களைக் கொடுத்துச் சாதாரணமாக வாணிபம் செய்வார்கள். இந்தக் குறிப்புகளெல்லாம் கிடைக்கின்ற கடிதங்களை எழுதியிருக்கும் கிறிஸ்தவ மத போதகர்கள், 1700 இல் டச்சுக்காரர்கள் எந்த முறையில்

முத்துக்குளித்தார்கள் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்கள். மார்க்கபோலோ, ஸுஸர் பிரடரிக்கு என்பவர்களுடைய விளக்கங்களை ஏற்கெனவே நான் கூறியிருக்கிறேன். என்றாலும், தெளிவும் முழுமையுமுடைய இந்த விளக்கங்களையும் விட்டுவிட நான் விரும்பவில்லை.

### 1700 இல் நடந்த முத்துக்குளிப்பை பற்றி மார்ட்டின் தரும் குறிப்பு

ஆண்டின் தொடக்கத்திலேயே டச்சுக்காரர்கள் பத்து அல்லது பன்னிரண்டு மரக்கலங்களை வெவ்வேறு திசைகளில் அனுப்புவார்கள். இவர்கள் எந்த இடத்தில் முத்துக்குளிப்பது சிறந்ததாய் இருக்கும் என்பதை ஆராய்வார்கள். ஒவ்வொரு மரக்கலத்திலுமுள்ள முத்துக்குளிப்பவர்களும் ஆங்காங்கே இறங்கி ஒருசில ஆயிரம் முத்துச்சிப்பிகளைக் கொண்டுவந்து தனித்தனியே கடற்கரையில் குவித்து வைப்பார்கள். பிறகு அவற்றைத் திறந்து ஆராய்வார்கள். ஒவ்வொரு குவியலிலுள்ள முத்துகளும் முத்து ஆய்வு செய்பவர்களால் ஓர் எகு அல்லது அதிக மதிப்புடையதாயிருக்கும் என்று சொல்லப்பட்டால் அந்த முத்துச்சிப்பிக் குவியல் எடுத்த இடத்தில் முத்துக்குளித்தல் சிறந்த முத்துகளைத் தரும் என்பதை அறிந்து கொள்வர். முப்பது சௌருக்கு (Sour) அதிகமாக மதிப்பில்லாதிருந்தால், அந்தச் சிப்பி எடுத்த இடத்தில் முத்துக் குளிப்பவர்களை வேலைக்கமர்த்தி அதை நடை பெறச் செய்வதற்கான செலவிற்குத் தேவையான பணத்தைவிட அதிகமான பணம் கிட்டாது. ஆய்வு முடிந்தவுடன் அந்த ஆண்டில் முத்துக்குளித்தல் நடைபெறுமா நடைபெறதா என்பது பொதுமக்களுக்கு அறிவிக்கப்படும். முத்துக்குளித்தல் நடந்தால், அது ஆரம்பமாகும் தேதியன்று மக்கள் கூட்டம் கூட்டமாக முத்துக்குளிக்கும் கரையில் கூடுவார்கள். வியாபாரிகள் பலவிதமான வியாபாரப் பொருள்களுடன் அங்கு வந்திருப்பார்கள். துறைமுகத்தில் கப்பல்கள் வந்து கூடியிருக்கும். முரசுகள் முழங்கும். துப்பாக்கி வேட்டுகள் எழுப்பப்படும். டச்சு ஆணையர் (கமிஷனர்) கொழும்பிலிருந்து வந்து இறங்கும்வரை எல்லா இடங்களிலும் மிகுந்த பரபரப்பு இருக்கும். அவ்வாணையர் மிக்க ஆடம்பரத்துடன் வந்து இறங்கித் துப்பாக்கிகள் வெடித்து விழாவைத் தொடங்கி வைக்கக் கட்டளையிடுவார். அதற்கடுத்தாற்போல முத்துக் குளிக்கும் மரக்கலங்கள் எல்லாம் நங்கூரம் வலித்துச் சமுத்திரத்திற்குள் நகரும். அவற்றிற்குமுன் சிறிய டச்சுக் கப்பல்கள் முன்னோடிபோல முத்துக்குவியல் நடைபெற வேண்டிய எல்லை வரையறையைக் காட்ட வலப்புறமும் இடப்புறமும் விலகிச் சென்று நிற்கும். ஒவ்வொரு



மரக்கலமும் அதனதன் இடத்தை அடைந்ததும், அதிலும் பாதி எண்ணிக்கையுள்ள குளியர்கள் கடலில் முழுகுவார்கள். ஒவ்வொருவரும் வேகமாய்த் தண்ணீருக்குள் முழுகத் தம் காலில் கனமான கல்லைக் கட்டிக் கொள்வர். அவர்கள் தங்களுடன் ஒரு சாக்குப் பையையும் கொண்டு செல்வார்கள். அவர்கள் உடலில் கயிற்றின் ஒரு முனை பிணைக்கப்பட்டிருக்கும். மற்றொரு முனையை ஒரு கம்பியின் வழியாகச் சுற்றிப் படகிலிருப்பவர்கள் பிடித்துக் கொள்வார்கள். இவ்வளவும் செய்து கொண்டு முத்துக்குளிப்பவன் கடலில் மூழ்கி, அடிப்பாகத்தை அடைந்ததும், அவனுக்கு மூச்சுத் தடுமாறும்வரை சாக்கு நிறைய முத்துச்சிப்பிகளைப் பொறுக்கிப் போட்டுக் கொள்வான். அவனிடம் கொடுக்கப்பட்டிருக்கும் கயிற்றை இழுத்தால், அந்தச் செய்கையைக் கடலின் மேலிருக்கும் படகிலிருப்பவர்கள் அறிந்து கொண்டு உடனடியாகக் கயிற்றை மேல்நோக்கி இழுப்பார்கள். முத்துக் குளிப்பவனும் முத்துச் சிப்பி நிரம்பிய சாக்கும் மேலே படகிற்குக் கொண்டுவரப்படும். தண்ணீருக்குள் மனிதன் நெடுநேரம் தங்குவதற்கான செயற்கை சாதனங்கள் ஒன்றையும் பயன்படுத்துவதில்லை. அவர்கள் குழந்தைப்பருவம் முதல் இத்தொழிலில் பழக்கப்பட்டு விடுவதால், எளிமையுடன் திறமையுடன் இதைச் செய்து முடிப்பார்கள். சிலர் மற்றவர்களைவிட அதிக நேரம் தண்ணீருக்குள் இருக்கும் திறமையுள்ளவராயிருப்பர். ஆனால், அவர்கள் திறமைக்குத் தக்கபடி பணம் கொடுக்கப்படுவதில்லை. இது வழக்கமாகவே இருந்து வந்தது. இதனால் பல போட்டிகள் ஏற்பட்டதுமின்றி, அஞ்சத்தக்க விளைவுகளும் அடிக்கடி ஏற்படுவதுண்டு. மற்றக் குளியர்களை முந்திவிட வேண்டுமென விரும்பி முத்துக்குளிப்பவர் சில சமயங்களில் அதிக முத்துச்சிப்பிகளைச் சேகரிக்க எண்ணி அதிகநேரம் தண்ணீருக்குள் தங்குவர்; இதனால் இறுதியில் கயிற்றை இழுத்துப் படகிலுள்ளவர் களுக்குச் சமிக்கை செய்யக் கூடத் திறனற்று மயங்கிவிடுவர். சில சமயங்களில் பாதியோ அல்லது முழுதுமோ மூழ்கி விடுவார்கள். பேராசைக்காரக் குளியர்கள் அடிக்கடி தங்கள் அருகில் தண்ணீருக்குள் முத்துச் சேகரிக்கும் குளியர்களைத் தாக்குவார்கள். இவ்வாறு தாக்கப்பட்ட முத்துக்குளியர்கள் தாங்கள் கடலில் மூழ்கும்போது தங்களுடன் கத்திகளையும் எடுத்துச் சென்று முத்துகளைக் கொள்ளையடிப்பவர்களைக் கடலின் படுகையிலேயே கொலை செய்துவிடுவதும் உண்டு என்பதற்கான எடுத்துக்காட்டுகள் உள்ளன. முதலில் குளித்த குளியர்கள் மேலே வந்ததும், அவர்களுடைய முத்துகளைச் சோதித்துப் படகின் கீழறையில் கொட்டிவிடுவார்கள்.

பிறகு அடுத்தக் கூட்டம் தண்ணீருக்குள் மூழ்கும். சிறிது இடைவெளிக்காலத்திற்குப்பின் முதல் கூட்டம் மறுபடியும் மூழ்கும். அடுத்தபடி இரண்டாவது கூட்டம் மூழ்கும். இப்படியே வரிசைப்படி மாறிமாறி இரு கூட்டத்தினரும் முத்துக் குளிப்பர். இந்த வேலை மிகக் கடினமானது. மிக்க வலிமைவாய்ந்த ஒருவன் ஒரு நாளில் ஏழு அல்லது எட்டு முறைக்குமேல் கடலில் மூழ்க இயலாது. அதனால், நண்பகலுக்கு முன் முத்துக் குளித்தல் முடிந்து விடும்.

முத்துக்குளித்தல் முடிந்ததும் மரக்கலங்களைக் கரைக்குக் கொணர்ந்து தங்கள் முத்துச்சிப்பிகளை ஒப்படைத்து விடுவார்கள். முத்துச்சிப்பிகள் அனைத்தும் ஒருவகைப் பூந்தோட்டங்களில் எறியப்படும். இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு அப்படியே அவைகளை அங்கேயே போட்டு விடுவார்கள். அதற்குப் பிறகு அவர்கள் சிப்பிகளைத் திறந்து தங்கள் புதையல்களை வெளியே எடுப்பார்கள். முத்துச்சிப்பிகளிலிருந்து முத்துகளை எடுத்துக் கவனமாய்க் கழுவி உலோகக் கொள்கலங்களில் வைப்பார்கள். இவைகளில் அளவீடுகளுள்ள ஐந்து அல்லது ஆறு சல்லடைகள் இருக்கும். அவை ஒன்றோடொன்று அடுத்தடுத்த இரண்டிற்குமிடையே இடைவெளியிருக்குமாறு பொருத்தப்பட்டிருக்கும். அந்தச் சல்லடைகளில் பலவித அளவு உள்ள துவாரங்கள் இருக்கும். மேலே இருக்கும் சல்லடையில் துவாரங்கள் மிகப்பெரியனவாய் இருக்கும். கீழே அடியிலிருக்கும் சல்லடை துவாரங்கள் சிறியனவாய் இருக்கும். முதலில் மேலே இருக்கும் சல்லடையில் முத்துகளைக் கொட்டினால் மிகச் சிறந்த முத்துகளைத் தவிர மற்றவை எல்லாம் இரண்டாவது சல்லடையில் விழும். அவற்றுள் பல முத்துகள் 3, 4 அல்லது 5வது சல்லடைக்குச் செல்லும். எல்லாவற்றிலும் மிகச் சிறிய முத்துகள் கீழேயுள்ள கொள்கலத்தில் வடிகட்டப்படும். அவை நிலையாகத் தகுந்த சல்லடைகளில் சேர்ந்த பின் தரவாரியாகப் பிரிக்கப்பட்டு மதிப்பிடப்படும். மிகப் பெரிய முத்துக்களே மிக உயர்ந்த மதிப்புடைய முதல்தர முத்துகள். இச்செய்திகளை எல்லாம் தருகின்ற அந்தக் கடிதத்தில் முத்துக்களினுடைய மதிப்பு அதனுடைய உருவத்தைப் பொறுத்தே உறுதி செய்யப்படுகிறது. உருவிலும் பளபளப்பிலும் குறைவாயிருப்பவை குறையுள்ளவை என்று கூறப்படும் என்பது விளக்கமாகச் சொல்லப்படுகிறது. மதிப்புகள் கொடுக்கப்பட்டு முடிந்ததும் மிக உயர்ந்த முத்துக்களை டச்சுக்காரர்கள் வாங்கிக் கொள்வார்கள். அவர்கள் எல்லோர்க்கும் முதலில் வாங்கக் கூடிய அதிகாரம் இருக்கிறதென எண்ணி வந்தனர். அதே சமயத்தில் விருப்பமற்ற தனி வியாபாரிகளைக் கட்டாயப் படுத்துவதுமில்லை.



முதல் நாள் எடுத்த முத்துகளை எல்லாம் அரசனுக்கோ அல்லது சேதுபதிக்கோ - முத்துக்குளித்த இடம் யாருடைய எல்லையைச் சேர்ந்ததோ அவர்களுக்கு - உடனுக்குடன் ஒதுக்கிவைப்பார்கள். வழக்கமாக அடிக்கடி சொல்லப்படுவதுபோல் டச்சுக்காரர்கள் இரண்டாவது நாள் முத்துகளை உரிமை பாராட்டி எடுத்துக் கொள்வதில்லை.

அவர்களுக்கு இலாபமடைய மற்ற பல நிலையான வழிகள் இருந்தன. அவற்றுள் முக்கியமானது, பணச் செலாவணி அதிகமில்லாத இடங்களில் ரொக்கப் பணத்தை அதிகமாக்குதல். இதனால் அவர்களுக்குப் பொருள்கள் மிக மலிவாகக் கிடைத்து வந்தன. வெவ்வேறு ஆண்டுகளில் காணப்படும் முத்துகளின் எண்ணிக்கை மிக அதிகமாக மாறுபடும். சில ஆண்டுகளில் அவர்கள் தண்ணீரில் மூழ்கி இருக்கும் வரை அவர்களால் எவ்வளவு அள்ள முடியுமோ அவ்வளவையும் அவர்கள் அள்ளிக் கொண்டுவரத் தக்கபடி அதிகமாயிருக்கும். சில ஆண்டுகளில் அங்கும் இங்கும் சில சிப்பிகள் கிடைப்பதே கடினம். 1700இல் ஆய்வு மிகவும் திருப்தியாயிருந்தது. அதனால், பல மரக்கல உரிமையாளர் இசைவுச் சீட்டு பெற்று முத்துக் குளித்தார்கள். ஆனால், அவ்வாண்டு பலன் அதிக இழப்பாய் ஆயிற்று. முதல் நாள் குவியலில் எல்லா முத்துக்குளிப்பவர்களாலும் சில ஆயிரம் சிப்பிகளே தொகுக்கப்பட்டன. இரண்டாவது மூன்றாவது நாள்களில் ஒரு சிப்பி கூட அகப்படவில்லை. பலமான கடற் சுழல்கள் தண்ணீருக்கடியில் ஏற்பட்டு மண்ணைப் புரட்டி வந்து முத்துகள் மேல் படியச் செய்துவிட்டதே இதற்குக் காரணமாயிருக்கலாமென்பது ஊகிக்கப்பட்டது. எக்காரணமாய் இருந்தபோதிலும், எப்போதிலும் அப்போது ஏற்பட்ட இழுப்பு மிகுதி. சில வியாபாரிகள் சிறந்த ஆள்களை வைத்திருப்பவர்களுக்கு நிரம்பச் சிப்பிகள் கிடைக்கும் என்ற எண்ணத்துடன் பெருந்தொகைப் பணத்தை முன்பணமாக நம்பிக் கொடுத்திருந்தார்கள். அவர்கள் பணம் முழுவதையும் இழந்து விட்டார்கள். அதேபோல, மரக்கலச் சொந்தக்காரர்கள் குளியர்களுக்கு முன்பணம் கொடுத்திருந்தமையால், அவர்களுக்கும் இழப்பு ஏற்பட்டது. டச்சுக்காரர்களுக்கு வழக்கமான இலாபம் கிடைத்தது.

### முத்துக் குளியல்களின் இழப்பு

மார்க்கபோலோ, சீசர், பிரடரிக்கு என்பவர்களால் விவரிக்கப்பட்டுள்ள ஆரம்ப முத்துக்குளியல்களில் இத்தகைய இழப்பு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆண்டுதோறும் கடற்கரையில்

ஏதேனும் ஓர் இடத்தில் முத்துக்குளித்தல் வெற்றிகரமாக நடைபெற்று வந்தது. ஆனால், பிற்காலத்தில் அடிக்கடி இழப்பு ஏற்பட்டதெனக் கூறப்படுவதை நான் கண்டேன். ஆனால், அது ஒரு முழு வமிச காலத்திற்கு நிலையாகிவிட்டது. கொச்சி பிஷப்பான பாரெட்டோ 1615இல் வெளியிட்ட மதபோதனையில் முத்துக்குளியல் கடற்கரையில் நடந்த முத்துக்குளியல்கள் முப்பது நான்கு ஆண்டுகளாக இழப்பையே விளைத்தன என்று குறிப்பிட்டிருப்பதாக டாக்டர் பர்னல் என்னிடம் கூறினார். மறுபடியும் முத்துக் குளித்தல் நான்கு ஆண்டுகட்கு முன்புதான் ஆரம்பிக்கப்பட்டது. இதுதான் அடிக்கடி இழப்பை உண்டு பண்ணிய முத்துக்குளியல் ஆரம்பம். இதுவே இக்காலத்து முத்துக்குளியலின் முக்கிய இயல்பாயும் இருக்கிறது. 1700 இல் ஏற்பட்ட இழப்பைப்பற்றி, தவத்திரு. மார்ட்டின் கூறுவதை நாம் பார்த்தோம். 1784 இல் கிழக்கு இந்தியக் கம்பெனியின் மேற்பார்வையில் முதன் முதல் முத்துக்குளியல் நடைபெற்றது. இந்த வருமானத்தை மேற்பார்வையிடும் அதிகாரியாக அல்லது ஆணையாளராக நியமிக்கப்பட்டிருந்தவர் பெருமைக்குரிய இர்வின் என்பார். இந்த ஆண்டில் நடந்த முத்துக்குளியலிலும் இழப்பு ஏற்பட்டதென அவர் கூறுகிறார். அத்தகைய இழப்புகளுக்குக் காரணம் இன்றுவரை இன்னதென்று அறிந்து கொள்ள இயலாத மறைபொருளாய் இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது.

**டச்சுக்காரர்களின் ஆதிக்கம்**

தூத்துக்குடியில் டச்சுக்காரர்களின் முதல் ஆதிக்கம் ஏற்பட்ட காலம், டச்சு சமாதிக்கல்லில் காணப்படும் 1706 ஆம் ஆண்டுதான்.

ஓர்மில் டச்சுக்காரரைப் பற்றிய செய்தி குறிப்பிடப்படுகிறது. அதில் 1706 இல் நடைபெற்ற நிகழ்ச்சிகள் தொடர்பான குறிப்புதான் அடுத்தபடியாகத் தூத்துக்குடி டச்சுக்காரரைப் பற்றியுள்ளது. பாளையக்காரர்கள் அடிக்கடி டச்சுக்காரர்களின் உதவியையும் ஊக்கத்தையும் பெற்றுவந்தனர் என்பது தெரிகிறது.

பிறகு அடங்காத திருநெல்வேலிப் பாளையக்காரருடன் டச்சுக்காரர்கள் ஆங்கிலேயருக்குப் பகையாக, நிலையான உடன்பாடு செய்துக் கொண்டதாகக் கர்னல் புல்லர்ட்டன் என்பவர் கூறுகிறார். தேசியப் பொறாமை காரணமாக ஆங்கிலேயர்கள் ஆதாரமற்ற செய்திகளாகச் சொல்லவில்லை. ஏனெனில், கர்னல் புல்லர்ட்டன் பாளையங்குறிச்சியை 1763 இல் கைப்பற்றியபோது கொழும்பிலிருந்த டச்சு அரசாங்கத்தினருக்கும் கட்டபொம்ம நாயக்கனுக்கும் ஏற்பட்ட



உடன் பாட்டின் மூலசாசனம், அவன் கோட்டையில் அகப்பட்டது.

திருநெல்வேலி வியாபார வரலாற்றைப் பற்றிய முக்கியமான சில ஆண்டுகளை நான் இங்குச் சேர்த்திருக்கிறேன். இவற்றுள் சில பிற்காலத்துச் செய்திகளாயிருப்பினும், முந்தைய தேதியிட்டுத் தரப்பட்டுள்ளன:

1. 1658 இல் டச்சுக்காரர் தூத்துக்குடியைப் போர்ச்சுகீசியரிடமிருந்து கைப்பற்றினர்.
2. 1782 இல் தூத்துக்குடி ஆங்கிலேயர்களால் டச்சுக்காரரிடமிருந்து கைப்பற்றப்பட்டது.
3. 1783 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 2 ஆம் தேதி ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி, 1785 இல் தூத்துக்குடியை ஆங்கிலேயரிடமிருந்து டச்சுக்காரர் மீண்டும் பெற்றனர்.
4. 1795 இல் மறுபடியும் ஆங்கிலேயர் தூத்துக்குடியைக் கைப்பற்றினர்.
5. 1818 பிப்ரவரி 9 ஆம் தேதி மறுபடியும் தூத்துக்குடி டச்சுக்காரரிடம் திருப்பிக் கொடுக்கப்பட்டது.
6. இறுதியாக 1825 ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் முதலாந்தேதி சமாதானமான டச்சுக்காரர் ஆங்கிலேயரிடம் தூத்துக்குடியைக் கொடுத்துவிட்டனர்.

**பகைவனுக்கு அருளிய ஊமைத்துரை**

கடைசிப் பாளையக்காரர் சண்டையில் ஆங்கிலேயரிடமிருந்து தூத்துக்குடி பறிக்கப்பட்டுச் சிறிது காலம் பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரர் வசம் இருந்தது. 1801 ஆம் ஆண்டு ஆரம்பத்தில் இச்சம்பவம் நடைபெற்றது. தூத்துக்குடிக் கோட்டையில் ஒரு வாலிப சுபேதார் சிப்பாய் கூட்டத்துடன் இருந்து வந்தான். தீவினையால் (?! - ந.ச.). அவன் ஒரு பக்கமிருந்து எதிரிகளைத் தாக்கிக் கொண்டிருந்தபோது அவன் படையில் இருந்த உள்நாட்டான் ஒருவன் மற்றொரு பக்கத்தில் எதிரிகளை உள்ளே விட்டுவிட்டான். எதிரிகள் சிப்பாய்களின் ஆயுதங்களைப் பிடுங்கிக் கொண்டு அவர்களை விட்டு விட்டார்கள். ஆங்கிலேய அதிகாரியை மட்டும் ஏதேனும் ஓர் ஆங்கிலக் குடியேற்ற நாட்டிற்குச் செல்ல மீன்பிடிக்கும் மரக்கலத்தில் ஏறிப்போகும்படி அனுமதித்தனர் (பகைவனுக்கும் அருள்புரிந்தான் ஊமைத்துரை! - ந.ச.). தூத்துக்குடியின் தலைமை அதிகாரியாயிருந்த

பெருந்திரு. பகோல்ட் என்ற ஆங்கிலேயனை மட்டும் சிறைப்பிடித்துச் சென்றனர். ஆனால், அவன் மனைவி பாளையக்காரர்களின் தலைமையிடத்திலுள்ள கோட்டைக்குத் தொடர்ந்து சென்று, தன் கணவன் உயிருக்காக மன்றாடினாள். உடனே பாளையக்காரர் அவனை விடுதலை செய்து, அவன் உடைமைகளையும் திருப்பிக் கொடுத்துவிட்டனர் (என்னே ஊமைத்துரையின் உயர்ந்த உள்ளம் - ந.ச.). தூத்துக்குடியில் அப்பொழுது பல டச்சுக்காரர்களும் இருந்தார்கள். ஆனால், அவர்கள் எல்லாம் பாளையக்காரரால் துன்புறுத்தப்படவில்லை. பாளையக்காரர்கள் அவர்களை நடுவுநிலைமை வாதிகளாகவோ, அல்லது நண்பர்களாகவோ எண்ணியிருந்திருக்கலாம். ஏனெனில் திருநெல்வேலியில் ஏற்பட்ட குழப்பங்கள் எல்லாவற்றின் போதும் எங்களுடைய கட்சியைவிட எதிரிகள் கட்சியையே டச்சுக்காரர்கள் அதிகமாகச் சார்ந்திருந்தார்கள். இந்தப் பெருந்திரு பகோல்ட்டின் மகன் பல வருடங்களுக்குப் பின் பஞ்சு வியாபாரம் சம்பந்தமாகத் தூத்துக்குடியில் மிக்க புகழ்பெற்றிருந்தான்.

### பஞ்சு ஏற்றுமதி

இங்குத் தூத்துக்குடியில் பஞ்சடித்தலை முதன் முதலில் ஏற்படுத்திய செய்தியைப் பற்றி எழுத மகிழ்ச்சியடைகிறேன். இது மிகப் பிற்காலத்துச் செய்தியாயினும், இங்குக் குறிப்பிடத்தக்கது. முதன்முதல் இப்போது செஸ்ஷையரிலுள்ள பிரைட்டனிலிருக்கும் விவர்பூல் வாசியாகிய பெருந்திரு சி. குருவ்ஸ் என்பவரால் பஞ்சடித்தல் தூத்துக்குடியில் ஏற்பட்டதாக அக்கனவான் எனக்குக் கூறினார். இது ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்குமுன் - 1834 இல் நடைபெற்றது. பெருந்திரு. குருவ்ஸுக்கும் அவர் சகோதரனுக்கும் கொழும்பில் ஒரு வீடு இருந்தது. தூத்துக்குடியில் பஞ்சு அடிக்கப்படாமலே நேரடியாக இங்கிலாந்திற்கு அனுப்பவசதி இருக்கிறதா என்று பார்ப்பதற்காகக் குருவ்ஸ் கொழும்பிலிருந்து தூத்துக்குடிக்கு வந்தார். அந்தக் காலம்வரையில் திருநெல்வேலிப் பஞ்சு அடிக்காமலே சென்னைக்கு அனுப்பப்பட்டு வந்தது. சில சமயங்களில் பாளையங்கோட்டையில் அரைகுறையாக அடித்துப் பிறகு நன்றாக அடிக்கப்படத் தூத்துக்குடியிலிருந்து சென்னைக்கு அனுப்பினர். பெருந்திரு. குருவ்ஸ் 1831 மார்ச்சில் முதன்முதல் தூத்துக்குடியில் வந்து இறங்கினார். உடனே பெருந்திரு. ஹியூஸ்ஸைக் காணப் பாளையங் கோட்டைக்குச் சென்றார். இந்த ஹியூஸ், பாளையக்காரர் போரில் மிக்க புகழ் பெற்றவர். இச்சமயத்தில் எல்லாப் பஞ்சு வாணிபமும் அவர் கையிலேதான்



இருந்தது. இவர் 200 பேல் பஞ்சை அவரிடமிருந்து வாங்கிக் கொழும்பில் ஒரு பிரதியை ஏற்படுத்தி, இந்தப் பேல்களை இலண்டனுக்கு எடுத்துச் செல்லத் தூத்துக்குடிக்கு ஒரு கப்பலையும் அனுப்பி வைத்தார். நேரடியாகத் தூத்துக்குடியிலிருந்து பஞ்சு இலண்டனுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது இதுவே முதல் தடவை என்றாலும் பணத்தில் நல்ல லாபம் கிடைத்தது. அடுத்தாற்போல் 1832 ஆம் ஆண்டு கொழும்பு பஞ்சு வியாபாரம் தொடர்பாகத் தூத்துக்குடியில் பஞ்சடிக்கும் ஆலையை முதன் முதலில் கட்டினான். பிறகுதான் பஞ்சடிக்கும் ஆலைகள் சென்னை வியாபாரிகளாலும் மற்றவர்களாலும் கட்டப்பட்டன. முதலில் பெருந்திரு. பகோல்ட் தம் தந்தையாருக்குப் பிறகு தூத்துக்குடியின் தலைமை அதிகாரி ஆனார். அப்பொழுது குருவ்ஸ் கம்பெனியின் பிரதிநிதியாய் வேலை செய்து கொண்டிருந்தார். ஆனால், அக்கம்பெனியார் பின்தங்கவே, அவர் தனியாகச் சொந்தத்தில் தொழிலை ஆரம்பித்தார்.

பாளையங்கோட்டைக் கோர்ட்டுக்கு அருகே பெருந்தெருவில் ஹியூஸினுடைய பஞ்சாலையின் இடிந்த தளங்கள் இருப்பதைக் காணலாம்.

### ஜெனரல் வெல்ஷ்

1801 ஆம் ஆண்டு முடிவில் பாளையக்காரர் போர் முடிந்ததும் முன்பு தலைவராயிருந்த ஜெனரல் வெல்ஷ் என்பவர் (இவரே கட்டபொம்மு மருதுபாண்டிய உடன் பிறப்பாளரை வேட்டை ஆடியவர். - ந.ச.). தூத்துக்குடியை அடக்கவும் அவர் அதிகாரத்தின் கீழ் தலைமையான எதிரிகள் எழுபது பேரை பினாங்கிற்கு அனுப்பி வைக்கவும் அனுப்பப்பட்டார் ஜெனரல் வெல்ஷ், தூத்துக்குடியில் பாதுகாப்பான கோட்டை அரணுடன் கூடிய ஆலை இருந்தது. அது கடல்நீரில் முழுகிச் சுத்தமான சிறு நகராயிருந்தது. கடற்கரைக்கு எதிரேயுள்ள வீதியில் சில அழகிய வீடுகள் இருந்தன. அங்குச் சுமார் ஐயாயிரம் உள்நாட்டுவாசிகள் இருந்தார்கள்' என்று விவரித்துள்ளார். அந்த இடத்திலிருந்து அவர், இரண்டொரு நாள்களில் கடல் வழியாகக் கொழும்புக்குச் செல்லலாம். வளைகுடாவில் எப்பொழுதும் பலமான காற்றுகள் அடிக்கும். எனவே, போகும்பொழுதும் வரும் பொழுதும் இக்காற்று மிக்கப் பயனைத் தரும் என்று எழுதியிருக்கிறார். அங்குள்ள ஆலை வீட்டில் டச்சுக் கவர்னர் வசித்து வந்தார். அதில் எல்லா வசதிகளும் நிரம்பிய அறை குளிர்ச்சி பொருந்தியது. இவை தவிர, அவருக்கு உள்நாட்டில் மூன்று மைல் தூரத்தில் ஒரு தோட்ட வீடும் இருந்தது. 1810 இல் தூத்துக்குடிக் கோட்டை ஆங்கிலேயரால்

அழிக்கப்பட்டது. (அந்தக் கோட்டை அழிக்கப்பட்டாலும், இந்த ஊரில்தான் தேசபக்தர் வ.உ.சி. பிரிட்டிஷ் பேரரசால் அழிக்க முடியாத விடுதலை இயக்கக் கோட்டையைப் பின்னாளில் கட்டினார் - ந.ச.).

**தூத்துக்குடி**

இப்போது தூத்துக்குடி திருநெல்வேலியிலுள்ள முக்கிய துறைமுகம் மட்டுமின்றித் தென்னிந்தியப் பஞ்சு வியாபாரத்திற்குச் சிறந்த வாணிபசாலையாகவும் விளங்குகிறது என்பதைக் கூற விரும்புகிறேன். இது எல்லா விதங்களிலும் முன்னேறி வருகிறது. சமீபத்தில் திருச்சிராப்பள்ளி, மதராஸையும் திருநெல்வேலியையும் இணைக்கும் ரயில் இடமாக்கப்பட்டதால், அதன் தரம் இன்னும் உயர்ந்துள்ளது. திருநெல்வேலியிலுள்ள நகராட்சியாரின் ஆட்சிக்குட்பட்ட சில நகரங்களில் இதுவும் ஒன்று. 1871 இல் இதன் மக்கள் தொகை ஏறக்குறைய 11,000 ஆகும்.

•

# இயல் - 4

## ஆர்க்காட்டு நவாபு ஆட்சிக்காலம் முதல் மகம்மது யூசுப்கான் ஆட்சிக்காலம் வரை

**மதுரை நாயக்கர் ஆட்சியின் முடிவு**

நாம் இப்பொழுது நாயக்கர் காலத்தின் இறுதிக்கு வருவோம். மதுரைக்குப் பதிலாகத் திருச்சிராப்பள்ளி நாயக்க நாட்டின் தலைநகர் ஆயிற்று. (தற்போது திருச்சி டவுன் ஹால் எனப்படுவது ராணி மங்கம்மாள் அரசவை என்பார்கள் - ந.ச.). திருச்சிராப்பள்ளி திருநெல்வேலியிலிருந்து மதுரையைவிட நெடுந்தூரத்திலிருப்பதால், திருநெல்வேலி வரலாற்றுத் தொடர்பான செய்தி இக்காலத்து ஆவணங்களில் கிட்டவில்லை. எனவே, நான் ஒரு சிறிய குறிப்பு மட்டும் கொடுத்து அமைய எண்ணுகிறேன். ஆர்க்காட்டு நவாபுவின் பதவிக்காகப் பிரெஞ்சுக்காரர்கள் ஆதரித்த சந்தாசாகிபுக்கும் ஆங்கிலேயர்கள் ஆதரித்த முகம்மது அலிக்கும் இடையே போட்டி நடந்த காலம் வரை திருநெல்வேலி முக்கியத்துவம் இல்லாத ஒரு சாதாரண மாவட்டமாகவே இருந்ததென்பது தெளிவாகிறது.

1731 இல் நாயக அரச மரபின் கடைசி அரசரான விஜயநகர சொக்கநாதர் வழியுரிமை இன்றி இறந்துவிட்டார். அவருக்குப்பின் அவர் மனைவியாரான இராணி மீனாட்சியம்மையார் அரச குடும்பத்தில் பிறந்த ஒருவரின் பிள்ளையை வளர்ப்புப் பிள்ளையாகக் கொண்டு அவனுக்குப் பிரதிநிதியாகத் தாமே நாட்டை ஆட்சி செய்து வந்தார். ஆயினும், அவரைத் தொலைக்க முயற்சி செய்த ஒரு கூட்டத்தினர் அவர் வளர்ப்புப் பிள்ளையாக எடுத்துக் கொண்டவனுக்குத் தகப்பனராகிய பங்காரு திருமலை வாயிலாக அரசாட்சியைப் பெற முயன்றனர். மீனாட்சியம்மை யார்வசம் திருச்சிராப்பள்ளிக் கோட்டையும் அதைச் சேர்ந்த இடங்களாகிய கஜானா முதலியனவும் அவராட்சிக்குட்பட்டிருந்தன. ஆனால், திருச்சிராப்பள்ளிக்கு அப்பாற்பட்ட பல நாடுகள் பகைவர் வசமாயின.

**திருச்சிராப்பள்ளியில் சந்தா சாகிபு**

இக்குழப்பங்களை அறிந்த ஆர்க்காட்டு நவாபு 1734 இல் தன்

மகன் சப்தார் அலி தலைமையில் ஒரு படையை அனுப்பினான். அவனுடன் அவன் உறவினர் திவான் சந்தாசாகிபு அதிகார பூர்வமாய் வரிவசூல் செய்வதற்காகச் சென்றான். எனினும், உண்மையில் திருச்சிராப்பள்ளியைக் கைப்பற்ற ஏதேனும் வாய்ப்பு ஏற்படுமா என்பதைக் கவனிக்கவே சென்றான். அங்கே இராணி மீனாட்சியம்மையாரைச் சந்தித்து அவருக்கும் அவர் நாட்டிற்கும் தீங்கு செய்யவில்லை என்று குர்ஆன்மேல் சத்தியம் செய்து கொடுத்ததாகவும் அதனால் அவன் அவனுடைய படையுடன் அவர் நாட்டிற்குள் அனுமதிக்கப்பட்டான் என்றும், அதிலிருந்து அவன் பலவந்தமாக மீனாட்சியார் வசமிருந்த அரசைக் கைப்பற்றிக் கொண்டு பிறகு மதுரையையும் பங்காரு திருமலை நாட்டை அடுத்துள்ள மாவட்டங்களையும் கைப்பற்றினான் என்றும் சொல்லப்படுகிறது.

இப்பொழுது சந்தா சாகிபு தன் வேடத்தைக் கலைத்துத் தன் சூழ்ச்சியை வெளிப்படுத்தினான். அவன் சூழ்ச்சிகளும் திட்டங்களும் வெற்றி பெற்றன. மதுரை நாடு முழுவதையும் அவனுடைய படைகள் கைப்பற்றிக் கொண்டன. பங்காரு திருமலை சரணடைந்தான். மீனாட்சியார் அனாதையாய் ஒரு கட்டடத்திற்குள் அகப்பட்டுக் கொண்டார். அது எந்த நேரத்திலும் எதிரிகளால் பிடிக்கப்பட்டு மீனாட்சியாருடன் சிறைப்படத்தக்க நிலையிலிருந்தது. 1736இல் சந்தா சாகிபு தானே மதுரைக்கு அரசனெனப் பிரகடனம் செய்தான். இராணியை அவன் அரண்மனையிலேயே அடைத்து வைத்துவிட்டு அரசனுக்குரிய அதிகாரத்தையும் ஆட்சியையும் ஏற்றுக் கொண்டான். சில நாட்களுக்குப்பின் இராணி மீனாட்சியார் தமக்கு எந்த வகையிலும் ஏதேனும் இடையூறு செய்யக் கூடுமென எண்ணியதுமன்றி, அவர் அவனுக்குச் செலவை ஏற்படுத்தும் வகையில் இடையூறாய் இருப்பதாக நினைத்தான். மேலும், அந்த ஏழைப் பெண் அரண்மனையிலிருப்பதால் விரும்பத்தகாத நிகழ்ச்சி ஏதேனும் நடைபெறலாமென அவன் வஞ்சக நெஞ்சம் எதிர்ப் பார்த்ததால், இதற்கெல்லாம் முடிவுகட்ட அவளைக் கொலை செய்வதெனத் தீர்மானித்தான். ஆனால், நல்வினைப் பயனாக இந்தப் புதிய குற்றத்தைச் செய்யும் சிரமத்திலிருந்து அவன் காப்பாற்றப்பட்டான். மீனாட்சியாரின் துன்பம் பொறுக்க இயலாததாகிவிட்டதால், அவர் வாழ்க்கையில் வெறுப்புற்று, நஞ்சு அருந்தித் தமக்குத் துரோகம் செய்த கயவனது சூழ்ச்சியில் சிக்காது மடிந்தார். (பார்க்க : நெல்சன் - மதுரை மாவட்ட வரலாறு - பக். 260)

## திருச்சிராப்பள்ளியில் மராட்டியர்கள்

நாயக்கர்களுக்குப் பின் மராட்டியர்கள் செல்வாக்குப் பழமையான



பாண்டி நாட்டில் முதல் முறை ஏற்பட்டது. நெல்சனின் குறிப்புப்படி பங்காரு திருமலை, சந்தா சாகிபுவைவிட பலம் வாய்ந்த மற்றொருவர் உதவியைத் தான் நாடவேண்டிய இன்றியமையாமையை உணர்ந்தான். ஓர்மின் என்பவரின் குறிப்பை விட இக்குறிப்பு ஆதாரமானதுபோலத் தோன்றியது. ஆகவே பங்காரு திருமலை சதாராவிலிருந்த மகாராஷ்டிரரிடம் சென்று தனக்கு உதவிபுரியுமாறு கேட்டுக் கொண்டான். அதன்படி 1739 இல் மகாராஷ்டிர தளபதியான ராகோஜீ பான்சலேயும், பட்லா சிங்கும் மிகப் பெரிய குதிரைப் படையுடன் தெற்கு நோக்கிப் படையெடுத்து ஆர்க்காட்டு நவாபுவாகிய தோஸ்து அலியை முறியடித்தபின் திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டனர். மகம்மதியர்களை வெளியேற்ற விரும்பிய அருகிலிருந்த இந்து அரசர்களும் தஞ்சாவூர் அரசனும் இவர்களுக்குத் துணைபுரிந்தனர். கோட்டை பிடிபடும் நேரத்தில் சந்தா சாகிபு சரணடைந்ததுமன்றி, கோட்டையையும் மகாராஷ்டிரர் வசம் ஒப்படைத்துவிட்டான். மகாராஷ்டிரர் சந்தாசாகிபுவைச் சிறைபிடித்துச் சதாராவுக்கு அழைத்துச் சென்றனர். இது 1741 மார்ச்சில் நடைபெற்றது. சந்தா சாகிபு பிடிபடுவதற்கு முன்பே மதுரைக் கவர்னராய் இருந்த அவன் சகோதரன் பதாசாகிபு இறந்தான். திருச்சிராப் பள்ளியைக் கைப்பற்றிய பின் மராட்டியத் தலைவர்கள் தற்காலிகக் கவர்னராக முராரிராவை நியமித்தார்கள். முராரிராவ் மதுரையிலுள்ள முக்கியமற்ற கோட்டைகளுக்குக் கவர்னராய் அப்பாஜிராவை நியமித்தார். மதுரைக் கவர்னர் சட்டப்படி திருநெல்வேலிக்கும் அவர் கவர்னராவார். ஆனால், உண்மையில் அந்தக் கவர்னர் திருநெல்வேலியையோ அல்லது அதில் ஏதாவது ஒரு பகுதியையோ தம் ஆட்சியில் பெற்றிருந்ததற்குத் தக்க ஆதாரமில்லை. அவர் பகைவர் நாட்டிற்குள் சென்றபோதிலும் பாளையக்காரர்கள் அவனுடைய ஆணையைச் சிறிதும் கவனிக்கவில்லை என்பதைத் தெளிவாகக் காணலாம்.

சர் மாதவராவ் தம் தாய்மொழியில் எழுதியுள்ள திருவாங்கூர் வரலாற்றில் மராட்டியர்களால் திருச்சிராப்பள்ளி முற்றுகையிடப்படு வதற்கு முன் தென் மாவட்டங்களில் சந்தா சாகிபு பாதாசாகிபு என்பவர்களின் செயல்களைப் பற்றிச் சில மிகைப்பட்ட குறிப்புகளைத் தருகின்றார். அக்குறிப்புகளே சங்குன்னி மேனனுடைய திருவாங்கூர் வரலாற்றிலும் மீண்டும் கூறப்படுகிறது.

தன்னுடைய மூத்த மகனான சாப்தார் அலி நாட்டைப் பெறுவதற்கு விரும்பி தோஸ்து அலி சந்தாசாகிபுவையும் அவன் சகோதரனாகிய பாதாசாகிபுவையும் தெற்கேயுள்ள தமிழ்நாடுகளைக்

கைப்பற்றிவரக் கட்டளையிட்டான். அவனது கட்டளையை நிறைவேற்றும்பொழுது திருவாங்கூரை அவர்கள் தாக்கியதாகக் குறிப்பிடப்படுகிறது. ஆனால், இச்செய்தி மற்ற எந்த எழுத்தாளராலும் அறிவிக்கப்படவில்லை. இத்தகைய செய்திகளைப் பற்றிய உண்மையறிய உள்ளூரில் ஆவணங்களைப் பெற்றிருக்கும் உள்ளூர்ச் சரித்திர ஆசிரியரையே நாம் நம்புவது சிறந்தது. 1740 பிப்ரவரி அல்லது மார்ச் மாதத்தில் ஆரல்வாய் மொழி கணவாய் வழியாக இரண்டு சாகிபுகளின் படைகளும் திருவாங்கூருக்குள் நுழைந்தன என்று அவர் கூறுகிறார். அவர்களது சொந்த நாட்டிலுள்ள துன்பங்களைக் கேள்விப்பட்டதுமன்றி, திருவாங்கூர் அரசர் அவர்களுக்கு ஏராளமானப் பரிசுகளை அனுப்பியிருந்தமையாலும், அவர்கள் திரும்பிவிட்டார்கள். அவர்கள் கேள்விப்பட்ட துன்பங்கள் மராட்டியர்கள் திருச்சிராப்பள்ளியை நெருங்கியதால் ஏற்பட்டவைகளே என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

### ஆர்க்காட்டு நவாபுவின் ஆட்சித் தொடக்கம்

1743 இல் நைசாமே நேரில் பெரும்படையுடன் கர்நாடகத்திற்குள் நுழைந்தான். நைசாமின் வலிமைமிக்க படையை எதிர்த்து நிற்க இயலாத மராட்டியர் திருச்சிராப்பள்ளியையும், மதுரையையும் உடனே அவரிடம் ஒப்படைத்து விட்டனர். இந்தச் சமயத்தில் பங்காரு திருமலை இறந்தான். அவன் மகன் சிவகங்கை நாட்டிலுள்ள வெள்ளைக் குறிச்சிக்குத் திரும்பி விட்டான். அவன் சந்ததியார் இன்றும் அமைதியாய் வாழ்ந்து வருகின்றனர் என்பது கூறப்படுகிறது.

1744 இல் நைசாமால் மராட்டியர்கள் துரத்தப்பட்டதிலிருந்து 1747 அல்லது 1748 வரை மதுரை நாடு, 1744 இல் நைசாமால் நியமிக்கப்பட்ட ஆர்க்காட்டு நவாபுவாகிய அன்வாருதீனின் கட்டளைப்படி அனுப்பப்பட்ட அலுவலர்களால் ஆளப்பட்டு வந்தது. 1749 இல் அவனுக்குப்பின் அவன் மகன் மகமது அலி பட்டத்திற்கு வந்தான். அதுவரை நாயக்கர்களின் வசமிருந்த மாவட்டங்களாகிய திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி முதலிய இடங்களில் ஆர்க்காட்டு நவாபுவின் ஆட்சி தொடங்கிய காலம் 1744 என்று நாம் கூறலாம். என்றாலும், ஆங்கிலேயர் வருகைக்குப்பின் அவர்கள் நவாபுவின் கூட்டாளிகளாகவும் உதவியாளராகவும் மாறும் வரை அவனுடைய ஆட்சி பெயரவில் சிறிது சிறப்புற்று இருந்தது. 1748 இல் சந்தா சாகிபு மறுபடியும் விடுதலை பெற்றான். பிரெஞ்சுக்காரர்கள் சந்தாசாகிபுவை ஆர்க்காட்டு நவாபென விளம்பரம் செய்தனர். அதனால், தெற்கேயுள்ள மாவட்டங்களில் இந்த இளவரசர் இருவரையும் ஆதரித்த



கூட்டத்தினரிடையே போட்டியும் பூசல்களும் கிளம்பின. இந்நிகழ்ச்சிகள் நேர்ந்த வரலாற்றிலேதான் நாம் முதல் தடவையான திருநெல்வேலி வரலாற்றின் ஒரு பகுதியைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். இந்நிலையில் ஓர்மினுடைய சிறந்த உதவியை நாம் பயன்படுத்திக் கொள்ள வசதி இருக்கிறது. வரலாற்றின் இப்பகுதியை ஆரம்பிப்பதற்கு முன்னே எப்படியும் திருநெல்வேலி நகரைப் பற்றியும் பாளையங்கோட்டையிலுள்ள கோட்டையைப் பற்றியும் அடிக்கடி நாம் குறிப்பிட வேண்டியிருப்பதால் அவைகளைப் பற்றிச் சில குறிப்புகளைக் கூறுவது விரும்பத்தக்கது.

### திருநெல்வேலி நகரம்

திருநெல்வேலி நகரம், திருநெல்வேலி மாவட்டத்தின் மிகப் பழமையான தலைநகரம். பாளையங்கோட்டை மிகப் புதிய தலைநகரமாகும். பாண்டிய அரசர்களின் காலத்தில் அந்த மாவட்டத்திலுள்ள முக்கிய நகரங்களில் ஒன்றாய் இருந்ததைத் தவிர வேறு சிறப்புடையதாய் இருந்ததெனக் கூற இயலாது. ஆனால், மதுரையில் நாயக்கர்கள் ஆட்சி புரிந்த காலத்தில் பெரும்பகுதி நாடுகளில் அவர்கள் நாட்டின் தென்பகுதியின் தலைநகராய் அது சிறப்புப் பெற்றிருந்ததாகக் கூறப்படுகிறது. அதற்குப் போட்டியாகச் சிறப்புற்றிருந்த முக்கிய இடம் திருவில்லிப்புத்தூராகும். அங்கே நாயக்க அரசர்கள் சிலர் அடிக்கடி சென்று தங்குவதற்கு விரும்பினர். அது ஒரு மாவட்டத்தின் தலைநகராய் இருந்தும் செல்வாக்கு நிரம்பிய சுற்றுப் பகுதிகளையுடைய சிறப்பான இடமாய் இருந்தும் - அதை அரணிட்டுக் காக்கவில்லை என்னும் செய்தி வேடிக்கையாகத்தான் தோன்றுகிறது. ஆயினும், அங்கிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள பாளையங்கோட்டையில் எப்பொழுதும் தக்க பாதுகாப்பு இருந்து வந்தது. இதுவே போதுமான பாதுகாப்பாகவும் கருதப்பட்டது. திருநெல்வேலி நகரமும் அதைச் சார்ந்த கிராமங்களும் சுற்று வட்டாரங்களும் திருநெல்வேலி என்று பிற்காலத்தில் எழுதப்பட்டது நாம் அறிந்த உண்மை. திருநெல்வேலி என்றால் புனிதமான நெல்லுக்கு வேலி என்பது பொருள். 'திரு' என்பது வடமொழி 'ஸ்ரீ' என்பதன் மொழி பெயர்ப்பாகும். (திருவிலிருந்து ஸ்ரீ வந்திருக்கக் கூடாதா? - ந.ச.). இதற்குப் 'புனிதமான' என்பது பொருள். நெல் என்பது உமியுடன் இருக்கும் தானியம்; வேலி என்பது காவல். திருநெல்வேலி கோவில் தலபுராணத்தில் நெல் என்பதற்கு மூங்கிலரிசி என்றும் நெல் அரிசி என்றும் இரு பொருள்கள் காணப்படுகின்றன. எனவே, அச்சொல் புனித மூங்கில் வேலி என்றும் பொருள்படுகிறது. இது மிக்க பொருத்தமான

பொருளாய் இருக்கலாம். ஆனால், நெல் என்பதற்கு உமியுடன் இருக்கும் அரிசி என்ற பொருளை நான் எந்த அகராதியிலும் பார்க்கவில்லை (அந்தோ! - ந.ச.). அகராதிகளில் இச்சொல்லிற்குப் பொருள் இல்லை என்பதோடு, இந்தச் செய்தி முடிவடைய இயலாது. ஆனால், இந்தச் சொல்லிலக்கணம் சரியல்ல என்ற சந்தேகம் தோன்றுகிறது. அப்பெயரில் சாதாரண கற்பனைச் சொல்லிலக்கணம் மூங்கிலரிசியைப் பற்றிய எவ்விதமான மேற்கோளையும் குறிப்பதன்று. ஆனால் சாதாரணப் பொருளாகிய நெல் உமியுடன் இருக்கும் அரிசி என்பதையே குறிக்கிறது. (அகராதியில் இல்லாவிட்டால் ! - அப்பாடா ! - ந.ச.). அதைப் பற்றிக் கூறப்படும் கதை வருமாறு:

அக்காலத்தில் இந்த இடத்திற்கு மூங்கில் வேலி என்ற வேற்றுப்பெயர் இருந்திருக்க வேண்டும். இந்த இடத்தைச் சேர்ந்த ஒருவன் சிறிது நெல்லைத் தன் வீட்டிற்கருகே உலர வைத்துவிட்டுக் குளிப்பதற்காக ஆற்றுக்குச் சென்றான். அவன் குளித்துக் கொண்டிருக்கும்போது பலத்த மழை பெய்ய ஆரம்பித்தது. உடனே அவன் ஆற்றிலிருந்து வீட்டிற்கு ஓடினான். நனைந்து வீணாகிவிட்ட நெல்லையே காணப்போகிறோம்; என்று எண்ணி ஓடிய அவனுக்கு, அங்கு ஓர் அதிசயம் காத்திருந்தது. அவனுக்கு வியப்பை உண்டு பண்ணும் விதத்தில் நெல்லைச் சுற்றி மழை பெய்திருந்ததே தவிர, நெல்லின் மேல் ஒரு துளி மழைநீர்கூடச் சிந்தியிருக்கவில்லை. எனவே, அவன் சிவபெருமானை நோக்கித் தன் நெல்லுக்கு வேலியிட்ட பெருமான் என்று துதித்தான். தன் நன்றிக்குரிய சிவபெருமானுக்கு ஒரு கோவிலையும் கட்டினான். அதிலிருந்து அந்த இடத்தைச் சுற்றியுள்ள பகுதிக்குப் புனித நெல்வேலி என்ற பொருளில் திருநெல்வேலி என்ற பெயர் மாற்றம் ஏற்பட்டது. தலபுராணம் இரு பொருள்களையும் கூறுகிறது. இரண்டாவது பொருளை உறுதிப்படுத்துவதற்காக மேலே சொன்ன கற்பனைக் கதை மேற்கோளாகக் காட்டப்படுகிறது. மேலும் திருநெல்வேலியைச் சிவனுக்குப் பகைவர்களான ரிஷிகள் வேள்விகள் வளர்த்து வசித்து வந்த துருகவனத்துடன் ஒப்புமைப்படுத்துகிறது தலபுராணம். அன்றியும், துருகவனத்திலிருக்கும் இலிங்கத்தையும் திருநெல்வேலியில் மூங்கிலிலிருந்து உண்டான இலிங்கத்தையும் ஒப்புமைப்படுத்துகிறது. எனவே, குறிப்பிட்ட ஒரு விழாக்காலத்தில் ஒரு சிறு மூங்கில் செடி இலிங்கத்திற்கருகே வளர்ந்திருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டது (இப்படி எத்தனையோ இயற்கைப் பெயர்களுக்கும் சமயம் காரணமாகப் புராணக் கதைகள் பொருத்தப்பட்டுவிட்டன. - ந.ச.). திருநெல்வேலி கோவிலில் வணங்கப்படுகின்ற சிவபெருமான் மனைவி காந்திமதி என்று



வழங்கப்படுகிறாள். காந்திமதி என்பது காந்திமான் என்பதன் பெண்பால். ஒளி பொருந்தியது என்பது இதன் பொருள். திருநெல்வேலி நகரம் இப்போது 20,000 ஜனத்தொகை கொண்ட ஒரு நகராட்சியாய் இருக்கிறது.

**பாளையங்கோட்டை**

திருநெல்வேலி மாவட்டத்தின் இப்போதைய தலைநகராகிய பாளையங்கோட்டை, 18,000 மக்கள் தொகையுள்ள நகராட்சிக்குட்பட்ட ஒரு நகரம். அது தாமிரபரணியின் தெற்கே சுமார் ஒரு மைல் தொலைவில் உள்ளது. இங்கிருந்து வடக்கே இரண்டு மைல் தூரத்தில் திருநெல்வேலி அமைந்துள்ளது. உள்ளூரில் வாழ்ந்த பெருஞ்செல்வராகிய சுலோசன முதலியார் என்பவர், தம் முழுச் செலவிலே கர்னல் - கார்ஸ்லே என்பவரால் தாமிரபரணிக்குக் குறுக்கே கட்டப்பட்ட அழகிய பாலத்தினுதவியால் இரு நகரங்களுக்குமிடையே உறவு போக்குவரவு முதலியவை 1844 ஆம் ஆண்டிலிருந்து எளிமையாக்கப்பட்டன. பாளையங்கோட்டை அரணின் சிதைந்த சில அடையாளங்கள், இப்போதும் இருக்கின்றன. அவற்றுள் பல அவசியமற்றவை என அங்கிருந்து அகற்றப்பட்டு விட்டன. எனினும், முதலில் ஆங்கிலேயர் திருநெல்வேலியில் வந்திறங்கியபோது தென்மதுரையில் மிக்க பலம் வாய்ந்த கோட்டை அதுதான் என்பதைக் கண்டனர். அது கோட்டையாயிருந்ததன்றி, அரணுள்ள நகராயும் விளங்கியது. மேலும் அந்நகரம் இரண்டு அரண்களால் காக்கப்பட்டிருந்தது. வெளி அரண் உள் அரணைவிடக் குள்ளமாயும் சிறந்த கொத்தளத் தொகுதிகளையும் பலம் வாய்ந்த கோட்டை வாயில்களையும் உடையதாயும் இருந்தது. எல்லா அரண்களும் வெட்டுக் கற்களால் கட்டப்பட்டிருந்தன. திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கற்கோட்டை தெற்கே தூரத்தில் அமைந்திருந்ததால், ஐரோப்பியர்களுடைய எந்தத் தாக்குதலுக்கும் அது இலக்காகவில்லை. உள்நாட்டினராலும் எந்தவிதமான கடுமையானத் தாக்குதலுக்கும் இலக்காகவில்லை. 1789 இல் திப்புசுல்தான் வட திருவாங்கூர்த் தொகுதியைக் கைப்பற்றித் தன் படைகளைத் திருநெல்வேலி மதுரையைச் சுற்றிக் கொண்டு அவன் எண்ணியது போல் ஆங்கிலேயரைப் பின்புறமாகத் தாக்குவதற்கு முற்பட்டிருந்தானானால், பாளையங்கோட்டையிலுள்ள கோட்டையின் வலிமைக்கு ஒரு சோதனைக் காலம் ஏற்பட்டிருக்கலாம்.

தமிழில் பாளையம் என்பதன் பொருள், பாசறைக் கோட்டை என்பது. பாளையம் என்பது உண்மையில் பாசறை. அடுத்தபடி

இராணுவ ஆட்சி நடைபெற்ற பிரதேசம் ஆகும். பாளையத்திற்குச் சரியான தெலுங்குச் சொல் 'வாளையமு' என்பது. ஆதிகால ஆங்கிலேயர் தம் உச்சரிப்பையும் சொல்லின் எழுத்துகளையும் தங்களைப் பின்பற்றிய தெலுங்கரிடமிருந்து கற்றிருக்க வேண்டுமென முடிவு செய்யலாம். நான் கொடுத்திருக்கின்ற சொல்லிலக்கணம் உண்மையில் வழக்கிலிருக்கும் பெயரின் எழுத்துகளுக்குச் சிறப்பாகப் பொருந்தும். ஆனால், உள்நாட்டினரால் ஒப்புக் கொள்ளப்பட்ட பெயர் பாளையன்கோட்டை; பாளையங்கோட்டையன்று. பாளையன் என்பது ஒருவர் பெயர் என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள். என்றாலும், அது ஒரு காலத்தில் ஒரு விருதாயும் இருந்திருக்கலாம் என்பதையும் ஒப்புக் கொள்கின்றனர். அதை ஒரு விருதாகக் கொண்டால், அதன் பொருள் 'பாசறையை உடையவன்' என்பதாகும். இது சாதாரண விருதாகிய 'போளிகார்' என்பதற்கு உண்மையில் ஒப்புடையதாயிருக்கிறது. இந்தப் பாளையன் என்பவன் கன்னடியன் என்று மரபுக்கதை குறிப்பதும் கன்னடத்தில் பாலிகாரின் சாதாரண விருது 'பாலேயோ'. அதாவது பாளையன் என்பது பாள்வூர் அணைக்கட்டிலிருந்து விவசாயத்திற்கான தண்ணீரைப் பாளையங்கோட்டைக்கும் அதன் சுற்றுப்புறங்களுக்கும் கொண்டுவருகின்ற கால்வாய். இப்பொழுதும் பாளையன் கால் - அதாவது பாளையக்காரருடைய கால்வாய் - என்று வழங்கப்படும் சூழ்நிலை மேற்கூறிய சொல்லிலக்கணத்தை உறுதிப்படுத்துகிறது. பாளையங் ஆயினும் இது உறுதியில்லாத செய்தியேயாகும். இதனால் கோட்டையிலுள்ள கோட்டை அல்லது பழைய கோட்டை அல்லது இப்போதைய கோட்டையின் மிகப் பழமையான பகுதி இருநூறு ஆண்டுகட்கு முன்பு பாளையன் என்பவனால் கட்டப்பட்டது என்பது உள்நாட்டவரின் எண்ணம் (பழையன் கோட்டை பாளையன் கோட்டை ஆனதோ? - ந.ச.). கோட்டையைக் கட்டியவனுடைய காலம் மதுரை நாயக்கர்கள் காலமாக இருக்க வேண்டியுள்ளது. ஆனால், கோட்டையைக் கட்டியவனும் கால்வாயை வெட்டியவனும் செவிவழிக் கதை கூறுவதுபோலக் கன்னடியனாய் இருந்தால், அவன் துவார சமுத்திரக் கன்னடிய அரசர்களுள் பெரும்புகழ் வாய்ந்த நாயக்கர்களுக்கு முந்திய பழைய காலத்தில் இருந்திருக்க வேண்டுமென்பது தோன்றுகிறது. அதற்கு மாறாகச் சாதாரண எழுத்துகளுக்கும் முடிவாகப் பாசறையைக் குறிக்கும். பாளையம்கோட்டை என்பதன் முதல் பகுதி தொடர்பாகவும் இரண்டு உதாரணங்களைக் கூறலாம். முதலாவது காரணம், சில பழைய பத்திரங்களில் பாளையங்கோட்டை 'விலங்குளம் பாளையம்' அதாவது 'விலங்குளம் பாசறை' என்று வழங்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. மற்றொரு காரணம், மேற்கே ஒரு பெரிய கிராமம்



மேலப்பாளையம். அதாவது தெற்கேயுள்ள பாசறை என்று வழங்கப்பட்டது தெரிகிறது. இவற்றுள் இரண்டாவது கூறப்பட்ட பெயரிலுள்ள பாளையம் சாதாரணமாக ஒரு பேட்டையைக் குறிக்கிறது.

பாளையங்கோட்டைக்குக் காவியப் பெயர் மங்கைநகரம் அதாவது மங்கையினுடைய நகரம் என்பது. இப்போது இந்த மங்கை யார் என்பது தெரியவில்லை. பழைய காலத்தில் பாளையங்கோட்டைக் கோட்டை கட்டப்பட்ட இடத்திலே ஒரு நகரம் இருந்ததெனக் கூறப்படும் பழங்கதை இன்னும் நிலைத்திருக்கிறது. அங்குப் பிறந்த ராஜா என்கிற ஒரு சிறிய அரசன் இருந்ததாகவும் அவன் தன்னுடைய பெயரைக் கோட்டைக்கு உள்ளேயும் வெளியேயும் பல இடங்களுக்கு வைத்ததாயும் ஒரு நீர்த்தேக்கத்திற்குக்கூட அவன் தன் பெயரிட்டதாகவும் சொல்லப்படுகிறது.

பாளையங்கோட்டையிலுள்ள கோட்டைச் சுவர்களில் பல கற்கள் முன்பு ஒரு காலத்தில் இந்துக் கோவிலின் ஒரு பகுதியாய் இருந்தவை என்பது குறிப்பிடத்தக்கது. எஞ்சியிருக்கின்ற செதுக்குச் சித்திரங்களும் கல்வெட்டுகளும் இச்செய்தியை நிரூபிக்கின்றன. இந்தக் கோவில் கற்கள் நவாபு காலத்தில் கட்டப்பட்ட வெளிக்கோட்டைச் சுவர்களில் மட்டுமின்றி இந்தியர் ஒருவரால் கட்டப்பட்டதாகச் சொல்லப்படும் உள்கோட்டைச் சுவர்களிலும் காணப்படுகின்றன. உள்நாட்டவரால் கொடுக்கப்படும் விளக்கம் வருமாறு:

பாளையன் இந்துவாய் இருந்தபோதிலும் பாழடைந்து கிடந்த கோவில்களின் கற்களைத் தான் எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளத் தயங்கவில்லை. குறிப்பாகப் பாளையங்கோட்டைக்கு ஐந்து மைல் தூரத்திலுள்ள முதுகிருஷ்ணபுரம் என்ற கோவிலைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த பெரிய மதில்சுவரிலிருந்த கற்களை எடுத்துப் பயன் படுத்திக் கொண்டான். கோட்டை கட்டப்படுவதற்கு முன்பே இக்கோவில் சைவனாய் இருந்து வைணவனாய் மதம் மாறிய மயிலேறும்பெருமாள் முதலி என்பவனால் சுமார் நூறு ஆண்டுகட்குமுன் கட்டப்பட்டது.

**ஓர்ம் தரும் தகவல்**

மற்றொரு நம்பகமான விளக்கம் வருமாறு:

நவாபுவின் ஆட்சிக்காலத்தில் வெளிக்கோட்டை மட்டுமன்றி உட்கோட்டையும் மகமதிய அதிகாரிகளால் கட்டி முடிக்கப்பட்டு, அவர்களாலேயே பலப்படுத்தப்பட்டது. இதற்காகப் பாழடைந்த

கோவில்களிலிருந்த கற்களை மட்டுமின்றி, நல்ல நிலையிலிருந்த சில கோவில்களையும் அழித்து, அவற்றிலுள்ள கற்களையும் பெயர்த்துக் கோட்டை கட்டப் பயன்படுத்திக் கொண்டான். அவ்வாறு நல்ல நிலையிலிருந்து அழிக்கப்பட்ட கோவில்களுள் ஒன்று பாளையங்கோட்டைக் கருகே ஆற்றுப் படுகையில் அமைந்துள்ள மூர்த்தியபுரம் என்னும் இடத்திலுள்ள கோவிலாகும். குள்ளமான வெளிக்கோட்டை பாளையங்கோட்டை அல்லது குழந்தைக்கோட்டை என்று வழங்கப்படுகிறது. இரண்டு கோட்டைகளிலும் இது சிறியதாயிருப்பதால் இப்பெயர் பெற்றது. ஆனால், இது பிள்ளையினுடைய கோட்டை என்றுதான் பொருள் படுமென உள்நாட்டவர் சிலர் கூறுகின்றனர். பிள்ளை என்ற இப்பெயர், மகமது யூசுப்கானைக் குறிக்கிறது. இவன் சாதாரணமாய்க் கான்சாகிபு என்று வழங்கப்பட்டான். இவன் பிள்ளை என்ற சாதிப் பெயரையுடைய வேளாளர் குலத்தைச் சேர்ந்த ஹிந்துவாய் இருந்து பின்பு முகம்மதியன் ஆனமையால், இவனை அடிக்கடி பிள்ளை என்று வழங்கி வந்தனர்.

கிழக்கிந்தியக் கம்பெனியார் வாணிகம் நடத்திய காலத்தில் பாளையங்கோட்டையில் ஒரு வாணிகப் பிரதிநிதியை வைத்திருந்தனர். அவர்களுடைய பொருள்களுக்காக அங்கே ஒரு பண்டகசாலையும் பிரதிநிதியின் வீட்டருகே ஆற்றங்கரையில் ஒரு பஞ்சு ஆலையும் இருந்தன. (தூத்துக்குடியில் முதன் முதல் பஞ்சு ஆலை உண்டான குறிப்பை 83 ஆம் பக்கத்தில் பார்க்க). 'ஓர்ம்' என்பவர் 1756 இல் பாளையங்கோட்டையைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அதில் கோட்டையின் கொத்தளங்கள் எல்லாம் அழிந்திருந்ததாகவும் பயங்கர பீரங்கிகளில்லாத எதிரியின் தாக்குதலினின்றும் காப்பாற்றத்தக்க நிலையில் அது இருந்ததென்றும் கூறுகிறார். மகம்மது யூசுப்கான் படைகளை நிருவகிக்கவும் நியமிக்கப்பட்டான். உடனே அவன் பாளையங்கோட்டையைப் பலம்வாய்ந்த இடமாக்க எண்ணி, கோட்டை கட்ட ஆரம்பித்தான் என்பதில் ஐயமில்லை. இது 1765 இல் இராணுவப்படையால் அரணிடப் பட்டமை தெரிகிறது. 1771 இல் புகழ்வாய்ந்த கிறித்தவ மத குருவான ஸ்வார்ட்ஸ் என்பவரின் பத்திரிகைகளில் இதைப் பற்றிய குறிப்பு முதலிற் காணப்பட்டது. அக்கோட்டையில் ஆங்கில இராணுவப்படை இருந்ததாகவும், கோட்டை நவாபுவின் வசமிருந்ததாகவும் அவர் கூறுகிறார். பாளையங்கோட்டையிலுள்ள ஆங்கிலக் கிறித்தவக் கோவிலில் காணப்படும் பழமையான ஆண்டு 1775.

திருநெல்வேலியிலுள்ள நவாபு அரசாங்கத்திற்குக் கிழக்கு



**இந்தியக் கம்பெனியாரால் கொடுக்கப்பட்ட முதல் உதவியும் திருநெல்வேலியில் ஆங்கிலேயரின் முதற் படையெடுப்பும்**

ஓர்ம் பாகம் 1 : கொள்ளிடத்திற்கும் தீபகற்பத்தின் முனைக்கும் இடைப்பட்ட நாடு, மகம்மது அலியிடம் உள்ள தன் உறவைப் பகிரங்கமாக உதறித்தள்ளவில்லை. ஆனால், அவனிடம் அக்கறையின்றி நடந்து கொண்டது. எனவே, அவன் 1751 இல் அவன் உடன்பிறப்பாகிய அப்துல்ரஹீம் என்பவன் தலைமையில் முப்பது ஐரோப்பியர் அடங்கிய படையுடன் 2,500 குதிரை வீரர்களையும் 3000 வேலையாள்களையும் அனுப்பித் திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கே 160 மைலில் இருக்கின்ற நகரமும் கன்னியாகுமரி வரை பரவியிருந்த எல்லையின் தலைநகரமுமாகிய திருநெல்வேலி அரசாங்கத்தை ஒழுங்குபடுத்தும்படி ஏவினான். அப்துல் ரஹீமுக்கு அந்நாட்டில் மக்களிடமிருந்து எத்தகைய எதிர்ப்பும் ஏற்படவில்லை. ஆனால், அவன் தன் படையினரின் எதிர்ப்பை அடக்கவியலாது திணறினான். ஏனெனில், படையிலுள்ள அலுவலர் பலர் கூலிக்காரரே. அவன் அந்தப் படை வீரர்களுக்கு எவ்வளவு கடமைப்பட்டவனோ அவ்வளவு அவர்களும் இளவரசனுக்குக் கடமைப்பட்டவர்கள். எனவே, அவர்களுடைய எதிர்ப்புக்குப் பரிசாக அவர்கள் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய கப்பத் தொகையை மட்டுமன்றி அவர்களுடைய படைகளுக்குத் தேவையான பணத்தையும் கொடுக்க வேண்டுமென எதிர்பார்த்தனர். ஆங்கிலேயப் படைக்குத் தலைமை வகித்த லெப்டினண்டு இன்னிஸ்* என்பவனின் புத்தி திறமையாலும் பல வாக்குறுதிகளாலும் கலகத்தைத் தவிர்த்தார்கள். எனினும், இதே தன்மையான கலகம் முகம்மதிய நாட்டில் மற்றொரு பகுதியில் வெளிப்படையாகவே ஏற்பட்டது.

அதிர்ஷ்டமிக்க வீரனாகிய ஆலம்கான் முதலில் சந்தாசாகிபுவின் கீழ்ப் பணியாற்றி வந்தான். பிறகு தஞ்சாவூர் அரசனிடம் வேலைபார்த்து வந்தான்; அண்மையில் அந்த இளவரசனையும் விட்டுவிட்டு மதுரைக்குச் சென்றான். அங்குச் சிறந்த அலுவலன் என்ற புகழ் அவனுக்கு அதிக மரியாதையையும் சலுகைகளையும் அளித்தது. இவற்றைப் பயன்படுத்திக் கொண்டு இராணுவப் படையை இலஞ்சம் கொடுத்துத் தன்வசமாக்குவதில் அவன் வெற்றி கண்டான். அந்த இராணுவப்படையும் அவனைக் கவர்னராக நியமித்தது; சந்தா

---

*★. இவனே திருநெல்வேலியில் காணப்பட்ட முதல் ஆங்கிலேயனாய் இருக்கலாம்.*

சாகிபுவைத் தன் சக்கரவர்த்தியாக ஏற்றுக் கொண்டது; சந்தா சாகிபுவிற்காக அவன் அதிகாரத்தின் கீழ், நகரத்தை ஆட்சி செலுத்த ஒப்புக் கொண்டது.

மதுரை நாடு திருச்சிராப்பள்ளிக்கும் திருநெல்வேலிக்கும் இடையே அமைந்துள்ளது. இவ்விரு நாடுகளையும் விடப் பரந்த நிலப்பரப்புடையது மதுரை நாடு. பழங்காலத்தில் இந்த மூன்று நாடுகளுக்கும் ஒரே அரசனாய் இருந்த இளவரசனுக்கு இருப்பிடமாய் விளங்கியது இந்நகரம். இந்நகரம் சுமார் 4000 மூவடி சுற்றளவுள்ள சதுரமான இடம். இதைச் சுற்றி இரட்டைச்சுவர் அரணும் அகழியும் இருந்தன. திருச்சிராப்பள்ளிக்கும் திருநெல்வேலிக்குமிடையே நடந்த போக்குவரவுகளை நிறுத்தியதால், அக்காலத்தில் அவன் ஆட்சிக்குட்பட்டிருந்த நாட்டில் பாதிக்கு மேற்பட்ட பகுதியை மகம்மதலி இழக்க நேரிட்டது. இச் செய்தி கிடைத்ததும் தளகர்த்தன் கோப் இழந்த இப்பிரதேசத்தைப் பெற்றுக் கொடுக்க முன் வந்தான். அவன் தோல்வியுற்றுப் படைவலியிழந்து திருச்சிராப்பள்ளிக்குத் திரும்பி வந்தான். இது 1751 இல் நிகழ்ந்தது. 1755 இல் கவனிப்புக்குரிய மிக முக்கியமான சம்பவங்கள் திருநெல்வேலி சரித்திரத்தில் நிகழ்ந்தன. அவற்றை நாம் இனிக் காணலாம்.

நவாபுவின் வேண்டுகோளின்படி 500 ஐரோப்பியர்களும் 2000 சிப்பாய்களும் அடங்கிய படையொன்று, 1755 இல் மதுரை திருநெல்வேலி நாடுகளுக்குச் சென்று, நவாபுவிற்குக் கீழ்ப்படிந்து துணைபுரியும்படி கட்டளையிடப்பட்டது. நவாபுவின் அண்ணனாகிய மபுஸ்கான் அந்நாடுகளில் நவாபுவின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருந்தான். ஆனால், அவன் ஆரம்பத்திலிருந்து கடைசி வரை கவனிப்பின்றியும் பயனற்ற நண்பனாயும் சில சமயங்களில் வெளிப்படையான பகைவனாயும் நடந்து கொண்டான். திருச்சிராப்பள்ளிக்குச் சிறிது தெற்கேயுள்ள மணப்பாறை, அப்பொழுது கலகக்காரனான பாளையக்காரன்வசம் இருந்தது. மேற்கூறிய படையுடன் கூட நவாபுவே மணப்பாறை வரை சென்று பிறகு திரும்பினான். முழுப்படையும் அப்பொழுதுதான் அந்நாட்டிற்கு வந்திருந்த ஆங்கில உத்தியோகஸ்தனாகிய கர்னல் ஹெரான் என்பவன் தலைமையில் சென்றது. சிப்பாய்கள் அனைவரும் உள்நாட்டுத் தலைவனின் விசேஷ அதிகாரத்தின்கீழ் நடத்திச் செல்லப்பட்டனர்.

**கர்னல் ஹெரானின் படையெடுப்பும் மகம்மது யூசுப்கானும்**

கர்னல் ஹெரானின் தலைமையில் சென்ற உள்நாட்டுப் படைத்தலைவன் மிக்க புகழ்பெற்ற படைவீரன். அவன் யூசுப்கான் என்று வழங்கப்பட்டான். ஓர்மினால் குறிக்கப்படாத இவனைப் பற்றிய சில குறிப்புகளை நான் இங்குத் தருகிறேன். 1754க்குச் சிறிது காலத்திற்கு முன்பு யூசுப்கான் கம்பெனியாரின் சுதேசிப்படைகளின் தலைவனாய் வேலை பார்த்து வந்தான். அந்த அலுவலில் அவன் மிக்க திறமையுடனும் ஊக்கத்துடனும் வலிமையுடனும் நடந்து சிறப்பெய்தினான். இது அவனுடைய ஐரோப்பியத் தலைவர்களுக்கு மிகவும் திருப்தியாய் இருந்தது. அதனால், அப்பொழுது கமாண்டர்-இன்-சீப் ஆக இருந்த ஜெனரல் லாரென்ஸ் என்பவரின் பரிவுரையால் 1754 ஆம் ஆண்டு, மார்ச் 25 ஆம் தேதி அரசாங்கம் அவனைக் கம்பெனிச் சிப்பாய்கள் அனைவருக்கும் நிலையான தலைவனாக நியமித்தது. அதேசமயத்தில் தன் அன்பின் அடையாளமாக ஒரு தங்கப்பதக்கத்தையும் அவனுக்குப் பரிசாகக் கொடுத்தது அரசாங்கம்.



1756 இல் திருநெல்வேலியில் ஒழுங்கை நிலைநிறுத்த ஒரு படையுடன் யூசுப்கான் சென்றதைக் கண்டோம். அந்த ஆண்டு மார்ச் 14 ஆம் தேதி காப்டன் காலியட்டு மூலமாக அரசாங்கத்தினர் யூசுப்கானுக்குக் கட்டளையிட்டனர். இதிலிருந்து படைத்தலைமைப் பதவிமட்டுமின்றி வரிவசூல் செய்யும் வேலையும் அது தொடர்பான தகராறுகளைத் தீர்க்கும் எல்லா அதிகாரமும் அவனுக்கு வழங்கப்பட்டிருந்தது தெரிகிறது. ஆனால், அவன் அவ்வப்பொழுது எங்கெங்குச் செல்கிறான் என்பதைப் பற்றிய செய்தி விளக்கத்தை உடனுக்குடன் காப்டன் காலியட்டுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றும் வசூலான தொகை யாவற்றையும் அவனிடம் செலுத்த வேண்டுமென்றும் அவனுக்கு நிபந்தனை இடப்பட்டிருந்தது. வரிவசூல் செய்யும் அதிகாரியாக அந்தக் காலத்திலிருந்து 1763 வரை இருந்தபோது அடைந்த வெற்றிகளைப் பற்றிக் கனிம் லூஷிங்டன் சொற்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அவை இனிச் சொல்லப்படும்.

**ஆங்கிலேயருடன் உடன்பாடு**

கான்சாகிபு என்ற பெயர் உள்நாட்டிலேயே 'கான்சா' என்று மருவியது. மக்கள் அப்பெயராலேயே அவனை நினைவு கூர்ந்திருந்தார்கள். அவன் காலம் சாதாரணமாகக் 'கான்சா காலம்' என்றே வழங்கப்படுகிறது.

கர்னல் ஹெரானுடைய படை எதிர்ப்பின்றி மதுரையைக் கைப்பற்றியது. அப்பொழுது 'பாளையக்காரர்' அல்லது 'இராமநாதபுர ராஜா' எனப்படும் சேதுபதியாகிய மறவர் பாளையக்காரரிடமிருந்து

(பார்க்க: எஸ். திருவேங்கடாச்சாரியின் இராமநாதபுரம் சேதுபதிகள் (1959) - ந.ச.) ஒரு முக்கியமானப் பிரதிநிதித் தூது வந்தது. இந்நாடு திருநெல்வேலியின் வடகிழக்குப் பகுதிக்கு அருகிலுள்ளது. அந்தப் பாளையக்காரர் சண்டையின்போது சந்தா சாகிபு மைசூரார் பக்கம் சார்ந்து போரிட்ட தன் செய்கைக்காக வருந்தி அக்குற்றத்திற்காகத் தான் மன்னிப்புப் பெற விரும்புவதாகவும், ஆங்கிலேயருடன் உடன்பாடு செய்து கொள்ள விரும்புவதாகவும் அவர்கள் பாதுகாப்பில் நவாபுவிடம் நன்றியுடன் இருப்பதாகவும் கூறினான். அவன் எண்ணங்களின் உண்மைத் தன்மைக்குச் சான்றாக இலங்கைக்கு எதிரிலுள்ள கடற்கரை நாட்டிலுள்ள அவனுடைய இரண்டு குடியேற்ற நாடுகளைக் கம்பெனிக்குக் கொடுப்பதாகக் கூறினான். இப்போது அவர்கள் திருநெல்வேலி நகரத்தை அடைய வேறு வழியில்லாமல் பல நூறு மைல்கள் துன்பமும் துயரமும் நிறைந்த பயணம் செய்ய வேண்டியிருந்தது. அவன் மேலே சொல்லப்பட்ட இரு கடற்கரை நாடுகளைக் கொடுப்பதால் திருநெல்வேலியின் பிற்காலப் போக்குவரத்துக்கு மிக்க வசதி ஏற்படுமென்றும், நியாயமாகக் கூறினான். அன்றியும், மதராஸ் அல்லது டேவிடு கோட்டையிலிருந்து நான்கு அல்லது ஐந்து நாள் கடல் பிரயாணத்தில் அவன் அவர்களுக்குக் கொடுக்க எண்ணியுள்ள குடியேற்ற நாடுகளைத் துணைப் படை அடைந்துவிடலாமென்றும் அங்கிருந்து திருநெல்வேலிக்கு ஐம்பது மைல் தூரமே இருக்குமென்றும் விளக்கினான். இதைக் கேள்வியுற்ற கர்னல் ஹெரான், தானாக முன்வந்து கொடுக்கும் அந்நாடுகளினால் ஏற்படும் அளவிடற்கரிய நன்மைகளில் மயங்கி மேலிடத்தாரைக் கலந்தெண்ணாமலே பாளையக்காரனுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டான். ஆங்கிலேயருடன் ஏற்பட்ட நட்புரிமைக்கு அடையாளமாக ஆங்கிலேயக் கொடிகள் மூன்றை அப்பிரதிநிதித் தூதுவரிடம் கொடுத்து அவர்கள் நாட்டில் எது சிறந்த இடமென்று அவர்கள் கருதுகிறார்களோ அந்த இடங்களில் அவைகளைப் பறக்க விடுமாறும் உத்தரவு கொடுத்தான். இவ்வேலை முடிந்ததும் கர்னல் ஹெரான் கோவில்குடியைக் கைப்பற்றினான். இது கொத்தளங்களுடைய கோவில்; இங்கே தான் தப்பியோடிய மதுரை கவர்னர் ஒளிந்திருந்தான். இங்கிருந்துதான் ஆங்கிலேயப் படைவீரர்கள் ஆய்வின்றித் தங்கள் கொள்ளைப் பொருள்களுடன் சில சிறிய செப்புச் சிலைகளையும் எடுத்துச் சென்றார்கள். (அந்த நாளிலேயே அயலவர் நம் சிலைகளையும் திருடத் தொடங்கிவிட்டனர் - ந.ச.). இச்சிலைகளினால் அவர்கள் திரும்பும் வழியில் நாட்டானி கணவாயில் அவர்களுக்கு மிக்க துன்பம் நேரிட்டது.



## கட்டபொம்மன்

'சுமார் மார்ச்சு மாதத்தின் நடுவில் படைகள் திருநெல்வேலி நகரத்தை அடைந்தன. தலைநகரத்திலும் அதைச் சூழ்ந்த நாட்டிலுமிருந்த வாடகைக்காரர்கள் எவ்விதத் தடையுமின்றி நவாபுவுக்குக் கீழ்ப்படிந்தார்கள். ஆனால், அங்கிருந்த பாளையக்காரர் பலர் நவாபுவுக்குச் செலுத்த வேண்டிய கப்பப் பணத்தைச் செலுத்தாமலே ஏமாற்ற எத்தனித்து வந்தனர். அவர்களுள் மிக முக்கியமானவன் கட்டபொம்ம நாயக்கன். அவனுடைய நாடு திருநெல்வேலியிலிருந்து வடகிழக்கே ஐம்பது மைல் தூரத்திலிருந்தது. கட்டபொம்மனைப் பணியவைத்துவிட்டால் அவனைவிடச் சிறிய பாளையக்காரர்களைச் சீக்கிரத்திலேயே அடக்கிவிடலாமென்று நம்பியதால், 200 ஐரோப்பியரும் 500 சிப்பாய்களும் அடங்கிய படை இரு சிறு பீரங்கிகளுடன் அவனை அடக்க அனுப்பப்பட்டது.

இந்தக் கட்டபொம்ம நாயக் என்னும் கட்டபொம்ம நாய்க்கன் பனியலன் குறிஞ்சி என்ற (பணியலன் குறிஞ்சி!? - ந.ச.) பாஞ்சாலங்குறிச்சிக்குப் பாளையக் காரனாய் இருந்தான். பாஞ்சாலங்குறிச்சி இப்போது தாலுக்கா நகரமாகிய ஒட்டப்பிடாரத்திற்கருகே (இந்த ஆண்டு நூற்றாண்டு பெறும் கப்பலோட்டிய தமிழர் - வ.உ.சி. பிறந்த ஊர் - ந.ச.) உள்ள கோட்டை. இந்த இடத்திற்கு அனுப்பப்பட்ட பல படையெடுப்புகளில் இதுதான் முதற்படையெடுப்பு; 1801 இல் நடைபெற்றது. இவனுக்குப் பின்வந்த பிற்காலத்துப் பாளையக்காரர் ஒவ்வொருவரும் 'கட்டபொம்ம நாயகர்' என்று வழங்கப்பட்டனர். இப்பெயர் ஒரு குடும்பப் பெயராய் இருந்தது. கர்னல் ஹெரானின் காலத்தில் சேனாதிபதியாய் இருந்தவன் ஜகவீர கட்டபொம்ம நாயக்கன். இவன், 1760 இல் இறந்தான். இவனுக்குப் பின் வந்த பாளையக்காரன் 1791 இல் இறந்தான். அவனும் முந்தியவனைவிட மிக்க உறுதியுடன் ஆங்கிலேயர்களை எதிர்த்தான். இந்தப் பகைமை 1799 இல் உச்ச நிலையை அடைந்தது. மற்றொரு எதிர்ப்பு 1801 இல் கர்னல் அக்கினியூவிற்கு எதிராகச் சிவகங்கை பாளையக்காரனால் ஏற்பட்டது. கர்னல் ஹெரானால் பாஞ்சாலங்குறிச்சிக்கு எதிராக அனுப்பப்பட்ட படை, ஒன்றுமே சாதிக்கவில்லை. அவனுடைய முழுப்படையும் ஏறக்குறைய உடனே திருச்சிக்கு மறுபடி அழைக்கப்பட்டது.

## பயங்கரப் படுகொலைகள் செய்த ஆங்கிலச் சிப்பாய்கள்

அந்தப் படையெடுப்பிற்குச் சில நாட்களுக்குப் பின் நூறு

ஐரோப்பியர், 300 சிப்பாய்கள் இரண்டு சிறு பீரங்கிகள் அடங்கிய மற்றொரு படை திருநெல்வேலிக்குத் தெற்கே ஐம்பது மைல் தூரத்தில் அமைந்திருந்த நெல்லிக் கோட்டையிலுள்ள கோட்டையைத் தாக்க அனுப்பப்பட்டது. இப்படைகள் நள்ளிரவில் புறப்பட்டுப் பதினெட்டு மணி நேரத்தில் அவ்விடத்தை அடைந்தன. அவர்களுடைய திடீர்ப் படையெடுப்பால் அதிர்ச்சியடைந்த பாளையக்காரன் ஒரு தூதனை அனுப்பினான். அத்தூதன் அவர்கள் இணங்கியதாகப் பாசாங்கு காட்டி, அவனுடைய எசமான் செலுத்த வேண்டிய கப்பப் பணத்தைச் சில நாள்களில் செலுத்துவதாக உறுதி கூறியதாகவும் தெரிவித்தான். அவன் பேச்சில் ஐயமுற்ற அவர்கள், அவன் வாக்குக் கொடுத்தபடி பணம் செலுத்த வேண்டியதற்குப் பிணையாக அவனைத் தங்களிடத்திலேயே நிறுத்திக் கொள்ளத் தீர்மானித்தார்கள். எனவே, அவன் காவல்காரர்வசம் ஒப்புவிக்கப்பட்டான். படைவீரர்கள் அளவுக்கு மீறி நடந்துவந்ததால் மிக்க அலுப்புற்றிருந்தமையால் முக்கியமான காவற்காரர்களால் கூட விழித்திருக்க இயலவில்லை. தூதன் தன்னைக் காவல் காக்க நியமிக்கப்பட்ட எல்லா வீரர்களும் அயர்ந்து தூங்குவதைக் கவனித்துப் பாசறையினின்றும் தப்பி ஓடி கோட்டையை அடைந்தான். ஆங்கிலப் படையெடுப்பை எதிர்க்கத் தேவையான காரியங்களைச் செய்வதற்குப் போதுமான காலத்தை ஏற்படுத்திக் கொள்ளவே இத்தூது அனுப்பப்பட்டது. அதிகாலையில் இச்சூழ்ச்சி வெளிப்பட்டு விட்டமையால் ஆங்கிலப்படை வட்டமான கோபுரங்களையுடைய சாதாரண மண்சுவரால் பாதுகாக்கப்பட்ட அந்த இடத்தை முற்றுகையிட முடிவு செய்தது. அப்படையினர் மதிலில் ஏறுவதற்காக ஏணிகள் கொண்டுவரவில்லை. ஆனால், சுவரின் வெளிப்புறம் சரிவாயும் மழையினால் கரைந்து மேடு பள்ளங்களாயும் இருந்ததால் அந்த இடத்தைத் தாக்குவது அபாயகரமாய் இருந்ததெனினும் இயலும் செயலாகவே இருந்தது. எனவே, படையினர் பல பகுதிகளாய்ப் பிரிந்து ஐரோப்பியர்களும் சிப்பாய்களும் சேர்ந்து அஞ்சாநெஞ்சுடன் ஒரே சமயத்தில் தாக்கினார்கள். ஒவ்வொரு படைப்பகுதியும் எதிர்ப்பின்றி மண்சுவரை அடைந்துவிட்டது. படை கோட்டையிலுள்ள கட்டடங்களை அணுகியதும், அப்படையினருள் காற்பகுதினர் உட்புகுந்தனர். ஆயினும் வழக்கமாகப் பயங்கரத் தாக்குதலில் ஈடுபட்டபோது தாங்களே தங்களைச் சுற்றி அபாயகரமான சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டதை எண்ணி நிலைகுலைந்து, தங்களுக்கு எதிர்ப்பட்டவர்களை ஆண் பெண் குழந்தைகள் என்றுகூட வேறுபாடு பாராது எல்லாரையும் வாளுக்கிரையாக்கினார்கள்.

நானூறு பேர்களில் ஆறு பேர்களைத் தவிர, மற்ற எவரையும் உயிருடன் விடவில்லை. இத்தகைய பயங்கரக் கொடுங்கொலைகளைச் செய்ததில் மிக்க பொறுப்பேற்றுக் கொண்ட படை வீரர்களும் அலுவலர்களும் ஆங்கிலேயரில் சிறந்த வீரர்களே ஆவார்கள். அவர்களில் பலர் கர்னல் லாரென்ஸ் தலைமையில் திருச்சிராப்பள்ளியில் போர் புரிந்தவர்கள் என்பதை நாம் வருத்தத்துடன்தான் தெரிவிக்க வேண்டும். ஆனால், மனித இயற்கையை எண்ணிப் பார்ப்பவர்கள். ''கொடுங்குணம் வீரத்திற்கு ஏற்புடைத்தன்று'' என்ற பொது வசனத்தை எதிர்ப்பதற்குத் தக்க பல காரணங்களையும் அதற்கு ஏற்ற எடுத்துக்காட்டுகளையும் காண்பார்கள். (கொலையாளிகள் இனத்திலும் மனச்சான்று போரிடும் போலும்! - ந.ச.)



## நெல்லிக்கோட்டையா அல்லது நாட்டக்கோட்டையா?

பல ஆண்டுகளாக இருந்த நெல்லிக்கோட்டையைப் பற்றி எந்தச் செய்தியையும் கேட்டறிய இயலவில்லை. மற்றொரு செய்தியிலிருந்து இக்கோட்டை களக்காட்டுக்கு அருகேயுள்ளது என்பது தெரிகிறது. ஆனால், இங்கு அந்தக் கொலைப் பாதக முற்றுகையைப்பற்றி எவ்வித செவிவழிக் கதையும் இல்லை. எனவே, இக்கதை முழுவதும் உண்மையன்று என்று எண்ணத் தொடங்கினேன். நாளடைவில் நான் ஒரு பாழடைந்த கோட்டையிடத்தைக் கண்டுபிடித்தேன். அது பாளையங்கோட்டைக்குத் தென்மேற்கே சுமார் 35 மைலிலும் அறப்பாலிக்குக் கிழக்கே ஆறு மைல் தூரத்திலும் தனியான ஓர் இடத்தில் அமைந்துள்ளது. அந்த இடத்தின் சரியான பெயர் நாட்டக் கோட்டை; நெல்லிக்கோட்டை அன்று. ஆனால் இந்தச் சிறப்பில்லாத விலக்குடன் உள்ள இந்த இடத்தைப் பற்றிய செவிவழிக் கதை ஓர்மினுடைய குறிப்புடன் பொருந்துகிறது. செவிவழிச் செய்தியாய் இக்கோட்டையின் உரிமையாளர் ராஜா என்று வழங்கப்படுவதாலும், இக்கோட்டையில் அவர் வசித்த வந்த இடம் இன்னும் 'அரண்மனைக் குன்று' என்று வழங்கப்படுவதாலும் அவர் முக்கியம் வாய்ந்த மனிதராய் இருக்கவேண்டுமென்பது தெரிகிறது. அவருடைய சந்ததியார் திருவாங்கூரிலுள்ள பாஞ்சலிங்கபுரம் என்று வழங்கப்படும் இடத்தில் தஞ்சமடைந்தனர்.

இந்தப் படையெடுப்பின்போது வசூலிக்கப்பட்ட வரிப் பணத்தில் படையினரின் செலவுக் கணக்கு ஒன்றுமேயில்லாமல் வரிப்பணத்தில் ஒரு பகுதி மகபுஸ்கானால் கொள்ளையிடப்பட்டது. அரசாங்கத்திடம் கடன்பெற்றுக் கணக்கு வைத்திருந்தவர்களிடமிருந்து மிக்க பேராசையுடன் அதிக பரிசுகள் பெற்றுக் கொள்ளக் கர்னல் ஹெரான் இசைந்ததால், மற்றொரு பகுதியும் அதேபோலக் குறைந்து

விட்டது. அதற்கும் மக்புஸ்கான் கர்னல் ஹெரானின் மொழிபெயர்ப்பாளனோடு ஒப்பந்தம் செய்து கொண்டு அதிக வருமானம் வரத்தக்க மாகாணங்களை எல்லாம் குறைவான வருமானம் தரத்தக்கதெனத் தோன்றும்படி சூழ்ச்சி செய்தான். பிறகு மதுரை திருநெல்வேலி நாடுகளிலுள்ள விளைநிலங்களை எல்லாம் சேர்த்து, பதினைந்து நூறாயிரம் ரூபாய் ஆண்டு வாடகைக்கு எடுத்துக் கொள்ள முன்வந்தான். இக்காரியத்திற்குத் துணையாகக் கர்னல் ஹெரானுக்குப் போதுமான பரிசு கொடுக்கப்பட்டதால், அவன் இசைந்து, நாட்டின் அதிகாரத்தை மக்புஸ்கானுக்குக் கொடுத்தான். (பணம் என்றால் பிணமும் வாய்திறக்குமே! ந.ச.).

**பாளையக்காரனின் ஒப்பந்தம்**

கட்டபொம்ம நாயக்கனை எதிர்க்க அனுப்பப்பட்ட படை வடகிழக்கிலுள்ள சில்லின்னகென் பேட்டை என்ற பாளையக்காரரின் முக்கியமான கோட்டை வரை சென்றது. இக்கோட்டை எல்ல(லை?) நாயக்கன்பட்டி என்பதைக் குறிக்கிறது என்று நான் எண்ணுகிறேன். அவர்களைக் கண்ட பாளையக்காரன் அவர்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டு, கப்பப் பணத்தில் ஒரு பகுதியை மட்டும் கட்டி விட்டு, எஞ்சிய பணத்திற்கு ஜாமீனாகச் சில ஆள்களையும் கொடுத்தான். அதேபோலச் சில தொகை சிறிய பாளையக்காரர் பலரிடமிருந்து வசூலிக்கப்பட்டது. ஆயினும், மொத்த வசூல் 70,000 ரூபாய்க்கு அதிகமாயில்லை. படைகள் திரும்ப வேண்டுமெனக் கட்டளை பெற்றவுடனே அவர்கள் கட்ட பொம்ம நாயக்கனுக்கு அவன் ஜாமீன் ஆள்களை மீட்டுக் கொள்ளும்படி ஆள் அனுப்பினார்கள். ஆனால், அவன் இனி அவர்கள் அவனுடைய நாட்டில் காலந்தாழ்த்தித் தங்கமாட்டார்களென்பதை அறிந்து கொண்டு சில வீண் காரணங்களைக் காட்டி, மன்னிப்பு வேண்டினான். வேறு வழியின்றிப் பிணை ஆள்களையும் அழைத்துச் சொல்ல வேண்டிய துன்பமும் அவர்களைப் பிடித்தது (அந்தோ! - ந.ச.) மே மாதம் இரண்டாம் தேதி கர்னல் ஹெரான் திருநெல்வேலியை விட்டு வெளியேறினான். ஆனால், திருச்சிராப்பள்ளிக்கு நேரடியாகச் செல்வதற்குப் பதிலாக நெல்லிதங்கவல்லி என்ற கோட்டை வழியாகச் செல்லும்படி மக்புஸ்கான் தூண்டிவிட்டான். நெல்லித்தங்கவல்லி திருநெல் வேலிக்கு மேற்கே முப்பது மைல் தூரத்திலுள்ள ஒரு கோட்டை. நவாபுவின் அதிகாரத்திற்குட்பட மறுத்துப் பகை பாராட்டி வந்த ஒரு பாளையக்காரனுக்குச் சொந்தமானது. அக்கோட்டை வழியில் வடகிழக்கிலிருந்து மற்றொரு படை அவனுடன் வந்து சேர்ந்தது.



இதுவரை ஓர்ம் விளக்கியுள்ளார். இக்காலத்தில் அடிக்கடி குறிப்பிடும் பெயராகிய நெல்லித்தங்கவல்லியிலிருந்து நெற்காட்டான் செவ்வல் (நெல்லகாத்தான் செவ்வல்) (நெல்கட்டுஞ் செவ்வல்?) பூரித்தேவர் என்னும் பூலித்தேவரின் தலைமையிடம் என்பதை நாம் அறிய வேண்டும். இப்பெயர் ஆவுடையார்புரம் பாளையக்காரரின் பரம்பரைப்பட்டம். அவன் இப்போது சங்கரநயினார் கோவில் தாலுக்கா என்று சொல்லப்படும் எல்லைக்குட்பட்ட சிறு பகுதிக்குத் தலைவனாய் இருந்தான். அக்காலத்தில் அவன் திருநெல்வேலியின் மேற்குப் பாகம் முழுவதும் தன் திறமையின் புகழால் மிக்க செல்வாக்குடையவனாய் விளங்கினான்.

தன் மொழி பெயர்ப்பாளர்மேல் வைத்திருந்த அளவிலா நம்பிக்கைக் காரணமாக எப்பொழுதும் கர்னல் ஹெரான் மோசம் செய்யப்பட்டு வந்தது அவன் போகூழே ஆகும். பட்டாளம் கோட்டையை நெருங்குவதற்கு முன்பே இந்த மொழி பெயர்ப்பாளன் பாளையக்காரனிடம் சென்று, ''ஆங்கிலேயரிடம் பயங்கர பீரங்கிகள் இல்லை. அதனால் அதிக நேரம் அந்த இடத்திலிருந்து தாக்கமாட்டார்கள்'' என்ற செய்தியை அறிவித்தான். ஆகையால், பாளையக்காரன் பலம்வாய்ந்த கற்கோட்டையைப் பத்திரமாகக் காத்துக் கொண்டதால் ஆங்கிலேயரின் அச்சுறுத்தலுக்கு அஞ்சாது அசட்டை செய்தான். எனவே, இரண்டு சிறு பீரங்கிகளும் இரண்டு காலாட்பகுதிகளும் பல மணிநேரம் கோட்டைச்சுவரை நோக்கிச் சுட்டன. இந்தத் தாக்குதலுக்குப் பயனில்லாது போயிற்று. ஆகவே, 20,000 ரூபாய் கொடுத்துவிட்டால் பட்டாளம் திரும்பிவிடுமென்ற மற்றொரு செய்தியைப் பாளையக்காரனுக்கு அனுப்பினர். மொழிபெயர்ப்பாளனிடமிருந்து அறிந்த செய்தியை நம்பித் துணிவுபெற்ற பாளையக்காரன், அவர்கள் முதல் நிபந்தனையின் தளர்ச்சியை உணர்ந்து, மிக்க பொறுப்புடன் அவ்வளவு பெரிய தொகை அவன் நாடு முழுவதிலுமிருந்து வசூலித்தாலும் கிட்டாதெனத் தெரிவித்தான். மேலும், பணத்தின் அருமையை அவன் அறிவானாதலால், ஒரு ரூபாய்கூடக் கொடுக்க இயலாதென மறுத்துவிட்டான். (பார்க்க: ந. சஞ்சீவியின் 'வீரத் தலைவர் பூலித்தேவர்' - ந.ச.) இதற்குள் பட்டாளம் முழுவதும் எல்லாத் தேவைப் பொருள்களுக்கும் இடர்ப்பட்டுத் திண்டாடின. சம்பளம் பெறுவதற்காகச் சிப்பாய்கள் கலகம் செய்யவும் தயாராய் இருந்தார்கள். பட்டாளத்தின் உணவுப் பொருள் தேவைகளையும் சம்பளத்தையும் தானே தருவதாக வாக்குக் கொடுத்த மக்புஸ்கான், ஒன்றும் கொடாமல் தட்டி விட்டான். எனவே, பட்டாளம் மதுரைக்குத் திரும்பத்

தீர்மானித்தது. மே மாதம் 22 ஆம் தேதி மக்புஸ்கான் தொடரப் பட்டாளம் மதுரையை அடைந்தது. (இப்போரின் கடுமையையும் இதில் தாக்குப்பிடித்த பூலித்தேவரின் வீரத்தையும் யான் அவர் பெயரால் எழுதியுள்ள தனிநூல் விளக்கும். ந.ச.)

இச்சந்தர்ப்பத்தில் கர்னல் ஹெரான் திருநெல்வேலி சரித்திரத்திலிருந்து மறைந்துவிடுகிறான். இதிலிருந்து அவன் மதுரையை அடைந்தவுடனே மதராசுக்கு அழைக்கப்பட்டு இராணுவக் கோர்ட்டாரால் விசாரிக்கப்பட்டு, வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற செய்தியைத் தெரிவிக்கும் வாய்ப்பை நான் எடுத்துக் கொள்கிறேன்.

## புதுப் போராட்டங்கள்

மதுரை திருநெல்வேலி மாகாணங்களில் இதுவரை யாரும் கண்டறியாத போர்த்திறமையுடன் யாவற்றையும் மிஞ்சக் கூடிய திறனும் வீரமும் படைத்த ஆங்கிலப் பட்டாளத்தின் பயங்கரத்தினால் அந்நாடுகளிலுள்ளவர்கள் அடக்கப்பட்டார்கள். அவர்கள் நாட்டைவிட்டு அகன்ற உடனே கூலிப்படைகள் கூடி ஒடுக்கப்பட்ட நாடுகளுக்குள் சென்று கொள்ளையடித்தன. ஆனால், அத்தலைவர்கள் அனைவரும் கூடி மக்புஸ்கானின் அதிகார வலிமையைக் குலைக்கத் தக்க வலிமையான வழிகளைக் காண கலந்தாலோசித்தார்கள். இக்காலத்திலிருந்து இந்நாடுகள் பல ஆண்டுகள் வரை தொடர்ந்து போராட்டக் களங்களாய் மாறின. எனவே. இப்போது ஏற்பட்ட குழப்பங்களை உண்டாக்கிய பல்வேறு காரணங்களையும் அவை பின்னர் எவ்வாறு அதிகரித்தன என்பதைப் பற்றியும் விவரிக்க வேண்டுவது இன்றியமையாதது.

1752 ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் ஆலம்கான் திருச்சியை முற்றுகையிட்டுக் கொண்டிருந்த சந்தாசாகிபுக்குத் துணையாய் மதுரையை நோக்கிப் புறப்பட்டுச் சென்றபொழுது அவன் மதுரை திருநெல்வேலி நாடுகளை மூன்று பட்டாணிய உத்தியோகஸ்தர்களிடம் விட்டுச் சென்றான். அம்மூவரின் பெயர் மகம்மது பக்கிரி, மகம்மது மைனாக்கு, நபிகான் கட்டாக்கு என்பன. இவர்களுள் முதலாமவன் பொதுவாக மியானா என்றும், இரண்டாமவன் மூடிமையா என்றும் மொகி உத்தீன் மியான் என்றும் சாதிப் பெயரால் வழங்கப்பட்டனர். ஆனால், நபிகான் கட்டாக்கு என்பவன் தன் சொந்தப் பெயரினால் வழங்கப்பட்டு வந்தான். நாளடைவில் அவர்களே நவாபுவின் அரசை ஏற்றுக் கொண்டார்கள். இவ்வாறு ஏற்றபோதிலும் அம்மூவரும் தாமே ஆட்சிபுரிந்து வந்தனர் என்பது தெளிவாகிறது. விடுதலை செய்தல்,



கப்பம் கட்டுதல், கோட்டைகளையும் மாவட்டங்களையும் ரொக்கப் பணத்திற்கு விற்றல் முதலிய செயல்களையும் செய்து வந்தனர். இத்தகைய பொருள் ஆசையுடன் சுதந்திர உணர்வும் ஆக்கிரமிப்புக் குணமும் பாளையக்காரர் அனைவருக்குமுள்ள பொதுக் குணங்கள். இக்குணங்கள் அவர்களுக்கு மிக்க செல்வத்தைக் கொடுத்ததன்றி, பேராசையையும் தூண்டின. இத்தகைய அநீதியான ஆட்சியில் அவர்கள் செய்கின்ற கொள்ளையில் அவர்களுக்குள் சமபாகங்கள் பிரித்துக் கொள்ள உடன்பட்டு, கர்னல் ஹெரானின் படையெடுப்பு வரை தொடர்ந்து அரசு புரிந்தார்கள். இப்படையெடுப்பில் மதுரையில் அதிகாரம் செலுத்திவந்த மியானா, மதுரையை விட்டுவிட்டு அருகிலிருந்த நாட்டம் பாளையக்காரரிடம் தஞ்சமடைந்தான். மூடிமையாவும் நபிகான் கட்டாவும் திருநெல்வேலியிருந்து பூலித்தேவர் என்று பெயர் பெற்ற நெல்லித்தங்கவல்லி பாளையக்காரரிடம் திரும்பிச் சென்றனர். ஆங்கிலப்படை நாட்டை மக்புஸ்கானிடம் விட்டு விட்டுத் திரும்பும்வரை இம்மூவரும் பொறுத்துக் கொண்டு, மக்புஸ்கானை எதிர்க்கக் காத்திருந்தனர். அவர்கள் விற்ற பொருள்களில் ஒன்று திருவாங்கூர் அரசனுக்கு விற்கப்பட்ட அதிகப் பரப்புள்ள மாவட்டமாகும். இது களக்காட்டிலிருந்து கன்னியாகுமரி வரை முப்பது மைல் பரப்புடையது. திருவாங்கூரையும் திருநெல்வேலியையும் பிரிக்கின்ற மலையடிவாரத்தில் அமைந்திருந்தது. களக்காட்டுக் கோட்டையும் பாதுகாப்பற்ற மற்றும் பல கோட்டைகளும் இம்மாவட்டங்களுடன் சேர்த்து விற்கப்பட்டன. (திருவிதாங்கூர் தமிழகம் தோன்றிய காரணம்! - ந.ச.) திருவாங்கூர் ராஜா டிலானாய் என்ற பிளமிஷ் உத்தியோகஸ்தரின் உதவியுடன் மலபார் கடற்கரை இராணுவ கூட்டத்தினராகிய 10,000 நாயர்களைக் கொண்ட ஒரு காலாட்படைக்கும் ஐரோப்பிய முறையில் பயிற்சியளித்து வந்தான். இந்த நாயர்களைத் தவிர, 20,000 பல்வேறு காலாட்படைகளையும் அவன் வைத்திருந்தான்.

புதிய நவாபுவின் பிரதிநிதியாகிய மூடிமையா களக்காட்டிற்கருகேயுள்ள திருநெல்வேலியின் ஒரு பகுதியைத் திருவாங்கூர் ராஜாவுக்குச் சுமார் 1752 இல் விற்றான். அந்தத் திருவாங்கூர் அரசன் மார்த்தாண்ட வர்மா என்பவர். அவர் 1729 இல் பட்டத்திற்கு வந்து 1758 வரை வாழ்ந்தார்.

மூடிமையானிடமிருந்து வாங்கப் பட்ட மாவட்டங்கள் சுமார் 2000 ஒழுங்கற்ற காலாட்படையினரால் ஆளப்பட்டு வந்தன. அக்காலாட படைகளுக்கு எதிரிகள் இல்லை. சாதாரணக் காவலுக்கும் படை

வருகைப் பட்டியலுக்கும் அவர்கள் போதுமானவர்களாயிருந்தார்கள். இது இந்துஸ்தானத்தில் எப்பொழுதும் அரசாங்கத்தினர் வரிவசூல் செய்வதற்கு உதவியாய் இருந்தன. ஆனால், இந்தப் படைகள் கர்னல் ஹெரான் திருநெல்வேலியை அடைந்ததையும் அவன் செய்து வந்த பயங்கரக் கொள்ளைகளைப் பற்றியும், சிறப்பாக நெல்லிக் கோட்டையில் அவர்கள் செய்த இரக்கமற்ற கொலை, கொள்ளைகளைப் பற்றியும் கேள்விப்பட்டதும், அஞ்சி நடுங்கி அவர்கள் வசமிருந்த மாவட்டங்களை மட்டுமின்றி, களக்காட்டுக் கோட்டையையும் கைவிட்டுவிட்டனர். திருநெல்வேலியிலிருந்து மக்புஸ்கானால் அனுப்பப்பட்ட 300 குதிரை வீரர்களும் 500 காலாட்படை வீரர்களும் அடங்கிய படையினால் அவை கைப்பற்றப்பட்டன. நெல்லித்தங்க வல்லியிலிருந்து ஆங்கிலத் துருப்புகள் திரும்பி வருவதற்குள் அவை திருச்சிராப்பள்ளிக்கு வரும்படி உத்தரவிடப்பட்டது தெரிந்ததே. இதையறிந்த மூடிமையா திருவாங்கூர் அரசனுடைய படைகளினால் கைவிடப்பட்ட மாவட்டங்களைத் திரும்பக் கைப்பற்றும்படி அவ்வரசனைத் தூண்ட திருவாங்கூருக்குப் புறப்பட்டான். அதே சமயத்தில் பூலித்தேவர் தம் கூலிப்படையை ஏவிக் கொள்ளையடிக்கச் செய்து திருவாங்கூர்ப் படை வந்தவுடனே அவற்றுடன் சேர்ந்து கொள்ளப் படையுடன் தயாராயிருந்தான். மக்புஸ்கான் நத்தம் மதுரையிலிருந்து திரும்பியதும் இந்தத் திட்டங்களைப் பற்றியும் ஆயத்தங்களைப் பற்றியும் எப்படியோ அறிந்து கொண்டு, உடனே திருநெல்வேலியை நோக்கி முன்னேறினான்.

**பாளையக்காரர்களின் வெற்றி**

மக்புஸ்கானிடம் கர்னல் ஹெரானால் விட்டுச் செல்லப்பட்ட நூறு சிப்பாய்களடங்கிய கம்பெனிப்படையுடன் அவனுக்குத் துணையாக 600 படை வீரரைக் கூட்டி அனுப்பி வைத்தான் நவாபு. இப்படை திருச்சிராப்பள்ளி போர்க்களத்தில் பயிற்சியடைந்த கம்பெனிப் பட்டாளத்திற்கு எந்த விதத்திலும் இணையில்லை. மக்புஸ்கானுக்கே இராணுவ யோசனை ஒன்றும் தெரியாதாகையால், மேலும் மேலும் படை வீரர்களைச் சேர்த்து அவன் தன்னுடன் கர்நாடகத்திலிருந்து அழைத்து வந்த வீரர்களுடன் மொத்தத்தில் 2500 குதிரை வீரரையும் 4000 காலாள்களையும் சேர்த்து விட்டான். ஐந்நூறு குதிரைவீரரும் ஆயிரம் காலாள்களும் மதுரை நகரையும் அதன் மாவட்டங்களையும் பாதுகாக்கும்படி விட்டுச் சென்றான். ஆனால் கம்பெனிச் சிப்பாய்கள் அவனுடன் திருநெல்வேலிக்குத் தொடர்ந்து சென்றார்கள். அவர்கள் அங்குச் செல்வதற்குள் மூடிமையா திருவாங்கூர்



அரசனால் அவன் தலைமையில் விடப்பட்ட 200 நாயர்களுடனும் அதே எண்ணிக்கையுள்ள காலாள்களுடனும் திரும்பி வந்து விட்டான். களக்காட்டுக்கருகில் அவர்கள் பூலித்தேவரின் படையுடன் சேர்ந்து கொண்டார்கள். அங்கே பல இடங்களில் மக்புஸ்கானால் நிறுத்தப்பட்டிருந்த படைகள் ஒன்றுகூடிப் போரிட்டுத் தோற்கடிக்கப்பட்டன. நவாபுவின் சிப்பாய்களில் முந்நூறு பேர் தப்பியோட எளிதாயிருக்கத் தம் துப்பாக்கியை எறிந்து விட்டுச் சென்றனர். அத்துப்பாக்கிகளைப் பூலித்தேவரின் ஆள்கள் சேகரித்து, பெருமதிப்புள்ள பரிசாகக் கருதி வைத்துக் கொண்டார்கள். அவன் வெற்றிக்கு அடுத்தாற்போல் எதிரிகள் களக்காட்டுக் கோட்டையில் தப்பி ஓடி ஒளிந்திருந்தவர்களை முற்றுகையிட்டார்கள். அவர்கள் அக்கோட்டையைக் கைப்பற்றுவதற்குள் திருவாங்கூர்ப் படைகள் தங்கள் சொந்த நாட்டில் ஏற்பட்ட சில குழப்பங்களை அடக்க அழைக்கப்பட்டதாகப் பாசாங்கு செய்து திரும்பிவிட்டன. உண்மையில் அப்படையை எதிர்க்கும் பயங்கரத்தைத் தவிர்க்கவும் முக்கியமாய் விரைந்து வரும் மக்புஸ்கானின் காலாட்படையுடன் போர் செய்வதைத் தவிர்க்கவும் அவ்வாறு செய்தார்கள். மூடிமையா அவர்களுடன் சென்றான். பூலித்தேவர் தம் காட்டுக் கோட்டைக்குத் திரும்பினார். அக்காட்டுக் கோட்டையை நோக்கி மக்புஸ்கான் விரைந்து கோட்டைக்கருகே கூடாரம் அடித்துத் தங்கினான். ஆனால், கோட்டையைக் கைப்பற்ற இயலவில்லை. இத்தகைய நிலையில் திருநெல்வேலி மாவட்டங்களில் சூறையாட அனுப்பப்பட்ட பூலித்தேவரின் கூலிப்படையை அடக்கிவிட்டு, அதனால் ஏற்பட்ட பயனால் மனநிறைவு அடைந்ததன்றி, நாட்டை அடக்கிவிட்டதாய்ப் பகட்டாகப் பேசிக் கொண்டான் மக்புஸ்கான். இவ் வீண் பெருமைக்குச் சீக்கிரத்திலேயே இடையூறு ஏற்பட்டது செப்டம்பர் மாதத்தில் மூடிமையா திருவாங்கூருக்குத் திரும்பிவிட்டான். அவனுடன் படையின் பெரும்பகுதி வந்தது. அப்படையினர் மறுபடியும் களக்காட்டிலிருந்தவர்களைத் தோற்கடித்தனர். இந்தப் போரில் எதிரிகள் முதற்போரில் அடைந்த இழப்பைவிட அதிகமாக இழப்படைந்தார்கள். ஏனெனில், எதிரிகள் படையிலிருந்த 200 குதிரை வீரரும் 500 சிப்பாய்களும் கைதாகிப் பிடிபட்டார்கள். அவர்கள் தோல்வியை மிகைப்படுத்தியது அறுவடைக்காலம். எல்லா வரிவசூல்களும் அந்தப் பகுதிகளும் திருவாங்கூர் அரசனால் கைப்பற்றப்பட்டன. எனினும், நவம்பர் மாதத்தில் மக்புஸ்கான் பூலித்தேவரின் இடத்திற்கு முன்னால் தொடர்ந்து சென்று இரு சிப்பாய்ப் படைகளின் பாதுகாவலில் அனுப்பப்பட்ட உணவுப் பொருள்களை இடைமறித்துக் கவர்ந்து

கொண்டான். அவர்கள் கம்பெனிப் பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள். இருபடைகளின் தலைவர்களும் கொல்லப்பட்டார்கள்.

பூலித்தேவரின் இடத்திற்கு முன்னால் நவம்பர் மத்தியில் கொள்ளையடித்த பின்னர் மக்புஸ்கான் தன் படைகளுக்குத் தேவையான பணத்தைக் கடன் வாங்குவதற்காகத் திருநெல்வேலிக்குத் திரும்பினான். அங்குப் பணம் கடன் கொடுத்தவர்களுக்கு நிலத்தை ஈடுகாட்டியே கடன் தொகையை அவனால் பெற முடிந்தது. அதற்குள் மூடிமையாவினாலும் நபிகான் கட்டாக்கினாலும் சமீபத்தில் அடைந்த வெற்றிகளால் உற்சாகப்படுத்தப்பட்டுத் தங்கள் திட்டங்களை விரிவாக்கிக் கொண்டார்கள்.

பூலித்தேவர் பரந்த நம் நாட்டையும் படையையும் விடத் தம் ஒழுக்கத்தின் மேன்மையாலும் புகழாலும் திருநெல்வேலியிலுள்ள மேற்குப் பாளையக்காரர்கள் அனைவர் குழுவிலும் உயர்ந்த பதவியை அடைந்தார். (அயலக அறிஞர் கால்டுவெல் புகலும் பொன்னெழுத்துகளால் பொறிக்கத்தக்க இப்புகழ் மொழிகள் ஆழ்ந்து கருதிப் போற்றத்தக்கன. - ந.ச.) அவர்களுள் மிக்க பலம் வாய்ந்தவர் வடகரைப் பாளையக்காரர் வடகரைப்பாளையம் சொக்கம்பட்டியோடு ஒப்பிடப்பட்டிருக்கிறது. பூலித்தேவரின் நாட்டிற்கு மேற்கில் சொக்கம்பட்டி மாவட்டம் அமைந்திருந்தது. இது மற்ற மாவட்டங்களைவிட அதிக நிலப்பரப்பும் ஜனத்தொகையும் உடையது. ஆயினும், பாளையக்காரர் பூலித்தேவரின் வார்த்தைகளையும் ஏற்றுக் கொண்டு அவர் கேட்டபொழுதெல்லாம் தம் படைகளை அனுப்பி வைத்தார். திருநெல்வேலியின் கிழக்குப் பக்கத்திலுள்ள பாளையக்காரர்கள் கட்டபொம்ம நாயக்கனுக்குக் கீழ்ப்படிந்திருந்தார்கள். இவ்விரு பிரிவினருக்குமிடையே பூலித்தேவர் ஒற்றுமை உண்டு பண்ண எண்ணினார். (என்னே அவர் ஏற்றம்? - ந.ச.) ஆனால், கட்டபொம்ம நாயக்கனும் அவனைச் சார்ந்த எட்டையபுரத்தானும் கர்னல் ஹெரானுக்கு ஆட்பிணை கொடுத்திருந்ததால், அவர்களுக்கு என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சிப் பூலித்தேவரின் வேண்டுகோளுக்கு மறுத்துவிட்டனர். மேற்கே மலையடிவாரத்தில் அமைந்துள்ள மாவட்டங்களையுடைய மதுரைப்பாளையக்காரர்கள் மிக எளிதில் இதற்கு இணங்கி, உதவியும் புரிவதாக வாக்குறுதி கொடுத்தார்கள். மூடிமையாவும் தப்பியோடிய மியானாவும் நபிகான் கட்டாக்கும் அதே சமயத்தில் நத்தம்பாளையக்காரை அக்குழுவில் சேரும்படி ஊக்கப்படுத்தினர். அக்குழுவின் உடனடி நோக்கம் மதுரை நகரத்தைக் கைப்பற்றுவதே. இத்தகைய பெரிய உடன்படிக்கை



ஒளிவாக இருக்க இயலாது. சென்னை அரசு திருச்சிராப்பள்ளிப் படைக்குத் தலைமை வகித்த காப்டன் காலியட்டிடமிருந்து இச்செய்தியை அறிந்தது. மதுரைக் கவர்னரிடமிருந்து நவாபு செய்தி அறிந்தான். அவர்கள் தக்க காரணங்களால் பெரிதும் அச்சமடைந்தார்கள். ஏனெனில் மதுரை அதன் இருப்பிடத்தாலும் பரப்பளவாலும் பாதுகாப்பாலும் தனக்குத்தானே கொத்தளமாய் இருந்ததுமன்றித் திருநெல்வேலி எல்லைக்கும் காவலாய் இருந்தது (மதுரையின் மாண்பு! - ந.ச.). மதுரை அதன் சொந்தக்காரர்களிடமிருந்து பறிக்கப்பட்டு விட்டால் இவ்விரண்டிடத்தின் மேலும் திருச்சிராப்பள்ளிக்கு எவ்வித அதிகாரமும் இல்லாமற் போய்விடும். சென்னை அரசு முதலிலேயே மக்புஸ்கானின் திறமையின்மையை அறிந்திருந்தும், நவாபுவிடம் உள்ள மரியாதையினால் இதுவரை அவனுக்கும் மரியாதை கொடுத்துப் பொறுத்திருந்தது. ஆனால், இப்பொழுது பாளையக்காரர்களின் வெற்றிகளாலும் திட்டங்களாலும் ஏற்பட்ட முழு நெருக்கடியையும் கண்ட அவர்கள், அந்த நாடுகளின் அதிகாரத்தைத் தாங்களே ஏற்றுக் கொள்ளத் தீர்மானித்தார்கள்.

### பூலித்தேவரின் ஓட்டம்

இச்சமயத்தில் திருநெல்வேலி வாசியான முதலி ஒருவன் சென்னை வந்து முழு நாட்டையும் விளைநிலமாக வாடகைக்கு எடுத்துக் கொள்வதாகக் கூறினான். ஆனால், ஒப்பந்தங்களின் நிபந்தனைகளைச் சரிசெய்யச் சிலகாலம் தேவையாயிருந்ததால், மறந்து விட்டார்கள்.

முதலி என்பது தனிப்பட்ட பெயரன்று; சாதிப் பெயர் இங்குக் குறிப்பிட்டவன் தளவாய் முதலியார்களைச் சேர்ந்தவன். இதனால் தொடர்ந்து பல ஆண்டுகள் வரை இக்குடும்பத்தினர் ஆங்கிலேயரிடம் கோபங்கொண்டிருந்தனர். முதலியுடைய சொந்தப் பெயர் தீத்தாரப்ப முதலியாய் இருக்க வேண்டும். தளவாய் என்பது குடும்பத்தின் பரம்பரைப் பெயர். அதற்குள் நாட்டைக் காக்க உடனடியாக ஏற்பாடுகள் செய்ய வேண்டுவது இன்றியமையாதது. ஆனால், கர்நாடகத்திலிருந்து ஐரோப்பா படை வீரரின் எப்பகுதியையும் இக்காரியத்திற்காக அனுப்ப இயலாது போயிற்று. எனவே, 100 சிப்பாய்களை அனுப்பத் தீர்மானித்தது. இந்தச் சிப்பாய்ப் படை மக்புஸ்கானால் விடப்பட்ட படையுடனும் நவாபுவினுடைய படையுடனும் சேர்ந்து மொத்தத்தில் முகம்மது யூசுப்கான் தலைமையில் செல்லக் கட்டளையிடப்பட்டது. ஆங்கிலேயப் பட்டாளம் வேலூரிலிருந்து திரும்பியவுடன் யூசுப்கான் திருச்சிராப்பள்ளியை நோக்கி முன்னேறினான். முன்னதாகவே

கட்டளையிடப்பட்ட படையையும் தேவையான உதவிகளையும் அனுப்பி வைக்குமாறு காப்டன் காலியாட்டுக்குக் கட்டளையிடப்பட்டது.

இவ்வமயத்தில் பூலித்தேவர் நபிகான் கட்டாக்குடனும் மூடிமையாவுடனும் அவர்கள் கூட்டாளிகளுடனும் சேர்ந்து செயல்புரிய தொடங்கிவிட்டார்; பிப்ரவரி இடையில் நடுமண்டலம் மாவட்டங்களில் நுழைந்தனர். மதுரை நகரிற்கும் பூலித்தேவரின் இடத்திற்கும் இடையே ஏறக்குறைய மத்தியில் ஒரு பெரும்பகுதிப் படையுடையதாயிருந்தது இந்நடு மண்டலம். இந்த மாவட்டங்களை ஆண்டு வந்த கோட்டை ஸ்ரீவில்லிபுத்தூர் என்று வழங்கப்பட்டது. இது மதுரைக்குத் தென்மேற்கே சுமார் 45 மைலில் மேற்கு மலைத்தொடர் அடிவாரத்தில் அமைந்துள்ளது. கோட்டையைக் காக்க ஒரு பட்டாளம் நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. மாவட்டங்களின் அதிகாரம் நவாபுவுக்கும் மக்புஸ்கானுக்கும் ஒன்றுவிட்ட உடன் பிறப்பாளனாகிய அப்துல்ரஹீமின் வசமிருந்தது. இவனுடனும் இவன் குடும்ப உறவினனான அப்துல் மாலியுடனும் லெப்டினண்டு இன்னிங் என்பவன் அந்நாடுகளுக்குள் 1751 ஆம் ஆண்டு புகுந்தான். இருநூறு சிப்பாய்களைத் தவிர வழக்கமாய் இருக்கும் கலகக்காரக் காலாட் படைகள் கிராமங்களைக் காக்க நியமிக்கப்பட்டிருந்தன. ஆனால் அதில் மக்புஸ்கானின் கீழ்ச் சிறந்த படையினர் என்று பேர்பெற்ற 500 குதிரை வீரரும் இருந்தனர். அவர்கள் தங்களுடைய வீரத்தாலும் மகம்மதியரின் இனச் சிறப்பாலும் கர்வம் கொண்டு இராணுவ அனுபவமில்லாத ஓர் இந்தியப் பகைவனை மிக்க வெறுப்புடன் எதிர்த்தார்கள். அன்றியும், தங்கள் தலைவர்களைச் சண்டையில் துணிந்து எதிர்க்கும்படி ஊக்கப்படுத்தினார்கள். அப்போரில் அவர்கள் எதிரிகளால் சூழப்பட்டார்கள். ஆனால், போதுமான ஆண்மையுடனும் அதிக இழப்புடனும் அங்கிருந்து தப்பி, ஸ்ரீவில்லிபுத்தூரை அடைந்தார்கள். இங்கு அப்துல் ரஹீமும் அப்துல் மாலியும் மதுரையிலிருந்தாவது, திருநெல்வேலியிலிருந்தாவது உதவிப்படை வரும்வரை தங்களைக் காப்பாற்றிக் கொள்ள எண்ணினார்கள். ஆனால், குதிரைப் படையினர் போதுமான சம்பளமில்லாததால், வெறுப்புக் கொண்டிருந்ததாலும், முற்றுகையின்போது உணவுத் தேவையினால் குதிரைகள் இறந்துவிடுமோ என்று அஞ்சியதாலும் படையினின்றும் விலகிச் சென்றுவிட்டனர். பலர் எதிர்ப் படையிற் சேர்ந்து கொண்டனர்; கோட்டை உடனே சோதிக்கப்பட்டது. உடனடியாகக் கோட்டையைத் தம் வசப்படுத்திக் கொண்டனர். இம்முறையும் இரு படைத் தலைவர்களும் தப்பி விட்டனர்.



இந்த வெற்றி இதுவரை வாக்குறுதியின்படி உதவி செய்யச் சமயம் பார்த்திருந்த மதுரை பாளையக்காரர்களை மேலும் உற்சாகப்படுத்தியது. எனவே, 25,000 பேர்களடங்கிய படை இப்பொழுது திரண்டது. அதில் 1000 குதிரை வீரர்களும் இருந்தனர். இந்தப் படையினால் உற்சாகப்படுத்தப்பட்ட அவர்கள் தலைவன், மதுரை நகரைத் தாக்குவதற்கு முன்பு மக்புஸ்கானைத் திருநெல்வேலியிலேயே எதிர்த்துப் போரிட நிச்சயித்தான். இதற்குள் கட்டபொம்ம நாயக்கன் சில மாவட்டங்களைத் தருவதாகவும் கிழக்குப் பகுதி பாளையக்காரர் படையுடன் அவனைச் சேர்த்துக் கொள்வது போன்ற மற்ற இலாபங்களையும் எண்ணி மக்புஸ்கான் கட்டபொம்மனுடன் இணங்கினான். சேர விருப்பமுடைய எல்லாக் குதிரை, காலாட்படைகளையும் சேர்த்துக் கொண்டான். ஆனால், அவனுடைய முக்கியப் படையினர், அவனிடம் முன்பே இருந்த 1500 குதிரை வீரரும் ஜமால் சாகிபுவின் தலைமையிலிருந்த ஆயிரம் கம்பெனிப்படை வீரருமாவர். இப்படையில் ஏற்பட்ட ஆள் குறைவு சீக்கிரத்தில் சிறந்த வீரர்களால் நிரப்பப்பட்டிருந்தது. இப்போர் திருநெல்வேலிக்கு ஏழு மைல் தூரத்தில் மார்ச்சு 21 ஆம் தேதி நடைபெற்றது. வழக்கமான இந்நாட்டுப் போர்களைவிடக் கடும்போராய் இருந்தது இது. இதன் இறுதியில் மூடிமையா வீழ்ச்சியடைந்தான். குதிரை வீரருடன் துணிவுடன் போர் செய்யும்போது அவன் வெட்டப்பட்டான். வெற்றியடைந்தவன், தளபதியானான். 200 கூலிப்படை வீரர்கள் கொல்லப்பட்டனர்; 300 குதிரை வீரர் படையும் துப்பாக்கிகளும், யானைகளும் கைப்பற்றப்பட்டன. இப்போர் சூழ்ச்சிக்காரரின் படையைச் சிதறடித்துவிட்டமையால், இவ்வெற்றியால் மதுரை காக்கப்பட்டது. பகைவர் அனைவரும் முக்கியமாகப் பூலித்தேவரும் மற்றவர்களைவிடப் பெரும் பயமடைந்து போர்க்களத்திலிருந்து அவரவர் வீட்டை நோக்கி ஒட்டம் பிடித்தனர்.

### மகம்மது யூசுப்கானின் ஆட்சி

இவ்வெற்றிச் செய்தி மார்ச்சு 24 ஆம் தேதி திருச்சிராப்பள்ளிக்கு எட்டியது. அச்சமயத்தில் மகம்மது யூசுப் புறப்படத் தயாராய் இருந்தான். அவன் படையில் 1200 சிப்பாய்களும் 100 ஆப்பிரிக்க வீரர்களும், 150 கூலிப்படை வீரர்களும் ஐரோப்பியர் மேற்பார்வையில் இருந்தார்கள். 4 பீரங்கிகளும் ஒரு 18 இராத்தல் பீரங்கியும் இருந்தன. பட்டாளம் புறப்படச் சிறிது நேரத்திற்கு முன்னே கட்டபொம்ம நாயக்கனும் எட்டையபுரப் பாளையக்காரனும் தங்கள் பிணை ஆட்களை மீட்டுக் கொள்ளக் காப்டன் காலியாட்டுடன் உடன்படிக்கை செய்து

கொண்டார்கள். அதன் படி பிணை ஆட்கள் தொண்டைமானிடம் ஒப்புவிக்கப்பட்டவுடன் பணம் செலுத்தப்படும் என்று ஏற்பாடாயிற்று. மகம்மது யூசுப்கான் பிணை ஆட்களையும் அழைத்துக் கொண்டு புதுக்கோட்டை நோக்கிச் சென்றான். புதுக்கோட்டை தொண்டைமானின் முக்கிய நகரம். அவன் வசம் பிணை ஆட்கள் ஒப்புவிக்கப்பட்டார்கள். 1756 மே, ஆறாம் தேதி அவன் மதுரையை அடைந்தான். இங்குச் சிலநாள் தங்கி வண்டிகளையும் களஞ்சியங்களையும் நிரப்பிக் கொண்டு திருவில்லிபுத்தூர்க் கோட்டைக்குச் சென்றான். கடைசியாக எதிரிகள் அடைந்த தோல்வியைப் பற்றி அறியாமலே அவர்களின் ஆட்கள் கோட்டையைத் தங்கள் வசத்தில் வைத்திருந்தார்கள். முகம்மது யூசுப்பைக் கண்டதும் அவர்கள் கோட்டையை விட்டுவிட்டு ஓடிவிட்டார்கள். எதிர்காலத்தில் அக்கோட்டையைக் காவல்புரியப் போதுமான இராணுவப்படையை நிறுத்திவிட்டு நடுமண்டல நாட்டைக் கடந்து கயத்தாற்றிற்குச் சென்றான். இது திருநெல்வேலிக்கு வடக்கே சுமார் 25 மைல் (18 மைல்) தூரத்திலுள்ள ஒரு நகரம். இங்குதான் மக்புஸ்கான் வெற்றியடைந்த சுறுசுறுப்பற்ற படையுடன் முகம்மது யூசுப்புக்காகக் காத்திருந்தான்.

இந்தத் தடவை முகம்மது யூசுப்பால் அவன் படைக்குத் தேவையான பணத்தை வரிகளிலிருந்து வசூல் செய்ய இயலவில்லை. ஏனெனில் பாளையக்காரச் சூறைக்காரர்கள் பல கிராமங்களையும் அவர்கள் சென்ற பாதைகளிலிருந்த நாட்டின் விளைநிலங்களையும் பாழாக்கிவிட்டார்கள். நிலச் சொந்தக்காரர்கள் இச்சூறையாடலில் நேர்ந்த உண்மையான சேதத்தின் கணக்கை அதிகப்படுத்தி அதிகமான சேதம் ஏற்பட்டதாகப் பாசாங்கு செய்து தாங்கள் அடைந்த இழப்பை விட அதிகமான தொகைக்கு விலக்குகள் வேண்டி இறைஞ்சினார்கள். முகம்மது யூசுப்கானைவிட மக்புஸ்கான் பெரிய இடர்பாட்டில் அகப்பட்டுக் கொண்டான். கர்னல் ஹெரானிடமிருந்து நாட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்ட ஒப்பந்தத்தையும் நிறைவேற்ற முடியாது ஜமால் சாகிபுவின் தலைமையில் அவனிடம் அனுப்பப்பட்ட கம்பெனிச் சிப்பாய்களின் சம்பளத்தைக் கொடுப்பதற்கோ அல்லது நீண்ட நாளைய கடன்பாக்கியில்லாமல் அவனுடைய சொந்தப்படை வீரரின் அன்றாட உணவுத் தேவைக்குப் போதுமானவற்றைக் கொடுக்கவோ இயலாது திணறினான். பழைய இத்தாலியக் கூலிப்படைத் தலைவர்களைப் போல் ஹிந்துஸ்தானத்தில் அவனுடைய ஜமேதார்களும் குதிரைப்படை உத்தியோகஸ்தர்களும் தங்களுடைய கச்சைகளை அடமானம் வைத்து இலாபமடைந்த செய்கையைக் கூடத் தக்க அதிகாரத்துடன் கண்டிக்க முடியாமல்



செய்துவிட்டது இத்துன்பம். இதே போன்ற பலவிதமான ஒழுங்கீனங்கள் அவன் அதிகாரத்திற்குட்பட்ட மற்றப் பிரிவுகளிலும் அதிகரித்தன. அதே சமயத்தில் அவனுடைய கவனிப்பின்மையும் நிலையற்ற அறிவும் அவன் நிருவாகத்தில் ஏற்பட்ட எல்லாத் தீமைகளையும் உறுதிப்படுத்துவனவாயின.

கயத்தாற்றிலிருந்து மக்புஸ்கானும் முகம்மது யூசுப்பும் முழுப் பட்டாளத்துடன் கிழக்கே 30 மைல் தூரத்திலிருந்த எட்டையபுரக் காடுகளை நோக்கி நகர்ந்தனர். கட்டபொம்ம நாயக்கனும் எட்டையபுரப் பாளையக்காரனும் பாசறையிலிருந்தனர். கட்டபொம்மன் புதுக்கோட்டையிலிருந்து தன் பிணை ஆட்களைத் தன் பிரதிநிதிகள் மூலம் மீட்டுக் கொண்டான். ஆனால், எட்டையபுரத்தான் மேலும் தாமதம் செய்து வந்தான். வேறு எவ்விதப் பயமுறுத்தலும் இல்லாத போதிலும், இச்செய்கையால் அவன் பட்டாளத்தைக் கண்டதும் மிக்க பயமடைந்தான்; அவன் மேலும் கெடுவைத் தள்ளி வைத்தமையால் அவனுடைய ஒப்பந்தத்தின்படி தன் பகைமையை வெளிக்காட்ட இயலாது இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டான். எட்டையபுரத்திலிருந்து நாட்டைக் கடந்து பெரியசாலை அருகே அமைந்துள்ள கொல்லாப்பட்ட என்று சாதாரணமாக வழங்கப்படும் கோபிலோர்ப் பேட்டா (கொல்லார் பட்டி) (கோயிலாரிப்பட்டி?) என்ற வலிமைமிக்க கோட்டைக்குச் சென்றனர். அக்கோட்டை கந்தம நாயக்கன் என்ற கொண்டம் நாயக்கனுக்குச் சொந்தமானது. வரிப்பணம் செலுத்தப்பட வேண்டுமென முதல் தடவை கேட்டவுடனே அவன் தாமதமின்றிக் கொடுப்பதாக வாக்குக் கொடுத்தான். ஆனால், தினந்தோறும் பணத்திற்குப் பதிலாகப் பாசாங்குகளையும் மன்னிப்புகளையும் அனுப்பி வந்தான். இறுதியில் தான் ஏமாற்றப்படுவதை உணர்ந்து முகம்மது யூசுப்பு, கோட்டையைத் தாக்கி முற்றுகையிட்டான். கோட்டை நன்றாகப் பாதுகாக்கப்பட்டிருந்தது. எனினும், இறுதியில் கைப்பற்றப்பட்டது. ஆப்பிரிக்கப் படைவீரரின் சார்ஜெண்டும் அக்கூட்டத்தினில் எட்டுப் பேரும் கொல்லப்பட்டனர்; 65 பேர் காயமடைந்தனர். கூலிப்படைகள் மேலும் அதிகமான துன்பத்தை அடைந்தன. கொல்லப்படாதவர் அனைவரும் கைது செய்யப்பட்டனர். அவர்களுள் பாளையக்காரனும் ஒருவன். கொல்லார்ப்பட்டியிலிருந்து முழுப்படையும் திருவில்லிபுத்தூரை நோக்கிச் சென்றது. அங்கு ஜூன் 10 ஆம் தேதி அவன் கோட்டையில் தங்கினான். இதற்குள் அருகிலுள்ள பாளையக்காரர்கள் அனைவரும் கொல்லார்ப்பட்டி பாளையக்காரனின் செய்கையைக் கண்டு கலங்கி, அவரவர்களின் கப்பங்களை நேராகவோ பிரதிநிதிகள் மூலமாகவோ

கொண்டு வந்து செலுத்திவிட்டார்கள். பூலித்தேவர் கூட வழக்கமான தமது மோசக்கருத்துடன் சமாதான உடன்படிக்கை ஏற்பாட்டையும் ஒருவன் மூலம் அனுப்பிவைத்தார். கொல்லார்ப்பட்டிக்கும் திருவில்லிபுத்தூருக்கும் இடையேயுள்ள இளையரான் பண்ணைப் பாளையக்காரனும் தன் ஆள்பிணையை மீட்டுக் கொண்டான். ஆனால், திருவில்லிபுத்தூரிலிருந்து வடகிழக்கே 13 மைலில் உள்ள காலன்கண்டான் (கொல்லம் கொண்டான் என்பது இப்பொழுது சேத்தூர் ஜமீந்தாரியுடன் இணைக்கப்பட்டிருக்கிறது) பாளையக்காரன் மட்டும் வழக்கமானக் கட்டளையை அசட்டை செய்து கொண்டிருந்தான். உடனே முகம்மது யூசுப்கான் சென்று, அவன் கோட்டையைத் தாக்கினான். சிறிது எதிர்ப்பிற்குப் பின் கோட்டை கைவிடப்பட்டது.

**பாளையக்காரர்கள்**

மேலும் நாம் பார்ப்பதற்குமுன் இவ்வாறு எல்லாச் சந்தர்ப்பங்களிலும் தொந்தரவு கொடுத்துவந்த பாளையக்காரர்களின் நிலைமை என்ன என்பதைப் பற்றி இன்னும் சில குறிப்புகளைக் கொடுக்க விரும்புகிறேன். இயல் மூன்றில் திருநெல்வேலியில் முதன் முதலில் இப்பிரிவினர் நுழைந்ததைப் பற்றிய குறிப்புகளையும் காண்க.

'பொள்ளம்' என்று ஆங்கிலேயர் எழுதும் பாளையம் என்பது ஜாகீர் அல்லது ஜமீந்தாரி மட்டுமன்று; ஓர் அரசனால் ஒரு தலைவனிடம் கொடுக்கப்பட்ட ஒரு மாவட்டமுமாகும். இம்மாவட்டத்திற்குரியவன் பாளையக்காரன் அல்லது போலிகார். அவன் ஆண்டுதோறும் தன் எஜமானனாகிய அரசனுக்குக் கப்பம் செலுத்த வேண்டுவதன்றிச் சண்டைக் காலத்திலும் அவனுக்கு உதவிகள் செய்ய வேண்டும். பாளையம் என்பதற்குச் சாதாரணமாகப் பாசறை என்பது பொருள். பாளையக்காரன் என்பதற்குப் பாசறையை உடைய தலைவன் என்பது பொருள். எனவே, முதலிலேயே பாளையக்காரன் ஒரு பகுதி ஆயுதபாணியான பட்டாளத்தின் தலைவனாய் இருந்தானென்றும் அத்தலைவன் அவனுடைய அரசனுக்குக் கீழ்ப்படிந்து கடமைகள் புரிந்து வந்தானென்றும் அக்கடமைக்குப் பதிலாக அவனுக்கு மாவட்டங்கள் இராணுவ ஆட்சியினரால் கொடுக்கப்பட்டது என்றும் முடிவு செய்யலாம். எப்பொழுதும் அவன் தன் எல்லையை ஒரு நாடாகக் கொள்ளாது பாளையம் அல்லது பாசறையாகவே எண்ண வேண்டும். எனவே, அரசனது நேரிடை ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் வரிவசூல், கொலை முதலியவற்றில் அரசனே நேரில் தலையிட்ட போதிலும், பாளையக்காரரின் எல்லைக்குட்பட்ட இடங்களில் ஏற்படும் எந்த வரிவசூல் அல்லது கொலைக் குற்றவாளிகள் மீதும் தன் அதிகாரத்தைச்



செலுத்த முயன்றதுமில்லை; தனக்கு அதிகாரம் உண்டு என்று உரிமை கொண்டாடியதுமில்லை. கப்பத்தைச் செலுத்திவிட்டுக் கப்பம் கட்டும் தலைவன் அரசனுடைய தேவையின் போது படைகள் அனுப்பிப் போரில் உதவி செய்தால் அவனுடைய நிபந்தனைகள் நினைவுபடுத்தப்படும். தென்னிந்தியாவில் திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கேயுள்ள பெரிய நிலப்பகுதி இத்தகைய பாளையக்காரர் வசம் இருந்தது. மதுரை, திண்டுக்கல் முதலிய இடங்கள் அரசனுடைய உடைமைகளாகவே இல்லை. திருநெல்வேலியில் தாமிரபரணி நதிக்கு வடக்கேயுள்ள நாட்டில் மிக பெரும்பகுதி பாளையக்காரர் வசமிருந்தது.

ஆங்கிலேயர் முதன்முதலில் திருநெல்வேலியில் அறிமுகமாகும் பொழுது அங்கு நிலவியிருந்த வறுமை அநீதி முதலியவைகளைக் கண்டு திருநெல்வேலி நாடு முழுவதும் பாளையக்காரர் கையிலிருக்கிறதா அல்லது பெயரளவில் மைய அரசின் வசம் இருக்கிறதா என்று அறிந்து கொள்ள இயலாத நிலை இருந்து வந்தது. இந்த இரக்கத்திற்குரிய நிலைக்குப் பாதிக் காரணம் நவாபு அரசாங்கத்தாரின் வலிமையின்மையும் இலஞ்சம் வாங்குகின்ற குணமுமாகும். மற்றொரு பாதிக் காரணம் பாளையக்காரர்களின் தீராத அநீதி நிரம்பிய தொடர்ந்த சண்டைகளும் கலகங்களும் ஆகும். இங்குக் குறிப்பிடப்படும் காலத்தில் இறுதியாக நவாபு ஆங்கிலேயரை உதவி செய்ய அழைத்தபோது திருநெல்வேலியில் இத்தகைய பரம்பரைத் தலைவர் 32 பேர் இருந்தனர். அவர்களுள் ஒவ்வொருவரும் அகழியால் சூழப்பட்ட ஒரு கோட்டையையும் தம் அதிகாரத்தின் கீழ் ஆயுதம் தாங்கிய பெரிய படை ஒன்றையும் வைத்திருந்தனர். தம்மை அடுத்திருக்கும் நாட்டைக் கவர்வதே அவர்களின் தீராத முயற்சியாய் இருந்து வந்தது. முக்கியமாக எந்தக் கிராமத்தையும் வரிகளையும் அல்லது இன்னும் மைய அரசினர் வசமிருந்த எந்த உடைமையும் கவர்ந்து விழுங்குவதிலேயே கருத்தாயிருந்தனர்.

பாளையக்காரருக்குக் கீழ்ப்பட்ட ஆயுதபாணிகள் சாதாரணமாக ஓர்மினாலும் அக்காலத்து எழுத்தாளர்களாலும் 'கூலிப்படைகள்' என்று வழங்கப்படுகின்றார்கள். இச்சொல்லுக்கு மூலாதாரம் திருச்சிராப்பள்ளி தஞ்சாவூர் முதலிய இடங்களை அடுத்த சுற்றுப்புறங்களில் வசித்து வந்த சுதந்தர கொள்ளைக்காரச் சாதியினர் அல்லது மரபினர்களிலிருந்து தோன்றியது. ஆங்கிலேயர் இவர்களுடன் அடிக்கடி தொடர்பு கொண்டனர். இவர்கள் கள்ளர்கள் என்று வழங்கப்பட்டார்கள். கள்ளர்கள் என்பதன் உண்மைப் பொருள் திருடர்கள் என்பது ('கள்' என்ற வேர்ச் சொல்லுக்கு ஒற்றி உணர்தல் என்றும் பொருள் கூறுவர் - ந.ச.). இச்

சொல்லின் ஆங்கிலேயர் மொழி பெயர்ப்பு, சிலசமயங்களில் 'கலாரிஸ்' என்றும் அடிக்கடி 'கோலரிஸ்' என்றும் அமைந்திருந்தது. அவர்களைப் போன்ற பிரிவு மக்களை எங்குக் கண்டாலும் ஆங்கிலேயர்கள் அவர்களை இதே பெயரால் வழங்கி வந்தார்கள். ஆனால், பாளையக்காரர் கோட்டைகளைக் காவல் புரிந்து கொண்டும் கொள்ளைப் பயணங்கள் செய்து கொண்டும் இருந்த திருநெல்வேலிப் பாளையக்காரருக் குட்பட்ட படையினர் கள்ளர் சாதியைச் சேர்ந்தவரல்லர். ஆனால், பொதுவாக மறவர்கள் அல்லது நாயக்கர்களைச் சேர்ந்தவர்கள். பாளையக்காரர்கள் பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனைப் போல நாயக்கனாய் இருந்தால், அவனைச் சேர்ந்த படைவீரரும் அதிகமாக நாயக்கர்களாயிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. பூலித்தேவர் (மறவர்களின் சாதிப்பெயர் தேவர் என்பது) போன்றவர்களுக்குட்பட்ட வீரர்கள் முக்கியமாக மறவர்களாயிருந் தார்கள்.

**வீரமறவர்கள்**

இந்த வகுப்பினரின் பல பிரிவுகளையும் பகுதிகளையும் பற்றி ஆங்கிலேயர் எவ்வித வேறுபாட்டையும் அறிந்து கொள்ளவில்லை. ஆனால், இவர்கள் போர்களில் காட்டிய துணிவும் தீரமும் ஆங்கிலேயர் உள்ளத்தைக் கவர்ந்தன. திருநெல்வேலி மேற்கு மலைகளுக்கருகேயுள்ள மாவட்டங்களிலிருக்கும் கோலரிஸ்களைப் பற்றிய ஓர்மின் விளக்கம் வருமாறு:

'திருநெல்வேலி நாட்டின் இப்பகுதியைச் சேர்ந்த கோலரிஸ்கள் இந்தியக் காட்டு மலைவாசிகளைப் போன்று உறுப்புக் குறைபாடு அல்லது அழகற்ற தோற்றம் முதலியவை இல்லாதவர்கள். அவர்கள் உயரமும் உடற்கட்டும் நல்ல முகத்தோற்றமும் உடையவர்கள். ஈட்டி, வேல், வில், அம்புகள், பழங்காலத்துத் துப்பாக்கி முதலியவைகள் அவர்களுடைய ஆயுதங்கள். இந்த ஆயுதங்களல்லாமல் ஒவ்வொரு மனிதனும் ஒரு கத்தியும் கேடயமும் எப்பொழுதும் வைத்திருப்பான். போரின் போது வெவ்வேறு ஆயுதங்கள் தரித்த வீரர்கள் தனித்தனியே நின்று போர் செய்வார்கள். ஈட்டிவீரர்களே மிக்க வீரம் வாய்ந்தவர்கள். எல்லாத் தாக்குதல்களையும் அவர்களே நடத்துவார்கள். ஈட்டிகள் 18 அடி நீளமுள்ளவை. ஈட்டியின் கூர்முனையில் ஒரு குஞ்சமாவது சிவப்பு நிறக் குதிரை நிறமாவது கட்டியிருப்பார்கள். குதிரைகளைத் தாக்கும் போது அதனுடன் சிறுமணியையும் கட்டி விடுவார்கள். முன் அசைவு எதுவும் இன்றி அவர்கள் நெருக்கமாக வரிசையாய் நின்று சேர்ந்து நெருங்கி நீண்ட அடிகள் வைத்து முன்னேறுவார்கள். சிறிது நேரத்தில் ஈட்டிகளை உயரத்தில் தூக்கி ஒரு கோணத்தில் சாய்ந்து எறிவார்கள்.



அவை விசையுடன் கண்சிதறும்படி கிணுகிணு என்ற ஒலியுடன் பாய்ந்து குதிரை வீரரைத் தாக்கும். துப்பாக்கி வீரர்களிடம் இவ்வீரரின் தாக்குதல் அபாயமற்றது.

இங்குக் கூறப்படும் ஈட்டி, தமிழில் வேலாயுதம் என்று வழங்கப்படும். அப்பெயர் இன்றும் நிலைத்திருந்தபோதிலும், அத்தகைய பயங்கர ஆயுதத்தின் மாதிரி ஒன்றை இப்பொழுது காண்பது அரிது. (அண்மையில் மதுரைப் பல்கலைக் கழகத்தில் புது வரலாற்றுத் துறை சார்பில் நடந்த கருத்தரங்கில் தென்பாண்டி நாட்டுப் பழம் போர்க்கருவிகளைத் தொகுத்து வைக்கும் பொருட்காட்சி சாலை வேண்டும் என்று குறிப்பிட்டேன் - ந.ச.).

**காவல் உரிமை**

பாளையக்காரர்கள் தங்கள் வலிமையை அதிகப்படுத்துவதற்குக் காவல் உரிமையைச் சிறந்த வழியாகக் கடைபிடித்து வந்தார்கள். பழங்காலந்தொட்டு ஒவ்வொரு கிராமத்திலும் காவல்காரர்கள் இருப்பார்கள். காவற்காரர் என்பது ஆங்கிலத்தில் 'காவல் கார்ஸ்' என்று எழுதப்பட்டு வந்தது. இவர்களுக்கு ஊதியமாகச் சிறுதொகை கொடுக்கப்பட்டு வந்தது. இக்காரியத்தைச் செய்யும் உரிமையும் அதிகமான சம்பளமும் வேண்டினவர்கள் பாளையக்காரர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும். அவர்கள் வேண்டுகோள் மிகத் தாராளமாக நிறைவேற்றப்பட்டது. இதனால் 1799 இல் திருநெல்வேலியிலுள்ள 2113 கிராமவாசிகளில் 1635 காவல்கள் பாளையக்காரர்கள் வசமிருந்ததைக் கண்டார் வாஷிங்டன். பாளையக்காரர்கள் தங்களைச் சேர்ந்தவர்களைக் கிராமக் காவலுக்கு நியமிக்க முடியாதபோதெல்லாம், மற்றவர்களால் நியமிக்கப்பட்ட காவல்காரர்களின் மேல் அதிக ஆண்டு வரியை விதித்தார்கள். கிராமக் காவலுடன் பாளையக்காரர்கள் திசைக் காவல் அல்லது மாவட்டக் காவலையும் செய்ய வேண்டுமெனக் கொடுமையான கட்டளையிட்டது. இத்திசைக் காவல் ஆங்கிலேயரால் தேசக் காவல் என்று தவறுதலாகச் சொல்லப்பட்டு வந்தது (ஆங்கிலேயர் தவறையும் காட்டுகிறார் கால்டுவெல்! - ந.ச.). இது காவற்காரன் கிராமத்தைக் காவல் காப்பதோடு சாலைகளையும் தரிசுகளையும் காவல் காப்பதற்கு மட்டுமே இந்தச் சம்பளம் முதலில் கொடுக்கப்பட்டு வந்திருக்கலாம். அப்பொழுது கேட்கப்பட்ட இச்சம்பளத் தொகையும் முதலில் குறைவாய் இருந்ததால் எதிர்ப்பின்றி இது கொடுக்கப்பட்டது. தம் காலத்தில் கேட்கப்பட்ட தொகையில் பத்தில் ஒரு பாகமே முதலில் கொடுக்கப்பட்டு வந்ததென வாஷிங்டன் 1799 இல் கூறியிருக்கிறார்.

முக்கியமாக 1740, 1760 ஆண்டுகளிலும் திருநெல்வேலி மாகாணம் தீராத குழப்பப் போர்களினால் அதிர்ச்சி அடைந்திருந்தபோது இத்தொகை பஞ்சாயத்தாரின் தீர்ப்பின்படி உயர்ந்து விட்டது. துணையற்ற கிராமவாசிகள் கொள்ளையடிக்கப்படுவதினின்றும் காப்பாற்றுவதற்காக அவர்கள் மீது பாளையக்காரர்கள் இந்த வரியைச் சுமத்தி வசூல் செய்தார்கள். பாளையக்காரரின் வலிமையினாலும் பாளையக்காரரைத் தக்க அதிகாரத்துடன் கண்டிக்கத் திறமையற்ற நவாபு அரசாங்கத்தின் கையாலாகாத தன்மையால் இது உறுதிப்பட்டது.

### வரிக் கொடுமை

வாஷிங்டன் மேலும் கூறுவதாவது, இந்த வசூல் தொகை தாமதமின்றிச் செலுத்தப்படாவிட்டால் சித்திரவதையும் சவுக்கடியும் கொடுக்கப்பட்டன. கிராமத்தார் அனைவரும் சிறைவைக்கப்பட்டனர். ஒவ்வொரு தொழிலும் தடை செய்யப்பட்டது. கால்நடைகள் பட்டிகளில் அடைக்கப்பட்டன. குடிமக்கள் கைது செய்யப்பட்டார்கள் பாளையக்காரர்கட்கு உரிய பாளையங்களில் சில சமயங்களில் கொலைகளும் நடந்தன. சுருக்கமாகக் கூறினால் பணம் செலுத்தப்படும் வரை எல்லாவிதமானக் கொடுமையும் மிருகத்தன்மையானச் செயல்களும் செய்யப்பட்டு வந்தன எனலாம்.

வேட்டை வரி, திருமணச் செலவு வரி முதலிய விளக்கமற்ற அளவில்லாத காரியங்களுக்காக மக்களிடமிருந்து பணம் வசூலிக்கப் பாளையக்காரர்கள் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி வந்தார்கள். சமாதானமாகச் சர்க்கார் நிலத்திலே உழும் விவசாயிகளை நாட்டின் நடுவே படையுடை (ஆயுத பாணிகளான) படைவீரரை நிறுத்திப் பயமுறுத்தினார்கள். இத்தகைய தீமைகள் எதிர்க்கப்படவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் திருநெல்வேலி மானுவலில் ஸ்டுவர்ட்டு என்பவர் பாளையக்காரர்களைப் பற்றியும் அவர்களது காவல் முறைகளைப் பற்றியும் கூறியிருப்பதை இங்குச் சேர்த்துள்ளேன்.

### மறவர் அல்லது வன்னியர்

'தென்னிந்தியாவிலுள்ள விசித்திரமான சாதியினரான மறவர் அல்லது வன்னியரைப் பற்றி மிகச் சிறப்பான சரித்திரம் உள்ளது. பாளையக்காரர் பலர் அல்லது கப்பம் செலுத்தும் தலைவர்கள் இந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் திருநெல்வேலி பற்றி ஆங்கிலேயருடன் சென்ற நூற்றாண்டின் பின்பாதியிலும் இந்த நூற்றாண்டின் முதற் சில ஆண்டுகளிலும் கலகம் செய்து



கொண்டிருந்தார்கள். கப்பம் கட்டும் இந்தத் தலைவர்கள் அதே சமயத்தில் பல சாதித் தலைவர்கள் அல்லது மக்கள் பிரிவின் தலைவர்களுள் மிகச் சிறந்த குணங்கள் ஒருங்கே பொருந்திய கலகக்காரத் தலைவனைப் பின்பற்ற வீரம், சுறுசுறுப்பு, முயற்சி, தந்திரம் முதலியவை வாய்ந்த சீடர்களை இப்பிரிவினர் தயார் செய்தனர்; அல்லது எப்பொழுது அமைதி நிலவச் செய்யத்தக்க மத்திய அதிகாரிகள் இல்லாதிருக்கிறார்களோ, அப்பொழுது இரத்தம் சிந்துவதிலிருந்தும் சூறையாடப்படுவதிலிருந்தும் தங்களைக் காப்பாற்றுவதற்காக அமைதியுடனிருந்த விவசாயிகளே அவர்களைத் தயார் செய்தார்கள்.''

''எனவே, திசைக்காவல் எனப்படும் தேசக்காவலும் தலக்காவல் அதாவது ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள கிராமங்களடங்கிய நாட்டில் வழியை ஆயுதம் தாங்கிய பகல் கொள்ளைக் கூட்டத்தினரிடமிருந்து காப்பாற்றுதல், தனித்தனி கிராமங்கள் அவர்களுடைய வீடுகள் பயிர்கள் முதலியவைகளை ஒளிவான (இரகசியத்) திருட்டுகளிலிருந்து காப்பாற்றல் முதலிய முறைகள் ஏற்படலாயின. கப்பம் செலுத்தும் தலைவன் தன் கோட்டைக்கருகேயுள்ளவர்களிடமிருந்து ஆயுதபாணிகளின் தாக்குதல்களின்போது அவர்களைக் காப்பாற்றுவதற்காகப் பணம் வசூலித்து வந்தான். அதே சாதியைச் சார்ந்த அவனுடைய வேலைக்காரர்கள் கிராமத்தின் பல பாகங்களுக்குச் சென்று சம்பளம் வசூலித்தார்கள். சில சமயங்களில் கிராமத்தார்களின் சொத்துகளைத் திருடர்களிடமிருந்து காப்பற்ற அல்லது அப்படி ஏதேனும் களவாடப்பட்டிருந்தால் அதற்குத் தகுந்த மதிப்பீட்டை மீட்டுக் கொடுக்கக் கூலியாக வாடகையில்லாத நிலங்களையும் பெற்றுக் கொண்டார்கள். கிராமக் காவல் சம்பளத்தைப் போலவே தேசக்காவல் சம்பளத்தைக் கேட்பது இக்காலத்தில் சாதாரண சம்பவமாய் இருக்கின்றது.''

இக்காலக் குறுநில மன்னர் (ஜமீன்தார்)களைப் பற்றி ஸ்டுவர்ட்டு என்பார் கூறும் செய்தியை இங்கே குறிப்பிடுவது சுவையுடையதாய் இருக்கும்:

''வெவ்வேறு ஜமீந்தார்களின் அதிகாரத்திற்குட்பட்ட குத்தகைக்காரர் நிலை அல்லது தீவினை, முன்யோசனையின்மை முதலிய காரணங்களால் விற்கப்பட்டு மிட்டாதார்களாகப் பிரிக்கப்பட்ட பழைய ஜமீந்தாரிகளிலுள்ள குத்தகைக்காரர்களின் நிலை அரசாங்க நிருவாகத்திலிருந்த தாலுக்காவிலுள்ள வேளாளர்களின் நிலையைப் போல அவ்வளவு மனநிறைவாய் இல்லை. வரிமுறை எல்லா

இடங்களிலும் அதிகமாகவே இருந்தது. தரிசு நிலங்களுக்காக விளைச்சல் நிலத்திலுள்ள பயிரைப் பகிர்ந்து கொள்ளும் முறை சட்டப்படி வழக்கத்திலிருந்தது. இது விவசாயிகளுக்குக் குறைவான நலனைக் கொடுக்கும் முறையாய் இருந்தது. ஆனால் அரசாங்கத்திற்குட்பட்ட தாலூகாக்களில் பண குத்தகை முறையே அமுலிலிருந்து வந்தது. இத்தகைய முறையினால் அவர்கள் தங்கள் நிலங்களை மேலும் செம்மைப்படுத்த ஊக்கமளிக்கத்தக்க அளவு இலாபம் கிடைத்து வந்தது.

''மொத்தத்தில் முக்கியமாக ஜமீந்தாரிக்குட்பட்ட வேளாளர்கள் கேவலமான நிலையிலிருந்தார்கள். பருத்தி விளையும் பகுதிகளிலிருந்த வேளாளர் வறுமையை அணுகாதவாறு செல்வந்தராயிருந்தனர். பட்டாக்கள் முசிகாக்கள் மாற்றம் பிற்காலத்தில் கட்டுப்பாடாக நீதிமன்றங்களில் வற்புறுத்தப்பட்டன. இதனால், உறுதியும் சுதந்தரமும் கிடைத்தனவாயினும், அதிகப்படியான மோசடியான தொல்லை நிரம்பிய வழக்குகள் நிலச் சொந்தக்காரருக்கும் குத்தகைகாரர்களுக்கும் இடையே ஏற்பட்டன. பணக்குத்தகையே எல்லாத் தரிசு நிலங்களிலும் முழுமையாக விதிக்கப்பட்டது. ஆனால், கணக்கற்ற துன்பமயமான தீர்வைகள் ஜமீந்தார்களுக்கும் குத்தகைக்காரர்களுக்கும் இன்றும் தகராறுகளை உண்டு பண்ணக்கூடிய வன்மையும் தன்மையும் உடையனவாய் உள்ளன.

''முழு மாவட்டத்திலும் 27 விழுக்காடு குறுநில மன்னராட்சி. அங்கு 20 சரியான ஜமீந்தாரிகளும் 36 மிட்டாக்களும் இருந்தன. பழைய ஜமீந்தாரிகளின் தீவினையாலும் ஆய்வின்மையாலும் கடனைக் கட்டுவதற்காக ஜமீன்கள் துண்டு துண்டுகளாகப் பிரிக்கப்பட்டு விற்கப்பட்டன. இந்த ஜமீன்களைச் செல்வந்தர்களான வேளாளர்கள் நாட்டு கோட்டைச் செட்டிகள் மற்றப் பணம் நிறைந்த உள்நாட்டுக் கனவான்கள் யாவரும் வாங்கிக் கொண்டனர். இத்தகைய பகுதிகளே 36 மிட்டாக்களிலும் மிக அதிகமாய் இருந்தன.

''இந்த இருபது ஜமீந்தாரிகளும் அளவில் வேறு பட்டிருந்தன. இவை 863 ஏக்கரிலிருந்து 337,581 ஏக்கர்கள் வரை இருந்தன. ஒரு பீயிஷ்குக்கு 25 ரூபாய் வீதம் மொத்தத்திற்கும் 88376 ரூபாய்கள் வரிவிதிக்கப்பட்டன.

''இதே போல் 36 மிட்டாக்களும் 234 ஏக்கரிலிருந்து 18716 ஏக்கர்கள் வரை இருந்தன. இவை 213 ரூபாய் வீதம் மொத்தத்தில் 6423 ரூபாய்கள் கவர்ன்மெண்டுக்கு வரியாகச் செலுத்தின. (கால்டுவெல் தரும் இக்குறிப்புகள் 19 ஆம் நூற்றாண்டின் முடிவில் நம் நாட்டில் இருந்த நிலத்தீர்வை நிலையைக் காட்டும் - ந.ச.).



''தலைவனான எட்டையபுர ஜமீந்தார் ஜாதியில் தோட்டியான். அவன் மூதாதையர் பாளையக்காரருடன் ஆங்கிலேயர்கள் போர் தொடுத்தபோதெல்லாம் ஆங்கிலேயருக்கு ஊழியம் செய்து அதற்குப் பதிலாக மாற்றுப் பரிசுகளுடன் கலகக்காரப் பாளையக்காரரின் தலைவனான பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரனிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட நாட்டில் பெரும்பகுதியையும் பெற்றான். இந்த ஜமீந்தாரி, மாவட்டத்தின் வடகிழக்கே அமைந்திருந்தது. இங்குப் பஞ்சு விளைகின்ற கரிசல் நிறைந்திருந்ததால், நிலம் வளமிகுந்ததாய் இருந்தது. இங்குள்ள மக்கள் ஜமீந்தாருக்குச் சுமார் மூன்று நூறாயிரம் (லட்சம்) ரூபாய் வரி செலுத்தி வந்தார்கள்.

''அடுத்தபடி என்னப்படுவது சிவகிரி சாத்தூர் ஜமீன்களாகும். இவை திருநெல்வேலிக்கு வடமேற்குப் பகுதியில் மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்திலிருக்கின்றன. மலைகளிலிருந்து வரும் ஓடைகளால் நீர்ப்பாசன வசதி பெறும் அதிகப்படியான நிலங்கள் அப்பகுதியிலிருந்தன. ஆனால், தரிசுநிலங்கள் செம்மண்ணுள்ள மணல் தரைகளாயிருந்தமையால், கிணற்றுப் பாய்ச்சலில்லாமல் பயனற்றதாயிருந்தன.

''இந்த ஜமீந்தாரிகளும் உடுமலை, சிங்கம்பட்டி, ஆர்க்காடு (பின்னைய இரண்டும் பாளையக்காரர்க்கு உட்பட்டவை) ஜமீன்தார்களும் பழைய பாளையக்கார மறவர் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். அவர்களின் சொத்துகள் கவனத்துடன் ஆட்சி செய்யப்பட்டன. சிறப்பாக, அவர்களுடைய குத்தகைக்காரர்கள் மன நிறைவடைந்திருந்தார்கள். திருநெல்வேலியிலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலைக்காடுகள் சில, ஜமீந்தார்களின் சொத்து என்று சிவகிரி, சாத்தூர், சிங்கம்பட்டி ஜமீந்தார்கள் உரிமைபாராட்டினார்கள். ஆனால், இந்த மலை எல்லைகள் பெரும்பாலும் அரசாங்கத்தாரிடம் சச்சரவிலிருந்தன. 25550 ரூபாய் வரியுள்ள சொக்கப்பட்டி பழைய ஜமீன்தாரி 1863 இல் ஏலத்தில் விடப்பட்டது. இது பதினெட்டுப் பிரிவுகளாக மிட்டாதார்கள் என்று வழங்கப்படும் பலரின் கைவசமாயிற்று.

பிறகு ஸ்டூவர்ட்டு திருநெல்வேலியிலுள்ள பல ஜமீன்தார்கள், மிட்டாதார்கள், அவர்களுடைய நிலப்பரப்பு, அதன் மக்கள்தொகை, வரிவசூல் முதலியவைகளைப் பற்றி ஒரு விவரமான பட்டியல்

கொடுத்திருக்கின்றார்.

### திருநெல்வேலியைப் பற்றிக் கர்னல் புல்லர்ட்டன் விளக்கம்

1783 இல் அநீதியான ஆட்சி உச்சநிலையிலிருந்தபோது திருநெல்வேலியின் நிலையைப் பற்றிக் கர்னல் புல்லர்ட்டன் விவரித்துள்ளதை அப்படியே இங்கே சொல்வதைத் தவிர வேறு சிறந்த வழி இல்லை. மேலும் நான் அறிந்தவரை வெளிப்படையாய் வந்த திருநெல்வேலியின் முதல் வருணனை இது என்பதால் இக்குறிப்பு மேலும் அதன் சுவையை மிகைப்படுத்துகிறது. இக்குறிப்பை இங்கே சேர்ப்பதால் எவையோ சில சம்பவங்களை எதிர்பார்ப்பதாகத் தோன்றலாம். ஆனால் முக்கியமாகப் பாளையக்காரர் விவகாரங்கள் சம்பந்தப்பட்ட கதைகள் இனி மிக விளக்கமாய் இருக்குமென நம்புகிறேன்:

'கடைசியாக ஆனால் அதிகமாக எண்ணக் கூடிய தென்எல்லை திருநெல்வேலி. அது, 115 மைல் நீளமும் 75 மைல் அகலமுடையது. ஏற முடியாத உயரமுடைய மலைப்பிதுக்கம். திருநெல்வேலியை வடக்கே திப்புச் சுல்தானுக்குச் சொந்தமான வாட்ராப் ஒட்டம்பொள்ளும் காட்டுப் பள்ளத்தாக்கிலிருந்து பிரிக்கிறது. வடகிழக்கேயும் கிழக்கேயும் மதுரை இராமநாதபுரம் எல்லைவரையும் தெற்கே கடல் வரையும் பரவியிருந்தது. மேற்கே திருவாங்கூர் ராஜாவின் நாடு எல்லையாய் இருக்கிறது. திருநெல்வேலியும் திருவாங்கூரும் கன்னியாகுமரியில் முடிவடைகின்றன. இந்த மாகாணத்திற்கு இயற்கை மிகவும் கருணை காட்டியுள்ளது. இதன் மேற்பரப்பு கடற்கரையிலிருந்து வட எல்லையிலுள்ள மலைகளை அடையும்வரை பொதுவாகத் தட்டையாயிருக்கிறது. இந்நிலப்பரப்பை ஆறுகள் குறுக்கிடுவதால், நெல் விளைச்சல் மிகுதியாய் உள்ளது. இதன் வறண்ட பகுதிகளில் பஞ்சு அதிகமாய் விளைகிறது. அடுத்திருக்கும் இலங்கைத் தீவில் உள்ள விளைபொருள்கள் இங்கு அதிகமாய் விளைகின்றன. இதனால் டச்சுக்காரர்களின் எதிரிகள் கூட நம்மிடம் இலவங்கப்பட்டை வியாபாரத்தை ஆரம்பிக்கும்படி செய்தது. ஆனால் இங்கு ஏற்பட்டிருந்த விசித்திரமான ஆட்சி, இந்த நூற்றாண்டில் முகம்மதியர்களின் ஆட்சியில் ஏற்பட்ட நெருக்கடிகள், அரசர்களின் சீர்கேடான வழிகள் முதலியவைகள், இயற்கையின் நலன்களையும் பாழாக்கிவிட்டன. திருநெல்வேலிவாசியான அரசன் ஒருவன் ஆட்சி செலுத்தியபோதும் பரந்த நிலப்பரப்பு மட்டும் குறைந்துபோயிற்று. இப்பகுதி மிகப் பெரிய குத்தகைக்கு விடுபவர்களிடம் குறிப்பிட்ட தொகைக்குவிடப் பட்டது. அவர்கள் கொடுமையான வலிமையால் பெரும் இலாபத்திற்கு



ஆசைப்பட்டு முதலீடு செய்தார்கள். அமைதியாய் வாழ்ந்த மக்களைத் தொந்தரவு செய்தார்கள். அப்பொழுது அதிகமான எல்லையுடைய தலைவர்கள் ஆயுதம் தாங்கிய வீரரை வைத்திருந்தார்கள். அவர்கள் கலகம் தோன்றிய உடனே அவர்களுடைய ஒப்பந்தப் பணத்தைச் செலுத்தாது நிறுத்திவிட்டார்கள். அந்தத் தலைவர்களும் அவர்களுடைய மக்களும் பாளையக்காரர் என்று வழங்கப்பட்டனர். இப்போது அவர்களின் எண்ணிக்கை 32. ஆனால் அவர்கள் ஒழுங்கான பயிற்சியற்ற முப்பதாயிரம் வீரர்களைத் திரட்டிப் போருக்கு அனுப்பத்தக்க திறமை வாய்ந்தவர்கள். அவர்கள் நகரங்களுக்கு அரணிட்டார்கள். மலைகளில் கோட்டைகளைக் கட்டினார்கள். அவசரச் சமயங்களில் இங்கு அவர்கள் வந்து தங்குவார்கள். திருநெல்வேலியின் வடஎல்லையாய் அமைந்த மலையடிவாரத்திலுள்ள நாடுகளை அந்தப் பாளையக்காரர்கள் பெற்றிருந்ததன்றி அவர்களுள் பலர் மட்டமான நிலங்களுடைய நாடுகளையும் அதிகமாகப் பெற்றிருந்தனர். உழைப்பை வெறுத்ததால், அவர்களுடைய உடைமைகள் பாழாயின. துன்பமடைந்த அவர்கள் மற்றவர்களை முற்றுகையிட்டும் சுறுசுறுப்பான அக்கம்பக்கத்து உழைப்பாளிகளைக் கொள்ளையடித்தும் வந்தார்கள். இந்தக் கலகக்காரர்களின் பயங்கர நிலை இப்படி இருந்ததால், மாகாணத்திலுள்ள ஒவ்வொரு மாவட்டமும், அதிகப்படியான வரிகளைக் கொடுக்கும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டு, அவர்களுடைய துன்பத்தை வரிகொடுத்து வாங்கிக் கொண்டார்கள்.

### குத்தகைக் கொடுமை

இத்தகைய நிலைமையில் உங்கள் சுப்பிரண்டு இர்மின் எவ்வாறு விளைச்சலையும் மீறிய அவ்வளவு அதிகமான வரியைக் குறிப்பிடாத காலத்தில் வசூலிக்க முடியும் என்பதை இயற்கை வசதிகளிலிருந்து நீங்களே கணக்கிட்டு அதிசயிக்க வேண்டியதுதான்.

பாளையக்காரரின் எதிரியாகிய குத்தகைக்காரர்களைப் பற்றிக் குறிப்பிடாது விட்டால் பாளையக்காரனுக்கும்கூட நான் அநீதி செய்தவனாவேன். இங்கு மறுபடியும் நான் கர்னல் புல்லர்ட்டனுடைய வேகம் நிறைந்த வரிப்பட வர்ணனையைப் பயன்படுத்திக் கொள்கிறேன். நம் காலத்தில் பாளையக்காரர்கள் அமைதியான வாரிசுகளாகிய ஜமீந்தார்கள் மூலம் நம்முடன் வாழ்கிறார்கள். ஆனால், கர்னல் புல்லர்ட்டன் காலத்திலும் நவாபுவின் ஆட்சிக்காலத்திலும் குத்தகைக்காரர்கள் இருந்தது மிக்க பயங்கர உண்மை எனினும், அவர்கள் சந்ததி வாரிசு அற்று வழக்கத்திலிருந்து முழுதும் மறைந்துவிட்டது.

'அக்காலக் கீழ் ஆணையர்கள் கொடுமையை வளர்த்து விட்டு ஆலோசனையற்ற வழிகளில் அளவுக்கு மீறிய வரிகளை வசூலிக்கலாமென விரும்பினார்கள். ஆங்கில அரசாங்கத்தினரால் இந்தக் கீழ் ஆணையர்களின் ஒழுங்கீனம் முழுவதையும் ஒடுக்க முடியவில்லை. நாட்டின் நிலையை எண்ணி மிகப் பெரிய மாவட்டங்களை அதிகமாகப் பேரம் பேசுபவர்களுக்குக் குத்தகைக்கு விடும் பழக்கத்தைத் தொடர்ந்து செய்ய வேண்டியது இன்றியமையாததாயிற்று. பலத்தை வீண் செய்வதைத் தடுக்க எவ்வளவு முன் எச்சரிக்கையாயிருந்தும் குத்தகைக்கு விடுபவனுக்குத் தடையற்ற அதிகாரம் கொடுக்கப்பட்டாலன்றி, வரிவசூல் நடைபெறாது. அடிக்கடி அவனும் கொள்ளையடிக்கவும் களவாடவும் விரும்புவான். இதனால் இறுதியில் அவனுடைய மாநிலத்தை அழியவிட்டுத் தான் செல்வனாக முடிகிறது. உண்மை என்னவென்றால், குத்தகைக்கு விடுபவர்கள் நியமிக்கப்பட தென்னிந்தியாவிலுள்ள ஒவ்வொரு பகுதியிலும் வேளாளர்கள் குடியானவர்கள் முதலியவர்களன்றி, உற்பத்தியாளர்களன்றி, உற்பத்தியாளர் கைவேலைக்காரர் மற்றும் ஒவ்வொரு இந்திய வாசியும் வெளிப்படையாகக் கொடுமை, செய்பவனின் கருணைக்கு முழுதும் உடன்பட்டிருக்கிறார்கள்.

'தீபகற்பத்தின் இந்தப் பகுதி எங்கும் நிலைநிறுத்தப்பட்ட இந்தப் பழக்கம் ஆண்டுகள் கணக்காகத் தொடர்ந்து வருகிறது. குடியானவனுக்கு முதற்படி விளைச்சலில் பாதிமட்டும் அவன் குடும்பம் வாழவும் நிலத்தை மறுபடி உழுதற்கும் கொடுக்கப்படுகிறது. மற்றொரு பகுதி ஆட்சியினருக்கு உரிமையாக்கப்படுகிறது. வளமிகுந்த இடங்களில் ஹைதரின் ஆட்சியின் போது ஆண்டுதோறும் மூன்று போகம் விளைந்தபோது 40 சதவீதத்திற்குக் குறைந்த விளைச்சல் குடியானவனுக்குக் கொடுக்கப்பட்டதாக இல்லை. ஆயினும், நூற்றில் பதினாறு பங்கில் குடும்பத்தைப் பாதுகாத்து வேளாண்மைக் கருவி, கோட்டை விதை, நிலத்தை உழுவதற்கு ஏற்படும் எல்லாச் செலவுகள் யாவையும் செய்ய இயலாதென மறுத்த மதிப்பு வாய்ந்த குடியானவர்களைக் கடற்கரையிலுள்ள குத்தகை விடுபவர்கள் சிறை செய்யவும் கடுமையான தண்டனைகளை விதிக்கவும் தயங்கினார்கள். ஆனால், தீவினை விளைவாக அக்குடியானவர் அந்த நிபந்தனைகளை ஒப்புக் கொள்ளக் கட்டாயப்படுத்தப்பட்டால் அவன் மேலும் பொறுத்துக் கொள்ள வேண்டிய கொடிய தண்டனைகள் பல உண்டு. அவன் வாரக் கணக்காக நீர்ப்போக்குகள், நீர்த்தேக்கங்கள், நதிகளில் அணைக்கட்டுகள் முதலியவைகளைச் செப்பனிட வேண்டும்.



அவனுடைய ஆடுமாடுகளும் மற்ற எல்லாச் சொத்துக்களும் குத்தகைக்கு விடுபவன் வசமாகிவிடும். மறுத்த குற்றத்திற்காக அவன் உயிரிழக்க நேரிடும். அவன் பயிர்கள் முற்றியவுடன் குத்தகைக்கு விட்டவனின் அதிகாரக் கட்டளையின்றி அறுவடை செய்ய எண்ணினால், குத்தகை விட்டவனுடைய வேலைக்காரர் யாவரும் அங்குக் கூடி சித்திரவதை செய்து, அவனிடம் மிஞ்சியிருக்கிற சிறு பொருளையும் அபராதமாகப் பறித்துச் செல்வர். அவன் தன் சிறு நிலத்திலிருந்து ஒரு பகுதியை விற்க எண்ணினால், அரசு இசைந்தால்கூட அவனை விட்டுவிடமாட்டார்கள். தூரத்திலுள்ள கடைவீதிகளுக்கு எதையும் அவன் எடுத்துச் சென்றால் ஒவ்வொரு கிராமத்திலும் அவனை மறித்துச் சுங்கம் வசூலிப்பார்கள் அல்லது அவன் ஏற்றுமதியோ அல்லது இறக்குமதியோ அல்லது விற்கவோ எடுத்துச் செல்லும் எல்லாப் பொருள்களுக்கும் வரிவசூலிப்பார்கள். (இந்தக் குறைபாடு மிக ஆதாரமற்றது; அநீதியானது).

**சுங்கச் சாவடிகள்**

நாகப்பட்டணத்திற்கும் பாலக்காட்டுச் சேரிக்கும் இடையே முந்நூறு மைல்களுக்குக் குறையாத தூரம் இருக்கிறது. இவ்வழியில் சுமார் சுங்க வரிவசூல் செய்யுமிடங்கள் முப்பது இருக்கின்றன. சுருங்கச் சொன்னால், நாட்டு விளைச்சலை எடுத்துச் செல்லும் ஒவ்வொரு பத்து மைல் தூரத்திற்கும் வரி விதிக்கப்படும், சாகுபடியை மறுக்கின்றவர்களுடைய தண்டனையைப் போலவே விளைச்சலுக்கும் விற்பனைக்கும் ஆபத்தான அழிவு எதிர்நோக்கி இருந்தன.

'ஆனால் இவைகள் குத்தகை விடுபவனுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரத்தில் ஒரு சிறு பகுதியின் திறனே. குத்தகைக்கு விடுபவன் தன் விருப்பம்போல் நாணய மாற்றின் மதிப்பை இறக்கவோ அதிகரிக்கவோ முடியும். அவன் தானியத்தின் விற்பனையைத் தடுக்கவும் கூடும். அவன் அக்கிரமமான விலைக்கு விற்கவும் முடியும். இவ்வாறு அவன் விரும்பிய போதெல்லாம் அடிக்கடி எங்கும் பொதுப் பஞ்சம் நிலவச் செய்ய முடியும். பொதுச் செலவிலிருந்து வேலைக்காரர்கள் என்ற பெயரில் காப்பாற்றி வரும் பயனற்ற கலகக்காரர்களைத் தவிர, மக்களைக் கொடுமைப்படுத்த இராணுவ பலம் தேவையாக இருக்கும். அத்தகைய உதவியை மறுப்பவர்களைத் தக்கபடி விசாரிக்கக் கீழ் உத்தியோகஸ்தர்கள் உண்டு. யாரேனும் அந்த அதிகாரத்தை எதிர்த்தாலோ இராணுவ உத்தியோகஸ்தர்கள் பலவந்தமாகத் தனி மனிதனைத் துன்புறுத்த இராணுவ உதவி அளிக்க மறுத்தாலோ அல்லது வரிவசூலிக்கும் சூப்பிரண்டு வரிகளை விதிக்கும் சூப்பிரெண்டுகள்,

வரி வசூல் கலெக்டர்கள் அத்தகைய கொடுமைகளைக் கண்டு இரங்கி, எதிர் நியாயம் சொன்னால், குத்தகை விடுபவனுக்குப் பிடிக்கவே பிடிக்காது. அதிலிருந்து கடமையைச் செய்யாததற்கும், பல மோசடிகள் செய்ததற்குச் சான்றாகக் கணக்கற்ற விவாதங்களையும் அவர்களுக்கு எதிராகத் தயாரித்துவிடுவான். மேலும், ஒரு குத்தகைக்கு விடுபவனுடைய சிக்கலான மானியத்தில் இன்னும் சில அசாதாரண மக்கள் தொகையும் இருந்து வருகிறது. அவன் தானாகவே எல்லா நியாய விசாரணைகளையும் வரிவசூல் செய்யும் அதிகாரத்தையும் ஒன்று சேர்த்துவிடுவான். அவன் ஒரு பார்ப்பனனாய் இருந்து விட்டாலோ தானே மாகாணப் புரோகிதப் பிரதிநிதி என்று பெயரிட்டுக் கொள்வான். (கால்டுவெல் ஐயரே கூறும் கருத்தைக் காணீர்! - ந.ச.) மதிப்பையும் ஆளும் அதிகாரச் சக்தியின் பெருமையையும் விளக்குவதற்காகத் தனி ஒரு கூலிக்காரனின் அதிகார வர்க்க நெருக்கடிகளின் பயன்களைப் பற்றி நான் விரித்தெழுதப்போவதில்லை.

★

# இயல் - 5

## முகம்மது யூசுப்கானின் ஆட்சி முதல் மதுரை கைப்பற்றப்பட்டு அவன் மறைவு வரை

### முகம்மது யூசுப்கானின் தொடர்ந்த போர் இயக்கங்கள்

நாம் இப்பொழுது ஒரு நிமிடம் 1756 ஆம் ஆண்டிற்கு திரும்பிச் செல்வோம்.

'அருகிலுள்ள பாளையக்காரர்கள் திறை செலுத்தும் வரை அல்லது அவர்கள் அமைதியாய் இருக்கும் வரை ஜூன், ஜூலை மாதங்களில் யூசுப்கானும் மக்புசுகானும் அவரவர் படைகளுடன் திருவில்லிபுத்தூரில் தங்கினார்கள். மக்புசுகானுடைய உடன்பிறப்பாளனான நவாபு, மக்புசுகானின் இராணுவப் பணிக்குச் செலுத்தவேண்டிய பாக்கியைக் கணக்கிட்டு ஒழுங்கு செய்வதற்குத் தயாராயிருந்ததால், அவன் கட்டளைப்படி யூசுப்கான் மக்புசுகானை அவன் படையுடன் நாட்டை விட்டு ஆர்க்காட்டிற்குச் செல்ல வேண்டிக் கொண்டான். பின்னர், அவன் திருவில்லிபுத்தூரை அரண் செய்து காக்கவும், அருகிலுள்ள நாட்டைக் காவல் புரியவும் ஆறு படைப் பிரிவினரை நியமித்தான். நவாபுவினால் திரட்டப்பட்டு மக்புசுகானுக்கு உதவி செய்ய அனுப்பப்பட்ட படையினரையும் சேர்த்து மிஞ்சிய சுமார் ஈராயிரம் வீரருடன் திருவில்லிபுத்தூரிலிருந்து ஆகஸ்டு முதல் நாள் புறப்பட்டு, பத்தாம் நாள் திருநெல்வேலி நகரத்தை அடைந்தான்.

அதற்குள் இந்த நாடுகளின் ஆட்சிக்கான ஏற்பாடுகளைச் சென்னை மாகாணத் தலைவர் செய்து விட்டார்; இதற்காகவே ஏப்ரல் மாதத்தில் சென்னைக்கு வந்திருந்த திருநெல்வேலி முதலியாரிடம் அவர் ஒப்பந்தத்தை முடித்துவிட்டார். மதுரை மாவட்டப் பகுதி விளைச்சலுக்குத் தகுதியற்ற நிலப்பகுதி எனக் கருதப்பட்டது. (அந்நாள் அம்மாவட்ட வேளாண்மை நிலையை இது அறிவிக்கும். - ந.ச.)

பாளையக்காரரின் உரிமையற்ற எல்லையற்ற நுழைவுகளால் அதன் பரப்பளவும் மிகவும் குறைந்துவிட்டது. எஞ்சிய இடம் பயிர்த்தொழிலுக்குப் பயனற்றதாகிவிட்டது. இவ்வழிவுகளாலும் குறைகளாலும் அந்தப் பகுதி முழுவதிலுமிருந்து வரும் ஆண்டு வருமானம் 1,20,000 ரூபாயை எட்டுவது அரிதாயிற்று. அதே நேரத்தில் நகரப் பாதுகாப்பு, இராணுவப்படைப் பாதுகாப்பு, நாட்டில் மற்ற இராணுவ அலுவலர்களின் உயர்பணி நிலை ஆகியவற்றிற்கான செலவு இந்த வருமானத் தொகையைப் போல் மூன்று மடங்கு உயர்ந்தது. மற்றொருபுறம் அப்போது திருநெல்வேலியின் கீழ் மதிப்பிடப்பட்ட நாடு மிகச் செழிப்புள்ள பரந்த நிலமாயிருந்தது. அது ஆண்டுதோறும் சாதாரணமாக 11 இலட்சம் முதல் 12 இலட்ச ரூபாய் வரை வருவாய் தரத்தக்கதாயிருந்தது. ஆனால், அதற்காக மதுரையும் அதன் மாவட்டங்களும் எதிரிகளின் வசமாவதா? திருநெல்வேலி நாடு அடிக்கடி பயங்கர அழிவு செய்யும் தாக்குதலுக்கு இலக்காகி வந்தது. திருச்சிராப்பள்ளியிலிருந்து ஓர் உதவியும் பெற இயலவில்லை. இந்நிலை, இழப்பில் நடத்தினாலொழிய மற்றொன்றிலிருந்து பெறவேண்டிய நன்மைகளைப் பாதுகாக்க இயலாது என்ற சூழ்நிலையை உருவாக்கியது.

## முதலியார் குடும்பம்

முதலியார் குடும்பம் நூறு ஆண்டுகளாக இரண்டு நாடுகளிலும் பயிர்த்தொழில் மிக்க மாவட்டங்களில் பணியாற்றியது. நாளடைவில் நாட்டின் ஒவ்வொரு பகுதியையும் குத்தகைக்கு விட்டனர். இதனால் அங்குள்ள ஒவ்வோர் உடைமையின் மதிப்பும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. எனவே, அவன் மதுரை மாவட்டங்களைக் குத்தகை எடுத்துக் கொள்ள மறுத்துவிட்டான்; ஆனால் திருநெல்வேலி நாட்டை மட்டும் மூன்று ஆண்டுகட்குக் குத்தகை எடுத்துக் கொள்ள உடன்பட்டான். அதன்படி எல்லாச் செலவுகளும் போக 11 இலட்சம் ரூபாய் ஆண்டு வாடகையை ஆண்டுதோறும் மூன்று பகுதிகளாகச் செலுத்த இசைந்தான் (அந்நாளைய பண மதிப்பையும் இதனால் அறியலாம். ந.ச.). இதற்கு ஈடாக வரிவசூல், கொலை வழக்கு விசாரணை அனைத்துத் துறைகளிலும் வழக்கப்படி செலவு செய்ய வேண்டியிருந்தது. மாகாணத் தலைவனால் நியமிக்கப்பட்ட அதிகாரியின் கீழ் பணிபுரியும் கம்பெனிச் சிப்பாய்கள் ஆயிரவரைக் காப்பாற்றும் பொறுப்பைத் தானே ஏற்பதாகக் கூறினான். உடன்படிக்கை கையெழுத்தான மூன்று மாதங்களுக்குள் உடன்படிக்கைத் தொகையை ஒழுங்காகக் கட்டக்கூடிய சிறந்த சராப்புகள் அல்லது நாணய



மாற்றிகளைப் பிணையாகக் கொடுக்கவும் ஒப்புக் கொண்டான். ஜூலை ஆரம்பத்தில் உடன்படிக்கை முடிவுற்றது. உடனே முதலியார் பிரதிநிதிகளை நியமித்துப் பயிர் செய்யப்பட்ட நிலங்களிலெல்லாம் கம்பெனியின் வண்ணக் கொடியை ஏற்றும்படி உத்தரவு பிறப்பித்தான். அடுத்தபடி சீக்கிரத்திலேயே தானே நேரில் அலுவல்களைக் கவனிக்கப் புறப்பட்டான். முகம்மது யூசுபு திருநெல்வேலியை அடைந்ததும் அங்கு ஏற்கெனவே மக்புசுகானுக்குப் பதிலாக நிருவாகம் செய்து வந்த மீர் ஜாபர் என்பவனால் முதலியாரின் பிரதிநிதிகள் வேலை ஆரம்பத்திலேயே அடக்குமுறை செய்யப்பட்டு அவமானப்படுத்தப் பட்டிருந்ததைக் கண்டான். இத்தகராறுகள் வெளிப்படையாக முடிந்துவிட்ட போதிலும் உட்பகை மட்டும் இருந்து வந்தது. மேலும் தகராறுகள் வளரா வண்ணம் தடுப்பதற்காக முகம்மது யூசுபு மீர்ஜாபரை உடனே மதுரைக்குப் புறப்பட்டுச் செல்லக் கட்டளையிட்டான். ஆனால், அவனுடன் அவனுக்கு உரிமையான மூன்று பீரங்கிகளையும் அவன் விரும்பிய பரிவாரங்களையும் கொண்டு செல்ல அனுமதித்தான். அதேசமயத்தில் ஐந்து சிப்பாய்ப் படையை மதுரை இராணுவப் படைக்குத் துணையாக அனுப்பி, வழியில் மீர்ஜாபரையும் அவனுடைய மக்களையும் கவனித்துக் காக்கும்படிக் கட்டளையிட்டான். இதற்குள் வேறு குத்தகைக்காரனை நியமித்தது தன்னை அவமானப்படுத்தியதாக எண்ணிய மக்புசுகான் சார்பில் மதுரைக் கோட்டையில் ஒருவிதக் கலகம் ஏற்பட்டது. செப்டம்பர் 13 ஆம் நாள் புதுக் குத்தகைக்கார முதலியார் திருச்சியிலிருந்து இரு மறவர் நாடுகள் வழியாய் இரண்டு சிப்பாய்ப் படைகளின் மெய்காப்புடனும் பாசறைக்கு வந்து சேர்ந்து மறுநாள் திருநெல்வேலியை நோக்கித் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

நாட்டைக் குத்தகை எடுக்கும் தொழில் காரணமாக முதலியார் குடும்பம் திருநெல்வேலியைச் சார்ந்த பாளையக்காரர் பலருடன் முக்கியமாகப் பூலித்தேவர் கட்டபொம்ம நாயக்கன் முதலியவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தது. அவன் அழைப்பின்படி பூலித்தேவர் உள்ளிட்ட பலர் அவனை வழியில் சந்தித்தனர். கட்டபொம்ம நாயக்கனும் மற்றவர்களும் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பி வைத்தார்கள். எல்லாரும் வழக்கப்படி ஏராளமானப் பரிவாரங்களுடன் வந்தனர். இந்தக் கூட்டத்தினர் பின் தொடர முதலி செப்டம்பர் 27 ஆம் நாள் திருநெல்வேலி நகரத்தை அடைந்து, தன் அதிகாரத்தைப் பறையறைந்து தெரிவித்தான். ஆனால், பாளையக்காரரின் கூலிப் பட்டாளங்கள் திருடுவதைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமல் நகரத்திலும் அடுத்துள்ள கிராமங்களிலும் இரவுக் கொள்ளைகளை நடத்தி வந்தன. பட்டாளத்தினருள் பலரைக் கம்பெனிச் சிப்பாய்கள்

பிடித்துத் தண்டித்தார்கள். அதனால், மற்றவர்கள் சிப்பாய்களின் உடைமைகளைத் தாங்களே எடுத்துக் கொண்டார்கள். பொருளிழப்பாலும் புகழ்க் கேட்டாலும் சீற்றமடைந்த அவர்கள், தங்கள் வெறுப்பை முதலியின் மீது திருப்பினார்கள். ஏனெனில், முதலியே பாளையக்காரர்களை நகரத்தில் தங்கும்படி செய்து, அவர்களை மரியாதையுடன் கவனிக்கத் தொடங்கினான்.

**புது உடன்படிக்கை**

அதே நேரத்தில், திருவாங்கூர்ப் படைகள் களக்காட்டுக்கு அருகேயுள்ள மாவட்டங்களின் மேல் மீண்டும் படையெடுக்க ஆரம்பித்துவிட்டன. மூடிமையா கொலை செய்யப்பட்ட தோல்விக்குப்பின் மறைந்திருந்த நபிகான் கட்டாக்கு வெளிப்பட்டு, மக்புசுகானுடன் உடன்படிக்கை செய்து கொண்டான். அவன் உடன்படிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. மக்புசுகான் கலைத்துவிட்ட 400 குதிரை வீரரை மீண்டும் பட்டாளத்தில் சேர்த்துக் கொண்டான். அது மதுரைக்கும் திருநெல்வேலிக்கும் இடையே செல்வதற்காக அமைக்கப்பட்டது. இவ்வாறிருக்க, திருநெல்வேலியில் கம்பெனிச் சிப்பாய்களுக்கும் அவர்களுடைய குத்தகைக்காரனுக்கும் ஏற்பட்ட கலகம் வளர்ந்து தீய பயன்களைக் கொடுத்தது. உடன்படிக்கையின் படி, முதலி அவனிடம் வேலைக்கமர்த்தப்பட்ட சிப்பாய்களுக்குச் சம்பளம் கொடுக்க மட்டுமே கடமைப்பட்டவன். ஆனால், மகம்மது யூசுபு - தவறுதலாக - முதலி குத்தகைப் பிரதேசத்திலுள்ள எல்லாச் சிப்பாய்களையும் காப்பாற்றக் கடமைப்பட்டவன் என்று எண்ணிக் கொண்டான். மேலும், அவன் நாட்டை அடைந்தபோது இரண்டு மாதச் சம்பளம் கொடுக்கப்படாமலிருந்ததாகவும் கருதினான். இத்தவறு காரணமாக, திருநெல்வேலியிலுள்ள சிப்பாய்களின் தலைவன் ஜமால் சாகிபு பணத்தைக் கேட்டான். முதலி மறுத்ததும் அவனைக் காவலில் பல நாள்கள் வைத்துவிட்டு பூலித்தேவர் முதலிய பாளையக்காரர்களை உடனே நாட்டைவிட்டுப் போக வேண்டும், மேலும் இங்கே இருந்தால் அச்சம் தரத்தக்க தண்டனைகள் கொடுக்கப்படும் என்று வெருட்டிவிட்டான். அவர்கள் உடனே நாட்டை விட்டுப் புறப்பட்டார்கள். ஆனால், பூலித்தேவர் வீடு திரும்புவதற்குப் பதிலாக நபிகான் கட்டாக்கிடம் சென்று அவனுக்குப் பண உதவியும் செய்வதாகக் கூறினான். அவர்கள் கூட்டத்தில் கட்டபொம்ம நாயக்கனையும் சேரும்படித் தூண்டினர்.

அதே சமயத்தில் திருவாங்கூர்ப் படைகள் அங்கிருந்து புறப்பட்டுக் களக்காட்டைச் சேர்ந்த மாவட்டங்களைக் கொள்ளையடிக்கத் தொடங்கின. ஆங்கிலேயருடன் உடன் படிக்கை செய்து கொள்வதில் அடையும் வெற்றியில் அவன் செய்த குற்றங்களுக்கு மன்னிப்பைத் தவிர வேறெதுவும் கிட்டாது. ஆதலால், இந்தக் குழப்பங்களால் ஏற்படவிருக்கும் எதிர்பார்க்கப்பட்ட நன்மைகள் பரக்கதுல்லாவின் இக்கட்டான நிலைக்கு மிகவும் சாதகமாயிருந்தன. நவம்பர் மத்தியில், படை புறப்பட்டுச் செல்லத்தக்கபடி தரை உலர்ந்ததும் நகரத்திலிருந்து அவன் சென்று ஐந்நூற்றுவர் அடங்கிய தரைப்படையின் தலைவனாய்ச் சேர்ந்து விட்டான். இக்குதிரைப்படை ஏற்கெனவே புறப்பட்டு இப்பொழுது நபிகான் கட்டாக்குடனும் பாளையக்காரரின் துருப்புகளோடும் சேர்ந்து கொண்டன. படையின் மொத்த பலம் பதினாயிரம் வீரரைக் கொண்டதாயிருந்தது. அதில் ஓராயிரவர் குதிரை வீரர் தெற்கு நோக்கிப் பரந்து கிடந்த நாட்டிற்குள் நேரே முன்னேறுவதற்கு மாறாக மதுரைக்கு தெற்கே சுமார் 40 மைல் தூரத்தில் கூடினர்; கட்டபொம்ம நாயக்கனுடைய மாவட்டங்களின் கிழக்குப் புறத்தே தங்கிவிட்டனர். அக்காட்டுப் பகுதி திருநெல்வேலி நகரத்திற்கு சில மைல் தூரம் வரை பரவியிருந்தது. இரவில் அங்கிருந்து விட்டு அவர்கள் வருகை அறியப்படுவதற்கு முன்பே பொழுது புலர்வதற்குள் அவர்கள் நகரத்தில் பலமற்ற காவலுடைய பல வீதிகளிற் புகுந்தார்கள். ஏனெனில், சில நாள்களுக்கு முன்புதான் முதலி மிகப் பெரிய சிப்பாய்ப் படையுடனும் தன்னுடைய மற்றப் படைப்பகுதியுடனும் தென்கிழக்கே சுமார் இருபது மைல் தூரத்தில் உள்ள ஆழ்வார் திருநகரி மாவட்டங்களைப் பாதுகாக்கப் படையெடுத்திருந்தான். சூழ்நிலை, ஆழ்வார் திருநகரியையே எதிரிகள் தாக்கத் திட்டமிட்டிருப்பதாக அவனை நம்பச் செய்தது.

**கோபுரத்திலிருந்து குதித்து உயிர்விட்ட அந்தணர்**

எதிரிகள் திருநெல்வேலியில் இரண்டு நாள்கள் தங்கி பெருங் கொள்ளையடித்தார்கள். ஆனால், கொடுமைகள் இழைக்கவில்லை. இந்த தாமதத்தின் போது, முதலி ஆற்றின் அக்கரையில் நகரத்திலிருந்து சுமார் மூன்று மைல் தூரத்திலுள்ள பாளையங்கோட்டைக் கோட்டையைத் திரும்பக் கைப்பற்றினான். கோட்டை பெரும்பரப்புடையதாய் இருந்தது. ஆனால், கொத்தளங்கள் பாழடைந்திருந்தன. ஆயினும், பீரங்கிக் குண்டுகள் இல்லாத பகைவரை எதிர்க்கத் தக்க வலிமை அக்கோட்டைக்கு இருந்தது. இரண்டு நாள்களாக எவ்வித அழிவையும் ஏற்படுத்தாமல் வெடிகளும் துப்பாக்கிகளும் சுடப்பட்டன. இந்த நாள்களில் குதிரைப் படை நாட்டைச் சுற்றிச் சூறையாடின. மதுரைக்கு முன்னிருக்கும் கந்தர்

மலையில் இதுவரை தங்கியிருந்த மகம்மது யூசுப்கானுக்கு எதிரிகளின் படைத்தாக்குதலைப் பற்றி எந்தவிதமான குறிப்பான செய்திகளும் கிடைக்கவில்லை. படை புறப்பட்ட நான்கு நாள்களுக்குப் பிறகுதான் பகைவரின் படையெடுப்பைப் பற்றி அறிந்தான்; உடனே படைவீட்டைக் கலைத்துத் திருநெல்வேலி நோக்கி விரைந்தான். அவன் வருகையை உணர்ந்த பகைவர், தங்களுடைய எல்லாக் கூட்டத்தினரையும் சேர்த்துக் கொண்டு அவனை எதிர்த்துப் போரிட முன்னேறினர். இருதிறத்தினரும் டிசம்பர் முதலாம் நாள் திருநெல்வேலிக்கு வடக்கே இருபது (இப்போது 12) மைல் தூரத்திலுள்ள கங்காதரத்தில் சந்தித்தனர். கங்காதரம்: இது கங்கை கொண்டானைக் குறிக்கும். சாதாரணமாக ஆங்குண்டான் என்று வழங்கப்படும் ஒரு கிராமம். சித்திராநதி அல்லது சித்தாற்றிலுள்ளது. அதனருகே ஓர் இரயில் நிலையமும் உண்டு. கங்கைகொண்டான் - அதாவது கங்கையைக் கொண்டவன் என்பது பெயர். சிவன் அப்பெயருடன் வணங்கப் பெற்றபோது கங்கை மறுபடியும் தோன்றியதுபோல் இங்கும் தோன்றினாள் என்று பொதுவாக ஒரு நம்பிக்கை உள்ளது. இப்பெயரின் வடமொழிப் பெயர் கங்காதரன். ஓர்ம் என்பாருடைய அறிவிப்பாளர்கள் - பின்பற்றுபவர்கள் தமிழுக்குப் பதிலாக இதைப் பயன்படுத்தினார்கள். ஒரு வேளை தஞ்சாவூர் நாட்டில் அதே பெயரில் ஒரு நகரம் இருப்பதே காரணமாயிருக்கலாம். கங்கைகொண்டான் என்ற பெயரையுடைய சோழ இளவரசன் ஒருவன் இருந்தான். அவன் சுந்தரசோழ பாண்டியன் என்ற பட்டத்துடன் அரசனாக்கப்பட்டான் என்று சொல்லப்படுகிறது. (கால்டுவெல்லுக்கு ஏற்பட்ட ஆராய்ச்சிக் குழப்பத்துக்கும் ஆரிய மாயைக்கும் சரியான சான்று இப்பகுதி - ந.ச.). ஏவலர்களின் எண்ணிக்கையின் குறைவை அவர்களுடைய அளவற்ற ஆற்றல் திறன் நிறைசெய்தது. கம்பெனிப்படை எதிரிகளை முறையோடும் சூழ்நிலை நலன்களுடனும் ஒவ்வொரு பகுதியிலும் தாக்கின. திறமையுடன் பீரங்கிகள் குதிரைப் படையை நோக்கி வெடிக்கப்பட்டன. குதிரைப்படையினரின் நல்வினை குதிரைகளையே பொறுத்திருந்தமையால், அவர்கள் போராட்டத்தை நிறுத்திப் போர்க்களத்தைவிட்டுப் புறப்பட்டுச் சென்றனர். மறுநாள் மகம்மது யூசுப்கான் திருநெல்வேலிக்குப் புறப்பட்டான். அங்குள்ள பாழான மாவட்டங்களில் வாழ்கின்ற மக்களின் மனத்தில் ஊக்கத்தை ஊட்டுவதற்காகவும் திரும்பவும் நாட்டிற்குச் சென்று அவர்கள் தொழில்களைக் கவனிக்க அழைப்பு விடுக்கவும் அம்மாவட்டங்கள் வழியாகச் சென்றான்.

பாளையக்காரர்கள் தங்கள் நாடுகளுக்குத் திரும்பினார்கள்.



பரக்கத் துல்லா தன் குதிரைப்படையுடன் மதுரைக்குச் சென்றான். ஆனால், நபிகான் கட்டாக்கு திருவில்லிபுத்தூருக்குச் சென்றான். அங்குக் கோட்டையைத் தாக்க வாய்ப்பில்லை. அக்கோட்டையில் சில சிப்பாய்கள் இருந்தார்கள். எனவே, நகரத்திலுள்ள கோவில் மதிற்சுவரேற முயன்றனர். அதில் ஓர் அந்தணன் உயர்ந்த வாயில் கோபுரத்தின் உச்சிக்குச் சென்று, அங்கு உரத்த குரலில் சாப மந்திரங்களைக் கூறித் தலைகுப்புறத் தரையில் விழுந்தான். அவன் மூளை சிதறியது. எதிரிகள் மகம்மதியர்களாயிருந்தபோதிலும், கோவிலைத் தாக்க முற்பட்டால், அச்செய்கை, அதுபோன்ற மேலும் பல உற்சாகமுள்ள பக்தர்களின் செயலைத் தூண்டிவிடும். அதனால் நாட்டில் பொதுவாகத் தங்கள்மேல் வெறுப்பு ஏற்படும் என்று எண்ணி அஞ்சி உடனே நகரத்தைவிட்டு வெளியேறினார்கள். (இப்படி. திருப்பரங்குன்றத்திலும் ஒரு நிகழ்ச்சி நடந்தது கல்வெட்டுகளால் விளங்குகிறது. - ந.ச.). அதற்குள் திருநெல்வேலியிலுள்ள குத்தகைக்காரர்களின் வேலைகளை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்த காப்டன் காலியட்டு சதிகாரர்கள் திண்டுக்கல்லில் மைசூராருடன் உடன்படிக்கை செய்து ஆங்கிலேயரையும் அவரைச் சார்ந்தோரையும் தாக்க உதவி தேடினர் என்றும், பூலித்தேவர் ஐம்பது இலட்சம் ரூபாய் கொடுப்பதென்றும், அதற்கு ஈடாக மக்புசுகானின் ஜமேதார்கள் சோழ வந்தான் மாவட்டங்களை விட்டுவிட வேண்டுமென்றும் முடிவாயிற்று என்ற செய்திகளையும் அறிந்தான். சோழவந்தான் மாவட்டத்தில்தான் மதுரைக்கும் திண்டுக்கல்லுக்கும் இடையே ஒரே சாலை இருந்தது. அன்றியும், அது மிக்க பலம் பொருந்திய சாலையாகவும் இருந்தது. ஆயினும், நாட்டை வென்றதும் அதை மைசூரார்களுக்கா, மக்புசுகானுக்கா அல்லது யாருக்குக் கொடுப்பது என்பது முடிவு செய்யப்படவில்லை. மறவர் நாட்டில் ஒளிந்து வாழும் பழைய பரம்பரையைச் சேர்ந்த சந்ததியாருக்கே திருப்பிக் கொடுப்பதென்று முடிவாயிற்று. மக்புசுக்கானுக்கு மைசூரில் ஓர் அலுவலகம் ஏற்படுத்திக் கொடுப்பதெனவும் ஏற்பாடாயிற்று. இச்செய்தி மதுரையைக் கூடிய சீக்கிரம் தாக்க வேண்டிய தேவையை அதிகப்படுத்தியது. ஆனால், திருநெல்வேலியில் ஏப்ரலில் 10 ஆம் நாள் வரை நிலவரங்கள் ஒழுங்கு செய்து முடிக்கப்படவில்லை. அன்றைய தினத்திலே காப்டன் காலியட்டு 180 ஐரோப்பியர், 2500 சிப்பாய்கள், 6 பீரங்கிகள், 500 குதிரைகளுடன் தன் படையெடுப்பைத் தொடங்கினான். மகம்மது யூசுப் சிப்பாய்களை நடத்திச் சென்றான். முதலி அவனாலேயே சேர்க்கப்பட்ட குதிரைப்படையை நடத்திச் சென்றான். ஆறு கம்பெனிச் சிப்பாய்க் கூட்டங்கள் திருநெல்வேலியைக் காப்பதற்கும் அதே

எண்ணிக்கையுள்ள சிப்பாய்களைப் பாளையங்கோட்டைக் கோட்டையைக் காக்கவும் நிறுத்திவிட்டுச் சென்றனர்.

### யூசுப் அளித்த கொடுந்தண்டனை

சில நாள்களுக்குப் பிறகு பரக்கத்துல்லாவும் கட்டாக்கும் 500 குதிரைவீரருடன் பூலித்தேவரிடம் சென்றனர். படைத் தலைவன் மகம்மது யூசுப், லெப்டினண்டு ரம்போல்டின் கட்டளையைப் பெற்றதும் தான் செய்து கொண்டிருந்த பயணத்தை நிறுத்திவிட்டுத் திருநெல்வேலிக்குத் திரும்பினான். அங்கு முன்போல் 1000 சிப்பாய்களை விட்டுவிட்டு, எஞ்சிய சுமார் 1800 சிப்பாய்களுடன் மதுரையை நோக்கி முன்னேறினான். இயற்கையில் கோழையாகிய குத்தகைக்கார முதலி, பெரும்படையுடன் சேர்ந்து செல்லத் தீர்மானித்தான். அன்றியும், வழக்கமான பரிவாரங்களைத் தவிரப் புதியவர்களாய்ச் சேர்ந்த நூறு சிறந்த குதிரைவீரர்களும் அவனைத் தொடர்ந்தார்கள். அவர்கள் டிசம்பர் 16இல் கங்காதரத்தை (கங்கைகொண்டானை) அடைந்தார்கள். அங்கு லெப்டினண்டு ரம்போல்டு மதுரையை விட்டுப் புறப்பட்ட செய்தியைக் கேள்விப்பட்ட மகம்மது யூசுப் எதிரிகளின் நடவடிக்கைகளைக் கவனிக்க அங்குத் தங்கினான். நபிகான் கட்டாக்கும் பரக்கத்துல்லாவும் பூலித்தேவரிடம் சென்ற செய்தியைப் பெறும்வரை அங்கேயே இருந்துவிட்டுப் பிறகு திருவில்லிபுத்தூருக்குப் புறப்பட்டனர். அப்பகுதி நாட்டிலுள்ள பாளையக்காரர் எதிரியைச் சேரவிடாது பயமுற்றுவதற்காக அங்குப் பாடி வீடு அமைத்துத் தங்கினான். படையெடுப்பின் போது முதலி உறவினர்களுள் ஒருவனான அழகப்பனைப் பூலித்தேவரிடம் அனுப்பி, அவனுடன் சமாதானம் செய்து கொள்ள விரும்புவதாகவும் அதற்கு ஊதியமாகச் சில மாவட்டங்களைத் தருவதாகவும் உடன்படிக்கை செய்து கொண்டுவரச் செய்தான். எந்தச் சூழ்நிலையிலும் எதையும் மறுத்தறியாதவரும், ஒருபோதும் தமது வாக்குறுதியைக் காப்பாற்றாதவருமாகிய பூலித்தேவர் உடனே தம் பிரதிநிதி ஒருவனை திருவில்லிபுத்தூருக்கு அழகப்பாவுடன் அனுப்பிவைத்தார். அதே சமயத்தில், பரக்கத் துல்லாவையும் நபிகான் கட்டாக்கையும் சென்றடையும்படி அவருடைய துருப்புகளை அனுப்பினார். அவர் மேற்கொண்ட சமாதானச் செயலுக்காக வழக்கமானப் பாசாங்கு மரியாதைகளுடன் அந்தப் பிரதிநிதி இருநூறு முந்நூறு கூலிப்படை தொடர அழைத்துச் செல்லப்பட்டான். முகம்மது யூசுப் பூலித்தேவரின் பண்பை அறிந்தவதனாதலால், இந்த உறவை முழுதும் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டான். அதே சமயத்தில் திருநெல்வேலியின் மேற்குப்



பகுதியில் அவனுடைய வீரர்கள் சூறையாடிக் கொண்டிருப்பார்கள் என்பதையும் அவன் அறிவான். தீவினை வசமாக, இந்த ஆத்திரமான சூழ்நிலையில் பிரதிநிதியினுடைய கூலிப்படையிலுள்ள ஐவர், பாசறையிலிருந்த குதிரைகளையும் எருதுகளையும் போல் திடீரெனப் பிடித்துக் கொணர்ந்து யூசுப் எதிரில் நிறுத்தப்பட்டனர். உடனே யூசுப்பு அவர்களைப் பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுக் கொன்றான். இச்செயல் கொடுமையான கொலையாயினும், இந்துஸ்தானத்தில் இது ஒன்றும் புதியதன்று.

கொடுங்குற்றங்களுக்கு இத்தண்டனை தருவது வழக்கந்தான். பிரதிநிதி உடனே, தன் கூலிப்பட்டாளங்களுடன் பாசறையை விட்டு ஓடிவிட்டான். அவர்கள் அடைந்த தண்டனை பூலித்தேவரை ஓரளவு அவர் வாழ்க்கையிலேயே முதன்முதலாகத் தம்மோடு தொடர்பு கொண்டவர்களுடன் சிறிது நேர்மையுடன் நடந்து கொள்ளத் தூண்டியது. ஆனால், மக்புசுகானின் நிலையற்ற புத்தியையறிந்த யூசுப்பு, வழக்கமான எச்சரிக்கையுடன் மதுரையில் ஆங்கிலேயரின் முயற்சிகளையும் உடன்படிக்கைகளையும் அம்பலப்படுத்திவிடுவான் என்று ஐயப்பட்டு, அவனை அங்கு விட்டு வைக்க அஞ்சி, உடனே நெல்லிதங்கவில்லி (நெற்கட்டுஞ்செவ்வல் - ந.ச.)க்குப் புறப்பட்டு வந்து அங்கே தன் நேரடிக் கண்காணிப்பில் இருக்கும்படி செய்தான். முடிவில் பூலித்தேவருடன் இருந்த பரக்கத்துல்லா மக்புசுகானை அழைத்துவர ஆளை அனுப்பினான். மக்புசுகான் டிசம்பர் மாத முடிவில் நகரத்திலிருந்து 500 குதிரை வீரருடன் புறப்பட்டான்.

### மக்புசுகானின் சூழ்ச்சி

மாதா மாதம் நடந்த ஒவ்வொரு செய்தியையும் விவரமாக எழுதுவதனால் தொல்லையும் இழப்புமே ஏற்படும். எனவே, கருத்தை ஈர்க்கத்தக்க சில சிறப்பான நிகழ்ச்சிகளை மட்டுமே குறிப்பிடுவது நலமாம் என்று அத்தோடு நான் மனநிறைவடைய விரும்புகிறேன்.

மக்புசுகானைப் பூலித்தேவருடன் விட்டுவிட்டுப் பரக்கத்துல்லாவும் நபிகான் கட்டாக்கும் 500 குதிரை வீரருடன் நெல்லித்தங்க வில்லி (நெற்கட்டுஞ் செவ்வல் என்ற ஊரின் உண்மை வடிவத்தைக் கால்டுவெல் உணரவில்லை! - ந.ச.)க்குப் புறப்பட்டனர். மலையோரங்களை வரம்பிட்டுச் சென்ற அவர்கள், ஒரு நாள் மாலை வாணிய செவக்கேரி பாளையக்காரன் கோட்டையில் தங்கினார்கள். (வாணிப என்பது 'வன்னியர்' என்று சாதிப்பெயர் அல்லது சாதிப்பட்டத்தைக் குறிக்கிறது. இது மறவர் சாதியைச் சேர்ந்த ஒரு

வகுப்பினரைக் குறிக்கிறது. சிவகிரிப்பாளையக்காரர் இந்த இனத்தைச் சேர்ந்தவர். இளையரான் பெண்ணைப் பாளையக்காரரும் வன்னியரே. மகம்மது யூசுபால் தோற்கடிக்கப்பட்ட சிவகிரிப் பாளையக்காரரும் வன்னியரே.) மகம்மது யூசுபால் தோற்கடிக்கப்பட்ட சிவகிரிப் பாளையக்காரன் தன் கூலிப்பட்டாளத்தை வெளியே அனுப்பினான். அப்பட்டாளம் நள்ளிரவில் அந்தக் குதிரைப்படை மீது பாய்ந்து, கூக்குரலாலும் வெடி முழக்கத்தாலும் அவர்கள் கூட்டத்தைக் கலைத்து, 40 குதிரைகளைக் கைப்பற்றியது.

புரட்சி செய்த சமேதார்கள் மதுரையை முற்றுகையிட்டுக் கைப்பற்றிக் கொண்டு திருநெல்வேலி மேற்குப் பாளையக்காரர் களுடன் மக்புசுகான் தங்கள் உதவிக்கு வருவான் என்று எதிர்பார்த்திருந்து பெரிதும் ஏமாற்றமடைந்தார்கள். பரக்கத்துல்லா மக்புசுகானை விட்டுவிட்டு வந்தபோது அவன் 500 குதிரை வீரரும் ஆயிரம் காலாள்களும் நெல்லித் தங்கவில்லி (நெற்கட்டுஞ்செவ்வல்) யில் இருந்தார்கள். அவன் மதுரையைக் காக்க வந்த அதே சமயத்தில் காலியட்டு, திருநெல்வேலியிலிருந்து முக்கியமாக ஆங்கிலத் துருப்புகளுடன் மதுரையைத் தாக்குவதற்குப் புறப்பட்டான். காலியட்டு கண்ணுக்கு மறைந்ததும் மக்புசுகானும் பூலித்தேவரும் அந்த இடத்தை ஆக்கிரமித்து மற்றப் பாளையக்காரருடன் சேர்ந்து பத்தாயிரம் பேர்களடங்கிய படையைக் கூட்டினர். ஏப்பிரல் இறுதியில் இந்தப் பட்டாளம் நெல்லித் தங்கவில்லியிலிருந்து, திருநெல்வேலிக்கு 15 மைலுக்குள் இருந்த ஆழ்வார் குறிச்சியைத் தாண்டி முன்னேறியது. ஆனால், அவர்கள் அந்த நகரத்தை அணுகமுடியாதபடி அங்கிருந்த சிப்பாய்களால் அச்சுறுத்தப்பட்டனர்; அது பரந்த அந்நாட்டிலுள்ள மக்களைத் துன்புறுத்திச் சூறையாடியிருக்கும். ஏனெனில், இம்முறை அறுவடையில் அவர்கள் எண்ணிய தொகையை வசூலிக்காவிட்டால் சூன்மாத மத்தியில் அறுவடையாகும் வரை காத்திருக்க வேண்டும். ஆயினும் அவர்கள் தங்களுக்குப் பணம் செலுத்த வேண்டியர்களை உடனே கட்டும்படி உரிமைக் கட்டளை வெளியிட்டார்கள். இதற்குள் மக்புசுகான் திருவாங்கூர் அரசரின் துணை வேண்டிப் பேரம் பேசினான். அவ்வுதவிக்குப் பதிலாக அந்த அரசருக்குச் சிறிதும் உரிமையில்லாத மற்ற எல்லா மாவட்டங்களையும் தருவதாகக் கூறினான். இம்முயற்சி தோல்வியுறவே, அவனுடைய வழக்கமான உறுதியற்ற போக்கின் படி ஆங்கிலேயருடன் உடன்படிக்கை செய்து கொள்ள முயன்றான். எனவே, காலியட்டுக்கு எழுதிய கடிதத்துடன் ஒரு பிரதிநிதியை அனுப்பி, நிரந்தர சராப்புகளின் ஜாமீன் பேரில் அவர்களிடமிருந்து நாட்டைக் குத்தகை எடுத்துக் கொள்ள எண்ணங் கொண்டிருப்பதையும் அவன்



மூலம் சொல்லி அனுப்பினான். லெப்டினண்டு ரம்போல்டு இந்த ஏற்பாட்டை ஒப்புக் கொண்டான். அப்பொழுது காலியட்டு, திருச்சிராப்பள்ளியைக் காப்பாற்றச் சென்று திரும்பி வந்திருந்தான். இச்செய்தி கவனத்திற்குரியதென எண்ணிச் சிப்பாய் ஜமேதாராகிய இராமநாயக்கையும் புத்திக் கூர்மையுள்ள மூர்மானையும், மக்புசுகானை அவன் படைவீட்டில் சந்தித்துக் கலந்தாலோசிக்க அனுப்பினான். அவர்கள் 50 சிப்பாய்களின் துணையுடன் சென்றார்கள். ஆனால், அவர்கள் அங்குப் போய்ச் சேர்வதற்குள் திருநெல்வேலி, பாளையங்கோட்டை ஆகிய இரண்டிடங்களிலும் வைக்கப்பட்டிருந்த 12 சிப்பாய்க் கூட்டங்களில் ஆறு கூட்டம் மதுரையிலுள்ள பட்டாளத்துடன் வந்து சேர வேண்டும் என மக்புசுகானுக்குக் கட்டளை வந்தமையால் அது அவன் திட்டங்களையெல்லாம் மாற்றிவிட்டது. அவனிடம் வந்த இரு சமாதானப் பிரதிநிதிகளிடம் உடன்படிக்கை செய்து கொள்வதற்குப் பதிலாக அவர்களையும் குதிரை வீரரையும் தன் படைகளாற் சூழ்ந்து கொண்டு, பாளையங் கோட்டையிலுள்ள சிப்பாய்களுக்கு உடனே கோட்டையை மக்புசுகானிடம் கொடுக்க வேண்டுமெனச் செய்தி அனுப்பும்படி பயமுறுத்தினான். அப்படிச் செய்யாவிடில் அவர்கள் அனைவரையும் அப்போதே தன் வாளுக்கு இரையாக்கிவிடுவதாகவும் அச்சுறுத்தினான். ஆனால், பிரதிநிதிகளோ, சண்டை செய்யத் தயாரானதுமன்றி அவ்வாறு செய்தி அனுப்புவதைவிடத் தாங்கள் இறப்பதற்குத் தயாரெனத் தெரிவித்தார்கள். சண்டை ஆரம்பிக்கும் சமயத்தில் மக்புசுகானுடைய சமேதார்களில் ஒருவனாகிய அலிசாகிபு என்னும் பெயரையுடையவன், மக்புசுகானின் சூழ்ச்சியை அறிந்து வெறுப்படைந்து, தன் அதிகாரத்திலிருந்த குதிரைப் படையுடனும் சிப்பாய்ப் படையுடனும் சேர்ந்து தன் வெறுப்பை வெளிப்படுத்தினான். உடனே எஞ்சியவர்கள் ஒன்றுகூடிப் பின்வாங்கினார்கள். ஆனால், அலி சாகிபு பிரதிநிதிகளுக்கு மேலும் துன்பம் நேரிடலாமென ஐயப்பட்டு, அவர்களுக்குத் துணையாகப் பாளையங்கோட்டை வரை சென்று, அவர்களை அங்குப் பத்திரமாகச் சேர்த்துவிட்டு வந்தான்.

**கட்டபொம்மன் உதவி**

ஆறு கம்பெனிச் சிப்பாய்க் கூட்டங்கள் திருநெல்வேலியிலிருந்து மதுரைக்குச் சென்றவுடனே எதிரிகள் நுழைந்த நகரங்களில் அறுவடை ஆரம்பமாயிற்று. அங்கு மக்புசுகான் தன் அதிகாரத்தை நிலைநாட்டினான். இதைப் பயன்படுத்தி அவன் பிரதிநிதிகளும் ஏவலர்களும் பெருங் கொடுமைகளையும் அநீதிகளையும் செய்து

வந்தார்கள். சராப்புகள் அல்லது பாங்கர்கள் நடுவுநிலைமையும் தேவையும் கூடிய தங்கள் தொழிலால் இந்துஸ்தானத்திலுள்ள மக்களையும் அவர்கள் உடைமைகளையும் காப்பவர்களாய் இருந்துங்கூட, அவர்களும் கொடுங்கோலன் அல்லது வெற்றி கொண்டவனுடைய கொடுமைகளிலிருந்து தப்பவில்லை. அவனுடைய படையின் முக்கியப் பகுதி பாளையங்கோட்டைக் கோட்டையை முற்றுகையிட்டது. ஆனால் கோட்டைக்குள் இருந்த சிப்பாய்கள் எளிதாக எதிரிகளை எதிர்த்து அவர்களுக்குப் பேரிழப்பை உண்டாக்கினார்கள். ஆனால், உணவுப் பற்றாக்குறையினால் ஆபத்து ஏற்பட்டிருந்தது. இதைத் தவிர்க்க, சிப்பாய்களின் தலைவனாகிய பாசப்ப நாயகன் கட்டபொம்ம நாயக்க பாளையக்காரனின் உதவியை நாடினான். கட்டபொம்மன் தன் மாவட்டத்தில் இருந்த வளமுள்ள நிலங்களின் உரிமை கேட்டு உடன்படிக்கை வேண்டினான். அதை ஏற்றுக் கொண்டவுடன், கட்டபொம்மன் தன்னுடைய படையுடனும் தன்னைச் சார்ந்த எட்டையபுரத்தானுடைய படையுடனும் அப்போரில் பங்குகொண்டான். அவர்கள் வருகையை அறிந்த படைகள், ஆத்திரத்துடன் போரிட்டன. ஆனால் சிறிது நேரப் போருக்குப்பின் எதிரிகள் முற்றுகையிட்டுச் சென்றார்கள். இதற்குப்பின் இரண்டு பாளையக்காரர்களும் தங்களுடைய வீடுகளுக்குத் திரும்பினார்கள். கட்டபொம்ம நாயக்கன் ஆங்கிலத் துருப்புகள் மதுரையை அடையுமுன் அவர்களுடன் சென்று சேர்ந்து கொண்டான். மக்புசுகான் திருநெல்வேலியிலிருந்து சமேதார்களுக்குப் படையோ பணமோ எதுவும் அனுப்பாதிருந்தான். பரக்கதுல்லா மதுரையிலிருப்பவர்களுக்கு உணவு பற்றாக்குறை அதிகமாக வருவதையும், உணவை வாங்கத்தக்க பணத்திற்கும் நெருக்கடி ஏற்பட்டிருப்பதையும், தங்கள் உணவை இறக்குமதி செய்யப்பணம் மிகத் தேவையாயுள்ளது என்றும் தொடர்ந்து தெரிவித்துக் கொண்டிருந்துங்கூட, அதைக் கவனியாது, சிற்றின்பங்களில் பணத்தைச் சிதறவிட்டுக் கொண்டிருந்தான் மக்புசுகான். சீக்கிரத்திலேயே சமேதார்கள் மதுரையைக் காப்டன் காலியட்டிடம் ஒப்படைத்தார்கள். அதற்காக மக்புசுகான் அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய நிலுவைச் சம்பளத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டார்கள்.

மதுரையிலிருந்து மகம்மது யூசுபு திரும்பும்போது மக்புசுகானுடன் இருந்த குதிரைப்படைக்கு அழைப்பு அனுப்பியிருந்தான். எனினும், மற்றவர்கள் திருநெல்வேலி நாட்டில் கொள்ளைக்காரர்களாய்ச் சூறையாடிக் கொண்டிருந்தார்கள். எட்டையபுரத்து மாவட்டங்கள் வழியாகச் செல்லும்போது பாளையக்காரன் ஒருவன், தனக்கு



விதித்திருந்த தண்டனைப் பணத்தின் மீதித் தொகையாகிய 18,700 ரூபாயைச் செலுத்தி விட்டுத் தங்கள் பிணை ஆள்களை மீட்டுக் கொண்டு நவம்பர்மாத மத்தியில் அப்படை திருநெல்வேலி நகரத்தை அடைந்தது. அங்கிருந்து அவர்கள் வருகையை அறிந்த மக்புசுகான் நெல்லித்தங்கவில்லி (நெற்கட்டுஞ் செவ்வல்) க்குத் திரும்பினான். அவன் அங்கிருந்த காலத்தில் பாளையங்கோட்டைக் கோட்டையைக் கைப்பற்றப் பலவித முயற்சிகள் செய்து கொண்டிருந்தான்; ஆனால், களக்காட்டைக் கைப்பற்றி அதைத் திருவாங்கூர் அரசனுக்குக் கொடுத்தான். மகம்மது யூசுபு உடனே அந்த இடத்தை நோக்கித் தன் படையினருள் ஒரு பகுதியுடன் படையெடுத்துச் சென்றான். திருவாங்கூர் உடனே எவ்வித எதிர்ப்புமின்றி அப்பிரதேசத்தைக் காலி செய்துவிட்டனர். அவன் மேலும் தொடரவே, கடல் முனையருகே மலைகளிலிருக்கும் கணவாய்களின் சுவர்களுக்குப் பின்னே சென்று ஒளிந்து கொண்டனர். அதே நேரத்தில் மற்ற படைப்பகுதிகளின் வருகை பாப்பன்குளம், ஆழ்வார் குறிச்சி, பிரம்மதேயம் முதலிய இடங்களில் மக்புசுகானால் நிறுத்தப்பட்டிருந்த காவலாளிகளையும் தரங்குறிச்சியிலுள்ள வடகரையில் பாளையக்காரர்களால் நிறுத்திவைக்கப்பட்டிருந்த காவலாளிகளையும் பயந்து ஓடும்படிச் செய்தது. இந்த இடங்கள் எல்லாம் நெல்லித்தங்கவல்லிக்கருகே திருநெல்வேலியின் வடமேற்கே அமைந்துள்ளன. இவைகளைப் பாதுகாக்கச் சிப்பாய்க் கூட்டங்கள் நியமிக்கப்பட்டன. இதற்கான வரிவசூலை மேற்பார்வையிடத் தக்க திறமை மாடலே என்பவரிடம் இல்லை என்பது தெரிந்தது. எனவே, அவன் நிருவாகத்தைப் பற்றிய விவரத்தை விளக்கச் சென்னைக்கு அழைக்கப்பட்டான். ஆனால் நோய்வாய்ப்பட்டுத் தொண்டைமான் காடுகளில் கணக்குகளைச் சரிக்கட்டினான்.

### கூட்டணிக்காரர்கள் கொள்ளை

இந்த நாடுகளில் மக்புசுகான் தன்னுடைய படையைக் காத்துக் கொண்டு போலிச் செய்கைகள், உடன்படிக்கைகள் முதலியவற்றில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் வரை இந்நாட்டிலுள்ள குழப்பங்களும் குறையாது என்பதையும் அங்குள்ள படைகளுக்குப் போதுமான வரியைக் கூட வசூலிக்க இயலாது என்பதையும் காப்டன் காலியட்டின் நேரடிக் கூற்றுகளிலிருந்து சென்னை அரசாங்கத்தார் ஐயமறக் கண்டு கொண்டனர். எனவே, மக்புசுகான் தன் குதிரைப்படையுடன் நாட்டைவிட்டு வெளியேறி மற்ற துருப்புகளையெல்லாம் கலைத்துவிட்டால் அவனுக்கு வரிப்பணத்திலிருந்து அவனுடைய

கண்ணியமான வாழ்க்கைக்குத் தேவையானப் பணத்தை ஆண்டு வருமானமாகக் கொடுத்துவிடுவதெனச் சென்னையில் தங்கியிருந்த நவாபிற்கு அரசாங்கத்தார் யோசனை கூறினார். இந்தத் திட்டத்தினால் இலாபம் எதுவும் கிடைக்கவில்லை. என்றாலும் இழப்பு எதுவும் உண்டாகப் போவதில்லை. பிரெஞ்சுக்காரர் எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக் கொண்டு இந்த மாநிலங்களில் காலூன்றுவது கடினமாகிவிடும். நவாபு இந்த திட்டத்தை ஏற்றுக் கொண்டு மக்புசுகானிடம் உடன் படிக்கை செய்து கொள்ள ஒரு பிரதிநிதியை அனுப்பி வைத்தான்.

நவாபால் மக்புசுகானிடம் அனுப்பப்பட்ட பிரதிநிதி பிப்ரவரி மாதம் 28 ஆம் தேதி நெல்லித்தங்கவில்லி (நெற்கட்டுஞ் செவ்வலு)க்கு வந்தான். ஆனால், அவன் அங்கு மக்புசுகான் 50 குதிரைவீரர்களுடன் வறுமையைக் காட்டத்தக்க மிகப் பழைய கூடாரத்தில் தங்கியிருப்பதைக் கண்டான். அன்றியும், அவன் கூட்டாளிகளிடம் வெறுப்படைந்து நவாபுவிடம் மிக்க ஆதரவுடையவனாய் நடித்துக் கொண்டிருந்தான். ஆனால், சமாதானச் சரக்குகளைப் பற்றிப் பேசும் பொழுது, அந்த நாடு முழுவதையும் அவனுக்குச் சம்பளமாகக் கொடுத்தலான்றி, வேறெதுவும் அவனுக்குத் திருப்தியளிக்காது என்பது விளங்கிற்று. ஆனால், அவன் எண்ணங்களை அடக்கியவனல்லன். இப்பொழுது அவன் அறிவையும் அடக்க இயலவில்லை. கர்நாடகத்தில் அதிகாரம் பெற்று வரும் பிரெஞ்சுக்காரர்கள் உதவியால் வலிமை பெற்றிருக்கும் மேற்குப் பாளையக்காரர்கள் வெற்றி கொண்டார்கள். பிழைப்பை நாடி மக்புசுகான் அவர்களைச் சார்ந்திருந்து அவர்களுடன் தன் பெயரையும் இணைத்து அவர்களிடமுள்ள பகையை வெளிக் காட்டாமல் நடித்துக் கொண்டிருந்தான். அப்படை பூலித்தேவர் துருப்புகளையும் கொத்தல்தாவா (கொத்தலைத் தேவர் என்று வழங்கப்படும் மறவருள் ஒரு பிரிவினர்) நடுவக்குறிச்சி சொரண்டை ஆகிய வடகரையைச் சேர்ந்த மூன்று மைனர் பாளையக்காரர்கள் அடங்கிய துருப்புகளையும் கொண்டிருந்தது. ஆங்கிலேயருடன் புதிய உறுதியான உறவு கொண்டிருந்த கட்டபொம்மனைச் சேர்ந்த எட்டையபுரத்தின் கிழக்குப் பாகத்திலிருந்தும் ஒரு படை அவர்களுடன் சேர்ந்திருந்தது. சேத்தூர் (சாத்தூர்) பாளையக்காரனையும் திருவல்லிபுத்தூருக்குத் தெற்கே 15 மைல் தூரத்திலிருந்த கோட்டைக்குள் பூலித்தேவரின் கூலிப்பட்டாளத்தின் ஒரு பகுதியை அனுமதிக்க இணங்கும்படி செய்தனர். அவர்களுடனும் தன் படைகளுடனும் சேர்ந்து அருகேயுள்ள நாடுகளைக் கொள்ளையடித்தான். அச்சமயத்தில் மகம்மது யூசுப்பு பிரெஞ்சுக்காரர்



துணை கொண்டு வரும் ஐதர் அலி அங்கு வரலாமென ஊகித்துத் தன் படைகளை மதுரையில் சேர்த்து வைத்துக் கொண்டிருந்தான். ஐதர் அலி அங்கிருந்து சென்று விட்டான் என்ற செய்தி உறுதியாய்த் தெரிந்ததும், மகம்மது யூசுப்பு சாத்தூரை நோக்கிப் படையை நடத்திச் சென்றான். அவனைக் கண்டதும் பாளையக்காரர்கள் பணிந்து, பூலித்தேவரின் ஆட்களை விரட்டிவிட்டு, அபராதப் பணத்தைச் செலுத்தினார்கள். ஆங்கிலத் துருப்புகள் அங்கிருந்து திருவில்லிபுத்தூருக்குத் திரும்பியவுடனே பாளையக்காரன் தன் கொள்ளைகளை நடத்த ஆரம்பித்தான். உடனே மகம்மது யூசுப்பு மறுபடியும் கோட்டையைத் தாக்கினான். பாளையக்காரன் சிறிது எதிர்த்துப் போராடிக் கோட்டையை விட்டுவிட்டு ஓடிவிட்டான். அவனுடைய உறவினர்களுள் ஒருவன், அந்த இடத்தில் நியமிக்கப்பட்டான். இதற்குள் கூட்டணிக்காரர்கள் நெல்லித்தங்கவில்லி (நெற்கட்டுஞ் செவ்வல்) யிலிருந்து பல தாக்குதல்களைச் செய்து இதற்கும் திருநெல்வேலிக்கும் இடையேயுள்ள பல இடங்களைக் கைப்பற்றி அவற்றைக் காப்பதற்காக நிறுத்திவைக்கப்பட்டிருந்த பல காவலாளிகளையும் கொன்று குவித்தார்கள். இரவில் தாக்கப்பட்டுக் கைப்பற்றப்பட்ட தாரங்குறிச்சியில் 27 குதிரை வீரர்களும் ஏராளமான சிப்பாய்களும் கொல்லப்பட்டார்கள். இவ்வெற்றிகளால் செருக்கடைந்த கூட்டணிக்காரர்கள் தங்களுடன் சேராதவர்களை எல்லாம் அச்சுறுத்தினார்கள். மறுத்த டெல்லிப் பாளையக்காரனைத் தாக்கினார்கள். அதே போலத் திருநெல்வேலியையும் கைப்பற்றத் தாயாரானதுமின்றிப் பாளையங்கோட்டைக் கோட்டையையும் கைப்பற்றுவதாகப் பெருமை பேசிக் கொண்டார்கள். ஆனால், திருவில்லிபுத்தூரிலிருந்து முகம்மது யூசுப்பின் வருகையால் அவர்களுடைய புறப்பாடு நின்றுவிட்டதுமன்றி அவனை எதிர்த்துப் போரிடத் தக்க துணிவுமின்றி இருந்தார்கள். என்றாலும், அவர்கள் கைப்பற்றிய இடங்களைப் பலப்படுத்திக் கொண்டு நெல்லித்தங்கவில்லி (நெற்கட்டுஞ் செவ்வலு)க்குத் திரும்பினார்கள். எனினும், மகம்மது யூசுப் மேலும் முன்னேறாதவாறு அவனுக்கு இடையூறுகளையும் அலைக்கழிவுகளையும் உண்டாக்குமாறு தங்கள் படைகளை அனுப்பி வைத்தார்கள். ஆனால், வெற்றி கிட்டவில்லை. யூசுபின் படைகளைச் சந்திக்கச் சென்ற படையும், சிப்பாய்களின் தாக்குதலைச் சகிக்க இயலாத படைகளும் தோற்கடிக்கப்பட்டன. ஏப்ரல் இறுதிக்குள் சூழ்ச்சிக்காரர்களால் கைப்பற்றப்பட்ட எல்லா இடங்களும் மீட்கப்பட்டன. பிறகு மகம்மது யூசுபு பகைவரின் நாட்டினுள்ளே போரிடத் தீர்மானித்தான்; எனவே, வடகரை

பாளையக்காரன் அதிக தூரத்திலிருந்தபோதும், கூட்டணியில் அவன் மிக்க பலம் வாய்ந்த கட்சிக்காரனாதலின், அவனை முதலில் தாக்க முடிவு செய்தான். சமவெளியிலிருந்த அவனுடைய கிராமத்திற்கு நெருப்பு வைக்கப்பட்டது. அவன் கோட்டையைச் சூழ்ந்துள்ள காட்டிற்குள் துருப்புகள் நுழைய ஆரம்பித்தன. அதற்குள் மதராசிலிருந்த தலைவனிடமிருந்து அறிவுரைகளும் குறிப்புரைகளும், திருச்சிராப்பள்ளியிலிருந்த காப்டன் காலியட்டிடமிருந்து மிக முக்கியமும் தேவையுமான காரியங்களுக்கு அவனும் அவனுடைய படையும் மிகவும் அவசரமாக தேவைப்படுகிறது என்றும் செய்திகள் வந்தமையால் அவன் அங்குச் செல்லவேண்டி நேர்ந்தது. அப்பொழுது பிரெஞ்சுக்காரர்கள் மதராசையும் அதைச் சுற்றியுள்ள இடங்களையும் முற்றுகையிட்டமையால், அதைக் காப்பாற்றவே அவன் உதவி தேவைப்பட்டது. அடுத்து 1759 ஆம் ஆண்டு மே மாதத்தில் திருநெல்வேலி நாட்டிலுள்ள பாளையங்கோட்டையிலிருந்த சிப்பாய் படை மக்புசுகானுக்கு எதிராகப் போரிடுவதில் முனைந்திருப்பதாகச் செய்தி வந்தது. பூலித்தேவன் அதிகமான மற்ற பாளையக்காரர்களுடன் சேர்ந்து கொண்டான். எதிரிகள் போர்க்களத்திலிருந்து பின் வாங்கிய போதிலும் சிப்பாய் படை கோட்டைக்கு வெளியே தலைகாட்ட இயலாதபடி பல சிப்பாய்கள் கொலை செய்யப்பட்டார்கள்; சிலர் காயமடைந்தனர். போர்க்களத்தில் தொல்லையின்றிப் படைக்குறைப்பு ஏற்படும் நிலைமை உண்டானவுடனே மகம்மது யூசுபுகானைத் தென்னாட்டிற்கு அனுப்புவது என்று முதலில் தீர்மானிக்கப்பட்டது.

**யூசுப்கானின் வருகை**

யூசுபுகான் மே மாதம் 4 ஆம் தேதி மதுரையை அடைந்தான். 10 மாதங்கள் வரை அவன் அங்கு இல்லாதிருந்தான். அவன் அழைக்கப்பட்ட போது மதுரைக் கோட்டையில் ஆறு - பாளையங்கோட்டையில் ஐந்து- திருநெல்வேலியில் மூன்று ஆக மொத்தம் பதினான்கு சிப்பாய் படைப் பிரிவுகளை விட்டுச் சென்றான். இந்தப் படைப் பிரிவினரிடமிருந்து அவரவர்கள் காத்திருந்த கோட்டைப் பகுதிகளைக் காப்பாற்றுவதைத் தவிர வேறு எதையும் எதிர்பார்க்கவில்லை. அதன்படி நத்தம் காட்டிலிருந்து திருவாங்கூர் எல்லைவரை உள்ள இரண்டு மாநில மாவட்டங்கள் யாவும் அவர்களுக்கு வரி கொடுத்துத் தங்களைக் காத்துக் கொண்டன. வரி கொடுக்காதவை அவர்களால் சூறையாடப்பட்டன. செயிண்ட் டேவிட் கோட்டை கைவி-ப்பட்டதிலிருந்து ஆரம்பித்த ஆங்கிலேயர் வீழ்ச்சியின் போது மகம்மது யூசுபு அங்கு அழைக்கப்பட்டிருந்தான்.



பிரெஞ்சுக்காரர் சென்னை முற்றுகையை முடிக்கும் வரை மக்புசுகான் தானும் ஒரு பிரெஞ்சுப் படையைச் சேர்த்துக் கொண்டு அதன் உதவியால் அந்த நாடுகளில் தன் அதிகாரத்தை நிலை நாட்டலாமென்ற நம்பிக்கையுடன் காத்திருந்தான். அவர்கள் கடிதங்களிலிருந்து அறிந்த பாண்டிச்சேரி ஆட்சி நிலையும் ஒற்றர்களின் செய்திகளும் அவனுடைய எண்ணத்தை மேலும் உறுதிபெறச் செய்தன. இந்த நல்ல ஊழினை எதிர்நோக்கி இருந்த மக்புசுகான் பூலித்தேவருடன் இருந்து கொண்டு அரசனைப் போல் போலி வாழ்வு வாழ்ந்து வந்தான். ஆனால் பூலித்தேவர் விரும்பி வழங்கியதைத் தவிர அவனுக்கு வேறு எதுவும் வக்கு வழியில்லை. ஆனால் பூலித்தேவரோ தன் சொற்படி பண விஷயத்தில் நடந்து கொள்ளாது அவனுக்கு வேண்டிய சாதாரண தேவைகளை மட்டும் மிகக் குறைவாகவே கொடுத்து வந்தான்.

யூசுபுகானின் வருகை அவனுடைய நிலையைச் சிறிது நலமுறச் செய்தது. மக்புசுகான் நாளடைவில் நவாபுடன் உடன் படிக்கை செய்து கொள்ளத் தயாராக இருப்பான் என்று பூலித்தேவர் பயந்தான். எளிதான வாழ்க்கையில் ஆர்வமுள்ள மக்புசுகான் அவனுக்கு ஏற்பட்ட இழிநிலையைக் கண்டு வெறுப்படையவில்லை. கிழக்குப் பாளையக்காரர் ஆலோசனைக் கூட்டங்களில் பார்வைக்காகவேனும் தலைமை வகித்தான். அப்பாளையக்காரர் அவர்களது காட்டுப் படையுடன் யூசுபைச் சந்திக்கத் தீர்மானித்து மேற்குப் பாளையக்காரரைப் பொது எதிர்ப்பிற்காக அழைத்தனர். மேற்குப் பாளையக்காரரும் பாளையங் கோட்டையைக் கடைசியாகத் தாக்கியபோது ஆங்கிலேயர்களால் ஏற்பட்ட துன்பங்களை மறந்து இந்தக் கூட்டணியில் சேர்ந்து கொண்டனர். மேற்குக் கூட்டணி ஆறு பாளையக்காரர்கள் அடங்கியது. அவர்களுடைய பழைய தலைவன் கட்டபொம்ம நாயக்கன் அண்மையில் இறந்துவிட்டான். அவனுக்குப் பின் அவன் உறவினன் அந்த இடத்திற்கு வந்தான். வழக்கமான அதே பெயரை வைத்துக் கொண்டு தன் முன்னோர்களின் கருத்தின்மைக்குப் பதிலாக ஆங்கிலேயரிடம் தீராத வெறுப்புடையவனானான். எட்டயபுரமோ எப்பொழுதும் கட்டபொம்மனுக்கு அடுத்தபடியாக முக்கியம் பெற்றது. இப்பொழுது செயலிலும் சிறப்பிடம் பெற்றது.

காஞ்சிபுரத்திலிருந்து மகமது யூசுபைத் தொடர்ந்து சென்ற படையில் ஆறு படைப் பிரிவுகளும் அறுபது குதிரைகளும் இருந்தன. ஆனால் படையெடுப்பின் போது தொண்டைமானிடமிருந்தும் எப்பொழுதும் நல்லுறவிலிருந்து வந்த மறவர்களிடமிருந்தும் படைகளை வேண்டினான். அதன்படி மூன்று பாளையக்காரர்

களிடமிருந்தும் 300 வீரர், குதிரை, கூலிப்பட்டாளம், சிப்பாய்கள் எல்லாரும் அவன் மதுரையை அடைந்ததும் அவனுடன் சேர்ந்து கொண்டன. உடனடியாக மேலும் அவன் படைகளைத் திரட்டத் தொடங்கினான். தன்னிடத்திலிருந்த படைகளை நகர்த்தியும் சிறப்பாகத் தேர்ந்தும் 300 குதிரைகள், 700 பயிற்சியுடைய சிப்பாய்கள் அடங்கிய படையை எட்டயபுரம் மாவட்டங்களைச் சூறையாட அனுப்பினான். பாளையங்கோட்டை படையிலிருந்து மூன்று படைப் பிரிவு அவர்களுடன் சேர்ந்து கொள்வதாக இருந்தது. பாளையங் கோட்டைப் படையினர் தங்கள் குறையைப் புதியவர்களைக் கொண்டு நிரப்பியிருந்தனர். சில தேவைகளால் மதுரையில் காலந்தாழ்த்தி விட்ட மகமது யூசுபு தன் பெரும்படையுடன் அங்கிருந்து வரும்வரை, கிழக்குப் பாளையக்காரரின் துருப்புகளை மேற்குப் பாளையக்காரர் சந்திக்கவிடாமல் தடுப்பதற்காக இறுதிவரை இப்படைப்பகுதி அந்த இடத்தைக் காக்க நிலையாக நிற்க வேண்டியதாயிற்று.

அவனுடைய முதல் படையெடுப்பு கொல்லம் கொண்டானில் ஏற்பட்டது. 1756 இல் அவன் அக்கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான். ஆனால் அவன் கர்நாடகத்திற்குப் புறப்பட்டதும், பூலித்தேவரும் வடகரையும் தாங்கள் பெற்ற நிலத்தின் உரிமையை அதுவரை செலுத்திக் கொல்லம் கொண்டானில் தங்கள் காவலை நியமித்தனர். அது பீரங்கியில்லாத மண்கோட்டை. எனவே சிறிது எதிர்ப்பிற்குப் பின் அவன் கைவசப்பட்டது. அங்கிருந்து எட்டயபுரத்திற்கு எதிராக அனுப்பிய பெரிய படையைச் சந்திக்க முன்னேறினான். அடிப்படையோவெனில் இப்பாளையக்காரர் களுடைய மாவட்டங்களை எல்லாம் தொடர்ந்து சூறையாடி அவர்களுடைய சொந்த நாட்டில் தன் துருப்புகளை நிறுத்தி, அவனும் கட்டபொம்மநாயக்கனும் பூலித்தேவருடன் சேர்ந்து கொள்வதற்கு வாய்ப்பாக நாட்டைக் கடக்க முடியாது தடுத்தான். இந்தத் தலைவர்களைப் போதுமான அளவு தடுப்பதற்கான வழி செய்துவிட்டு, அப்படை கொல்லார்பட்டியை நோக்கிச் சென்றது. கொல்லார்பட்டி, மதுரை திருநெல்வேலிக்குமிடையே செல்லும் நேர் பாதையின் நடுவே ஒவ்வொரு முனையிலிருந்தும் ஏறத்தாழ ஐம்பது மைல் தூரத்தில் உள்ளது. இக்கோட்டையும் 1756 ஜூனில் மகமது யூசுபுகானால் முற்றுகையிடப்பட்டது. இதனால் மிகவும் அழிவு ஏற்பட்டது. பாளையக்காரர்கள் கைதிகளாக்கப் பட்டனர். அக்கோட்டை திரும்பவும் வேறு யாராலேனும் கைப்பற்றப்பட்டதா அன்றி வேறு யாரும் அடுத்து உரிமைப் பாராட்டினாரா என்பதைப் பற்றி நமக்குத் தெரியாது. ஆனால் இச்சமயத்தில் அவர்களை யார் எதிர்த்தார்களோ அவர்கள் வசம்



அக்கோட்டை இருந்தது. ஏனெனில் அங்கு மூன்று நாட்கள் போராட்டம் ஏற்பட்டு அத்தாக்குதலில் நூறு சிப்பாய்கள் கொல்லப்பட்டனர்; காயமடைந்தனர். பாளையக்காரர் இரவோடு இரவாய்த் தப்பிவிட்டனர். உள்ளே கோட்டை தரைமட்டமாக்கப்பட்டது. பிறகு அப்படை மகமதுயூசுபுடன் சென்ற தலைமைப் படையுடன் சேர்ந்து பெரும்படையாகக் கங்காதரம் வழியாகத் திருநெல்வேலியை ஜூலை மத்தியில் வந்தடைந்தது. அவர்கள், அங்கு வந்ததும் வராததுமாய், சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொள்ளும் மகப்புசகானின் நிலையற்ற அறிவு விரைவாய் வேலை செய்ய ஆரம்பித்தது. அதன்படி தன்னுடைய வாழ்க்கைக்குத் தகுதியான ஜாகீர் ஒன்றைக் கொடுத்தால் அவன் கூட்டுப்படையை விட்டுக் கர்நாடகத்திற்குச் சென்று விடுவதாகக் குறிப்பிட்டு மகமது யூசுபுகானுக்கு ஒரு கடிதம் எழுதினான். அன்றியும் திருநெல்வேலி வந்துசேரக் காவல்படை ஒன்றையும் கேட்டிருந்தான். மகமதுயூசுபு எவ்வித மறுப்புமின்றி, அவனுடைய வேண்டுகோள் ஏற்றுக் கொள்ளப் படுமென்று தெரிவித்து அவனைப்பற்றிச் சென்னைத் தலைவரிடம் பரிந்துரைத்தான். சென்னைத் தலைவர் மூலமாக அவன் நவாபிடமும் வாழ்த்துச் செய்தி அறிவிக்கப்பட்டது.

திருநெல்வேலி நகரத்திற்கு வடக்கே 30 மைல் தூரத்திலுள்ள நடு நாடு திறந்தவெளி நிலப்பகுதி; நல்ல பயிரிடும் நிலம். கிழக்குமேற்குப் பாளையக்காரருடைய நாட்டிற்கிடையே அமைந்துள்ளது. இதுவே அவர்களுடைய சிறந்த கொள்ளையடிக்கும் பகுதியாயிருந்து வந்தது. மேற்குப் பாளையக்காரர் இந்த மாவட்டங்களுக்குள் செல்வதற்கான வழியிலுள்ள முக்கியமான தங்குமிடம் ஊத்துமலன்காடும் கோட்டையுமாகும். இது திருநெல்வேலிக்கு வடமேற்கே 35 மைல் தூரத்தில் அமைந்துள்ளது. எளிதான கொள்ளைகளால் செல்வந்தரான (இதுவும் எளிதா? - ந.ச.) இக்கோட்டைப் பாளையக்காரன் படைக்கலன்களுடைய பல கூலிப்படைகளை வைத்திருந்தான்.

**புதுக்குழப்பங்கள்:** மகமது யூசுபு திருநெல்வேலியை அடைந்தவுடனே பெரும்படையுடன் சென்று இவனை எதிர்த்தான். சில நாட்களில் கோட்டை அவன் வசமாயிற்று. அங்குச் சில துருப்புகளை நிறுத்திவைத்தான். சொரந்தா (சொரன்தை) என்றழைக்கப்படுமிடத்தில் தற்காலிகமாக ஐம்பது குதிரை வீரர்கள் காவல்படையையும் சில வேலைக்காரர்களையும் சில கூலிப்படைகளையும் நிறுத்திவைத்தான். அவன் திருநெல்வேலி திரும்பிய அக்கணமே பூலித்தேவர் வடகிரி இவர்களின் கூலிப்பட்டாளக் கூட்டம் சொரந்தையிலிருந்த காவல் படையைத் திடீரெனத் தாக்கிக் கொன்றோ அல்லது குதிரையுடன்

குதிரை வீரரையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டோ சென்றனர். இதையறிந்த மகமதுயூசுபு ஏழு சிப்பாய்ப் படைக் கூட்டத்தை அனுப்பினான். அப்படை அந்தக் காவலைக் கைப்பற்றி அடுத்துள்ள நாடுகளைக் காப்பாற்றுவதற்காக அங்கேயே தங்கியது. திருநெல்வேலிக்குத் தெற்கேயுள்ள மாவட்டங்களிலும் இதே போன்ற குழப்பங்கள் ஏற்பட்டன. மலையவர் அல்லது திருவாங்கூர் அரசனின் துருப்புகள் களக்காட்டிலிருந்து கன்னியாகுமரி வரையுள்ள மலையடி வாரங்களில் அறுவடையான தானியங்களைச் சூறையாடிக் கொண்டிருந்தன. ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் ஏற்பட்ட பலவிதமான குழப்பங்களையும் ஒரே சமயத்தில் இரண்டு மாவட்டங்களிலுமுள்ள எல்லா வரிவசூலும் சேர்ந்து உருவாக்கப்பெற்ற பெரிய படை இருந்தாலன்றி எதிர்க்க முடியாது. ஆனால் அந்த அரசன் ஆங்கிலேயரிடம் குறைந்த பகையுடைய எதிரி. ஏனெனில் வடகிரிப் பாளையக்காரர் வடகரைக்குத் தெற்கே பல மைல்களுக்கிடையேயுள்ள செங்கோட்டைக் கணவாய் வழியாக மலைகளுக்கு மறுபுறுத்திலுள்ள அவனுடைய நாடுகளை அடிக்கடி கூலிப்படைகள் மூலம் கொள்ளையடித்து அவனது சீற்றத்தைத் தூண்டி விட்டுக் கொண்டிருந்தனர். இந்தப் பொதுப் பகை காரணமாக மகமது யூசுபு அந்த அரசனுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள முயற்சித்தான். அரசனும் ஏற்றுக் கொண்டு, அவனுடைய நாட்டின் முனைக்கருகேயுள்ள எல்லையில் ஆலோசனை செய்ய உடன்பட்டான். ஆகஸ்ட் இறுதியில் அவர்கள் சந்தித்தார்கள். முதல் உரையாடல் மிக்க மரியாதையும் போலி அன்பும் நிறைந்ததாயிருந்தது. அரசன் வெளிப்படையாக எதையும் கேட்கவில்லை. வடகிரி பூலித்தேவருக்கு எதிராக மகமது படையுடன் கூடப் போதுமான படை தந்து உதவவும் திருநெல்வேலி மாவட்டத்திற்கும் அவன் நாட்டினூடே அவர்கள் செல்லவொட்டாமல் தடுக்கவும் உடன்பட்டான். செப்டம்பர் 3 ஆம் தேதி மகமது யூசுபு திருவாங்கூர் எல்லையிலேயே இருந்தான். அவனுடன் அவர்கள் நாட்டிலேயே செய்யப்பட்ட கனமானத் துப்பாக்கிகளுடன் ஐரோப்பிய முறையில் திருத்தமற்றப் பயிற்சி பெற்ற அரசனுடைய 100 சிப்பாய்கள் வந்து சேர்ந்து கொண்டனர். ஆனால் அவர்களுக்குப் போதுமான வெடிமருந்து முதலியவை இருந்தன. அவன் பிறகு திருநெல்வேலிக்குத் திரும்பினான். அங்கிருந்து எல்லாப் படையுடன் அரசனிடம் கூறியதுபோல பூலித்தேவரின் இருப்பிடமாகிய நெல்லித்தங்கவில்லிக்கு (நெற்கட்டுஞ்செவ்வல் - ந.ச.) அப்பால் இருபது மைல் தூரத்தில் உள்ள வடகரையை நோக்கி நேரே சென்றான். அவன் செங்கோட்டையை நெருங்கும்போது கணவாயின் வழியாகப்



பலவிதமானப் படைகளும் சுமார் 10,000 அடங்கிய அரசனுடைய பெரும்படையொன்றும் அவனுடன் சேர்ந்து கொண்டது. இது ஒருவேளை நூற்றுக்கணக்கான ஆண்டுகளாய்த் தயாரிக்கப்பட்ட மிகப் பெரிய படையாய் இருக்கலாம். வடகரை தன் காட்டைக் காக்க ஒரு நாள் போர் செய்தான். அதில் இருபக்கங்களிலும் ஏறக்குறைய 100 ஆட்கள் கொல்லப்பட்டனர்; காயமடைந்தனர். ஆனால் அவன் இரவில் கோட்டையை விட்டு விட்டுத் தப்பி நெல்லித்தங்கவில்லியிலுள்ள பூலித்தேவரிடம் ஓடிவிட்டான்.

முதல் தடவையாக அவ்வளவு துன்பத்திற்காளாக்கப்பட்ட அத்தகைய ஒரு விருந்தாளியின் வரவு பூலித்தேவரை அச்சமடையச் செய்தது. அவ்வச்சப் புயலைத் தன்னிடமிருந்து திசை திருப்ப அவன் தந்திரம் வேலை செய்யத் தொடங்கியது. செப்டம்பர் 30 ஆம் தேதி வந்தவாசியிலுள்ள கோட்டைத் தாக்குதலில் ஆங்கிலத் துருப்புகளின் எதிர்ப்பைப் பற்றிய குறிப்பு நாடெங்கும் அறிந்த செய்தியாகும். அது பிரஞ்சுக்காரர் எடுத்துக் காட்டுவதுபோல் படுதோல்வி என்று நம்பப்பட்டு வந்தது. மக்புசுகான் பஸ்ஸாலட் ஜங் பாண்டிச்சேரி அரசு முதலியவர்களிடமிருந்து அடிக்கடி கடிதங்கள் பெற்றுக் கொண்டிருந்தான். பிரெஞ்சுக்காரர் விரைவிலேயே ஆங்கிலேயரிடமிருந்து கர்நாடகத்தைக் கைப்பற்றிவிடுவார்களென்றும் நவாபு பதவியிலிருந்து அவனுடைய உடன்பிறந்தானாகிய மகமதலி நீக்கப்பட்டு அந்த இடத்திற்கு அவனையே நியமிக்கப் போவதாகவும் அக்கடிதங்கள் உணர்த்தி, அவனை மேன்மேலும் ஊக்குவித்தன. இக்கடிதப் போக்குவரத்தையும் எதிர்ப்பார்ப்புகளையும் பற்றிப் பூலித்தேவர் திருவாங்கூர் அரசனுக்குத் தெரிவித்தார். அன்றியும் ஆங்கிலேயரை அவன் விட்டுவிட்டு அவர்களுக்குப் பகையாக மக்புசுகானுடன் சேர்ந்து கொண்டால் தனக்குட்பட்ட திருநெல்வேலி நாட்டிலுள்ள எந்த மாவட்டங்களை வேண்டுமானாலும் வாய்ப்புகளுக்கேற்றபடி கொடுப்பதாகவும் எழுதியிருந்தான். திருவாங்கூர் அரசன் உடனே இந்தப் பத்திரங்களை முகம்மது யூசுபிடம் காண்பித்துத் தன் நோக்கப்படி இதுவரை நவாபின் ஆட்சியால் வெறுப்படைந்திருப்பதால் களக்காட்டையும் அதை அடுத்த மாவட்டங்களையும் தன்னிடம் ஒப்புடைக்கும்படிக் கட்டாயப்படுத்தி னான். அதற்காகவே அதுவரை அவன் நவாபு அரசிடம் மனநிறைவு பெற்றிருந்தான். மேலும் அவர் உரிமை பாராட்டும் அதிகமான இடங்கள் அவன் உதவியினால் பிடிக்கப்பட்டிருக்கிறதென்றும் அவனுக்கு ஒருவனால் மறுக்கப்பட்டது உடனடியாக விருப்போடு இன்னொருவனால் கொடுக்கப்படுமென்றும் கூறினான். அதுவும்

அவன் பாளையக்காரருடன் சேர்ந்துகொண்டால், திருநெல்வேலி நாட்டில் நவாபின் ஆட்சியை ஒருக்காலும் நிலைநிறுத்த முடியாதென்றும் தெரிவித்தான். இந்தத் தடுமாற்றத்தில் சிக்குண்டிருந்தபோது, மகமது யூசுபுக்கு அவன் வேண்டுகோளின்படி சென்னையிலிருந்து அனுப்பப்பட்ட 500 இரண்டு பதினெட்டு பவுண்டு எடையுள்ள குண்டுகளுடைய துப்பாக்கிகள் வரும்வழியில் கடலில் மூழ்கிவிட்டது என்ற செய்தி தெரிவிக்கப்பட்டது. இரண்டு ஆறு பவுண்டு எடை குண்டுகளுடைய துப்பாக்கிகள் கரையை அடைந்தன. எனினும் தூத்துக்குடியில் டச்சுப் பிரதிநிதிகளால் அவை தடுக்கப்பட்டுவிட்டன என்றும் அறிவிக்கப்பட்டது. இந்த எதிர்பாராத செய்தி அரசனின் எதிர்வாதத்திற்குச் சாதகமாயிருந்ததன்றி அவன் உதவியின் சிறப்பையும் உணர்த்துவதாயிருந்தது. ஏனெனில், அந்த நாட்டிலுள்ள மிகச் சிறந்த கூலிப்படைகளும் ஒன்றாகத் திரண்டு துணை செய்யத் தக்க ஆள்வலியுடைய பூலித்தேவரை அடக்க மகம்மது யூசுபுனுடைய படை மட்டுமே போதுமானதல்ல. எனவே அவன் அரசன் கேட்ட நாடுகளை அவனுக்குக் கொடுத்துவிட்டான். அதைச் சென்னைத் தலைவனும் ஏற்றுக் கொண்டான். ஆனால் நவாபோவெனில் யூசுபு முதலில் அரசனைச் சந்தித்தபோதே பின்னால் தனது சொந்தப் பேராசை எண்ணங்களுக்கு எதிர் காலத்தில் அவனுடைய உதவியைப் பெற வேண்டுமென்று விரும்பி முன்னமேயே அந்த நாடுகளைத் தருவதாக வாக்குறுதி கொடுத்திருக்க வேண்டுமென ஐயப்பட்டார்.

இந்த உடன்படிக்கை ஏற்பட்டதும் மறுபடியும் திருவாங்கூர்க்காரர் படை அவனுடைய துருப்புகளுடன் சேர்ந்து கொண்டன. நவம்பர் 16 ஆம் தேதி அவர்கள் பூலித்தேவரைச் சார்ந்தவர்களுள் ஒருவரான எசல் தேவரின் (ஈஸ்வர் தேவர் என்ற பெயராயிருக்கலாம் - கால்டுவெல்லுக்கும் பெயர்களின் உண்மை வடிவத்தைக் காண்பதில் இருந்த ஆர்வம் காண்க - ந.ச.) கோட்டையையும் காட்டையும் முற்றுகையிட்டனர். கூலிப்படைகள் காட்டை மூன்று நாட்கள் காத்துச் சண்டையிட்டனர். பின்னர் இரண்டையும் விட்டுவிட்டு நெல்லித் தங்கவில்லிக்குத் (நெல்கட்டுஞ் செவ்வலுக்கு) திரும்பிவிட்டனர். இவ்வெற்றிக்குப் பின் வெடிமருந்து முதலியவை இல்லாமல் திண்டாடினர். மகமது யூசுப் மதுரை பாளையங்கோட்டை அன்ஜன்கோ முதலிய இடங்களிலிருந்து வெடிமருந்து சரக்குகள் வரும்வரை அங்கேயே தங்கும்படி நேரிட்டது. பழக்க வழக்க மாறுபாடுகளினால் மனவேற்றுமை ஏற்படாதிருக்கத் திருவாங்கூர்ப் படைகள் தனியாகப் பாடியிறங்கியிருந்தனர். என்றாலும் மகமது யூசுப் கண் பார்வையிலேயே



அது அமைந்திருந்தது. நவம்பர் 20 ஆம் தேதி ஐந்து அல்லது ஆறு ஆயிரம் கூலிப் படைகள் பட்டப் பகலில் திருவாங்கூர் படையின் பாசறையைத் தாக்கின. மகமது யூசுபு முதலில் இதை அறிந்த உடனேயே அவனுடைய குதிரைப் படையை அனுப்பிவிட்டு மற்ற சிப்பாய்களுடனும் காலாட்படையுடனும் அவர்களைப் பின் தொடர்ந்தான். மகமது யூசுபுகான் செல்வதற்குள் கூலிப்படைகள் திரும்பிவிட்டன. கூலிப்படைகளுக்குண்டான சுறுசுறுப்பும், நாட்டின் பருக்கைக் கற்களும் சேர்ந்து அவர்களைத் தொடர்ந்து விரட்டிச் செல்வதைப் பயனற்றதாக்கிவிட்டன. கூலிப்படைகள் செல்வதற்கு முன் நூறு திருவாங்கூரர்களைக் கொன்றுக் காயப்படுத்தினர். இச்சிறு சண்டைக்கு ஒன்றிரண்டு நாட்கள் கழித்து, சிறிது மருந்துடன் மூன்று பீரங்கிகளும் குண்டு மருந்துகளும் அன்ஜன்கோவிலிருந்து மகமது யூசுபுக்குக் கிடைத்தன. அதேபோல் இரண்டு ஆறு பவுண்டு குண்டுகளுடைய துப்பாக்கிகள் குண்டு மருந்துகளுடன் வந்து சேர்ந்தன. பிறகு அவன் தன் படையுடன் புறப்பட்டான். டிசம்பர் 4 ஆம் தேதி பூலித்தேவரைச் சேர்ந்த வாஷின் எல்லூரை (வாசுதேவ நல்லூரை) நோக்கிச் சென்றனர். இது நெல்லித் தங்கவில்லி (நெற்கட்டுஞ் செவ்வல்) கோட்டை தவிர அவன் கோட்டைகளுள் மிக்க வலிமை வாய்ந்த கோட்டையாகும். இது நெல்லித் தங்கவில்லியிருந்து வடமேற்காக 20 மைலிலும் அதே திசையில் ஊத்துமலையிலிருந்து பன்னிரண்டு மைலிலும் அமைந்துள்ளது.

### யூசுபுக்கு வந்த கட்டளை

'வாசுதேவ நல்லூர் பெரிய தொடர்ச்சி மலைகளிலிருந்து மூன்று மைலுக்குள் அமைந்திருந்தது. அதன் அடிவாரத்தில் அடர்த்தியான காடு ஒன்று இருந்தது. சமவெளியில் இரண்டு மைல் பரவி, கோட்டையின் மேற்கு தெற்குப் பாகங்களிலிருந்து 3900 அடி தூரம் வரை இக்காடு நிரம்பியிருந்தது. இதற்கு மாறாக வடக்கு கிழக்குப் பாகத்திலுள்ள செய்மை இடங்கள் யாவும் செழிப்பான வயல் நிலங்களால் சூழப்பட்டிருந்தன. சில ஆயிரக் கணக்கான மக்களின் இருப்பிடமாகிய மிகப் பரந்த பேட்டை நாற்பது மூவடிக்குள் ஆரம்பித்து சுவர்களின் வடகிழக்குப் பாகம் வரை 3600 அடி விரிந்திருந்தது. பல அடர்ந்த முள்வேலி அரண் பேட்டையையும் கோட்டையையும் சூழ்ந்திருந்தது. கோட்டையின் நீளம் 1950 அடி, அகலம் 900 அடி. அது மண்ணால் கட்டப்பட்டிருந்த போதிலும் செங்கல் கோட்டையைப் போல் உறுதி வாய்ந்ததாயிருந்தது. அதில் நான்கு பெரிய சதுரக் கோட்டைகள் ஒவ்வொரு கோணத்திலும் இருந்தன. அநேக சிறிய கோட்டைகள்

அவற்றைச் சுற்றி இடையிடையே அமைந்திருந்தன. ஒவ்வொரு கோட்டையும் தனிக் காவற் கோட்டையாகும். அதைச் சுற்றிலும் கைப்பிடிச்சுவர் கோட்டைக்கு உள்ளேயும் வெளியேயும் ஏவலிடத்தக்க விதமாய் அமைக்கப்பட்டிருந்தது. கோபுரத்திற்கு ஏற வழி இரண்டு அடி அகலமுள்ள செங்குத்தான மேற்சரிவுச் சுவராகும். அதற்கு நுழைவாயில் கைப்பிடிச் சுவரிலுள்ள ஒரு ஒடுக்கமான திட்டிவாசல் ஆகும். கோபுரங்களுக்கு இடையேயுள்ள மறைப்புக்குக் கைப்பிடிச் சுவரில்லை. ஆனால் உயரத்தில் 15 அடி நீளமும் மூன்று அடி அகலமும் உள்ள அடித்தளத்திலிருந்த இரு புறங்களிலும் சரிந்திருந்த சுவர் மட்டுமே இருந்தது. உள்புறமுள்ள சரிவு வெளிப்புறச் சரிவைவிடக் குறைவான சருக்கமுடையது. ஆகையால் கோட்டை தாக்கப்பட்டபோது அதைக் காப்பவர்கள் எளிதாக உச்சியை அடைய இயலும். கோட்டையின் கைப்பிடிச்சுவரில் உச்சிக்குச் செல்லத்தக்க வட்டமான துளைகள் இருந்தன. கோட்டையின் கைப்பிடிச்சுவரிலுள்ள வட்டத்துளைகள் சிறிய படைகளினுடைய தேவைக்குப் பயன்படக்கூடியன. ஆனால் துப்பாக்கிக்குத் திறப்புகள் வைக்கப்படவில்லை. அதனால் கோட்டையில் தனித் துப்பாக்கிகூடக் கிடையாது. (பார்க்க: 1767 இல் கர்னல் டொனால்ட் காம்பெல் இக்கோட்டையைப் பிடித்த குறிப்பு, இவ்விவரம் வாசுதேவ நல்லூருக்குத்தான் பொருந்தும். ஏனெனில் மதுரை திருநெல்வேலி நாடுகளிலுள்ள மற்ற கோட்டைகளில் உச்சிக்கோட்டைகளும் வெளிப்புறச் சரிவில் ஒளிவு (இரகசிய) வழிகளும் இருக்கும். மதுரை பாளையங்கோட்டையைத் தவிர மற்றெல்லாக் கோட்டைகளும் மண்ணால் கட்டப்பட்டவை. வாசுதேவநல்லூர் கோட்டைச் சிறப்பும், அதை எதிர்த்த பெரிய படையும் சேர்ந்து அக்கோட்டையைக் காக்க சில ஆயிரம் கூலிக்காரர்களை வரவழைத்தது. ஆனால் 8 அல்லது 9 நூறு தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்களைத் தவிர மற்றெல்லோரும் சுவர்களைக் காக்கக் காடுகளில் நிறுத்தப்பட்டனர். அங்கிருந்து ஒவ்வொரு பகலும் இரவும் இருதரப்பினரும் பாய்ந்து விழுந்தனர்; போரிட்டனர். யாரையோ ஒருவரைத் தாக்கிக் கொண்டேயிருந்தனர். சில வேளைகளில் இரண்டு பாசறைகளையும் தாக்கினர். பெரிய படைகள் வெவ்வேறு மூன்று நாட்கள் கொத்தளங்கள் மீது தாக்கின. இந்தத் தொடர்ந்த இடையீட்டால் 26 ஆம் தேதி வரை முடிக்க இயலாது - அதாவது படை வந்து சேர்ந்த 20 நாட்கள் வரைப் பெரும்படை பின் வாங்க வேண்டியதாயிற்று. ஆனால் பீரங்கிப் படை தங்கள் வேலைகளைத் தொடங்கின. மகம்மது யூசுபு மதுரையிலிருந்து கொண்டுவந்த 18 பவுண்டு எடைக் குண்டுள்ள பீரங்கி ஒன்றுதான் மிக்க உறுதி வாய்ந்தது. மற்றவை ஆறு பவுண்டு



எடை குண்டுள்ளவைகளும் இன்னும் அதற்குக் குறைவான எடை குண்டுள்ள பீரங்கிகளுமே. ஆனால் அதிகப்படியான பீரங்கித் தாக்குதலால் 18 பவுண்டு எடை குண்டுள்ள பீரங்கியை மாட்டின மறுநாளே அதை வெடித்துத் தீர்த்து விட்டனர். அதற்குள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளத் தேவையான சிறிது மருந்துகளை மட்டும் உள்ளுணர்வால் மீத்துவைத்துக் கொண்டு எஞ்சிய எல்லாவற்றையும் வெடித்து விட்டனர். எனினும் கோட்டையின் கைவாரச் சுவரின் ஒரு பகுதி சுடப்பட்டதால் வீழ்ந்தது. மகமது யூசுபு மறுநாள் முற்றுகையிடத் தீர்மானித்தான். போர்க்களத்தில் இரு பக்கத்தினரும் காத்திருந்தனர். அப்போர் தொடங்கிய உடனே நெல்லித் தங்கவில்லியிலிருந்து (நெற்கட்டுஞ்செவ்வலிலிருந்து) இரவோடு இரவாய்ப் பூலித்தேவர் தலைமையில் புறப்பட்டு வந்த 3000 தேர்ந்த கூலிப்படைகள் காட்டிலிருந்து வெளிப்பட்டு மகமதுயூசுபுனுடைய பாசறையைத் தாக்கி அதைக் காத்து நின்றபடையினரை விரட்டிவிட்டு அதற்கு எல்லாவிதமான அழிவையும் விளைவிக்கத் தொடங்கிற்று. மகமது யூசுபு ஒரு பெரிய படையை அனுப்பி அவர்களை எதிர்க்கச் செய்து விட்டுத் தன் முற்றுகையைத் தொடர்ந்து நடத்தினான். வழக்கமான வீரர் கூச்சலிலிருந்தும், சங்கு ஒலியிலிருந்தும் அறிவிக்கப்பட்ட பூலித்தேவரின் வெற்றியிலிருந்து கோட்டைக்கு உள்ளிருந்த படையினர் இரட்டிப்பு அளவு உற்சாகமடைந்தனர். அதேபோல் காட்டில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த கூலிப்படை அவ்வளவும் ஏதோ அழைப்புப் பெற்றதுபோல் தோன்றும் வெவ்வேறு கூட்டங்களாக விரிந்த கோட்டைக்கருகிலிருந்த பீரங்கிப்படையிடமும் வெடிப்புகளுக்கருகேயும் இருந்த துருப்புகளையும் தாக்கின. தொடர்ந்து விரட்டப்பட்டதெனினும் தொடர்ந்து எதிர்த்துப் போராடி காவல் படையினர் உறுதியுடன் மாலைவரை கோட்டையைக் காப்பாற்றினர். பின்னர் இரவில் புதுத்தாக்குதல் ஆரம்பிக்கும் போது அதை எதிர்ப்பதற்காகக் காடுகளில் காத்திருந்தனர். ஆனால் சேமித்து வைத்திருந்த மருந்தில் பெரும்பாகம் பகல் பொழுதிலேயே செலவாகிவிட்டதால் கோட்டையின் எதிரே இனியும் தங்கியிருந்தால் ஆபத்தானது என்பதை உணர்ந்த மகமது யூசுபு தன் படையைப் பின்வாங்கச் செய்தான். அவனுடைய துருப்புகளிலும் திருவாங்கூரார்களிலும் இரு நூறு பேர் கொல்லப்பட்டனர். எதிரிகள் பக்கத்தில் இன்னும் அதிக இழப்பு ஏற்பட்டது. மறுநாள் அவன் சிறிது தூரம் தன் படையை நடத்திச் சென்று திருவாங்கூர்காரர்களை அனுப்பிவிட்டான். அவர்கள் செங்கோட்டை கணவாய் வழியாகத் தங்கள் நாட்டிற்குச் சென்றனர். மகமது யூசுபு தனது சொந்த

படையுடனும் தொண்டைமானால் அனுப்பப்பட்டவர்கள், மறவர்கள் ஆகியவர்கள் சூழ திருநெல்வேலி நகரத்திற்குத் திரும்பினான்.

1760 ஆம் ஆண்டில் திருநெல்வேலி நாட்டில் குறிப்பிடத்தக்க முக்கிய நிகழ்ச்சிகள் எதுவும் நடைபெறவில்லை. படைத்தலைவன் மகமது யூசுபு கடந்த ஆண்டின் இறுதியில் வாசுதேவ நல்லூரில் ஏற்பட்ட தோல்விக்குப் பின் துப்பாக்கி வெடிமருந்து தேவையால் பாளையக்காரர்களின் வலிமை வாய்ந்த இருப்பிடங்களைத் தாக்கத் தக்க நிலையில் இல்லை. எனவே மருந்து அனுப்பப்படும்வரை அவனுடைய படையின் பெரும்பகுதியைப் பூலித்தேவரையும் மேற்குப் பாளையக்காரர்களையும் அடக்க நிறுத்தியதோடு மனநிறைவு அடைந்தான். எனினும் திருநெல்வேலியில் எஞ்சிய படையுடன் தங்கிக் கட்டபொம்ம நாயக்கன் கிழக்குப் பாளையக்காரர்கள் முதலியவர்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தான். ஜனவரி மாதத்தில் நெல்லித்தங்கவில்லியிலிருந்து (நெற்கட்டுஞ் செவ்வலிலிருந்து) மகமது யூசுபு புறப்பட்டது நவாபின் அதிகாரத்தை எதிர்த்து அவனுடைய மூத்த உடன்பிறந்தானின் உரிமையை ஆதரித்துப் பூலித்தேவரும் அவன் படையினரும் செய்த போலிச் செயலைத் தொடர வேண்டிய தேவையில்லாது போயிற்று. மகமது யூசுபோடு உடன்படிக்கைச் செய்து கொள்வதா அல்லது நவாபால் அவன் உடன் படிக்கைப்படி தக்க அமைதியான முறையில் (சுமுகமாக) வரவேற்கப்படாவிட்டால் அவர்கள் எதிர்பார்த்தபடி அவர்களுடன் சேர்ந்து கொள்ள மக்புசுகான் பயணத்திலிருந்து திரும்பிவரும்வரைக் காத்திருப்பதா என்று அவர்களுக்குள் விவாதித்தனர். இந்த உறுதியில்லா எண்ணங்களால் அவர்கள் விரைவான சிந்தனைகளைச் செய்யாது மகமது யூசுபுனுடைய இருப்பிடங்களிலிருந்து எவ்வளவுப் போக்குக் காட்டித் தப்பிக்க முடியுமோ அவ்வளவு தப்பித்துக் கொண்டு, பகலில் வெளிப்படையாக ஒரு முயற்சியும் செய்யாது இரவில் தங்கள் கூலிப்பட்டாளங்களைக் கொண்டு கொள்ளையடித்து வந்தனர். இக்கொள்ளைகள் விளை நிலங்களுக்கு மிக்க அழிவை ஏற்படுத்தின. அதனால் மகமது யூசுபு அவர்களைச் சார்ந்தவர்களில் சிலரை மட்டும் தேர்ந்தெடுத்துக் கம்பெனி வேலைக்குச் சிறந்த உழைப்பாளிகளாக ஏற்றுக் கொள்வது தகுதியுடையது என எண்ணினான். ஏப்பிரல் இறுதியில் இந்தப் பல சிறு சிறு தலைவர்கள் தங்களைச் சேர்ந்தவர்களுடன் மொத்தத்தில் 2000 எண்ணிக்கையுள்ள கூலிப்படைகள் திருநெல்வேலியில் அவனுடன் சேர்ந்து கொண்டு அவர்கள் எதற்காக நியமிக்கப்பட்டார்களோ அந்தக் கடமைகளை உண்மையுடன் செய்வதில் ஈடுபட்டார்கள். மே இறுதி வரை எந்தவிதமான ஒழுங்கான போரும் நடைபெறவில்லை.



நெல்லித்தங்கவில்லிக்கு (நெற்கட்டுஞ்செவ்வலுக்கு) அருகேயுள்ள எல்லையிலிருந்து சிறிது அழிவுடன் சிதறடிக்கப்பட்ட ஏழு கம்பெனிச் சிப்பாய்ப் படைகளைத் தாக்க கட்டபொம்ம நாயக்கன் இரண்டு அல்லது மூன்று ஆயிரம் வீரர்கள் தலைமையில் எட்டயபுரத்தருகில் தோன்றினான். மே மாதத்தில் மகமது யூசுபுக்குத் திண்டுக்கல்லிருந்து மைசூர்காரர்களால் ஏற்பட்ட எதிர்ப்பைப் பற்றிய செய்தியும், அதை எதிர்க்க அவனுக்குக் கட்டளையும் மாநிலத் தலைவரிடமிருந்து வந்தது. அதற்காக நாம் மேலே குறிப்பிட்ட 1500 சிப்பாய்களடங்கிய படையையும் 30 குதிரைகளையும் 3000 வேலையாட்களையும் அனுப்பி வைத்தான்.

## டச்சுக்காரர்களின் படையெடுப்பு

அவர்கள் புறப்பட்டுச் சென்றதும் திருநெல்வேலி நாட்டில் எதிர்பாராத புதுக்குழப்பம் ஒன்று ஏற்பட்டது. இலங்கைத் தீவிலிருந்த டச்சு அதிகாரிகள் படாவியாவிலிருந்து பெரிய ஐரோப்பியப் படைகளை வரவேற்றனர். அவை கன்னியாகுமரிக்கு எதிரில் கொழும்பு துறைமுகத்தில் கூடியிருந்தன. அங்கிருந்து அவர்களுள் ஒரு பிரிவினர் ஜூன் தொடக்கத்தில் தூத்துக்குடியில் வந்து இறங்கினர். இது திருநெல்வேலிக்குக் கிழக்கே உள்நாட்டில் 40 மைல் தூரத்தில் அமைந்துள்ள ஒரு டச்சுக்கோட்டையாகும். இருநூறு ஐரோப்பியர்கள் பீரங்கித் துப்பாக்கித் தளவாடங்களுடன் கூடாரமடித்துக் கொண்டு தங்கினர். அவர்கள் படாவியாவிலிருந்து புறப்பட்ட அதே சமயத்தில் அவர்களுடன் கூட 400 ஐரோப்பியத் துணைப் படை புறப்பட்டுத் திருவாங்கூர் அரசனிடம் போய்ச் சேருவதற்காக மலபார் கடற்கரையிலுள்ள கொச்சிக்குச் சென்றிருப்பதாகவும் அறிவித்தனர். உள்நாட்டவர், இதனால் அதிர்ச்சியடைந்தனர். அன்றியும் திருநெல்வேலி நாட்டிலுள்ள ஆங்கிலேயரைத் துரத்துவதில் பாளையக்காரர்களுக்கு உதவி புரியவே இப்படை வந்திருக்கிறதென்றும் நகரத்தைத் தாக்கிப் போர் ஆரம்பமாகுமென்றும், பாவனை செய்தனர். மகமது யூசுப் உடனே தூத்துக்குடியிலுள்ள டச்சுத் தலைவனிடம் விவரம் கேட்டுக் கட்டளை அனுப்பினான். ஆனால், டச்சுத் தலைவன் எதுவும் கூற மறுத்துவிட்டான். சில நாட்களுக்குப் பின் துருப்புகள் உள்நாட்டில் முன்னேறிய பின் திருநெல்வேலிக்குத் தெனகிழக்கில் 20 மைல் தூரத்திலும், தூத்துக்குடிக்குத் தென்மேற்கில் அதே தூரத்திலுள்ள மிக்க செழுமையான மாவட்டமாகிய ஆழ்வார் திருநெல்வேலி (ஆழ்வார் திருநகரி)யில் தங்கினர். அதே சமயத்தில் 200 ஐரோப்பியர் அடங்கிய மற்றொரு படை கொழும்பிலிருந்து வந்து

ஆழ்வார் திருநெல்வேலிக்குத் தென்கிழக்கே 20 மைல் தூரத்திலுள்ள மணப்பாறையில் இறங்கின. கிழக்கு ஊர்களிலிருந்து மகமது யூசுபு முன்னமேயே துருப்புகளை வரவழைத்துவிட்டான். அவன் 4000 சிப்பாய்களுடனும் சில குதிரைவீரருடனும் ஆழ்வார் திருநெல்வேலியிலுள்ள டச்சுத் துருப்புகள் கண்ணுக்குத் தெரியுமிடத்திற்கு ஜூன் 18 ஆம் தேதி மாலை போய்ச் சேர்ந்தான். அன்று மாலையே டச்சுக்காரர் சிறிதும் ஆரவாரமின்றித் தூத்துக்குடிக்குத் திரும்பி விட்டனர். மணப்பாறையிலுள்ளவர்களும் அவர்கள் வந்த கப்பலிலேயே திரும்பிச் சென்றுவிட்டனர். பின்னர் இக்குழப்பத்தைப் பற்றி நாம் எதுவும் கேள்விப்படவில்லை.

**யூசுபுகானுடைய திட்டங்கள் புதுப்பிக்கப்பட்டன**

'பாளையக்காரர்களின் கொள்ளைகள் தொடர்ந்து நடந்தன. ஆனால் மக்புசுகானால் மறுக்கப்பட்டுப் புதுச்சேரி எவ்வாறு கொடுமையாக முற்றுகையிடப்பட்டதென்பதை அறிந்த பின் பாளையக்காரர் துணிகரமானக் கொள்ளைகளில் ஈடுபடவில்லை. வழக்கம்போல் பூலித்தேவரின் கூலிப்படைகள் கொள்ளையடிப்பதில் மிகச் சுறுசுறுப்பாக இருந்தன. அவர்களை அடக்க மகமது யூசுப் அவனுடைய படையின் பெரும்பகுதியை நெற்கட்டுஞ்செவ்வலில் மறுபடியும் நிறுத்திவைத்தான். அப்படை டிசம்பரில் இங்கிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள மலையடிவாரத்தில் கூடாரமடித்தது. மகமது யூசுபு திருநெல்வேலியிலிருந்து 12 ஆம் தேதி வந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டான். அவன் தூத்துக்குடியில் அநேக 18 பவுண்டு எடைக் குண்டுகளையுடைய பீரங்கிகளை வாங்கி வந்தான். அன்றியும் சென்ற ஆண்டில் அஞ்ஜன்கோவிலிருந்து வந்த இரண்டு சட்டிப் பீரங்கிகளையும் கொண்டு வந்தான். ஆனால் இவைகளுக்கான வெடிமருந்தோ வெடிகுண்டுகளோ இல்லை. அன்றியும் துப்பாக்கி மருந்து வெடிகுண்டுகள் இவைகளைத் திருச்சியிலிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அவைகளுக்காகக் காத்திருந்தபோது அவன் நெற்கட்டுஞ்செவ்வலைத் தாக்க அந்நாட்டில் உண்டான வசதிகளைக் கொண்டு தயார் செய்து கொண்டிருந்தான். அந்த மாதம் 20 ஆம் தேதி பூலித்தேவரின் தலைமையில் கூலிப்பட்டாளம் வழக்கம்போல் மகமது யூசுப்பின் படை இருப்பிடங்கள் எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் 100 கூலிப்படை ஆட்கள் இறக்கும்வரை தாக்கினர். ஆனால் மகமது யூசுபின் 10 ஆட்களைக் கொலை செய்து 50 பேர்களையும் சில குதிரைகளையும் காயப்படுத்தினர்.

தீவினையாக, ஓர்மின் வரலாறு இங்குத் தடைப்பட்டு விட்டது.



திருநெல்வேலி டிரஷரி (Treasury) அலுவலகத்திலும் அரசாங்கக் காரியாலயங்களிலுமுள்ள ஆவணங்களிலிருந்து என்னுடைய பரிசோதனையின்மேல் சேகரிக்கப்பட்ட செய்திகளையே இக்காலத்திற்குப் பிறகு நடந்த சம்பவங்களுக்கான ஆதாரமாக நான் கொள்ள வேண்டியிருந்தது.

**திருநெல்வேலியில் நவாபின் வரிவசூல் நிருவாகம்**

1744 இல் நைசாமல் அன்வருதீன்கான் நியமிக்கப்பட்ட போது, கர்நாடக மாவட்டங்களைப் போலவே திருநெல்வேலியிலும் கர்நாடக நவாபின் ஆட்சி தொடங்கியதென ஏற்கனவே கண்டோம். அன்வருதீனால் நியமிக்கப்பட்ட அலுவலர்களின் வசம் தெற்கேயுள்ள அநேக மாவட்டங்கள் இருந்தன. அன்வார்கான் பஸ்டார், திருநெல்வேலி அமீத் இவர்களை நியமித்ததிலிருந்து திருநெல்வேலி வரிவசூலாட்சி கணக்கு ஆரம்பித்தது. 1802 மே 28 ஆம் தேதி கர்நாடகம் கம்பெனியார்வசம் மாற்றப்பட்ட சமயத்தில் திருநெல்வேலி கலெக்டராயிருந்த லூஷிங்டன் மேற்படி தேதியில் வரிவசூல் இலாகாவிற்கு எழுதிய கடிதத்தை இங்கு எடுத்துக் காட்டுகிறேன். இதில் 1744 முதல் 1783 வரை திருநெல்வேலியில் வரிவசூல் நிர்வாகிகளாயிருந்தவர்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அன்வார்கானுக்குப் பின் மிர்குலாம் குசேன்கான், குசேன் முகம்மது கான் ஆகிய இருவரின் கூட்டு ஆட்சி 1749 முதல் 1844 வரை ஆறு ஆண்டுகள் நடைபெற்றன. அவன் ஒவ்வொரு ஆண்டிலும் நடைபெறும் ஜமாபந்தியின் செலவைச் சக்கரங்களில் கொடுத்திருக்கிறான். நான் அவற்றை விட்டுவிட்டேன். அன்வாருதீன் போரில் கொல்லப்பட்டபோது, ஆலம்கான் என்ற ஒரு உள்நாட்டு வரிவசூல் அலுவலர், திருநெல்வேலிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி சந்தாசாகிபால் அனுப்பப்பட்டான். அவனுடைய தலைவரின் பெயரால் அவன் 1750 முதல் 1751 வரை ஆட்சி செய்தான். அவனுக்குப் பின் சிறிது காலத்திற்குத் தீர்த்தாரப்ப முதலியும் சந்தா சாகிப்பின் பிரதிநிதியான முண்டிமையா (மூடிமையா)வும் தொடர்ந்தனர். மூடிமையா திருநெல்வேலிக்கருகே கொல்லப்பட்டான். அவன் மரணத்திற்குப் பின் மக்புசுகானின் மூத்த சகோதரனும், சிறிது காலம் நவாபின் பிரதிநிதியாகவும் இருந்த முகம்மது அலிகானின் அதிகாரம் 1754 - 1755 வரை நாட்டில் ஏற்பட்டது. மக்புசுகான் நவாபிடமிருந்து தன்னிச்சையாகப் பிரிந்து செல்லத் திட்டமிட்டான். இப்பேராசைச் செயலை நுட்ப அறிவுடைய யூசுப்கான் அறிந்து பேராசைத் திட்டங்களை ஒழித்து மகமது அலிகானுடைய ஆட்சியை

நிலைநிறுத்தி மாகாணத்தின் அதிகாரத்தை 1756 ஆம் ஆண்டில் அழகப்ப முதலியிடம் கொடுத்தான். பாளையக்காரர்களின் கொள்ளையடிப்புகளாலும், அழகப்ப முதலி பெற்றிருந்த கல்வியறிவை விட மிக்க திறன் தேவைப்பட்டமையாலும் நாட்டில் ஆங்காங்கே ஏற்பட்ட நிலை காரணமாக, யூசுபுகானே 1757 முதல் 1763 வரை முழு ஆட்சியாளனாக நியமிக்கப்பட்டான்.

யூசுபுகானின் ஆட்சிக் காலத்தில் முதல் மூன்று ஆண்டுகளில் அவன் ஓயாமல் பாளையக்காரருடன் போரிட்டு வெற்றிகளைப் பெறுவதிலேயே முனைந்திருந்தான். கர்நாடகத்தில் ஏற்பட்ட இந்தக் குழப்பமான காலத்தில் கம்பெனிக்கு அவனுடைய படையின் தேவையும், அவனுடைய தனிப்பட்ட சிறந்த இராணுவத் திறமையும் நாட்டின் நடுப் பகுதிகளில் மிகத் தேவைப்பட்டது. ஆகவே அவன் நாட்டில் இல்லாத சமயம் நாடு பாளையக்காரர்களின் கொள்ளைகளுக்கும் அடுத்துள்ள திருவாங்கூர் நாட்டானின் துணைகொண்டு மக்புசுகான் துரோக சூழ்ச்சிகளுக்கும் நிலைக்களனாயிற்று. இச்சமயத்தில், மக்புசுகான் மாநிலத்திலேயே மிகச் செழிப்புள்ள தாலுக்காவாகிய களக்காடு முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டான். யூசுபுகான் மதராஸ் முற்றுகையிலிருந்து திருநெல்வேலிக்குத் திரும்பிவரக் கூடும் என்ற நிலை ஏற்பட்ட போது தன் கூட்டுறவிலிருந்து திருவாங்கூர் அரசனை விலக்கியதுமன்றி அவனுடைய துணைகொண்டு பாளையக்காரர்களையும் தண்டித்தான். வலுவில் பலவந்தமாய்க் கைப்பற்றும் அதிகாரத்தினால் ஏற்படும் தீமைகளை அவன் பணியாற்றிய சூழ்நிலைகளை எண்ணிப் பாராது மனவலிமையாலும், இராணுவத் திறமையாலும் மாநிலம் முழுவதையும் தனக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டான். அவன் காலத்தில் பாளையக்காரர்களிடமிருந்து வரிகள் ஒழுங்காக வசூலிக்கப்பட்டன. தனிச் சொத்துக்கள் அவர்களுடைய கொள்ளைகளினால் பாதிக்கப்படவில்லை. சர்க்கார் நிலங்களின் வரி மிக அதிகமாக உயர்த்தப்பட்டன. 1761லிருந்து 1764 வரை ஏற்பட்ட அவனுடைய ஜமாபந்திகளிலிருந்து அவனுடைய அடக்குமுறையின் பயன் விளக்கமாகிறது.

1764 இல் தளவாய் அழகப்பமுதலி மேற்பார்வை செய்து வந்தான். ராஜா குருமத் ராமனுடைய ஆட்சி 1765-1769 வரை ஏற்பட்டது. ஷெயிக் முகம்மது அலி 1770 இல் ஆட்சி செலுத்தினான். சையத் முகம்மது கானுடைய ஆட்சி 1771 இல் தொடங்கி 1775 வரை நீடித்தது.



குறிப்பிடத்தக்க இரு சம்பவங்கள் இக்காலத்தில் நடைபெற்றன. 1771 இல் திருநெல்வேலி கச்சேரி (ஆவண காரியாலயம்) அதிலுள்ள ஆவணங்களுடன் தரைமட்டமாகும்படி தீ வைக்கப்பட்டது. 1774 இல் வழக்கத்திற்கு மாறாகக் கடும் பஞ்சம் தோன்றியது. 1780இல் கர்நாடகத்தில் ஏற்பட்ட போரால் தூண்டப்பட்ட பாளையக்காரர்கள் தங்கள் ஒப்பந்தங்களை மீறி நிலம் முழுவதும் சூறையாடினர். இதன் பயனாய் சராசரி ஆண்டு வரி எட்டு இலட்சம் சக்கரத்திலிருந்து சராசரி $^1/_2$ இலட்சம் சக்கரம் வரை குறைக்கப்பட்டது. 1783 இல் இர்வின் ஆட்சி அல்லது கம்பெனி ஆட்சியின் போது தொடங்கிய வரிவசூல் திரும்பவும் எட்டு இலட்சத்திற்கு உயர்ந்தது. இதுவரை லூஷிங்டன் அவர்களுடைய கூற்று. நாம் இப்பொழுது யூசுபுகானைப் பற்றியும் அவனது நல்வாய்ப்புகளைப் பற்றியும் கவனிப்போம்.

**மகமது யூசப்கானின் எதிர்ப்பு**

1761 இல் மதுரை பாளையங்கோட்டை கோட்டைகளில் கர்நாடக நவாபின் கொடியாகிய சர்க்கார் கொடி உயர்த்தப்பட்டது என்று அரசாங்கத்திற்குத் தெரிவித்தான் யூசப்கான். மேலும் திருநெல்வேலி மதுரை மாநிலங்களை ஆண்டுக்கு ஏழு இலட்சம் வீதம் நான்கு ஆண்டுக்கு வாடகைக்கு விடுவதாகவும் தெரிவித்திருந்தான். பழைய குத்தகைக்காரர் தீர்த்தாரப்ப முதலி அதிகப் பணம் கொடுப்பதாகத் தெரிவிக்கவே நவாபு அதற்கு உடன்படவில்லை. ஆனால் யூசுபுகானின் உயர்நிலை இராணுவப் புகழ், தலையிட்ட காரியங்களை முடிக்கும் திறமை முதலியவற்றை எண்ணி யூசுபுகானையே அரசாங்கத்தினர் ஆதரித்தனர், என்றாலும் அவர்கள் நவாபுக்கு அவன் எழுதிய கடிதங்கள் பணிவின்றி இருக்கிறது என்று எச்சரிக்கை செய்தனர். மேலும் முத்துக் குளித்தலைப் பற்றியும் அவர்கள் துணி வியாபாரத்தின் பெருக்கம் முதலியவற்றைப் பற்றிய செய்திகளையும் கேட்டிருந்தனர். 1761 ஆம் ஆண்டு இறுதிவரை அரசாங்கத்தினருக்கு அவனுடைய நோக்கங்கள் இரண்டகமானவை என்று ஐயமே ஏற்படவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

நெல்சனுடைய பின்வரும் குறிப்புகள் இக்காலத்திற்கும் பொருத்தமாயிருக்கிறது:

1761 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் புதுச்சேரியை ஆங்கிலேயர்கள் பிடித்தது கலகக்காரப் பாளையக்காரரை அச்சுறுத்தி ஒருவகையான அடக்கத்திற்கும் கொண்டு வந்தது. திருநெல்வேலி நாட்டிலிருந்து மகபுசுகான் சென்று விட்டதும் அவனுடைய உடன்பிறந்தானுடன்

அவன் செய்து கொள்ளப் போகும் சமாதானத்தைப் பற்றி அறிந்த செய்தியும் அவர்களுடைய அடங்காத் தன்மையைப் போக்கிவிட்டது. எனவே, பல ஆண்டுகட்டு முன்பு இருந்ததுபோல் நாட்டிலெங்கும் அமைதி நிலவியது. அதே நிலையே நிலைத்து நிற்குமென்ற எண்ணத்திற்கேற்ற சூழ்நிலைகளும் உருவாயின. கோட்டைக் காவலுக்காகப் பயன்படுத்தப்பட்ட படையைத் தவிர மிகப் பெரிய இராணுவப்படை மகமது யூசுபுவசம் இருந்தது. ஏனெனில் அச்சமயத்தில் மைசூரார்க்கு எதிராகப் போரிட மதுரைக்குப் படையை அனுப்பியபோது அவன் தலைமையில் 4000 சிப்பாய்களும், சில குதிரைப்படைகளும் டச்சுப் போராட்டத்திற்கு எதிராகப் படை எடுத்துச் செல்ல வசதியாயிருந்தது. டச்சுக்காரரைத் தாக்கப் படை நடத்திச் சென்றான். அவனுடைய துருப்புகள் யாவும் பயிற்சி பெற்றவை; சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவை. எந்தப் பாளையக்காரனுக்கும் அல்லது பாளையக்காரர்களின் கூட்டுறவால் ஏற்பட்ட படைக்கும் அக்காலத்தில் மகமது யூசுபினுடைய படைக்கு இருந்ததைப் போன்று அவ்வளவு வாய்ப்புள்ள ஆதரவு இல்லை. மகமது யூசுபு மதுரை நாட்டை மேலும் சிறிது காலம் ஆட்சி செய்தான். அதன் காரணமாய்த் தன்னை மிக்க வலிமையுடையவனாக்கிக் கொண்டதாய்த் தெரிகிறது.

அரசாங்கத்தார் யூசுபுகானுக்கு எவ்வளவு சலுகை அளித்திருந்தபோதிலும் கூட 1762 இல் அவனுடைய எசமான நம்பிக்கையைப் பற்றிய ஐயம் அவர்களுக்கு ஏற்பட்டது என்று தெளிவாய்த் தெரிந்தது. அரசாங்கத்தினர் அவனை உடனே மதராசுக்குப் புறப்பட்டு வரும்படியும் அவனுக்குப் போதுமான பாதுகாப்பு அளிப்பதாகவும் கடிதம் எழுதிக் கொண்டிருந்தனர். ஆனால் அவனோ அற்பமான மன்னிப்புகளை மட்டும் பதிலுக்கு அனுப்பி வந்தான். அது மட்டுமன்றி அரசாங்கத்தாரின் உடன்பாடின்றி அல்லது அவர்களுக்கு அச்செய்தியைத் தெரிவிக்காமலேயே திருவாங்கூர் அரசன் மீது போர் தொடுக்கத்தக்க துணிவும் அவனுக்கு ஏற்பட்டது. ஆகஸ்ட் மாதத்தில் அவன் தன் கடந்தகால நடவடிக்கைகளுக்காக வருந்துவதாயும், எதிர்காலத்தில் கீழ்ப்படிதலுடன் இருப்பதாக வாக்குறுதி கொடுத்தும் மேலும் நான்கு ஆண்டுகட்கு மதுரை திருநெல்வேலி நாடுகளைத் தானே ஆண்டுக்கு 7 இலட்சம் ரூபாய்க்கு வாடகைக்கு எடுத்துக் கொள்வதாயும் தெரிவித்தான். அரசாங்கத்தார் இக்கடிதத்தை வாய்ப்பு தேடிக் கொள்ளத் தேவையான காலத்திற்காக எழுதப்பட்ட ஒரு சூழ்ச்சி என மதித்தனர். எனவே அதற்கு மேல் அந்த மாகாணங்களை அவனுடைய ஆட்சியின்கீழ் விட்டு வைக்க அவர்களுக்கு விருப்பமில்லை என்றும் அவன் உடனே எவ்வித நிபந்தனையுமின்றிச்



சரணடைந்தால் அவனுடைய உயிரும் உடமைகளும், காப்பாற்றப்படு மென்றும் அவனுக்குப் பதிலிறுத்தனர்.

அக்டோபர் மாதத்தில்தான் முதல் தடவையாக அரசாங்கத்தார் அவன் மேல் ஐயப்பட்டனர் என்று தெரிகிறது. சில ஐரோப்பியப் படைகள் அஞ்ஜன்கோவிலிருந்து சென்னைக்குத் தரை வழியாய்ச் செல்ல வேண்டியிருந்தது. ஆனால் அவர்களுக்கு மறு ஆணைகள் வரும்வரை அஞ்ஜன்கோவிலிலேயே இருக்குமாறு கட்டளையிடப் பட்டது. ஏனெனில் யூசுபுகான் அப்படையினரை எப்படியேனும் தவிர்த்து விடுவான் என்ற அச்சமேயாகும். ‘யூசுபுகானுடைய நோக்கங்களைப் பற்றி நாங்கள் தெளிவாய் ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவன் நவாபுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தினின்றும் விலகும் நோக்கம் உடையவனாயிருக்கிறானோ என்று நாங்கள் அஞ்சுகிறோம்’ என்றும் அவர்கள் கூறினர். டிசம்பரில் தஞ்சாவூரிலும் தொண்டைமான் நாட்டிலும் துருப்புகளைத் திரட்டுவதாகத் தெளிவாக உறுதி செய்யப்பட்டபின், பல ராஜாக்களும் மற்றவர்களுக்கும் அவர்களை எச்சரித்து அவனுக்கு எந்த உதவியும் செய்யக் கூடாதெனக் கண்டித்துக் கடிதம் எழுதினர்.

மகமது யூசுபுகான் ஒப்பந்தத்தை மீறினதற்கான காரணங்கள் ஆவணங்களிலும் இல்லை. அவன் நவாபுக்கு எரிச்சலூட்டியதாக நினைத்தார்கள் என்றே தெரிகிறது. இறுதியில் நவாபின் ஆதரவாளராகிய ஆங்கிலேயரையே, திருநெல்வேலி மதுரை நாடுகளைத் தனக்குக் குத்தகைக்கு விடாமையால், எதிர்த்துக் கொண்டான். அவனுடைய முக்கியமான காரணம் அவனுடைய இரு எசமானர்களையும் எதிர்க்கத்தக்க வலிமை பெற்றிருப்பதாக நம்பியதோடு தனக்கு முன்னால் இருந்த மற்ற வெற்றியடைந்த படைத்தலைவர்களைப் போலவே தானும் தனியாய் தன்னிச்சையாய் உரிமை பெற எண்ணியிருக்க வேண்டும். இதைப் போன்று தன்னம்பிக்கையற்றவர்களுக்கு மிகச் சமீப காலத்திய மேற்கோள்கள் சந்தா சாகிபு, ஹைதர் அலி ஆவார்கள். திறனற்ற ஆர்க்காட்டு நவாபையும் அதிலும் மோசமான மைசூர் ராஜாக்கள் போன்ற வர்களையும் சமாளிக்க வேண்டியிருந்தால் அவன் எண்ணப்படி அவன் கொள்கையில் வெற்றிகண்டிருக்க முடியும். ஆனால் அவன் ஆங்கிலேயர்களிடமல்லவா ஈடுகொடுக்க வேண்டும்! நீண்ட காலம் ஆங்கிலேயரிடம் ஊழியம் செய்தும் அவர்களது உண்மையான வலிமையறியாது அவர்களையும் வெற்றி காணலாமென அவன் தவறாக எண்ணி விட்டான்.

1763 ஆம் ஆண்டு ஏப்ரல் 11 ஆம் தேதி யூசுபுகானை எதிர்த்துப் பலம் வாய்ந்த படை ஒன்றை உடனே அனுப்ப வேண்டுமென ஜெனரல் லாரென்ஸ் கம்பெனி அரசாங்கத்திற்குச் சிபாரிசு செய்தான். இறுதியில் யூசுபுகான் தன்னிச்சையாக வெளிப்படையாய்க் கிளம்பிவிட்டான் என்றும் தெரிவித்திருந்தான். பாளையங்கோட்டை மதுரைக் கோட்டைகள் நிரம்ப அதிக பீரங்கி வெடிக்கருவிகள் சேமிக்கப்பட்டு அவன் வசமிருப்பதாயும் மற்ற சாதாரண கோட்டைகளையும் காக்கத் தக்க நிலையில் வைத்துக் கொண்டிருக்கிறான் என்றும் அறிவித்திருந்தான். அவன் படையில் 27,530 பேர் இருந்ததாகவும் கணக்கிடப்பட்டுள்ளது. அவர்களுள் கூட 15,000 கூலிப்பட்டாளங்கள் மிகக் குறைவான ஆயுத வசதியுடன் இருந்தனர். மற்றவர்கள் சிறந்த ஆயுதபாணிகளாயிருந்தனர். அவன் 200 ஐரோப்பிய காலாட்படைகளைத் திரட்டுவதிலும் வெற்றி கண்டான். அவர்களுள் அநேகர் பிரஞ்சுக்காரர்கள். 30 பிரஞ்சுத் துருப்புகள் யாவும் மார்ச் செண்ட் என்ற பிரஞ்சுக்காரனின் தலைமையில் விடப்பட்டிருந்தன. அவனுடைய படையின் வசம் 12 அல்லது 14 கனமற்ற போர்க்களப் பீரங்கிகளும், இரண்டு குண்டு பீரங்கிகளும் இருந்தன. இவற்றுள் அநேக பீரங்கிகள் கம்பெனியைச் சேர்ந்தவை. அவன் மதுரையைத் தன் தலைமையிருப்பிடமாக்கிக் கொண்டான். அவன் நாள்தோறும் பிரஞ்சுக்காரரிடமிருந்தும் ஹைதர் அலியின் படையிடமிருந்தும் புதிய படைகளைப் பெற்றுக் கொண்டேயிருந்தான். மகமதுயூசுபு பெரும் பேராசையுடன் துணிவான எச்செயலையும் செய்யத்தக்க மனிதன் என்று எண்ணி, உடனே அவன்மேல் படையெடுத்துச் செல்லாவிடில் அவன் மற்றொரு சந்தாசாகிப்பாகிக் கம்பெனியுடன் மேலும் பத்து ஆண்டுகள் போரிட்டுக் கம்பெனி உரிமைக்கு முட்டுக்கட்டை போடுவான் என்றும் லாரென்ஸ் கருதினான். அத்தகைய பயங்கர கலகக்காரனை ஒடுக்கமான கணவாய்களின் வழியாகவோ, அடர்ந்த காடுகளிலோ மிகச் சிறிய படையுடன் சென்று எதிர்ப்பது நடைமுறையில் இயலாது அல்லது அறிவுடைமை என்று அவன் எண்ணவில்லை. அவன் தேவையென்று கேட்ட படையின் விவரம் வருமாறு: ஐரோப்பிய குதிரைப் பட்டாளம் 163; 10 துப்பாக்கிகளுக்கான பீரங்கி, இரண்டு குண்டு பீரங்கிகள் 100; ஐரோப்பிய இராணுவப்படை அணி 600; காபிரிகள் அல்லது தோபாஸ்கள் (யூரேஷிய சிப்பாய்கள்) 100; கம்பெனிப் பட்டாளம் 50 கூட்டங்கள், தலைவர்களுடன் சேர்ந்த 5000, நவாபின் சிப்பாய்கள் 2000, கருங்குதிரைப்படை 2000. மொத்தம் இவன் கேட்டிருந்த படையினரின் எண்ணிக்கை 9963. அவன் கேட்ட அவ்வளவு படைகளை அவன் பெறவில்லை. வந்த படைகள் போதுமானதாக



இல்லை. முக்கியமாக அது பீரங்கிப் பிரயோகத்தில் வலிவுள்ளதாக இல்லை. எனவே பீரங்கிகளுக்காகத் திருச்சிக்கு அனுப்ப வேண்டியிருந்தது. அங்கிருந்த பீரங்கிகள் வந்துபோர் நடந்தும் கூடப் போர் வெற்றி பெறவில்லை. துருப்புகளின் தலைவனாயிருந்த கர்னல் மான்சன் துருப்புகளுடன், 1763 ஆம் ஆண்டு மழைக்காலத்தை மிக்க வசதியுடனும் பாதுகாப்புடனும் கழிக்கத்தக்க இடத்தை நோக்கித் திருப்பிச் செல்ல வேண்டியிருந்தது. ஸ்வார்ட் என்ற புகழ்பெற்ற மதபோதகர் அக்கூடாரங்களுக்குச் சென்று இரண்டு மாத கால முற்றுகையின் போது நோயுற்றவருக்கும், காயம்பட்டவருக்கும் ஆன்ம ஆறுதல் அளித்து வந்தார்.

முற்றுகை நடந்து கொண்டிருக்கும்போது யூசுபுகான் பிரஞ்சுக்காரரின் உதவியைப் பெற முயற்சித்தான். ஆனால் ஐரோப்பாவில் பிரஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் சமாதானம் செய்து கொண்டமையால் யூசுபுக்கு ஆள் உதவியும் போர் தளவாட உதவியும் புதுச்சேரி அரசாங்கங்களால் அனுப்ப முடியவில்லை. ஆனால், பிரஞ்சுக்காரர்கள், 'எங்களுடைய கூட்டாளியான யூசுபை எதிர்ப்பதை நிறுத்த உத்திரவிட வேண்டும். ஏனெனில் எங்களுடைய ஆளை எதிர்ப்பதால் உண்மையில் அது எங்களையே எதிர்ப்பதாகும், என்று ஆங்கிலேய அரசுக்குக் கூறினர். இச்சூழ்ச்சி நிரம்பிய தந்திரத்திற்கு ஏற்ற பதிலை ஆங்கில அரசாங்கம் கொடுத்ததாகத் தெரியவில்லை. முற்றுகை 1764 அக்டோபர் 14 வரை தொடர்ந்து பலவிதமாய் நடந்தது. அதற்குள் மற்றொரு தாக்குதலும் ஏற்பட்டது. அத்தாக்குதலும் தோல்வியுற்றது. ஆனால் பிரஞ்சுப் படைத்தலைவனான மார்ச்சண்ட் தன் ஆற்றலைக் காட்ட சரியான வாய்ப்பு இது என்று எண்ணித் தனக்கும் தன்னைச் சார்ந்தோருக்கும் ஏற்றதாக ஒப்பந்தங்களைப் பெறுவதற்காக மிகச் சூழ்ச்சியாய், தன் தலைவனாகிய யூசுபுகானையே பிடித்து ஆங்கில அதிகாரத் தலைவனாயிருந்த 'மேஜர் டொனாட் காம்பெல்' லிடம் ஒப்படைத்து விட்டான்.

யூசுபுகான் எவ்வாறு ஒழிக்கப்பட்டான் என்பதைப் பற்றி எழுத்து ஆவணங்களிலிருந்து என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. உள்நாட்டு மக்களிடமிருந்து அதிகாரப்பூர்வமாயறிந்த செய்தியைக் கொண்டு நெல்சன் கூறுவதாவது: 'புகழ் வாய்ந்த வெற்றிவீரன், அநேகப்போர்களில் ஈடுபட்டவன், குறிப்பிடத் தக்க பெரும்புகழுடன் வெற்றி கண்டவன், நம்பகமான அவன் வேலைக்காரனால் பிடிக்கப்பட்டு எதிரிகளிடம் ஒப்படைக்கப்பட்டான். அவன் எதிரிகள் 1762 மேயில் (தவறு - மேலே காண்க) அந்த வேளையில் அவனது

இரக்க மற்ற தன்மையால் அவனுடைய எந்தச் செயலையும் மன்னிக்க இயலாது ; அவனை ஒரு நாயைப் போலத் தூக்கிலிட்டனர். அவன் அலுவலின் முடிவு, சென்ற ஆண்டில் முற்றுகை ஆரம்பிக்கப்பட்டபோது ஜெனரல் லாரென்சுக்கு அறிவிக்கப்பட்ட குறிப்புகளுடன், ஒத்திருக்கலாம். அவர்கள் கூறியதாவது, 'யூசுபு உயிருடன் பிடிக்கப்பட்டிருந்தால் - இரக்கம் காட்டப்படுவதற்காக அல்ல ஆனால் நிதானமாக அவனுக்குப் பொருத்தமான சரியான முறையில் அவனை ஒழிப்பதற்காகவே, அவனை மதராசுக்கு அனுப்ப வேண்டுமென்பது அவர்கள் விருப்பம்.'

**கான்சாகிப் தூக்கிலிடப்பட்டான்**

'நாங்கள் உங்களிடம் வருந்திக் கூறுவதாவது, நவாபு அவனை மாநிலக் கைதியாக்க வேண்டுமென எண்ணங் கொண்டிருந்ததால் நவாபிடம் அவனை ஒப்படைப்பது மிகுந்த ஆபத்திற்கிடமானது. ஆனால் உங்களுக்குச் சம்மதமானால் இராணுவத் தலைவரிடம் கூறிப் படையினருக்கு எதிரே முதலில் காணப்படும் மரத்தில் அவனைத் தூக்கிலிட்டால் அதுவே எங்களுக்கு அதிக மனநிறைவைத் தரும். ஆதாரப் பூர்வமான சாட்சியங்கள் காணப்படாததால் பிந்தியவரின் வேண்டுகோளின்படி நிகழ்ச்சி நடந்திருக்குமென நான் எண்ணுகிறேன். அத்தகைய பெருமை வாய்ந்த மனிதன் அவ்வளவு இழிவான ஒரு முடிவை எய்தினான் என்பதை நம்புவது கடினமாகத்தானிருக்கிறது. ஆயினும் அவன் குழப்பத்தை ஆரம்பித்த போதே இந்த முடிவும் அவனது மனதில் தோன்றிய முடிவுகளில் ஒன்றாய் இருந்திருக்கவும் கூடும். அவன் எதிர்ப்பில் வெற்றியடைந்திருந்தால், அவன் ஓர் இளவரசனைப்போல ஆட்சி செய்ய எண்ணியிருக்க வேண்டும். தோற்றுவிட்டால் தேசத்துரோகம் எனத் தூக்கிலிடப்படலாம் என்பதையும் எண்ணிப் பார்த்திருக்கக் கூடும். கான்சாகிப் மதுரைக்கு மேற்கே இரண்டு மைல் தூரத்திலுள்ள பாசறைக்கருகே தூக்கிலிடப்பட்டான். அவன் தூக்கிலிடப்பட்ட இடத்திலேயே புதைக்கப்பட்டான். மகமதிய முறையில் அதன் மேல் ஒரு சிறு கல்லறைக் கோபுரமும் கட்டப்பட்டது. அதில் 'கான் சாகிபின் கல்லறை' என்ற வாசகமும் விளக்கம் தரப் பொறிக்கப்பட்டது. கான்சாகிபினுடைய சிற்றப்பனாகிய மதுரைவாசியான திறமையுடைய மகமதியன் ஒருவன் அந்த இடத்திற்கு என்னுடன் வந்தான். கான்சாகிபின் இறப்பைப் பற்றி அவன் தன் முன்னோர்களின் வாயிலாகக் கேட்டறிந்த அநேக செய்திகளைக் கூறினான். மகமது யூசுபு கடவுளைத் தொழுது கொண்டிருக்கும் போது முசுமுர்சன்டும் (மான்சியர் மார்ச்சண்ட்)



அவனுடைய இந்து திவானாகிய சீனிவாசராவும் அவனைப் பிடித்து நவாபின் கட்டளைப்படி தூக்கிலிடப்பட்டான் என்று அவன் கூறினான். அக்கிழவன் 85 வயதுடையவனாயிருந்தும் 1801 இல் மதுரை திருநெல்வேலி நாடுகளில் தூக்கிலிடப்பட்ட முக்கியமான கலகக்காரரைப் பற்றிக் கூட சரியான செய்திகளைக் கூறுமளவிற்குத் தெளிவான நினைவாற்றல் உடையவனாயிருந்தான். கான்சாகிபு ஒரு இந்து என்பதையும் அவன் உறுதிப்படுத்தினான். கான்சாகிபினுடைய சிறப்பைப் பற்றி ஏட்டுக் குறிப்புகளில் காணப்படாததால் அக்கிழவன் கூறியதுபோல் ஆங்கிலேயரின் கட்டளைப்படியின்றி நவாபின் உத்தரவுப்படியே அவன் தூக்கிலிடப்பட்டிருக்க வேண்டுமென முடிவு செய்யலாம். அத்தகைய ஐயத்தை ஆங்கிலப்படைத் தலைவனுக்கே நாம் விட்டுவிடுவோம்.

யூசுபுகானும் மதுரையும் கைப்பற்றப்பட்ட பின் கலகங்கள் சிதறடிக்கப்பட்டன. ஆனால் நாடு இதுவரை கண்டிராத சிறந்த அறிவு நிரம்பிய ஒரு ஆட்சியாளனை இழந்து விட்டது. எனவே நாட்டின் பொருளாதார நிலை வெகு சீக்கிரத்திலேயே சீர்கேடான நிலையை அடைந்தது.

'யூசுப்கானுக்குப் பின் முதலி குடும்பத்தினரில் ஒருவன் வந்தான்' என்று லூஷிங்டன் கூறுகிறார். அவனுடைய ஆட்சி எட்டு மாதங்களே நடைபெற்றது. பின்னர் அவனுக்குப் பதில் ராஜா குக்மது ராம் என்ற இந்து ஒருவன் ஆட்சி செய்தான். யூசுபுகான் ஜமாபந்தியைவிட மிகக் குறைவான ஜமாபந்தியே அவன் ஆட்சியின் கீழ் ஏற்பட்டது. அவனை அடுத்து ஷேக் மகமது அலி ஒன்பது மாதங்கள் ஆண்டான். அவன் காலத்தில் ஜமாபந்தி மேலும் அதிகமாய்க் குறைந்து விட்டது. அத்தலைவனின் திறமையின்மை அமைதியாயிருந்த பாளையக்காரர் களைப் பழையபடி அடக்குமுறையற்று மூர்க்கமான கொள்ளைகளிலும் கொடூரங்களிலும் ஓய்வில்லாது ஈடுபடும்படி தூண்டியது. இக்குழப்பநிலை 1792 இல் கம்பெனியின் ஆட்சி ஏற்படும்வரை நீடித்தது. இந்த ஆட்சி மாற்றத்தால் பாளையக்காரர்களின் ஒழுக்கம், நிலை இவற்றில் எதிர்பார்த்த அளவு முன்னேற்றம் ஏற்படவில்லை. நவாபினுடைய நிலைபெற்ற ஆட்சியினால் கலகக்காரத் தலைவர்கட்கு மிகுந்த தன்னம்பிக்கையும் வெற்றியும் ஏற்பட்டது. நவாபின் அமுல்களினுடைய இழிவான ஒழுங்குகள், கையுறை முதலியவை நவாபினுடைய மக்கள் மனத்தில் பிளவுபட்ட ஆட்சியில் ஏற்படும் தீமைகளைப் பதிய வைக்கத்தக்க அளவு தூண்டுகோலாக அமைந்தன. அதனால் உறுதியான மாற்றம் ஏற்பட இயலாதிருந்தது. யூசுபுகான்

கலகக்காரனின் கொடிய முடிவிற்குப் பின் அவன் வீரத்தைப் பற்றிய எண்ணங்கள் சில நாட்கள் வரை நிலவின. சிறிது காலத்திற்குப் பின் அவன் பெயரைக் கேட்டு ஏற்படும் அச்சம் நீங்கி மக்கள் பழைய வழக்கங்களில் ஈடுபட்டனர்.

மதுரையைப் பொருத்தவரை, பூசுபுகான் மரணத்திற்குப் பின் அது அபீரல்கானின் ஆட்சிக்குட்படுத்தப்பட்டது என்று நெல்சன் கூறுகிறார். மேலும் அவர் கூறுவதாவது: மகம்மதியர் வலிமை பெற்ற காலத்தில் மதுரையிலிருந்த நிலையைப்பற்றி இந்த உயர் அதிகாரிகளில் ஒருவரின் பெயரனால் எனக்குச் சொல்லப்பட்ட பின்வரும் செய்திகளிலிருந்து நாம் கற்பனை செய்து கொள்ளலாம். அதன் உண்மையைப் பற்றி ஐயப்பட இடமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. சுமார் 1772 இல் முழு நகரத்திலும் செங்கல்கற்களாலாகிய உறுதியான கட்டடங்கள் இரண்டிருந்தன. ஒன்று பழைய அரண்மனை; மற்றொன்று மகமதிய (மானேஜருடைய) மேற்பார்வையாளருடைய இருப்பிடம். மற்ற வீடுகள் யாவும் மண்ணாலும், பந்தல்களாலும், தட்டிகளாலும், ஓடுகளாலும் ஆகியவை. இதுவரை நெல்சன் கூற்று. மதுரை நாட்டில் இத்தகைய நிலை வியப்புக்குரிய தல்ல. திருநெல்வேலியிலோ அல்லது கிராமாந்தர மாநிலங்களிலோ எந்த ஒரு தனி வீடும் கற்களாலும் சுட்ட சுண்ணாம்பினாலும் 1781 இல் கம்பெனி அரசாட்சியினருக்கு நவாபின் வரிகள் உரிமையாக்கப்படுவதற்கு முன் வரை கட்டப்பட்டதற்கான அறிகுறியையே நான் எங்குத் தேடியும் காணவில்லை. முன்னாலிருந்த நிலை கொடிய ஆட்சிக்கும் பிறகு வலிமையும் அமைதியும் நிறைந்த ஆங்கில அரசாங்கத்தினால் ஏற்பட்ட ஒழுங்கு முறைக்கும் பாதுகாப்புக்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக்காட்ட மிகச் சிறந்த சான்றைத் தருகிறது.

•

# இயல் - 6

## 1764 முதல் 1799 வரை திருநெல்வேலி பற்றிய குறிப்புகள்

### பகுதி I

**பூசுபுகான் மறைவிலிருந்து 1781 இல் வரி உரிமையாக்கப் பட்டது வரை**

**பூசுபுகானின் மறைவை ஒட்டி ஏற்பட்ட நிகழ்ச்சிகள்**

சுமார் 1764 ஆம் ஆண்டு இறுதியில் மதுரையும் பூசுபுகானும் பிடிக்கப்பட்ட பிறகு திருவாங்கூர் அரசனின் திடீர் படையெடுப்பிலிருந்து அவற்றைக் காப்பதற்காக மதுரை தெற்குப் பாகப் படைத்தலைவனாக இருந்த கர்னல் டொனால்டு (Colonal Donald Campbell) திருநெல்வேலிக்குள் படையெடுத்துச் செல்ல மிக்க ஆவலுள்ளவனாயிருந்தான். ஆனால், அரசாங்கத்தினர், திருவாங்கூர் அரசன் அவ்வளவு சீக்கிரத்தில் தங்கள் எதிர்ப்பைத் தேடிக் கொள்ளமாட்டான். களக்காடு மாவட்டங்களைப் பொறுத்தவரை அவர்களது எண்ணத்தை அறிந்து கொள்ளும் வரையிலாவது அவ்வாறு செய்யாதிருப்பான் என எண்ணினார். என்றாலும் அந்தச் சுற்றுவட்டாரத்திலுள்ள வேறு எந்தப் பாசறைகளையும் களக்காடு நாட்டையும் அதிர்ச்சியினின்றும் காப்பதற்காகப் புதிய படை பலத்தை ஏற்படுத்துவது தேவையெனத் தீர்மானித்தனர்.

1765- பாளையங்கோட்டையில் துருப்புகள் தங்குவதற்கான வசதி அளிக்கக் கட்டளையிடப்பட்டது. திருவாங்கூர் அரசன் களக்காடு மாவட்டங்களைத் திரும்பப் பெற முயற்சித்துக் கொண்டிருந்தான். நவாபினுடைய சேனைகள் பாளையங்கோட்டையைக் காக்க நிறுத்தப்பட்டன. காப்டன் ஹார்பர் (Captain Harper) களக்காட்டின் உதவிக்காக ஒரு படையுடன் புறப்பட்டான். மே மாதம் 25 ஆம் தேதி களக்காடு படைக்கலங்கள் தாங்கிய 200 திருவாங்கூர்காரர்களால்

கைப்பற்றப்பட்டது. கம்பெனித் துருப்புகள் இல்லாத சமயத்தில் 3 அல்லது 4 நூறு கூலிப்படைகள் திருநெல்வேலி நகரைக் கொள்ளையடித்தது. நவாபின் ஆட்கள் உதவியற்றிருந்தனர். பனங்குடி, திருக்குறுங்குடி இரண்டையும் காத்து நின்ற சிறுபடை அவற்றைத் திருவாங்கூராருக்கு விட்டுவிட்டு ஓடிவிட்டன. அடைக்கலமடைந்தவர்கள் பாளையங்கோட்டையை நோக்கிப் பின்வாங்குவதாக வாக்குறுதி கொடுத்தனர். நவாபின் படையும் செங்கோட்டையைத் திருவாங்கூர்க்காரருக்கு விட்டுவிட்டன. ஜூன் 12 ஆம் தேதி திருவாங்கூர்காரர்கள் களக்காட்டிலிருந்து திரும்பினர். அவர்கள் திருக்குருங்குடியில் தங்கினர். அவர்கள் ஆரல்வாய் மலைக்குத் (Aramboly lines) திரும்பும் போது, கர்னல் காம்பெல் அவர்களை எதிர்த்துப் படையெடுக்கத் தயார் செய்து கொண்டிருந்தான். பாளையங்கோட்டை அதிகாரிகள், விடுதிகள் போதுமானதாக இல்லை என்றும் அரசாங்கத்தார் உத்தரவின் மேல் நவாபின் செலவில் அவை சீர்திருத்தப்பட வேண்டுமென ஒரு முறையீடு அனுப்பினர். புது படைவீடு கட்டவும் அவர்கள் உத்தரவிட்டனர்.

1766- இச்சமயத்தில் பாளையங்கோட்டையில் காப்டன் பிரிச்மன் (Captain Frischman) படைத்தலைவனாகவும் திருநெல்வேலியில் கம்பெனியாரின் பேராளராகவும் இருந்தான். யூசுபுகானின் கடுமையான ஆட்சியினால் ஏற்பட்ட நன்மைகளுக்கெல்லாம் ஒரு முடிவு இப்போது ஏற்பட்டது. இத்துன்பத்துடன் கூட பாளையக்காரர்களை அடக்கி அவர்களிடம் வரிவசூல் செய்வதும் மேலும் இடையூறாயிருந்தது. கடந்த ஆண்டில் திருவாங்கூராருக்கு எதிராக அழைக்கப்பட்ட படை வடக்கே ஹைதரலியின் திட்டங்களை எதிர்க்கத் தேவை எனத் திரும்பிவிட்டன. இந்த எல்லாச் செய்திகளையும் காப்டன் பிரிச்மன் அக்டோபர் 4 ஆம் தேதி அரசாங்கத்தினருக்கு எழுதிய கடிதத்தில் எடுத்துக் காட்டியிருந்தான். இக்கடிதத்திலிருந்து அச்சமயத்தில் சுமார் 20,000 படைக் கலங்கள் தாங்கிய கூலிப்படைகள் பாளையங்கோட்டைக்கு 15 அல்லது 20 மைல் தூரத்திற்குள் திரிந்து அலைந்து ஒவ்வொரு கிராமத்தையும் சூறையாடியதாகத் தெரிகிறது. நவாபின் படைகளை பாக்சி (Buxy) - நவாபினுடைய தளகர்த்தர் பாக்சி, மகமதிய கமாண்ட் - இன் - சீப் தலைமையின் கீழ் வடகிழக்கேயுள்ள கோட்டையை ஐயமறப் பாஞ்சாலங் குறிச்சி கோட்டையை அடக்குவதற்காகக் காப்டன் பிரிச்மனை அனுப்பி வைத்தான். அப்படை மிக்க பலம் வாய்ந்தது. அதில் பீரங்கிகளும் 1000 குதிரை வீரர்களும் இருந்தனர். ஆயினும் அப்படை ஒன்றும் செய்யாமல் கோட்டைக்கு வெளியே காத்திருந்தன என்று காப்டன் பிரிச்மன் முறையிட்டான்.



அன்றியும் நவாபின் துருப்புகளில் பாதிபேர் வெறும் கூலிகள் என்றும் அவர்களது ஆயுதங்கள் மிகப் பாழடைந்து சரி செய்ய முடியாதபடி சீர்கெட்டிருந்தன என்றும் குறை கூறினான். அவர்கள் 4000 பேர் இருந்தார்கள். ஆனால் அதில் பாதிப்பேருக்கு மட்டும் பணம் கொடுத்து கம்பெனியால் பயிற்சி அளிக்கப்பட்டால் போதும். நாட்டில் நிலை இவ்வாறிந்தமையால் தபால் போக்குவரத்து நின்று விட்டது. வெளியூர்களிலுள்ளவர்களுக்குச் செய்தி அனுப்புவதற்கு அவன் மிகவும் திண்டாடினான். வடகரைப் படைகளுக்குத் தலைமை வகித்த என்சைன் பௌல்சம் (Ensegm Foulsum) பாளையக்காரர்களால் முற்றுகையிடப்பட்ட வாசுதேவநல்லூரைக் காப்பாற்ற முயன்றான். அவன் போய்ச் சேருவதற்குள் அப்படை தண்ணீருக்குத் திண்டாடித் தங்கள் படைகளுடன் திருநெல்வேலி திரும்பிவிட்டன. 12000 பாளையக்காரருடன் ஒரு சிறு மோதல் செய்துவிட்டு அவனுடைய கோட்டைக்குத் திரும்பினான். இக்கடிதம் கிடைத்ததும் அரசாங்கத்தார் தங்கள் படை எங்கெங்கு பின்வாங்கியதோ அங்கெல்லாம் சிறுசிறு பாளையக்காரர்கள் வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொண்டு கொள்ளையடிக்கின்றனர் என்பதை அறிய வருந்துவதாயும் தெரிவித்தனர். நாட்டில் ஒழுங்குமுறையை ஏற்படுத்தி அவன் படைகளுக்கு ஊதியத்தைக் கையில் கொடுத்துவிட உடன்பாட்டால் அது அவனுக்கும் அவர் நாட்டிற்கும் நல்லது எனத் திரும்பத் திரும்பக் குறிப்பிட்டு வந்தனர். ஆனால் நவாபோ அதற்கு இதுவரை உடன்படாத போதிலும் இந்தத் திட்டத்தை ஒப்புக் கொள்ள வேண்டிய இன்றியமையாமையை அவர்கள் அவனுக்குத் திரும்பவும் எடுத்துக் கூறிக் கொண்டேயிருந்தனர்.

சில கலகக்காரப் பாளையக்காரர்களை அடக்க மேஜர் பிளிண்ட் (Major Flint) எடுத்துக் கொண்ட முயற்சி தோல்வி கண்டதுடன் 1766 ஆம் ஆண்டு கழிந்தது. டிசம்பர் 23 ஆம் தேதி அவன் கொல்லம்கொண்டான் கோட்டையைத் தாக்குவதற்காகத் திருவில்லிப்புத்தூரிலிருந்து புறப்பட்டான். 27 ஆம் தேதி உணவுப் பொருளுக்காக திருவில்லிப்புத்தூருக்கு அனுப்பப்பட்ட வழித்துணைப்படையும் பாளையக்காரர்களால் தாக்கப்பட்டது. இவ்வழித் துணைக்கு உதவிசெய்ய ஒரு பலம் பொருந்திய படை அனுப்பப்பட்டது. ஆனால் இந்த துணைப்படையும் தாக்கப்பட்டது. இத்தாக்குதல் பாசறையிலிருந்து மூன்று மைல்களுக்குள்ளேயே தொடர்ந்தது. 29 ஆம் தேதி கோட்டைச் சுவரில் சிறிது பிளவு ஏற்பட்டவுடன் திடீர் தாக்குதல் செய்தனர். ஆனால் அந்த இடத்தை மிகுதியான எண்ணிக்கையுள்ளவர்கள் மிக்க உறுதியுடன் காத்து

நின்றமையால் கோட்டையைத் தாக்கிய எதிரிகள் அரை மணி நேரம் வரை போர்க்களத்திலே போரிட்டுவிட்டுப் போதுமான இழப்புகளுடன் திரும்பினர். காப்டன் பெய்ண்டரும் (Captain Painter) மற்றும் ஐந்து ஐரோப்பியர்களும் கொல்லப்பட்டனர். அநேக ஐரோப்பியர் காயமடைந்தனர். அந்தக் கோட்டைக்குச் சொந்தக்காரப் பாளையக்காரனுக்கு ஏறக்குறைய 200 பேருள்ள படைப்பலமே இருந்தது. என்றாலும் மற்ற எல்லாப் பாளையக்காரரும் அவனுக்குத் தேவையானப் படையைப் புதிதாக அனுப்பிக் கொண்டேயிருந்தனர். திரும்பும் போது மேஜர் பிளிண்ட் எதிரிகளுடன் போரிட்டுத்தான் அவர்களைக் கடந்து வர முடிந்தது. காப்டன் ஹார்ப்பர் (Captain Harper) அவனுடைய படையின் பிற்பகுதிக்குத் தலைவனாயிருந்தான்.

1767 - பாளையக்காரர்களுக்கு எதிராகச் செய்யப்பட்ட தோல்விப் போராட்டத்துடன் தொடங்கியது இவ்வாண்டு. மேஜர் பிளிண்ட் முதலில் ராஜபாளையத்திற்குப் பின் வாங்கிப் பிறகு சிதியாத் (Sitheath) சித்துத்துக்கு (Sittuttus) போய்ப் பின்னர் பரம்பூருக்குச் சென்று அங்கு பக்சியினுடைய படையுடன் சேர்ந்து கொண்டான். பாளையங்கோட்டையில் காப்டன் பிரிஷ்மனிடமிருந்து (Frischman) பலமான பீரங்கிப் படையைப் பெற்றுக் கொண்டு அவன் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைத் தாக்கப் புறப்பட்டான். முதலில் எட்டையபுரம் நாட்டிலிருந்து மற்ற இரு கோட்டைகளைத் தாக்க எண்ணினான். ஆனால் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு மிக முக்கியமான இடமாகிய பாஞ்சாலங்குறிச்சியைத் தாக்கினான். அவனுடைய வெற்றியை அரசாங்கத்தினர் வெகு ஆவலுடன் எதிர்பார்த்தனர். ஏனெனில் கொல்லம் கொண்டானைக் கைப்பற்றுவதில் அண்மையில் அடைந்த தோல்வியால் பெரிதும் பாளையக்காரர்கள் இறுமாந்திருந்தனர். (கால்டுவெல் வெள்ளையர் சார்பாக எழுதும் வரலாற்றாசிரியர் என்பது கருதத்தக்கது. ஆங்காங்கே நினையத்தக்கது - ந.ச.) எனினும் சிறந்த துப்பாக்கிப் பீரங்கிகளும் அவனுக்கு அளிக்கப்பட்டிருப்பதால் பாளையங்காரர்களின் கோட்டைகளைத் தாக்குவதில் வெற்றி காணுவான் என்று நம்பினர்.

**பாஞ்சாலங்குறிச்சி**

திருநெல்வேலிக் குறிப்புகளிலுள்ள பாஞ்சாலங்குறிச்சியின் முக்கியத்துவம் பற்றி இங்குச் சில வார்த்தைகள் கூற வேண்டியுள்ளது, இப்பெயர் ஓர்மின் சரித்திரத்திலேயேயும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்னல் ஹெரான் 1735 இல் இதற்கு எதிராய்ப் படையெடுத்துச் சென்றான். அப்படையெடுப்பு எவ்வாறோ தவிர்க்கப்பட்டுவிட்டது. அச்சமயத்தில் உண்மையில் பாஞ்சாலங்குறிச்சியைத் தாக்கியதாகத் தெரியவில்லை. பாஞ்சாலங்குறிச்சிக்கு ஆங்கிலேயரின் தொடர்ந்த கடுமையான முற்றுகைகளின் முதல் தாக்குதல் 1767 இல் மேஜர் பிளிண்டினால் ஏற்பட்டது.



பாஞ்சாலங்குறிச்சி ஒரு பெரிய மண்கோட்டை. அது தற்போது ஒட்டப்பிடாரத் (இந்த ஆண்டு நூற்றாண்டு பெறும் வ.உ.சி. பிறந்த ஊர் - ந.ச.) தாலுக்கா நகருக்கு அருகே அமைந்துள்ளது. ஒரு பாளையக்காரனின் தலைமையிருப்பிடமாயிருந்ததால் முழுப் பாளையமும் அப்பெயரால் அழைக்கப்பட்டது. பாஞ்சால என்பது பாஞ்சாலம் சம்பந்தப்பட்ட எதற்கும் பொருளாகும். தற்போது ஆற்றிடைப்பட்ட நிலம் (Doab) பஞ்சபாண்டவச் சகோதரர்களின் மனைவியாகிய திரௌபதியின் நாடு மகாபாரதக் கதையில் ஈடுபாடுடைய யாரோ ஒருவர் இந்த இடத்திற்கு இப்பெயரை வைத்திருக்க வேண்டும் (கால்டுவெல்லின் இவ்விளக்கம் இராமாயண பாரதக் கதைப் பெயர்கள் கொண்ட பிற இடங்கட்கும் பொருந்தும் - ந.ச). அப்பெயரின் இரண்டாவது பகுதி கிராமத்தைக் குறிக்கும் பல தமிழ்ச் சொற்களில் ஒன்று. அது (குறிச்சி, குறிஞ்சி - ந.ச.) முக்கியமாகக் காடு அல்லது மலைகளிடையே இருக்கும் கிராமத்தைக் குறிக்கிறது. தற்போது அதற்கருகே ஒரு காடு இருந்ததற்கான அறிகுறி ஒன்றும் இல்லை. ஆனால் கடைசி பாளையக்காரர் போர் நடந்த காலம் வரை திருநெல்வேலிக்கு வடக்கே பருத்திக் கரிசல்மண் இருந்த இடம் முழுவதும் அடர்ந்த மரங்களால் மூடப்பட்டிருந்தது. இந்தக் காடுகளை வெட்டி வெற்றி காணச் செய்தது பருத்தியே (Cotton). பாளையக்காரரின் ஆட்சி ஒரு முடிவுக்கு வந்திராவிடில் பருத்திக் காடுகளைக் கடந்திருக்கவே முடியாது. பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரன் ஒரு நாயக்கன். நாம் இப்பொழுது 1767 ஆம் ஆண்டிற்கும், மேஜர் பிளிண்டிடமும் திரும்பி வருவோம்.

## 1767 ஆம் ஆண்டில் ஏற்பட்ட தொடர் நிகழ்ச்சிகள்

பிப்ரவரி 15 ஆம் தேதி மேஜர் பிளிண்டின் தயாரிப்புகள் முடிந்தன. தாக்குதலின் மூலம் பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்ற அவன் முயற்சி செய்தான். காலையில் கோட்டைக்கு எதிரே வெடிக்க ஆரம்பித்த பீரங்கி நாள் முழுவதும் நெருப்பைக் கக்கும்படி வைக்கப்பட்டது. நடுப்பகலில் தாக்குதல் ஆரம்பிக்கப்பட்டது. சிறிது காலத்திற்கு முன் கொல்லம் கொண்டானில் ஏற்பட்ட இது எந்த விதத்திலும் வெற்றியளிப்பதாய் அமையவில்லை. கொலை

செய்யப்பட்டவர்களும் காயமடைந்தவர்களும் மொத்தத்தில் 92 பேர். அதில் 8 ஐரோப்பியர் கொலை செய்யப்பட்டனர். 18 பேர் காயமடைந்தனர். மேஜர் பிளிண்ட் தாக்குதலை முற்றுகையாக்கத் தீர்மானித்தான். ஆனால் இரவில் பிற்காலத்தில் அடிக்கடி நடந்தது போல கோட்டையைக் காத்திருந்தவர்கள் அங்கிருந்து தப்பி விட்டனர். சிலர் தூத்துக்குடியிலும் சிலர் வைப்பாரிலும் (Vypaur) அடைக்கலம் புகுந்தனர். எட்டயபுரம் கூட அச்சமயத்தில் தாக்கப்பட்டிருக்கும். ஆனால் அதையும் விட்டுவிட்டு ஓடிவிட்டனர். வைப்பாரையும் விட்டுவிட்டு எதிரிகள் மறைந்து விட்டனர்.

இத்தகைய ஒரு முற்றுகையைப் பற்றிய நினைவு மறைந்து விட்டது என்பது விபரீதமாயிருக்கிறது. பாளையங் குறிச்சியின் - அநேக முற்றுகைகளுள் கடைசி முற்றுகை மட்டும் ஒரு கவிஞரால் நிரந்தர நினைவாக்கப்பட்டுவிட்டது. ஆனால் மேஜர் பிளிண்ட் ஆரம்பித்த முதல் முற்றுகை அவ்வளவு நல்வினை செய்திருக்கவில்லை. கொராசு (Horace) கூறுவது போல 'அவர்களிடம் கவிஞன் இருந்திருக்க மாட்டான். எனவே அவர்கள் இறந்திருப்பார்கள்' (கால்டு வெல்லின் இச்சொற்கள் பாஞ்சாலங்குறிச்சியின் விடுதலை வீரத்திடம் அந்நாளைய அயல்நாட்டு அறிஞர்கட்கும் இருந்த அச்சத்தையும் மதிப்பையும் அறிவிக்கிறது அல்லவா? மேலும் கால்டுவெல் வரலாற்றை ஆராய இலக்கியத்தையும் தேடுகிறார் என்பதும் தெரிகிறது அல்லவா? - ந.ச.)

இச்செய்தியை அறிந்தவுடனேயே அரசாங்கத்தினர் பொறுப்பற்றப் பாளையக்காரர்களை அழிப்பதற்காக மதுரைக்கும் திருநெல்வேலிக்கும் போதுமான படையை அனுப்பி வைக்கத் தீர்மானித்தனர். அவர்கள் எண்ணியதற்கு மாறாகப் பாளையக்காரர்களை ஒடுக்குவது மிகக் கடினம் என்பதைக் கண்டறிந்தனர். இந்த இடையூறு, சீர்கேடான இரண்டு அரசாங்கம் ஒழியும் வரை நவாபினுடைய நாடு முழுவதும் கம்பெனி அரசாங்கத்தினிடம் மாறும் வரை தொடர்ந்து வந்தது. கலகக்கார மாவட்டங்களில் ஏற்கனவே பழக்கமுள்ள ஒரு படைத் தலைவன் இப்படைக்குத் தலைவனாய் நியமிக்கப்பட்டான். 1761 இல் யூசுப்கானையும் மதுரையையும் பிடித்த கர்னல் டொனால்டு காம்பெல்தான் அந்தப் படைத்தலைவன். அவன் 1765 இல் திருநெல்வேலியை நோக்கி ஒரு படையுடன் சென்றான்.

1767 ஆம் ஆண்டு 25 ஆம் தேதி ராஜபாளையத்தை நோக்கிச் சென்ற கர்னல் காம்ப்ஸல் ஏப்ரல் மாதம் 26 ஆம் தேதி, நான்கு மாதங்களுக்கு முன் மேஜர் பிளிண்ட் படுதோல்வியடைந்த கொல்லம் கொண்டானுக்கு எதிரில் தன் படையுடன் தோன்றினான். அவனுடைய



முக்கிய நோக்கம் கோட்டைக் குள்ளிருப்பவர்களைத் தப்பி ஓடவிடாமல் செய்ய வேண்டும் என்பது. ஆனால் அவன் எடுத்துக் கொண்ட எல்லாப் பாதுகாவலான முயற்சிகளையும் மீறி மே முதல் தேதி துப்பாக்கிக் குண்டுவீச்சு தொடங்கியவுடனேயே கோட்டைக்குள் இருந்தவர்கள் தப்பி விட்டதை அறிந்தான். இது கர்னல் காம்பெலுக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது. ஏனெனில் கலகக்காரக் கும்பலின் முக்கிய தலைவர்களைப் பிடித்தாலன்றி அவர்கள் கோட்டைகளைக் கைப்பற்றித் தரைமட்டமாக்குவதில் - அதைத் திரும்பக் கட்டும் வசதியை அவர்களுக்கு ஏற்படுத்துவதைத் தவிர வேறு பலன் ஒன்றுமில்லை. மேலும் கோட்டைகளைத் தரைமட்டமாக்குவதற்கு அவன் செய்யும் செலவை விடக் குறைந்த செலவிலேயே அவர்கள் புதுக்கோட்டைகளை வெகு விரைவில் கட்டிவந்தனர்.

3 ஆம் தேதி கொல்லம் கொண்டானிலிருந்து சாத்தூருக்குப் (சேத்தூர் என்பது சாத்தூர் என்பதல்ல) படையுடன் சென்றான். அங்கு அவனுக்கு அதிக எதிர்ப்பு இருந்தது. எதிரிகளின் ஒரு பகுதிப்படை கோட்டைக்கு வெளியே ஒரு இடத்தைப் பிடித்துக் கொண்டு கர்னலின் படையின் ஒரு பகுதியைப் பெரிதும் தாக்கின. அவர்கள் சிறிது துன்பத்துடன் இடம்பெயர்ந்து கோட்டைக்கு ஓடும்படி விரட்டியடித்தனர். அதில் கர்னல் படையில் இரண்டு தலைவர்களும் 46 சிப்பாய்களும் காயமடைந்தனர். மூன்று சிப்பாய்கள் கொல்லப்பட்டனர். எதிரிகளில் 80 பேர் கொல்லப்பட்டனர். 100 பேர் காயமடைந்தனர். கர்னல் காம்பெல் கோட்டையைச் சுற்றிப் பீரங்கித் தளவாய்களை நிறுத்தினான். ஆனால் பீரங்கிப் படை தாக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்து முடிப்பதற்குள் இதையறியாத எதிரிகள் தங்கள் கோட்டைக்குள்ளிருந்து தப்பிக்க முடியாமல் அரணிடப்பட்டு தாக்கப்படப் போவதை உணர்ந்து இரவிலேயே தப்பிவிட்டனர். இதைக் கண்ட கர்னல் கார்ப்பர் தன் படையையும் நவாபின் குதிரைப் பட்டாளத்தையும் எதிரிகளைத் தொடரும்படி கட்டளையிட்டான். ஆயினும் அவன் கூறுவதாவது: 'ஹார்பரின் படைகளை விட நவாபின் குதிரைப்படையினர் மிக்க சுறுசுறுப்புள்ளவர்களாயிருந்தனர். பிந்திய குதிரைப்படைக்குப் பொதுவாக அவர்கள் நன்மை செய்வதைவிட நாசம் விளைவிக்கத் தக்கவர்களாயிருந்தனர். அவர்கள் அதிகப் படியானப் பொருள்களை வீணாக்கினரே தவிர எவ்வித நன்மையும் செய்ததாகத் தெரியவில்லை. அவன் நினைத்ததைவிட சாத்தூர் மிக்க பலம்வாய்ந்த கோட்டை எனக் கர்னல் காம்ப்பெல் கண்டான். அக்கோட்டை பாளையங்கோட்டை அளவே பெரியதாயிருந்ததுபோல் அவனுக்குத் தோன்றிற்று. கோட்டை பலமான முள்வேலியினால் சூழப்பட்டிருந்தது.

அவன் கோட்டைக்குள் சுமார் 1000 காளை பொதிச்சுமை தானியம் இருப்பதையும் அறிந்தான். அதைவிட்டுச் செல்வதற்குமுன் அதைத் தரைமட்டமாய் அழித்துச் சென்றான்.'

கானலுடைய அடுத்த படையெடுப்புக்கு இலக்காகியதும், பெரும் ஏமாற்றத்தை விளைவித்ததும் சிவகிரியே. சேத்தூரிலிருந்து 10 ஆம் தேதி அங்கு சென்றடைந்தவுடன், அக்கோட்டை ஏற்கனவே கைவிடப்பட்டிருந்ததைக் கண்டான். அதைக் காத்துக் கொண்டிருந்தவர்கள் அவன் வருவதை அறிந்ததும் அங்கிருந்து ஓடி மலைகளில் பதுங்கி விட்டனர். அங்கு எதிரிகள் அடைந்த துன்பமான நிலைக்கு மிக்க வருந்தினான்.

## 1767 ஆம் ஆண்டு முதல் 1771 ஆம் ஆண்டு வரை

உண்மையில் அவர்கள் அதிகாரிகளை எதிர்த்ததற்காக மிக்க வருந்தித் தங்கள் குற்றத்தை உணர்ந்திருக்க வேண்டுமென முடிவு செய்தான். அத்தகைய எதிர்ப்பான குழப்பங்கள் நாட்டில் உண்டாகக் காரணம் பாளையக்காரர்களுக்கும் மக்களுக்கும் ஏற்பட்ட நவாப் அரசாங்கத்தின் கொடுமையும் அநீதியான ஆட்சியுமே என்று அவன் ஊகித்தான். 20,000 மக்கள் வசித்து வந்த சிவகிரியில் ஒரு மனிதரோ, பெண்ணோ அல்லது குழந்தையோ யாரும் காணப்படவில்லை. சிவகிரி கோட்டை சேத்தூர் கோட்டையைவிடப் பெரியது; பலமுடையதும்கூட. அவர்கள் வருவதற்குள் கோட்டைவாசிகள் வெளியேறாமலிருந் திருப்பின் அதைக் கைப்பற்றுவதில் சிறிது அழிவு ஏற்பட்டிருக்கும். ஐந்து ஆறு நாட்கள் அக்கோட்டைக்கருகே இருந்த பிரதேசங்களைக் கண்டு எவ்வளவு ஏங்கினான் என்பது அவன் அரசாங்கத்தினருக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெரிகிறது.

''இந்தச் செழிப்புமிக்க நாட்டை முழு நாசத்தினின்றும் காப்பாற்ற ஏதேனும் ஒரு வழியை நவாபு கடைப்பிடிக்க வேண்டுமென்று நான் மனப் பூர்வமாக ஆசைப்படுகிறேன். வேகமாகப் பலனுள்ள ஏதேனும் ஒரு மாற்றம் ஏற்படாவிட்டால், நான் இதுவரை கண்டிராத மிக அழகான அச்செழிப்புள்ள வயல்கள் அடுத்த ஆண்டில் வெறும் பாழ் நிலமாகிவிடும் என்பதை நினைக்க உண்மையில் எனக்கு வருத்தமாயிருக்கிறது.''

அவனுடைய அடுத்த கடிதம் வாசுதேவ நல்லூரிலிருந்து மே 28 ஆம் தேதி எழுதப்பட்டது. சிவகிரி கோட்டையைத் தரை மட்டமாக்கும் வேலையை மேஜர் பிளிண்டிடம் விட்டு விட்டு அவன் 13 ஆம் தேதி வாசுதேவநல்லூரை அடைந்தான். 17 ஆம் தேதி மேஜர் பிளிண்ட்



அவனுடன் சேர்ந்து கொண்டான். 18 ஆம் தேதி இரவு காப்டன் காப்பரை ஏமாற்றிச் செல்ல எதிரிப்படைகள் முயன்றது. ஆனால் அவை திரும்பும்படி தாக்கப்பட்டது. 19 ஆம் தேதி அவன் கோட்டையில் வழி ஏற்படுத்தப் பீரங்கித் தாக்குதலை ஆரம்பித்தான். ஆனால் அச்சுவர், சூரிய வெப்பத்தில் சுடப்பட்ட செங்கல்லால் (அக்காலத்தில் சூளை முறை இருப்பினும் இம்முறை ஏனோ? - ந.ச.) கட்டப்பட்டு களிமண்ணால் பூசப்பட்டிருந்தது. எனவே 500 வெடி குண்டுகள் ஒரே இடத்தில் சுடப்பட்டும் பயனில்லாது போயிற்று. அப்பொழுது கனத்த மழை பெய்ய ஆரம்பித்து 25 ஆம் தேதி வரை நிற்கவே இல்லை. (அந்த ஆண்டில் வழக்கத்திற்கு மாறாகத் தென்மேற்குப் பருவக்காற்று சில வாரங்களுக்கு முன்னதாகவே ஆரம்பித்து விட்டது - ந.ச.) இதைச் சாக்கிட்டு எதிரிப் படைகள் மூன்று வெவ்வேறு இடங்களிலிருந்து 20 ஆம் தேதி விடியற்காலை 4 மணிக்கே கோட்டையினின்றும் தப்பி அருகிலுள்ள மலைகளுக்குச் சென்று தப்பிவிட்டனர். முற்றுகையில் முதல் பீரங்கி வெடி நன்றாக வெடித்தது. ஆனால் மறுமுறை மழை காரணமாகப் பீரங்கிகள் வெடிக்கவே இல்லை. அவன் இக்கோட்டையைப் பற்றிக் கூறுவதாவது: ''வாசுதேவ நல்லூர் கோட்டை நீண்டகாலத்திய சிறந்த கோட்டையாயிருந்தாலும், அவன் கண்ட நாடுகளுள் தானியம் விளைவிக்க மிகச் சிறந்த நாடாக இது இருந்தாலும், அதைத் தரைமட்டமாக்காது தன்னிடமுள்ள நவாப் படை முழுவதையும் பீட்டர் டேவிட்சன் என்பவர் தலைமையில் அங்குக் காவலிருக்கும்படி செய்யத்தீர்மானித்தான். இந்த பீட்டர் டேவிட்சன் நவாபின் கீழ் காப்டன் பதவி பெற்றவன்; மிக்க பலம் வாய்ந்தவன் என்ற புகழ் பெற்றவன். அவன் முற்றுகையிட்ட இடங்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த கோட்டை இதுதான் என்று அவன் எண்ணினான். (யூசுப்கான் முற்றுகையிட்ட குறிப்பில் இக்கோட்டையைப் பற்றிய விவரத்தைக் காண்க.) கூலிப்படைகள் சிறிதும் கவலையின்றிப் பீரங்கித் தாக்குதலுக்கு அஞ்சாது முன்நின்று உயிர் துறந்ததைக் கண்டு அவன் ஆச்சரியமடைந்தான். பீரங்கி வெடித்த பயனால் கோட்டை பிளவு கண்டவுடனேயே அவர்கள் துப்பாக்கி பீரங்கி குண்டுகளிடையே அமைதியாக 'பனைமரச் சக்கைகளையும் வைக்கோலையும் போட்டுப் பழுதுபார்த்துக் கொண்டேயிருந்தனர். நவாபினால் மக்கள் அல்லல் படுத்தப்படுவதே அவர்களின் எதிர்ப்புக்குக் காரணம் என்று முன்னைப் போலவே முடிவு செய்தான். அவன் படைகளால் மக்களுக்கு எதுவும் இடையூறு ஏற்படாவண்ணம் பார்த்துக் கொண்டான். எனினும் அரசின் கட்டளையைப் பெற்று மக்களுக்குச் சில வசதிகளையேனும் செய்து கொடுக்க ஆவலாயிருந்தான். நவாப் மேலும் காலத்தை வீணே கடத்த

நேரமில்லை என்றும் உடனடியாகச் சில உடன்படிக்கையாவது செய்து கொண்டால்தான் மக்களை நாட்டுக்கு வரும்படியும் நிலத்தை உழும்படியும் கேட்டுக் கொள்ள முடியுமென அவன் கருதினான். வாசுதேவ நல்லூர் கோட்டை பிடிபட்டதைப் பற்றி அரசாங்கத்தினர் மகிழ்ச்சியடைந்தனர் எனினும் அங்கு நவாபின் துருப்புகள் நிறுத்தப்பட்டிருப்பதை அவர்கள் விரும்பவில்லை. எனவே உடனே நவாபின் துருப்புகளுக்குப் பதிலாகக் கம்பெனித் துருப்புகளை நிறுத்திவைக்கக் கர்னல் காம்பெலுக்குக் கட்டளையிட்டனர்.

பாளையக்காரர்களுடன் சமாதானம் செய்து கொள்ள நவாபிடமிருந்து அதிகாரிகள் வரத் தாமதமானதால் கர்னல் காம்பெல், காப்டன் ஹார்ப்பரிடம் கூறி சங்கரநயினார் கோவிலில் ஒரு இராணுவ அமைப்பை ஏற்படுத்தக் கட்டளையிட்டான். ஜூன் மாதம் 13 ஆம் தேதி அவன் தன் வீரர்களுக்கு அவர்கள் ஐரோப்பியராயினும் சிப்பாய்களாயினும் மக்களை நியாயமாயும் அன்புடனும் இரக்கத்துடனும் நடத்த வேண்டியதன் அவசியத்தைப் பற்றிச் சிறந்த குறிப்புகளுடன் எடுத்துக்காட்டி ஓர் அருமையான கடிதம் எழுதியிருந்தான். அதற்குப் பிறகு நவாபிடமிருந்து பாளையக்காரர்களுடன் சமாதானப் பேச்சு வார்த்தை நடத்தும்படி ஆணை சார்ந்த (அதிகாரப்பூர்வமான) கடிதம் வந்தது. உடனே கர்னல் காம்பெல் போராட்டங்களை நிறுத்தும்படித் தெரிவித்தான். பல பாளையக்காரர்களின் வக்கீல்களையும் பாக்கிகளைப் பற்றியும் இனி வருங்காலத்தில் ஒழுங்காகக் கப்பம் கட்டுவதைப் பற்றியும் அவர்களும் ஒரு முடிவுக்கு வர விவாதித்தான். கர்னல் காம்பெலுக்கு எது சிறந்ததெனப்படுகிறதோ அதைப் பாளையக்காரர் விஷயத்தில் செய்து முடிக்க கர்னல் காம்பெலுக்கு முழு அதிகாரம் கொடுக்கும்படி நவாபுக்கு அரசினர் பரிவுரை (சிபாரிசு) செய்தனர்.

கர்னல் காம்பெலினுடைய சமாதான உடன்படிக்கை வெகு நாள் நீடிக்கவில்லை. இரண்டு மாதங்களுக்குள் பாளையங்கோட்டையில் தளகர்த்தனாயிருந்த காப்டன் பிரிச்மன், கர்னல் காம்பெல் தன் படையுடன் நாட்டை விட்டுச் சென்றவுடனேயே பல பாளையக்காரர்கள் அவர்கள் ஏற்கனவே ஒப்புக் கொண்ட கப்பப் பணத்தைச் செலுத்த முன்போலவே மறுக்க ஆரம்பித்து விட்டதாக அரசினருக்குத் தெரிவித்தான். இக்கீழ்ப்படியாமை செயலுக்குத் தலைவனாக இருந்தவன் சிவகிரி பாளையக்காரன். காப்டன் பிரிச்மன் மறுபடியும் ஒப்பந்தங்கட்கு உடன்படும்படி செய்வதில் வெற்றிபெற்றான். இதற்காக எடுத்துக் கொண்ட முயற்சிகளின் பெரும்பகுதி நவாபின்



மானேஜர் அல்லது நிதி அமைச்சராக அப்போது திருநெல்வேலியிலிருந்த ராஜகுருமத்ராவினால் (Raja Hooroomctrah) செய்யப்பட்டது. மேலும் அவன் வடகரை பாளையக்காரனிடமிருந்து படை உதவியும் பெற்றான். இவ்வடகரைப் பாளையக்காரன் சில நாட்களுக்கு முன் அவனுடைய பாளையம் எல்லாவற்றையும் இழந்துவிட்டான். இப்பொழுது நவாபின் பணியில் அவனை அமர்த்திக் கொள்வதற்காக அவனுக்கு ஒன்பது கிராமங்கள் திரும்பக் கொடுக்கப்பட்டன. இது 1767 இல் நடைபெற்றது. இந்தச் சமயத்தில் ஏற்பட்ட மற்ற ஒப்பந்தங்களில் நவாபினுடைய காரியக்காரன் (மானேஜர்) சிவகிரி பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர்களைத் திருநெல்வேலியிலிருந்து நாடுகடத்திவிட்டு, அவர்களுக்குப் பதில் வேறு பாளையக்காரர்களை நியமித்தான். செப்டம்பர் மாதம் 2 ஆம் தேதி ஹைதர் அலியின் படைத் தளகர்த்தன் பாளையக்காரர்கள் அனைவரையும் நவாபுக்கும் அரசாங்கத்தினருக்கும் எதிராகத் தன்னுடன் சேர்த்துக் கொண்டால் பாளையக்காரர்களின் பழைய உடைமைகள் திரும்பிக் கொடுக்கப்படுவதுமன்றி; புதிய சில கிராமங்களும் கொடுக்கப்படுமென எல்லாப் பாளையக்காரர்களுக்கும் தெரிவித்திருப்பதாக அரசாங்கத்தினருக்குச் செய்தி எட்டியது.

1767 ஆம் ஆண்டிலே 95 ஆங்கிலப் புதிய படைவீரர்கள் அன்ஜன்கோவில் வந்திறங்கினர். ஆனால் அவர்களுக்கு மேலும் கட்டளைகள் வரும்வரை அங்கேயே இருக்கும்படி கட்டளையிடப்பட்டது.

1768 பிப்ரவரியில் லெப்டினண்ட், கர்னல் பிரிச்மன், ஐதர் அலியை எதிர்க்கும் போர்க்களத்திலுள்ள படையுடன் சேர்ந்து கொள்ள உத்தரவிடப்பட்டது. அவனுடைய இடத்தில் காப்டன் பிரௌன் பாளையங்கோட்டை தளகர்த்தனாக நியமிக்கப்பட்டான். கர்னல் பிரிச்மன், காப்டன் பிரௌனுக்குத் தேவையான அநேகப் பாளையக்காரர்களைப் பற்றிய செய்திகளையும் தனக்குத் தெரிந்தவரை கூற வேண்டியதாயிற்று. காப்டன் பிரௌன் நவாபினுடைய மானேஜருக்கு எல்லாவற்றையும் ஒழுங்கான நிலையில் வைத்துக் கொள்ள தன்னுடைய அதிகாரத்திற்குத் தேவையான உதவிகளைப் பற்றித் தெரிவிக்க வேண்டியதாயிற்று.

ஜூன் 10 ஆம் தேதி காப்டன் பிரௌன் ஒரு சார்ஜண்ட் தலைமையில் மூன்று கம்பெனிப் பட்டாளத்தை அனுப்பிப் புதிதாக ஒரு கோட்டையைக் கட்டிக் கொண்டிருந்த ஒரு பாளையக்காரரின் கோட்டைய்ய அழிக்க அனுப்பி இருப்பதாகச் செய்தி அறிவித்தான்.

கோட்டையின் பெயர் கொடுக்கப்படவில்லை. ஆனால் பாளையக்காரனின் பெயர் காம்போ நாயக (Cambo Naig) என்று சொல்லப்படுகிறது. அப்பெயர் அநேகமாய் காமைய நாயகா (Kamaiya Nayaga)வைக் குறிக்கலாம். ஆகஸ்டில் திருச்சிராப்பள்ளியிலுள்ள கர்னல் உட் (Calonel Wood) டுக்குப் படை உதவி அனுப்புவதற்காகத் துருப்புகளையும் துப்பாக்கிகளையும் அனுப்பும்படி கட்டளையிட்டான். ஆனால் அவனால் இக்கட்டளையை நிறைவேற்ற முடியவில்லை. ஏனெனில் சுமார் எட்டு ஒன்பது ஆயிரம் கூலிப் படைகள் ஒன்று சேர்ந்து கொண்டு தங்களுக்குள் உள்ள சில குழப்பங்களைத் தீர்த்துக் கொள்வதாகப் பாசாங்கு செய்து கொண்டு உண்மையில் சர்க்கார் மாவட்டங்களைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தன. அக்டோபர் 24 ஆம் தேதி ஒழித்துக் கட்டிய சிவகிரி பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர்களின் ஒற்றர்கள் அந்த மாவட்டங்களில் குழப்பங்களை ஏற்படுத்துவதாக முறையிட்டிருந்தான். இந்த இரண்டு பாளையக்காரர்களும் அப்பொழுது இராமநாதபுரம் அரசரின் நாட்டில் இருந்து வந்தனர். அவர்களுடைய திட்டங்களுக்கான உதவியை அந்த ராஜாவிடமிருந்தே பெறுவதாக ஊகிக்கப்பட்டது. எனவே இதன்படி அரசாங்கத்தினர் இத்தகைய செயல்களில் ஈடுபடுவதற்காக அரசை எச்சரித்துக் கடிதம் எழுதினர்.

1769 இல் காப்டன் பிரௌன் ஹைதர் அலிக்கு எதிராகப் போரிடும்படி பாளையக்காரர்களைத் தூண்டினான். முதலில் அவர்கள் விசுவாசத்துடன் நடந்து கொண்டதாகத் தெரிந்தது. ஆனால் பின்னால் எதிரிகளுடன் சேர்ந்து கொண்டனர். நவாபினுடைய படைகள் அவமானம் தரத்தக்க நிலையில் நடந்து கொண்டதாக அவன் குறைப்பட்டுக் கொண்டான்.

1770 இல் குறிப்பிடத்தக்க சம்பவம் எதுவும் நிகழவில்லை. 1771 இல் காப்டன் பிரௌன் அவனுடைய படையுடன் சென்னைக்கு அழைக்கப்பட்டான். அவன் இடத்திற்குக் காப்டன் கூக் (Cooke) நியமிக்கப்பட்டான். திரு. கம்மிங் (Mr. Cumming) என்பவன் சம்பளம் கொடுப்போனாகவும் பண்டக சாலைப் பாதுகாவலனாகவும் நியமிக்கப்பட்டான்.

**தபால் போக்குவரவு ஆரம்பம்**

இந்த ஆண்டில் திருநெல்வேலி கச்சேரி அதிலிருந்த எல்லா ஆவணங்களுடனும் எரிக்கப்பட்டது.

18 ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் சென்னைக்கும்



**பம்பாய்க்குமிடையே ஏற்பட்ட தபால் போக்குவரவு:**

1771 இல் அரசாங்கத்தினரால் அஞ்ஜன்கோவுக்கு அனுப்பும்படி பாளையங்கோட்டையிலுள்ள ஒரு படைத் தலைவனுக்குச் சென்னையிலிருந்து பம்பாய்க்கு அனுப்பப்பட வேண்டிய ஒரு கடிதக் கட்டு அனுப்பப்பட்டது. அஞ்ஜன்கோ திருவாங்கூர் கடற்கரையிலுள்ள திருவனந்தபுரம் கொல்லம் இவற்றினிடையே உள்ள ஒரு சிறு நகரம். இந்நகரம், கிழக்கிந்திய கம்பெனிக்குச் சொந்தமானது. அங்கிருந்து கடல்வழியாக எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் பம்பாய்க்கு அனுப்பப்பட்டது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. கடிதக் கட்டுகள் இதே போல் பம்பாயிலிருந்து மதராசுக்கு அனுப்பப்பட்டன. இந்தச் சுற்றுப் போக்குவரத்து 19 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நேரடியாக நடந்து வந்தது. ஏனெனில் அக்காலத்தில் மதராசுக்கும் பம்பாய்க்குமிடையேயுள்ள மாவட்டங்களில் சாதாரணநிலை பாதுகாப்புடையதாக இல்லை. ஹைதர்அலி, திப்புசுல்தான் மராட்டியர்கள் ஆகியவர்களால் ஏற்பட்ட சச்சரவுகள், சண்டைகளால் குழப்பமுற்றிருந்தது. உள்ளூர் - தபால் போக்குவரத்து அவ்வளவு சிறந்ததாக இல்லை எனினும் கடல் கடந்த தபால் போக்குவரத்து மிக்க வளர்ச்சியுற்றிருந்தது. உள்நாட்டுத் தபால் போக்குவரத்துகள் மிக்க வளர்ச்சியடையாதிருந்தன எனினும் அயல்நாட்டுத் தபால் போக்குவரத்து தொடங்கி வளர ஆரம்பித்தது. சென்னை அரசாங்கத்தினிடமிருந்து ஆட்சி இயக்குநர் (Court of Directors) களுக்கு வரும் அவசரக் கடிதங்களின் மறு நகல்கள் யாவும் அடிக்கடி பெர்ஷியன் குடாவிலுள்ள பஸாரா வழியாகவே அனுப்பப்பட்டு வந்தது. அங்கிருந்து வரும் கடிதங்களின் மறு நகல்களும் அதே வழியாகவே வந்து சேர்ந்தன.

வரலாற்று ஆசிரியரான ஓர்ம் அஞ்ஜன்கோவிலில் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. (ஆரிய செய்தி! - ந.ச.)

**1771 ஆம் ஆண்டு முதல் 1778 ஆம் ஆண்டுவரை**

ஸவார்டி (Swarty) என்ற புகழ்பெற்ற மதபோதகரின் (பத்திரிகையில்) இதழில் 1771 ஆம் ஆண்டு பாளையங் கோட்டையைப் பற்றிய முதலாவது குறிப்பு வெளியாகிறது.

1772 இல் மதுரை திருநெல்வேலிப் பாளையக்காரர்களை, முக்கியமாக நாலுக்கோட்டை என்ற சிவகங்கை பாளையக்காரனை ஒடுக்குவதற்காக ஒரு படையெடுப்பு திட்டமிடப்பட்டது. (மருது பாண்டியர்க்கு முன்னிருந்த சிவகங்கை மன்னரும் மானமறவர் போலும்!

- ந.ச.) அந்த வேலை மேஜர் பிராய்த் வெயிட் வசம் ஒப்புவிக்கப்பட்டது. ஆனால் படைகள் மிக்க அவசரமாக வடக்கே தேவைப்பட்டமையால் அக்காரியம் வெற்றிகரமாக நடத்தப்படவில்லை.

1773 இல் திருநெல்வேலியில் குறிப்பிடத்தக்க எச்சம்பவமும் நடைபெறவில்லை.

1774 இல் கொடுமையான பஞ்சம் ஏற்பட்டது.

1775-இல் காப்டன் குக் அவனுடைய படையுடன் சென்னைக்கு மாற்றப்பட்டு அதற்குப் பதில் வேலூரிலிருந்து காப்டன் ஹாப்கின்ஸ் (Captain Hopkins) மதராசுக்கு வந்த சம்பவம் ஒன்றுதான் ஏற்பட்டது. பாளையங் கோட்டையிலுள்ள இங்கிலீஷ் கோவில் பிரதேசத்தில் காணப்படும் மிக முந்திய தேதி 1775 ஆம் ஆண்டுதான்.

1776-1777இல் நவாபின் நிர்வாகி ராஜா குடுமத் ராமால் (Raja Kuhumat Ram) பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து துரத்தப்பட்ட கட்டபொம்ம நாயக்கன் திரும்பவும் வந்து அவனுக்குப் பதிலாக அவனிடத்தில் 1771 இல் சையது முகமது கானால் (Syed Mohamed Khan) நியமிக்கப்பட்ட பாளையக்காரனைக் கொன்றுவிட்டு மறுபடியும் அதிகாரத்தைக் கைப்பற்றினான். சையத் முகமது கான் அங்கு இல்லாமையால் நவாபினுடைய ஆட்கள் பாஞ்சாலங்குறிச்சிக்கருகே தங்கியிருந்த போதுமான குதிரைப்படையையும் காலாட்படையையும் திரட்டி அந்த இடத்தைக் கைப்பற்றும்படி கட்டளையிட்டான். அந்த ஆண்டில் பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்ற வேறு எந்த முயற்சியும் எடுத்ததாகத் தெரியவில்லை.

1777 - நவாபிடம் வேலை பார்த்து வந்த காப்டன் பிகார்ட்டின் (Captain Pickard) தலைமையில் நவாபின் இரண்டு போர்ப்படைகள் துப்பாக்கிகளுடன் பாளையக்காரரை எதிர்க்கத் திருநெல்வேலி நோக்கிப் புறப்பட்டது என்று காப்டன் ஹாப்கின்ஸ் பிப்ரவரி மாதம் 16 ஆம் தேதி அறிவித்தார். அந்தப் படை பாளையக்காரரிடமிருந்து நவாபுக்குச் சேர வேண்டிய வரியைத் திரட்ட அனுப்பப்பட்டது. ஆனால் வழக்கம்போல் அவர்கள் வரிசெலுத்த மறுத்துவிட்டனர். கூலிப்பட்டாளங்கள் அதிகமாகச் சேகரிக்கப்பட்டிருந்த, சிவகிரியைத் தாக்குவதுதான் இப்படையின் முக்கிய நோக்கு. இதில் விசித்திரமாகப் பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர்கள் 4000 மனிதர்களுடன் நவாபின் படையுடன் சேர்ந்து விட்டார்கள். நவாபின் காரியாஸ்தனுடன் பாளையக்காரன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் பயனே இந்த இணைப்பாகும்.



இப்படை சிவகிரியைத் தாக்கி அதை அடக்க முயற்சித்தது. ஆனால் அதன் முடிவைப்பற்றிய செய்தி கூறப்படவில்லை. ஒருவேளை வழக்கம்போல் தோல்வி, அதை அடுத்து ஓர் ஒப்பந்தமாய் இருந்திருக்கலாம்.

காப்டன் பிரௌனுக்குப் பின் காப்டன் எடின்ங்டன் (Captain Eidington) அப்பதவிக்கு வந்தான். ஆனால் அவனும் சீக்கிரத்திலேயே அதிகாரப் பதவியை விட்டுவிடும்படி கட்டளையிடப்பட்டான்.

1778-காப்டன் எடிங்டன் விலகியவுடன், காப்டன் பாரிங்டன் பாளையங்கோட்டைப் படைத்தலைவனாக நியமிக்கப்பட்டான்.

ஏப்ரல் ஆறாம் தேதி பாளையக்காரர்களிடம் பாக்கியிருந்த வரிப்பணத்தை வசூலிக்கத் துணை செய்ய ஐந்து கம்பெனி சிப்பாய்ப் படைகளை அனுப்பிவைக்கும்படி காப்டன் பாரிங்டன் உத்திரவிடப்பட்டான். அவர்களுடைய எதிர்ப்பின் போது அரசாங்கத்தாரின் விரைவு ஆணைகளின்றிப் படையைப் பயன் படுத்தக் கூடாதெனவும் ஏற்பட்டிருந்தது.

**முஸ்லீம்கள் இந்துக்களுக்கு இயற்றிய கொடுமை**

1779 - கர்னல் பிராய்து வெயிட் (Colonel Braith Waite) திருநெல்வேலியைக் கடந்து செல்லும்போது நவாபின் ஆட்கள் மொகரத்தின் போது இந்துக்களுக்கு இயற்றிய கொடுமைகளைப் பற்றி அரசுக்கு அறிவித்தான். அவர்கள் ஒருசிலையைச் சுக்குகளாக்கி அநேக பார்ப்பனர்களைக் கொன்றனர். இதனால் வேளாண்மை மற்ற உற்பத்தி சாலைகள் மூடப்பட்டன. இந்துக்கள் நீதி கேட்டு வஞ்சம் தீர்க்க வற்புறுத்தினர். துணிவுள்ள திருநெல்வேலி பாளையக்காரர்கள் வசம் அநேக வலிமையான கோட்டைகள் இருந்தன. எனவே அவர்கள் இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு குழப்பம் ஏற்படுத்தலாமென அவன் பயந்தான். மேலும் நவாபினுடைய பழைய பஸ்தார் புதிய பஸ்தார் இவர்களுக்கும் இந்து குத்தகைக்காரானாகிய தளவாய் முதலிக்கும் ஏற்பட்டிருந்த உட்பகைகள் காரணமாக நாடு கலக்கமுற்றிருந்ததெனவும் அவன் தெரிவித்தான். பிறகு கர்னல் பிராய்துவெயிட் போதுமான படையுடன், மலபார் கரையில் ஏற்பட்டிருந்த பயனற்ற நடவடிக்கைகளில் பங்கெள்ளும் பொருட்டு அஞ்ஜன் கோவிலிருந்து தலைச்சேரிக்குக் கப்பல் ஏற அஞ்ஜன்கோ நோக்கிப் புறப்பட்டான். இந்துக்களுக்கு மகமதியர் இழைந்த அவமானங்களால் நாட்டில் ஏற்பட்ட கலவரத்தில் கர்னல் பாரிஸ்டன் படைக்குத் தேவையான உணவுகளைப் பெறுவது மிகக்

கடினமாயிருக்கிறதென காப்டன் பாரிஸ்டன் பாளையங்கோட்டையிலிருந்து எழுதியிருந்தான். இந்த ஆண்டின் இறுதியில் காப்டன் எடிங்டன் பாளையங்கோட்டை படைத் தலைவனாய் திரும்பவும் நியமிக்கப்பட்டான்.

1780 - நவாபின் படைகளுக்கும் சிவகிரி பாளையக்காரனுக்குமிடையே ஒரு போர் நடந்ததாகக் காப்டன் எடிங்டன் அறிவிக்கிறார். எல்லாப் பாளையக்காரர்களும் பகிரங்கமாகவோ அல்லது மறைமுகமாகவோ பொறுப்பற்றிருந்தமையால் வரிவசூலில் மிகப் பெரிய தொகை குறையலாயிற்று. சில பாளையக்காரர்களும் ஹைதர் அலியுடன் கடிதப் போக்குவரத்து வைத்திருப்பதாக காப்டன் எடிங்டன் கண்டுபிடித்தார். இச்சமயத்தில் வில்லியம் லைட் (Mr. William Light) என்பவன் பாளையங்கோட்டையில் சம்பளம் கொடுப்போனாக இருந்தான். இவனால்தான் திருநெல்வேலியில் முதன்முதலில் வாசனைத் திரவியங்கள் பயிரிடுதல் புகுத்தப்பட்டது. அவன் கொழும்பிலிருந்து இரண்டு இலவங்கப்பட்டை இளஞ்செடிகளைக் கொண்டுவந்தான். திருநெல்வேலி நாட்டின் நிலை மிகவும் குழப்பத்திற்கிடமாயும் மனக்குறையுடையதாயுமிருப்பதால் சென்னை சபையின் (Council) தலைவர் இவ்விஷயத்தின் பொருட்டு நவாபை நேரில் காண வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்பட்டார். நல்வினைப் பயனாய், மிக மனநிறைவான ஒரு ஒழுங்குமுறை நடைமுறையிலிருந்தமையால், அடுத்த ஆண்டு இறுதியில் அம்முறை புகுத்தப்பட்டது.

**காப்டன் எடிங்டன் விலக்கப்பட்டான்**

திருநெல்வேலி மிஷன் பதிவுப் புத்தகம் அல்லது பாளையங்கோட்டையிலுள்ள உள்நாட்டு கிறிஸ்தவர்களின் இருப்பிடப் பதிவுப் புத்தகம் 1780 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது.

1781 சிவகிரி பாளையக்காரன் ஹைதர் அலியைத் திருநெல்வேலி நாட்டிற்குள் படையை அனுப்பிவைக்கும்படி அழைப்பு விட்டிருப்பதாகக் காப்டன் எடிங்டன் அரசாங்கத்திற்கு அறிவித்தான். மதுரை - திருநெல்வேலியில் ஹைதர் ராஜாவினால் நியமிக்கப்பட்ட குதிரைக்குட்டி ராஜா (Colt Raia) குத்தகைக்காரன் ராஜா குடுமத்ராமின் நெருங்கிய உறவினனாயிருப்பதால் அவன் ஒளிவாக (இரகசியமாக) ஹைதர் அலி பக்கம் இருக்கிறான் என்று தெளிவாக அறிந்திருப்பதாக அவன் தெரிவித்தான். ஹைதரிடமிருந்து நாட்டைக் காப்பதற்குத் தேவையான வெகு சிறு அளவு உதவியே திருவாங்கூர் மன்னனிடமிருந்து பெறமுடியும் என்றும் அறிவித்திருந்தான். தூத்துக்குடி டச்சுக்காரர்களின் கொழும்பு அரசாங்கம் எல்லா ஐரோப்பியர்களுடைய பொது எதிரியாக விவரிக்கப்பட்ட ஹைதர் அலியை ஒழிக்க, உதவி செய்வதாக உறுதி கூறியது. ஆனால், சிறிது காலத்திற்குப் பின் அவர்கள் மாறுபாடாக நடந்து கொண்ட விவரத்தைக் காணலாம்.



பிப்ரவரியில் காப்டன் எடிங்டன் லெப்டினன்ட் கால்காட் (Ralcolt) டுடன் மூன்று கம்பெனிப் படையை திருவில்லிபுத்தூர் கோட்டையைக் கைப்பற்றவும், இதன் மூலம் கலகக்காரரான சிவகிரி பாளையக்காரனைக் கண்டிக்கவும் திருநெல்வேலியின் உயிர்நாடியாகிய இடமென்று கருதப்பட்ட ஒரு இடத்தைக் கைப்பற்றவும் அனுப்பினான். சிவகிரியின் உண்மையான தலைவன் அச்சமயத்தில் பாளையங்கோட்டை சிறையிலிருப்பதாக அவன் குறிப்பிட்டிருந்தான். லெப்டினன்ட் கால்காட் மதுரைக்கருகில் 3000 கூலிப்பட்டாளத்தினாலும் 3 அல்லது 4 நூறு குதிரைவீரர்களாலும் தாக்கப்பட்டான். அவர்களை ஆள் இழப்புடன் முறியடித்தான். அவனுக்கும் சிறிது ஆள் இழப்பு ஏற்பட்டது. நவாபிற்கும் பிரிட்டிஷாருக்கும் எதிராகப் பாளையக்காரர்களைத் தூண்டிவிடுவதற்காக ஹைதர் அலி பாளையக்காரருக்குத் தூதர்களை அனுப்பியதால் முக்கியமான பாளையக்காரர்களுடன் அவன் உடன்படிக்கை பேசியதாகவும் அதிலிருந்து பாளையக்காரர்கள் சிறையிலிருக்கும் அவரவர்களுடைய உறவினர்களை விடுவித்துவிட்டால் ஒப்பந்தத்திற்கு உடன்படுவார்கள் என்று அறிந்ததாகவும் காப்டன் எடிங்டன் குறிப்பிடுகிறான். இராமநாதபுரம் நாட்டில் கூலிப்பட்டாளத்தினால் தாக்கப்பட்ட படைகளுக்குப் பதிலாக 2000 ஆள்களடங்கிய படையை அவன் கேட்டிருந்தான். அந்த ஆண்டின் பிற்பகுதியில் டச்சுக்காரர்கள் தூத்துக்குடியை வலுப்படுத்தினர். அதன்வாயிலாக ஆங்கிலேயருடன் சண்டையிட வெளிப்படையாகத் தயார் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் டச்சுப் படைக் கொடியை வெளிப்படையாக உயர்த்திய பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்ம நாயக்கனுக்கு மிகப் பெரிய உதவி அளித்து வந்தனர். இந்தப் பாளையக்காரன் நூறு ஆள்கள் இழப்புடன் இராமநாதபுர நாட்டிலுள்ள கமுதிக் கோட்டையில் முறியடிக்கப்பட்டான். அக்டோபரில் அவனுக்கு எதிராக ஏற்பட்ட குற்றச்சாட்டுகளால் காப்டன் எடிங்டன் விலக்கப்பட்டு, காப்டன் பில்கிளிப் (Bilcliffe) நியமிக்கப்பட்டான்.

**டச்சுக்காரரிடம் திருநெல்வேலி ஒப்படைக்கப்படுதல்**

1781 இல் அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த ஹேஸ்டிங்ஸ் டச்சுக்காரர்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள முயற்சித்தார். இந்த ஒப்பந்தம்மட்டும் வெற்றி பெற்றிருந்தால் திருநெல்வேலி ஒரு டச்சு மாவட்டமாக மாற்றியமைக்கப்பட்டிருக்கும். இந்த மாறுதல் கொழும்பு, கொச்சி, கவர்னர்களின் மூலம் கர்நாடகத்திலிருந்து ஹைதரை வெளியேற்றப் படையுதவி பெறலாமெனபதற்கே ஆகும். ஆனால் இந்த கவர்னர்கள் படேவியா (Batavia) அரசாங்கத்தின் உத்தரவுப்படி நடப்பவர்கள். அவர்களுடைய உத்தரவு வரும்வரை காலந்தாழ்த்த முடியாமையால் வாய்ப்பான நன்மையை எடுத்துக்காட்டி அத்தகைய வழக்கத்திற்கு விரோதமானப் பொறுப்பைத் தாங்களே மேற்கொள்ள வேண்டிய முக்கியத்தை உணர்த்தினர். இந்த ஒப்பந்தகளெல்லாம் வங்காளத்திலுள்ள டச்சு குடியேற்ற நாடுகளின் நிர்வாகியின் உதவியால் நடைபெற்றன. இதன்படி 1000 ஐரோப்பிய காலப்படை, 200 ஐரோப்பிய பீரங்கிப் பட்டாளம், 1000 மலாய்காரர்கள் (பிரிட்டிஷ்காரிடம்) வேலை செய்யும் காலத்தில் அவர்களுக்குச் சம்பளம் கொடுத்து கம்பெனிக்காரர்கள் காக்க வேண்டும் ; திருநெல்வேலி மாகாணம் டச்சுக்காரர்களிடம் உடனடியாக ஒப்படைக்கப்படவேண்டும். அதோடு கொச்சிக்கு அருகேயுள்ள இடங்களை வெற்றிபெற விடுதலை அளிக்க வேண்டும். இராமேசுவரத்திற்குத் தெற்கேயுள்ள கடற்கரை முழுவதிலும் முத்துக்குளிக்கும் தனியுரிமை கொடுக்கப்பட வேண்டும். பெயரளவிலும் தோற்றத்திலும் நவாபு முகம்மது அலியினுடைய நாடு குலையக்கூடாது என்றும் அவனுக்காகத் தயாரிக்கப்பட்டு முடிவு செய்யப்பட்ட ஒப்பந்தத்தில் அவன் கையெழுத்திட்டு ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. ஒப்படைத்தலின் சிறுபயனும், கர்னாடகத்திற்கு ஏற்பட்ட எல்லை மீறிய ஆபத்து இவைகள், நவாபும். சென்னை அரசாங்கத்தினரும் இந்த ஒப்பந்தத்தை விரைவுபடுத்துவதற்கான தூண்டு கோல்களாகக் காட்டப்பட்டன. எதைக் கொடுப்பது எதை எடுத்துக் கொள்வது என்ற விஷயத்தில் நவாபினுடைய நோக்கமும் சென்னை அரசாங்கத்தின் நோக்கமும் கவர்னர் ஜெனரலுடைய நோக்கமும் மிக மாறுபாடுடையதாக இருந்தது. இவர்கள் திருநெல்வேலியின் மீது அதிக மதிப்பு வைத்திருந்ததுமன்றி அவர்களுக்குப் படைகள் மிகத் தேவையாக இருக்கும் போது படைகள் கொடுத்துதவுவதைவிட அவர்களுக்குச் சம்பளம் கொடுத்துக் காப்பதென்பது லாபக் குறைவான செய்கை என எண்ணினர். இறுதியில் ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ள



மறுத்த நிர்வாகிகளின் சமூகத்திற்குக் காரணங்களைத் தெரிவித்து விட்டனர். இங்கிலாந்தின் பகைவர்களோடு டச்சுக்காரர்கள் சேர்ந்து கொண்டனர். இவ்வுண்மையைத் துப்பு கண்டுபிடித்துக் கொடுத்தவர் மக்கார்டினே பிரபு (Lord Macartney). இதன் காரணமாக மேற்கொண்டு எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

•

# இயல் - 6

## 1781 இல் வரி விதித்தது முதல் பானர்மன் - பாளையக்காரர் சண்டை தொடங்கும்வரை

### பகுதி II

**வரிவிதித்தல்**

1781 ஆம் ஆண்டின் இறுதியில் கர்நாடக நவாபிற்கும் கிழக்கு இந்தியக் கம்பெனிக்கும் ஓர் ஒப்பந்தம் முடிவாயிற்று. அதன்படி, கர்நாடகத்திலுள்ள மற்ற மாவட்டங்களுடன் திருநெல்வேலியும் கம்பெனிக்காரரின் அரசியல் நிர்வாகத்தின் பயன்களைச் சில ஆண்டுகள் கண்டன. இந்த ஒப்பந்தம் ஏற்பட்டு அதை நிறைவேற்றத் தேவையான எல்லா ஒழுங்கான முறைகளும் 1781 ஆம் ஆண்டு அக்டோபரில் செய்யப்பட்டன. அந்த ஒப்பந்தம் டிசம்பர் 2 ஆம் தேதி வரை கையெழுத்திடப்படவில்லை. ஆனால் அப்பொழுது ரெவின்யு போர்ட் ஏற்படுத்தப்படவில்லை. (1786 இல் தான் ஏற்படுத்தப்பட்டது). என்றாலும் அக்டோபர் 16 ஆம் தேதி ஒரு கமிட்டியை அரசாங்கத்தினர் நியமித்தனர் இது வரையறுக்கப்பட்ட வருவாய் கமிட்டி என்று அழைக்கப்பட்டது. இதில் ஆறு பெருங்குடி மக்கள் இருந்தனர். அவர்களுள் திருநெல்வேலிக்கு முதல் அரசு அலுவலராக நியமிக்கப்பட்ட ஜியார்ஜ் புரோக்டார் (George Proctor) அவரையடுத்து வந்த புகழ் பெற்ற திரு. ஐல்ஸ் இர்வின் (Eyles Ervoin) இருவரும் இருந்தனர். இவர்கள் நவாபின் வரியை வசூலிக்கவும் அதன் நிர்வாகத்தை நடத்தவும் நியமிக்கப்பட்டனர். இந்தக் கமிட்டிக்கு அரசாங்கத்தாரால் விவரிக்கப்பட்ட ஒப்பந்தத்தின் நோக்கம் வருமாறு: மேன்மை தங்கிய நவாபு அவர்கள் தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் தேவையான செலவுக்காக வரி வசூலில் ஆறில் ஒரு பங்கைக் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் தற்போதைய போர்க்காலத்தில் (ஹைதருடன் போரிட்டது; அப்போர் திப்புசுல்தானால் மேலும் வலுவடைந்தது) கர்நாடகத்தின் வரிவசூல் முழுவதையும்



கம்பெனியின் மேற்பார்வையிலும் அதிகாரத்திலும் விட்டுவிட்டார். அதே சமயத்தில் அரசாங்கத்தாரின் அறிவிப்புகளின் பிரதி ஒன்று கமிட்டியின் வழிகாட்டியாகக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. இச்சந்தர்ப்பத்தில் சென்னை கவர்னராக இருந்தவர் கனம் மகார்ட்னே. இந்தத் திட்டத்தின்படி அலுவலர்கள் முதலில் வரையறுக்கப்பட்ட ரெவின்யூ ரிஸீவர்கள் (வரிவசூல் செய்பவர்கள்) என்றும் பின்னர் வரையறுக்கப்பட்ட ரெவின்யூ சூப்பிரின்டணடுகள் (வரிவசூல் மேற்பார்வையாளர்கள்) என்றும் பொதுவாக அழைக்கப்பட்டனர். இவர்கள் உள்நாட்டில் செயல்களை நிர்வகிக்க நியமிக்கப்பட்ட முதல் சிவில் அலுவலர்கள். நாம் ஆராய்ந்து கண்டவாறே இக்காலம் வரை நவாபின் வரித் தொகையை வசூல் செய்வதாகிய உள்துறை நிர்வாகம் ஒன்றையே ஆங்கிலேய அரசாங்கம் செய்து வந்தது. அதுவும் மாவட்டங்களில் துருப்புகளை வைத்துக் கொண்டிருந்த இராணுவ அதிகாரிகளால் வசூல் செய்யப்பட்டது.

இந்தப் புதிய ஒழுங்குமுறை நாடு பல வழிகளில் வளமடைவதற்கான வாய்ப்புகளைத் தரும் என்று அரசாங்கத்தினர் எதிர்நோக்கினர். கமிட்டிக்கு அனுப்பப்பட்ட அறிவிப்புகளின் இறுதியில் கீழ்காணுமாறு கூறியிருந்தனர். "இந்தக் குறிப்புகளைக் கவனிப்பதன் மூலம் கம்பெனிக்காரர்கள் பயன்தரத்தக்க அறிவு பெறலாம். அவர்களால் படிப்படியாக நாட்டை அடக்குமுறையினின்றும் விடுதலை செய்ய இயலும். அதன்மூலம் இன்றுள்ள மிக இரங்கத்தக்க நிலையினின்றும் நிலங்களையும் உற்பத்திப் பொருள்களையும் மீட்க முடியும். அதனால் அதிகப்படியான வரி வருமானம் வளர வழி ஏற்படும். இறுதியில் செல்வம், வருவாய், செழுமை முதலியனவற்றை நாடெங்கும் நிலைநாட்ட முடியும்." அரசாங்கத்தினரின் இந்தக் கொள்கையின் நோக்கு நவாப் அரசாங்கத்தினரின் நோக்கத்திற்கு முழுதும் மாறுபட்டிருந்தது என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

முதல் 'திட்டமிட்ட வரிவசூலிப்பவர் (Receiver of Assigned revenue) ஆக நடைமுறையில் முதல் திருநெல்வேலி கலெக்டராக திருநெல்வேலியில் நியமிக்கப்பட்டவர் உயர்திரு. ஜியார்ஜ் புரோக்டர் (George Proctor) ஆவர். அவர் சென்னையின் கணக்கு தணிக்கையாளராக இருந்தார். பிறகு திட்டமிட்ட வரிவசூல் குழுவில் அங்கத்தினராகப் புதிதாய் நியமிக்கப்பட்டார். திருநெல்வேலியில் வரிவசூலிப்பவராக அவர் நியமிக்கப்பட்டதைத் தெரிவித்து லார்ட் மகார்டினே (Lord Macartney) எழுதிய கடிதத்தில் 1781 ஆம் ஆண்டு டிசம்பர் எட்டாம் தேதி இடப்பட்டிருந்தது. சில நாட்களுக்குப் பிறகு வந்த

மற்றொரு கடிதம் மதுரையில் அதைப் போன்ற மற்றொரு பொறுப்பை ஏற்கும்படி செய்தது. வேறொன்று இராமநாதபுர வட்டத்தில் அதே உரிமையை அளித்தது. நவாப் திருநெல்வேலியிலிருந்த அவனுடைய பஸ்தார்கள் (Fauzdars) அமில்தார் (Amildar)களுக்குப் புதிதாக நியமிக்கப்பட்ட அதிகாரிக்குக் கீழ்ப்படியும்படிக் கட்டளையிட்டான். சென்னை அரசாங்கத்தினரோவெனில் அவனுக்குத் தேவையான எந்த இராணுவ உதவியையும் உடனே செய்து தரும்படி காப்டன் எடிங்டன் (Captain Eidington), லெப்னைனட் கர்னல் நிக்சன் (Lieutenant Colonel Nixon) என்பவர்களுக்குக் கட்டளையிட்டனர். அவனுக்கு உதவியாளராக உயர்திரு. ஆர்பன் (Mr. Orpen) அவனுடன் சென்றார்.

1782 - சிவராம தலைவன் என்ற பாளையக்காரன் திருக்குருங்குடிக்கு அருகில் திருக்குருங்குடிக் கோட்டை ஒன்றைக் கட்டி அதன் சுற்றுப்புறத்தைக் கொள்ளையடித்து வந்தான். அந்தக் கிலேதார் ஒரு பிரிவு படையை அனுப்பினான். அப்படை கோட்டையைக் கைப்பற்றி அதை அழித்தது. அந்த இடத்தில் வலிமை மிக்க மறவர் குடும்பத்தின் தலைவனுக்குப் பரம்பரைப் பெயர் 'சிவராம தலைவன்' என்பதாகும்.

டச்சுக்காரருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் போர் தொடங்கியவுடன் பாளையங்கோட்டை படைத்தலைவனான காப்டன் பில்கிளிப் (Captain Bilcliffe) லெப்டினன்ட் வீலரின் (Mr. Wheeler) தலைமையில் ஒரு படையைத் தூத்துக்குடியைக் கைப்பற்ற அனுப்பினான். டச்சுக்காரரின் சிறிய காவற்படை கைதானது. பதினேழு துப்பாக்கிகள் கைப்பற்றப்பட்டன. காவற்படையுடனிருந்த பாஞ்சாலங்குறிச்சியைச் சேர்ந்த 200 மனிதர்கள் ஆங்கிலத் துருப்புகள் நெருங்கி வருவதை அறிந்து ஓட்டம் பிடித்தனர். டச்சுக்காரருக்காகப் போரிட அவர்கள் அக்கறைப்படாததே இதற்கும் காரணமாயிருக்க வேண்டும். ஏனெனில் அவர்களுடைய சொந்தக் கோட்டைகள் தாக்கப்படும் பொழுது அவர்களின் நடவடிக்கைகள் மிக்க மாறுபாடுடையதாயிருக்கும். புன்னைக்காவல், மணப்பேடு முதலிய இடங்களில் உள்ள டச்சுக்கார ஆலைகள் அழிக்கப்பட்டன. தூத்துக்குடியில் டச்சுக்காரர்களால் கட்டப்பட்ட புற அரண்களும் அழிக்கப்பட்டன. தூத்துக்குடியில் எந்த டச்சுப்படை இறங்கினாலும் உடனே அவர்களை எதிர்த்து அழிக்க வேண்டுமென்று கட்டளையிடப்பட்டது. தூத்துக்குடி பூர்வீக மக்கள், முக்கியமாகப் பரவர்கள், வீலரின் தலைமையில் தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளையும் டச்சுக்காரரின் உடைமைகளுடன் தங்களுடையதும் கைப்பற்றப்பட்டதைப் பற்றியும் நகரத்திற்குத்



திரும்புவதற்கான உரிமைக்காகவும் ஆங்கிலேயருடைய பாதுகாப்பிலிருக்கவும் நஷ்டஈடு செலுத்தப்பட வேண்டுமென்றும் புரோக்டாரிடம் முறையிட்டனர். அவன் அக்குறைகளை அரசாங்கத்திற்கு எடுத்துரைத்தான். அரசாங்கமோ அத்தகைய நடவடிக்கைகள் மிகக் குற்றமுடையவை என்று எண்ணி அந்த அதிகாரியைக் கோட்டையிலுள்ள அவனுடைய வேலையை மட்டும் கவனிக்குமாறு கட்டளைப் பிறப்பித்தது.

1782, ஏப்ரலில் அப்போது குத்தகைக்காரனாக இருந்த திருமோலிபா (திருமலையப்ப முதலி) தன் பேச்சைக் கேளாது காப்டன் கிபோயிங்ஸ் (Captain Giboings) அறிவுரையைக் கேட்டு அரசாங்க தானியங்களின் விலையை அநியாயமாக உயர்த்திவிட்டானென்றும், பாளையக்காரர்களுக்குத் தனதாயிருக்கிறானென்றும் கமிட்டிக்குக் குற்றச்சாட்டுகளை எழுதினான். அவனுக்குப் பதிலாக ஒரு புது குத்தகைக்காரனை நியமிக்க வேண்டுமென்றும் வரிவசூலிப்பவராகிய தனக்கு அவன்மேல் எல்லா அதிகாரமும் இருக்க வேண்டுமென்றும் யோசனை கூறியிருந்தான். முதலில் அப்போதைய குத்தகைக்காரனுடைய மருமகனான தீர்த்தாரப்ப முதலியை நியமிக்கவும், மதுரையிலிருந்த அமீலாகிய ரங்கராவ் என்ற ஒரு ஆளைப் பின்னர் நியமிக்கவும் முன் மொழிந்திருந்தான். அப்போது குத்தகைக்காரனாக இருந்த திருமலையப்ப முதலி புரோக்டாரினுடைய செயல்களைப் பற்றிக் குற்றம் சாட்டிக் கமிட்டிக்கு எழுதியிருந்தான். கம்பெனியினுடைய சரிஷ்டதாரும் ஒரு குற்றச்சாட்டை அனுப்பியிருந்தான். பிறகு புரோக்டாருக்கும் படைத்தலைவனான அதிகாரிக்கும் மிகக் கடுமையான தகராறு ஏற்பட்டது. திருநெல்வேலியிலுள்ள காப்டன் கிபோயிங்ஸ்சும் அவனுடைய மற்ற வேலைக்காரர்களும் வரிவசூல் விஷயத்தில் எவ்வித தலையீடும் வைத்துக் கொள்ளக் கூடாதென்று கமிட்டி உத்தரவிட்டது. ஆனால் மற்ற குறிப்புகளைப் பொறுத்தவரை புரோக்டாரின் சிபாரிசுகளைப் புறக்கணித்து விட்டது. அதற்கு மாறாக அவன் கொடுக்கல் வாங்கல் விகிதத்தில் குறுக்கிட்டமைக்கும் அங்கு அவன் சென்றது முதல் வரிவசூல் செய்தமைக்கு எவ்விதக் கணக்கும் அனுப்பாமலிருந் தமைக்கும் குற்றம்சாட்டியிருந்தனர். எதிர்காலத்தில் அவன் மாதந்தோறும் கணக்குகளை அனுப்ப வேண்டுமென கட்டளையிடப்பட்டான்.

'உரிமை மாற்றத்தின் குறிக்கோள்கள் எல்லாவற்றையும் நிறைவேற்ற மேலும் சில ஒழுங்குகள் தேவை' என்ற முடிவுக்குக்

கமிட்டி வந்ததிலிருந்தே புரோக்டாரின் நிர்வாகத்தில் கமிட்டிக்குள்ள மனக்குறை வெளியாகியது. ஆகவே, அரசாங்கத்தாரால் முதலில் கொடுக்கப்பட்ட வழிகளைத் திரும்பவும் கடைப் பிடிக்கத் தீர்மானித்து, அதன் படி பல உரிமை மாற்ற நாடுகளுக்குக் கமிட்டி அங்கத்தினர்கள் அடங்கிய ஒரு தூதுக் குழு அவ்வப்போது புறப்பட்டுச் சென்று கவனிக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. இந்த மேல் விசாரணை தற்காலிகமாயிருப்பதால் அது விருப்புவெறுப்பற்ற நிலையை நிரூபிக்கும் என்று அவர்கள் எண்ணினர். அந்தக் குற்றமொழி புரோக்டாரை மிக அதிகமாகத் தாக்கியது. அன்றியும் இதுவரை உள்நாட்டில் வேலை பார்த்து வந்த ஐரோப்பிய அதிகாரிகளையும் சேர்த்துத் தாக்கியது. இந்தத் தற்காலிக மேல்விசாரணை அவர்களை எந்தவிதமானப் பண வரவுசெலவுகளிலும் தலையிடவோ அல்லது நாட்டிலுள்ள சதித்திட்டங்களில் சேரவோ வாய்ப்பளிக்காது. அன்றியும் கம்பெனி அரசாங்கத்தின் கீழ் நியமிக்கப்பட்டுள்ள எல்லாவகையான ஐரோப்பிய மேற்பார்வைகளுக்கும், கமிட்டி விரோதமாக இருக்கிறது என்ற கருத்திற்கும் இடமில்லாமல் போகும். கமிட்டியிலிருந்து தூதுக்குழுவுடன் திருநெல்வேலிக்கு அனுப்பப்பட்ட பிரதிநிதி உயர்திரு. ஐல்ஸ் இர்வின் (Mr. Eyles Erwin) ஆவர். ஆனால் அவருடைய பதவி நியமனம் 1783 இல் நடந்த சம்பவங்களுள் ஒன்றாக அமைந்தது.

1782 டிசம்பரில் சென்னையில் திரு. புரோக்டர் இல்லாத நேரத்தில் அவனுடைய உதவியாளர் திரு. ஆர்பன், ஊதியம் வழங்குபவர் திரு. லைட் (Mr. Light), படைத்தலைவன் காப்டன் பில்கிளிப் (Captain Bilcliffe) ஆகியவர்கள் குத்தகைக்காரனுக்கு எதிராகக் கடுமையான நடவடிக்கை எடுக்க உத்தரவு கேட்டு எழுதியிருந்தனர்.

## புதிய அதிகாரியாக இர்வின் நியமனம்

1783 ஜனவரி 27 இல் பாளையங்கோட்டையிலிருந்து சென்ற மாதத்தில் எழுதிய கடிதத்திற்குக் கமிட்டி பதில் எழுதியது. அதில் அவர்கள் திரு. இர்வின் வந்துசேரும் வரை தாமதிக்க வேண்டுமென்றும், திருநெல்வேலியிலுள்ள அவர்களுடைய நிர்வாகத்திலுள்ள எல்லா வேலைகளையும் அவரிடத்தில் ஒப்படைக்கத் தீர்மானித்திருப்பதால் பொறுத்திருக்கும்படி எழுதியிருந்தனர்.

ஜனவரி 28 இல் வரி உரிமை மாற்றத் திட்டக் கமிட்டியிலிருந்து முழு அதிகாரத்துடன் இர்வின் திருநெல்வேலி நோக்கிப் புறப்பட



வேண்டுமென லார்ட் மகார்டினே (Lord Macartney) ஓர் ஆணை பிறப்பித்திருந்தார். அவ்வாணை வருமாறு:

வரி உரிமை மாற்றத் திட்டக் கமிட்டியினால் குறிக்கப்பட்ட திருநெல்வேலி மாநிலத்தின் நிலை அங்கு ஒருவரை அனுப்பும்படி எங்களைத் தீர்மானிக்கத் தூண்டியது. அந்த ஒருவர், நடைமுறையில் இயன்றவரை வரிவசூல் தொல்லைகளில் ஏற்பட்ட மனவேறுபாடுகளையும் கலகங்களையும் தீர விசாரித்து அவற்றை அறவே ஒழித்துவிடும் வேலையை நம்பி ஒப்புவிக்கத் தக்கவராயிருத்தல் வேண்டும். உங்களுடைய உற்சாகம், திறமை இவற்றிலுள்ள எங்கள் நம்பிக்கையினால் மட்டுமன்றி, கமிட்டியினால் முன்பு சிபாரிசு செய்யப்பட்டபடி கர்நாடகத்திலுள்ள வெவ்வேறு மாவட்டங்களிலும் முக்கியமாகக் கமிட்டியின் ஆரம்ப ஏற்பாட்டின்படி அதன் உறுப்பினர் அப்போதைக்கப்போது சுற்றுப் பயணம் செய்யும் படி எங்களுக்குக் கமிட்டி யோசனை கூறியிருப்பதாலும் இந்த வேலைக்குத் தங்களை நியமிக்கிறோம்.

திருநெல்வேலியிலிருந்து அவர்களுக்கு வந்த குற்றச் சாட்டுகள் எதிர் குற்றச்சாட்டுகள் இவற்றுள் எது மிக முக்கியமான விசாரணைக்குத் தகுந்தது என்று உறுதிப்படுத்த அரசாங்கத்தினரால் இயலவில்லை. ஆயினும், திரு. இர்வின் அங்கு சென்று சேர்ந்ததும் எந்தக் குற்றச்சாட்டுகளுக்குத் தகுந்த நியாயமான ஆதாரமிருக்கிறதோ அதை நன்றாகத் தீர விசாரிக்கும்படி பரிவுரை செய்தனர். சிறப்பாகப் பழைய குத்தகைக்காரன் தானிய அளவை, பண கொடுக்கல் வாங்கல் காரியங்களில் தகுதியற்ற செல்வாக்கைப் பயன்படுத்தியது தொடர்பாகத் திரு. புரோக்டாருக்கு எதிராக எழுதியிருந்த குற்றச்சாட்டுகளை விசாரிக்கும்படி கூறினர். பாளையக்காரர்களின் உடைமைகளைப் பொறுத்துத் தகுதியான விகிதத்தில் மாறுதலுக்குட்படாத ஒரு குறிப்பிட்ட கப்பத் தொகையைப் பாளையக்காரர்கள் கட்டுவதற்கான முறைகளைச் செய்யும்படி இர்வினுக்குப் பரிந்துரை செய்தது. மேலும் விவசாயிகள் மீது குத்தகைக்காரர்கள் சாட்டும் குற்றங்கள், குத்தகைக்காரர்கள் மீது விவசாயிகள் கூறும் குற்றச் சாட்டுகள் இவைகளையும் விசாரித்துச் சரிசமமான நீதி வழங்கும்படியும் கூறினர். நாட்டின் நலத்தையும் நாட்டுச் சீர்திருத்தங்களையும் முன்னேற்ற, திருநெல்வேலியில் பொதுவாக இருக்கும் நிலையைப் பற்றிய செய்திகளைக் கூடுமான வரை முயன்று பெறும்படி கட்டளையிடப்பட்டான். நாட்டின் இயற்கையான விளைபொருள்களை உற்பத்தி செய்யும் முறைகளைச்

செம்மைப்படுத்த முடியுமா என்றும் முக்கியமாக வாசனைப் பொருட்கள் உற்பத்தி செய்தலைக் கூடுதலாக்க முடியுமா என்றும் அவர் ஆராய்ந்தறிய வேண்டும். முத்துக் குளித்தலின் பயன்கள், தூத்துக்குடி வாணிபம், மன்னார்குடாவிலுள்ள குடியேற்ற நாடுகள் இவைகளைப் பற்றியும் தீர விசாரித்தறிய முயற்சிக்க வேண்டும். திரு. லைட் (Light)க்கு அணைகளைச் சீராக்கும் திட்டங்களை மேற்பார்வையிடும் படி அனுப்பப்பட்ட ஆணை உட்பட, மற்றவர்களுக்கு முன்பே அனுப்பப்பட்ட வரிவசூல் தொடர்பான எல்லா ஆணைகளையும் இர்வினுக்கு மாற்றிக் கொடுக்கும்படி செய்தனர். ஏனெனில் நாட்டின் நடவடிக்கைகளில் திருநெல்வேலியிலுள்ள வேறெந்த கனவான்களும் தலையிடுவதற்கான உரிமை கொண்டாடுதலை அரசாங்கம் மதுரையிலுள்ள எல்லா இராணுவ அதிகாரிகளும் எந்த நெருக்கடியிலும் அவனுக்குக் கீழ்ப்படியும் படி உத்தரவிடப்பட்டிருப்பதாலும் அங்கு வேறு ஒருவரும் அதிகாரியாக நியமிக்கப்படாததாலும் இர்வினே திருநெல்வேலியைக் கவனிப்பது போல மதுரையையும் பொதுவாகப் பார்வையிட உத்தரவிடப்பட்டார். நாடுகளுக்குப் பயணம் செய்யும் போது அவனுக்குத் தக்க வழித் துணைகளை அவர்கள் ஏற்படுத்திக் கொடுத்தல் வேண்டும். அன்றியும், தஞ்சாவூரிலுள்ள ஜான் சுலைவன் நேர்மையும் பட்டறிவும் மிக்கவராதலின் பெருமைவாய்ந்த அவருடைய ஆலோசனைகளைக் கடிதம் மூலம் ஏற்றுக் கொள்ளும்படியும் அரசாங்கத்தினர் அறிவித்திருந்தனர். திரு. சுலைவான் அப்பொழுது தஞ்சாவூர். மறவர் நாடு, திருச்சிராப்பள்ளி இவற்றின் வரி உரிமை மாற்றுத் திட்டத்தின் மேற்பார்யைாளர். மறவர் நாடு, இராமநாதபுரத்தையும், சிவகங்கையையும் குறிக்கும். இறுதியாக அவர்கள் அவனுக்கு அன்றாட செலவுக்காகத் திருநெல்வேலி வரிவசூலிப்பவராகிய திரு. புரோக்டாருக்குக் கொடுத்தது போல் ஏழு பகோடாக்கள் கொடுப்பதாகவும் அவனுடைய உதவியாளனுக்குப் படைத் தலைவன் ஊதியமும் படிச்செலவும் கொடுப்பதாகவும் கூறினர்.

மற்றொரு கடிதத்தில் தூத்துக்குடி மக்களான பரவர்களின் குறைகளைக் கவனிக்குமாறு ஆணையிடப்பட்டான். பரவர் தலைவனாகிய ஜாதித் தலைவனுக்கு 'கௌரவ உடுப்பு' ஒன்றைச் சென்னை அரசாங்கத்தின் சார்பில் பரிசளிக்குமாறும் அறிவிக்கப்பட்டான்.

பம்பாய்க்குச் சென்று கொண்டிருந்த கம்பெனிக் கப்பலிலிருந்து இர்வின் அஞ்சன் கோவிலில் இறங்கி, அங்கிருந்து பாளையங்கோட்டைக்கு மார்ச் 4 ஆம் தேதி சென்றார். திருவாங்கூர் மன்னனை ஹைதர் அலிக்கு எதிராகச் செய்யப்படும் திட்டங்களில் தங்களுக்குத் துணை செய்யுமாறு சென்னை அரசாங்கத்தினர் கேட்டுக் கொண்ட கடிதத்துடன், உடனே பாளையங்கோட்டையிலிருந்து புறப்பட்டு மன்னரைக் காணத் திருவனந்தபுரத்துக்கு விரைந்து சென்றார்.



திரு. ஆர்பன் விலக்கப்பட்டுவிட்டதால், அந்த இடத்திற்கு மற்றொரு உதவியாளரை நியமிக்கும்படி திரு. இர்வின் கேட்டுக் கொண்டார். பின்னர் கலெக்டராக வந்த திரு. டோரின் (Torin) அவனுடைய உதவியாளராக நியமிக்கப்பட்டார். அவனுக்குப் பிறகு திரு. கிண்டார்ஸ்லே (Mr. Kindersley) நியமிக்கப்பட்டார்.

திருநெல்வேலிக்குச் சென்றவுடனேயே திரு. புரோக்டரின் விவகாரங்களை விசாரிக்க நீதிமன்ற விசாரணை ஒன்றுக்கு அரசாங்கத்தினர் ஆணையின் பேரில் தலைமை வகித்தார். நீதிமன்றம் திரு. புரோக்டரின் கணக்குகள் மனநிறைவு தரவில்லை எனக் கருத்து தெரிவித்தது. புரோக்டரின் கணக்குகளில் அரசாங்கத்தினரின் உத்தரவின்றி அவர் செய்த பல சொந்த செலவுகளும் சேர்க்கப்பட்டிருக்கிறதெனக் கண்டு பிடித்தனர். மேலும் வரிவசூலில் எஞ்சிய தொகை இன்னும் அவன் கையிலேயே இருப்பதையும் கண்டு பிடித்தனர். இந்த முடிவின்பேரில், அவனை மாவட்டத்திலுள்ள வேலையிலிருந்து நீக்கி, மாநிலத்திற்குச் செல்லுமாறு கட்டளையிட்டனர். நேர்மைக்கு மாறாகச் சொந்த செலவு செய்த தொகையை எல்லாம் திருப்பித்தர வேண்டுமென அரசாங்கம் வற்புறுத்தியது. தவறினால் சென்னையிலுள்ள மேயர் கோர்ட்டில் அவனுக்கு எதிராக வழக்கு பதிவு செய்வதாகவும் தெரிவித்தது.

ஏப்ரலில் நாட்டின் நலனுக்குச் செய்யப்படும் ஒவ்வொரு திட்டத்தையும் நடைமுறையில் கொண்டுவருவதிலுள்ள இடையூறுகளைப் பற்றி இர்வின் அரசாங்கத்திற்கு ஒரு கடிதம் எழுதினார். இடையூறுகளில் எல்லாம் முதன்மையானதும் முக்கியமானதுமான பாளையக்காரரின் அடங்காமையைக் குறிப்பிட்டிருந்தார். அவர் கூறுவதாவது: ''கடந்த ஐந்து ஆண்டுகளாக அடக்குவாரும் ஒடுக்குவாரும் இன்றி இருந்த பாளையக்காரர் தற்போது அவர்களுடைய கடமை கவனிப்புகளை உணருமாறு செய்வது எளிதல்ல. கீழ்ப்படியாத் தன்மையுடைய அவர்களைப் படைபலத்தால் தான் அடக்க முடியும்'' இதிலிருந்து கர்னல். புல்லார்ட்டனின் படையெடுப்புக்கான சூழ்நிலைகள் முற்றியிருந்தன என்பது தெளிவாய்த் தெரிகின்றது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்னதாக

நடைபெற்றதாய் அவர் குறிப்பிடும் நிகழ்ச்சிகள் 1777 இல் காப்டன் பிக்கார்டு (Captain Pickard), 1778 இல் காப்டன் பாரிங்டன் (Captain Barringhton) இவர்களால் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் ஆகும்.

ஆகஸ்டில், அரசாங்கத்தார் திரு. இர்வினுக்கு, அவனது சிறந்த யோசனைப்படியே திருநெல்வேலி வரிவசூலைக் குத்தகைக்கு விடுவதற்கான முழு அதிகாரத்தையும் கொடுத்தனர். திருநெல்வேலி நாட்டை ஒழுங்குபடுத்தத் தென்படையின் ஒரு பகுதியைக் கர்னல் புல்லர்ட்டன் தலைமையில் தனக்குத் தேவையென்று அடிக்கடி கர்னலுக்கு எழுதிக் கொண்டிருந்தார். அரசாங்கத்தினரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட இந்தக் கடிதங்கள் கர்னல் புல்லர்ட்டனின் படையெடுப்புக்கு வழி கோலியது. இந்தப் படையெடுப்பைப் பற்றி கர்னல் புல்லர்ட்டனே ஒரு வரைப்படவிளக்கத்தைத் தருகிறார். சென்னை அரசாங்கத்தினருக்கு அனுப்பப்பட்ட அவனுடைய திறமைவாய்ந்த அந்த அறிக்கை 'இந்தியாவில் ஆங்கிலேயருக்குள்ள பற்றுகள் பற்றிய ஒருநோக்கு' (A View of the English Interests in India) என்ற தலைப்புடன் 1867 இல் சென்னையில் மறுபதிப்பாக வெளியிடப்பட்டது. அது போதுமான அளவு பயனைத் தரும்.

### தனது படையெடுப்புப்பற்றி கர்னல் புல்லர்ட்டனே கூறும் விவரங்கள்

'மதுரை மேலூர், பழமநேரி மாவட்டங்கள் கூலிப் பட்டாளம், பாளையக்காரர், எதிரிகள் முதலியவர்களால் தாக்கப்பட்டு வந்ததால் உங்களுடைய துருப்புகளும் மக்களும் கோட்டைகளை அடுத்துள்ள இடங்களில் தாக்கப்பட்டனர். காவற்காரர்கள் காவல் செய்யும்போது சுடப்பட்டனர்; திருநெல்வேலி பாளையக்காரர் அனைவரும் கலகத்தில் ஈடுபட்டிருந்தனர்; அன்றியும் கொழும்பிலுள்ள டச்சு அரசாங்கத்தினரிடமும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். அங்கிருந்து அவர்களும் மாப்பிள்ளை தேவரும் சேர்ந்து அந்த நாடுகளையும் மறவர் அரசுகளையும் ஒடுக்க எல்லாத் திட்டங்களையும் சிந்தித்து வந்தனர். ஏறக்குறைய ஒரு நூறு ஆயிரம் பாளையக்காரர்கள், கூலிப்பட்டாளம் எல்லாம் ஆயுதம் ஏந்தித் தென் மாகாணங்கள் எங்கும் இருந்தனர். இவர்கள் அரசாங்கத்திற்குப் பகைவராகக் கருதப்பட்டனர். இவர்கள் தங்களைத் தண்டனையிலிருந்து காப்பாற்றிக் கொள்வதற்காகப் பொது குழப்பங்களை எதிர்நோக்கி இருந்தனர். உங்கள் தென்படை அவர்களுடைய தொந்தரவுகளை அடக்கி உங்கள் கடமைகளைச் சரிவரச் செய்ய உதவுவதற்குப் போதுமானதாக இல்லை. கஜானாக்கள் காலியாகிக் கொண்டிருந்தன. மக்கள் தொகை குறைந்தது.



வரிப்பணம் எதிரிகளால் வலிந்து கொடுமையாக வாங்கப்பட்டன. துருப்புகளின் கட்டுப்பாடு அவர்களை விட்டகன்றது. குறைந்த சம்பளமும், குறைந்த உணவும் வழங்கப்பட்டு வந்தன. படைகளுக்கு இட்ட ஆணைகள் தோல்வியடைந்துள்ளன. இந்த நிகழ்ச்சிகள் நடைபெற்று வந்த நேரத்தில் உங்கள் தென் மாகாணங்கள் பழைய குழப்ப நிலையிலேயே இருந்தது. போர் தொடங்கியதிலிருந்து பாளையக்காரர்கள், கூலிப்பட்டாளங்கள், மற்ற கப்பங்கட்டுபவர்கள் ஆகியவர்களுக்கிருந்த தலைவர் பற்றுகள் தலைக்காட்டாமல் தூக்கியெறிப்பட்டன. இராணுவத் துணையின்றி சமூக ஒழுங்குகளை நிலைநாட்ட இயலவில்லை. அன்றியும் அவர்களை அடக்குவதற்கு முழுப்படையும் போதுமானதாக இருக்கும் என்று தோன்றுகிறது. தென் மாகாணத்தின் கணிசமான ஒரு பகுதி கம்பெனி அரசாங்கத்திற்கு எதிராக இருக்கும்போது, அமைப்புகளில் தற்கால குற்றச்சாட்டுகளை ஆதரிப்பதென்பதைப் பற்றி எண்ணுவதே பயனற்றது. அதைவிட வரி பாக்கிகளைக் குறைப்பதோ, புதிய தாக்குதல் எதுவும் திரும்ப ஏற்பட்டால், முக்கியமான நடைமுறைச் செயல்களுக்குத் தயாராதலோ, எதையும் நம்மால் நம்பவே இயலாது. ஆகவே அந்த மாகாணங்களில் கடுமையான இராணுவ நடவடிக்கைகளின் மூலம் அமைதி நிலைநாட்ட வேண்டியது இன்றியமையாததாகிவிட்டது. ஏனெனில் வரியைப் பெருக்கும்படி அவர்களைத் தூண்டச் செய்யக் கூடிய வழி அது ஒன்றேயாகும்.

மேலூர் சிவகங்கை பாளையக்காரர்களை அடக்கிக் கீழ்ப்படியச் செய்தபின் கர்னல் புல்லர்ட்டன் தென்பகுதி நோக்கிப் படையெடுத்துச் சென்றான். அடுத்தாற்போல் அங்கு மற்றொரு முக்கியமான ஏற்கெனவே மேற்கொண்டிருந்த காரியம் ஒன்று காத்திருந்தது. போர் தொடங்கியவுடன் கலகம் செய்த பல திருநெல்வேலி பாளையக்காரர்கள் தினந்தோறும் மதுரையிலிருந்து கன்னியாகுமரி வரை கொள்ளையடித்து வந்தனர். அவர்கள் கோட்டைகளைத் தங்களுக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டனர். சர்க்காருக்குச் சொந்தமான அல்லது அவர்களுடைய உரிமையிடங்களல்லாத பிறர்க்குரிய மாவட்டங்களையும் தங்கள் உறைவிடங்களாக்கிக் கொண்டனர். அமைதியை நிலைநாட்டவும் வரி வருமானத்தை மீட்கவும் பாளையக்காரர்களை எதிர்த்துச் செல்லும்படி மதுரை திருநெல்வேலி சூப்பிரண்டாக இருந்த இர்வினால் அடிக்கடி தூண்டப்பட்டேன். வலிமையுடைய பாளையக்காரர்கள் உங்கள் அரசாங்கத்திற்கு எதிராகச் சூழ்ச்சி செய்து, டச்சுக்காரருடன் சேர்ந்து கொண்டு 12 அல்லது 14 ஆயிரம் ஆட்களுடன் கூடி மாகாணத்தில் வடமேற்கு எல்லையாக

அமைந்திருந்த குன்றுகளின் அடிவாரத்திலிருந்த சிறிது வலிமையுடைய பாளையக்காரர் இடமாகிய சொக்கம்பட்டி கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருந்த அந்தச் சூழ்நிலையில் அந்தப் பகுதிகளில் நான் படையெடுத்துச் செல்ல அதிகாரம் பெற்றது இதுதான் முதல் தடவையாகும்.

திருநெல்வேலி நோக்கி நாங்கள் படையெடுக்க வேண்டுமென்று தீர்மானித்தவுடன் கர்னல் ஸ்டுவர்ட் (Stuart), எல்பின்ஸ்டன் (Elphinstone) படைகள் திண்டுக்கல்லை அடையும் இடைக்காலத்தை வீணாக்காது திடீரெனப் பாளையக்காரர்களை எதிர்பாராமல் தாக்கிச் சரணடையும்படி பல வழிகளிலும் அச்சுறுத்த வேண்டுமென்பது என் நோக்கம். சிவகிரியைத் தவிர திருநெல்வேலித் தலைவர்களில் எல்லாம் வலிமைவாய்ந்தவனும் குற்றமிழைப்பவனு மாயிருந்தவன் கட்டபொம்மநாயக்கன். அவன் சொக்கப்பட்டி முற்றுகையில் நேரடியாகப் பங்கு கொண்டிருந்தான். அங்கிருந்து திருநெல்வேலியின் தென்கிழக்குப் பகுதியிலுள்ள அவனுடைய பாஞ்சாலங்குறிச்சி 70 மைலுக்கு மேற்பட்ட தூரத்தில் இருந்தது. திருநெல்வேலிக்கு வழக்கமானப் பாதை மதுரை வழியாகச் செல்கிறது. நாங்கள் சிவகங்கையை நோக்கிச் செல்வதை அறிந்த பாளையக்காரர்கள் அந்த வழியில் எங்களை எதிர்பார்த்திருந்தனர். இந்த எண்ணத்தை வலுப்படுத்துவதற்காக மதுரையில் படைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி கட்டளையிட்டு என்னுடைய உண்மையான எண்ணம் முழுவதையும் மறைமுகமாக வைத்திருந்தேன். பிறகு ஆகஸ்டு 8 ஆம் தேதி மாலை சிவகங்கையிலிருந்து 20 மைல் தூரத்தில் மேலூர் நாட்டின் தென் எல்லையில் உள்ள (திருப்பி செலுத்தி) திருப்பாச்சேத்தி நோக்கிப் புறப்பட்டோம். நான் அங்கிருந்த எஞ்சியப் படையுடன் சேர்ந்து கொண்டேன். அங்கு 7 வது அணியையும் சில படைப் பயிற்சியற்றவர்களையும் மேலூரில் கூலிப்பட்டாளத்தை எதிர்க்க விட்டுவிட்டு மறுநாள் காலை நாங்கள் பள்ளிமடை, பந்தல்குடி, நாகலாபுரம் வழியாகச் சென்று நான்காம் நாள் சிவகங்கையிலிருந்து 100 மைல் தூரத்திலுள்ள பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை அடைந்தோம். (பாரன்ஹீட் உஷ்ணமானி இப்படையெடுப்பின் போது அடிக்கடி 110 வெப்ப நிலைக்கு மேலேயே இருந்தது.) (ஆங்கிலேயர் ஆதிக்கத்திலும் ஆதவன் கொடுமை - ந.ச.) படை கோட்டையை நெருங்கிய உடனே அவர்களுடைய வாயிலைத் திறந்துவிட்டு எங்களுடன் கலந்தாலோசிக்க வரும்படி சமாதானக் கொடி அனுப்பப்பட்டது. அவர்கள் மறுத்து விட்டனர். ஆகையால் பின்புறத்தில் வடகிழக்குக்



கோணத்தில் கோட்டையை நோக்கிப் பீரங்கிகளை அணி வகுத்தனர். விரைவாகப் பீரங்கிப் பட்டாளம் ஆயத்தம் செய்யப்பட்டது. மூன்று மணி நேரத்தில் கோட்டையைப் பீரங்கியால் தாக்க நாங்கள் ஆயத்தமாகிவிட்டோம். கோட்டையும் சுற்றுப்புறங்களும் பல ஆயிரம் மக்களால் பலப்படுத்தப்பட்டிருந்தது. அவர்களுடைய ஒவ்வொரு சூழ்நிலையும் பீரங்கித் தாக்குதலை எதிர்க்க ஆயத்தமாவதைக் காட்டியது. மேலும் பீரங்கிகளைச் சுட்டு அச்சமுறுத்துவதன்றி கட்டபொம்ம நாயக்கன் தன் கூட்டாளித் தலைவர்களுடன் வந்து எங்கள் நடவடிக்கைகளுக்கு இடையூறு விளைவிக்காமலிருப்பதற்காகவும் தாக்குதலை விரைவுபடுத்த வேண்டியதாயிற்று. கோட்டையைத் தாக்க பீரங்கிகளை வெடித்தாயிற்று. ஆனால் கோட்டைச் சுவர்கள் கனம் எங்களைப் பின்னிடச் செய்தது. எனவே கோட்டையை அடுத்துள்ள படல்களைத் தரைமட்டமாக்கிவிட்டால் எதிர்ப்பவர்களை மடக்கிவிடலாமென்று தீர்மானித்தோம்.

அவர்கள் இடைவிடாது குறி தவறாமல் நெருப்பு மழை சொரிந்தனர். எங்களுடைய இந்த மிக உயர்ந்த முயற்சிகளை அறியாது கோட்டையில் விரிசல் ஏற்படுவதற்கு முன்பே இருள் சூழ்ந்துவிட்டது. எனவே சந்திரன் புறப்படும்வரை தாக்குதல் நிறுத்தப்பட்டது, பீரங்கி வெடித்தவர்களில் ஐரோப்பிய கூட்டம் இரண்டும் அவர்களின் உதவிக்காக 13வது 24வது கர்னாடகப் படை அணிகளும் பின்புறத்தில் இருந்தன. முதல் குதிரைப்படையையும் சிறிய காலாட்படை அணியையும் கோட்டையில் மற்ற முக்கியமான மூன்று கோணங்களுக்கும் செங்கோணத்தில் வாயில் பக்கத்தை நோக்கி நிறுத்தி வைத்தனர். இதனால் கோட்டையின் ஒவ்வொரு வாயில் பக்கத்தையும் நோக்கி அப்படைகள் இருந்தமையால் முற்றுகையிட்டோர் படைகள் குறிபார்க்க வாய்ப்பற்ற இடத்திலிருந்தபடி வீட்டைத் தாக்குவதில் ஈடுபட்டிருக்கும்போது, உணவுகளைப் பெறுவதையும் அவர்கள் தப்பி ஓடுவதையும் தடுப்பதற்கு வசதியாயிருந்தது.

எங்களுடைய அடுத்த நோக்கம் பிளவை நோக்கியிருந்த பலம் வாய்ந்த வேலியை அகற்றிவிட்டு முழு கோட்டையையும் சூழ்ந்து கொள்ள வேண்டுமென்பது, இதுதான் தற்காப்புக்காகப் பாளையக்காரர்கள் எதிர்த்துப் போரிடும் முறை. இத்தகைய பயங்கர முயற்சி இரவு 10 மணி அளவில் சந்திரனின் ஒளியில், முன்னோடிகளின் படைத்தலைவனாகிய என்சைன் கன்னிங்காம் (Ensign Cunningham) என்பவனின் அசாதாரண திறமையினால் செயல்படுத்தப்பட்டது.

முற்றுகை தொடங்கியது. வெடிப்பின் உச்சியை எங்கள் துருப்புகள் அடைந்தவுடன் மேலும் உயரே செல்லவோ அல்லது அங்கேயே ஒதுங்கவோ போதுமான இடமில்லாததைக் கண்டனர். எதிரிகள் அதிக எண்ணிக்கையுடையவர்கள். அவர்கள் வேல், கம்பு, சிறு துப்பாக்கிகளால் மிக அச்சந்தரத்தக்க விதத்தில் எதிர்த்து இறுதியில் நாங்கள் பின்வாங்கும்படி செய்தனர். இருதிறத்தினரிலும் அதிகப்படியான கொலைகள் ஏற்பட்டன. பிறகு எங்கள் படை அணிவகுப்பை அடைந்தது. தாக்குதலைப் புதுப்பிக்க உடனடி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால் பாளையக்காரர்கள் தங்களுக்கு ஏற்பட்ட இழப்பினால் மனந்தளர்ந்து, கோட்டையை விட்டுவிட்டுக் கிழக்குவாயிலை நோக்கிப் பாய்ந்தனர். அங்கு நிறுத்தப்பட்டிருந்த படைகள் முந்திய தாக்குதலில் ஈடுபட்டுக் களைத்திருந்தமையால் புறங்காட்டி ஓடியவர்கள் எளிதாய்த் தப்பிவிட்டனர். மற்றவர்கள் சிறைபிடிக்கப்பட்டனர். பிளவுபட்ட கோட்டையில் எங்கும் இறந்த பிணங்கள் கிடந்தன. அங்கு தரவாரியாக துப்பாக்கிகளும், வெடி மருந்துகள், குண்டுகள், ஆயுதங்கள், மற்ற இராணுவ வெடிமருந்துப் பொருள்களும் இருந்தன. அவை பொதுக் காரியங்களுக்குப் பயன்பட்டது. அங்கு கண்டெடுக்கப்பட்ட 40,000 நட்சத்திர பகோடாக்களும் (Star Pagodas) உடனே துருப்புகளுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டன. பரிசுத் தொகைபோல வழங்கப்பட்ட இச்செயலை உங்கள் போர்டு மகிழ்வோடு உறுதிப்படுத்தியது. அல்லாமலும் எங்களுடைய எதிர்கால நடவடிக்கைகளில் படைகள் உற்சாகத்தோடு ஈடுபடும்படி செய்ய இதைப்போன்ற வேறு ஒரு காரியம் இருக்க முடியாது. மேலும் இந்த விவகாரங்கள் சம்பந்தப்பட்ட செய்திகளையும் கொழும்பிலுள்ள டச்சு அரசாங்கத்தினருக்கும் டச்சுக்காரருக்கும் இடையே நடந்த ஒப்பந்தம் முதலியவைகளைப் பற்றியும் ஆகஸ்டு 13ஆம் தேதி உங்கள் எஜமானருக்கும் போர்டுக்கும் எழுதிய என்னுடைய கடிதங்களில் குறிப்பிட்டிருக்கிறேன். இந்த விவரங்களடங்கிய மூலங்கள் கட்டபொம்மன் கோட்டையிலிருந்து அகப்பட்டன.

**கர்னல் புல்லர்ட்டன் கூறும் விவரங்கள்**

25வது அணியிலுள்ள 5 கம்பெனிப் பட்டாளங்களைக் காப்டன் ஜேகப்சு (Jacobs)வுடன் அந்த இடத்தைக் காவல் காக்கும்படி நிறுத்திவிட்டு நான் பாளையங்கோட்டைக்குச் சென்றேன். அங்குள்ள கோட்டையின் வலிமையைச் சோதனையிட்டு அறிந்து கொண்டு அங்கிருந்து சங்கர நயினார் கோயில் வழியாகச் சிவகிரிக்குச் சென்றேன்.



பாளையக்காரர்களுள் மிக்க வலிமை வாய்ந்தவனுடைய அந்தக் கோட்டை கைப்பற்றப்பட்டதுடன் பாஞ்சாலங்குறிச்சி வீழ்ச்சியும் சேர்ந்து, குறைந்த குற்றங்கள் செய்தவர்களுக்கு அச்சமூட்டியிருக்க வேண்டுமெனவும் அவரவர் செய்த தகாத செயல்களுக்குத் தக்கவாறு அவ ர்கள் நடத்தப்படுவார்கள் என்பதை அம்மொத்தக் கூட்டத்தினருக்கும் அந் நிகழ்ச்சி மெய்ப்பித்திருக்க வேண்டுமென்றும் நம்பப்பட்டது. மேலும், சிவ கிரி தலைவனால் செய்யப்பட்ட கொடுமைகள் மிக்க அநீதியானவை. உங்கள் அதிகாரத்திற்கு முழுமையாக அவன் பணிந்தால் அன்றி அவனை மன்னிக்க இயலாது. அவன் கொடூரமாகக் காப்டன் கிரகாம்பெ ல்லைக் கொலை செய்தான். அவர் தலைமையின் கீழிருந்த படையை ஒழித்துக் கட்டினான். முந்திய சூழ்நிலைகளில் அவன் பல படைகளைத் தாக்கியிருக்கிறான். வெளிப்படையாக உங்கள் பகைவர்களுக்கு அடை க்கலம் கொடுத்தான். அப்பகைவர் சிவகிரி கோட்டையில் பாதுகாப்பு டன் இருப்பதாய் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். கொழும்பிலிருந்து எதிர்நோக்கியிருந்த டச்சுப் படைக்குத் தேவையானப் பாசறை வசதிக ளைத் தேடி வைத்தான். இவையேயன்றி, மிகக் கடினமான முற்றுகை யையும் எதிர்த்து நின்றான். ஏனெனில் அவனுக்குத் தன் கோட்டையை முற்றுகை இடுவார்கள் என்ற எண்ணமே தோன்றவில்லை. அவன் நடவடிக்கைகளின் ஒவ்வொரு சூழ்நிலையும் தான் இராணுவ பலத்தையும் மீறின வலிமையுடையவன் என்ற அவனது எண்ணத்தை உணர்த்திற்று. சிவகிரி நகரத்தை நாங்கள் அடைந்ததும் எதிரிலிருந்த அடர்ந்த கம்பெனியின் காட்டுக்குள் 4 மைல் தூரம் படைகள் ஓடி விட்டன. (காம்பெயின் தமிழில் கம்பாய். அகராதியில் அதன் பொருள் மலைகளிலுள்ள ஒரு கோட்டை. காட்டிலுள்ள ஒரு காப்பு அரண்) அக்காடுகள் கோட்டையை மறைத்துக் கொண்டிருப்பதன்றிக் கோட்டைக்குப் பாதுகாப்பாகவும் இருந்தது. காட்டையும் திறந்த வெளியான நாட்டையும் பிரிக்கின்ற பலம் வாய்ந்த அரண் முழுவதையும் அவன் பலப்படுத்தினான். அவனுடன், கட்டபொம்ம நாயக்கனும் அவனுடன் சேர்ந்த பாளையக்காரர்களும் சேர்ந்து கொண்டனர். எட்டாயிரம் அல்லது ஒன்பது ஆயிரம் படைக் கலன்கள் தாங்கிய ஆட்களைச் சேர்த்தனர். இந்நிலையில் இரக்கம் காட்டினால் அச்செய்கை நமது வலிமைக் குறைவாகக் கருதப்படும். ஆனால் கர்னல்கள் ஸ்டூவர்ட், எல்பின்ஸ்டோன் இருவ ரும் திண்டுக்கல் வந்து சேர்ந்ததும், ஏற்கனவே ஏற்பாடாகியிருந்த வசதி களைச் செய்ய திப்பு சுல்தான் மறுத்ததும், எதிரியினுடைய எல்லையை நோக்கி விரைவாகப் படையெடுத்துச் செல்வதற்காக இந்தப் பாளையக்காரர் சண்டைகளை முடித்துவிடவேண்டுமென்று எனக்கு அளவு கடந்த ஆவலைத் தூண்டியது. எனவே,ஏறக்குறைய

முப்பத்திரண்டு திருநெல்வேலித் தலைமைப் பாளையக்காரர்களைப் பிடித்துக் கொடுத்து, எல்லாப் பாக்கிகளையும் செலுத்தி, போர் தொடங்கியது முதல் கொள்ளையடித்த எல்லாப் பொருட்களையும் திருப்பிக் கொடுத்து, அதற்குத் தகுந்த உறுதிச்சீட்டுகளை வெவ்வேறு மாவட்டங்களில் பெறலாம் என்றும் இல்லாவிட்டால் அந்தந்த இடங்களைத் தாக்க நான் எண்ணமிட்டிருப்பதாகவும் சிவகிரித் தலைவனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் செய்தி தெரிவிக்கப்பட்டது. மேலும் அவர்களுடைய கூட்டாளிகளுக்கான எல்லாத் தேவைகளுக்கும் மொத்தமாக 1,20,000 பவுன் கொடுக்க விருப்பம் தெரிவித்தால் அவர்களுடைய அந்த எண்ணத்தை வரிவசூல் மேற்பார்வையாளருக்குத் (இர்வின்) தெரிவிப்பதாகவும், அவர் அக்கருத்தை ஏற்றுக் கொண்டால் படைகள் பின் வாங்கிவிடும் என்றும், அவர்களை மன்னிக்குமாறு பரிந்துரைக்கப்படும் என்றும் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. அவர்கள் என்னைச் சந்தித்துக் கலந்து பேச விரும்பினர். ஆனால் என் பாசறையில் வந்து சந்திக்க மறுத்துவிட்டனர். முந்திய படைத்தலைவர்களால் அவர்களுக்கு எதிராகச் செய்யப்பட்ட பல கலகங்களிலிருந்து அவர்களுக்கு எங்களிடம் அவநம்பிக்கை ஏற்பட்டிருந்ததால், அவநம்பிக்கையாலும் வெறுப்பாலும் அவர்கள் கவலையை அதிகப்படுத்துவதைவிட, நானே யாருடைய துணையுமின்றி அவர்களுடைய சொந்த இடத்தில் அவர்களைச் சந்திப்பதாகவும், ஆனால் எனக்கு ஏதேனும் எதிர்பாராத விபத்து நேரிடின் அது அவர்களை எளிமையாகத் தவிர்க்க முடியாத தண்டனைக்குட்படுத்தும் என்றும் யோசனை தெரிவித்தேன். சிவகிரித் தலைவன் கட்டபொம்ம நாயக்கன், சொக்கப்பட்டியின் பழைய பாளையக்காரர் எல்லோரும் பெரும் பரிவாரங்களுடன் தங்கள் எல்லைகளின் முன் என்னைச் சந்தித்தார்கள். அவர்கள் தங்கள் விளக்கங்களைக் கூறுவதற்குள் இருட்டிவிட்டது. அந்த நேரத்தில் பின்பக்கத்தில் கவனக்குறைவால் வெடிசத்தம் ஏற்பட்டது. அவ்வெடி, என்னைக் குறிபார்த்து சுடப்பட்டதோ என்று ஐயப்பட்ட என் முன்னணிக் காவல் படையை எச்சரிக்கை அடையச் செய்தது. இந்தத் தவறினால் ஏற்பட இருந்த தீங்கான முடிவுகளைத் தவிர்ப்பதற்காக, ஏற்கனவே திட்டமிட்டபடி அவர்கள் விருப்பத்தைக் கேட்பதாகக் கூறி நான் பாளையக்காரர்களிடமிருந்து விடைபெற்றுத் திரும்பினேன். மறுநாள் நாங்கள் பகையின்றியே இருந்தோம். ஆனால் அவர்கள் தீர்மானங்களை ஏற்றுக் கொள்ளாது குழப்பம் செய்யவே, அடுத்த நாள் காலை மறுபடியும் போர் தொடங்கியது. தாக்குதல் பணிகளைப் பகிர்ந்து கொடுத்தோம். குறிப்பிட்ட இந்த அசாதாரண சூழ்நிலை காரணமாக மட்டுமின்றி பொதுவாக நம்பிக்கை அளிக்கும் இத்தகு இந்தியப் போர்முறை வகைகளால் ஏற்படும் வெல்லமுடியாத



தன்மையை இப்போர் நிலை நாட்டியது. காட்டை மறைத்துக் கொண்டிருந்த அரணுக்கு எதிராக ஐரோப்பியர்களும் நான்கு சிப்பாய்ப் பட்டாளங்களும் நகர்ந்து தாக்குதலை ஆரம்பித்தனர். பாளையக்காரர்களோவெனில் தங்கள் முழுப் பலத்தோடு எங்களை எதிர்த்தனர். அரணை அடையும்வரை துருப்புகள், நெருப்பு சுவாலையிலும் கூடத் தங்கள் தோள்களிலிருந்து துப்பாக்கிகளை இறக்கவே இல்லை. அங்கு அவர்கள் பொதுவாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்த எதிரிகள் மீது பாய்ந்தனர். இந்த முன்னேற்றத்தின் பலத்தில் நாங்கள் உச்சியைக் கைப்பற்றிவிட்டோம். பாளையக்காரர்கள் அடுத்துள்ள காட்டின் எல்லையில் புகுந்து கொண்டு எங்களை முன்னேறவிடாது எதிர்த்தனர். இதனால் இரு திறத்தினருக்கும் அதிக இழப்பு ஏற்பட்டது.

வேவு பார்த்து வந்தபின்னர், காம்பேக்குள் முன்புறமாக நுழைய முடியாது எனக் கண்டோம். ஆகையால் மேற்குப் பக்கத்தில் காம்பேயின் எல்லையாக அமைந்துள்ள மலை அடிவாரம் வரை மூன்று மைலுக்கு அடர்ந்த காடுகளின் வழியே பாதையமைக்க முனைந்தோம். முன்னோடிகளாகிய என்சைன், கன்னிங்காம் (Ensign, Gunningham) இருவரும் விடாமுயற்சியுடன் உழைத்தனர். 102வது அணியின் காப்டன் கார்டினர் (Gardinor) ஐரோப்பியர்களுடன் அவர்களுக்கு உதவி செய்தான். காப்டன் பிளேகர் (Blacker) மூன்றாவது, 24வது கர்நாடகப் பட்டாளங்களின் உதவியுடன் செப்பனிடப்பட்ட பாதையில் உடனுக்குடன் மிக்க வேகமாகப் பீரங்கிகளைக் கொண்டுவந்து சேர்த்தான். பின்புறமிருந்து துருப்புகளால் இது பலப்படுத்தப்பட்டு முன்னேறியிருந்தவர்களுடன் தொடர்பு உண்டாக்கியது. இந்தக் காரியத்திற்காக வேறு இரு படைகள் காட்டுக்குள் நிறுத்தப்பட்டன. நாங்கள் அரணை அடைந்தவுடனேயே பட்டாளமும் அதை அணுகி எங்கள் தாக்குதலைப் பலப்படுத்தியது. எட்டு ஆயிரம் பாளையக்காரர்களால் உண்டாக்கப்பட்ட தனியாத நெருப்பின் ஊடே எங்கள் வழியைத் தொடர்ந்து சென்றோம். பாளையக்காரர்கள் அடிக்கடி எங்கள் முன்னோடிக் கூட்டத்தை நெருக்கி அவர்களைத் தாக்கும் அணியின்மேல் மோதி வேலெறிந்து துப்பாக்கிகளை இழுத்து வந்த குதிரைகளைத் தட்டிவிட்டு எங்கள் மக்களில் அநேகரைக் கொன்றனர். ஆனால் மிக்க முயற்சியுடன் அவர்களுடைய தாக்குதல்களை எதிர்த்துத் தாக்கினர். சூரியன் மறைவதற்கு முன் நேராக மலைக்கே பாதையை அமைத்துவிட்டோம். அது மிக உயரமாயும் பாறையாயும் அநேக இடங்களில் மிக செங்குத்ததாயும் இருந்தது. எதிர்பாராத இந்தப் பகுதியிலிருந்து தாக்க முடிவு செய்யப்பட்டதால், துருப்புகள் அவ்வேலையை மேற்கொண்டு, தொடர்ந்து மலை உச்சியை அடைந்தது. நாங்கள் எல்லோரும் அதிக நேரம் துப்பாக்கி வெடித்து அந்த

மேட்டைக் காவல் செய்வதற்காக நிறுத்தப்பட்டிருந்தப் பாளையக்காரர்களுடைய கூட்டத்தினரைத் தேடி முறியடித்துப் பின்னர் மறுபக்கத்தில் இறங்கிக் காம்பேயைப் பக்கவாட்டில் தாக்கினோம். மலை எங்கள் வசமாகிவிட்டதை அறிந்த எதிரிகள் இரவு ஒற்றையடிப் பாதை வழியாகத் தப்பி விட்டனர். அந்த வியப்பான ஒதுக்குப்புற இடம் எங்கள் வசமானது. அந்த இடத்திலிருந்த பெரும் பீரங்கிகள், வெடிமருந்து சாமான்கள், உணவு முதலியவைகளைப் பற்றி செப்டம்பர் 3 ஆம் தேதியிட்ட என் கடிதத்தில் குறித்திருக்கிறேன். மூன்றாவது, 9வது பட்டாளங்களைக் கிடங்குகளுக்குக் காவலாக நிறுத்திவிட்டுத் திருநெல்வேலியிலுள்ள வடக்குப் பாளையக்காரருக்கு அச்சம் உண்டாக்குவதற்காக மதுரைக்கு நான்கு படைச்செலவு தூரத்திலுள்ள திருவல்லிபுத்தூரை நோக்கி விரைந்து சென்றோம்.

நாங்கள் திருச்சியை விட்டுவந்து ஒரு மாதத்திற்கு மேலாகி விட்டது. நாங்கள் கடந்து வந்த 300 மைல்களுக்கு மேற்பட்ட வழி நெடுகிலும் எங்கள் அதிகாரத்தை நிலைநாட்டி வந்தோம். சிவகிரி அரசனுடன் செய்து கொண்ட ஏற்பாடுகளைத் தவிர பாளையக்காரர்களுக்குச் சொந்தமான இரண்டு வலிமையான இடங்களுக்கு நாங்களே தலைவர்களானோம். அவர்கள் பொது வசதிகளைச் செய்து கொடுப்பார்களென்று எதிர்நோக்கி அங்குத் தங்கினோம். ஆனால் திப்பு சுல்தான் மங்களூரை முற்றுகையிட்டுக் கொண்டிருக்கிறான். எனவே நான் விரைவாகத் திண்டுக்கல் சென்று அப்படையுடன் சேர்ந்து கொள்ளவேண்டுமென்பதை அவர்கள் அறிவார்கள். எனவே காலங்கடத்துவதில் உள்ள அவர்களது உற்சாகம் தீவிரமாயிற்று. ஆகவே பாசறையில் என்னுடன் ஒப்பந்தம் பேச அனுப்பப்பட்ட முக்கிய பாளையக்காரர்களின் வக்கீல்களைக் (வக்கீல்கள் - தூதர்கள், ஏஜெண்டுகள் அல்லது பிரதிநிதிகள்) கூட்டி நான் செப்டம்பர் 21 ஆம் தேதி அந்த மாகாணத்தை விட்டுப் புறப்படுவதாக அவரவர்களுடைய தலைவர்களுக்குத் தெரிவிக்குமாறு கூறினேன். அவர்கள் ஒப்பந்தத்திற்கு ஒத்துவராவிட்டால் திரும்பிச் சென்று ஒழுங்கீனம் செய்கின்ற பாளையக்காரர்கள் மீது படையெடுத்து வந்து அவர்கள் வசமிருக்கும் எல்லா உடைமைகளையும் நாசமாக்குவேன் என்று அழிக்கும் தொழிலுக்கு அதிபதியான கடவுளாகிய சிவன் பேரில் ஆணையிடுவேன் என்றும் சொல்லியனுப்பினேன். இந்த அறிவிப்பு மொத்தப் பேரவையினருக்கும் கிலியூட்டியது. பாளையக்காரர்களுடன் உடன்படிக்கை செய்து முடிப்பதற்குமுன் அந்த மாகாணத்தை விட்டுப் புறப்பட்டு வந்ததற்காக வருத்தம் தெரிவித்துத் திரு. இர்வினுக்கு ஒரு கடிதம் எழுதினேன். கட்டபொம்ம நாயக்கன் சிவகிரி பாளையக்காரர்களுக்குக் கோட்டையைத் திரும்பிக் கொடுக்க வேண்டுமாயின் அதற்குத் தகுதியானதாக அவர் கருதிய நிபந்தனைகளை எனக்கு அனுப்பி வைத்தார். இந்தத் தலைவர்களிடமிருந்து வக்கீல்கள் என்னைத் திருமங்கலத்தில் சந்தித்தனர். (மதுரையிலிருந்து தென்மேற்கில் 12 மைல் தூரத்தில் உள்ளது). (கால்டுவெல் ஊர்களின் தொலைவு மைல் கணக்கில் போற்றத்தக்கது - ந.ச.) அங்கு எல்லா உரிமைகளையும் உணர்த்துவது போற்றத்தக்கது - ந.ச.) அங்கு எல்லா உரிமைகளுக்கும் ஈடாகத் தலைக்கு முப்பது ஆயிரம் சக்கரங்கள் கொடுப்பதாக அவர்களுடைய தலைவர்கள் சார்பில் பேரம் பண்ணினார்கள். அதே போல் அவர்களுடைய கோட்டைகளை மீட்பதற்கு ஈடாகப் பதினைந்து ஆயிரம் பகோடாக்கள் அல்லது 6000 பவுன்களை ஒவ்வொருவரும் கொடுத்தார்கள். மேலும். பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலுள்ள தற்காப்புச் சாதனங்கள் யாவும் அழிக்கப்பட வேண்டுமென்றும், அங்குள்ள துப்பாக்கிகள், மருந்து சாமான்கள், வெடிமருந்துகள் யாவும் பாளையங்கோட்டைக்கு அகற்றப்பட வேண்டுமென்றும் சிவகிரி காம்பே வரை நாங்கள் போட்ட பாதையை அப்படியே வைத்திருக்க வேண்டுமென்றும் அங்குள்ள தற்காப்பு வசதிகள் அகற்றப்பட வேண்டுமென்றும் தென்படைத்தலைவர்களும் கம்பெனித் துருப்புகளும் எல்லாச் சமயங்களிலும் அவர்களுடைய கோட்டை, அரண் இவைகளுக்குள் அனுமதிக்கப்பட வேண்டுமென்றும் அவர்களை நெருக்கிப் பிடித்து உடன்படச் செய்தேன். முடிவாக அவர்கள் உயிரையும் உடைமைகளையும் வாரிசுகளையும் காப்பாற்ற விரும்பினால் மிக்கப் பணிவாக நடந்து கொள்ள வேண்டும் என்ற அச்சுறுத்தலுடன் விவகாரத்தை முடித்தேன். கோட்டைகளையும் கைதிகளையும் (கைதிகளுள் கட்டபொம்ம நாயக்கனுடைய மகளும் இருந்தாள். நூற்றுக்கணக்கான மற்ற கைதிகளைப் போலவே அவளும் மிக்க கவனிப்புடன் நடத்தப்பட்டாள்) திருப்பிக் கொடுக்க ஏற்பாடாகவே, 3-வது 9-வது பட்டாளங்களை மாக்கின்னன் (Captain Mackinnon) தலைமையில் சிவகிரியை நோக்கிச் சென்று திண்டுக்கல்லில் என்னைச் சந்திக்குமாறு கட்டளையிட்டேன். அங்கிருந்து நான் மதுரை வழியாகப்புறப்பட்டேன்.



அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் கர்னல் புல்லர்ட்டன் மறுமுறை திருநெல்வேலிக்குச் சென்றான். ஆனால் இந்த முறை திப்பு சுல்தானை எதிர்க்கத் தயார் செய்து கொண்டிருந்த படைக்கான பண வசூலை விரைவு படுத்தவும் படைகள் செல்லத்தக்க வழிகளைச் சரிசெய்வதற்காகவும் சென்றான்.

அக்டோபர் 26ஆம் தேதி கட்டபொம்ம நாயக்கன் சிவகிரி பாளையக்காரன் இருவரும் அடைக்கலம் அடைந்து விட்டதாக இர்வின் குறிப்பிடுகிறார். 1875 இல் நாட்டின் நிலைமையை ஆராய்ந்து வெளியிடப்

பட்ட அரசாங்கப் பொது அறிவிப்பில் கர்னல் புல்லர்ட்டனின் படையெடுப்பால் ஏற்பட்ட இராணுவ நன்மைகளும் அவர் செய்த நீதி ஒழுங்கு முறைகளும் நிறைவாக இருந்தது என்று காணப்பட்டது.

கட்டபொம்ம நாயக்கன் டச்சுக்காரர்களுடன் செய்து கொண்ட கடிதப் போக்குவரத்துகளின் மூலங்களையும், மொழிபெயர்ப்புகளையும் திரு. இர்வின் அனுப்பிவைத்தார். மேலும் அவர் டச்சுக்காரர்களுடன் செய்து கொண்ட உடன் படிக்கையும் கிடைத்தது. இவைகள் அவன் கோட்டையைக் கைப்பற்றிய போது கிடைத்ததாகக் கர்னல் புல்லர்ட்டன் கூறியிருக்கிறார். இச்செயல்களை நோக்குமிடத்து கட்டபொம்மநாயக்கனைக் கொடுமைப்படுத்தியது நியாயமானது என்றே அவர் கூறுகிறார். மேலும் அவர்கள் எதிர்பார்த்தபடி தற்போது அமைதி நிலை நாட்டப்பட்ட போதிலும் டச்சுக்காரர்கள் தூத்துக்குடிக்குத் திரும்பி வந்தால் முன்போல் கட்டபொம்ம நாயக்கனுக்கு உதவியும் ஊக்கமும் அளிக்காதவாறு தடுப்பதற்கான வழிகளைச் செய்தல் வேண்டும் என்றும் பரிவுரை செய்துள்ளனர்.

1784இல் முதன் முதலாகத் திரு இர்வின் மேற்பார்வையில் கிழக்கிந்தியக் கம்பெனி முத்துக்குளியலை நடத்தியது. ஆனால், என்றும் நிகழ்வதைப் போல, அம்முறையும் அது மனநிறைவளிக்கவில்லை.

மே மாதத்தில் கமிட்டிக்கு எழுதிய ஒரு கடிதத்தில் கர்னல் புல்லர்ட்டன் பாளையக்காரர்களுடன் நடத்திய விவகாரங்களில் கொடுமையும் இரக்கமும் கலந்து காட்டியதால் ஏற்பட்ட அதிகமான நன்மைகளைப் பற்றி இர்வின் குறிப்பிட்டிருந்தார். இந்தக் கொள்ளையைக் கடைப்பிடிப்பதற்காகவே பாளையக்காரக் கைதிகளை விடுதலை செய்வதாக அவரே கூறுகிறார். இந்த எதிர்பாராத இரக்கமுள்ள செய்கையால் அவர்களுக்குக் கம்பெனியாரிடமுள்ள நம்பிக்கையை மேலும் வலுப்படுத்தலாமென நம்பினார். கொல்லார்ப்பட்டி பாளையக்காரன் 20 ஆண்டுகட்கு மேல் சிறைவைக்கப்பட்டிருந்தான். அவன் சிறை செல்லும்போது குழந்தையாக இருந்த அவன் மகன் பாளையத்திற்குத் தலைவனாகி, இது வரை இவ்வுடைமைகளின் உரிமையை அனுபவித்து வந்தான். ஆயினும் அவன் தன் தந்தையின் விடுதலைக்காக மனுச் செய்து கொண்டது மன்றி, திரு. இர்வின் முன்னிலையில் அவன் அதுவரை அனுபவித்து வந்த அதிகாரங்களைத் தன் தந்தைக்கு மாற்றிவிட்டுத் தானாகவே விலகிக் கொண்டான். இந்த உருக்கமான கடமை உணர்வைக் கண்டு திரு. இர்வின் மிக வியப்படைந்தார். இந்திய வாசகர்களுக்கு அது முன்னவனாகிய இராமனிடம் பரதன் காட்டும் அன்பை நினைவூட்டும். (கால்டுவெல் பாதிரியார் காட்டும் இந்த உவமையின் நலம் உள்ளி உவக்கத்தக்கது. - ந.ச.)



அக்டோபரில் கர்னல் புல்லர்ட்டனால் தண்டனைக்குரியவர்களாகக் குறிக்கப்பட்ட பாஞ்சாலங்குறிச்சி, சிவகிரி பாளையக்காரர்கள் கப்பம் செலுத்துவதில் இன்னும் தவறாமலிருக்கிறார்கள். மற்ற பாளையக்காரர்களும் அதேபோல் ஒழுங்காகக் கட்டுவார்கள் என நம்புவதாய் அவர் தெரிவித்திருந்தார்.

1785 இல் சுவார்ட்ஸ் (Swartz) தான் கட்டிய திருக்கோயிலை (Church) உரிமைப்படுத்துவதற்காகப் பாளையங்கோட்டைக்குச் சென்றார்.

தூத்துக்குடியையும், அதைச் சார்ந்த இடங்களையும் டச்சுக்காரர்கள் சார்பில் டச்சு கவர்னராக வந்த திரு.மெக்கர்ன் (Mr. Meckorn)னிடம் ஒப்படைக்குமாறு பாளையங்கோட்டை தலைவனான காப்டன் பில்கிளிப் (Captain Bilcliff)க்குக் கட்டளை இடப்பட்டது. இந்த உடன்படிக்கையின் சார்பில் நாளடைவில் செய்யப்பட்ட காரியங்கள், இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே அதாவது 1783இல் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டின் இறுதியில் திரு. ஓக்ஸ் (Mr. Oakes) சுக்குப் பதிலாக திரு.டோரின் (Mr. Torin) சம்பளம் வழங்கும் (பட்டுவாடா செய்யும்) பணியை ஏற்றார். அதற்குப் பின்னர் சம்பளம் வழங்கும் (பட்டுவாடா செய்யும்) பணியில் எப்பொழுதும் பொதுமக்களே நியமிக்கப்பட்டு வந்தனர்.

### வரிவசூல் உரிமையை ஒப்படைத்தல்

இந்த ஆண்டின் முக்கிய நிகழ்ச்சி-திருநெல்வேலி உட்பட நாட்டின் ஒவ்வொரு மாவட்டத்திலும் பல தொல்லைகளுக்குத் தோற்றுவாயாக இருந்து வந்த நிகழ்ச்சி-நாட்டு வரிவசூல் உரிமை நவாபிடம் ஒப்படைக்கப்பட்டதே ஆகும். இந்நிலை காரணமாய் கம்பெனியின் சிவில் நிர்வாகத்தினால் ஏற்பட்ட நன்மைகள் ஏழு ஆண்டுகள் இல்லாமல் போயின. சென்னை அரசாங்கத்தாரின் பயனற்ற மறுப்புகளுக்குப் பிறகு வரிவசூல் உரிமை ஒப்படைப்பு ஜூன் 28 ஆம் தேதி நடைபெற்றது. அதிலிருந்து வரியுரிமை மாற்றக் குழுவின் நடவடிக்கைகள் முடிவடைந்து, குழுவும் கலைக்கப்பட்டது. சூலை 5 ஆம் தேதியிலிருந்து அவர்கள் பெற்றுவந்த தனிப்பட்ட சலுகைகளை நிறுத்திவிடுவதாகவும் ஆனால் எல்லாக் கணக்குகளும் ஒரு வகைப்படுத்தும்வரை எல்லோரும் குழு கூட்டத்தில் தொடர்ந்து பணியாற்ற வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. அவர்களுடைய ஆர்வமுள்ள தொண்டுகளுக்குத் தலைமை அரசு நன்றி பாராட்டியது. வரிவசூல் உரிமையை விட்டுக் கொடுத்ததை உண்மையில்

மீட்கவேண்டும். அது மிக இழிவான முடிவுகளுடன் சுமத்தப்பட்ட பிற்போக்குள்ள ஒரு அளவீடாக இருக்கிறது என்று திரு.இர்வின், அரசாங்கத்தினருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் ஜூன் 24 ஆம் தேதி எழுதினார். வரிவசூல் ஒப்படைப்பு தவிர்க்க முடியாத ஒன்றாக இருந்தால், திருநெல்வேலி, மதுரை நீங்கலாக மற்றெல்லா இடங்களிலும் அக்டோபர் வரை கட்டுப்பாடு கோரிக்கை ஏற்படுத்தப்படவேண்டுமென்று அவர் வேண்டிக் கொண்டார். அதற்கு இரு மாவட்டங்களும் அவராலேயே புதிய முறையில் மாற்றியமைக்கப்பட்டிருந்தமையால் புதிய நிலையிலிருப்பதாகத் தெரிவித்தார். சீர்திருத்தங்களும், அமைதியான முறைகளும் புகுத்தப்பட்டன. ஆனால் போதிய காலமில்லாமையால் அவைகளை நடைமுறையில் சிறப்பாகச் செய்ய இயலவில்லை. அவனுடைய விருப்பம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஏனெனில் அவன் கடிதம் மதராசுக்குப் போய்ச் சேர்வதற்குள் வரியுரிமை மாற்றம் பொதுவாக நடைபெற்று முடிந்து விட்டது. இந்த முடிவின் படி ஜூலை 10 ஆம் தேதியிலிலேயே ஜூன் 28 ஆம் தேதியிலிருந்து சேர வேண்டிய பாக்கியுடன் மாவட்டத்தை அமில்தாரிடம் ஒப்படைத்து விட்டதாக இர்வின் அறிவிக்கிறார். அவர் அவ்வாறு செய்தபோது, இச்செயலால் அடுத்து வரக்கூடிய தீமைகளை எண்ணி அஞ்சுவதாக மறுபடியும் தெரிவித்தார். செப்டம்பரில் திருநெல்வேலியிருந்து மதராசுக்குச் செல்லும் வழியில் மதுரையிலுள்ள வேலூரிலிருந்து அரசாங்கத்தினருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் மதுரை மாவட்டத்தில் அவருடைய வரிவசூல் உதவியாளராக இருந்த திரு. டோரி நடத்தையைப் பற்றி மிகச் சிறப்பாக எழுதியிருந்தார். அவரே பின்னர் 1790 இல் ஏற்பட்ட கொள்கையின்படியும், 1792இல் நடந்த உடன்படிக்கையின் படியும் திருநெல்வேலியின் முதல் கலெக்டராக இருந்தார். மதராசுக்கு அவர் வந்தபின் அக்டோபரில் அரசாங்கத்தினருக்கு ஒரு வன்மையான கடிதம் எழுதினார். அதில் அவர் அதிகாரத்திற்கு உட்பட்டிருந்த திருச்சிராப்பள்ளி முதல் திருநெல்வேலி வரை உள்ள தென் மாவட்டங்கள் நிலையைப் பற்றி அவருடைய எண்ணங்களை உறுதியாக வெளியிட்டிருந்தார். கம்பெனியார் ஆட்சியினின்றும் விலகுவதன் மூலம் நவாபின் பிரதிநிதிகள் விதிவிலக்கின்றி ஒழுங்கற்ற ஆட்சிபுரிவார்கள்; பாளையக்காரர்கள் கலகமும், கொள்ளைகளும் அடக்குமுறையற்றுப் போகும். இவ்விரண்டு காரணங்களால் பழைய தீமைகள் அனைத்தும் மீண்டும் வலிவடைந்துவிடும் என்பதே திரும்பத் திரும்ப உறுதியாகக் கூறப்பட்ட அவரது தீர்ந்த எண்ணங்கள்.

வரியுரிமை மாற்றக் குழு தங்கள் வேலைகளை விட்டு விலகிய போது, டிசம்பர் 31 ஆம் தேதி அரசாங்கத்தினருக்குத் தங்கள் நடவடிக்கைகளைப் பற்றிப் பொது விவரத்தை ஒப்படைத்தது. அதில் திருநெல்வேலி பாளையக்காரர்களின் சூழ்நிலையை நன்கு விளக்கி, நவாபின் பிரதிநிதிகள் அவர்களிடம் நயமின்றி நடந்துகொண்டதையும், அதற்கு மாறாக அவர்களுடன் இணக்கமாக நடந்து கொள்ள அவர்கள் மேற்கொண்ட புதிய முறையின் தன்மைகளைப் பற்றியும் குறிப்பிட்டிருந்தனர். அவர்கள் கொடுத்திருந்த விவரம் வருமாறு: ‘பாளையக்காரர்கள் எண்ணிக்கை முப்பத்திரண்டுதான். அவர்களுக்கு 30,000 போர்களடங்கிய போர்ப்படை இருந்தது. அவர்கள் வேல்களையும் சிறு துப்பாக்கிகளையும் போர் ஆயுதங்களாகப் பயன்படுத்தினர். வலிமைமிக்க கோட்டைகளைப் பெற்றிருந்தனர். இவற்றைக் கைப்பற்றுவதே நவாபின் படையினருக்கு மிகக் கடினமான செயலாக இருந்தது. அப்படி அல்லல்பட்டு அவர்கள் வெற்றி பெறினும், படையினர் காடுகளுக்குள் தப்பி ஓடுவதற்கு மிக எளிதாக இருந்தது. நவாபு வலிமையடைந்திருந்தபோது, பாளையக்காரர்களின் பயம் அவர்களை எவ்வளவு பணியத் தூண்டியதோ அதற்கேற்றாற்போல் அதிக திறைப் பணத்தை அவர்கள்மேல் சுமத்தினான். ஆனால் அவன் வலிமையற்றபோது அவர்களே கொடுத்த திறைக் காணிக்கைகளைப் பெற்றுக் கொண்டு நிறைவு எய்தித் தன் கட்டளைப்படி வலுவில் திறைப் பணத்தைப் பெறுவதற்கு ஏதுவான சூழலை எதிர் நோக்கியிருந்தான்.



திரு. இர்வின் 1783 இல் கணக்கிட்டபடி அதற்கு முந்திய 18 ஆண்டுகளில் பாளையக்காரர்களிடமிருந்து ஒரு இலட்சம் சக்கரங்களுக்கு மேல் ஆண்டுதோறும் திறைப் பணம் வசூலாக வேண்டியிருந்தது. ஆனால் சராசரி ஏறக்குறைய 40,000 சக்கரங்களே ஆண்டுதோறும் கஜானாவுக்கு வந்து சேர்ந்தது. இந்தச் சிறு இலாபத்துடன் கொள்ளைகளால் இழந்தவற்றையும் இராணுவப் படையெடுப்பால் செலவழிக்கப்பட்டதையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நவாபு தனது நிர்வாகத்தில் பல இலட்சக் கணக்கான பகோடாக்களை இழந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. இந்த முறையினால் ஏற்படும் தொல்லை இது ஒன்றுமட்டுமல்ல; அமைதிக் காலத்தில் சிறந்த மக்களாயும், போர்க்காலத்தில் உற்ற ஒத்துழைப்பாளர்களாகவும் இருக்க வேண்டும் என்ற இருதிற நம்பிக்கை மக்களிடையே ஏற்படுவதற்குப் பதிலாக அடிக்கடி சண்டைகளும், நிலையான நம்பிக்கையின்மையும் அவர்களிடையே குடிகொண்டிருந்தன. இதன் பயனாய் 1780 இல் ஐதர் அலி கர்நாடகத்தை முற்றுகையிட்டபோது அவர்கள் அச்சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களுடைய திறைப் பணத்தைச் செலுத்தாது, நாட்டைச் சூறையாடிக் கொடுமையும் அநீதியும் நிறைந்த பல செயல்களில் ஈடுபட்டனர். இதைக் கண்டு வெகுண்ட கம்பெனி, போர் நடந்து கொண்டிருந்த போதே, ஒரு பெரிய படையை இவர்களுக்கு எதிராக அனுப்ப வேண்டிய

தாயிற்று. சரியான சூழ்நிலையில், கர்னல் புல்லார்ட்டன் தலைமையில் முக்கியமான இரண்டு பாளையக்காரர்களுக்கு எதிராகச் செய்யப்பட்ட படையெடுப்பு மற்றெல்லாரையும் கீழ்ப்படியச் செய்துவிட்டது. இதை அடுத்து ஏற்பட்ட உடன்படிக்கையின் நேர்மையானது அவர்களுடைய பணிவைக் கம்பெனி அரசாங்கத்திடம் உண்மையான நம்பிக்கையாக மாற்றியது என்று அவர்கள் கூறுகிறார்கள்.

மற்றொரு பத்தியில் 'நவாபிடம் வரிவசூல் உரிமையைத் திருப்பிக் கொடுத்த சில நாட்களுக்குள்ளாகவே முன்பு நடந்தது போலவே குத்தகைக்காரர்களின் நிரந்தர உரிமைக்கான விலையாக வெவ்வேறு குத்தகைக்காரர்களிடமும் முன்பணம் கேட்டும், தனக்கு வரவேண்டிய திறைப் பணத்தை எதிர் நோக்கி அந்தப் பணம் கடன்வாங்கியும் ஆட்சி செலுத்தத் தலைப்பட்டுவிட்டான். கடன் தொகைக்கான வட்டி கட்டிட வேண்டியிருந்ததுமட்டுமின்றி, நாட்டின் வருமானத்திலிருந்தே குத்தகைக்காரர்கள் இத்தொகையைத் திருப்பிக் கொடுக்க வேண்டியிருந்த தால் அவர்களுக்கு ஏற்பட்ட அதிக அதிகார வலிமையையும் கண்டு அவர்கள் நவாபின் கட்டளைக்கு மறுப்புக் கூறிவிட்டனர் என்று வருத்தத்துடன் தெரிவித்திருந்தனர்.

வரியுரிமை மாற்ற காலத்தில் ஏற்பட்ட குறைந்த செலவையும் நவாபு அரசாங்கத்தினுடைய ஆடம்பர செலவையும் ஒப்பிடுவதில் அவர்கள் முனைந்தனர். அடக்குவாரற்ற அதிகாரம் அவர்கள் கைக்கு வந்ததும், நவாபின் தனிப்பட்ட சொந்தச் செலவுகளை ஆண்டுக்கு $13^1/_2$ இலட்சம் பகோடாக்களிலிருந்து 2 இலட்சம் பகோடாக்களுக்குக் கூடுதலாகச் சுருக்கிவிட்டனர். அவர்கள் வரிவசூல் காலத்தின் போது-போர் நடைபெற்ற காலத்திலும் கூட ஏற்பட்ட செலவுகள் மொத்த வரிவசூல் தொகையில் 11 சதவீதத்துக்கு அதிகமாகவில்லை.

இவ்விவரங்களோடு கீழ்க்காணும் விவரத்தையும் பிற்சேர்க்கையாக நான் சேர்த்துள்ளேன். வரியுரிமை மாற்றம் ஒப்படைக்கப்பட்டபின், திரு.இர்வின் 1785இல் இம்மாவட்டத்தைவிட்டு வந்த பின் இருந்து வரிவசூல் உரிமை ஏற்புக் காலத்தொடக்கம் வரை - 1790 இல் திரு. டோரினுடைய (Mr. Torin) நிர்வாகம் தொடங்கிய வரை-திருநெல்வேலி நாட்டில் ஏற்பட்ட ஒழுங்கற்ற நிலைகளைப் பற்றித் திரு. லூஷிங்டனால் கொடுக்கப்பட்ட விவரம் வருமாறு:-

'இந்தச் செய்திகளை அறிந்தபின் நாட்டுமக்கள் கடந்த கால கம்பெனி நிர்வாகத்தை நினைவுகூர்ந்து அது ஒப்பீடான இன்ப காலம் என்று எண்ணுவது மிக இயல்பானதே. அக்காலத்தோடு கொடுமை நிறைந்த அடமான முறை, விற்பனை முறை பழக்கத்திலிருந்த இக்கடிபார்கானின்



(Iktibarkhan) நிர்வாகத்தில் அடுத்தடுத்து மூன்று ஆண்டுகளில் ஏற்பட்ட நெருக்கடிகளை உருக்கமான நெஞ்சத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தனர். இத்தகைய பொறுக்க இயலாத கொடுமைகளிலிருந்து விடுபட மக்கள் திருவாங்கூர் நோக்கி ஓடினர். எனவே நாட்டின் அழிவு விரைவாக நெருங்கியது. நாளடைவில் நவாபின் அச்சங்கள் மேன்மைதங்கிய பிரபு ஹோபார்ட் (Lord Hobart)டின் எதிர்வாதத்தால் நாட்டில் நாசத்தை விளைவித்தது. இந்த முறையால் வளர்த்த தீமைகளின் நுணுக்கம், அவற்றை ஒழித்து அடுத்தபடியாக முற்றுப் புள்ளி வைக்க வேண்டுமென்று உடன்படியாகக் கம்பெனி அரசாங்கம் மேற்கொண்ட திட்டங்கள், முக்கியமாக இந்தக் கால எல்லையில் நிறுவப்பட்ட வாணிப முதலீடு பற்றிய கண்டிப்பான உண்மை ஆகியவை திருநெல்வேலியின் அழிவை அகற்றியது என்று கூறுதல் வேண்டும். ஏனெனில் மேன்மை தங்கிய தர்பாரில் எழுப்பிய எச்சரிக்கையும், இந்தக் கொடுமைகளிலெல்லாம் பங்கு கொண்டவர் நெஞ்சங்களிலெல்லாம் எழுப்பப்பட்ட விழிப்பு எச்சரிக்கையும் முக்கியமாக மேன்மை தங்கிய நவாபின் நிர்வாகத்தின் தன்மையை மாற்றியமைத்தது. அநியாய வட்டிக்கு அடமானம் வைக்கும் முறை அந்தக் காலத்திலிருந்து ஒழிந்தது. ஏனெனில் மாகாணமெங்கும் முன்பு பரவியிருந்த அத்தகைய் கெடுதலான நடைமுறைகளினால் ஏற்பட்டிருந்த பயன்கள் ஒருசில துணிவுள்ளவர்கள், அரைகுறையான அச்சம் தரும் கொடிய தானிய சர்வாதிகாரத்தினால் பெற்ற குறைந்த நன்மைகளிலிருந்து மாறுபட்ட தன்மையுடையதாயிருந்தன. பொதுவாகக் 'கான்' என்றழைக்கப்பட்ட இக்கடிபார்கான் இந்தக் கட்டத்தின் பெரும்பகுதியான காலத்தில் நவாபின் நிர்வாகியாகத் திருநெல்வேலியில் இருந்தான்.

1786-1786-ம் ஆண்டு மே முதல் தேதி வருவாய்த்துறை (Revenue Board) சென்னையில் அமைக்கப்பட்டது.

பாளையங்கோட்டை படைத்தலைவன், நவாபின் நிர்வாகியாகிய இக்கடிபார்கானின் வேண்டுகோளுக்கிணங்க சங்கர நயினார்கோவிலில் ஐந்து படைகளடங்கிய காப்டன் பிளாக்கரின் (Captain Blacker) பட்டாளத்தை நிறுத்தி வைத்தான்.

1787-திரு. ஓக்ஸ் (Mr. Oakes) பாளையங்கோட்டை ஊதியம் வழங்கும் பணியை மறுபடியும் ஏற்றுக் கொண்டார். படைப்பகுதித் தலைவனான மேஜர் மெலியட்டும் (Major Maleod) ஊதியம் வழங்கும் பணியாளருக்கும், ஊதியம் வழங்கும் பணியாளர் நியமித்த பரிவர்த்தன விகிதத்தினால் (Rate of Change) தன் துருப்புகளுக்கு ஏற்பட்ட இழப்பைப் பற்றிய தகராறு ஏற்பட்டது.

## கம்பெனி அரசின் ஆக்கிரமிப்புக் காலம்

கர்னல் பிரிட்ஜஸ் (Bridges) பாளையங்கோட்டை படைத்தலைவனாக இருந்தான். சொக்கம்பட்டி பாளையக்காரர் கோட்டை கட்டி அதில் படைக்கலன்களையும் வெடிமருந்துகளையும் திரட்டி வைத்திருந்தான். அவனுக்கு எதிராகச் சண்டை செய்யத் தென் காஞ்சியில் (தென் காசி) ஒரு பெரும்படையை நவாபினுடைய பஸ்தார் திரட்டி வைத்திருப்பதாக பிப்ரவரியில் அறிவித்தார். தென்காஞ்சி என்பது சரியானபடி தென்காசி எனப்படும். அதாவது தெற்கே இருக்கிற காசி. மதராஸ் அரசாங்கத்தின் இசைவின்றி பஸ்தார் எந்தவிதமான எதிர்ப்புகளையும் தெரிவிக்கக் கூடாது என்று கர்னல் பிரிட்ஜஸ் கூறினார்.

1788-அப்போது டச்சுக்காரர்களுக்குச் சொந்தமாயிருந்த இடங்களாகிய தூத்துக்குடியிலிருந்து கொச்சிக்கு ஒரு டச்சுப்படை அணிவகுத்துச் சென்றது. அவர்கள் திருவாங்கூர் கொச்சி இவைகளின் எல்லை வழியாகச் செல்லும்போது திப்புசுல்தான் படையைச் சந்திப்பதைக் கவனமாய்த் தவிர்த்தல் வேண்டுமென எச்சரிக்கப்பட வேண்டுமென்று மதராஸ் கவர்மென்டு அறிவுரை நல்கியது. வட திருவாங்கூர் பகுதியில் அடுத்து வந்த ஆண்டில் திப்புவின் தாக்குதல் ஏற்பட்டது.

1789-ஜனவரியில் திரு. ஒக்ஸ் விலகினார். முன்பு அவருக்காகத் தற்காலிகமாய் வேலைபார்த்து வந்த திரு. டோரின் அந்த இடத்திற்கு சம்பளப் பட்டுவாடா அதிகாரியாகவும் பண்டகசாலையாளராகவும் நியமிக்கப்பட்டார். திரு. டோரின் பாளையங்கோட்டையில் ஒரு பகுதி நிலத்தை இலவங்கப் பட்டையைப் பெருமளவில் பயிரிடுவதற்காகத் தனக்கு வேண்டுமெனக் கேட்டார். அவர் கேட்ட ஒரு பகுதி நிலம் நவாபு தோட்டத்திற்கும் கம்பெனியாரின் தோட்டத்திற்கும் அருகே அமைந்திருந்தது. அது சம்பளப் பட்டுவாடா அதிகாரி வீட்டிற்கு வெகு அருகாமையிலும் இருந்தது. மரபுப்படி இந்த இலவங்கப்பட்டைத் தோட்டம் தற்போது நீதிபதியின் வீட்டிற்கு வடகிழக்கில் நெல் சாகுபடி செய்திருக்கின்ற நிலப்பகுதிக்கு ஈடானது. இந்த இலவங்கப்பட்டைப் பயிரிடுதலைத் தொடங்கியது, இதற்கு முன்பு சம்பளப் பட்டுவாடா அதிகாரியாயிருந்த திரு. லைட் (Light) (1780ஐப் பார்க்க). இந்த ஆய்வு இதற்குமுன் பயிரிட்ட பயன் போலவே மிக்க பயன்தரத்தக்க ஒன்றாக இருந்தது. திரு. லைட் இலங்கையிலிருந்து கொண்டுவந்த இரண்டு மரங்களிலிருந்து இப்பொழுது அதிக மரங்கள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. இலவங்கப்பட்டை மரங்களைப் பாளையங்கோட்டை ஆற்று வண்டல்மண் பகுதியில் பயிரிட்டால் வளமுறச் செய்வது எளிது. ஆனால் அவ்வளவு வெப்பமும் வரட்சியுமான காலநிலை வேறுபாடுள்ள



இடத்தில் அப்பயிர் அதிகப் பயன் அளிக்காது. டோரின் கொண்டுவந்து பெருக்கிய மரத்திலிருந்துதான் குற்றாலத்திலுள்ள வாசனைப் பொருள் தோட்டத்தில் (Spice Garden) இலவங்கப்பட்டை பயிரிடப்பட்டது (1791 ஐப் பார்க்க).

சம்பளப் பட்டுவாடா அதிகாரியினுடைய வீட்டை (தனது வீட்டை) 1000 பகோடாக்கள் செலவில் திருத்தியமைப்பதற்காகக் கேட்டிருந்த டோரினின் விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

1790-பாளையங்கோட்டை உட்பட தென் கொள்ளிடக் கரையிலுள்ள எல்லா சம்பளப் பட்டுவாடா அதிகாரிகளும் கர்னல் மஸ்குரூவினுடைய (Colonel Musgrove) எல்லா உத்தரவுகளுக்கும் உடனடியாகப் பணியவேண்டுமெனக் கட்டளையிடப்பட்டனர். கர்னல் மஸ்குரூவ (கமாண்டர் - இன் - சீப்பாக) தலைமைப் படைத்தலைவனாக இருந்தான். அவன் திப்பு சுல்தானால் ஏற்பட இருக்கும் படையெடுப்பை எதிர்க்கத் தயாராகிக் கொண்டிருந்தான். மாகாணப் படைகளும் ஒவ்வொரு பகுதியிலும் தயாரிக்கப்பட்டது.

## ஆக்கிரமிப்புக் காலம் (The Period of assumption)

1790 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 7 ஆம் தேதி சென்னை அரசாங்கத்தினருக்கும் கர்நாடக நவாபுக்குமிடையே இருந்த உறவில் ஒரு புதிய காலம் தொடங்கியது. வரிவசூல் உரிமையையும் அல்லது ஆங்கிலேயர் கைக்கு பொது நிர்வாகப் பணிகளை மாற்றக் கூடிய அது போன்ற எந்தச் செயலையும் திரும்பவும் நாட்டின் நடைமுறையில் புகுத்த நவாபை இணங்கும்படிச் செய்வது இயலாததொன்று என்று உணர்ந்த அரசாங்கம் எவ்வித உடன்படிக்கையும் இன்றி அறிக்கையால் மட்டும் நாட்டின் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டது. அவர்கள் பயன்படுத்திய வாசகம் 'நவாபினுடைய நாட்டு நிர்வாகத்தை நாங்கள் கைக்கொண்டோம்' என்பதுதான். இக்காலம் 'ஆக்கிரமிப்புக் காலம்' என்று பெயர் பெறுகிறது. 1781லிருந்து 1790 வரை இருந்த 'வரிவசூல் உரிமை பெற்ற காலம்' என்பதற்கு நேர்மாறாக 1790லிருந்து 1792 வரை உள்ள காலத்திற்கு 'ஆக்கிரமிப்புக் காலம்' என்று பெயர் வழங்கலாயிற்று. 1792 ஆம் ஆண்டிலிருந்து புதிய ஒப்பந்தக் காலம் தொடங்கியது. அதே சமயத்தில் ஒரு வாரியம் (போர்டு) நிறுவப்பட்டது. இது முன்புபோலவே வரிவசூல் உரிமை போர்டு (The Board of assigned Revenue) என்று அழைக்கப்பட்டது. ஆனால் இப்பெயர் தவறானது. இப்பெயர் நவாபின் இசைவு பெற்றது என்ற பொருளை உணர்த்துகிறது. எனவே செப்டம்பர் 28 ஆம் தேதி அரசாங்கத்தின் போர்டுக்குப் பின் வருமாறு

எழுதினார். 'நவாபினுடைய நாடு, தஞ்சாவூர் அரசருடைய நாடு இவற்றின் நிர்வாகங்கள் ஆக்கிரமிக்கப்பட்டுவிட்டன. நிர்வாகம் அவர்களிடம் கொடுக்கப்படவில்லை. எனவே உங்கள் வாரியத்தின் (போர்டின்) பெயரையும் அதற்கேற்றபடி மாற்றிக் கொள்ள வேண்டும். இந்த உத்தரவுக்குப் பிறகு அந்த வாரியம் (போர்டு) 'வரிவசூல் ஆக்கிரமிப்பு போர்டு' என்று அழைக்கப்பட்டது. இந்த வாரியம் (போர்டு) வரிவசூல் வாரியத்திலிருந்து (போர்டிலிருந்து) தனிப்பட்டதல்ல. ஆனால் அதனுடைய வேலையைச் செய்யும் ஒரு துறையாகக் கருதப்பட்டது.

இந்த ஆணை விளம்பரப்படுத்தப்படுவதற்கு முன்னமேயே பல ஒழுங்குகள் செய்யப்பட்டன. (எனக்குக் கிடைத்த பிரதியில் 150 ஆம் பக்கத்தில் சில பத்திகள் காணப்படவில்லை. - ந.ச.)

1791-பாளையங்கோட்டையில் பயிராக்கப்பட்ட இலவங்கப் பட்டையின் மாதிரிகள் மதராசுக்கு அனுப்பப்பட்டு ஒப்புதல் பெற்றது. திரு. டோரின் முசுக்கொட்டை செடிகளை (Mulberies) பயிர் செய்யத் தொடங்கினார். இலவங்கப்பட்டை சாகுபடி டோரின் அவர்களால் தென்காசி வரை விரிவாக்கப்பட்டது. இத்தகைய இன சாகுபடி செய்தவரை 1800 ஆம் ஆண்டு திரு. காசாமேஜர் (இவர் பெயரால் ஓர் ஊரும் உள்ளது) பார்க்க - டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளையின் தமிழின்பம்-ந.ச.) என்பவர் குற்றாலத்திற்கு அறிமுகப்படுத்தி வைத்தார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறபடியால் ஒரு வேளை குற்றாலம் குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

அக்டோபர் மாதம் 11 ஆம் தேதி டோரின் திருநெல்வேலி பாளையக்காரர்களின் ஒழுங்கு நடவடிக்கைகளைப் பற்றிய குறிப்பு ஒன்றைக் கவர்னர் ஜெனரல் வார்டு கார்ன்வாலிசு (Lord Cornwallis) பிரபுவுக்குத் தெரிவிப்பதற்காக அரசாங்கத்திற்கு அனுப்பினார். அதில் சிவகிரி பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர்களுக்குக் கர்னல் புல்லர்ட்டன் காட்டிய சலுகைகள் அவர்களுடைய கலகம் செய்யும் குணத்தைத் தூண்டுவதற்கு ஏதுவாக இருந்தன என்றும், குறிப்பாகப் பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர்கள் தரப்பில் மேலும் தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்ள பரிவுரை செய்ய வேண்டுமெனவும் கூறியிருந்தார். ஓர் இராணுவக் காவல்படை பூலித்தேவரின் கோட்டையைக் கைப்பற்ற அனுப்பப்பட்டதென்றும் ஆனால் தேவரின் ஆட்கள் இராணுவ வீரர்களை அப்படியே ஆயுதங்களுடனேயே தூக்கிச் சென்று கோட்டைக்கு வெளியே விட்டு விட்டனர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். இந்நிகழ்ச்சி நம்முடைய ஆதிக்கத்தினிடம் அவர்கள் கொண்ட அச்சத்தையும் எதற்கும் பணியக்கூடாதென்ற அவர்கள் உறுதியையும் காட்டுகின்றது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.



கர்னல் புல்லர்ட்டனின் கொள்கையின் பயனைப் பற்றிய டோரினின் எண்ணம் இர்வினுடைய எண்ணத்திற்கு முற்றிலும் மாறுபட்டிருந்ததென்பது விளக்கமாகத் தெரிகிறது. அவருடைய அறிக்கைகள் கர்னல் மாக்ஸ்வெல்லின் படையெடுப்புக்கு வழிகோலியது. ஆனால் அதன் பயன் முன்போ அல்லது பின்போ நடைபெற்ற அத்தகைய ஒவ்வொரு படையெடுப்பின் பயனைப் போலவே, நவாபு-கம்பெனி இருவரின் இரட்டை ஆட்சி நிலைத்திருக்கும் வரை 'இரக்கத்தினாலோ' அல்லது 'உறுதியான தீவிர நடவடிக்கைகளாலோ' நிரந்தர அமைதியை நிலை நிறுத்த முடியாது என்பதை உணர்த்திற்று. இரு எஜமானர்களையுடைய பாளையக்காரர்கள் எப்பொழுதும் இருவரையும் போட்டியிட்டு வெற்றி கண்டனர். அரசாங்கம் டோரினுடைய உற்சாகம் உழைப்பு இவற்றால் நிறைவு எய்தி, அவருடைய சம்பளம், படி இவற்றை இருமடங்காக்கியது. அவர் ஓயாது-ஆனால் வெற்றியின்றி - பழைய குத்தகைக்காரனான தீர்த்தாரப்ப முதலி வசூல் செய்த வரிப்பணத்தைத் திரும்பித் தருமாறு மிக்க முயற்சியுடன் விரைவுபடுத்திக் கொண்டே இருந்தார் (160 ஆம் பக்கத்தின் இறுதியில் சில வரிகள் இல்லை).

சில நிபந்தனைகளின்மேல் நாடு மறுபடியும் நவாபின் நிர்வாகத்திற்கு மாற்றப்பட வேண்டும். எதிர்பார்த்த மாவட்டங்களில் திருநெல்வேலி மதுரை உட்பட திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கேயுள்ள மாவட்டங்களும் இருந்தன. வசூல் செய்த செலவுகள் போக எஞ்சிய வரிவசூல், கடனாக இருக்கின்ற கிஸ்தி தொகைக்குச் சரியாக ஆகும்வரை இந்த மாவட்டங்கள் கம்பெனியின் பிடிப்பிலிருக்க வேண்டும். ஒப்பந்தத்தின் ஒரு நிபந்தனை போர்க்காலங்களில் நாட்டின் ஆட்சிமுழுதும் கம்பெனியாரின் பிடிப்பிலேயே இருக்க வேண்டும் என்பதாகும்.

ஒப்பந்தம் தொடர்பாக ஒப்பந்தத்தின் தேதியாகிய ஜூலை 12 ஆம் தேதியே டோரினுக்கு ஒரு புதிய பணி கொடுக்கப்பட்டது. அதன்படி அவர் ஜமீன்தார்களுக்கும் திருநெல்வேலி, மதுரை, திருச்சிராப்பள்ளி, இராமநாதபுரம் சிவகங்கை மாவட்டங்களிலுள்ள பாளையக்காரப் பேஷ்களுக்கும் ஆணையாளராக (கலெக்டர்) நியமனம் பெற்றார். இது ஆக்கிரமிக்கப்பட்ட வரிவசூல் வாரியத்திலிருந்து (போர்டிலிருந்து) கூடிய விரைவில் பெறப்போகும் சிறப்பு கட்டளைகளுக்கு முன் கொடுக்கப்பட்டது. அந்தக் கட்டளைகள் லெப்டினண்ட் கர்னல் மாக்ஸ்வெல் தான் புதிதாக எடுக்கும் படையெடுப்பில் தனிப்பட சிறப்பாக அவனும் சேர்ந்து உழைப்பது பற்றிய தொடர்புடையது.

திரு. டோரின் எடுத்துக் கூறியபடி அரசாங்கம் கர்னல் மாக்ஸ்வெல்லின் தலைமையில் ஒரு படையைத் திருநெல்வேலிக்கு அனுப்பத் தீர்மானித்தது. இந்தப் படையெடுப்பின் முக்கியமான நோக்கம் சிவகிரி பாளையக்காரனைத் தண்டிப்பதாகும். அவன் எல்லா அதிகாரிகளையும் அறம், மனிதத் தன்மை இவற்றின் சிறப்புகளையும் அவமதித்துச் சாத்தூர் பாளையக்காரரைத் தன் வேலைக்காரர்களுடன் சேர்ந்து கொடூரமாகத் தாக்கி அவனையும் அவன் குடும்பத்தினரையும் கொலை செய்தான். சிவகிரி பாளையக்காரரை மட்டும் பிடிக்க முயற்சிக்க வேண்டுமென்றும் அவனுடன் கூட்டு சேர்ந்திருப்பதாகத் தெரிந்தால் மட்டும் அன்றி வேறு எக்காரணத்திற்காகவும் பாளையக்காரர்களுக்கு எதிராக ஒன்றும்செய்யக் கூடாதென்றும் அவனுக்குக் கட்டளைகள் பிறப்பிக்கப் பட்டன. கூடிய விரைவில் அத்தகையதொரு சதிக் கூட்டமிருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. கர்னல் மாக்ஸ்வெல் ஜூலை மாதத்தில் அவனுடைய படையெடுப்பை ஆரம்பித்தான். மதுரையிலிருந்து முன்னேறி வில்லிபுத்தூருக்குச் சென்றான். அங்கிருந்து சிவகிரியை நோக்கிப் போனான். சிவகிரி பாளையக்காரரின் மலை அரணாயிருந்த கோம்பையை (மலை அரண்) ஒடுக்கினான். இத்தாக்குதலில் ஸ்டீவர்ட்டு, டாரன்ஸ் (Torrens) இருவரும் மிக்க புகழ் பெற்றனர். 1783இல் கர்னல் புல்லர்ட்டன் இந்த உறுதி வாய்ந்த கோட்டையைப் பிடித்தது பற்றிய செய்திக் குறிப்பைப் பார்க்க.

**பாளையக்காரர்களின் துணிச்சல்**

கர்னல் மாக்ஸ்வெல் திரு. டோரினுடைய தொடர்பில் திருநெல்வேலியிலுள்ள பல பாளையக்காரர்களுடன் ஒரு உடன்படிக்கை செய்ய முன்னேறினான். ஆனால் எடுக்க வேண்டிய நடவடிக்கைகளின் போக்கில் சிலவற்றில் அவர்கள் ஒத்துவரவில்லை. கர்னல் மாக்ஸ்வெல் பாளையக்காரர்களுடைய கடன் பாக்கிகளில் போர்டின் கட்டளைப்படியே சில உத்தரவுகளைப் பிறப்பித்தான். சிவகிரி பாளையக்காரனுக்கு எவ்விதப் பரிவும் காட்டப்படவில்லை. சொக்கம்பட்டி பாளையக்காரன் கர்னல் மாக்ஸ்வெல்லின் உத்தரவுகளை ஏற்க மறுத்துவிட்டான். எனவே, அவன் அதிகாரத்தினின்றும் அகற்றப்பட்டான். செந்நல்குடி பொள்ளம் தற்காலிகமாகக் கைப்பற்றப்பட்டது. கர்னல் மாக்ஸ்வெல் செய்து கொண்ட உடன்படிக்கையின் முக்கியப் பகுதி, ஒரு குறிப்பிட்ட சங்கரலிங்கம்பிள்ளைக்கு யாரும் எந்த அலுவலும் கொடுக்கக் கூடாதென்றும் அல்லது பாளையக்காரர்கள் யாரும் உதவி அளிக்கக் கூடாதென்றும் இடப்பட்ட கட்டளையாகும். இந்த சங்கரம்பிள்ளை சிவகிரி பாளையக்காரன் மகனை அவன் தந்தைக்கு எதிராகக் கலகம் செய்யத் தூண்டியவர்களில் ஒருவன். இந்த



விஷயத்தில் கர்னல் மாக்ஸ்வெல் காட்டிய கொள்கையை டோரின் ஏற்க மறுத்துவிட்டார். கர்னல் மாக்ஸ்வெல், டோரின் தன்னுடைய அதிகாரத்தில் தலையிடுவதாக அரசாங்கத்தினிடம் முறையிட்டார். மேலும் டோரினுடைய இரு மொழியாளர் (துபாஷ்) அல்லது தனிமொழி பெயர்ப்பாளர் பாளையக்காரர்களுடன் ஒளிவு (இரகசியத் தொடர்பு) கொண்டிருப்பதாயும் அவனிடம் டோரின் மிக்க நம்பிக்கை வைத்திருப்பதாகவும் குறிப்பிட்டிருந்தார். அரசாங்கத்தினருக்கு அனுப்பப்பட்ட குறிப்பொன்றில் தனது இரு மொழியாளனை (துபாஷை) உடனே விலக்கிவிடும்படி டோரினுக்கு உத்தரவிடப்பட்டது. பாளையக்காரர்களின் விவகாரங்களில் கர்னல் மாக்ஸ் வெல்லுக்கு முழு அதிகாரமும் கொடுக்கப்பட்டது. அதன் பின் டோரின் 'ராஜினாமா' செய்தார். அவருடைய இரு மொழியாளர் (துபாஷ்) காவலுடன் மதராசுக்கு அனுப்பப்பட்டார். இச்சமயத்தில் டோரினுடைய உதவியாளராயிருந்தவர் தாமஸ் ஸ்காட் ஜாக்சன். (Thomas Scott Jackson) டோரினுடைய 'பதவி' விலக்கம்' ஏற்றுக் கொள்ளப்பட்டது. அவருக்குப் பின் ஜேம்ஸ் லாண்டன் (James Landon) அந்த வேலைக்கு நியமிக்கப்பட்டார். அவர் 1792 ஆம் ஆண்டு நவம்பர் 12 ஆம் தேதி திரு. லாண்டனிடம் அதிகாரங்களை ஒப்படைத்தார். திரு லாண்டன் மாதம் 250 பகோடாக்களும், $1^1/_2$ சதவீதம் தள்ளுபடித் தொகை வருவாயையும் ஆண்டு இறுதியில் பெற ஏற்பாடாயிற்று. திருநெல்வேலிலுள்ள மதுரை அணைக்கட்டைச் சீர் திருத்தி அமைத்தது பற்றி திரு. டோரின் பெயர் சிறப்பாக நினைவுகூரப் பட்டு வருகிறது. பழமையான கல்வெட்டொன்றில் அவருடைய பெயரும் 1792 ஆம் ஆண்டு பதிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் படையெடுப்புகளிலெல்லாம் கர்னல் மாக்ஸ்வெல்லின் காரியதரிசி அல்லது உதவியாளராக இருந்தவர் காப்டன் பானர்மன் (Bannerman). இவரே இது போன்ற, ஆனால் மிகச் சிறப்பு வாய்ந்த 1799 ஆம் ஆண்டு படையெடுப்பில் தலைவனாக இருந்தவர்.

**தென்பாண்டித் திருநாடு**

1793: திரு. பால்மன் (Balmain), திரு. லாண்டனின் உதவியாளர். லாண்டனின் வேண்டுகோளின்படி மாதம் 50 பகோடாக்கள் கூடுதலாக அவனுடைய சம்பளத்துடன் சேர்த்துக் கொடுக்கப்பட்டது.

நவாபின் நிர்வாகியால் அவனுடைய மாவட்டத்தில் நியமிக்கப் பட்ட தாசில்தாரை உடுகண்டு (அநேகமாய் ஓர்க்காடு) (ஆங்கில உச்சரிப்பால் கால்டுவெல்லுக்கே ஐயம் - ந.ச.) பாளையக்காரர் கொலை செய்ததாக திரு. லாண்டன் கூறுகின்றார்.

சேத்தூர் பாளையக்காரன் மகன் மைனராக இருந்தமையால் அவனுடைய பாளையம் லாண்டனால் நியமிக்கப்பட்ட நிர்வாகியிடம் இருந்தது. ஆனால் அந்த நிர்வாகியை விலக்கிச் சிறைப்பிடித்தான் ஒரு முறைகேடன் (usurpet). இத்தகைய ஒழுங்கு மீறிய செய்கைகளைக் கவனியாது விட்டுவிட்டால் மேலும் மிகப் பெரிய தொல்லைகளுக்கு அவை வழிகோலும் என்பதை உணர்ந்த அரசு இப்பொழுது காப்டன் டெய்ட்டனை (Captain Dighton) ஒரு படையுடன் சாத்தூருக்கு அனுப்பி முறை கேடாக வந்த நிர்வாகியைச் சிறைப்பிடித்து வரும்படி அனுப்பிவைத்தது. அவன் 1793 ஆம் ஆண்டு ஜூலையில் கோட்டைக்குப் போய்ச் சேர்ந்தான். ஆனால் அங்கு பூட்டிய கதவுகளே அவனை வரவேற்றன. கோட்டைக்குள் இருந்த (ஊத்துமலை ஆவுடையாபுரம்) ஜமீன்தார்களின் துருப்புகள் அவன் பின் வாங்காவிடில் அவனைச் சுட்டுவிடுவதாக அச்சுறுத்தின. அவன் பின் வாங்கினான். ஆனால் கலெக்டர் கலகக்காரர்களைத் தாக்கக் கூடாதென மேஜர் ஸ்டீவன்சனுக்குக் கட்டளையிட்டார். அரசாங்கம் திரு. லாண்டனை போலீசு, பாளையத்தின் உள் நிர்வாகங்கள் முதலியவற்றில் தலையிடக்கூடாதென்று விலக்கி அவன் வரிவசூலிக்கும் பணியில் மட்டும் ஈடுபடும்படி அறிவிக்கப்பட்டான். ஆனால் 1792 இல் நவாபுடன் செய்து கொண்ட உடன்படிக்கையின் படி வரிவசூலிக்கும் அதிகாரம் கம்பெனிக்கு அளிக்கப்பட்டதைத் தவிர அவர்களுக்கு வேறு அதிகாரங்கள் இல்லை. துருப்புகள் குறைவாக இருந்தமையால் கால நிலையை ஒட்டி அரசாங்கம் பக்குவமாக நடந்து கொண்டது. இந்தக் கொள்கை நாட்டில் அட்டூழியங்களை விரைவில் உண்டுபண்ணியது. இத்தகைய முரணான அரசாங்கக் கட்டளைகள் மிகச் சிறு பாளையக்காரர்களைக் கூட துணியச் செய்யப் போதுமானதாக இருந்தது. அதன்படி மேஜர் ஸ்டீவன்சன் சில நாட்களுக்குப் பின் ஒரு பொது எதிர்ப்பைக் குறித்து அரசாங்கத்திற்கு எச்சரிக்கை அனுப்பினான். அதே சமயத்தில் கட்டபொம்ம நாயக்கன் மாகாணத்தின் கிழக்குப் பாகத்தைக் கொள்ளையடித்து மக்களைக் கொலை செய்வதாகவும், சாத்தூர் நிர்வாகியைத் தேடிச் சென்று லெப்டினன்ட் செயின்ட்லீகரை (Liebtenant St. Legar) வழியில் பூலித்தேவர் எதிர்த்து, அவனுக்கு எதிராகக் கோட்டைக் கதவுகளை மூடி விட்டதாகவும் அறிவித்தான். சமீபத்தில் பல பாளையங்களில் எல்லைகள் மாற்றி அமைக்கப்படுவதற்குமுன் கர்னல் மாக்ஸிவெல் (Coronel Maxwell) செய்து கொண்ட உடன்படிக்கையின் படியும் புது அமைப்பின் பகுதியின் படியும் பாஞ்சாலங்குறிச்சிக்குச் சொந்தமான இரு கிராமங்களை எட்டயபுரத்திற்குத் தரவேண்டுமென்று இருந்தது. ஆயினும் கட்டபொம்ம நாயக்கன் அந்தக் கிராமங்களை ஒப்படைக்க



முடியாதென முடிவாக மறுத்துவிட்டான். கலெக்டராலும் அவனைக் கீழ்ப் படியவைக்க இயலவில்லை. ஜியார்ஜ பவனேயின் ஆட்சியில் திருவில்லிப்புத்தூரின் மேல் படையெடுத்துச் சென்ற காப்டன் டெய்ட்டனும் தீமை அணுகி வருகிறதென்றும் பாளையக்காரர்களின் படைக்கலங்கள் தாங்கிய கூலிப்படைகள் அன்றாடம் நடமாட்டம் செய்வதாயும் அரசாங்கத்திற்குத் தெரிவித்தான். ஆனால் அதைத் தவிர்க்க அரசாங்கத்தினிடம் போதிய படை இல்லை. அரசாங்கத்தின் செயலின்மையைக் கோழைத்தனமென பாளையக்காரர்கள் கருதினர். எனவே 1898 இல் கட்டபொம்ம நாயக்கனின் ஆள்கள் ஆழ்வார் திருநகரி, திருவைகுண்டம் முதலிய முக்கியமான நகரங்களைத் தாக்கிக் கொள்ளையடித்து ஒவ்வொரு நகரத்தின் முக்கிய மக்களையும் தூக்கிச் சென்றனர்.

அரசாங்கத்தினரால் காட்டப்பட்ட கோழைத்தனம் மட்டுமின்றி, அவர்களைக் கீழ்ப்படியவைக்க அதற்குப் போதிய திறமின்மையாலும், அவர்கள் திரு. லாண்டனை மேஜர் ஸ்டீவன்சனின் உதவியோடு மிகப் பெரிதாய் நிகழக்கூடிய தொல்லையைத் தவிர்க்கத் தக்க வழியை நிறைவேற்றத் தீர்மானிக்கும்படி வேண்டினர். அதாவது பாளையக்காரர்களை எப்படி படைக்கலனற்றவர்களாக்க வேண்டுமென்ற இந்தச் செய்தி இந்தக் காலம் முதலாக அடுத்தடுத்து வந்த அரசுகளின் கருத்தை நிரப்பிக் கொண்டிருந்தது. ஆனால் பத்தி பத்திகளாக எழுதுவதைத் தவிர வேறு ஒன்றும் நடை முறையில் ஏற்படவில்லை. அவர்கள் எண்ணத்தைக் காரியத்தில் கொண்டு வருவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. 1799 இல் மேஜர் பானர் மன்னின் படையெடுப்பு முடியும்வரை இதே நிலைமை நீடித்தது. பாளையக்காரர்களின் திசைக் காவல் அல்லது மாவட்டக்காவல் சம்பளத்தைப் பற்றிய அவர்களின் உரிமைகளை விசாரித்து அறிவிக்கும்படி அரசு திரு. லாண்டனைக் கேட்டுக் கொண்டது. இந்தச் சிக்கல் காலப்போக்கில் அளவில் பெருகிற்று. ஆனால் 1801 இல் திரு. லூஷிங்கனின் ஆட்சியில் நாடு முழுவதும் கம்பெனியின் வசமாகும் வரை இது பற்றி எவ்வித முடிவிற்கும் வரவில்லை.

1794: கர்னல் காம்பெல் பாளையங்கோட்டைப் படைத்தலைவனாயிருந்தான். வரிவசூல் கழகம் கலகக்காரர்களின் முன்னேற்றத்தால் அச்சுற்று, பாளையக்காரர்களை அடக்குவதற்காகத் திருநெல்வேலியின் பல பாகங்களிலும் துருப்புகளின் படைப்பகுதிகளை நிறுத்திவைக்கக் கட்டளையிடும்படியாக அரசாங்கத்திடம் பரிந்துரைத்தது. இந்தப் பரிவுரை சொல்லளவிலேயே நின்றுவிட்டது. செயலாக வில்லை.

இந்த ஆண்டு ஜூன் 22 ஆம் தேதி திரு. லாண்டன் இறந்தார்.

அவருடைய உதவியாளர் திரு. பால்மெயின் தற்காலிகப் பொறுப் பேற்றார். திரு. லாண்டனுக்குப் பின் திரு. ஜியார்ஜ பவுனே (George Powney) பொறுப்பேற்றார். அவர் 1788லிருந்து திருவனந்தபுரத்தில் ரெசிடெண்டாக (Resident) இருந்தார். அவர்தான் அங்கிருந்த முதல் ரெசிடெண்ட். இந்தச் சமயத்தில் டோரின் செய்தியைப் போலவே, பாளையக்காரர் பேஷ்குஷ் கலெக்டர் திருச்சிராப்பள்ளி முதல் திருநெல் வேலி வரை மணப்பாறைப் பாளையக்காரர்கள், இராமநாதபுரம் ராஜா, சிவகங்கைப் பாளையக்காரர்கள் உட்பட எல்லாப் பாளையக்காரர்களின் மேலும் அதிகாரமுடையவனாக இருந்தான்.

திசைக்காவல் குறித்துத் திருநெல்வேலி பாளையக்காரர்களின் உரிமையைப் பற்றித் திரு. லாண்டன் தொடங்கிய விசாரணையைத் தொடர்ந்து நடத்தும்படி அரசாங்கம் திரு பவுனுக்குக் கட்டளையிட்டது.

1795: திருவில்லிப்புத்தூர் படைத்தலைவன் சிவகிரிப் பாளையக் காரர்களைச் சார்ந்தவர்கள் செய்த கொள்ளைகளைப் பற்றி முறையிட் டிருந்தான். கர்னல் மாக்ஸ்வெல்லின் திட்டப்படியும் கலெக்டரின் பரிந் துரையின்படியும் துருப்புகளின் படைப்பகுதிகள் பாளையக்காரர்களை அச்சுறுத்தத்தக்கபடி பல இடங்களில் நிறுத்தப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொண்டார் திரு. பவுனே. அவர் பாளையக் காரர் மாவட்டங்களைப் பற்றிய அரசாங்க ஆணை ஒன்று பெற்று அதை வெளியிட்டார். அதில் கம்பெனி அரசின் வழியாக அனுப்பப் பட்ட கட் டளைத் தவிர நவாபின் எந்தக் கட்டளைகளுக்கும் பாளையக்காரன் கீழ் ப்படியக்கூடாதென்று அறிவிக்கப்பட்டது. டச்சுக்காரர்களிடமிருந்து இந் த ஆண்டு தூத்துக்குடி கைப்பற்றப்பட்டது.

கூட்டு இயக்குனர்கள் பாளையக்காரர்களைப் படைக்கலனற்ற வர்களாக்கவும், அடங்காதவர்களை அடக்கவும், அவர்களுடைய விவாதத் திற்குட்பட்ட உரிமைகளைச் சரிப்படுத்தவும், தற்போது அநீதிகளிலும் வறுமையிலும் அவதிப்படும் மாகாணங்களில் பணிவையும் செழுமை யையும் உண்டாக்கத் தக்க எவ்விதமான உள்நாட்டு அமைப்புகளடங் கிய முறையைப் புகுத்தவும் உடனேயே தீவிர கட்டளைகள் அனுப்பப் பட்டன. கூட்டு இயக்குனர்களிடமிருந்து அதே ஆண்டில் அதே செய்தியைக் குறித்து வந்த கடிதத்தின் மேற்கோள்கள் 1781-1801 ஆண்டுகட்கு இடைப்பட்ட அரசியல் நிலையைக் குறிக்கும் பகுதியில் உள்ளது.

வரிவசூல் போர்டு திருநெல்வேலி மாவட்ட ஆட்சியாளரைக் கூட்டு இயக்குனர்களின் இக்கட்டளைகளைக் கடைப்பிடிக்கத்தக்க



சிறந்த வழிகளைப் பற்றி அறிவிக்கும்படி கேட்டது. இரட்டை அரசாங்க நிர்வாகம் நீடித்தவரை பரிந்துரைகளோ, அறிவுறுத்தல்களோ, தீவிர கட்டளைகளோ எதுவும் சிறிதளவு முன்னேற்றத்தைக் கூட உண்டாக்க முடியாது என்பதைத் திரும்பத் திரும்ப இங்குக் கூறத் தேவையில்லை. அது எண்ணெயையும் தண்ணீரையும் கலக்கக் கட்டளையிடுவதற்கு ஒப்பாகும்.

1796: சொக்கப்பட்டி கோட்டையைக் கம்பெனி வசம் வலுவில் அடைக்கலம் புகச் செய்யத் தக்க நடவடிக்கைகளைத் திரு. பானே மேற் கொண்டார்.

1797: திருநெல்வேலி பாளையக்காரர்களின் அடங்காத்தன்மை, மரியாதையற்ற போக்கு, கொள்ளையடிக்கின்ற வழக்கம் முதலியவை களைப் பற்றி நவாபு முறையிட்டிருந்தான். இந்த முறையீடுகளைக் கண் டிப்பாக விசாரிக்கும்படி கலெக்டருக்கு அரசு கட்டளையிட்டது.

சிங்கப்பட்டிப் பாளையக்காரன் வேட்டையாடும் பொழுது ஊர்க் காடு பாளையக்காரன் அவனால் சுடப்பட்டான். ஆனால் சிங்கப்பட்டிப் பாளையக்காரன் குடிகாரன்; கொடுமையான குணமுள்ளவன். எனவே அவனைக் கொலைக்குற்ற விசாரணை செய்யத்தக்க வலிமைபெற்ற வர்கள் பாளையத்தில் யாருமில்லை என்றும் குறைப்பட்டுக் கொண்ட தோடு, குற்றவாளியை விசாரிப்பது இயலாத செயலாகத் தோன்று கிறதென்றும் திரு. பவுனே வரிவசூல் கழகத்துக்கு அறிவித்தார். (கொடுமையின் வலிமை! - ந.ச.)

மற்றொரு பத்தியில் சிவகிரி பாளையக்காரன் மகன் மாப்பிள்ளை வன்னியன், சங்கரலிங்கம்பிள்ளை இருவராலும் தூண்டப்பட்டு அவன் தந்தையின் ஆட்சிக்கு எதிராகச் சூழ்ச்சி செய்து அவனுடைய வசத்தி லிருந்த பாளையங்களின் ஆட்சியைப் பறிக்க முயற்சித்தான் என்று அவர் கூறுகின்றார். பிறகு கலகக்கார மகன் கலகக்கார பாஞ்சாலங் குறிச்சி பாளையக்காரனுடன் தொடர்பு கொண்டிருந்தான் என்பது தெரிய வந்தது. பவுனே அந்த மாவட்டத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்னே சிவகிரி பாளையக்காரனின் மகனால் திரட்டப்பட்ட கலகக்காரர்கள் சிதறடிக்கப்பட்டனரென்றும், ஆனால், மகன் மட்டும் மலைகளில் தப்பி ஓடி மறைந்துவிட்டதாக அறிவித்தார். ஆயினும் சங்கரலிங்கம் பிள்ளை பிடிக்கப்பட்டு அக்காலத்திய அந்தமானாகக் கருதப்பட்ட சுமத்திரா விலுள்ள பென் கூலெனக்கு கப்பலேற்றப் படுவதற்காக சென்னைக்கு (மாகாணத்திற்கு) அனுப்பப்பட்டார்.

1797 இல் வரிவசூல் கழகம் சென்னை ஆளுநருக்கு எழுதிய கடி

தத்திலுள்ள கீழ்க்காணும் சில பத்திகள் இதுபற்றி மேலும் சில உண்மைகளைத் தெரிவிக்கின்றது. மேலும் அவர்கள் ஊத்துமலைப் பாளையக்காரனின் குழப்பங்களையும் குறிப்பிடுவதாகத் தெரிகிறது.

மாப்பிள்ளை வன்னியன் என்பவனையும் சங்கரலிங்கம் பிள்ளையையும் பிடிப்பதில் படைப் பகுதியின் முயற்சிகள் வெற்றி பெறுமாயின் அவர்களை ஒரு காவலின் கீழ் மாகாணத்திற்கு அனுப்பிவைக்கும் அதிகாரத்தைப் பவுனேக்கு அளிக்குமாறு நாங்கள் பரிந்துரை செய்கிறோம். மேன்மை தங்கிய தாங்கள் அதற்குப் பதிலாக - இந்த யோசனையையும், குறிப்பிட்டிருந்த சூழ்நிலையில் கலெக்டரின் நடவடிக்கைகளையும் அப்படியே ஏற்றுக் கொண்டீர்கள். அடுத்து, பவுனேயிடமிருந்து வந்த செய்தியிலிருந்து சங்கரலிங்கம்பிள்ளை ஊத்து மலைப்பாளையத்தில் அடைக்கலம் புகுந்திருப்பதாகத் தெரிந்து, காப்டன் டெய்டன் (Captain Dighton) சிப்பாய்ப் படையைச் சில சிவகிரி வேலைக்காரர்களுடன் அவனைப் பிடித்துவர அனுப்பினான். அவர்கள் அவனைப் பிடித்து கலெக்டரின் கச்சேரியை நோக்கி அழைத்து வரும்பொழுது ஊத்துமலை வேலைக்காரர்கள் சுமார் 300 பேர் ஒன்று கூடித் திரண்டு வந்து அவனை விடுவித்துச் சென்றுவிட்டனர் என்று அறிந்தோம். மேலும் வந்த செய்தியின்படி சங்கரலிங்கம்பிள்ளையைத் தங்களிடம் ஒப்புவிக்குமாறு ஊத்துமலைப் பாளையக்காரனிடம் கேட்டபோது தயங்கக்கூடிய அளவு கடமையுணர்ச்சி அற்றவனாயிராமல் கம்பெனியிடம் அவன் காட்ட வேண்டிய கடமையை உணர்ந்து அவனை ஒப்படைத்த செய்தி எங்களுக்கு மனநிறைவை அளித்தது. ஆனால் கம்பெனிச் சிப்பாய்களை அவன் ஆட்கள் தாக்கியது அவன் கட்டளையின் மேல் நடந்ததா? அல்லது அவன் உடன்பாட்டின் மேல் நடந்ததா? எதுவாயினும் அவன் தன்னுடைய உடன்படிக்கையை பயங்கரமாக மீறியதாகக் கருதவேண்டும். அதற்குக் காரணமானவர்களை எப்படியாகிலும் கண்டு பிடித்தல் பவுனேக்கு ஏற்றதாகுமென்று தெரிவித்துள்ளோம். எனவே நாங்கள் இதில் தொடர்பு கொண்ட எல்லோரையும் அவருடைய கச்சேரிக்கு வரும்படி கட்டளையிடும்படி அனுப்பியுள்ளோம். அத்தகைய சோதனைகளுக்குப் பிறகு அவன் தீர்ப்புக்குத் தேவையென்று தோன்றுகிறபடி அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய தண்டனை பற்றிய கருத்துகளையும் எங்கள் ஆய்வுக்கு அனுப்பும்படித் தெரிவிக்கிறோம்.

இந்த ஆண்டு இறுதியில் பவுனேக்குப் பின் திரு. ஜாக்சன் கலெக்டரானர். அவனுடைய காலத்திய முக்கிய நிகழ்ச்சிகள் பானர்மன்-பாளையக்காரர் போரைப் பற்றிய குறிப்பில் இடம்பெறுகிறது. பானர்மன் பாளையக்காரர்கள் போர் அடுத்தப் பகுதியில் காணப்படும்.



1798: கயத்தாறு, துருப்புகளின் தங்குமிடமாக இல்லாமல் போயிற்று. காப்டன் பானர்மன் அவனுடைய படையுடன் சேரும்படி கட்டளையிட்டார்.

1799: இந்த ஆண்டு தொடக்கத்தில் காப்டன் (தற்போது மேஜராக இருக்கும்) பானர்மன் திப்புசுல்தானுக்கு எதிராக அனுப்பப்பட்ட இறுதிப் படையெடுப்பில் அவனுடைய படையுடன் கலந்து கொள்ள அனுமதிக்கப்படவில்லை. ஆனால் திருவாங்கூர் அரசருடன் உடன்படிக்கை பேசும்படியாகவும் பம்பாயிலுள்ள படைக்குத் தேவையான கால்நடை சேகரிப்பு மற்ற தேவையான சாமான்களைத் தேடுதல் முதலிய பணிகளுக்குப் பொறுப்பளிக்கப்பட்டான். அவன் தற்காலிக திருவாங்கூர் ரெசிடென்டாக 250 பகோடாக்கள் மாதச் சம்பளத்தில் நியமிக்கப்பட்டான். பாளையக்காரர்களை எதிர்த்து அவன் படையெடுப்பு திருநெல்வேலியில் இந்த ஆண்டின் முற்பகுதியில் திப்புசுல்தானின் வீழ்ச்சிக்குச் சில காலத்திற்குப் பின் தொடங்கிற்று.

1799 ஆம் ஆண்டு ஜனவரி 12 ஆம் தேதி லூஷிங்டனுக்குப் பின் ஜாக்சன் திருநெல்வேலி கலெக்டரானர். அவன் காலத்திய நிகழ்ச்சிகள் அடுத்த இயலில் கொடுக்கப்பட்டுள்ளன.

•

# இயல் - 7

## பானர்மன் - பாளையக்காரர் போர்

### 1781-1801 ஆம் ஆண்டுகட்கு இடையே இருந்த அரசியல் நிலை பற்றிய குறிப்பு

பல பாளையக்காரர் போர்களுக்கான காரணங்களைப் பற்றியும் இறுதியாக நாட்டைக் கம்பெனி ஆட்சிக்கு ஒப்படைத்ததைப் பற்றிய தெளிவான விவரங்களையும் அறிவதற்கு அரசியல் நிலைகளைப் பற்றிய சுருக்கமான விளக்கங்களை வாசகர்களுக்கு அளித்தல் தேவையாகும். அதாவது 1781 முதல் 1801 க்கு இடைப்பட்ட காலத்தில் ஆர்க்காட்டு நவாபுக்கும் கிழக்கிந்திய கம்பெனி அரசாங்கத்திற்கும் இடையே நிலவியிருந்த உறவுபற்றிய விவரம் அறிய வேண்டியது இன்றியமையாதது. அவ்வாறு செய்யுங்கால் ஏற்கனவே ஆண்டுகள் தலைப்பிட்டுக் கொடுக்கப்பட்ட பல நிகழ்ச்சிகளின் குறிப்புகளைத் திரும்பவும் கூறும்படி நேரிடலாம். திருநெல்வேலியில் ஆங்கில அரசாங்கத் தொடர்பு 1789இல் தொடங்கியது. எனினும் 1799 இல் திரு. லூஷிங்டனின் கலெக்டர் பதவிக்காலம் வரை நாட்டில் நிலவியிருந்த ஒழுங்கீனங்களை விலக்கவுமில்லை; தணிக்கவுமில்லை. ஐதர்அலி, திப்புசுல்தான் போன்ற வலிமைமிக்க பகைவர்களால் மாகாணத்திற்குத் தீங்கு ஏற்படுமென பயமுறுத்தப்பட்டதனால் திருச்சிராப்பள்ளிக்கு வடக்கேயும் மைசூருக்கு அருகேயும் துருப்புகளை நிறுத்திவைக்க வேண்டிய தேவை ஏற்பட்டமையே அரசாங்கத்தின் இச்செயலின்மைக்கு ஒரு காரணமாகும். ஸ்ரீரங்கப்பட்டணம் கைப்பற்றப்பட்டு 1799 மே 4 ஆம் தேதி திப்பு இறந்த பிறகு இந்த இடையூறுக்கும் ஒரு முடிவு ஏற்பட்டது.

திருநெல்வேலி பாளையக்காரர்களைப் பணிய வைக்கத் தக்க தீவிர நடவடிக்கைகளை ஒத்திப்போட்டமைக்கு முக்கிய காரணம் இந்தக் காலம் முழுமையும் ஆங்கில அரசாங்கத்திற்கும் நவாபுக்குமிடையே இருந்த நிறைவில்லாத உறவுகளிலிருந்துதான் காண வேண்டும். 1781 டிசம்பர் 2 ஆம் தேதி இருதிறத்தினருக்கும் ஒரு



ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி திருநெல்வேலி உட்பட கர்நாடகம் முதலிய இடங்களின் வரிவசூல் உரிமையை நவாபு ஆங்கில அரசாங்கத்தினிடம் ஒப்புவிக்க வேண்டுமெனவும் போர்க்காலங்களில் வரிவசூலில் ஆறில் ஒரு பங்கை நவாபின் வாழ்க்கைச் செலவுக்காகக் கொடுக்க வேண்டுமெனவும் ஏற்பாடாயிற்று. இந்த ஒப்பந்தத்தின்படி சென்னையில் வரிவசூல் உரிமைமாற்றக் குழு நிறுவப்பட்டதை நாம் அறிவோம். இதை இயக்குவிக்க வரிவசூல் உரிமை மாற்ற மேற்பார்வையாளர்கள் (சூப்பிரண்டிண் டெண்டுகள்) என்பவர்களை முக்கியமான இடங்களில் ஆங்கில அரசாங்கம் நியமித்தது. திருநெல்வேலியிலும் அத்தகைய ஒருவரை நியமித்தது. போர் தொடர்ந்த காலத்திலும் இத்தகைய வரிவசூல் நீடித்திருக்க வேண்டுமென்ற போதிலும் உடனேயே நவாபு அதை விட்டுவிட முயற்சித்தான். எனவே 1785 ஜூன் மாதத்தில் கம்பெனியார் வரிவசூல் உரிமையை நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக அவனுடைய கடனுக்காக வரிவசூலில் ஒரு தொகையை அவனுக்குச் செலுத்த வேண்டுமெனவும் ஒழுங்கை நிலை நாட்ட எல்லைப் பாதுகாப்பளிப்பதாகவும் ஏற்பாடாயிற்று. 1787 பிப்ரவரி 24 ஆம் தேதி, வேறொரு உடன்படிக்கை ஏற்பட்டது. இதற்கும் முந்திய உடன்படிக்கைக்கும் ஆண்டு தோறும் செலுத்தப்பட வேண்டிய தொகையைப் பொறுத்தமட்டில் சிறு மாறுதல் உண்டாயிற்று. ஆனால் இதிலுள்ள ஒரு முக்கியக் கட்டுப்பாடு யாதெனில் பாதுகாப்பு, வரி வசூலித்தல் அவனுடைய அதிகாரத்தை வலுப்படுத்துவதற்கு அல்லது ஒழுங்கை நிலைநாட்ட அவனுடைய நாடுகளில் ஆட்சியை நிலைநிறுத்த ஆகிய ஏதேனும் காரியங்களுக்காக அவன் அரசாங்கத்தினிடம் முறையிடும் போதெல்லாம் படையுதவி அளித்து அவன் விரும்பிய ஒழுங்கை நிலை நாட்ட உதவி செய்ய வேண்டுமென்பதாகும். ஆனால் சென்னை அரசாங்கமோ இரண்டு பிளவுபட்ட அதிகாரத்தை நிலை நாட்டவும், ஒழுங்கை நிலைநிறுத்த அவர்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சிகளைத் தடுக்கவும் கூடுமென்று கூறி அதை மறுத்துவிட்டது.

கர்னாடக வரிவசூலை ஏற்றுக் கொள்வதற்கும் செலவுத் தொகையை மேற்பார்வையிடவும் நம்மிடம் உடன்படிக்கைகள் செய்ய எடுத்துக் கொண்ட முயற்சிகள் தோல்வியுற்றன. எனவே எவ்வித உடன்படிக்கையுமின்றி 1790 ஆகஸ்டு 7 ஆம் தேதி ஒரு அறிக்கையின் மூலம் நாட்டின் அதிகாரம் முழுமையும் சென்னை அரசாங்கமே ஏற்றுக் கொண்டது. முழுவதும் ஆக்கிரமிக்கப்பட்ட வரிவசூல் குழு ஒன்று உண்மையில் வரிவசூல் உரிமை மாற்றக் குழுவின் ஒரு பிரிவே ஆகும். அது சென்னையில் அமைக்கப்பட்டது. 1781 முதல் 1790 வரையுள்ள காலம் வரிவசூல் உரிமை பெற்ற காலம் எனவும் 1790 முதல் 1792 வரை

யுள்ள காலத்திற்கு முற்பட்ட காலம் ஆக்கிரமிக்கப்பட்ட வரிவசூல் காலம் என்றும் அழைக்கப்பட்டது.

1792 ஜூலை 12 ஆம் தேதி நவாபுடன் ஒரு புது உடன்பாடு முடிவாயிற்று. அதன்படி நாடு முழுவதிலும் பிரிட்டிஷ் துருப்புகள் இராணுவ அரணாக அமைக்கப்படும். அதன் செலவினங்களுக்குத் தேவையான தொகையை நவாபு கொடுக்க வேண்டும் என்று தீர்மானமாயிற்று. போர் ஏற்படுங்காலத்தில் கம்பெனியே நாட்டின் நிர்வாகம் அனைத்தையும் ஏற்றுக் கொள்ளும். ஆனால் அமைதிக் காலங்களில் நாட்டின் நல்லாட்சிக்குத் துணைபுரியும் நவாபின் பெயரால் பேஷ்குஷ் அல்லது பாளையக்காரர்களிடமிருந்து வரிவசூல் செய்ய வேண்டும். நவாபு இதற்கான பரிசு அளிக்க வேண்டும். மற்ற விவரங்களுக்கு 1792 என்ற ஆண்டு தலைப்பைப் பார்க்கவும். இந்த உடன்படிக்கையின்படி முன்னைவிட பாளையக்காரர்கள் ஆங்கில அரசாங்கத்தின் நேரடி ஆட்சிக்குட்பட்டார்கள். பாளையக்காரர்களை அடக்குவதற்கான தெளிவான உறுதியான உரிமைகளை அரசாங்கத்திற்குக் கொடுத்ததாகத் தெரிகிறது. ஆனால் பாளையக்காரர்களை ஆட்சி செய்யும் அதிகாரம் அதுவரை நவாபிடம் இருந்தமையால் ஒழுங்கை நிலை நாட்ட ஆங்கில அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் அனைத்திலும் ஏறக்குறைய இவ்வாட்சி அதிகாரம் குறுக்கிட்டமையால் இந்த உரிமையானது சூழ் நிலைகளால் பெருமளவிற்கு சரி செய்யப்பட்டதைக் காண்கிறோம். 1792 ஆம் ஆண்டு உடன்படிக்கையின் படி அரசாங்கத்தின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்ட சிவில் அதிகாரிகள் பாளையக்கார பேஷ்குஷ்களின் கலெக்டர்கள் என்று பொதுவாகக் குறிக்கப்பட்டனர். பேஷ்குஷ் என்ற அதிகாரிகளின் பெயர்களில் பல நிலையற்றவை. இந்த வரிசையின் முதல் கலெக்டராகிய டோரின் கொள்ளிடத்திற்குத் தெற்கே உரிமை பெற்ற பாளையக்கார பேஷ்குஷ் கலெக்டர் அல்லது சில சமயங்களில் கொள்ளிடத்திற்குத் தெற்கேயுள்ள பகுதி கலெக்டர் என்று பொதுவாக அழைக்கப்பட்டு வந்தனர். அரசாங்கத்தினரின் கடிதத்தில் அவருக்கு வேலை நியமன கட்டளை வந்தபோது ஜமீன்தார்கள் திருநெல்வேலி, மதுரை, திருச்சி, இராமநாதபுரம், சிவகங்கை மாவட்டங்களிலுள்ள பாளையப் பேஷ்குஷ்களின் கலெக்டராக நியமிக்கப்பட்டார். அதிகாரப் பத்திரங்களில் திரு. லூஷிங்டனுக்கு நீண்ட விருதுப்பட்டியல் கொடுக்கப்பட்டிருந்ததை நான் கண்டேன். பாளையக்கார பேஷ்குஷ் இராமநாதபுர கலெக்டர், இராமநாதபுரம் பாளையக்கார பேஷ்குஷ் கலெக்டர், உரிமை மாற்ற வரிவசூல் பேஷ்குஷ் கலெக்டர், தென் பேஷ்குஷ் திருநெல்வேலி வரிவசூல்களின் கலெக்டர், சில சமயங்களில் சுருக்கமாக எளிமையாகக் கலெக்டர் என்றும் அழைக்கப்பட்டார்.



செயின்ட் ஜார்ஜ் கோட்டை கவர்னர் ஆணையின்மேல் 1801 ஜூலை 31 ஆம் தேதி ஆலோசனைக் குழுவினால் நவாப் கர்நாடகம் முழுவதையும் இறுதியாகக் கம்பெனியிடம் ஒப்புவித்தபோது அவர் தென் பாளையப் பேஷ்குஷ்களின் கலெக்டர் என்று முகவரியிடப்பட்டார். ஆனால் அலுவலர் நியமனப் பத்திரத்தின் இடைப்பகுதியிலே 'திருநெல்வேலி மாகாணத்தின் கலெக்டர்' என்ற பதவி அளிக்கப்பட்டுள்ளார். இதற்கு அடுத்தபடியாக 'திருநெல்வேலி கலெக்டர்' என்ற பதவிப் பெயரும் இருந்தது. 1781 இல் தாசில்தார்களைப் போன்ற சுதேசி கீழ் அதிகாரிகளின் ஒரு வகுப்பினருக்குக் கலெக்டர் என்ற பட்டப்பெயர் கொடுக்கப்பட்டது. ஐரோப்பிய சிவில் அதிகாரிகள் ரிசீவர் (Receiver) என்று அழைக்கப்பட்டார். கீழ் அதிகாரிகள் வசூலித்தனர். தலைமை அதிகாரிகள் பெற்றுக் கொண்டனர். நவாபு செலுத்த வேண்டிய கப்பப் பணத்தை ஒழுங்காகச் செலுத்தினான். ஆனால் அவன் கடன் தொகைகளைச் சரி செய்யப் பெருந்தொகை கடன் வாங்கினான். இக்கடனைத் தீர்க்க நாட்டின் பல மாகாணங்களின் வரிவசூலைக் கடன்காரர்களிடம் ஒப்படைத்தான். 1781 இல் கம்பெனிக்கு வரிவசூல் உரிமை கொடுக்கப்பட்டதென்னவோ உண்மைதான். ஆனால் பொறுப்பற்ற தனி மனிதர்களிடம் நாட்டின் வரிவசூலை ஒப்படைத்தல் முறையற்ற நிகழ்ச்சி: அன்றியும் அச்செய்கை அநீதியையும் துன்பத்தையும் விளைவிக்கக் கூடியதாயிருந்தது.

1792இல் ஏற்பட்ட உடன்படிக்கையின் படி திட்டங்கள் எதுவும் சரிவர நடைபெறவில்லை. அவற்றின் குறைபாடுகளைத் தவிர்க்கப் பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. அவற்றுள் ஒன்று திருநெல்வேலியில் திசைக்காவல் தலம் காவல் வசூலை ஒழுங்கு படுத்துவதற்காகத் தனிப்பட்ட முறையில் கொண்டு வந்த ஒழுங்கு முறையாகும். 1795 இல் தென் பாளையக்காரர்கள் முக்கியமாகத் திருநெல்வேலி மதுரைப் பாளையக்காரர்கள் விஷயமாக நவாபுடன் மனநிறைவான ஒழுங்கு நடவடிக்கை செய்து கொள்ள, சென்னை அரசாங்கம் முயற்சித்தது. வரி விதித்தல், வசூலித்தல் பாளையக்காரர் பேஷ்குஷ்களைக் கைப்பற்றல் இவற்றின் அதிகாரங்களை உடன் படிக்கையின்படி கம்பெனி அரசாங்கம் மேற்கொண்டிருந்த போதிலும் ஆட்சி உரிமை நவாபிடமிருக்கும் வரை அரசாங்கத்திற்கு சிறு நன்மை கூட உண்டாகவில்லை. அப்பொழுது சென்னை கவர்னராக இருந்த ஹோபார்ட் பிரபு (Lord Hobert) தன் வழிக்கு நவாபின் உடன்பாட்டைப் பெற பலமுறை முயன்றும் பயனற்றுப் போகவே 'குதிரைப் படைக்கடன்' என்ற கடனைத் தீர்ப்பதற்காகத் திருநெல்வேலி மாவட்டத்தைக் கைப்பற்றிக் கொள்ளும் எண்ணத்தைத் தெரிவித்தான். ஆனால் சுப்ரீம் அரசாங்கம் இதற்கு அங்கீகாரம் அளிக்க

வில்லை. இதைப் பற்றிய மேற்கண்ட விவரங்களுக்கு ஒவ்வொரு ஆண்டு நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்பைப் பார்க்கவும்.

நாளடைவில் சீரங்கப்பட்டணம் கைப்பற்றப்பட்டவுடன் காலஞ் சென்ற மகமது அலியும் அவனுடைய மகனுமாகிய இரு நவாபுகளும் திப்புசுல்தானோடு இராசத் துரோகமாக கடிதப் போக்குவரத்து ஏற் பட்டதைக் கண்டுபிடித்தவுடன், பிரிட்டிஷ் அரசாங்கம் நவாபின் குடும் பத்திற்கான வசதிகளைச் செய்து விட்டு, கர்நாடகத்தையும் அதன் அரசியல் நிர்வாகத்தையும் கைப்பற்றத் தீர்மானித்தது. 1801 ஜூலை 31 ஆம் தேதி முகமது அலியின் பேரனுடன் செய்து கொண்ட ஒரு உடன் படிக்கையின் மூலம் இது செயல்படுத்தப்பட்டது. அந்த மகிழ்ச்சி நன்னாளில் 57 ஆண்டுகள் நடந்த போராலும் 20 ஆண்டுகள் நடந்த உடன்படிக்கையாலும் சாதிக்க முடியாத செயல்களைப் பேனா முனையின் சிறு கீறல் சாதித்துக் கொடுத்தது. (ஐட்சன் உடன்படிக்கைகளும் நியமனங்களும் Aitchison's Treaties and Engegements) என்பதைப் பார்க்க.

**பாளையக்காரர்களின் இறுதிப் போருக்கு முன் நிர்வாக நீதிபதி களாகக் கருதப்பட்ட திருநெல்வேலி, பாளையக்கார நாடுகளின் அரசியல் நிலை**

'பொது நிறுவனத்தில் மேன்மைதங்கிய அதிகார நீதிபதிகளிட மிருந்து 1795 ஜூன் 10 ஆம் தேதியிட்டு வந்த பொது கடிதத்திலிருந்து எடுக்கப்பட்ட குறிப்பு.'

''55. உங்கள் ஆலோசனைகள், நடவடிக்கைகளில் குறிப் பிட்டிருக்கும் இராமநாதபுரம் அரசர் செரோக்கார் அல்லது சிவகங்கை அமைச்சருக்கு எதிராகக் காட்டிய பகையின் தீங்கான முடிவுகள் முக்கிய மாகப் பின்னே குறிப்பிட்டவரின் நிலை எங்களுக்கு மிக்க கவலையை உண்டாக்கியுள்ளது. அடுத்து செப்டம்பர் 29 ஆம் தேதியில் அனுப்பிய கடிதத்தில் பாளையக்கார நாடுகளின் மீது பிரிவுபட்ட அதிகாரம் நீடித்திருக்கும்வரைப் பொது தீமைகளுக்கு எந்தவிதமான வன்மையான கழுவாய் செய்ய இயலாது என்று குறிப்பிட்டிருப்பதைக் கவனித்தோம்.''

''61. ஆனால் இந்த உடன்படிக்கைக்கு முன்னும் பின்னும் இந்தப் பாளையக்காரர்கள் மீது உண்மையில் நவாப் எத்தகைய அதி காரத்தை எவ்வளவு தூரம் செலுத்தி வந்தான்?''

நிபந்தனைக்குட்பட்ட பேஷ்குஷ் காரணமாக நவாபால் இயன்ற எல்லா முயற்சிகளாலும் ஏழு ஆண்டுகளில் வசூலித்த தொகை, கம் பெனியிடம் ஒப்படைக்கப்பட்ட பின் அவர்கள் இரண்டு ஆண்டு



கட்குள்ளாகவே வசூலித்த தொகைக்கு அதிகமாக இல்லை என்பது அவர்களால் உணரப்பட்ட - மறுக்க முடியாத - பதிவு செய்யப்பட்ட - உண்மையாகும்.

''72. நவாபு பாளையக்காரர்கள் மீது கொண்டிருந்த அதிகாரத்தின் சார்பிலே மிகக் குறைவான வரியை மிக அதிகமாகச் செலவு செய்து வசூலித்து வந்தான். 1792 ஜூலை 12 ஆம் தேதி ஏற்பட்ட உடன் படிக்கையின் 5 வது பிரிவுப்படி நவாபு தனக்கு மிகச் சாதகமாகச் சில பாளையக்காரர்கள் செலுத்த வேண்டிய வரியை வசூலிக்கும் உரிமையைக் கம்பெனியிடம் ஒப்படைத்தான். அதன்படி அவனுடைய கப்பத்தின் பகுதியான முழு வரிப்பணத்தையும் கம்பெனி தனது சொந்த செலவு துன்பங்களுக்கிடையே வசூலித்துக் கொள்ள வேண்டும். வரிவசூலுக் காகச் செலவழிக்கும் தொகையையோ அல்லது வரிவசூலில் ஏற்படும் கப்பத் தொகைக் குறைவையோ நவாபிடம் வசூலிக்க முடியாது. குறிப் பிட்ட பாளையக்காரர்களின் மீதுள்ள நவாபின் ஆதிக்கத்தை 6வது பிரிவின் சாரப்படி உறுதிப்படுத்துகிறது. கம்பெனி வரிவசூலுக்குத் தங்கள் முழு அதிகார வலிமையையும் பயன்படுத்தல்; ஒரே சீராக அவர்களிடம் கப்பங் களை வசூலித்தல்; வழக்கமான காரியங்களில் மேற்கண்ட பாளையக் காரர்கள் மேற்கண்ட நவாபுக்கு செலுத்த வேண்டிய இராச விசுவாசம்; கீழ்ப்படியும் தன்மைகளை வற்புறுத்தல்; பழக்க முறையிலுள்ள வழிகளில் வரிவசூல் முதலியவைகளைச் செய்யப் பாளையக்கார வேலையாட் களைத் தயாரித்தல்; மற்றும் எல்லாவிதமான அதிகாரச் செயல்களையும் நவாபின் பெயராலேயே செய்துவர வேண்டும்.''

முந்திய பிரிவில் வரிவசூல் முழுவதும் கம்பெனியிடம் ஒப்பு விக்கப்பட்டுவிட்டமையால் எந்தக் காரணத்திற்காக பழக்க முறையிலுள்ள வழிகளில் வரிவசூல் முதலியவைகளைச் செய்ய பாளையக்கார வேலையாட்களைத் தயாரித்தல் என்பதை உடன் படிக்கையில் புகுத் தினார்கள் என்பதை எண்ணிப் பார்த்தல் எளிதாக இல்லை.

''163. போர்த்தன்மையை விலக்கி, வரிவசூல் அதிகாரத்தையும் ஏற்றுக் கொண்டபின் உற்சாகத்துடனும் பொறுமையுடனும் நவாபு மன நிறைவு எய்தும்படி எத்தகைய அதிகார உரிமை எஞ்சியிருக்கிற தென்பதை எடுத்துரைத்தல் எளிதல்ல. உடன்படிக்கையில் சொல்லப் பட்டிருக்கும் வாசகத்தை விடவும், வழக்கமான செயல்களை விடவும் பொருத்தமான விதத்தில் விளக்க இயலாது. பெயரளவில் பாளையக்காரர் மீது நவாபுக்குரிய ஆதிக்கத்தை நாம் மறுக்க முயலவில்லை. அதே சமயத்தில் நம்மிடம் அவன் ஒப்புவித்த வரிவசூல் ஒரே சீராக நிலை யாயிருக்க வேண்டிய அதிகாரத்தை மட்டும் காப்பாற்றிக் கொள்ளக்

கடமைப்பட்டுள்ளோம். ஆனால் அந்த நோக்கத்தை நடைமுறையில் பாதிக்கத் தக்க விதத்தில் பாளையக்காரரிடமிருந்த மாவட்டங்களில் ஏற்பட்ட அநேக சூழ்நிலைகளில் பின்வருபவை குறிப்பிடத்தக்கவை. அவர்கள் தங்களிடம் வைத்திருந்த போர்ப்படையொன்று, அவர்களுடைய குறிப்பிட்ட பற்றுகள் அல்லது அவர்கள் மன எழுச்சி தூண்டிய படி ஒருவர் மற்றொருவர்மேல் போர்தொடுக்க அல்லது கொள்ளையடிக்க வலுவூட்டியது. பொருளாதாரம் அல்லது உள்நாட்டு ஒழுங்கு முறை எதுவாயினும் அவர்கள் கையாளும் முறைகள் இயல்பாகவே அவர்களுடைய கஜானாக்களைத் தரித்திரமடையச் செய்யத்தக்கதாயிருந்தது. அதனால் அந்நிகழ்ச்சி கம்பெனிக்குச் செலுத்த வேண்டிய கப்பத்தொகையை ஒழுங்காகச் செலுத்த முடியாமல் தடுத்தது. கொடுஞ் செயல்கள் புரியவும் முடியவில்லை. மக்களிடம் பகை காட்டவும் இயலவில்லை. எக்காலத்திலும் இத்தகைய செயல்கள் ஒரு நாட்டைப் பாழாக்கும் தன்மையுடையன. அதனால் வரிவசூலும் பாதிக்கப்படும். இத்தகைய, இன்னும் இதுபோன்ற செயல்களுக்கேற்ற பரிகாரங்களை நடைமுறையில் கொண்டுவரும் அதிகாரம் நம்மிடம் இல்லையானால், வரிவசூல் செய்யப் பெற்றிருக்கும் அதிகாரத்தால் வசூலிக்கப்பட வேண்டிய வரித் தொகையையும் இறுதியில் நாம் இழந்துவிட நேரிடும் என்பது தெளிவு. எனவே இந்நிலையில் நவாபின் கப்பப் பணத்திற்காகப் பாளையக்காரர்களிடமிருந்து பெறும் தொகையைப் பொருத்த வரை இந்த உடன்படிக்கை பயனற்றதாகிவிடுவது மன்றி, மேலே கூறப்பட்ட பழிகளெல்லாம் நாட்டில் நீடிக்கவிட்டால் காலப்போக்கில் குறிப்பிடத்தக்க ஆண்டு இழப்பு ஏற்படுவதன்றி அது அதிகமாகச் சேர்ந்து கம்பெனிக்கு அதிக இழப்பு ஏற்படும்.''

''164. தற்போதைய வாக்குவாதத்திற்கு முக்கிய தூண்டுதலாக உங்களுடைய ஆவணங்களின் பெரும்பகுதிகளிலிருந்து கிடைத்த செய்திகளாலும், வங்காள அரசாங்கத்தாலும் உங்களாலும் வன்மையாக உணர்த்தப்பட்டவைகளை அறிந்து, பல பாளையக்காரர்களிடமிருக்கும் மாவட்டங்களில் நல்ல அரசாங்கம் நிறுவ உறுதியாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டிய தேவையை உணர்ந்து ஒரு முடிவுக்கு வந்துள்ளோம்.

'166. ஆக மொத்தத்தில் இந்த விஷயத்தைப் பற்றித் தீர ஆலோசித்ததில், தீவிர நிபந்தனையின் கீழ் நமக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரம் பாளையக்காரர்கள் மீது நவாபு பெற்றிருக்கும் ஆதிக்கத்தின் அளவு இவற்றை மேலும் சிந்தித்துப் பார்த்ததில் நம்முடைய தீர்மானத்தினால் மேன்மை தங்கிய நவாபு பயன்படுத்தும் அதிகாரத்திலிருந்து ஒரு தனிப்பட்ட சிறப்பு உரிமையோ அல்லது பெயரளவிலுள்ள



ஆட்சியுரிமையினால் இந்த மக்களின்மேல் நடைமுறையில் செலுத்தும் அதிகாரத்தையோ கடைசி உடன்படிக்கைக்கு முன்போ அல்லது பின்போ நம்மால் அவரிடமிருந்து பறிக்க முடியவில்லை. இதனால் ஓர் அங்குல அதிக எல்லையைக் கூட நம் வசப்படுத்த முடியவில்லை. ஒரே ஒரு பகோடா நாணயத்தைக் கூட நம்முடைய கஜானாவில் கூடுதலாகச் சேர்க்கவும் முடியவில்லை. அப்போதைக்கப்போது தேவையான நடவடிக்கைகள் எடுக்கக் கம்பெனியின் தனி அதிகாரத்தினால் உங்களுக்கு அதிகாரம் கொடுக்க முடிவு செய்துள்ளோம். நீங்கள் செயல்படுமுன் கவர்னர் ஜெனரல், ஆலோசனைக் குழு இவற்றின் உடன்பாட்டைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இக்கடிதம் கிடைக்கும் போது இருக்கும் நிலையில், பாளையக்காரர்களைப் படைக்கலமற்றவர்களாக்க, அடங்காதவரைத் தண்டிக்க, வழக்கிலுள்ள உரிமைகளைச் சரிசெய்ய, கொடுங்கோலாட்சியாலும் துன்பங்களினாலும் அல்லல்படும் இன்றைய நிலைமை மாறி, அங்கெல்லாம் பணிவும், வளமையும் உண்டாக்கத் தக்க உள்நாட்டு நடவடிக்கை முறையைப் புகுத்த - தேவையான உறுதியான உபாயமுள்ள நடவடிக்கைகள் அடிக்கடி எடுக்க உமக்கு அதிகாரம் கொடுக்கிறோம்.

உங்கள் நடவடிக்கைகளின் முழுமையான இன்றியமையாமை பற்றிய அறிக்கையைப் பெற்றதும் கப்பங்கட்ட வேண்டிய பாளையக்காரர் மீது எடுக்க வேண்டிய அம்முறைகளைப் பற்றி அவரிடமிருந்து கடைசியாக வந்த கடிதங்களிலிருந்து அவரது உடன்பாட்டை எதிர்பார்ப்பதைவிட அவற்றைப் பெற வேண்டுமென விரும்ப வேண்டும். ஆகையால் ஒரு வேளை அவர் உடன்பட மறுத்தால் நீங்கள் எடுக்கின்ற வன்மையான முறைகளைச் செயல்படுத்துவதில் குறுக்கிட முயற்சிக்கும் அவர் முயற்சிகளை எதிர்க்கும் படியாகத்தான் கட்டளையிட முடியும். அதனால் ஆயிரக்கணக்கான மக்களின் மகிழ்ச்சிக்குத் தேவையான அமைதி, வளம் இவற்றைப் பெருக்குவதிலும், அதன் பயனாய் இறுதியில் நவாபின் சார்பில் உண்மையான நிலையான நன்மை ஏற்படுத்துவதிலும், நாம் அக்கறையில்லாமல் இருக்கிறோம் என்று எண்ண இயலாது.''

மேற்கண்ட நிகழ்ச்சிகளிலிருந்து திருநெல்வேலியில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அப்போதைக்கு அப்போது தீர்மானமாகவோ அல்லது சந்தர்ப்பத்தை ஒட்டியோ சிறு மாறுதல்கள் ஏற்பட்டது போல் தோன்றியது. இருந்தாலும் அது முழுமையான அல்லது நிலையான சீர்திருத்தத்தை ஏற்படுத்த இயலும், பாளையக்காரர்கள், குத்தகைக்காரர்கள் இவர்களின் கொடுமை அநீதி இவற்றிற்கு முடிவு ஏற்படுத்த இயலும். நிரந்தர

அமைதி ஏற்படுத்த முடியும் அல்லது எதிர்கால வளத்திற்குத் தேவையான உறுதியான அடித்தளம் கோல இயலும் என்றெல்லாம் எதிர்நோக்குவது நாட்டிலுள்ள எல்லா மக்களின் மீதும் செலுத்தப்படும் பிரிவுபடாத அதிகார ஆட்சி முழுமையும் ஆங்கிலேயர் வசமாகி நவாபு ஒய்வுச் சம்பளம் பெற்று அரசியல் அலுவலிலிருந்து விலகும் வரை நியாயமற்றது என்பது தெளிவாகும்.

**கட்டபொம்மன் நாயக்கன்**

பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரன் கம்பள இனப்பிரிவைச் சேர்ந்த நாயக்கன். அவனைக் குறிப்பிடும் கட்டபொம்ம நாயக்கன் என்ற பெயர் அவனது சொந்தப் பெயரல்ல. துவக்கத்தில் அது ஒருவனின் சொந்தப் பெயராக இருந்தபோதிலும் அப்பெயர் குடும்பத் தலைவனுக்குப் பட்டப் பெயராகக் கொடுக்கப்பட்டதாகும். கலெக்டராகிய திரு. ஜாக்சன் அவர்கள் தயாரித்த குடிவழிப் பட்டியலில் முதன்மையாக இருந்தவன். 1709 இல் பாளையத்திற்குத் தலைவனானான். இதே பெயரையுடைய நான்கு பேர் அக்காலத்திய குறிப்புகளிலே குறிப்பிடப் பட்டிருப்பதை நான் கண்டேன். 1755 இல் கர்னல் ஹீரான் படையெடுத்துச் சென்றபோது இருந்த கட்டபொம்ம நாயக்கன் முதல்வன். இரண்டாமவன் 1760 இல் தலைவனானான். மூன்றாமவன் 1791 இலும், நான்காமவன் 1799 இலும் தலைவரானார்கள். மூன்றாவது நான்காவது கட்டபொம்மன்கள் தூக்கிலிடப்பட்டனர். பொம்மா என்பது பொதுவான தெலுங்குப் பெயர். தமிழ்நாட்டில் அப்பெயருக்குச் சின்ன பொம்மா, சிறிய பொம்மா அல்லது கட்டை பொம்மா அதாவது குள்ளமான பொம்மா என்ற பண்புச் சொற்களைப் பெயருக்கு முன் சேர்ந்தார்கள். இப்பெயர் ஆங்கிலத்தில் ‘கேட்ட பொம்ம நாய்க்’ (Cataboma Naig) இதுவே ‘கேட்’ என்று குறுகியது. ஆங்கில சிப்பாய்கள் சாதாரணமாக அவனை பூனை (Cat) என்றே அழைப்பதுண்டு. கடைசி கட்டபொம்ம நாயக்கன் கருத்தையா சரியாக வீரபாண்டிய கட்டபொம்மன் என்றழைக்கப்பட்டான். அவனுக்கு ஒரு ஊமைத்தம்பி உண்டு. அவன் மிக்க புகழ் பெற்றவன். (கால்டுவெல் கருத்து!) - ந.ச. இணைப்பில் (Annexury) அவனைப் பற்றிய சில குறிப்புகள் கொடுக்கப்படும். அவன் பெயர், ஊமையன் குமார சுவாமி நாயக்கன் என்று போரின் இறுதியில் கர்னல் அக்னியூவிடம் அனுப்பிய கைதிகளின் பெயர்ப்பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஊமையனுக்கும் இளைய சகோதரன் மற்றொருவன் இருந்தான். இவன் கடைசி சிறு கலகங்களில் (கால்டுவெல்லுக்குக் கலகம்! நமக்குப் போர்! - ந.ச.) உண்மையான கலகக்காரத் தலைவனாக இருந்தவன். இவர் பெயர் சுப்பநாயக்கன். சாதாரணமாக, சிவத்தையா



என்று அழைப்பார்கள். இவனுடைய பெயரும் கைதிகளின் பட்டியலில் உள்ளது. கருத்தையா - சிவத்தையா என்றால் முறையே கருப்பு நிறமுடையவன் அழகான தோற்றமுடையவன் என்று பொருள். உண்மையில் இதன் பொருள் முறையே கருப்பு, சிவப்பு.

பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனுடைய பெரிய பகைவன் எட்டயபுரம் பாளையக்காரன். (கால்டுவெல்லே ஒப்புக் கொள்ளும் கருத்து! - ந.ச.) இவனுடைய பாளையம் சிறிது வடக்கே உள்ளது. எட்டப்ப நாயக்கன் என்ற குடும்ப மரபைத் தொடங்கியவர் பெயரால் எட்டயபுரம் என்று பெயர் பெற்றது என்று சொல்லப்படுகிறது. அக்குடும்ப உள்ளூர் வரலாற்று ஆசிரியர், மதுரையை அரசாண்ட குமார கிருஷ்ணப்ப நாயக்கரின் காலத்தில், 1565 ஆம் ஆண்டு இந்த இடம் நிறுவப்பட்டது என்று கூறுகிறார். எட்டப்பன், எட்டையன் இரண்டும் ஒத்த சொற்கள் தான்.

**மேஜர் பானர் மன்னின் படையெடுப்புக்கு முந்திய நிகழ்ச்சிகள்**

கடந்த நூற்றாண்டின் இடைக்காலத்தில் திருநெல்வேலியில் புலித்தேவர் எப்படி இருந்தாரோ அதேபோல் அந்த நூற்றாண்டின் இறுதியில் எல்லா ஒழுங்கீனங்களுக்கும் அநீதிகளுக்கும் (கால்டுவெல் கருத்து நாம் போற்றத்தக்கது! - ந.ச.) நடுநாயகமாகக் கட்டபொம்மன் இருந்தான். பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலிருந்து அப்பாளையக்காரன் அவன் தலைமையில் ஆயுதமணிந்த ஆட்களைத் திரட்டிக் கொண்டு சர்க்கார் கிராமங்களுக்குள் புகுந்து கொள்ளையடித்தான். பாளையக்காரர் கிராமங்களையும் சூறையாடி வழியில் கண்டயாவற்றையும் பறிமுதல் செய்து கொண்டும் பல சமயங்களில் முக்கிய கிராமவாசிகளைத் தூக்கிக் கொண்டும் போயினர். 1797 இல் இராமநாதபுரம் நாட்டில் கலகம் ஏற்பட்டது. அந்த எதிர்ப்பில் திருநெல்வேலி பாளையக்காரர்களில் பலர் (ஏறக்குறைய எல்லோரும்) சேர்ந்து கொண்டனர். கட்டபொம்ம நாயக்கன் இவர்களுக்குத் தலைமை தாங்கினான். இவர்கள் அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய கிஸ்தித் தொகையைச் செலுத்த மறுத்தனர். தெற்கே ஏற்பட்ட குழப்ப நிலை பற்றிய எச்சரிக்கை சென்னைக்கு (மதராசுக்கு) அனுப்பப்பட்டது. உடனே இராமநாதபுரம் சென்று பாளையக்காரர்களிடமிருந்து அவர்கள் நிபந்தனைகளின் தன்மையை ஆராய்ந்தறியும் படி கலெக்டருக்கு உத்தரவிடப்பட்டது. ஷெரானின் ‘இறுதிப் பாளையக்காரப் போரின், குறிப்புகளுக்கான முன்னுரையைப் பார்க்க.

இங்கு குறிப்பிடப்பட்டிருக்கும் கலெக்டர் திரு. ஜாக்சன் தென் வரிவசூலுக்கும் இராமநாதபுரத்திற்கும் அச்சமயத்தில் கலெக்டராக

இருந்தார். அவருடைய தலைமை அலுவலகம் இராமநாதபுரத்தில் இருந்தது. 1798இல் திரு. ஜாக்சன் இராமநாதபுரத்தில் தன் முன் வந்து அவன் செய்கைகளுக்குக் காரணம் கூறுமாறு இட்ட கட்டளையே கட்டபொம்மனுடன் இறுதிப் போராட்டம் ஆரம்பிக்க காரணமாயிருந்தது. மன்னிப்புகளும் காலநீட்டிப்புகளும் மீண்டும் மீண்டும் ஆணைகளைத் திரும்பத் திரும்ப இடுவதற்கு வழிகோலின. 1798 செப்டம்பர் 9 ஆம் தேதி அவன் இராமநாதபுரத்தில் ஆஜரானான். அன்றைய மாலை கலெக்டர் முன்னிலையில் கலெக்டருக்கும் அவனுக்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்து விவரங்கள் படிக்கப்பட்டன. அப்போது எச்சரிக்கை பெற்றவன் போன்று நடித்து கலெக்டர் முன்னிலையிலிருந்து பாய்ந்து சென்று அவன் கையாட்களுடன் கோட்டையைவிட்டு வெளியே ஓடிவிட்டான். வாயிலில் தளபதியும் உதவியாளனுமாகிய கிளார்க் (Clark) தலைமையில் இருந்த காவல் படையைத் தாக்கிக் கிளார்க்கை அவன் கையாலேயே குத்திவிட்டதாகக் கூறப்படுகிறது. (ஆமாம்! ஆமாம்! அவன் விடுதலைவீரன் - ந.ச.) இவ்வாறு தப்பி ஓடிய போது அரசுக்குரிய கிராமங்களை எல்லாம் சூறையாடிவிட்டுப் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டைக்குத் திரும்பினான். இதன்பேரில் அரசாங்கம் திரு. ஜாக்சனின் ஆட்சியைக் கண்டித்தது. பாளையக்காரர்களின் நிர்வாகியான ஜாக்சனின் ஆட்சித் திறமையின்மையைக் கண்டித்தது. பாளையக் காரர்கள் நிர்வாகியான ஜாக்சனுக்குப் பின்வந்த மேஜர் ஜெனரல் பிளாயிட் (Major General Floyd) இடமோ அல்லது கலெக்டரிடமோ உடனே அடைக்கலமடையும்படி அறிக்கை வெளியிடப்பட்டது. இக் கட்டளையைப் பாளையக்காரன் பொருட்படுத்தவில்லை. (ஆமாம்! ஆமாம்! அவன் விடுதலைவீரன் - ந.ச.) அடுத்துள்ள நாடுகளில் முக் கியமாக எட்டயபுரம் பாளையக்காரனின் எல்லைப்புறங்களிலுள்ள இடங்களில் தொடர்ந்து முன்போலவே தாக்குதல்கள் நடத்தினான்.

சென்னை கவர்னருக்கு வரிவசூல் குழுவால் எழுதப்பட்ட கடிதங் களிலிருக்கும் கீழ்க்காணும் குறிப்புகள் திரு. ஜாக்சனின் நடவடிக்கையை அரசாங்கம் ஏற்கமறுத்த செய்தியைப் பற்றி மேலும் சில விவரங்களைத் தெளிவுபடுத்தும்.

''201. இந்த மகிழ்ச்சியற்ற நிகழ்ச்சித் தொடர்புடைய சூழ்நிலை களை எடுத்துச் சொல்லும் போது கொடுக்கப்பட்டுள்ள ஜாக்சனின் குறிப்புகளின் தன்மை இந்த இளைஞனை அழிவிலிருந்து காப்பாற்றக் கடைசி முயற்சி எடுக்க வேண்டுமென்றும், அவனது அந்தக் கடைசிக் கொடிய செயல், அவனிடத்தில் காட்டப்பட்ட எந்தவிதத் தவறான சலுகையிலிருந்தும் தோன்றியதல்ல என்று காட்டவும், ஜூலை 31 ஆம்



தேதியிட்ட கடிதத்தில் தங்கள் சமூகத்திற்குப் பரிந்துரை செய்ததன் காரணத்தை மிக விளக்கமாக எழுதும்படி எங்களைக் கட்டாயப் படுத்தியது.

202. இந்த விவரங்கள் தங்கள் சமூகத்திற்குச் சென்ற மாதம் 27 ஆம் தேதி இறுதியில் பணிவுடன் அனுப்பப்பட்டது. அதோடு அவருடைய கவனத்தை ஈர்த்த முதல் பொருளாக அவர் கருதிய அவனால் எழுதப்பட்ட கடிதங்கள் எல்லாவற்றையும் பாளையக்காரன் பெற்றுக் கொண்டு புரிந்து கொண்டானா என்பதை உறுதி செய்து கொள் வதற்காக நாங்கள் இட்ட கட்டளைகளைக் கலெக்டர் எப்படி செயல் படுத்த முற்பட்டார் என்ற முறைகளும் அனுப்பப்பட்டன. இந்த வழக்கின் சூழ்நிலையில் இந்தக் கட்டளையைச் செயல்படுத்துவதில் அவன் நடத்தை எவ்வளவு பொருத்தமானது என்பதை உங்கள் முடிவுக்கே விட்டு விடுகிறோம். அவன் மேற்கொண்ட வழிக்கு பதிலாக, கலெக்டரிட மிருந்து பாளையக்காரன் பெற்ற கடிதங்களைக் கொடுக்குமாறு கேட்டிருந் தானானால், எவ்வித பிழை உணர்வுக்கும் குறைந்த வாய்ப்பளித்திருக் கலாமென்று நாங்கள் நம்புகிறோம். பின்னர் ஜாக்சனின் எல்லாக் கடிதங் களும் எந்த மாற்றங்களுமின்றி கொடுக்கப்பட்டனவா என்றும் பார்த் திருக்கலாம். இது கலெக்டரின் எண்ணப்படி எந்தத் தவறுக்கும் எதிராகப் பாதுகாப்பாயமைந்திருக்கும். ஏனெனில் இவை நம்பக் கூடியவை யாகத் தோன்றவில்லை. அவன் அறிவித்தது போல் அதுபற்றி அறியா திருந்தாலும் மே 23 ஆம் தேதியிட்ட கலெக்டரின் கடிதத்தில் பாளை யக்காரர் அமைத்ததாகக் கருதப்படும் கடுமையான பத்திகள் அவனுடைய பாளையத்தைக் கவர்ந்து கொள்வது பற்றியதாயிருந்ததால் அது அவனு டைய உடைமைகளின் பாதுகாப்பு பற்றிய அச்சத்தை வியப்படையச் செய்ததால் அந்த உணர்வு தொடர்ந்து நடைபெற்ற அட்டூழியச் செயலைச் செய்யும்படி தூண்டியிருக்கலாமென்று தோன்றுகிறது. (பைக்குள் இருந்த பூனை பைய வெளியே வருகிறது! - ந.ச.)

203. இராமநாதபுரம் கோட்டைக்குள்ளேயே கலெக்டரின் கச்சேரிக்குள் பாளையக்காரன் வந்து தோன்றி, பின்னர் குற்றவாளிபோல அதிவிரைவாக அங்கிருந்து ஓடிப்போன அவனுடைய சூழ்ச்சித் திட்டத் தினால் அவன் என்ன நோக்கம் கொண்டு அவ்வாறு செய்தான் அல்லது அதனால் அவன் என்ன பயன் பெற்றான் என்று எங்களால் கற்பனை செய்ய இயலவில்லை. எனினும் கலெக்டரின் முடிவையும் நாங்கள் ஒப் புக் கொள்ள முடியவில்லை. (ஆ! ஆ! - ந.ச.) எனினும் அவனே அவனுடைய அழிவுக்கான முடிவுகளைத் தேடிக் கொண்டான் என்பது உறுதி. பாளையக்காரன் கோட்டையிலிருந்து வெளியேறிய அக்கணமே

4000 ஆயுதந் தாங்கிய போர் வீரர்களின் தோற்றக்காட்சி ஒரு அசாதாரண சூழ்நிலையாகும். (உம்.ந.ச.) ஆனால் கலெக்டரால் பெறப்பட்ட குறிப்புகளில் இந்த எண்ணிக்கை மிக அதிகமாகப் பெருக்கப்பட்டிருக்க வேண்டுமென்று நாங்கள் ஐயுறுகிறோம். (ஏன்? - ந.ச.) இராமநாதபுரம் வரை அமைந்த மொத்த வழியிலும் கலெக்டரையே பின்பற்றிச் சென்ற பாளையக்காரனை அவ்வளவு பெரிய படைவீரர் கூட்டம் தொடர்ந்து சென்றிருக்கும் என்பதும் அதோடன்றி அங்கு பாளையக்காரன் வருகை தந்ததற்கு மறுநாளே, இந்த ஆய்ந்து தீட்டிய திட்டத்தின்படி (உம்..... - ந.ச.) தயாராக இருந்து செயலாற்ற அவர்கள் வெவ்வேறு இடங்களில் தங்களை மறைத்துக் கொண்டிருக்க ஏற்பாடு செய்திருப்பார்கள் என்பதும் உண்மையாக நிகழக் கூடியதல்ல (உம்...... அப்புறம்! - ந.ச.) ஆனால் இந்தச் சூழ்நிலைகளில் நாங்கள் இன்னும் அதிகமான குறிப்பான விளக்கங்களைக் கேட்க வேண்டுமென்ற எங்கள் எண்ணத்தைத் தெரிவித்தோம். பாளையக்காரன் தப்பித்தபோது அவர்கள் தோன்றினார்கள் என்றால் அவர்கள் அங்குள்ள சுவர்களிலேதான் ஒளிந்திருக்க வேண்டும். ஆனால் அவ்வளவு பெரிய வீரர்களடங்கிய படை யாராலும் கவனிக்கப் படாமல் கோட்டைக்கு அவ்வளவு அருகே எப்படி அணுக இயலும் என்பதைப் பற்றி ஆணை - அலுவலரை விளக்கும்படி கேட்க வேண்டிய தகுதியைப் பற்றி ஆலோசனை கூறினோம். (அது சரி! ........-ந.ச.)

204. இந்தப் பாளையக்காரனது நடத்தைக்குத் தூண்டு கோலாயிருந்தது, எதுவாயிருப்பினும் அவன் செய்த குற்றத்தின் (?-ந.ச.) கொடுமை சிறப்பான தண்டனைக்குரியதாகவே தோன்றுகிறது. அவனுக்கு எதிராகச் செயல்பட அமைத்த படை, அவனைப் பிடிக்க கலெக்டர் 5000 ரூபாய் பரிசு கொடுப்பதாக உள்ள திட்டம் இவற்றைத் தங்களது மேலான பார்வைக்கு விட்டுவிடுகின்றோம். இந்த நேரத்தில் மிகக் கடுமையான சான்று ஒன்றைக் காட்ட வேண்டிய தேவையை நாங்கள் உணர்கிறோம். மேலும் நாங்கள், பாளையங்கள் (பொள்ளங்கள்) நிலையாகப் பறிமுதல் செய்யப்பட வேண்டும் என்றும், நீதி இயக்குநர் குழு (Court of Directors) ஏற்றுக் கொண்ட கொள்கைப்படி, பாளையக்காரர் குடும்ப நன்மைகளை எண்ணி ஆளும் இனத்திற்கு எதிராகக் குற்றங்கள், கொள்ளைகள் செய்வதினின்றும் அவர்களைத் தடுப்பதற்கும் பரிந்துரை செய்கின்றோம்.

205. காலஞ்சென்ற லெப்டினன்ட் கிளார்க்கியின் குடும்பத்தைப் பற்றி கலெக்டரால் சொல்லப்பட்ட சூழ்நிலையில் அக்குடும்பத்திற்காகத் தாங்கள் விரும்பிக் குறிப்பிடும் ஓய்வு ஊதியம் எதுவாயிருந்தாலும் அதைப் பாஞ்சாலங்குறிச்சிப் பாளைய வரிவசூலிலிருந்தே செலுத்தப்



பட வேண்டுமெனப் பரிந்துரை செய்து தங்களது மேலான நலமிக்க ஆலோசனைக்கு மிகப் பணிவுடன் அனுப்பி வைக்கிறோம்.

**வரி வருமானத்துறை சென்னை அரசுக்குத் தொடர்ந்து எழுதிய கடிதங்கள்**

165. எங்களுடைய கடைசி பொது அறிக்கையில் இராமநாதபுரம் கோட்டையில் நடைபெற்ற தீவினையான அமளியைப் பற்றியும் அதன் விளைவாய் பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரன் தப்பி ஓடியதைப் பற்றியும் கண்டோம். அக்டோபர் 3 ஆம் தேதியில் தாங்கள் எங்களுக்குத் தெரிவித்த படி கம்பெனி அதிகார இனத்துக்குத் தீங்கு வராமல் காத்துக் கொள்வதற்கான வலிமை பொருந்திய படையைத் தயார் செய்வதற்கு விரைவில் முயற்சி எடுத்துக் கொள்வது சிறப்புடையது என்றும் பாளையக்காரனைக் கீழ்படியக் கட்டாயப்படுத்த வேண்டுமென்றும் தெரிவித்திருந்தார்கள். ஆனால் கட்டபொம்ம நாயக்கன் கட்டாயப்படுத்தலின்றித் தானே கீழ்படியத் தூண்டப்படலாமென்பதற்கான செய்திகள் கிடைத்திருப்பதால் அறிக்கை வெளியிடுவதில் கால நீட்டிப்பு ஏற்படக் கூடாதென்றும், அந்த அறிக்கை வெளியிடுவதிலும் அவ்வறிக்கை பாளையக்காரனுடைய கவனத்திற்குக் கொண்டு வரப்பட வேண்டுமென்றும் தாங்கள் விரும்பியதால், அதற்காக அறிக்கையின் படிகள் இரண்டை ஜாக்சனுக்கு உடனே அனுப்பியுள்ளோம்.

166. பிறகு நாங்கள் பாளையக்காரரின் கீழ்படிவு பற்றி மேலும் நம்பிக்கை வைத்திருப்பதாக உணர்த்தியுள்ளீர்கள். ஆனால் ஜாக்சனிடம் அவனுக்கு முழு நம்பிக்கை இல்லை என்று தெளிவாகியவுடன் தாங்கள் கலெக்டரின் அதிகாரத்தைத் தள்ளிவிட்டு மேஜர் ஜெனரல் 'பிளாயிடு' (Floyd) உடனே அவனுடன் உடன்படிக்கைப் பேச்சு (ஓ! - ந.ச.) தொடங்க வேண்டுமெனவும் உத்தரவிட்டீர்கள். அதிகாரிகளுக்குள் எதிர்ப்பு ஏற்படா வண்ணம் இத்தீர்மானத்தை தாமதமின்றி கலெக்டருக்குத் தெரிவிக்கும் படியும் தாங்கள் விரும்பினீர்கள். அன்றே அவ்வாறு செய்யப்பட்டது.

167. பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரன் அவ்வாறு செயல்பட்டிருக்க இயலாத எண்ணங்களைப் பற்றிச் சிந்தித்த போது இராமநாதபுரத்தில் நடைபெற்ற விரும்பத் தகாத கடந்த நிகழ்ச்சியைத் தோற்றுவித்து, அதை வளர்த்து விட்ட சூழ்நிலைகளைப் பற்றி முழுவிசாரணை நிறுவுதற்குத் தாங்கள் தீர்ப்பளித்தது உசிதமென்று நாங்கள் அறிவிக்கப்பட்டோம். இக்காரணத்திற்காக கர்னல் பிரௌன் (Brown), லெப்டினன்ட் கர்னல் ஓரம் (Oram), திரு. ஜான் காசாமேயர் (John Casamayer) இவர்கள் அடங்கிய ஒரு குழுவை நிறுவுவதில் நிறைவு

கொண்டீர்கள். இக்குழு கலெக்டரின் ஆவணங்களைத் தடையின்றி கவனிப்பதற்கான வாய்ப்புகள் அளிக்கப்பட வேண்டும் என்றும், தங்கள் காரியத்தைச் செயல்படுத்தத் தக்க காவல் தேவைப்படலாமென்றும் அதற்காக வரி வருமானத் துறையிலுள்ள எல்லோருடைய உதவியும் குழுவிலுள்ளவர்களுக்குத் தேவைப்பட்டால் உடனுக்குடன் அவர்கள் அவற்றைக் கவனிக்குமாறு உத்தரவிடப்பட வேண்டும் என்றும் குறிப் பிட்டிருந்தீர்கள். அதே சமயத்தில் அவ்விருவரும் படையெடுப்பில் முதன்மை வகித்தாலும் குழுவில் முதன்மையாயிருப்பதால் மேஜர் ஜெனரல் பிளாயிடு பாளையக்காரனுடன் தொடங்க விரும்பிய உடன் படிக்கையை மேலும் இயல்பாகக் கர்னல் பிரௌன் செய்வாரென்று எண்ணியமையால் அந்த அதிகாரிக்கு அக்கடமையை மாற்றும்படி ஜெனரல் பிளாயிடுக்கும் அதிகாரம் வழங்கப்பட்டது. இத்தீர்மானங்கள் அடங்கிய அறிக்கையின் நகல் ஒன்று ஜாக்சனுக்கு அனுப்பப்பட்டது. பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனிடம் கலெக்டருக்குள்ள அதிகாரம் நீக்கிவைக்கப்பட்டது பற்றி நடைபெற்ற கடிதப் போக்குவரத்து மார்ச் 2 ஆம் தேதிக்கடியில் ஓரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. அரசாங்கத்தின் தீர் மானங்களுடன் இக்குழுவின் நடவடிக்கைகளும் இந்தத் துறைக்கு அனுப் பப்பட்டது. நாங்கள் பெற்ற உத்தரவுகளுக்கேற்ப செய்தி அறிவதற்காகவும் வழிகாட்டவும் பாளையக்காரனிடம் நன்றாக விளக்கப்பட வேண்டிய குறிப்பான வழிகளைத் தெரிவிக்கும் கட்டளைகளுடன் தற்போதைய கலெக்டருக்கு அவை அனுப்பப்பட்டுள்ளன.

அரசு தீர்மானங்களில் கூறியிருப்பதாவது:- கட்டபொம்ம நாயக்கனின் கீழ்ப்படியாத் தன்மைக்கு எதிராகக் கொடுக்கப்பட்ட கலெக்டரின் விவரங்கள், குற்றச்சாட்டுகள் இவற்றின் காரணமாய்த் தோன்றக் கூடிய எல்லாச் சூழ்நிலைகளையும் ஏற்றுக் கவனித்ததில் கட்டபொம்ம நாயக்கன் இராமநாதபுரத்திற்கு வரவேண்டுமெனக் கட்டளையிடும்படி வரிவருமானத்துறை அவனுக்கு ஆணையிட்டது. அந்தக் கட்டளை பாளையக்காரனுக்கு அறிவிக்கப்பட்டவுடன், நாயக் கன் இராமநாதபுரத்திற்குப் புறப்படுவதில் தேவையற்ற காலத்தாழ்ப்பு செய்யவில்லை. ஆனால் அதற்கு மாறாகக் கலெக்டரைத் தானே நேரா கச் சந்திப்பதின் மூலம் (உம்...-ந.ச.) அரசு நிர்வாகிகளிடம் தான் கீழ்ப்ப டிந்து போகத் (?-ந.ச.) தயாராயிருப்பதை மெய்ப்பிக்க அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வதில் அவன் உண்மை ஆர்வம் காட்டினான். ஆனால் அச்சமயத்தில் ஜாக்சன் அவனிடம் நடந்து கொண்ட முறை தேவையற்ற கடுமையும் கொடுமையும் நிறைந்ததாயிருந்தது. (அந்தோ! -ந.ச.) அன்றியும், 23 நாட்கள் பாளையக்காரன் தன்னைப் பின்தொடர்ந்து வரும்படி அவன் கட்டாயப்படுத்தப்பட்டிருப்பதனால்



(பேயும் இரங்குகிறது! - ந.ச.) அவன் கடந்து சென்ற பாளையங்களின் சிறிய பாளையக்காரர்களுக்கு முன் அவன் மிக்க இழிவான மானக்கேடு அடையும் படியாயிற்று. வரிவருமானத் துறையினர் ஜாக்சன் அவ்வாறு செய்வதற்கு அதிகாரம் கொடுக்கவில்லை. (அடே....! - ந.ச.)

168. இராமநாதபுரத்திற்குப் பாளையக்காரன் வந்த பிறகு கலெக்டரின் அலுவலகத்தில் கலெக்டர் அவனை நடத்திய விதத்தால் அவன் கட்டளையை ஏற்றுச் செயல்பட்டவர்கள் வழக்கத்திற்கு மாறான இன்னல்களுக்கும் இழிவுக்கும் ஆளாக்கப்பட்டார்கள். அத்தகைய நடத்தை பாளையக்காரனது நெஞ்சில் அச்சத்தை ஊட்டி அவனது தற்காப்புக்கான எச்சரிக்கையை உண்டாக்கியது. எனவே, அவன் தப்ப முயற்சித்தது இயற்கையான முடிவாகும். வாயிலில் ஏற்பட்ட கலகம், காவலாளிகளை அடக்கி, அரசாங்க அதிகாரிகளை எதிர்க்க வேண்டு மென்ற வரம்பற்ற செயல்கள் பாளையக்காரனால் முன்னேற்பாடு களுடன் திட்டமிடப்பட்டதல்ல. (அநீதியும் நீதி பேசுகிறது! - ந.ச.)

**வருமானத்துறை சென்னை அரசுக்கு எழுதிய கடிதங்கள்**

170. குழுவின் முன் கொண்டுவரப்பட்ட எல்லா சாட்சிகளி லிருந்தும் லெப்டினன்ட் கிளார்க் பாளையக்காரர் கையால் கொலை செய்யப் பட்டார் என்ற ஐயம் உள்ளது. ஆனால் துப்பு துலக்குதற்காக எல்லா வழி களும், உள்ளூரிலிருந்து செய்தி அறியும் வாய்ப்புகளுமுடைய அக்குழு கிளார்க்கைப் பாளையக்காரன் தானே கொலை செய்யவில்லை; அவன் படையிலுள்ள ஒரு வேல்வீரன் கொலை செய்தான் என்று ஒருமன தாகத் தீர்ப்பளித்ததால், கிளார்க்கின் கொலை தொடர்பாகக் கட்ட பொம்ம நாயக்கன் விடுதலை செய்யப்பட வேண்டுமென முடி வெடுக்கப்பட்டது. எனினும், தன் படைவீரனின் செய்கைக்குப் பாளையக் காரனே பொறுப்பாளியாக வேண்டும் எனவும் அன்றியும் கலெக்டரின் ஆணைப்படி தளபதி கிளார்க்கு தன் கடமையைச் செய்து கொண் டிருந்த போது (அப்படியானால்? குத்தியவனும் அவன் கடமையைத் தானே செய்தான். - ந.ச.) கொலை செய்யப்பட்டதால், இறந்த கிளார்க்கின் மனைவி மக்களின் குடும்பத்தைக் காத்து உதவி செய்யத் தக்கவாறு கிளார்க்கின் ஊதியம், பஞ்சப்படி இவற்றிற்கு ஈடான தொகையைச் செலுத்துவதற்கான ஏற்பாட்டைப் பாளையக்காரனே செய்ய வேண்டு மெனவும் தீர்ப்பாயிற்று. (வெள்ளையன் உயிர் வேறு; கறுப்பன் உயிர் வேறு!? - ந.ச.)

171. இந்தத் தீர்மானங்கள் லூஷிங்டனுக்கு அறிவிக்கப்பட்ட போது பாளையக்காரன் கிளார்க்கைக் கொலை செய்த குற்றத்தினின்றும்

விடுதலை செய்யப்பட்டான் என்பதை உணர்த்தி, கிளார்க்கின் மனைவி மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான பணத்தைச் செலுத்துவதற்கான ஒரு வழியை அவனுடன் பேசி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும் என்றும், அரசின் ஆட்சியில் அவன் துய்த்து மகிழும் பெரும்பாதுகாப்பு நன்மைகளைச் சுட்டிக் காட்ட வேண்டுமென்றும், சூழ்நிலை சான்றுகள் அவனுக்கு மிக எதிராக இருந்தபோதும் கூட நடுநிலையாக விருப்பு வெறுப்பின்றி அவனுடைய குற்றத்தை ஆராய்ந்தறிந்து இத்தீர்ப்பு வழங்கப்பட்டமையால் அவன் கம்பெனியாரின் ஆணைகளுக்கு உடனுக்குடன் பணிந்து இருக்க வேண்டிய தேவையையும், அதனாலேற் படக் கூடிய நன்மைகளையும் எடுத்துச் சொல்லி அறிவுரைப் பகர்ந்து இறுதியாக அவனுடைய பாளையத்தின் முழு உரிமையையும், முழு உடைமையையும் அவனிடம் திருப்பித் தர வேண்டுமென, அரசாங்கம் அறிவித்தது.

அரசே அமைத்த கண்ணியம் மிகுந்த அக்குழுவின் தீர்ப்புப்படி பாளையக்காரனை விடுதலை செய்வதைத் தவிர வேறொன்றும் செய்ய இயலவில்லை. ஒருவேளை பாளையக்காரனின் செய்கை தொடர்ந்து ஓரளவு நேர்மையும் கடமையும் நிரம்பியதாக இருந்திருந்தால், ஜாக்சன் தவறிழைத்துவிட்டார் என்றும், குழுவின் தீர்ப்பு சரியானதென்றும் கொள்ளலாம். ஆனால் ஜாக்சனுக்குப் பின்வந்த லூஷிங்டனிடம், அவனுடைய நட்புரிமையை (ஓ! ஓ! அதற்குப் பெயர் அப்படியா? - ந.ச.) அறியாது, பாளையக்காரன் காட்டிய எதிர்ப்பு ஜாக்சனின் எண்ணம், அரசியல் திறம் ஆகியவை நேர்மையானதே என்று எண்ண ஏதுவாகிறது. எட்டயபுர சமீன்தாரியின் உள்நாட்டு வரலாற்று ஆசிரியர் (ஆமாம்! அவர் யார்? - ந.ச.) ஜாக்சனின் நோக்கத்தையே ஏற்றுக் கொண்டு, தளபதி கிளார்க்கு கட்டபொம்ம நாயக்கனாலேயே கொல்லப்பட்டான் என்று குறிப்பிடுகிறார். விசாரணைக் குழுவின் தீர்ப்பு பாளையக்காரனின் திறமைமிக்க ஏய்ப்பு என்று அவர் பகர்கின்றார். எனினும் எட்டயபுரக் குடும்பத்தார் பாஞ்சாலங்குறிச்சிக்கு முதல் பகைவர் என்பதையும், அவர்களே கட்டபொம்மனின் வீழ்ச்சியால் முதலில் பயன்பெறுபவர்கள் என்பதையும் நாம் நினைவு கூர்தல் வேண்டும். (இந்த இடம் உண்மையி லேயே கால்டுவெல் நடுநிலை ஆராய்ச்சியிலும் ஈடுபாடுடையவர் என் பதற்கு நற்சான்று. - ந.ச.)

ஜாக்சனுக்கு அவசரப்புத்தி இருந்ததாகத் தோன்றுகிறது. வரி வசூல் வாரியம் பல காரணங்களுக்காக அவனைத் தண்டித்தது. எனினும் அவன் காட்டிய கீழ்படியாமை தன்மைக்காகவே அரசு அவனை வேலையிலிருந்து நீக்கியது. பண மோசடி குற்றமும் அவன்மேல் சாட்டப்



பட்டது. என்றாலும் அக்குற்றத்தினின்றும் விடுதலை பெற்றான்.

1799 ஜனவரி 12 ஆம் தேதி ஜாக்சனுக்குப்பின் லூஷிங்டன் பதவிக்கு வந்தான். மார்ச் 16 ஆம் தேதி கட்டபொம்ம நாயக்கனுக்கு மிகப் பணிவு நிறைந்த கடிதம் ஒன்றை (உம்! பாயும் புலி! ந.ச.) லூஷிங்டன் எழுதினான். அதில் தளபதி கிளார்க்கு கொலைக் குற்றத்திலிருந்து பெருந் தன்மையுடன் அவன் விடுதலை செய்யப்பட்டிருப்பதாகவும், பாளை யத்தின் குழு அதிகாரத்தையும் மீண்டும் கொடுத்திருப்பதாகவும் தெரி வித்திருந்தான். அதே சமயத்தில், கிஸ்தி பாக்கியுடன் தன்னை வந்து இராமநாதபுரத்தில் சந்திக்க வேண்டுமென்ற தன் விருப்பத்தையும் குறிப் பிட்டிருந்தான். இதற்குக் கட்ட பொம்ம நாயக்கன் எழுதிய பதிலில் எதிர் நோக்கியது போல நன்றிப் பெருக்கும் கடமைமிக்க அடக்கமும் மிகுதி யாக இருந்தது. (உம்! சரிதானே! - ந.ச.) ஆனால் அரசாங்கத்தினிட மிருந்து தனக்குச் சேர வேண்டியவற்றையெல்லாம் பெற்றுக் கொள்ளும் வரை, கிஸ்தியைச் செலுத்த அவனுடைய இயலாமைக்கும், இராமநாத புரத்திற்குச் சென்று லூஷிங்டனைக் காண இயலாமைக்கும் தக்க காரணங்கள் இக்கடிதத்தில் காட்டப்பட்டு இருந்தன. சுருக்கமாகச் சொன்னால் அவன் போக்கு மாறியிருந்ததே தவிர, அவனுடைய நடவடிக்கைகள் அன்றுபோலவே அமைந்திருந்தது. (மிக நன்று! - ந.ச.)

கட்டபொம்மன் தன்னுடைய அதிகாரங்களுக்கு அடங்கி இருக்கவும், ஆயுதந் தாங்கிய வீரர் துணையின்றித் (?! - ந.ச.) தன்னை நேரில் பார்க் கத் தூண்டவும் கிஸ்தி பாக்கியை நேரில் செலுத்தும்படிச் செய்யவும் லூஷிங்டன் எடுத்துக் கொண்ட எல்லா முயற்சிகளும் பயனற்றவையாயின. ஆகவே, நாளடைவில் இச்செய்தியை அரசாங்கத்திற்குத் தெரிவித் தான் லூஷிங்டன். கீழ்க்காணும் குறிப்பு அவனுடைய கடிதத்தில் உள்ள முக்கிய பத்தியாகும்:

இக்கடிதத்தில் குறிப்பிடப்படும் பாளையக்காரனின் கடையாய (?! - ந.ச.) நடவடிக்கைகளைப் பார்க்குமிடத்து மிக்க கொடுமையான குற்றவாளிகளைத் தண்டிக்க உடனடியாக எந்த நடவடிக்கைகளும் எடுக்கப் பரிந்துரை செய்ய வேண்டாமென நான் எண்ணுகிறேன்: இந்த நாடுகளில் அனுபவமுடைய ஒரு தலைவன் (லஞ்சத்தால்) கை யுறையால் ஈர்க்கப்படாத உறுதியுடைய ஒரு தலைவன் (ஐயோ! அப் போதே ந.ச.) கீழ் பயிற்சி பெற்ற படை ஒன்று தயாரிக்கப்படும் வரை பாளையக்காரனின் வருங்கால அரசியல் முறையில் சில பொது முறை கள் தீர்மானிக்கப்படும் வரை அவர்களைப் படை பலத்தால் வலுவில் சென்று அடக்க முயற்சி செய்யக் கூடாதென்பது என் எண்ணம். (உம்! - ந.ச.) ஒரு சிறுபடை கைகலப்பும் இடையூரான எதிர்ப்புகளை

உண்டாக்கி நம்மைத் துன்பத்திற்காளாக்கும். (உம். - ந.ச.) பெரும் படையாயிருப்பின் அப்படைக்குச் செய்யப்படும் செலவு இரண்டு அல்லது அதற்கு அதிகமானப் பாளையங்களைப் பிரிப்பதற்குச் செய்யப் படும் செலவைவிட அதிகமானதால் அத்தகைய தியாகம் செய்வதும் தகுதி யற்றது. காட்டுத்தனமாக அவர்கள் பலத்தை பெருமளவு குறைக்கும் முயற்சியை அவ்வளவு விரைவில் மேற்கொள்ள இயலாது. அப்படி அவர்கள் வலிமை குறைக்கப்படும் வரை இந்த நாட்டு மக்களின் உயிர் உடைமைகள் பாதுகாப்பாயிராது. பாளையக்காரர்களின் இறுமாப்பு, கீழ்ப் படியாமைப் பண்புகளும் மாறாது. (இந்த எண்ணத்தில் 1973 மே 21 ஆம் தேதி மண அறைந்தது! ந.ச.)

அரசாங்கத்திற்கு இச்செய்தி கிடைத்ததும் அதிலிருந்து மற்ற பாளையக்காரர்களிடம் எதிர்ப்பு மனப்பான்மை வளர்ந்து வருவது விளங்கி யமையால், ஒரு கலெக்டருக்குப் பணிய மறுத்த பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனின் செய்கை அதுவும் ஒரு வெள்ளை அதிகாரியைத் தன் கையாலேயே கொலை செய்து விட்டு அக்குற்றத்தினின்றும் விடுதலை பெற்றுவிட்டான் என்று பொதுவாக நம்பப்படும் செய்தி தொற்றிப் பரவும் தீங்காக மாறிவிடுவது உறுதி என்று அறிந்து இனி காலங் கடத்தல் கூடாதென அரசு தீர்மானித்தது.

கட்டபொம்ம நாயக்கனுடன் சேர்ந்து கொண்டு படையுதவி அளித்து அரசாங்கத்தை எதிர்த்த முக்கிய பாளையக்காரர்கள் நாகலாபுரம் கோல்வார்பட்டி (கொல்லப்படி, கொல்லர்பட்டி) ஏழாயிரம் பண்ணை பாளையக்காரர்களாவர். காடல்குடி, குளத்தூர் பாளையக்காரர்களும் அவன் பக்கமே இருந்தனர். மேலும் ஒர்ம்மினுடைய நெல்கட்டும் செவ்வல் கோட்டையையுடைய ஆவுடையாபுரம் பாளையக்காரர், அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த புலித்தேவர் இவர்களும் அவனுடன் சேர்ந்து கொண்டனர். எல்லாம் முடிவதற்குள், ஆவுடையாபுரம் பாளையக் காரன் அரசாங்கத்துடன் சேர்ந்து கொண்டான். மேற்கு பாளையக்காரருள் முக்கியமான எதிர்ப்பு சிவகிரியிலிருந்து ஏற்பட்டது. பழைய பாளையக் காரர் அரசப் பற்றாளர். ஆனால் அவனுடைய பிள்ளை கட்டபொம்ம நாய்க் கனால் அனுப்பப்பட்ட படை உதவி கொண்டு தகப்பனை அப்புறப் படுத்த முயற்சித்தான். (விடுதலை இயக்கத்தில் இத்தகைய இளமை வீரம் இயற்கை! - ந.ச.) அவனுக்கு மற்ற பாதிக்கப்படாத பாளையக்காரர் களிடமிருந்து சிறிதளவு ஆதரவு கிடைத்தது. ஆனால் அவன் பின்னர் அரசாங்கத்தின் சார்பில் மேஜர் பானர்மனால் மன்னிக்கப்பட்டான். தந்தைக்குப் பின் அவன் பாளைய உரிமை பெற அனுமதிக்கப்பட்டான். சிவகிரியிலுள்ள முக்கிய கலகத்தலைவன் பழைய பாளையக்காரனின்



மகன் அல்லன். ஆனால் அக்குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன். மாப்பிள்ளை வன்னியன் என்று அழைக்கப்பட்டான். அவனுக்கு உள் நாட்டு ஆதரவு அதிகமாக இருக்கிறதென்றும், புகழ்வாய்ந்த துணிகரமான தலைவன் என்றும் வருணிக்கப்பட்டான். (திருநெல்வேலியில் வன்னியன் இனத்தைச் சார்ந்த சமீன்தார் குடும்பம் சிவகிரி குடும்பம் ஒன்று தான் என்று எண்ணுகிறேன் - ந.ச.) மேலும் கட்டபொம்ம நாயக் கனுக்குச் சிவகங்கைத் தலைவராகிய மருதுவின் இரக்கமும் உதவியும் துணைபுரிந்தன. இப்போராட்டத்தில் அரசாங்கத்திற்கு மிக்க துணை வலிமையுடையவனாயிருந்த தலைவன், எட்டயபுரப் பாளையக்காரன். ஊத்துமலை, சொக்கம்பட்டி, மேற்கிலுள்ள தலைவன் கோட்டை, கிழக்கே மணியாச்சி மேல்மாந்தை பாளையக்காரர்கள் அரசின் சார்பிலி ருந்தனர். உண்மையில் உதவி என்ற பெயரில் அரசாங்கத்தார் பெற்றது எட்டயபுரம் பாளையக்காரர்களிடமிருந்துதான் (அடி சக்கை! - ந.ச.)

அப்போது கலெக்டராயிருந்த லூஷிங்டனிடம் அரசாங்கத்திற்கு நம்பிக்கை இருந்தது. நாளடைவில் அவனே கவர்னரானான். ஆகவே, திருநெல்வேலியிலுள்ள பாளையக்காரர்களின் அதிகாரத்தையும் பரவத் தொடங்கிய கலக மனப்பான்மையையும் வேருடன் களைய வேண்டிய தேவையை அக்காலத்திலிருந்த அரசாங்கம் நம்பும்படி செய்வது லூஷிங் டனுக்கு எளிதாயிற்று. எனினும், சீரங்கப்பட்டணம் கைப்பற்றப்படும் வரை காத்திருந்தனர். (திப்பு வாழ்க! - ந.ச.) இந்த நிகழ்ச்சிக்குச் சிறிது காலத்திற்குப் பின்னே அவர்களுடைய கவலைகள் தீர்ந்து படைகள் தாராளமாய் நகரத் தொடங்கியதும், அவர்கள் ஏற்கனவே எண்ணித் திட்ட மிட்டிருந்த கருத்துக்களைச் செயல்படுத்தத் தக்க காலம் வாய்த்தது என்று அவர்கள் முடிவுக்கு வந்தனர்.

**மேஜர் பானர்மனின் படையெடுப்பு**

திருநெல்வேலியில் அடக்கு முறையை நிலைநாட்ட ஒரு படை தயாரிக்கப்பட்டது. மிகத் திறமைவாய்ந்த மேஜர் பானர்மனின் தலைமையில் அப்படை அனுப்பப்பட்டது. பானர்மனுடைய அறிக்கைகள், நினைவுக் குறிப்புகள் முதலியவை அங்கு நடைபெற்ற ஒவ்வொரு நிகழ்ச்சி பற்றிய முழுவிவரங்களும் அடங்கியவையாயிருந்தன. எனவே, திரு. கீரன்சு (Kearns), இக்குறிப்புகளைப் பாதுகாத்துத் தொகுத்து வெளியிட்டார். மேஜர் பானர்மனுடைய கட்டளைகள் 1799, ஆகஸ்டு 19 அக்டோபர் 21 என்று தேதியிடப் பட்டுள்ளன. இந்த இரண்டுமாதக் குறுகிய காலத்திற்குள் அவனுக்குக் கொடுக்கப்பட்ட செயலைத் திறம்படச் செய்வதில் அவன் வெற்றி கண்டான்.

மேஜர் பானர்மனுடைய படையெடுப்புத் தொடர்பான மிகச் சிறப்

பான ஆவணங்களின் மூலத்தை இங்குத் தருகிறேன். மூலச் செய்திகளைத் திருத்தி எழுதி தொகுக்கப்பட்டவற்றை விட சுவைமிக்கதாயிருக்கும். (என்னே கால்டுவெல்லின் கலையுள்ளம்! கடமையுள்ளம்! - ந.ச.)

### வரிவாங்கும் துறையினருக்கு அரசின் கடிதம்

பாளையக்கார பேஷ்குஷ்கள் கலெக்டரின் முந்திய வேண்டுகோளிலிருந்து, கம்பெனி அரசின் ஆணைப்பற்றிய அறியாமையாலோ அல்லது தங்களுடைய சொந்த அரச பக்தியினாலோ, நவாபு ஆட்சியின் கீழ் தற்காலிகமாகப் படை இல்லாத நேரத்தில், பாளையக்காரர்கள் தங்கள் பழக்கமான கலகச் செயல்களில் ஈடுபடாது தடுக்கவில்லை என்று அறிந்து நாங்கள் கவலைப்படுகின்றோம். கட்ட பொம்ம நாயக்கனின் கடந்த விசாரணையில் நாம் காட்டிய பொறுமை, கோபத் தணிவு, நீதிமுறை ஆகியவை பொதுவாகப் பாளையக்காரர்களுக்கும் சிறப்பாகக் கட்டபொம்மனுக்கும் பிரிட்டிஷ் ஆட்சி பற்றிய நல்லெண்ணத்தையும் அவர்களிடம் பக்குவமாய் நடந்து கொள்ள வேண்டிய தன்மையையும் உண்டாக்கியிருக்கும் என்று நம்புகிறோம். ஆனால் ஆயுதந் தாங்கிய படை வீரரின்றி கலெக்டரைச் சந்திக்க இணங்காதது, அவனுடைய கிஸ்திப் பணத்தைக் கட்டுவதில் காலங்கடத்துவது, சிவகிரி பாளையக்காரருக்கு எதிராகப் போர் செய்தது ஆகிய செயல்கள் மேலும் நன்மை பயக்கக் கூடிய வழிகளை எல்லாம் போக்கி அவர்களைச் சரிகட்டுவதில் இருந்த நம்பிக்கையையும் இழக்கும்படிச் செய்துவிட்டது. எனவே தெற்கு மாகாணங்களுக்குப் போதுமான வீரர்கள் உள்ள படை ஒன்றைக் கூட்டி, கம்பெனி அரசாங்க அதிகாரி ஆட்சியை உறுதி செய்ய வேண்டுமெனவும், இவற்றிற்கு மாறாக வலிந்து செய்யப்படும் செயல்களுக்காக அவர்களைத் தண்டிக்கும்படி அறிவித்தல் நலமென்றும் தீர்மானித்துள்ளோம். இப்படையின் தலைமை ஆணை உரிமையை ஜான் பானர்மனுக்கு கொடுப்பின் பயனுடையதாயிருக்குமென எண்ணியுள்ளோம். எங்களது இவ்வெண்ணங்களைக் கலெக்டர் நன்றாகப் புரிந்து கொண்டு பாராட்டுவதற்காக அந்த அதிகாரிக்கு எங்கள் ஆணைக் குறிப்பு விவரங்களடங்கிய ஒரு படிவத்தை அனுப்பியுள்ளோம்.

இந்தக் குறிப்புகளைக் கலெக்டருக்குத் தெரிவிக்கும்போது மேஜர் பானர்மனிடமிருந்து இப்போதைய படையைப் பெருக்குவதற்காகத் தானே வரும் விண்ணப்பங்கள் எதுவாயினும் விரும்புகிறோம். இப்படையெடுப்பின் வெற்றிக்கு அது இன்றியமையாததென்று எதிர்பார்க்கப்படுவதால், அந்த அதிகாரிகளின் ஏற்பாடுகளையும் ஆணைகளையும் உடனுக்குடன் மிகக் கவனத்துடன் செய்து முடிக்க வேண்டும். ஆதலால்



இந்தத் தேவையைப் பற்றிய லூஷிங்டனின் சிந்தனைகளும் பொதுநலத் தொண்டுகளில் அவருக்குள்ள ஆர்வமும் மேஜர் பானர்மனுக்கு அளிக்கப்பட்டுள்ள முழு அதிகாரங்களுக்கு ஏற்ற மிகத் தேவையான உதவியைச் செய்து கொடுக்கத் தூண்டுமென்பதில் எங்கட்கு ஐயமில்லை.

அப்போதைய சென்னை ஆளுநராயிருந்த லார்டு கிளைவ் - புகழ் பெற்ற லார்டு கிளைவின் மகன் - இக்கடிதத்தில் கையெழுத்திட்டிருந்தார்.

### கலெக்டரின் அறிக்கை

பாளையக்காரர்கள், நில உடைமையாளர்கள், பொதுவாக திருநெல்வேலி பாளையங்கள் என்று அழைக்கப்படும் நாடுகளிலுள்ள பொது மக்கள் ஆகிய யாவருக்கும் அறிவிப்பது:

'காலஞ்சென்ற திப்புசுல்தானுக்கு எதிராக நடைபெற்ற கலகங்களில் திருநெல்வேலி பாளையக்காரர் பலருக்குப் பல முறை எச்சரிக்கை விடுத்துள்ளோம். வரிசெலுத்தத் தாமதித்தாலும், வேறு எந்த வகையில் கீழ்படியாமலிருந்தாலும் அவர்கள் வலுவில் அரசாங்கத்தின் கடும் வெறுப்புக்கு ஆளாவார்கள். எனினும் அத்தகைய எச்சரிக்கைகளை அறியாது முந்தய போர்களில் எதிரிகளாயிருந்த பல பாளையக்காரர்களுக்கு அளிக்கப்பட்ட தண்டனையை ஒரு பொருட்டாக எண்ணாமல், அவர்களுள் சிலர் தொடர்ந்து கீழ்படியாமல் எதிர்த்துக் கொண்டிருக்கின்றனர். (ஓ! ஓ! - ந.ச.) கொள்ளையடித்தும், நாட்டின் அமைதியைக் கெடுத்தும், அமைதியாக வாழும் மக்களை வேண்டுமென்று கொலை செய்தும் கம்பெனி ஆதிக்கத்தை எதிர்க்கிறார்கள். (பிரிட்டிஷ் பேரரசு நாட்டை ஆண்டது வேறு எப்படியோ? - ந.ச.) இப்பொழுது இந்த எச்சரிக்கைகளும் அவர்களுடைய புறக்கணிப்பும் மேன்மை தங்கிய ஆளுநர் தலைவருக்கு (கவர்னர் ஜெனரலுக்கு) அறிவிக்கப்பட்டுள்ளன. மேன்மை தங்கிய அவர், கம்பெனி அரசாங்கத்தின் ஆணையோ அல்லது அவர்களுடைய சொந்த அரச பக்தியோ, தற்காலிகமாகப் படையில்லாதபோதும் பாளையக்காரர்கள் மீண்டும் அடங்காத்தன்மை பொருந்திய வழக்கங்களில் ஈடுபடுவதில் அவர்களைத் தடுக்கவில்லை என்பதை அக்கறையுடன் கவனித்து வந்துள்ளார்.

ஆளுநர் தலைவர் (கவர்னர் ஜெனரல்) கட்டபொம்ம நாயக்கன் விசாரணையில் நாம் காட்டிய தயவு, நீதி, சகிப்புத் தன்மை இவை பொதுவாகப் பாளையக்காரர்களை சிறப்பாய் (?!) கட்டபொம்மனை பிரிட்டிஷ் அதிகார இனத்திடம் பணிவோடும் பக்குவத்தோடும் நடந்துக் கொள்ளத்

தூண்டியுள்ளது என்பதைப் புரிந்து கொண்டுள்ளார். ஆனால் படைபலமின்றி கலெக்டரைச் சந்திக்க மறுத்தது, வரி பாக்கியைச் செலுத்தக் காலம் தாழ்த்துவது, மற்ற எதிரிகளுடன் சேர்ந்து கொண்டு சிவகிரி பாளையக்காரருடன் போர்புரிந்தது ஆகியவை அவனுடனோ பாளையக்காரர்களுடனோ இனி அமைதியான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்ற எங்கள் நம்பிக்கையை அறவே ஒழித்துவிட்டது. (அது சரி! - ந.ச.) எனவே, அவர் தெற்கு மாகாணங்களில் கம்பெனி அதிகாரத்தின் பலத்தைக் காக்கவும் அவர்களுக்கு எதிராகப் பலவந்தமாய்க் கலகம் செய்பவரை அடக்கவும் போதுமான வீரர்களடங்கிய படை ஒன்றைத் தயாரித்து வைப்பது நல்லதெனத் தீர்மானித்தார். அப்படையின் பொறுப்பு மேஜர் ஜான் பானர்மனுக்கு அளிக்கப்பட்டது. அவனுடைய அதிகாரத்தைப் பலப்படுத்த இராணுவ அதிகாரத்தையும் அவனுக்கு அளிக்க மேன்மை தங்கிய ஆளுநர் தலைவர் (கவர்னர் ஜெனரல்) எண்ணியுள்ளார்.

'கொலைத் தண்டனை அளிக்கும் அதிகாரத்தைக் கண்டிப்பாகப் பயன்படுத்தப் போவதால் எல்லோரும் அடங்காமை, கலகம் ஆகிய செயல்களில் ஈடுபடாதிருக்குமாறு விதிப்படி எச்சரிக்கப்படுகிறார்கள்.'

'இவ்வறிக்கை வெளியானதற்குப் பிறகு கம்பெனி அதிகாரத்திற்கு எதிராக எவ்வழியில் எச்செயலைச் செய்தாலும் அவரவர்கள் பாளையங்களைச் சேர்ந்த மக்களின் நன்நடத்தைக்கு அந்தந்த பாளையக்காரரே பொறுப்பாளியாவார்கள்' என்று இதனால் அறிவிக்கப்படுகிறது.'

'திருநெல்வேலி பாளையங்களிலுள்ள எல்லாப் பாளையக்காரர்களுக்கும், நிலச் சொந்தக்காரர்களுக்கும், பொது மக்களுக்கும் மேலும் தெரிவிப்பதாவது: மேஜர் பானர்மன் தேவை என்று தீர்மானிக்கும் எந்த எண்ணத்தையும் தெரிவிக்கவும், அதைச் செயல்படுத்துவதற்காகக் கட்டளைகளைப் பிறப்பிப்பதற்கும் அவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. (அம்மாடி! - ந.ச.) அந்தக் கட்டளைகளுக்குத் தாமதமின்றி பணிதல் வேண்டும். ஏற்கனவே கலகக்காரர்கள் என்று கண்டுபிடிக்கப்பட்ட பாளையக்காரர்களையும், இனி கலகங்களில் ஈடுபடுவார்களென எதிர்பார்க்கப்படுகின்ற பாளையக்காரர்களையும் பற்றி கலகக்காரர்கள் கீழ்படிந்து ஒழுங்காயிருக்கின்றனர்' என்று பானர்மன் கலெக்டருக்குத் தெரிவிக்கும் வரை, கலெக்டர் அத்தகையோருடன் எவ்விதத் தொடர்பும் கொள்ள மறுத்து விடுவார்.'

மேஜர் பானர்மன் செப்டம்பர் 5 ஆம் தேதி பாஞ்சலாங்குறிச்சியை அடைந்தான். அவனுடைய படையைச் சேர்ந்த ஐரோப்பியப் படைப் பகுதி வருவதற்குக் காத்திராது அன்றே பெருந்தாக்குதல் நடத்திக்



கோட்டையைக் கைப்பற்ற முற்பட்டான். பாளையக்காரன் இரவோடிரவாக நாட்டை விட்டுத் தப்பி, சிவகிரிக்குப் போய்விடலாமென்ற அச்சமே ஐரோப்பியப் படைப்பகுதி வருகைக்காகக் காத்திராததற்கு பானர்மன் தரும் காரணமாகும். இது ஆதாரமற்றது. 1783 இல் கர்னல் புல்லார்ட்டன் இந்தப் பாளையக்காரனுடைய தந்தையின் கோட்டையைத் திடீரெனத் தாக்கிக் கைப்பற்றிய போதும் இவ்வாறே நடந்தது. படையெடுப்பு வெற்றி பெறவில்லை. மேஜர் பானர்மனுடைய சொற்களில் அக்குறிப்பை நான் கீழே தருகிறேன்.

**அரசாங்கச் செயலருக்கு:**

நேற்று தேதியிட்ட கடிதத்தில் குறிப்பிட்டதுபோல் நான் பாளையங்கோட்டையிலிருந்து புறப்பட்டு இன்று காலை பாஞ்சாலங்குறிச்சி வந்து சேர்ந்தேன். இங்குக் கோயில்பட்டி, கயத்தாறு முதலிய இடங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த படைகள் என்னுடன் வந்து சேர்ந்து கொண்டன. ஐரோப்பியர் படையும், இரண்டு 12 பவுண்டு பீரங்கிப்படைகளும் போதுமான அளவு முன்னேறாததால் கயத்தாற்றிற்குச் செல்லக் கட்டளையிடப்பட்டது. படைகளின் திடீர் வருகை அங்கு எதிர்பார்க்கப்படவில்லை. ஒரு நிமிடம் கூடத் தாமதம் செய்யாது மிக்க ஆய்வோடு டல்லஸ் குதிரைப் படையுடன் கோட்டையைச் சூழ்ந்து கொண்டான். அவனைச் சார்ந்த மற்றவர்களும் தங்களாலியன்றவரை காலாட்படையுடன் உதவினர். இதற்குள் போதுமான எண்ணிக்கையுள்ள பாளையக்காரர்களின் பணியாட்களாகிய படை ஒன்று கோட்டையைச் சுற்றியிருந்த படைக்குள் நுழைய முயன்றது. ஆனால் லெப்டினன்ட் டல்லசால் அப்படை எதிர்க்கப்பட்டு இழப்போடு திரும்பி ஓடியது. பாளையக்காரனை நன்றாக எண்ணச் சொல்லி, வாய்ப்புப் போல் அவன் கம்பெனியிடம் அடைக்கலம் புக ஆணையிட்டேன். நான் எழுத்து மூலமாகக் கவல் (நில உடன்படிக்கை - Cowl) அளிப்பதாயிருந்தால் அவன் என்னிடம் வருவதாகவும், இன்றேல் வரமுடியாது எனவும் தெரிவித்தான். அவனைப் பணியவைக்க எல்லா முயற்சிகளையும் சலிப்பின்றிச் செய்தேன். எனினும் 9.30 மணிக்கு அவன் சிந்தித்துத் தான் செயல்பட வேண்டிய வழியைத் தீர்மானிக்க மேலும் அரைமணி நேரம் கால வாய்ப்புக் கொடுத்தேன்.

கருத்துடனும், வெளிப்படையாகவும் கோட்டையைச் சுற்றிப் படையுதவியுடன் பகைவரின் மறைவிடத்தைத் தேடிச் சென்ற போது, தெற்கு வாசற்படியும் அதற்கு இடது பக்கமும் முற்றுகையிட்டு எளிதில் அதை உறுதியாகக் கைப்பற்றத் தக்க நிலையிலுள்ளது என்றும் ஆனால் அம்முயற்சியில் நமக்குச் சிறிது இழப்பும் ஏற்படுமென்றும் எனக்குத் தோன்றியது. ஆனால் இந்த எண்ணத்துடன் அச்செயலில் நான் இறங்க

வில்லை. முடிவாக இந்த நடவடிக்கையில் ஒரு தீர்மானத்திற்கு வந்தேன். பாளையக்காரனைக் கைது செய்ய வேண்டுமென்ற தேவை இருந்தது. இரவில் கோட்டையைக் காப்பதும், பாளையக்காரனைத் தப்பிவிடாமல் காப்பதும் ஒரே சமயத்தில் இயலாது. ஏனெனில் அவன் தப்பிக்க முயற்சிப்பான் என்பது என் நம்பிக்கை. (தவிர்க்க முடியாத நிலையில் அது தவறில்லையே! - ந.ச.) பிறகு என்னுடன் தளபதிகள் ஓ'ராலி (O'Reilly), புரூசு (Bruce) முற்றுகையிடும் துருப்புகளை நடத்தும் அனுபவம் மிகுந்த அதிகாரிகள் அனைவரையும் அழைத்துச் சென்று அவர்களுக்கு என் கட்டளைகளைத் தெரிவித்தேன். அந்தத் தாக்குதலில் உண்டாகும் வெற்றியைப் பற்றிய அவர்கள் எண்ணம் என்னுடைய எண்ணத்துடன் ஒத்திருந்தது.

பத்து மணிக்கு நான் ஒழுங்கான கவுல் (நில உடன்படிக்கை) அனுப்பி வைத்தால் நான்கு மணி நேரத்திற்குள் பாளையக்காரன் என்னை வந்து சந்திப்பதாகச் செய்தி அனுப்பினான். அப்பொழுது படைகள் முற்றுகைக்காக நிறுத்தப்பட்டிருந்தன. முதல் பெரும் படையில் 3-வது படை அணிவகுப்பிலுள்ள பக்கப்படை வகுப்பும், உள்நாட்டுக் காலாட் படையின் 13வது படை அணி வகுப்பின் 4-வது பக்கப் படை வகுப்புகளும் தென்புறவாயிலைத் தகர்க்க 6 பவுண்டு பீரங்கியுடன் தயாரா யிருந்தன. இந்தக் குழு 3 பீரங்கிகளாலும் முதல் பெரும் படையின் 13வது படை அணிவகுப்பின் படை வகுப்புகளாலும் சூழப்பட்டிருந்தன. அதே நேரத்தில் லெப்டினன்ட் டல்லசின் தலைமையில் அனுப்பப்பட்ட இரண்டு சாரி சிப்பாய்களால் கோட்டையின் வடபகுதி தாக்கப்பட்டது. அப்படை முதலிலேயே ஒழுங்காகவும் உறுதியுடனும் முன்னேறித் தாக்கின. என்றாலும் ஒரே குழப்பம் காரணமாகக் கோட்டையில் ஏற்பட்ட பிளவை நோக்கி ஏறிச் செல்லவோ அல்லது 6 பவுண்டு பீரங்கியால் முழுதும் தகர்க்கப்பட்ட வாயிற்படி வழியாய் உள்ளே நுழைவதற்கோ இயலவில்லை. வெற்றியின் சாயல் ஏற்பட்டதால் அம்முயற்சி தொடர்ந்து செய்யப்பட்டது. ஆனால் தீவினை மிக்க அந்தச் சூழ்நிலையில் அதிகாரிகளைவிட ஐரோப்பியர்களே தங்கள் வீரத்தைச் சிறப்பாகக் காட்டினர். நான் அனுப்பும் அறிக்கையிலிருந்து நம்முடைய இழப்பைப் பற்றித் தாங்களே அறிந்து கொள்வீர்கள். ஆனால் என்மேல் அக்குற்றத்தைச் சாட்டிக் கொள்ள என் மனம் இசையவில்லை. எப்படியாயினும் தங்களிடமிருந்து என் நடவடிக்கைகள் பற்றிச் சாதகமான முடிவுகள் வரும் வரை நான் பெருத்த தடுமாற்றத்தை அனுபவிப்பதை என்னால் தவிர்க்க இயலாது, காலாட்படையில் 19 ஆம் படைப்பகுப்பையும் 12 பவுண்டு பீரங்கிகள் இரண்டையும் என்னோடு வந்து சேர்ந்து கொள்ளும்படி ஆணை பிறப்பித்துள்ளேன். 24 பவுண்டு பீரங்கிக்காக பாளையங் கோட்டைக்கு அனுப்பியுள்ளேன். எனக்கு இது பற்றிச் சிறிதளவேனும் ஐயமில்லை. எனினும் கோட்டையில் வெடிப்பை உண்டாக்க பீரங்கிகளுக்காகக் காத்திராது, ஐரோப்பியர்கள் வந்தவுடன் அந்த இடத்தைக் கைப்பற்ற இயலும். ஆனால் இனி ஏற்பட இருக்கும் எந்த எதிர்ப்பின் முடிவும் மிகக் கடுமையானதாயிருக்கும். (ஓ! ஓ! - ந.ச.) எனவே, நான் மிகக் கவனத்துடன் முன்னேற வேண்டும். அச்செயல் முடிந்த அக்கணத்திலேயே படைத்தலைமைத் தளபதியிடம் சுதேசி அதிகாரிகள், படைகள் முதலியவர்களின் நடவடிக்கைகள் தொடர்பான என் கருத்துக்களைக் கூறுவேன். நான்கு ஐரோப்பிய அதிகாரிகள் இறந்ததற்கு ஈடாக ஒரு சுதேசி அதிகாரி காயமடைந்தார் என்ற சூழ்நிலையை நோக்க இந்த இரண்டு சுதேசி அதிகாரிகளுக்கு இன்னும் எவ்வளவு வலிமை தேவை என்பதைப் போதுமான அளவு இந்நிகழ்ச்சி குறிக்கிறது. (! - ந.ச.)



கோட்டைத் தாக்குதல் திரும்பவும் ஆரம்பிக்கும்வரை பாளையக்காரர் காத்துக் கொண்டிருக்கவில்லை. இரண்டு நாட்களுக்குப் பிறகு மாலை நேரத்தின் பிற்பகுதியில் ஐரோப்பியப் படைப்பகுதியினர் வந்து சேர்ந்தனர். அதே நாளில் மற்றொரு தாக்குதலுக்கு மேஜர் பானர்மன் தயார் செய்து கொண்டிருந்தான். எனினும் இரவில் பாளையக்காரரும் அவரது எல்லா ஆட்களும் கோட்டையைக் காலி செய்து விட்டு மறைந்து விட்டனர். உடனே எட்டயபுரப் பாளையக்காரன் அவர்களைத் தேடிப் பின்தொடர்ந்தான். கோலார்ப்பட்டியில் கட்டபொம்மனைச் சந்தித்தான். அங்கு தொடர்ந்த கலவரத்தில் இருதிறத்தாருக்கும் இழப்பு நேர்ந்தது. அங்கிருந்து கட்டபொம்மன் தப்பித்து முதலில் சிவகங்கைக்கும் பின் தொண்டைமான் ராஜாவிடமும் அடைக்கலமாகப் புகுந்தான். அவனுடைய முக்கியமான ஆட்களில் 34 பேர்கள் கொல்லார்ப்பட்டிக்கு அருகில் பிடிபட்டனர். அவர்களுள் முக்கியமானவன் தலைமை காரியஸ்தன் சுப்பிரமணியப்பிள்ளை. அவன் உடனே நாகலாபுரத்திற்குச் சென்று கொண்டிருந்த பானர்மனிடம் அழைத்துச் செல்லப்பட்டான். அங்கு அவனைத் தூக்கிலிட்டுத் தலையைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பி வைத்தனர். (முதல் தூக்கு! - ந.ச.) அதே சமயத்தில் நாகலாபுரப் பாளையக்காரன் இராமநாதபுரத்தில் நடத்திய கொள்ளை கொலைகளில் தலைமை வகித்த அவனுடைய உடன்பிறந்தானாகிய சௌந்திரபாண்டியனும் கோபாலபுரத்தில் தூக்கிலிடப்பட்டான். கட்டபொம்ம நாயக்கனே விரைவில் தொண்டைமான் ராஜாவினால் கைது செய்யப்பட்டு, அவனது உறவினர் சிலருடன் மேஜர் பானர்மனிடம் அனுப்பப்பட்டான் (தொண்டைமான் செய்ததைக் கால்டுவெல்லே கூறுகிறார் - ந.ச.) அங்கு பானர்மனே அவனை விசாரணை செய்து அக்டோபர் மாதம் 16 ஆம் தேதி கயத்தாற்றிலுள்ள பழைய கோட்டைக்கு அருகிலிருந்த திடலில் மற்ற திருநெல்

வேலிப் பாளையக்காரர் முன்னிலையில் தூக்கிலிடும்படி கட்டளை யிட்டான். அப்பாளையக்காரர்கள் வியப்புடனும், மௌன வேதனை யுடனும் வேண்டா வெறுப்பாக அக்காட்சியைக் கண்டனர். (ஐயோ! - இந்த அளவேனும் கால்டுவெல் வாயிலாகவே உண்மை விளங்குகிற தே!-ந.ச.) இந்த நிகழ்ச்சிகளின் விவரங்களைப் பானர்மனுடைய வார்த்தைகளிலேயே கூறுகிறேன்.

**அரசுச் செயலருக்கு மேஜர் பானர்மன் எழுதியது**

'மேன்மை தங்கிய கவர்னர் ஜெனரல் சமூகத்திற்குத் தெரிவித்துக் கொள்வது: தங்களுடைய 19வது படை அணி வகுப்பும், 12 பவுண்டு பீரங்கியும் நேற்று மாலை இந்த இடத்திற்குச் சுமார் 6 மணி அளவில் வந்து சேர்ந்தன. அந்த நேரம் காலங்கடந்த பொழுதாயிருந்தது. அன்றியும் அனைவரும் மிகவும் களைத்திருந்தமையால் கோட்டையை மறுபடியும் தாக்க உடனடியாக எந்த முயற்சியும் எடுக்க முடியவில்லை. இரவில் பாளையக்காரனும் அவனுடைய ஆட்களும் கோட்டையை விட்டு ஓடிவிட்டனர். அது ஓரளவு எனக்கு மனநிறைவைத் தந்தது. தாக்கப்பட்ட இடத்தை ஒரு மணித்துளி சோதனை செய்ததிலேயே மிகத் தகுதி வாய்ந்த இடங்களையே தேர்ந்தெடுத்திருப்பதாகத் தோன்றிய அச் செய்தி சிறியதாயிருந்தாலும் அதைத் தங்கள் சமூகத்திற்குத் தெரி வித்துக் கொள்ள விரும்புகிறேன். உள்நாட்டுப் படைகள் மட்டும், நான் அடிக்கடி கண் கூடாகக் கண்டிருந்த மற்ற நெருக்கடி குறைந்த நேரங் களில் போரிட்டுக் காட்டிய அளவு திறமையுடனும் உற்சாகத்துடனும் போரிட்டிருந்தால் என்னுடைய சொந்த எண்ணத்தின் எதிரொலியை உணர்ந்து செயல்பட்டிருந்தால் சில நிமிடங்களில் அந்த இடம் முழு வதும் நம்முடையதாகியிருக்கும். (அப்படியானால் கூலிப்பட்டாளத்தின் மனச்சான்று அதைக் குடைந்து உடைத்ததோ? - ந.ச.)

**பாளையக்காரன் தப்பியதற்குப்பின் தொடர்ந்த நிகழ்ச்சிகள்**

கீழ்க்காணும் கடிதங்கள் கட்டபொம்மனையும் அவனுடைய முக்கிய ஆட்களையும் தொடர்ந்து சென்று கைது செய்த நிகழ்ச்சிகளை விளக்கு கிறது.

6 ஆம் தேதியன்று என் கடிதத்தை அனுப்பியவுடனே நம்பகமான இடத்திலிருந்து கட்டபொம்ம நாயக்கன் சென்றிருக்கக் கூடிய இடங் களைப் பற்றிச் செய்தி அறிந்தவுடனேயே, கால நீட்டிப்பு செய்யாது, பல பாளையக்காரர்களுக்கு, எனக்குத் தெரிந்தவரை முக்கியமாக அவனுடைய எதிரிகளான பாளையக்காரருக்கு (அது சரி! - ந.ச.) அவர் களுடைய அதிகார வலிமையெல்லாம் பயன்படுத்திக் கட்டபொம்மனைப் பிடிக்க வேண்டுமெனக் கடிதங்கள் எழுதினேன். பாளையக்காரர்களுக்கு அனுப்பப்பட வேண்டிய கடிதங்கள் தயாரானதும் படையை வடதிசை நோக்கி முன்னேறச் செய்தேன். காயமடைந்தவர்களைப் பாஞ்சாலங் குறிச்சியிலேயே விட்டுவிட்டு அவர்களுக்கான எல்லா நலன்களையும் செய்து கொடுத்து அவர்களைக் காப்பதற்குப் போதுமான வீரரையும் விட்டு வந்தேன்.



நான் படையுடன் முன்னேறிச் செல்லும்போது இடது சாரியில் இரு குதிரைப்படை அணிகளை லெப்டினன்ட் மல்லஸ் தலைமையிலும், காப்டன் ஒ'ராலியின் தலைமையில், 400 வெடிமருந்து எறியும் வீரர் களையும் ஒதுக்கினேன். அவர்கள் செயலாற்றத் தயாராய்க் காத்திருப்பர். நான் சூழ்நிலைகளை எதிர்நோக்கியிருக்க வேண்டியிருப்பதால் நான் செல்லும் வழிக்கு மேற்காக அவர்கள் சென்று பாளையக்காரர்களுடன் ஒத்துழைக்கும்படி கூறினேன். பிறகு நான் படையின் சிறந்த பகுதியுடன் முன்னேறிச் சென்றேன். நான் சிறிது தூரம் முன்னேறிச் செல்வதற்கு முன்பே எட்டயபுரப் பாளையக்காரனிடமிருந்து பதில் கிடைத்தது. அதில், அவன் என் மூலமாகப் பெற்ற அரசாங்க ஆணையைச் செயல் படுத்துவதாக உறுதி கூறியிருந்தான். அதற்காகத் தனக்கு எந்தவிதமான செலவும் இல்லை என்றும் தெரிவித்திருந்தான். அவனுடைய ஆட்கள் அடங்கிய ஒரு கூட்டத்துடன் உடனே அவனே நேரில் கட்டபொம்மனைத் தேடிச் செல்வதாகவும் சில சிப்பாய்களை அனுப்பிவைத்தால் உதவியாக இருக்குமென்றும், அச் சிப்பாய்களையும் காலதாமதமின்றி உடனடி யாகத் தன்னோடு அனுப்பிவைக்க வேண்டுமெனவும் வேண்டிக் கொண்டிருந்தான். (எட்டயபுரத்தான் செலவுக்குப் பணம் கேட்க வில்லை; சிப்பாய்கள் கேட்டான் - என்ன திறமை! - ந.ச.)

அதன்படி லெப்டினன்ட் டல்லசுக்கு ஆணைகள் அனுப்பப் பட்டன. எட்டயபுரத்தான் செல்லும் வழியில் அப்படையை நடத்திச் செல்ல ஒரு வழி காட்டியும் அனுப்பப்பட்டான். அந்தக் குதிரைப் படைக்கு உதவியாய் காப்டன் ஒ' ராலியை வெகுவிரைவில் செல்லும் படி ஆணை பிறப்பிக்கப்பட்டது. எட்டயபுரத்து ஆட்களோடு குதிரைப்படை வந்து சேர்வதற்கு முன்பே அவர்கள் கொல்லார்ப்பட்டிக் கோட்டையில் கட்டபொம்மனைச் சந்தித்தனர். அவர்களிடையே சிறு சச்சரவு நடந்தது. அவற்றில் இருதிறத்தினருக்கும் குறிப்பிடத்தக்க இழப்புகள் நேர்ந்தன. எப்படியோ கட்டபொம்ம நாயக்கனுடைய ஆட்கள் சிதறடிக்கப்பட்டனர். கட்டபொம்மன் ஆறு பேர்களுடன் மட்டும் குதிரை மேலேறித் தப்பி விட்டான். அவனைச் சார்ந்திருந்த முக்கிய ஆட்கள் பிடிபட்டனர். அவர் களுள் முக்கியமானவர்கள் தலைமைக் காரியதரிசி சுப்பிரமணியப்

பிள்ளையும், அவனுடைய உடன் பிறந்தாருமாவார்கள். இந்த இரண்டு பேர்களைப் பிடித்ததில் சிறப்பாக சுப்பிரமணியப் பிள்ளையைப் பிடித்தது - என் எதிர்காலத் திட்டங்களின் வெற்றி, அதனால் ஏற்படும் ஆட்சி மாற்றம், அதன் பயனாய் நாட்டில் நிலவப்போகும் அமைதி இவற்றிற்கு முக்கிய வழிகோலிற்று என நான் உணர்ந்தேன். கட்டபொம்ம நாயக்கனையே நான் கைது செய்திருப்பினும் இத்தகைய பயன் கிட்டியிராது. ஏனெனில் அவர்கள் திறமை மிக்கவர்கள், சதித் திட்டங்களுக்கு வழி வகுப்பவர்கள். சுப்பிரமணியப் பிள்ளைக்கு ஏராளமான சொத்து உண்டு. எனவே அரசாங்கத்தின் அதிகாரத்தை எதிர்க்க அப்பணத்தைச் செலவிடத் தயாராயிருப்பாரென்று எண்ணக் காரணமிருக்கிறது. கட்டபொம்மன் ஈடுபடுகின்ற ஒவ்வொரு பொது நிகழ்ச்சியையும் முழுமையாக நடத்தும் அளவுக்கு கட்டபொம்மனிடம் அவனுக்கு செல்வாக்கு உண்டு என்பதில் ஐயமில்லை. கட்டபொம்மன் அவனுடைய உடன் படிக்கைக்கு மாறாகக் கம்பெனி அதிகாரத்தை எதிர்ப்பதும் சுதந்திர அதிகாரத்தைப் பயன்படுத்துவதும் இந்த சுப்பிரமணியப் பிள்ளையின் அறிவுரையின் விளைவுகளால்தான். (அடேயப்பா! இவ்வாறு உண்மையை எழுதியதற்காகவேனும் பகையாளி பானர்மென் வாழ்க! பகைவனும் அஞ்சும் பண்பு படைத்த தானாபதித் தமிழன் புகழ் வாழ்க! ந.ச.)

இந்தச் சமயத்தில் சுப்பிரமணியப்பிள்ளை கைதியாக என் கூடாரத்திற்குக் கொண்டுவரப்பட்டான். கட்டபொம்மனைப் பிடித்துத் தந்த எட்டயபுர ஆட்கள் என்னைக் காண வந்த போது அவர்களுக்கு நல்ல பரிசுகள் கொடுக்கும்படியும், சுப்பிரமணியப் பிள்ளையை நாகலாபுரத்து கிராமத்தின் ஒரு மிக வெளிப்படையான பொதுத் திடலில் தூக்கிலிட்டு, அவன் தலையைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு எடுத்துச் சென்று அங்கு ஈட்டி முனையில் குத்தி, நட்டுவைக்கும்படியும் கட்டளையிட்டேன். (என்ன கொடுமை! - ந.ச.) அவனுடைய உடன் பிறந்தாரும் மற்ற கைதிகளும் சூழ்நிலைக்கேற்றவாறு ஒழிக்கப்படுவதற்காகச் சிறையிலிடப்பட்டனர். இந்தச் செயலினால் இதுவரை கலகங்களுக்கும் கொடுமைகளுக்கும் தலைவனாய் இருந்து அரசாங்கத்திற்கு எதிராகத் தூண்டி விட்டுக் கொண்டிருந்த ஒருவனின் முடிவு எவ்வளவு கடுமையும் துன்பமுமானதும் ஆகும் என்பதை அவர்களுக்கு உணர்த்தத் தீர்மானித்தேன். இச்செயல்கள் அரசுக்கு என்மேல் தவறான எண்ணத்தைத் தூண்டியுள்ளது. எனக்குக் கொடுக்கப்பட்ட தேவையான அதிகாரத்தின் எல்லையிலிருந்து நான் மீறவில்லை என்றும் அதைச் செயலாற்றுவதிலும் நான் வரம்பு மீறவில்லை என்றும், எனக்குக் கொடுக்கப்பட்ட கட்டளைகளிலுள்ள எச்சரிக்கை, நிதானம் இவற்றை நான் மறந்துவிடவில்லை என்றும், அவைகளே என்னுடைய நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் சிறந்த வழிகாட்டியாயிருக்கு மென்பதையும் தெரிவித்துக் கொண்டு நான் என் எல்லை யை மீறியதாக எண்ண வேண்டாமென வேண்டிக் கொள்கிறேன்'' (அடேயப்பா! என்ன எச்சரிக்கை! என்ன நிதானம்! - ந.ச.)



காப்டன் ஒராலி (Captain O' Reilly), லெப்டினன்ட் டல்லஸ் (Dallas) படைகள் எட்டயபுரம் பாளையக்காரர்களுக்கு உதவியாக முன்னேறிக் கொண்டிருக்கும்போது, நான் முன்னேறிச் சென்று 9 ஆம் தேதி நாகலாபுரத்தை அடைந்தேன். நான் அங்கு போய்ச் சேர்ந்தவுடன் பாளையக்காரன் வந்து கம்பெனி அதிகாரிகளிடம் அடைக்கலம் புகுந்தான். இந்த மனிதனின் செயல்கள் மிகக் கொடுமை வாய்ந்தன. இவன் இராமநாதபுரத்தில் செய்த கொள்ளைகளும் கொலைகளும் மனிதத் தன்மையையே உலுக்கிவிட்டது. அதற்காகத் தற்போதைக்கு அவனைக் கடுங்காவலில் வைப்பதற்காக நிறுத்திவைத்துள்ளேன். இராமநாதபுரத்தில் சூரையாடிய போது அவனுடைய கொடுமையான கட்டளைகளைச் செயலாற்றிய அவனுடைய உடன்பிறந்தானையும் பிடித்து விடுவேனென்ற உறுதி எனக்கு இருக்கிறது. எட்டையபுரப் பாளையக்காரன் இன்னும் கட்டபொம்மனைத் தேடிச் சென்றுகொண்டிருக்கிறான். கட்டபொம்ம நாய்க்கனின் ஆட்கள் சிதறி ஓடியதைப் பற்றிய செய்தி அறிந்ததும் அவனுக்குத் துணையாக அனுப்பிய படைகளைத் திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டியது தேவையாயிற்று. அவர்கள் 9 ஆம் தேதி இரவு பாசறையில் என்னுடன் வந்து சேர்ந்து கொண்டனர்.

12 ஆம் தேதி மதியம் நாகலாபுரம் பாளையக்காரனின் உடன் பிறந்தானான சௌந்திர பாண்டிய நாயக்கனைப் பிடித்து நேற்று காலை வரை நாகலாபுரம் கோட்டையிலேயே சிறைவைத்திருந்தேன். அன்று பல பாளையக்காரர்களின் வழக்கறிஞர்களையும் ஒன்று கூட்டினேன். கலெக்டர் லூஷிங்டன் வாயிலாக வரிவசூல் துறை வெளியிட்ட அறிக்கைகளை அவர்களுக்கு நினைவூட்டினேன். எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின் அளவையும் அதன் தன்மையைப் பற்றியும் விளக்கினேன். அன்றியும் அண்மையில் நாட்டில் ஏற்பட்ட குழப்பங்கள் அப்போது ஏற்பட்ட கொலை, கொள்ளைகள் முதலியவை அதிக தண்டனைக்கு உரியவை எனவும், அவை ஏற்படக் காரணங்களை விசாரணை செய்ய வேண்டுமெனவும் அரசாங்கம் கட்டளையிட்டதற்கான அவசியக் காரணங்களையும் எடுத்துச் சொன்னேன். எனக்குக் கிடைத்த செய்திகளிலிருந்து, இந்தக் கலகங்களில் மிக முக்கியமாகப் பங்கேற்றுக் கொண்டு அரசின் வெறுப்பைப் பெற்ற தனியார்களுக்குக் கொலைத் தண்டனை கொடுக்க வேண்டிய துன்பமயமான சூழ்நிலை முதன்முதலாக ஏற்பட்டிருக்கிறது. மேலும் நாட்டைப் பாழாக்கி நாட்டு

மக்களை அழிக்கக் கூடிய செயல்கள் திரும்பவும் நடைபெறாதிருக்க மாவட்டத் தலைவர் (கலெக்டர்) மூலமாக அந்த ஆட்களின் தலைவர்கட்குக் கம்பெனியின் கட்டளைகளை அனுப்பி, இனி கம்பெனி கட்டளைகளுக்குக் கீழ்ப்படியும்படி செய்யத்தக்க மற்ற நடவடிக்கைகள் எடுக்க எண்ணினேன். அரசாங்கம், குற்றம் சாட்டும் கொடும் செயல்களில் ஈடுபட்டவர்களில் முக்கியமானவர்கள் கட்டபொம்ம நாயக்கனின் தலைமை நிர்வாகியான சுப்பிரமணியப் பிள்ளையும் நாகலாபுர பாளையக்காரனின் உடன் பிறந்தானான சௌந்தர பாண்டியனும்தான் என்பது என்னுடைய விசாரணையின் போது தெரிந்த முடிவுகள் என்பதையும் வழக்கறிஞர்களுக்குக் கூறினேன். (மிக நன்று! - ந.ச.) எனவே, அவர்கள் தூக்குத் தண்டனை அடைய வேண்டும் என்று நான் இறுதியாகத் தீர்மானித்துள்ளேன் என்பதையும் கூறினேன். சுப்பிரமணியப் பிள்ளையை நாகலாபுரம் கிராமத்தருகிலுள்ள திடலில் தூக்கிலிட்டு அவன் தலையை ஈட்டியில் குத்தி பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பவும், சௌந்திரபாண்டியனை இராமநாதபுரத்திலுள்ள பள்ளிமடை தாலுக்காவிலுள்ள கோபாலபுரம் கிராமத்தில் தூக்கிலிடவும் கட்டளையிட்டேன். (வீரம் பெற்ற பரிசு! - ந.ச.) அவன் தலைமை வகித்த படை ஒன்று ஈவு இரக்கமின்றி இந்தக் கிராம மக்களைத்தான் கொன்று அழித்தது. இந்த இரண்டு மனிதர்களையும் அவர்களுக்கிடப்பட்ட தண்டனையை நிறைவேற்ற அழைத்துச் சென்றபின் என்னுடைய கட்டளையின் நகல்களைப் பல வழக்கறிஞர்களுக்கும் வழங்கினேன். இக்கட்டளைகளை அவரவர் தலைவர்களுக்கு அனுப்புமாறு தெரிவித்தேன். அன்று காலையில் அக்கூட்டத்தில் நடைபெற்றவற்றைப் பற்றிய உண்மையான குறிப்புகளையும் அவர்களைத் தயாரிக்கும்படி கட்டளையிட்டேன். (எவ்வளவு இரக்கம் - ந.ச.) ஆனால் அதற்கு மாறாக கம்பெனி அரசு பழைய கலகக்காரப் பாளையக்காரர்களிடம் தாராளமாகவும் இரக்கமாகவும் நடந்து கொண்டதால் நாட்டில் எதிர்பார்க்கும் ஒழுங்கை நிலைநாட்ட இயலாததால்தான் இச்சூழ்நிலையில் இக்கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டியதாயிற்று என்பதையும் மக்களுக்கு உணர்த்த வேண்டுமெனக் கூறினேன். (ஏகாதிபத்தியம் கூட மக்களைக் கவர்வதில் ஒரு கண்ணாய் இருந்துள்ளதே!-ந.ச.) வழக்கறிஞர்களும் கலைந்தனர். இந்தச் சந்திப்பில் நடந்தவைகளைக் கொண்டு அவர்கள் மனதில் நல்ல ஒழுங்கான எண்ணங்கள் பதிந்திருக்குமென்று நம்பக் காரணங்கள் உள்ளன.

எனக்கு வாஷிங்டனிடமிருந்து வந்த கடிதத்தில் தொண்டமான் கட்டபொம்ம நாயக்கனைத் தேடிப் பிடிப்பதில் வெற்றி கண்டு விட்டதாகவும், கலகக்கார அப்பாளையக்காரனை என்ன செய்யவேண்டுமென அவர்கள் உத்தரவிட வேண்டுமெனவும் வாஷிங்டனை வேண்டியிருந்தான். (இதை விடவா தொண்டைமானின் துரோகத்திற்குச் சான்று தேவை? - ந.ச.) அரசாங்கத்திடமிருந்து எவ்விதக் கட்டளையும் வரவில்லையாயின், என் வேண்டுகோளின்படி கட்டபொம்மனைக் கைதாக்கி மதுரைக்கு அனுப்பி அங்குள்ள அதிகாரியிடம் ஒப்படைத்து விடும் படி வாஷிங்டன் தொண்டைமானுக்குத் தெரிவித்திருந்தான். மாறாக, அரசிடமிருந்து எந்தவித கட்டளையும் வராமலிருந்தால், கலகக்காரப் பாளையக்காரர்களும் அவர்களுடைய ஆட்களும் அரசாங்க அதிகாரத்துக்கு எதிராக ஆயுதமணிந்தவர்களாய்க் கலகங்களில் கலந்து கொண்டால் அவர்களுக்கு வெளிப்படையாக இராணுவ தண்டனை அளிக்க எனக்கு ஏற்கனவே அதிகாரம் வழங்கப்பட்டிருப்பதைப் பயன்படுத்தி, கட்டபொம்ம நாயக்கன் மதுரையிலிருந்து பாசறைக்கு வரும் போது என்னுடைய முதல் கட்டளைக்கு ஏற்ப எவ்வித உடன்பாடற்ற தொல்லைகளும் தராமல் அழைத்து வருவதற்காக இந்தப் படையிலிருந்து ஒரு பகுதியை நான் அனுப்புவேன்.



5 ஆம் தேதி காலை கலகக்காரக் கட்டபொம்ம பாளையக்காரனை வரவேற்று அழைத்து வரும்படி நான் மதுரைக்கு அனுப்பிய படை கைதியுடன் (சுதேசி மன்னன் பரதேசிக்குக் கைதி! ஏன் வ.உ.சி.க்கும், பாரதிக்கும், ம.பொ.சி.க்கும் கண்கள் சிவக்காது? - ந.ச.) வந்து சேர்ந்தது. அவர்களுடன் ஊமைத் தம்பி குமாரசுவாமி நாயக்கன் உள்பட ஆறு நெருங்கிய உறவினர்கள் கைதாக்கிக் கொண்டுவரப்பட்டனர். கட்டபொம்ம நாயக்கனைப் பற்றிய அரசு கட்டளைகளை வெளிப்படையாகவும், சூழ்நிலைக் கேற்றவாறு மிகக் கண்ணியத்துடனும் பெருமிதத்துடனும் செய்து முடிக்கும் வகைகளைப் பற்றிச் சிந்திக்க, வந்து பார்க்கும்படி கூறினேன். அவர்கள் ஒன்று கூடியவுடன் கீழ்ப்படியாத கட்டபொம்ம நாயக்கனுக்கு அவனுடைய பல தீய செயல்களுக்காக அளிக்கப்பட்டிருக்கும் அச்ச மூட்டும் தண்டனைகளைப் படிக்கும்போது மற்ற பாளையக்காரர்களும் அங்கு வந்து கூடியிருக்கும்படி கேட்டுக் கொண்டேன். இக்கொடுமைகளுக்கெல்லாம் மேலாக, என் கட்டளையின்படி அவனை அடக்கி அவனது கடமையை உணர்த்துவதற்காக அனுப்பப்பட்ட கம்பெனிப் பட்டாளத்தைத் துணிவாக எதிர்த்துக் கலகம் செய்ததையும் அவர்கள் அறிவார்கள்.

பிறகு, கட்டபொம்ம நாயக்கனை அக்கூட்டத்திற்கு அழைத்து வரும்படிப் பணித்தேன். அவனை விசாரித்து அவன் குற்றத்திற்காக மன்னிப்பு கேட்கும்படிச் செய்தேன். அவற்றை விவரமாக 'ஏ' என்று குறிப்பிட்ட காகிதத்தில் எழுதி நான் கையெழுத்திட்டுள்ளேன். அப்

பொழுது அங்கு இருந்த மேஜர் இராபர்ட் டர்னிங் (Major Robert Turning), தமிழ் மொழி பெயர்ப்பாளர் ஜியார்ஜ் ஹக்க (George Hughes) இருவரையும் அந்தச் சூழலில் எனக்கு உதவியளிக்குமாறு கேட்டுக் கொண்டேன்.

இந்தக் காகிதங்களிலிருந்து தாங்கள், கலகக்காரக் கட்டபொம்ம நாயக்கன் பணிந்தான் அல்லது கிஸ்தியைக் கட்டாமலிருந்ததை மறுக்க வில்லை என்பதை அறிவீர்கள். ஆயுதமணிந்த படைவீரரைத் தன்னுடன் அனுமதித்தாலொழிய கலெக்டர் லூஷிங்டன் கட்டளைப்படி அவரைப் பார்க்க மறுத்துவிட்டான். (அடி! ஆத்தே! புலி பூனையாகுமா? கடுகு சிறுத் தாலும் காரம் போகுமா? - ந.ச.) செப்டம்பர் 4 ஆம் தேதி அரசிடமிருந்து அவனைப் பற்றி வந்த ஆணைகளை விளக்குவதற்காக என்னைப் பார்க்கும்படி கட்டளையிட்டேன். ஆனால் அவன் தான் நலமாக இல்லை என்று சாக்குச் சொல்லிக் கீழ்ப்படிய மறுத்துவிட்டான். மேலே குறிப் பிட்ட காகிதங்களிலிருந்து, அவன் தானே வருந்தி ஒப்புக் கொண்ட தன்றி, அவனது சாட்சிகள் கீழ்க்காண்பனவற்றைத் தெளிவாக நிலை நாட்டியது தெரிகிறது. கம்பெனி அதிகாரத்திடம் கோபம் கொண்ட கட்டபொம்ம நாயக்கன் கடந்த ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் அவனை வெளிப்படையாய் எதிர்த்த அந்தப் பாளையக்காரனுக்கு எதிராகச் சிவகிரி பாளையக்காரனுடைய மகன் மாப்பிள்ளை வன்னியன் இரு வருடனும் சேர்ந்து கொள்வதற்காக அவனுடைய உறவினர்களில் ஒரு வனுடைய தலைமையின் கீழ் 700 முதல் 1000 வரை ஆயுதம் தாங்கிய வேலைக்காரர்களை அனுப்பி வைத்தான். கடந்த செப்டம்பர் திங்கள் 5 ஆம் தேதி அவன் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலிருந்த போது அங் கிருந்து சிறிது தூரத்தில் என்னை வந்து பார்க்கும்படி அனுப்பிய கட்டளைக்குக் கீழ்ப் படிய மறுத்துவிட்டான். ஆனால் அவன் அன்று அவனுடைய கோட்டையில்தான் இருந்தான். அரச ஆணைக்குக் கீழ்ப் படியும்படி கட்டாயப்படுத்தும்படி ஏவப்பட்ட கம்பெனி துருப்புகளில் பலரைச் சுட்டுக் கொலை செய்தான். (பின்னே! - ந.ச.) 'ஏ' காகி தங்களில் விவரமாய்க் குறிப்பிட்டபடி நடந்த பின்னர் கம்பெனி அதிகாரி களைக் காயப்படுத்தியதற்காக அவன் சாத்தண்டனை அடைய வேண்டு மென்று அரசாங்கம் மிக அஞ்சத்தக்க தீர்மானம் செய்திருப்பதைக் கட்ட பொம்மனுக்கு அறிவிப்பதற்காக நான் அந்தப் பாளையக்காரனிடம் சென் றேன். அதன் பிறகு அவன் தண்டனையை நிறைவேற்ற அழைத்துச் செல்லப்பட்டான். கயத்தாறிலுள்ள பழைய கோட்டைக்கு அருகே உள்ள திறந்த வெளித் திடலில் தூக்கிலிடப்பட்டான்.

கட்டபொம்ம நாயக்கனைத் தூக்குமேடைக்கு அழைத்துச் சென் றபோது அந்த நிகழ்ச்சியை வாய்மூடி அச்சத்துடனும் வியப்புடனும் காணக் கூடியிருந்த மற்ற பாளையக்காரர்களிடம் கீழ்க்காணுமாறு பேசி னேன். 'கட்டபொம்ம நாயக்கன் திரும்பத் திரும்ப (உம்!-ந.ச.) கம்பெனி அதிகாரிகளிடம் கோபம் கொண்டு அவர்கட்கு எதிராக நடந்து கொண் டான். அண்மையில் நடந்த நிகழ்ச்சிகளிலிருந்தும் அதற்காக எடுக்கப் பட்ட நடவடிக்கைகளையும் கண்டீர்கள். அவைகளினின்றும் நீங்களும் அல்லது உங்கள் வழியினரும் வாழ்க்கை நிலைகளினாலோ அல்லது வாழ்க்கை வாய்ப்புகளாலோ கம்பெனியின் கட்டளைகளுக்கு எதிராக வேலை செய்வது அல்லது என்றும் மரியாதைக்குரியவராகக் கருத வேண்டிய அரசாங்க அதிகாரிகளிடம் (ஓ! அவர்கள் தெய்வங்களோ?! - ந.ச.) சினம் கொள்ளுதல் இத்தகைய குற்றங்களுக்கான தண்டனைகள் எதிர்காலத்தில் எந்தவிதத்திலும் நீக்கமுடியாத ஒன்று என்பதையும் நீங்கள் உணர்தல் வேண்டும் என்று எடுத்துக் கூறி அவர்களை அனுப்பி வைத்தேன்.



### கட்டபொம்மன் காட்டிய வீரம்

நேற்று நடைபெற்ற விசாரணையின் போது கூடியிருந்த பாளையக் காரர் அனைவர் முன்னிலையிலும் நின்ற பாளையக்காரனின் போக்கும் நிலையும், வீரமும் பெருமிதமும் நிறைந்ததாயிருந்தது என்பதைக் கவனித்தது குற்றமாகாது. அவன் தன்னைப் பிடித்துக் கொடுப்பதில் ஆர்வம் காட்டிய எட்டயபுரம் பாளையக்காரனையே அடிக்கடி நோக்கிக் கொண்டிருந்தான். சிவகிரி பாளையக்காரனைச் சினம் நிறைந்த வெறுப் புடன் கவனித்துக் கொண்டிருந்தான். தண்டனைக்காக அவனை அழைத்துச் சென்றபோது உறுதியுடனும் துணிவுடனும் சென்றான். அவன் இருபுறமும் கூடியிருந்த பாளையக்காரர்களைக் கடுமைநிறைந்த வெறுப்புடன் பார்த்துக் கொண்டே சென்றான். தூக்குமேடைக்குச் செல்லும் வழியில் அவனுடைய தம்பியான ஊமைத்துரையைப் பற்றி மட்டும் சிறு (அது கூட! - ந.ச.) கவலைகள் காட்டியதாக எனக்குத் தெரி விக்கப்பட்டது. தூக்குக் கயிறு இருந்த மரத்தினடிக்குச் சென்றவுடன் தான் கோட்டையை விட்டுவிட்டுச் சென்றிருக்கக் கூடாது; அதைக் காப் பதிலேயே உயிர்துறந்திருப்பின் சிறப்பாயிருந்திருக்குமென்று நொந்து கூறினான்.

கட்டபொம்மன் அவனுடன் சேர்ந்த மற்றும் ஐந்து பாளையக்காரர் களுடைய உடைமைகளைப் பறிமுதல் செய்யும்படி மேஜர் பானர்மனால் கீழ்காணும் அறிவிப்பு ஏறக்குறைய ஒரு திங்களுக்கு முன்பு வெளியிடப் பட்டது.

**1799 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 17 ஆம் நாள். கயத்தாற்று முகாம்**

இதனால் திருநெல்வேலிப் பாளையக்காரர்களும் பாளையங்களில் வாழும் மக்களும் அறிய வேண்டியது; கலெக்டரிடம் தொடர்பு கொண்ட திருநெல்வேலி பாளையக்காரர் அனைவருடைய ஒழுங்கற்ற நடவடிக்கைகளையும் விசாரணை செய்ய அரசாங்கத்தால் மேஜர் ஜான் பானர்மன் நியமிக்கப்பட்டிருக்கிறார். ஏழாயிரம் பண்ணை, நாகலாபுரம், கொல்லாப்பட்டி, காடல்குடி, குளத்தூர் பாளையங்களிலுள்ள பல பாளையக்காரர்களின் ஒழுக்கத்தைப் பற்றி முழு விசாரணை செய்தபோது, கம்பெனியில் பாதுகாப்பிலிருக்கும் சிவகிரி பாளையக்காரனுக்கு எதிராகப் பாஞ்சாலங்குறிச்சியுடன் சேர்ந்து கொண்டு போர் தொடுத்தது, கீழ்ப் படியாமை, கம்பெனி அரசாங்கத்திற்கு எதிராகக் கலகம் செய்தது, கலெக்டரின் கட்டளைகளை அவமதித்தது, நாட்டின் அமைதியைக் குலைத்தது, நாட்டு மக்களைத் துன்புறுத்திக் கொலை செய்தது, வரி கட்ட மறுத்தது முதலிய குற்றங்களை அப்பாளையக்காரர்கள் அனைவரும் ஒருமுகமாகச் (உம்!-ந.ச.) செய்திருக்கிறார்கள். பானர்மனுக்கு அளிக்கப்பட்ட குறிப்''களின் படி இத்தகைய குற்றங்கள் மிகக் கொடுமையானவை; அதனால் கம்பெனி அவர்களிடம் மிக்க வெறுப் படைந்துள்ளது. எனவே பாஞ்சாலங்குறிச்சி, நாகலாபுரம், ஏழாயிரம் பண்ணை, கோலார்பட்டி, கடல்குடி, குளத்தூர் பாளையங்கள், அப்பாளையக் காரர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்டுள்ளன. அப் பாளையங்கள் கம்பெனியாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதை மக்கள் அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

மேற்கண்ட பாளையங்களிலுள்ள கோட்டைகள் அனைத்தும் பயனற்றவை, தேவையற்றவை என்று உறுதி செய்திருப்பதால் அவற்றை அழிக்கக் கட்டளை பிறப்பித்திருப்பதை அறிய வேண்டும். மேலும் பணியாளர்களும் மக்களும் ஆயுதந்தாங்கி இருப்பதால் (யாருடைய நாட்டைப் பற்றி யார் சொல்வது? - ந.ச.) பல இடையூறுகள் ஏற்படுகின்றன. நாடு முழுவதிலும் கொடுமைகள் கூத்தாடுகின்றன. எனவே, பணியாளர்கள், காவல்காரர்கள், சேர்வைகாரர்கள், பொதுமக்கள் அல்லது மற்ற எந்த மனிதனாலும் யாராயிருப்பினும் துப்பாக்கி, சிறு துப்பாக்கி, ஈட்டி, வேல் போன்ற கொலை செய்யப் பயன்படுத்தும் ஆயுதங்களை வைத்திருப்பதாக அறிந்தாலும், மறைவாக வைத்திருப்பதாகக் கண்டறிந்தாலும் ஒரே விதமான தண்டனைக்கு உரியவராவர். எனவே மேற்கண்ட பாளையங்களிலுள்ள பணியாளர்கள், மக்கள், அனைவரும் தங்களிடமுள்ள ஆயுதங்களை மேஜர் பானர்மனால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளிடம் ஒப்புவித்துவிட வேண்டும் என்று கட்டளையிடப்படுகின்றனர். ஒவ்வொரு கிராமத்திலுள்ள தலைவனும் தன் கிராமத்தாருக்கு இக் கட்டளையை விரைவாய்த் தெரியப்படுத்தி, விரைவில் அத்தகைய ஆயுதங்களை வைத்திருப்பவர் யாரென விசாரித்துக் குறிப்பிடப்பட்டவரிடம் விரைந்து ஒப்படைக்காவிடில் அத்தலைவனே கடுமையான தண்டனைக்குப் பொறுப்பாளியாவான். இதனால் கம்பெனியாரால் எடுத்துக் கொள்ளப்பட்ட பாளையங்களில் அமைதியை நிலைநாட்ட, அமைதியான மக்கள் மனநிறைவுடன் பயிர்த்தொழிலில் ஈடுபட, இந்நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுவதால் கம்பெனி அதிகாரிகளை எந்தக் கிராமத்தார் எதிர்த்தாலும், அத்தகைய கலகங்களில் துப்பாக்கி, நாட்டுத் துப்பாக்கி, ஈட்டி, வேல் முதலியவை பயன்படுத்தப்பட்டாலும் கிராமத்தலைமை அதிகாரிக்கு சாத்தண்டனை ஏற்படலாம். இத் தண்டனையைத் தவிர்க்கக் கிராமத் தலைவர் அத்தகைய கலகங்கள் நடைபெற்ற மூன்று நாட்களுக்குள் அந்த எதிர்ப்புகளில் கலந்து கொண்ட எல்லா மக்களின் பெயரையும் தெரிவித்து அக்குற்றவாளிகளைப் பிடிப்பதற்காக அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகளையும் எண்பித்தல் வேண்டும். மேற்கண்ட ஆறு பாளையங்களைக் கம்பெனி ஏற்றுக் கொண்டது கொலைத் தன்மையுடைய செயல்களுக்கான தண்டனை. இனி மக்கள் கம்பெனி அரசிடம் மரியாதையாகவும், கீழ்ப் படிந்தும் இருப்பார்களானால் இது போன்று பல மக்களின் உயிர்களும் பலியாகாது; கம்பெனியும் பாளையங்களை ஏற்றுக் கொள்ளாது என்பதையும் அவர்கள் உணர்தல் வேண்டும். அப்படி உணர்ந்தால் அவர்களால் அதற்கேற்ப நடக்க இயலும். இந்த உறுதிகள் கொடுக்கப் பட்டிருப்பதால் ஆயுதங்களை வழக்கமாக ஏந்திச் செல்லும் முக்கியமாக சேர்வைக்காரர் பணியாட்கள் தங்கள் கொடுமைவாய்ந்த ஆயுதங்களை (பகைவன் குலை நடுங்கியது பாரீர்! ந.ச.) மகிழ்ச்சியுடன் நீக்கிவிடுவார்களாக. அவர்கள் நாட்டில் உழவை ஏற்றுத் தங்கள் இன்பத்தைப் பெருக்கிக் கொள்வார்களாக. அதனால் கம்பெனியின் சலுகைக்குத் தகுதி பெறுவார்கள். அரசு அவர்களை எல்லாத் துன்பங்களிலிருந்தும் காக்கும்.

### கோட்டைகள் அழிக்கப்பட்டன

செப்டம்பர் மாதம் 27 ஆம் தேதி கயத்தாற்றில் திருநெல்வேலி பாளையக்காரர்களைக் கூட்டி மேஜர் பானர்மன் அளித்த பேட்டியில் அவர் கோட்டைகளை அழிப்பதற்கும் ஆயுதங்களைப் பறிமுதல் செய்வதற்கும் ஒவ்வொரு பாளையக்காரனும் தானே முன்வந்து கோட்டைகளை அழிப்பதில் ஈடுபடும்படித் தூண்ட வேண்டுமென்ற அறிக்கை

விவரங்களைப் படித்து விளக்கிய போது நான் கீழ்க்காண்பவைவற்றையும் சேர்த்துக் கொண்டேன்.

என் கட்டளைக்குக் கீழ்படிந்து கயத்தாற்றிற்கு வந்திருந்த பாளையக் காரர்களைக் கண்டேன். ஏற்கனவே அளிக்கப்பட்ட தண்டனைகள் நியாய மானவைதான் என்பதைப் பாளையக்காரர்கள் உணரும்படி கேட்டுக் கொண்டேன். வேறு எந்தவிதமான முன்மாதிரிச் செயல்களும் நடை பெறாமையால் அவர்கள் மீது சுமத்தப்பட்டிருக்கும் கீழ்ப்படியாமைச் செயல்கள், பொதுவாகப் பாளையக்காரர்களின் கலகக்காரத்தன்மை, அத்தன்மையான காரணங்களினால் உண்டான எண்ணற்ற தீமைகள் இவற்றைப் பற்றி எனக்குத் தெரியாதென்று நம்பவேண்டாமென்றும் எச்சரித்தேன். கலகக்காரத்தன்மை அத்தன்மையான காரணங்களினால் உண்டான எண்ணற்ற தீமைகள் இவற்றைப் பற்றி எனக்குத் தெரியா தென்று நம்ப வேண்டாமென்றும் எச்சரித்தேன்.

அறிவிப்பில் குறிப்பிட்டபடி, அரசு கட்டளைகளை உடனடியாக நடைமுறையில் கொண்டுவர இரண்டு வழிகள் இருப்பதாகப் பாளையக் காரருக்குக் கூறினேன். ஒன்று கோட்டைகளை அழித்துவிட்டு, ஆயுதங் களைக் கொடுத்து விடும்படி பாளையக்காரர்கள் தாங்களாகவே இயல் பாய்க் கட்டளையிட வேண்டுமென்றும், ஆயுதங்களைத் தொகுத்துக் கோட்டைகள் ஒழுங்காக அழிக்கப்பட்டிருக்கின்றனவா என்று பார்வையிடு வதற்காக நான் அனுப்பும் அதிகாரிகளிடம் அவைகளைக் கொடுத்து விடுவது. இரண்டாது நானும் என்னுடைய வீரரும் நாடு முழுவதும் படை நடத்திச் சென்று அரசு கட்டளைப்படி செயல்படுத்தியிருக்கிறீர்களா என்று நேரில் காண்பது. நான் இந்த இரண்டில் எதற்கும் தயாராயிருக்கி றேன் என்றும் ஆனால் அவர்களுக்கு எந்த முறை விருப்பமோ அதன் படி செயல்படலாமென்றும் கூறினேன். நான் படையுடன் நாட்டிற்குள் செல்லும்போது தலைமைப் பாளையக்காரர்கள் என்னைப் பாசறையில் வந்து கட்டாயமாகக் காண வேண்டும். மற்றொரு வழியைக் கடைப் பிடிப்பதனால், பாளையக்காரர்கள் கயத்தாற்றில் என்னுடன் தங்க வேண்டுமென்றும், அரசின் கட்டளைகளைச் செயல்படுத்துவதை மேற் பார்வையிட நான் அனுப்பும் சிறு குழுக்களுடன் தங்கள் நிர்வாகிகளை அனுப்புதல் வேண்டும் என்றும் கூறினேன்.

எல்லாக் கோட்டைகளும் அழிக்கப்பட்டு ஆயுதங்கள் எல்லாம் ஒப் படைக்கப் பட்டன என்ற செய்தி எனக்குக் கிடைத்தவுடன் ஒவ்வொரு பாளையக்காரனும் தன் பாளையத்திற்கு அமைதியாகத் திரும்ப இசை வேன் என்று உறுதி கூறினேன். என்னுடைய பேட்டி முடிவதற்கு முன் கோட்டைகளை அழிப்பதற்கும் ஆயுதங்களை ஒப்படைப்பதற்கும்



அவர்கள் மனமார உடன்பட்டார்கள் என்று நம்புவதற்கான காரணங்கள் இருந்தன. (ஆமாம், எல்லாருமா கட்டபொம்மன்? ஐந்து பாளையக்காரர் கள் - ந.ச.) அரச முன்னோடிகள் கோட்டைகளை அழிப்பதை விடத் தாங்களே அவற்றை அழித்து விடுவது கண்யமானது என்ற விவரத்தை அவர்கள் நன்றாய் உணர்ந்ததாகத் தெரிகிறது. தங்கள் பாளையங் களுக்கு வெளியே நிறுத்தப்பட்டிருக்கும் அவ்வளவு பெரிய படை செய்யக்கூடிய கேடுகளைப் பற்றி அவர்கள் அறியாமலிருப்பதாகத் தெரிய வில்லை. அந்த ஐயத்தையும் என்னால் இயன்றவரைக் கூடுதலாக்கிவிட நான் தயங்கவில்லை.

கோட்டை அழித்தலை மேற்பார்வையிடவும் ஆயுதங்களைத் தொகுக்கவும் நான் அந்தப் படையைப் பிரித்தேன். இப்படையின் கடைசிப் பகுதி கயத்தாற்றை விட்டு இன்று காலை புறப்பட்டது. அரசு கட்டளைகளைச் சரிவரச் செய்யக் கண்டிப்பான ஆணைகளுடன் தங்கள் அதிகாரிகளைப் பாளையக்காரர்கள் வெவ்வேறு கம்பெனிக் கூட்டங் களுடன் அனுப்பி வைத்தனர் என்ற செய்தியைத் தங்களுக்குத் தெரி விப்பதில் நான் மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

தலைமைப் பாளையக்காரர்கள் தங்கள் நிர்வாகிகள் மூலம் அனுப்பிய கட்டளைகளைச் சரிவரச் செய்து முடித்து விட்டார்கள் என்று அறிந்து நான் மனநிறைவடையும் வரை அவர்கள் கயத்தாற்றில் என்னுடன் தங்கியிருக்க உடன் பட்டனர். நாங்கள் பிரிவதற்கு முன் பாளையக் காரர்கள் தாங்களாகவே அரசாங்கக் கட்டளையை நிறைவேற்ற என்னிடம் ஆள் உதவி தேவை என்பதைத் தெரிவிக்கும் அளவுக்கு அவர்கள் ஆவலைத் தூண்டினேன். அவர்களுள் சிலர் கோட்டைகளை இடிக்க அந் தந்த கிராமத்திற்கருகிலுள்ள சர்க்கார் கூலிகளின் உதவியைத் தங்கட்குப் பெற்றுத்தர வேண்டுமென்றும் என்னிடம் வேண்டிக் கொண்டனர். முடி வாகக் கோட்டைகளை இடிப்பதற்குக் கூலிகள் உதவி தேடிய பாளையங் களுக்கு, வெகு அருகாமையிலிருக்கும் கிராமங்களுக்கு உடனே தேவை யான கட்டளைகளை நவாபு கச்சேரியிலிருந்து அனுப்புமாறு விண்ணப் பித்துக் கொண்டேன். கூலிகள் எந்தப் பாளையக்காரர்களுடைய கோட்டையை இடிக்க உதவி செய்கிறார்களோ அந்தப் பாளையக்காரர்களே அவர்களுக்குக் கூலி கொடுக்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று. (ஐயோ! தமிழ்த்தாயே! இத்தகைய இழிசிறையும் பெற்றாயே! ந.ச.) பாளையங்களிலுள்ள ஒவ்வொரு கோட்டையும், மொத்தமாக சுமார் 42 கோட்டைகளையும் பாளையக்காரர்களே அழிக்கும்படியாக அவர்கள் ஒப் புக் கொள்ளும்படிச் செய்த என் திட்டத்திற்கேற்ப அந்த வேலையை இந்த மாத முடிவுக்குள் வெற்றிகரமாய்ச் செய்து முடித்துவிடுவார்க

ளென்று நாம் நம்புவதற்குக், காரணங்கள் உள்ளன. ஆயுதங்களைப் பொறுத்தவரை அவ்வளவு விரைவில் எல்லா ஆயுதங்களையும் ஒப் படைத்து விடுவார்கள் என்று என்மனதில் படவில்லை. பாளையக்காரர் களின் வேறுபாடுகளும் நீண்டநாள் பழக்கங்களும் அந்த நட வடிக்கையை எதிர்க்கச் செய்கிறது. ஆனால், முதலில் மிகச் சில நிகழ்ச்சி களிலேயே நேரக்கூடிய- அறிக்கையில் வெளியிடப்பட்ட அச்சுறுத்தல் களைச் செயலாக்கும் நடவடிக்கை, ஆயுதங்களைத் தாங்கிச் செல்லும் அவர்களுடைய பழக்கத்தைப் பற்றிய மனவேறுபாட்டை மிக விரைவில் மாற்றி, ஆயுதந்தாங்கிய பாளையக்காரனை நிலத்தை உழுது வாழும் அமைதியும் பணிவும் நிறைந்த உழவனாக்கிவிடும்.

பாளையக்காரர்களின் படை பறிமுதலைச் சென்னை அரசு ஏற்றுக் கொண்டது. ஆயினும் அது திட்டப்படி அச்செயலைப் பயனுடையதாக்கி எளிதில் நிறைவேற்ற, மேஜர் பானர்மனின் தீர்ப்புக்கு எதிராகக் கட்டளை யிட்டது. பாளையக்காரர்களிடமிருந்து ஆயுதங்களைப் பறிமுதல் செய்யக் கூடாதென்றும், அவரவர் திருப்பிக் கொடுக்கும் ஆயுதத்தின் விவரத்திற் கேற்ப ஒவ்வொருவருக்கும் அவரவர் தரும் ஆயுதத்திற்கேற்ற பரிசோ அல்லது விலையோ கொடுக்கப்படும் என்றும் தெரிவித்தது. (மேலிடத் திற்கு நடுக்கம் போலும்! - ந.ச.)

ஒரு திங்களுக்குள் திருநெல்வேலியிலுள்ள பாளையக்காரர்களின் கோட்டைகள் எல்லாம் இடிக்கப்பட்டுவிட்டன என்று நம்புவதற்கேற்ற காரணங்கள் மேஜர் பானர்மனுக்குக் கிடைத்தன. 28 ஆம் தேதி அக்டோபர் திங்களில் அவர் எழுதுகிறார்:

'ஒவ்வொரு பாளையத்திலுமுள்ள கோட்டைகளின் எண்ணிக்கை, துப்பாக்கிகள், சுரங்கவழிகள், ஒவ்வொரு பாளையக்காரனிடமும் வேலை செய்யும் பணியாட்களின் எண்ணிக்கை, அவர்கள் பயன்படுத்தும் ஆயு தங்களின் விவரம் முதலியவை அடங்கிய குறிப்புக்கள் பல பாளையக் காரர்களிடமிருந்து வந்தன. இவற்றை இத்துடன் அனுப்பியுள்ளேன். கோட்டைகளை அழித்தது பற்றிய விவரம், ஆயுதங்களைப் பறிக்காமல் பாளையங்களிலுள்ள மக்கள் தாங்களாகவே நான் பிரித்து அனுப்பி மேற் பார்வையிடச் சொன்ன அதிகாரிகளிடம் கொடுத்த ஆயுதங்கள் பற்றிய குறிப்புக்களிலிருந்து தயாரித்த ஆயுதங்களின் விவரம் ஆகியவைப் பற்றிப் பொதுவாக அறிக்கை தயாரிக்கப்பட்டது. அதேபோல் காப்டன் புரூசிடமிருந்து வந்த கடிதத்தின் படி ஒன்றையும் சேர்த்து அனுப்பியுள் ளேன். மேற்குப் பாளையங்களுக்கு அனுப்பிய வெவ்வேறு அதிகாரிகள் கூட்டத்தின் பொதுத்தலைவராகப் புரூஸ் அனுப்பப்பட்டான். அவன் எழுதிய கடிதத்தில் பாளையக்காரர்களின் நிர்வாகிகள் கோட்டை



இடித்தல் முதலிய அரசு கட்டளைகளைக் கருத்தோடு செயல் முறையில் செய்து முடித்துள்ளனர் என்ற செய்தி மனநிறைவளிக்கிறது. லெப்டினனட் பாக்ஷா தலைமையில் அனுப்பப்பட்ட ஆள்கள், பாஞ்சாலங்குறிச்சி கோட்டையை அழித்துப் பறிமுதல் செய்யப்பட்ட ஆறு பாளையங் களிலிருந்தும் கைப்பற்றப்பட்ட ஆயுதங்களின் குறிப்பு பற்றிய விவரங் களடங்கிய பிரதியும் இத்துடன் இருக்கிறது. (இந்த விவரங்களை இப் பொழுது அரசு ஆவணங்களிடமிருந்து எடுக்க முயன்றால் நல்லது. ந.ச.)

பாளையக்காரர்களைக் கயத்தாற்றில் நிறுத்திவைத்ததன் குறிக் கோள் ஏற்கனவே நலமாகவும் முழுமையாகவும் நிறைவேறி விட்டமை யால் இன்று காலை அவர்கள் தங்கள் பாளையங்களுக்குத் திரும்பிச் செல்லக் கட்டளை பெற என்னைச் சந்திக்குமாறு செய்தியனுப்பினே ன். இனி அரசு இந்நிலையில் அவர்கள் புறப்படுவதற்கு முன் அவர்கள் மனதில் இந்நடவடிக்கைகளின் முடிவுகளைப் பற்றிய கருத்துக்களை நிலைபெறச் செய்ய, இச்சூழ்நிலையில் நான் மேற்கொள்ள வேண்டிய முறைகளைப் பற்றி எனக்கு அறிவிக்கப்பட்ட கண்டிப்பான வழிகளி லேயே அரசு இனிமேலும் அவர்களிடம் மிகக் கடுமையான முறையில் நடந்து கொள்ளும் என்ற எண்ணத்தை நினைவுறுத்தி ஒரு அறிக்கை தயாரித்து அதன் படியை ஒவ்வொரு பாளையக்காரனுக்கும் கொடுத் தேன். மற்ற பிரதிகள் செப்புத் தகடுகளில் எழுதப்பட்டு பின்னர் அவர்க ளுக்கு விரைவில் அனுப்பப்படும் என்றும் கூறினேன். (அம்மாடி! - ந.ச.) அச்சாசனம் (அச்செப்புத் தகடுகள்) இன்றும் இருப்பதாகவும் அவை ஜமீன்தார்கள் இல்லங்களில் இருப்பதாகவும் தெரிகிறது. பாளையங்க ளில் முக்கியமான கிராமங்களில் பொது இடத்தில் அது கூறும் செய் தியை எல்லா மக்களும் பொதுச் செய்தியாக அறியும்படி பதிக்கப்பட வேண்டுமென்றும் கூறினேன். இக்கட்டளைப்படி நடந்து கொள்வதற் கான பொறுப்பு ஒவ்வொரு பாளையக்காருடையது என்றும் தெரிவித் தேன்.

ஏழாயிரம்பண்ணை, நாகலாபுரம் பாளையக்காரர்கள் சென்னைக்கு நாடு கடத்தப்பட்டு, சென்ற இடத்திலேயே இறந்தனர். (அந்தோ! ந.ச.) இந்தப் பாளையக்காரர்கள் இவர்களுடைய சில முக்கிய கூட்டாளிகள் இவர்களைப் பற்றி மேஜர் பானர்மன் எழுதிய கடிதமொன்றில் குறிப்பிடு கிறார்.

எனக்கு இட்ட கட்டளையை உறுதிப்படுத்த பறிமுதல் செய்யப் பட்ட தலைமைப் பாளையக்காரர்களை மாகாணத்திற்கு அனுப்பி வைக்கத் தீர்மானித்தேன். நாகலாபுரம், ஏழாயிரம் பண்ணை பாளையக்காரர்கள் லெப்டினனட் டங்னரின் பொறுப்பில் விடப்பட்டார். கட்டபொம்ம நாயக்

கனும் காடல்குடி தலைமைப் பாளையக்காரனும் 18 ஆம் தேதியிட்ட என் அறிக்கையின்படி நாடு கடத்தப்பட்டனர். ஆனால் கல்லார்பட்டி பாளையக்காரன் ஏழை; உடல் நலமில்லாதவன்; சிறுவன்; குளத்தூர் பாளையக்காரன் நோயாளி; தீர்மான புத்தியில்லாதவன்; 60-க்கும் 70-க்கும் இடைப்பட்ட வயதுக் கிழவன்; பொதுமக்களின் நல்லெண்ணத் திற்கு ஏற்றவாறு அவர்களுடைய குறைபாடுகளைக் கண்ணுற்று அவர்களிடம் இரக்கத்துடன் நடந்து கொள்ளக் கூறினேன். அவர்கள் தலையிட்ட கலகங்களில் எந்தவிதத் தீங்கும் நேரிடவில்லை. எனவே தற்போதைக்கு அவர்களை இராமநாதபுரத்திற்கு அனுப்பும்படி லூஷிங்டனிடம் ஒப்படைத்தேன். இனி அவர்களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென அரசாங்கம் கட்டளையிடுகிறதோ அதே போல் அவர்கள் நடத்தப்படுவார்கள். நாகலாபுர பாளையக்காரனின் நிர்வாகி சடகோபப்பிள்ளை. அவன் எசமானின் முக்கிய ஆலோசகன். பாளையத்தில் அவனுக்கு அதிக செல்வாக்கு உண்டு. எனவே, நாடு கடத்தப்பட்ட பாளையக்காரனுடன் அவனும் செல்ல வேண்டியது தவிர்க்க முடியாத தேவையாகும் என்று நான் தீர்மானித்தேன். கொல்லார் பட்டி பாளையக்காரனான குருட்டு மைத்துனன் சௌந்திரலிங்க நாயக்கன் தான் அவன் தந்தையினுடைய தீய ஆலோசகன்; அவனும் ஆறுமுகம் பிள்ளையும்தான் பாளையக்காரனுடைய பொதுச் செயல்களின் தனி நிர்வாகிகள். பரடாம் பெருமாள்பிள்ளை அதிக செல்வாக்குடையவன். அவன் ஏழாயிரம் பண்ணைப் பாளையக்காரனின் நிர்வாகியும் ஆலோசகனுமாவான். எனவே அத்தகைய விவரங்களுடைய தனியார்களை நாட்டைவிட்டு வெளியேற்றத் தயங்கவில்லை.

**கம்பெனியின் வெற்றி**

சிவகிரி பாளையக்காரனுடைய மகன் சிவகிரி மாப்பிள்ளை வன்னியனால் தூண்டப்பட்டு அவன் தந்தைக்கு எதிராகக் கலகங்களைச் செய்தான்; அதன் காரணமாக சிவகிரி பாளையத்தில் குழப்பங்களும் அச்சமூட்டும் காட்சிகளும் ஏற்பட்டன. அதனால் அந்த நாடு மட்டுமின்றி அருகேயுள்ள பாளையங்களும் மிகுதியாகத் துன்பப்பட்டன. அத்தகைய குழப்பங்களை அடக்கக் கம்பெனி ஆயுதந்தாங்கிய படையை அடிக்கடி அனுப்ப வேண்டியிருந்தது என்ற செய்திகளை ஐயங்கள் எதுவுமின்றி உறுதியாக ஆவணங்கள் கூறுகின்றன. இந்த மனிதனுக்குத் திறமைகள் இருந்தமையால் அவன் ஒரு சிறந்த கலகம் மூட்டுபவன் என்று பெயர் பெற்றான். அவன் துணிவுள்ளவன்; வீரன்; சுறுசுறுப்புள்ளவன்; அதனால் எல்லா நேரங்களிலும் விரும்பிப் பின் பற்றக் கூடிய ஏற்புடைய தலைவனாய் அவன் விளங்கினான். இந்தச்



சுற்றுப்புறங்களுக்கு அத்தகைய ஒரு மனிதன் திரும்ப வராமலிருக்க அரசு தனிப்பட்ட அக்கறை எடுத்துக் கொள்ளுமென்று நான் நினைக்கிறேன்.

மேஜர் பானர்மனின் கைதிகளில் பலர் பாளையங் கோட்டைக்கு அனுப்பப்பட்டனர். அங்கு சிறையில் வைக்கப்பட்டனர். தூத்துக்குடியில் பொது அதிகாரியாயிருந்த காப்டன் டேவிசனிடம் தாங்களாகவே அடைக்கலம் புகுந்த கைதிகளும் இருந்தனர். அவர்களுள் அண்மையில் தூக்கிலிடப்பட்ட பாஞ்சாலங் குறிச்சி பாளையக்காரனின் உடல் பிறந்தவர்களாகிய இருவர் மேஜர் பானர்மனால் பாளையங்கோட்டைக்கு அனுப்பப்பட்டவருள் மிக முக்கியமான கைதிகள். சிறிது காலத்திற்குப் பின் முழுதும் அழிக்கப்பட்டதாக எண்ணப்பட்ட பாஞ்சாலங்குறிச்சி கோட்டை தேவையான நேரத்தில் முன்போலவே வலிமை வாய்ந்த கோட்டையாகத் தரையிலிருந்து கிளம்பத் தயாராயுள்ளது எனக் கண்டு பிடிக்கப்பட்டது. (ஆ! ஆ! ஊமைத்துரையா? கொக்கா? - ந.ச.) இதைக் கண்டறிந்ததும் அரசு மிகவும் பதறியது. ஆனால் கண்டிப்பான விசாரணைக்குப் பிறகு பாஞ்சாலங்குறிச்சி கோட்டைகளும் மற்ற கோட்டைகளும் இடிக்கப்பட்டு விட்டன என்று தீர்மானமாகத் தெரிந்தது. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை மேஜர் பானர்மன், மாவட்டத்தை விட்டுச் செல்வதற்கு முன்பே அழிக்கப்பட்டு விட்டது. ஆனால் தரைமட்டமாக்கப் பட்ட மண்கோட்டைகள் விரைவாய் கட்டப்படலாம். அத்தகைய மண்கோட்டைகள் உற்சாகமுள்ள ஒன்று அல்லது இரண்டாயிரம் கூலியாட்கள் இரவும் பகலும் ஓயாது வேலையிலீடுபட்டால் கட்டிவிட முடியும். ஆனால் பாஞ்சாலங்குறிச்சி கோட்டை போன்ற கோட்டை ஒன்று அல்லது இரண்டு நாள்களில் தரையிலிருந்து மந்திரவாதியின் கோலால் கிளம்புவது போல் கிளம்பும் என்ற சூழ்நிலை பற்றி ஐயப்படத் தக்கது ஒன்றுமில்லை. பிறகு என்ன நேரிட்ட போதிலும் இதுவரை மேஜர் பானர்மனின் வேலை முழுவதும், இதுவரை நடைபெற்று வந்ததைப் போல, முழுமையாகச் செய்யப்பட்டன. 42 கோட்டைகளைத் தாங்களாகவே அழித்துவிடுவதாக வலுவில் பாளையக்காரர் முன் வந்ததே கம்பெனி கட்டளையின் பயனாய் ஏற்பட்ட இணையில்லா வெற்றியாகும். அவ்வெற்றி படைவீரர்களின் கொள்கைகளினாலும், செய்கைப் போக்கினாலும் கிட்டியதாகும்.

அரசுக்கேற்பட்ட எல்லா எதிர்ப்புகளையும் அடக்கி நாட்டில் அமைதியை நிலைநிறுத்தியபின் மேஜர் பானர்மன் அனைத்து அதிகாரிகளின் நன்றியையும் ஆசிகளையும் பெற்று போர் வீரர்குரிய விடுப்பில் ஐரோப்பாவிற்குச் சென்றார். அவர் நிலைநாட்டிய அமைதி இரண்டு

ஆண்டுகள் நீடித்திருந்தன. (அவ்வளவுதானா! ந.ச.) அக்காலத்திய குழப்ப நாட்களுக்கு, அந்தக் காலவரையறை அசாதாரணமான நீண்ட கால எல்லையாகும் (ஓ!). ஆனால் இந்நிலை இறுதியில் பாளையக்காரர் போரினால் மிகக் கொடுமையாகக் குழப்பப்பட, வேண்டிய விதி இருந்தது. அது அச்சம் தரத்தக்க ஒன்று எனினும் அதுவே நல்வாய்ப்பாக இறுதிப் போராகவும் ஓய்ந்து போயிற்று.

•

# இயல் - 8

## பாளையக்காரரின் இறுதிப் போர்
## கலகத்திற்கு முன் நடைபெற்ற நிகழ்ச்சிகள்

திருநெல்வேலி ஆவணங்களில் காணப்படுகின்ற அறிக்கைகள், பத்திரங்கள் இவைகளிலிருந்து கடந்த பாளையக்காரர் போரைப்பற்றிய செய்திகளுடன் கூட, தொடக்கத்திலிருந்து இறுதிவரை அப்போரில் பங்கெடுத்துக் கொண்ட இருவர் எழுதிவைத்த இரண்டு தனித்தனி சண்டையைப் பற்றிய குறிப்புகளும் நமக்குப் பயனுடையதாயிருக்கின்றன. இவற்றுள் ஒன்று ஜெனரல் வெல்ஷ் எழுதிய 'இராணுவ நினைவுகள்', 1830 இலண்டனில் வெளியாகிய இப்புத்தகம் மிகவும் சுவையுடையது. அப்போது காப்டனாக இருந்த ஜெனரல் வெல்ஷ் படையெடுப்பு முழுவதிலும் படைத் தலைவனின் முக்கிய உயர்ந்த அதிகாரியாக இருந்தான். மற்றொன்று தச்சநல்லூரைச் சேர்ந்த ஜியார்ஜ எ. ஹக்ஸ் (Mr. George, A. Hughes) எழுதிய தென்பாளையக்காரர்களின் கடைசி கலகங்களையும் இறுதிக் கீழ்ப்படிதலையும் பற்றிய குறிப்பு. இவர் படையின் மொழி பெயர்ப்பாளராக இருந்தார். இப்புத்தகம் 1814 இல் ஹக்ஸ் இறந்த ஒன்பது ஆண்டுகட்குப் பிறகு வெளியிடப்பட்டது. ஹக்சின் பெயர் திருநெல்வேலியில் மிகப் புகழ் பெற்றிருந்தமையால் அவரைப் பற்றிச் சில செய்திகள் தெரிந்து கொள்ள விரும்பியிருந்திருக்கலாம். எனவே கீழ்க்காணும் குறிப்பு ஹக்சின் குறிப்புப் புத்தகத்திற்கு முன்னுரையாக சென்னை இலக்கிய அறிவியல் இதழ் ஆசிரியரால் எழுதப்பட்டுள்ளது. இக்குறிப்பு அவர் இதழில் வெளியாகி இருந்தது.

ஹக்சு இந்திய - பிரிட்டிஷ் பெருந்தகை. தென் மாவட்டங்களில் வாணிப நுணுக்கங்களுக்கும் வெற்றி நிரம்பிய சிந்தனைகட்கும் மிக்க பெயர் வாய்ந்தவர். முதலில் மதுரையில் ஊதியம் வழங்கும் அதிகாரியாயிருந்து பின்னர் சென்னை நாட்டாட்சிப் பணியிலே இருந்த ஹக்ஸ் என்பவரின் மகன். சிறுவயதிலேயே இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்டார். கேம்பிரிட்ஜ் ஏசுநாதர் கல்லூரியின் முதல்வராயிருந்த டாக்டர் ஹக்கான இவரது மாமாவின் மேற்பார்வையில் சிறந்த கல்வி அறிவு.பெற்றார். இந்

தியாவிற்கு திரும்பியதும் திருவாங்கூரில் ரெசிடன்ட் அதிகாரியின் கீழ் கணக்கராயும் தென்பாளையக்கார பேஷ்குஷின் கலெக்டராயிருந்த எஸ்.ஆர். லூஷிங்டன் அலுவலகத்திலும், பிறகு 1799 இல் பாளையக் காரர் கலகங்களில் அடக்குமுறை அதிகாரியாக இருந்த கர்னல் பானர் மன் காப்டனுக்குள்ள ஊதியம் பஞ்சப்படியுடன் மலபார் ஜென்டோ படை மொழி பெயர்ப்பாளராக நியமிக்கப்பட்டார். அந்த வேலை 1799 செப்டம்பர் இரண்டாம் தேதி அரசால் நிலையாக உறுதி செய்யப்பட்டது. 1801 இல் வந்த கர்னல் அக்னியூவிடமும் அதே வேலையிலிருந்தார். பின்பு 1808 இல் திருவாங்கூர் போரின் போது ஜெனரல் செயின்ட் லெகர் (S. Leger) தலைமையில் சென்ற படையுடன் சென்றார். 1809 ஆம் ஆண்டு பிப்ரவரி 27 ஆம் தேதி அவருடைய தொண்டுக்காக அரசாங் கத்தின் பாராட்டைப் பெற்றார். இடையே அவர் வாணிகத்திலும் ஈடு பட்டிருந்தார். அவர் சார்லசு வாலசு யங் என்பவருடன் கூட்டாளியாக இருந்தார். யங் 1806-1808க்கும் இடையே திருநெல்வேலியில் மிகப் பரந்த வெற்று நிலத்தைக் காபி, இண்டிகோ, பஞ்சுச் செடிகளைப் பயிர் செய்யக் குத்தகைக்கு எடுத்தார். அதற்கு ஆண்டு வாடகை 2000 ரூபாய்கள். குத்தகையின்படி கம்பெனியாருடன் அவர் செய்து கொண்ட சலுகை உரிமைச் சீட்டுக்காலம் முடியும்வரை அதைத் தொடர்ந்து பயிரிடலாம்.

1809 இல் 'யங்' இறந்தபின் அந்தச் சீமானுடைய உடைமை உரிமை மாற்றியளிக்கப்பட்டவராக ஹக்சு நியமிக்கப்பட்டிருந்ததால், அவர் குத்தகைக்காரராக ஆனார். அச்சலுகை உரிமைச் சீட்டுகாலம் முடிந்ததும் அந்த மானியம் அதே குத்தகைக்கு அதே திட்டங்களுடன் புதுப்பிக்கப்பட்டது. அதே போல் குளத்தூர் காடல்குடி மிட்டாக்களையும் வாங்கிப் பலவித வாணிபங்களைச் செய்து வந்தார். 1835 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 25 ஆம் தேதி அவர் இறக்கும்வரை இலாபமும் இழப்பும் நிறைந்த அவ்வாணிபத்தைச் செய்து வந்தார்.

'ஹக்சு என்பவருக்குத் திருமணமே. ஆகவில்லை. ஆனால் அவருக்குப் பல குழந்தைகள் இருந்தன. அவர்களை இந்துக்களாகவே வளர்த்து வந்தார்' என்றும் நான் தெரிவிக்கிறேன்.

1799 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் கயத்தாற்றில் தூக்கிலிடப் பட்ட பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனுக்குப் பின், அவனது இரண்டு உடன்பிறந்தவர்கள் இருந்தனர். அவர்கள் பாளையங்கோட்டையில் சிறையில் வைக்கப்பட்டிருந்தனர். இவர்களுள் மூத்தவன் மிக மெலிந்தவன். பாளையம் பறிமுதல் செய்யப்படாமல் இருந்திருந்தால் அவன் தான் வாரிசாயிருந்திருப்பான். அவனைச் சார்ந்தவர்களும்



பாளைய மக்களும் அவனிடம் இரக்கமும் மரியாதையும் வைத் திருந்தனர். எனவே அவனைச் சின்ன கட்டபொம்மு என்று அழைத்து வந்தனர். மற்றொருவன் அவனைத் தெய்வப்பிறவியாக மக்கள் மதித்து வந்தனர். (அம்மாடி! பகைவனே தரும் சான்று! - ந.ச.) 1719 இல் வந்தனர். (அம்மாடி! பகைவனே தரும் சான்று! - ந.ச.) 1719 இல் நடந்த கலகங்களில் ஈடுபட்டதற்காக வேறு சிலரும் இவர்களுடன் பாளையங்கோட்டைச் சிறையிலிருந்தனர். ஆட்சி அதிகாரத்திலிருந்து நீக்கப்பட்ட அக்குடும்பத்தைச் சேர்ந்த அச்சமூட்டும் தன்மையுடைய கலகக்காரன் சிவத்தையா என்பவன், அவர்களுக்கு நெருங்கிய உற வினன். அதிகாரியை ஏமாற்றித் தப்பிவிட்டான். அவன் தன்னுடன் உடன் பாடு கொண்டவர்களுக்குத் தலைவனாகிக் கைதிகளாகச் சிறையிலிருப் பவர்களைத் தப்புவித்துப் போராட்டத்தைப் புதிதாகத் தொடங்கத் தக்க காலத்தை எதிர்பார்த்திருந்தான்.

**பாளையங்கோட்டையிலிருந்து கைதிகள் தப்பித்தலும், அதைத் தொடர்ந்து நடைபெற்ற நிகழ்ச்சிகளும்**

கைதிகள் தப்புவதற்கும் கலகங்கள் மறுபடி தொடங்குவதற்கும் முன்பு திருநெல்வேலியிருந்த நிலையைப் பற்றி ஹக்சு பின்வருமாறு விவரிக்கின்றார்:

அரசாங்கத்திடமிருந்து பேரும் புகழும் பெற்று 1800 இன் தொடக் கத்தில் ஐரோப்பாவுக்குக் கப்பலேறுவதற்காக மேஜர் பானர்மன் படையைவிட்டு விலகினார். அப்பதவியை அடுத்துப் பெற வேண்டியவர் மேஜர் ராபர்ட்டனிங். பொது அதிகாரிகளுள் உயர்ந்த பதவியை நாடிய தால் பிப்ரவரியில் எங்களை விட்டுச் சென்றார். மாவட்டப் படைத்தலை வராக இருந்ததுடன் திருவாங்கூர் ரெசிடெண்டாகவும் இருந்து பணி புரிந்து வந்த மேஜர் 'கோவின் மக்காலே' அவருக்குப் பின் பதவி ஏற்றார். நிகழ்ச்சிகளின் நிலை விரைவில் அப்படையைப் பிரிக்க வேண்டிய சூழலை உருவாக்கியது. அவனுடைய தொண்டு திருவாங்கூர் தர்பாரில் சிறிது காலம் கவர்னர் ஜெனரலுக்குத் தேவைப்பட்டது. தற்போது சங்கர நயினார் கோயிலில் மேஜர் ஷெப்பர்ட் தலைமையிலிருக்கும் மூன்றாவது பிரிவுப்படையைச் சங்கரநயினார் கோயிலில் நிறுத்தி வைத்தனர். லெப் டினன்ட் கைலியின் தலைமையில் வேறு சில படைகள் பாளையங் கோட்டையைச் சுற்றிச் சூழ்ந்திருந்தது. படையில் முக்கியப் பகுதி திருச்சிராப்பள்ளிக்கும் மற்ற இடங்களுக்கும் திரும்பின. அந்த ஆண்டின் இறுதியில் நாடெங்கும் முழு அமைதியுடன் அரசாங்கத்தின் குறிக் கோள்கள் கைவரப்பெற்று மிக்க வளமிகுந்திருந்தது போலத் தோற்ற மளித்தது.

கைதிகள் தப்பிச் சென்றதைப் பற்றி ஜெனரல் வெல்ஷின்

குறிப்பு வருமாறு: 1801 பிப்ரவரி 2 ஆம் தேதி எங்கள் படை சங்கர நயினார் கோயிலின் கிழக்குப் பக்கத்தில் (வடமேற்கில்) சுமார் 30 மைல் தூரத்தில் படை அரண் அமைந்திருந்தபோது, எங்கள் முழு இனத்தினரும் சுமார் 20 பெண்களும் கனவான்களும் பாளையங்கோட்டையிலிருந்த மேஜர் மெக்காலேயின் பூங்கா வீட்டில் விருந்துண்டு கொண்டிருந்தோம். சிறையில் வைக்கப்பட்டிருந்த பாளையக்காரக் கைதிகளில் ஒருவன் ஒரு காவல்காரனையும் கோட்டையிலிருந்த மற்றொருவனையும் ஆயுதமற்றவர்களாக்கி அவர்களைத் தாக்கிவிட்டுச் சிறையிலிருந்து தப்பி ஓடிவிட்டான். அச்சமூட்டும் மனிதராயும் மாகாணக் கைதிகளாயுமிருந்ததால் அவர்களை இரும்புக் கைச்சங்கிலியுடன் பிணைத்து இதுவரை கவனமாகக் காவல் காத்து வந்தனர். ஆனால் அண்மையில் அவர்களுக்கு ஏற்பட்ட பெரியம்மை காரணமாகச் சில நாட்களுக்கு முன் அவர்கள் கைகளிலிருந்த சங்கிலிகள் அகற்றப்பட்டன. இன்று மாலை அவர்களைச் சேர்ந்தவர்களில் சிலர் ஆயுதங்களை மறைத்துக் கொண்டு மாறுவேடம் பூண்டு கோட்டைக்குள் நுழைந்தனர். முன்னேற்பாட்டின் படி குறிப்பு கொடுத்தவுடன் வாயிற்படியிலிருந்த காவற்காரனைத் தாக்கினர். அப்போது முன்னால் காவல் காத்துக் கொண்டிருந்த இருவரையும் கைதிகள் தாக்கினர். சில காவல்காரர்கள் காயமடைந்தனர். எல்லோருடைய போர்க்கருவிகளையும் பறித்துவிட்டனர். அவர்களுடைய துப்பாக்கிகளை எல்லாம் கைப்பற்றிக் கொண்டு கைதிகள் வெளியிலிருந்து வந்த அவர்களுடைய ஆட்களுக்குத் தலைமை தாங்கி வாயில் காப்போனிடம் பாய்ந்து சென்று அவனைத் தாண்டிக் கொண்டு வாயிற்படி வழியாகத் தப்பியோடிவிட்டனர். இன்று பொழுது விடியு முன்னர் முப்பது மைல் தூரத்திலுள்ள பாஞ்சாலங்குறிச்சிக்குத் தப்பி ஓடிவிட்டனர். வழியிலே ஏறக்குறைய நூறு ஆட்களை வியப்பில் ஆழ்த்தி போர்க் கருவிகளைப் பறித்துக் கொண்டனர். ஓரிடத்தில் உள்நாட்டு அதிகாரியின் தலைமையில் தாக்கிய முழுப் படையையும் திருப்பித் தாக்கிவிட்டுத் தப்பிச் சென்றனர். அவர்கள் தப்பிப் பாதுகாப்பான இடத்தை அடைய வேண்டுமென்ற வேகத்தில் எங்கள் படையைத் தாக்கி வீழ்த்தியிருக்கக் கூடிய மகிழ்ச்சியை அடையாமல் எப்படியோ பொன்னான வாய்ப்பினை நழுவ விட்டுவிட்டனர். (!-ந.ச.) ஏனெனில் அவர்கள் தப்பியோடிய வழிக்கு ஒரு மைலுக்கும் குறைவான தூரத்தில்தான் தங்கள் படைத் தலைவர்களுடன் இராணுவ அதிகாரிகளும் மற்ற படைவீரர்களும் அவ்வூரைச் சேர்ந்த சிலரும் ஒரே ஒரு நாயக்கக் காவல்காரனால் காக்கப்பட்ட வீட்டிற்குள் கூடியிருந்தோம். அந்த இடத்தைத் தாண்டிச் செல்வதற்கு முன்பே நூற்றுக்கணக்கான ஆட்கள் அவர்களுடன் சேர்ந்து கொண்



டமையால் எவ்வித முன்னேற்பாடுமின்றி - எதிர்ப்புமின்றி - 'கூண்டோடு கைலாசம்' சென்றிருப்போம். சூழ்ச்சியின் விவரமறியாததால் சிறு சிறு படைக் கூட்டங்களை முடிந்தவரை திரட்டித் தப்பியோடிய கைதிகளைத் துரத்திச் சென்று பிடிக்கக் கட்டளையிட்டோம். ஆனால் நல்வினை வயத்தால் அவர்கள் தோல்வியுடன் திரும்பிவிட்டனர். ஏனெனில் அந்தச் சூழ்நிலையில் பாளையங்கோட்டையிலிருந்த அத்தனை சிப்பாய்களையும் சேர்த்து அனுப்பியிருந்த போதிலும் அக்கைதிகளைப் பிடிப்பதற்குப் போதுமானதாக இருந்திருக்காது. (கைதிகளைப் பிடிக்க முடியாத சிப்பாய்கள்; சிப்பாய்களால் பிடிக்க முடியாத கைதிகள்! - ந.ச.) எனவே அவர்கள் நோக்கம் ஈடேறுதல் அரிதாகவே இருந்திருக்கும்.

திருநெல்வேலி மாவட்டத்தில் படைத்தலைமை அதிகாரியாயிருந்த மேஜர் மக்காலே கைதிகளைத் திரும்பப் பிடிக்க வேண்டிய முறைகளைத் திட்டமிட்டார். பாளையங்கோட்டையிலிருந்த எஞ்சிய படையுடன் கயத்தாற்றிற்குப் புறப்பட்டார். சீவலப்பேரி படையிலிருந்த நவாபின் குதிரை வீரர் சிலரையும் சேர்த்துக் கொண்டார். சங்கரநயினார் கோவில் மேஜர் ஷெப்பர்ட் தலைமையிலிருந்த துருப்புகளைக் கயத்தாற்றிற்குச் செல்லும்படி கட்டளையிட்டார். கயத்தாற்றில் எல்லாப் பாளையங்கோட்டை அதிகாரிகளும் 6 ஆம் தேதி ஒன்று கூடினர். உடனடியாகப் புறப்பட வேண்டியிருந்ததால் நவாப்பின் துருப்புகள் இந்தக் காரணத்திற்காக ஆங்கில சீமான்களால் இரவல் கொடுக்கப்பட்ட குதிரைகள் மீது அமர்ந்து புறப்பட்டனர். (என்ன அழகு! - என்ன தாராளம்! - ந.ச.) இதுவரை குழப்பங்களுக்கு இருப்பிடமாயிருந்த அந்த இடத்தில் முழு அமைதி ஏற்பட்டுவிட்டதாக எண்ணியமையால் அங்கிருந்த தென்போர் அணியைச் சேர்ந்த பழைய ஐரோப்பிய காலாட் படை வீரரும் சில குதிரைப் படை வீரர்களுடன் அப்பொழுதுதான் அகற்றப்பட்டனர். எனவே என்னுடைய படை நூறு துப்பாக்கி வீரர்களடங்கிய படையாகக் குறைந்து விட்டது. அதில் இரண்டு இரண்டு நான்கு பவுண்டு பீரங்கிகளடங்கிய வங்காள பீரங்கிப்படை வீரர் பகுதியைத் தவிர மற்றெல்லாரும் உள்நாட்டு வீரர்களே. அப்படை பிப்ரவரி 8 ஆம் தேதி காலையில் முன்னால் சென்ற பாதி தூரத்திற்குப்பின் கயத்தாற்றிலிருந்து 19 மைல் தூரத்திலுள்ள குலையநல்லூர் கிராமத்தை அடைந்தது. அப்படை சிறு பரப்புள்ள இடத்தில் கூடாரமிட்டுத் தங்கியது. எல்லாரும் அறுசுவை முழு உண்டி உண்டு மகிழத் தயாராகிக் கொண்டிருந்தனர். அப்போது 1000 அல்லது 1200 வீரர்களடங்கிய பாளையக்காரப்படை ஒன்று வேல், ஈட்டி, வாள் முதலியவற்றை ஏந்தி எங்கள் படை வீட்டிற்கு எதிரே உள்ள குட்டிச்சுவரருகே தோன்றின. அவை வலப்புறமும் இடப்புறமும் சூழ்ந்து மூன்று பக்கங்களிலிருந்தும் ஒரே காலத்தில்

தாக்கின. பின்பக்கத்தில் சுமார் ஒரு மைல் தொலைவில் அமைந்திருந்த அதே கிராமம் எங்கள் படைகளால் கைப்பற்றப்பட்டது. நாங்கள் முன்புறம் ஏற்பட்ட முதல் தாக்குதலை எதிர்த்துக் கொண்டிருந்தபோது ஆழமான பள்ளங்களில் மறைந்திருந்த எதிரிகளின் படையொன்று எங்களை உடனே தாக்கிற்று. எங்களில் பலர் புதுப் பயிற்சி பெற்றவராகவும் கற்றுக் குட்டிகளாயுமிருந்த காரணத்தினால் அவ்வளவு நெருங்கிய படை எதிர்ப்பைக் கண்டிராதபோதிலும் நவாபு குதிரைப்படையைத் தவிர மற்றெல்லோரும் மிகத் திறமையாக நடந்து கொண்டனர். நவாபு குதிரைப் படையால் ஒரு சிறு பகைவர் படையைக் கூடத் தாக்க இயலவில்லை. எனவே நாங்கள் எங்கள் குதிரைகளைத் திருப்பிப் பெற விரும்பினோம். இருந்தும் ஒரு மணி நேரத்தில் பாளையக்காரர்கள் நாற்பது இறந்த வீரர்களைப் போர்க்களத்திலேயே போட்டுவிட்டுப் பின்வாங்கினர். மதியத்திற்குள் எங்கள் பாசறையில் மறுபடியும் அமைதி நிலவிற்று. எங்கள் தரப்பில் ஆறு பேர்கள் மட்டும் இறந்தனர் என்பதே எதிரிகள் சுடுவதில் திறமையில்லாதவர்கள் என்பதற்குச் சான்றாகும். அந்தக் கிராமத்திலுள்ள காவல் பலப்படுத்தப்பட்டது. மாலை 9 மணி வரை எல்லாம் அமைதியாயிருந்தன. பிறகு துப்பாக்கியின் ஓசை, கிராமத்தின் பக்கத்திலிருந்து வந்து எங்களை விழிப்படையச் செய்தது. (அது சரி! நேரம் பார்த்து......! - ந.ச.) அக்காவல் படையின் மீது தாக்குதல் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் அதற்கு உதவியாக வேறு புதுப்படை வருவதற்குள் அப்படை முழுவதும் அழிக்கப்பட்டுவிட்டது. ஓர் இரவைத் தூக்கமின்றிக் கழித்த பின் பொழுது விடிந்ததும் நாங்கள் காலையில் புறப்பட்டு 9 மணிக்குப் பாஞ்சாலங்குறிச்சிக்கருகே உள்ள திறந்தவெளியை அடைந்தோம். அங்கு எங்கள் வியப்பிற்கேற்ப மண்மேடாக்கப்பட்ட கோட்டை இருந்த இடத்தில் பழையபடி ஒரு கோட்டை எழும்பியிருந்தது. அதில் பதினைந்தாயிரம் வீரர்களும் இருந்தனர்.

ஹக்ஸ் தொடர்ந்து கூறுகிறார்: பாளையக்காரர்கள் படை பத்திரமாக அரணமைக்கப்பட்டிருந்ததன்றி வீரர்கள் அனைவரும் கற்பனைக்கு எட்டாத அளவில் (!-ந.ச.) ஆயுதந் தாங்கியவர்களாயிருந்தனர். இதுவரை ஈடுபட்ட முயற்சிகளின் பயனாய் வெற்றியடைந்தமைக்காகப் படை வீரர் முன்னர் மகிழ்ச்சி ஆரவாரமும் செய்து கொண்டிருந்த காட்சி அதற்கு முத்தாய்ப்பு வைத்தாற்போன்றிருந்தது. அவர்கள் எழுப்பியிருந்த அரண் மார்பளவு உயர்ந்த சுவர் முதலியவைகள் நம்ப முடியாத வேகத்துடன் அவர்கள் அவற்றைக் கட்டியிருக்க வேண்டுமென்பதை உணர்த்தி நின்றன. அவர் மேலும் கூறுகிறார்: மறைத்து வைக்கப்பட்டிருந்த ஆயுதங்களெல்லாம் இப்பொழுது வெளிப்பட்டன. ஏனெனில் (நாம் முன்பு பார்த்தது போல சென்னை அரசு மேஜர் பாணர்மனுக்கு இட்ட கட்டளைப்படி)



ஆயுதங்களை விரைவில் தேடிக் கைப்பற்றுவதைவிட அவற்றிற்குள்ள தாராளமான விலையைக் கொடுத்தால் எளிதில் எல்லா ஆயுதங்களும் ஒப்படைக்கப்பட்டுவிடும் என்ற கொள்கை அமுலிலிருந்த காலம் அது. (ஓ! கும்பெனியான் காசுக்கு மயங்கவில்லையா விடுதலை வீரர்கள்! - ந.ச.) பறிமுதல் செய்யப்பட்ட பாளையங்களிலுள்ள மக்கள் ஆங்கிலேயருக்கு எதிராகத் தங்கள் வலிமையைக் காட்டத் தக்க வாய்ப்பு ஏற்பட்டதைக் குறித்து மகிழ்ந்தனர். (உம்! - ந.ச.) ஏனெனில் அரசாங்கம் விரும்பிய அமைதியான வாழ்க்கையைப் பாளையக்காரர்கள் பெரிதும் வெறுத்தார்கள் என்பதில் ஐயமில்லை. (அப்படியா? நல்லது. பகைவரே பாராட்டினால் நண்பர் நைவாரே! - ந.ச.)

**பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து பின்வாங்குதல்**

இப்பொழுது ஜெனரல் வெல்ஷ் கூறுவதைக் கவனிப்போம்:

வலிமையுள்ள துப்பாக்கி ஒன்றுகூட இல்லாமல், முற்றுகையிடும் படைக்குத் தலைமை தாங்க சில ஐரோப்பிய வீரர்கள் கூட இல்லாமல், பட்டப்பகலில் அவ்விடத்தைக் கைப்பற்ற முயற்சித்தது பைத்தியக்காரத் தனத்தின் அடுத்த செயலாகும். (!-ந.ச.) எனவே, கோட்டைக்கு ஒரு மைல் தூரத்தில் உள்ள ஒட்டப்பிடாரம் (கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி, பிறந்த ஊர்) என்ற கிராமத்திற்கு அருகே ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தனர். நாங்கள் அங்கு சதுரமாகப் பாசறையை அமைத்தோம். வடக்கே தானியக் குவியல், தெற்கே ஒரு குளக்கரை; கிழக்குப் பக்கத்தில் கிராமம்; மேற்குத் திக்குக்கு எதிரே பாஞ்சாலக்குறிச்சி. சிறிது உணவும் ஓய்வும் எடுத்துக் கொண்ட பிறகு அப்படையை இரண்டாகப் பிரித்து இரண்டு வெவ்வேறு இடங்களில், எதிரிகள் எங்கள் தாக்குதலை அறியாவண்ணம் மறைத்துக் கொள்ள வாய்ப்பாகப் பொழுது இருட்டியபின், தாக்குவதென்று திட்டமிட்டோம். சிறிது நேரத்திற்குப் பின் எங்களுடைய வேவு ஆட்கள் நாங்கள் விரும்பி ஏற்கத் தகாத செய்தியுடன் திரும்பினர். ஐயாயிரம் பாளையக்காரர்கள் இருட்டின பின் எங்களைத் தாக்கத் தயாராயிருப்பதாக அவர்கள் கூறினர். (!-ந.ச.) இது நாங்கள் எதிர்நோக்காத திடுக்கிடும் செய்தியாகும். முதலாவதாக, மந்திரத் திறனால் ஆறு நாட்களில் முன்போலவே வலிமைவாய்ந்த கோட்டை எங்களுக்கு எதிராக நின்றது. இரண்டாவதாக, அதைக் காப்பவர்கள் எண்ணிக்கைக்கு அப்பாற்பட்டவராயிருந்தனர். எண்ணிக்கையில் மிகுந்திருந்த அவர்களே எங்களைத் தாக்குபவர்கள் போலிருந்தார்கள். எனவே, நாங்கள் அங்கிருக்க வேண்டிய தேவை இல்லை எனத் திரும்பிவிடத் தீர்மானித்தோம். வீரர்களும் தலைவர்களும் இரண்டு முறை கடினமான படை நடப்பாலும், இரவு தூக்கமின்மையாலும் மிகத் தளர்ச்சி அடைந்திருந்தனர். எனவே மற்றொரு

இரவும் விழித்திருந்து எங்களை எதிர்நோக்கியிருந்த இரவுத் தாக்குதலை அதற்குரிய சுறுசுறுப்புடன் விழிப்புணர்வோடு ஏற்க இயலுமா என்பது ஐயப்பட வேண்டிய செயலாயிருந்தது. எனவே துருப்புகள் எச்சரிக்கப் பட்டன. மாலை இரண்டு மணி அளவில் எங்கள் மூட்டை முடிச்சுகளை நடுவே வைத்து அவற்றைச் சுற்றிலும் நீண்ட சதுரத்தில் படை அமைக் கப்பட்டது. பீரங்கிகள் முன் பக்கத்திலும் பக்கவாட்டிலும் நிரவி அமைக் கப்பட்டது. நாங்கள் கோட்டையைத் தாக்கத் தயாராவது போன்று வெளியே வந்தோம். ஒவ்வொரு பகுதியிலும் வீரர்கள் நிறைந்திருந்தனர். 1500 வீரர்களடங்கிய படையையும் எல்லைக்கு அருகே இரண்டாயிரம் வீரர்கள் மாலை சூரிய ஒளியில் பளபளக்கும் நீண்ட ஈட்டிகளுடன் இருந்தனர் (என்ன காட்சி! - ந.ச.) என்பதை ஒரு வினாடியில் தெளி வாகத் தெரிந்து கொள்ள முடிந்தது.

படை அமைப்பு முடிந்ததும் நாங்கள் படை நடப்பைத் தொடங்கி னோம். கோட்டையை நோக்கியல்ல; பாளையங் கோட்டையை நோக்கிப் படை புறப்பட்டது. (!!!ந-ச) இடையே இருட்டில் பகைவர் படை ஒன்று உரத்துக் கூவிக் கொண்டும் கூச்சலிட்டுக் கொண்டும் எங்கள் துப்பாக்கி முனைவரை நெருங்கி வந்துவிட்டது. இப்பொழுது சதுர வடிவத்தை இழந்துவிட்ட எங்கள் படையின் பக்கவாட்டில் நல்வினை வாய்ப்பாய் காப்டன் வாசே தலைமையில் மூன்றாவது அணியைச் சேர்ந்த முதலாவது எறிகுண்டு வீச்சுப்படை, இரண்டு 6 பவுண்டு பீரங்கிகளுடன் அமைந்திருந்தது. அவர்களை நெருக்கத் திலிருந்து தாக்க எண்ணியதால், தொல்லையின்றி அவர்கள் எங் களருகே வரும்வரை அவன் விட்டுவைத்தான். பின்னர் இரண்டு முறை தானே பீரங்கியை வெடித்து 10 எதிரிகளைச் சாய்த்தான் (ஆம்! வெள்ளையர் வெற்றி வீரத்தின் வெற்றி அன்று! பீரங்கியின் வெற்றி! - ந.ச.) எஞ்சியவர் வியப்புடன் விரைவில் சிதறி ஓடித் தப்பினர். அதற்குப் பின் அந்த நீண்ட துன்பம் நிறைந்த படை நடப்பில் எதிரி களால் எவ்விதத் தொல்லையும் ஏற்படவில்லை. அப்பயணம் இரவு முழு வதும் நீடித்தது. சாலையினருகே உள்ள ஒவ்வொரு புதருக்குப் பின்னும் எதிரிகள் இருப்பார்களோ என்று எங்கள் கற்பனையில் தோன்றிக் கொண் டிருந்த அச்சமே உண்மையில் பகைவர்களுடைய உண்மையான தாக் குதல்களைவிட எங்களைப் பெரிதும் துன்புறுத்தியது. (புலிகள் பற்றிய கிலி.: - ந.ச.) இவ்வாறாக, மூன்றாவது பயணத்தையும் செய்து முடித்தோம். இச்சூழ்நிலையில் எங்கட்கு ஏற்பட்ட இழப்பு இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும்தான். நாங்கள் 10 ஆம் தேதி காலை 9 மணிக்குப் பாளையங்கோட்டையை அடைந்தோம்.



பாளையங்கோட்டையிலிருந்து படைகள் வந்ததும் உடனே கோட்டைத் தாக்குதலைத் தொடங்குவதா வேண்டாமா, அப்படித் தொடங்கினால் மேலும் குழப்பங்கள் நேரிடுமா அல்லது படைகள் சிறிது காலம் பின்வாங்கித் திருச்சியிலிருந்து புதுப்படைகள் வரும்வரை காத் திருப்பது சிறந்ததா என்று எண்ண வேண்டியதாயிற்று என்று ஹச்சு கூறுகிறார். மேலும் அவர் கூறுவதாவது:-

பின் சொல்லப்பட்ட திட்டம் துன்பமானதாயினும் மகிழ்ச்சியுடன் மேஜர் மெக்காலேயும் மேஜர் ஷெப்பர்டும் ஒரு மனதாய் அதற்கு உடன் பட்டனர். 3-வது அணி (3rd Regiment) இரவு நேரக்கூடிய துன்பங்களி லிருந்து எங்களை உறுதியுடன் தொடர்ந்து பாதுகாத்தது.

அதற்குள், நடைபெற்ற நிகழ்ச்சிகளில் பல, எதிரிகளுக்கு மிக நல மாகவே அமைந்தன. பிப்ரவரி 27 ஆம் தேதி; வலிமையற்ற நன்கு பாது காக்கப்படாத காடல்குடி கோட்டையை ஒரு படை தாக்கியது. ஆனால் எங்கள் எதிரிகள் எப்படியோ குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னதாகவே எங்கள் தாக்குதலைப் பற்றி அறிந்து காவல்படைக்குத் துணையாக இரண்டாயிரம் பேர்கள் அடங்கிய படையை, உடனே அனுப்பி வைத்தனர். எங்கள் வீரர்களும் முடிவாக அவர்களை எதிர்த்து நின்றனர். வீரமும் ஒழுங்கும் நிறைந்த படையால் எண்ணிக்கை மிகுதியான எதிரி களை ஒவ்வொரு அடியிலும் எவ்வளவு எதிர்த்துத் தாக்க இயலுமோ அவ்வளவு எதிர்த்துப் போரிட்டனர். போர்க்களத்தில் 3 பேர் கொல்லப் பட்டனர். 18 பேர் காயமடைந்தனர். அவர்களைப் போர்க்களத்திலேயே போட்டு விட்டு எங்கள் படையினர் பின்வாங்கக் கட்டாயப்படுத்தப் பட்டனர். ஆனால் பகைவரின் இழப்பைக் கணக்கிடவே இயலவில்லை.

இப்படியாக, அரசாங்கத்திற்குச் சொந்தமான பல சிறுசிறு கோட்டைகள் பாளையக்காரர் வசம் மாறின. இதனால் பாளையக்காரர் களின் படைக்கலன் சேமிப்பில் சுமார் ஆயிரம் துப்பாக்கிகள் கூடுதலாயின. பாளையங்கோட்டைக்கும் பதினைந்து மைல் தெற்கே ஆற்றங்கரையில் அமைந்திருந்த பலமற்ற கோயில் திருவைகுண்டம். சிறிதே பாது காப்புடையது; இது ஒப்புமைக்கோ அல்லது எதிர்நோக்குகளுக்கோ அப் பாற்பட்ட ஒன்றாகத் திகழ்ந்தது. இந்தக் கையளவே அமைந்த சிறிய - ஆனால் வீரம்வாய்ந்த படையை ஓட்ட மேஜர் ஷெப்பர்டு 3வது அணி யிலுள்ள பட்டாளத்தின் தலைமையில் இரண்டு 6 பவுண்டு பீரங் களுடன் படையெடுத்துச் சென்றார். மார்ச் மாதம் 13 ஆம் தேதி பாளையங் கோட்டையை அடைந்ததும் அங்குப் பயண மூட்டை மூடிச்சுகளை எறிந்து விட்டனர். 16 ஆம் தேதி காலை ஆற்றின் மறுகரையில் திருவை குண்டம் கோயில் கண்ணுக்குத் தெரிந்தது. அவர்கள் எதிரிகளின்

கூட்டங்களால் உடனே தாக்கப்பட்டனர். அக்கரையிலுள்ள அவர்கள் தோழர்களிடம் எதிரிகளிடையே நுழைந்து நீந்திச் சென்றனர். எல்லாப் படை வீரர்களும் சிறந்த முறையில் போர் செய்தனர். சிறப்பாக எறிகுண்டு வீசுபவர்கள் எதிரியின் பெரிய படை ஒன்றை எதிர்த்து அவர்களை ஓடும்படி செய்தார்கள். பாளையக்காரர்கள் அந்த இடத்தைக் கைப்பற்ற எண்ணி அதன் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் முற்றுகை இட்டனர். கோயிலில் நடப்பதை அறிந்து கொள்ள இயலாதபடி மறைக்கப் பெரிய மண் வரப்புகளை எழுப்பினர். மேலும் அவர்கள் அரனைக் கடக்க மதிலேறுவதற்குப் பயன்படத்தக்க ஏணிகளை விரைவாகத் தயாரித்துக் கொண்டிருந்தனர். அப்பொது எங்கள் படை அவர்களைத் தாக்கியது. அதனால் கோட்டைக் காவல்படை பின்வாங்கியது. நாங்கள் பாளையங்கோட்டைக்குத் திரும்பி வரும்போது எதிரிகள் எங்கள் வீரர்களால் அடிக்கடி சுடப்பட்டாலும் வழிநெடுகிலும் எங்களுக்குத் தொல்லைகள் தந்து கொண்டிருந்தனர். நாங்கள் எதிர்பார்த்த அளவு எங்கட்கு அதிக இழப்பு இல்லை. மறுபடி முற்றுகைக்குத் தேவையானவற்றைச் சேர்க்கும் படைகள் பாளையங்கோட்டையில் தங்கின.

நாட்டின்நிலை இவ்வாறு குழப்பத்திலிருக்கும்போது, அக்காலத்திய உள்நாட்டுக் கிறித்தவர்கள் எண்ணிக்கையில் குறைவாயிருந்த போதிலும் அவர்களுடைய கிறித்தவ ஆட்சியாளர்களின் கொடுமைகளையும் பகிர்ந்து கொள்ள வேண்டியிருந்தது. 1802 ஆம் ஆண்டிற்கான கிறித்தவ அறிவுக் குழுவின் (Christian Knowledge Society) அறிக்கையிலிருந்து இதை நாம் அறிகிறோம்.

பிரிட்டிஷ் அரசாட்சியை எதிர்ப்பதனால் உள்நாட்டுக் கிறித்தவர்களையும் ஆங்கிலேயருடன் சேர்த்து எண்ணும் குழப்பம் நிறைந்த பாளையக்காரர்களால் தெற்கிலுள்ள மதக் குழுக்கள் மிகுந்த துன்பத்தை அடைந்தன. கம்பெனியின் எல்லைகட்குள் கொள்ளையிட்டபோது, அவர்கள் கிறித்தவர்களைச் சூறையாடினர்; சிறைப்பிடித்தனர்; துன்புறுத்தினர். அவர்களது கோயில்கள் சிலவற்றை அழித்தனர். அவற்றிலிருந்த புத்தகங்களை எரித்தனர். இந்தத் துன்பங்கள் குறைவதற்கான வழியில்லை எனத் தோன்றியவுடன் மக்கள் அவர்களது வீடுகளை விட்டு ஓடிக் காடுகளில் அடைக்கலம் புகுந்தனர்.

பொதுவாகப் பாளையக்காரர்களைப் பற்றியும் குறிப்பாக பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனைப் பற்றியும் சிறு குறிப்புகளை ஜெனரல் வெல்ஷ் தருகிறார். அவர் இவ்வாறு செய்யும் போது இரு வேறு ஆட்களை ஒன்றாகக் குழப்புகிறார்.

அவர்கள் தலைவனான கட்டபொம்ம நாயக்கன் இரண்டு ஆண்டு



கட்கு முன் கர்னல் பானர்மன் தலைமையில் சென்ற படையை எதிர்த்துக் கோட்டையை வெற்றிகரமாகக் காப்பாற்றினான். விரைவில் அவனும் குடும்பத்தினரும் கைதாக்கப்பட்டுக் கடும் சிறைத் தண்டனையிலிருந்தனர்.

முந்திய விவரங்களிலிருந்து மேஜர் பானர்மனை எதிர்த்துக் கோட்டையைக் காப்பாற்றப் போரிட்ட கட்டபொம்ம நாயக்கன் தூக்கிலிடப்பட்டான். சிறை பிடிக்கப்பட்ட கட்டபொம்ம நாயக்கன், உயிரோடிருந்த அவனது தம்பி என்றும் பார்த்தோம்.

**பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்புதல்**

எதிர்நோக்கியிருந்த உதவிப்படை திருச்சிராப்பள்ளியிலிருந்து புறப்பட்டதும், மேஜர் மக்காலே அவருடைய படையைக் கயத்தாற்றை நோக்கி நடத்திச் சென்றார். உதவிப்படை வந்து தன்னுடன் சேர்ந்து கொள்ளக் கூடிய இடமாகப் பார்த்து அங்கு தங்கினார். எங்கள் பாசறைக்கு வெளியே எதிர்ப்பவர்கள் இல்லாமையால், எதிரிகள் தங்கள் நேரத்தை வீணாக்காது தூத்துக்குடியை முற்றுகையிட்டனர். இந்நிகழ்ச்சி பற்றிய செய்தி 'டச் ஆட்சியில் தூத்துக்குடி பற்றிய குறிப்பு' என்ற பகுதியில் ஏற்கனவே விவரிக்கப்பட்டுள்ளது. பாஞ்சாலங்குறிச்சியை ஒடுக்கக் கயத்தாற்றில் கூடிய படைகளின் விவரங்களை ஜெனரல் வெல்ஷ் தருகிறார். அப்படையெடுப்புக்கு ஒன்பது துப்பாக்கிகளுடன் ஏறக்குறைய 3000 வீரர்கள் மொத்தத்தில் தேவைப்பட்டனர்.

முதலில் நாங்கள் சென்றது எட்டு மைல் தூரத்திலுள்ள ஓடராம்பட்டி, இரண்டாவது மேலும் எட்டு மைல் தூரத்திலுள்ள பசுவந்தலை. இவை முதலில் எதிரிகள் இடையே புகுந்து தாக்கிய சாலையிலேயே இருக்கின்றன. எங்கள் இடத்தைவிட்டுப் புறப்பட்டதும் ஐந்து அல்லது ஆறு நூறு வீரர்களடங்கிய படை, வீரத்தோடு எங்களைச் சந்திக்க முன்னேறின. மேஜர் அவர்களை எதிர்க்கக் குதிரைப்படைக்கு உத்தரவிட்டார். அந்த இரண்டு படைகளில் அருகிலும் பக்க வாட்டிலுமுள்ள காவல்காரரைத் தவிர்த்து எவ்வளவுதான் அதிகமாக இருந்தாலும் தொண்ணூறு ஆட்களுக்குமேல் இருக்கமாட்டார்கள். ஆனால் அவர் ஜேம்ஸ் கிராண்ட் என்பவரின் தலைமையில் முன்னேறினர். கிராண்ட் நான் இது வரை கண்ட சிறந்த திறமைவாய்ந்த வீரர்களுள் ஒருவர். அவர்களிடம் இரு சிறு துப்பாக்கிகள் இருந்தன. எதிரிகள் அருகில் நெருங்கியவுடன் அவற்றால் சுட்டனர். முதலில் அவர்களது செய்கை பின்வாங்கத் தூண்டுவது போலத் தோன்றியது. ஆனால் அவர்கள் நிதானமாக சண்டையிட்டுக் கொண்டே பின் வாங்கினார்கள். துப்பாக்கிகள் வைத்திருந்த வீரர்கள் தப்பி

யோட மிக விரும்புகிறார்கள் என்பது தெளிவாய்த் தெரிந்தது. எங்கள் குதிரைப்படை சில நூறு மூவடி தூரத்திற்கு வந்ததும் லெப்டினண்ட் கிராண்ட் 'செயின்ட் ஜார்ஜ், சுடு' (தெய்வத் திருவடியார் பெயரால் சுடுவதற்கு ஆணையிடும் முறை...-ந.ச.) என்று உத்தரவிட்டார். அதே சமயத்தில் எதிரிகளும் நின்று முன்னேறிக் குதிரைகளின் மார்பில் ஈட்டிகளைச் சொருகினர். அந்தத் தாக்குதலின் வேகத்திலே ஒரு வினாடியில் (! - ந.ச.) பயங்கர அரணான எங்கள் படை உடைந்தது. பிறகு எங்கள் வீரர்கள் வீரமுடையவர்களாக ஆனால் திறமையற்ற காலாட்படைகளாகிய அவர்களைத் தனித்தனியே எதிர்ப்பதில் ஈடுபட்டனர். இடையே நல்வினை காரணமாக ஒரு அடர்ந்த காடு குறுக்கிட்டது (இயற்கை! - ந.ச.) அதன் வழியாகப் பகைவர்கள் தப்பிவிட்டனர். இந்தியாவில் கரிசல்மண் என்றழைக்கப்படும் மண்ணாலாகிய தரையில் குத்துச்செடிகள் வளர்ந்திருந்தன. இது எங்கள் வீரர்களுக்குப் பாதகமாயிருந்ததால் அதற்குள் நுழைய இயலவில்லை. ஆனால் பகைவனின் எதிர்ப்பு பலமாக இருந்தது. அதில் லெப்டினனட் கிராண்ட் நெஞ்சில் ஈட்டி குத்திக் காயமடைந்தார். அவனுடைய சுபேதார் ஷெயிக் இப்ராம் மற்றும் நான்கு குதிரை வீரர்களும் இறந்தனர். லெப்டினண்ட் லீன் தன் நாயக்கை இழந்தான். பதினோரு வீரர்கள் காயமடைந்தனர். இரண்டு குதிரைகள் கொல்லப்பட்டன. பதினோரு குதிரைகள் காயம் பட்டன. இறந்த பலருள் 96 இறந்தவர்களின் உடல்கள் போர்க்களத்தில் எண்ணப்பட்டன. பகைவர் காயமடைந்த எத்தனை போர்களைத் தூக்கிச் சென்றார் என்பதை அறியமுடியவில்லை. கிராண்ட் தன் கையாலேயே நான்கு பேர்களைக் கொன்றார். பயங்கரமான காயம் பட்டபின் கடைசியாக ஒருவனைக் கொன்றார். அவருடைய சுபேதாரும் தான் இறப்பதற்குமுன் நான்கு அல்லது ஐந்து பேர்களைக் கொன்றார். அடுத்த நாள் மார்ச் 31 ஆம் தேதி கலகக்காரர்களின் ஜிப்ரால்டரைக் காணக்கூடிய எல்லைக்குள் நாங்கள் வந்து சேர்ந்தோம்.

## முதல் தாக்குதலும், தோல்வியும்

நாங்கள் ஒழுங்கற்ற சாய்வு சதுரமாயிருந்த கோட்டையைக் கண்டோம். அதன் இரண்டு பக்கங்கள் ஏறக்குறைய 500 அடி, இரண்டு அகலங்கள் ஏறக்குறைய 300 அடி மட்டும் இருந்தன. உறுதியும் ஒட்டுந் தன்மையுமுள்ள மண்ணினால் முழுக் கோட்டையும் கட்டப்பட்டிருந்தது.

பொதுவாக, அதன் சுவர் 12 அடி உயரமிருந்தது. அதில் சதுரமான கொத்தளங்கள் இருந்தன. அவற்றிற்கு மிகக் குள்ளமான இடை மதில்கள் இருந்தன. ஒரு சில பழைய துப்பாக்கிகள் அந்தக் கொத்தளங்களின் மீது வைக்கப்பட்டிருந்தன. முழுக் கோட்டையும் அடர்ந்த முள் வேலியால் சூழப்பட்டிருந்தது. ஆனால் அதற்கு அகழியில்லை. காலை 8 மணிக்கு அங்கு போய்ச் சேர்ந்ததும், சுமார் 900 கெஜ தூரத்திலிருந்து இரண்டு 12 பவுண்டு ஒரு 8 பவுண்டு துப்பாக்கிகளினால் வடமேற்கு அரணை உடனடியாகத் தாக்குவதற்கான முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன. $8^1/_2$ மணிக்கு சுடத் தொடங்கினோம். ஆனால் நாங்கள் எதிர் நோக்கியது போன்ற அழிவு எந்த விதத்திலும் ஏற்படவில்லை. எனவே மதியத்தில் சுவற்றிலிருந்து சுமார் நானூறு கெஜ தூரத்தில் உள்ள மற்றொரு கரைக்குத் துப்பாக்கிகள் நகர்த்தப்பட்டன. அங்கு 3.30 மணி வரை தொடர்ந்து துப்பாக்கித் தாக்குதல் நடைபெற்றது. இந்த இடத்தில் பிளவு ஏற்படலாமென்று தோன்றினமையால் தாக்குதலுக்கு ஆணையிடப்பட்டது.



பீரங்கிப்பட்டாள அலுவலர் 'பிளவு' என்று கருதியது உண்மையில் பிளவே அல்ல என்பதை நீண்ட நேரம் கழிந்த பின்னரே கண்டறிந்தனர்.

இடை மதில்களிலிருந்தும் எங்களால் அழிக்க இயலாத 5 அல்லது 6 கொத்தளங்களிலிருந்தும் கற்பனை செய்யத் தக்க கடும் தீத்தாக்குதலுக்கிடையே கோட்டையைப் பாதுகாக்கும் படையினர் உற்சாகமாக முன்னேறினர். எங்கள் பட்டாளத்தினர் பகைவர் மேல் வேகமாய்ப் பாய்ந்தனர். ஆனால் பகைவர்களுடைய வேகத்தை எதுவும் தடை செய்யவில்லை. அரணைக்கூட வெகுவேகமாய்க் கடந்து விட்டனர், அந்தப் பிளவைச் சூழ்ந்து கொள்வதற்கான முயற்சிகள் திரும்பத் திரும்பச் செய்யப்பட்டன. ஆனால் எல்லாம் வீணாயின. ஏனெனில் கோட்டை அவ்வளவு உறுதியுடைய படையால் காக்கப்பட்டதன்றித் தாக்கிய இடத்தை அடைவதே பெரும்பாடாகிவிட்டது (உம்! ந.ச.) முயற்சியுடன் கோட்டை உச்சியை அடைந்த ஒவ்வொரு வீரனும் உடனுக்குடன் எதிர்த்துத் தாக்கி எறியப்பட்டான் (ஐயோ! ந.ச.) வேல்களாலும் துப்பாக்கிகளாலும் அவர்களது உடல் புண்களுடன் பிளக்கப்பட்டன. அங்கு தங்கித் தாக்க அவர்களுக்கு இடமே கிடைக்கவில்லை. நீண்ட நேரத்திற்குப் பிறகு, படைகள் பின்வாங்க உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. (சரி .... - ந.ச.) உண்மையிலேயே இரக்கத்திற்குரிய அச்சமூட்டத்தக்க காட்சி அங்கு தொடர்ந்து ஏற்பட்டது. கொலை செய்யப்பட்டவரும் புண்பட்டவரும் பலரும் கோட்டையின் உடைப்பருகே அடிவாரத்தில் விடப்பட்டனர். உடனே எதிரிகள் திடீரென அவற்றின் மேலிருந்து கிளம்பிப் பின்புறம் தொடர்ந்து சென்றனர். மற்றவர்களோ செத்தவர்கள் சாகாதவர்கள் எல்லாருடைய உடல்களையும் துளைத்தனர். இந்தக் கோட்டையின் பிளவைக் காக்க எதிர் தாக்குதல் 18 முதல்

20 அடி தூரத்திலிருந்து வேல்களால் நடத்தப்பட்டது. அதற்கப்பால் மனிதர் கூட்டம் ஒன்று உயர்ந்த ஓர் இடத்தில் ஓயாது நெருப்பூட்டிக் கொண்டிருந்தது. கோட்டையிலுள்ள மற்றவர்கள் எதிரிகளைப் பக்க வாட்டில் தாக்கினர். இக்குழப்பத்தில் பிளவினருகிலிருந்து நெருப்புக் கருகில் வைக்கப்பட்ட குட்டைப் பீரங்கி ஒன்றைக் கைப்பற்ற ஒரு அதி காரியும் ஏறக்குறைய 50 சிப்பாய்களும் சென்றனர். அவர்களுள் ஒரு அதி காரியும் பல சிப்பாய்களும் இறந்தனர். வேறு இரண்டு அதிகாரிகளும் ஐந்து அல்லது ஆறு சிப்பாய்களும் காயமடைந்தனர். எதிரிகளின் சார்பில் ஏற்பட்ட இழப்பைப் பற்றிய கணக்கு எங்களுக்குத் தெரியாது. (உம்! - ந.ச.) கோட்டையிலிருந்து பத்திரமான இடத்தை அடைந்த உடனேயே அங்கு படை அணி வகுக்கப்பட்டது; கூடாரத்திற்கான இடம் குறிப்பிடப்பட்டது. அந்த இடம் கோட்டைச் சுவரிலிருந்து மிக அருகே ஏறக்குறைய 1500 மூவடி தூரத்தில் அமைந்திருந்தது. கோட்டைக்கு இணையாகச் சென்ற அணிவகுப்பின் நடுவில் ஒரு உயர்ந்த கூடல்வாய் இருந்தது. எங்களுடைய படைகளும் மற்ற சேமிப்புப் பொருள்களும் எதிரிகளின் கண்களுக்குத் தெரியாவண்ணம் அதன்பின் வைக்கப் பட்டன. முதலில் எந்த இடத்தில் பிளவு உண்டாக்க முயற்சித்தோமோ அந்தக் கரையில் எங்கள் காவலர் நிறுத்தப்பட்டனர். கூடார நிழலில் நாங்கள் எல்லாரும் ஒரே விதமான அபாயங்களுக்கும் அல்லல்களுக்கும் உட்பட்டதால் எங்களிடையே வழக்கத்திற்கு மாறான அமைதி நிலவியது. அந்த அமைதி ஒன்றுதான் அன்று எங்களை விட்டுப் பிரிந்த உடன் பிறந்தவர்களின் நினைவுக்காகச் செலுத்தப்பட்ட நன்றிக் கடனாகும். அந்தவரை எதிரிகளும் எங்களுடைய துக்கத்திற்கு மதிப்பளித்து, நாங்கள் அல்லல் அற்ற அமைதியில் ஆழ்ந்திருக்க விட்டு விட்டனர்.

எங்களுக்கு இன்று ஏற்பட்ட தோல்விகள் அனைத்தும் உறுதியாக நீதிக்குப் புறம்பானது. (ஓ! அது என்ன நீதியோ! - ந.ச.) பிளவு எவ்வாறு காக்கப்பட்டது என்பதே விந்தையான செயலாகும். ஏனெனில் உடைந்த கைப்பிடிச் சுவருக்கு மேலே இருந்து கோட்டையை உண்மை யாகக் காத்தவர்கள் ஒருவரும் தலைகாட்டவே இல்லை. உறுதியாக அச்சுவர் முழுவதும் அழிக்கப்பட்டது. எங்களுடைய தாக்குதலுக்கு நீண்ட நாட்களுக்கு முன்பே கோட்டையின் கொத்தளத்திற்கு ஏறக்குறைய வாய்ப்புகள் நிரம்பிய வழி ஒன்று செய்யப்பட்டிருந்தது. ஆயினும் இங்கு ஈட்டித் தொடர்கள் மட்டுமே எங்களுக்கு காட்சி தந்தது. மற்ற ஒவ்வொரு வேலையிலும் ஈடுபட்ட எதிரியின் ஆட்கள் சிறிதும் கட்டுப்பாடின்றி முற்றுகையை மறைத்துக் கொண்டு நின்றனர். இவ்வாறு நின்ற ஒவ்வொருவரும் உடனுக்குடன் எங்கள் வீரர்களால் சுடப்பட்டனர். எனினும், அடிக்கடி அந்த இடத்தில் வேறு



வேறு ஆட்கள் நிறுத்தப்பட்டனர். இடையே 5000 பேர்களுக்கு மேற்பட்டவர்களால் எழுப்பப்பட்ட இயற்கைக்கு அப்பாற்பட்ட கூச்சல்கள் எங்களைப் பின்னேறச் செய்தன. முற்றுகையில் ஈடுபட்ட 120 ஐரோப்பியர்களில் 46 பேர் மட்டும் காயமின்றித் தப்பித்தனர். மொத்தப் படையினரின் அதிகாரிகள் பீரங்கிப்படை ஆகியவர்களைச் சேர்த்து 106 பேர்கள் கொல்லப்பட்டனர்; காயமடைந்தனர். காப்டன் சார்லஸ் டிராக்டர் தலைமையில் கம்பெனி சிப்பாய்களுடன், பாளையக் காரனின் ஆட்களடங்கிய படையும் எங்களுடன் சேர்ந்திருந்தது என் பதை நான் குறிப்பிட வேண்டும்.

### எதிரிகளின் பலமான தாக்குதல்

நாங்கள் கோட்டையின் மேற்குப் பக்கத்திலிருக்கும் பொழுது வீரமும் நல்லெண்ணமும் நிறைந்த வீரர்கள் கோட்டையில் மறுபுறத்தில் மதிலேறிக் குதிக்க முயற்சிகள் செய்தனர். ஆனால் அவை பயனற்றவை யாயின. அதனால் ஓரளவு இழப்பு ஏற்பட்டது எனினும் அதையறிந்த ஆணையார்ந்த (அதிகாரபூர்வமான) குறிப்புகள் எங்களிடம் இல்லை.

மேஜர் மெக்காலேயின் போர்க்கருவிகள் அவரது போர்க் குறிக் கோளுக்குப் போதுமானதாக இல்லை. துப்பாக்கிகள் பயன்படுத்தப் பட்டதால் உருச்சிதைந்ததுபோல முற்றும் பயனற்றவையாயிருந்தன. திருப்பித் தாக்குவதைப் பற்றி எண்ணவே இல்லை.

தற்போது அரசு எங்களுடைய கடமையின் முழுக் கொடுமை களைக் கண்டு விழிப்புற்றனர். கர்நாடகத்தில் வெவ்வேறு இடங்களி லிருந்து மிகப்பெரிய உள்நாட்டுப் படைகளுக்கு ஆணைகள் பிறப்பிக் கப்பட்டன. எச்.எம்.77-வது ஆங்கிலப்படை மலபார் கரையிலிருந்து வரவழைக்கப்பட்டது. குதிரைப்படை அணி ஒன்று புறப்படும்படி செய்யப்பட்டது. திருச்சிராப்பள்ளியிலிருந்து பலம் வாய்ந்த பீரங்கிப் படை விரைவில் அனுப்பப்பட்டது. இதனுடைய படைத்தலைமை உயர் அதிகாரி ஒருவருக்கு மாற்றப்பட்டது. அவர் இராணுவ அனுபவம் வாய்ந்த மிகப் பெரிய வீரர். அடுத்து வந்த பல ஆண்டுகளுக்குப் புகழ் பெற்ற மிக உயர்ந்த இராணுவ அதிகாரியாக இருந்த கர்னல் பீட்டர் அக்னியூ என்பவராவார்.

பாஞ்சாலங்குறிச்சிக்கு எதிராகப் போரில் உதவி செய்யத் தேவை யான் ஒரு படைப் பகுதியைத் திருநெல்வேலி கலெக்டர் இலங்கை அர சாங்கத்திடம் விண்ணப்பித்து, அப்படையைப் பெற்றார். மேலிடத்து உத் தரவின்றி அவர் இதைச் செய்தார். அவருடைய செய்கையை மதராசு அர சாங்கம் ஏற்காது மறுத்து அச்செயலை விலக்கும்படி செய்தது.

ஹக்சு கூறுகிறார்: செயல்பட வேண்டிய இடத்திலே இப்படைகள் ஒன்றுகூட இரண்டு மாதங்கள் ஆயின. இடைக்காலத்தில் எதிரிகளின் எண்ணிக்கையை கூடுமான அளவுக்குக் குறைக்கும் போர்களைத் தவிர மெக்காலேயின் அதிகாரத்திற்குட்பட்ட போர்ச் செயல்கள் சிறிதாகவே இருந்தன. அதற்கிணங்க, கோட்டைக்கு மேற்குப்புறத்திலே ஒன்று அல்லது இரண்டு மைல் தூரத்தில் உள்ள ஒரு சிறு அணைவரம்பிலே தன் படை வீட்டை அமைத்திருந்தான். எங்கள் இருப்பிடத்திலே உண்டாக்கிய அவர்களது இரவுக் காலத்துத் தொல்லைகளும், எங்களுடைய கொள்ளையடிக்கும் வீரர் பகுதியினரிடம் பகல் நேரத்தில் செய்த சிறுசிறு போர்களும் அடிக்கடி நடைபெற்றுக் கொண்டிருந்தன. மேலும் மழைக்காலத்தில் எங்கள் வீரர்களிடமிருந்த துப்பாக்கிகளைவிட பகைவர்களது ஈட்டிகள் மிக்க வலிமை வாய்ந்தன என்ற எண்ணத்தை அவர்கள் கொண்டிருந்ததாகவும் தெரிகிறது. (மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்! - ந.ச.)

ஹக்சு சுருக்கமாகக் குறிப்பிடும் இந்நிகழ்ச்சி பற்றிய விவரத்தைத் தான் வெல்ஷ் குறிப்பிலிருந்து நான் இங்கு எடுத்துக் கூறுகிறேன்.

"12 ஆம் தேதி காற்றும் மழையும் கலந்த பலமான இடியும் புயலும் திடீரென எங்களைத் தாக்கின. அத்தகைய சூழ்நிலையே ஈட்டிகளை எதிர்த்துக் குண்டு பொழியச் சாதகமான நேரம் என அறிந்து நாங்கள் அணிவகுத்து நின்றோம். ஆனால் இமைப்பொழுதில் இயற்கை இடியை அடுத்து தூரத்திலிருந்த வெளிக்காவலிலிருந்து எங்களுடைய ஆறு பவுண்டு பீரங்கி ஒளியுடனும் ஒலியுடனும் வெடித்தது. அதன்பின் விரைவில் வலிமைமிக்க படை ஒன்று எதிர்த்து வந்து மோதியது. இப்படையில் பீரங்கிப்படையின் ஒரு பகுதியுடன் சிப்பாய்களின் படையும் எங்களுக்கு மிக அருகிலிருந்த காவல் நிலையத்திலிருந்து 5 அல்லது 6 நூறு அடிகள் தூரத்திலிருந்த ஒரு இயந்திரத் துப்பாக்கியும் இருந்தன. வெளிக்காவல் ஆட்களை மதியத்தில் அகற்றி விடுவது வழக்கமாதலின், முதன்மையான அதிகாரியாகிய லெப்டினன்ட் எச்.டே வழக்கத்திற்கு மாறான மேகக் கூட்டங்களைக் கவனித்து மிக முன் அறிவிப்புடன் புயல் வருவதற்கான நிலையை உணர்ந்து மற்ற படையைத் தன்னிடமே நிறுத்திக் கொண்டு அதன் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டார். சூறைக்காற்று அவர்கள் முகத்தில் சுழன்று அடித்தது. அதைத் தொடர்ந்து ஓராயிரம் ஈட்டிக்காரர்களும் போரிடத் தொடர்ந்தனர். இவ்வாறு இரங்கத் தக்க நிலையில் இரு பெரும் விரோதிகளால் தாக்கப்பட்ட எங்கள் படையினர் சுடமுற்பட்டனர். ஆனால் ஒரு குண்டு கூடப் பாயவில்லை. ஒரு முறையே சுட்ட பின்னர் துப்பாக்கி எதிரிகள் வசமாயின. இயந்திரத்



துப்பாக்கியைக் காத்துக் கொண்டிருந்தவர்களைத் தாக்குவதைவிட துப்பாக்கியையே கைப்பற்றுவதில் மிக்க கவனம் செலுத்திய பாளையக்காரர் அப்பகுதியினரில் எட்டு போர்களை மட்டும் காயப்படுத்தி விட்டுத் தங்கள் பரிசுப் பொருளைக் கரிசல்மண் பூமி அனுமதித்த வரை வெகு வேகமாகத் தள்ளிக்கொண்டு சென்றனர். அதற்குள் எங்களது துணைப் படை வந்து தோன்றவே 'டே', 'கிளாசன்' இருவரும் அவர்களுடைய படையுடன் சென்று எதிர்த்தனர். கோட்டையிலிருந்து அவர்களுடைய உதவிக்காகப் பல நூறு ஆட்கள் விரைந்து வந்த போதிலும் பொருள்களைக் கைப்பற்றிக் கொண்டு வருத்தும் எதிரிகளாகிய பிளிஸ்தியர்களின் (இஸ்ரயேலர்களைத் துன்புறுத்திய போர் விருப்பமுள்ளவர்கள்) கைகளிலிருந்து எங்களுடைய இயந்திரத் துப்பாக்கியைக் கைப்பற்றினோம். மழை நின்றதும் தொடர்ந்து சுட்டனர். எங்கள் கூடாரத்திலிருந்தும் அதே போன்ற எங்கள் படைப் பகுதியினர் அவர்களை எதிர்த்துத் தாக்குதல் செய்தனர். பொதுவாகத் தாக்குதல் தொடர்ந்தன. இறுதியில் அது பயனுள்ள விளைவின்றி முடிந்தது என்றே நான் கூறுவேன். இரு பக்கத்தினரும் அதிக ஓல மிட்டனரே தவிர ஒரு செயலையும் செம்மையாய்ச் செய்யவில்லை. ஒரு மணி நேர சண்டைக்குப்பின் இருவரும் ஒருங்கு கூடி முடிவுக்கு வந்ததுபோலத் துப்பாக்கிச் சூடுகள் நின்றன. இருதிறத்தினரும் தங்கள் இழப்புகளைக் கணக்கிடத் திரும்பினர். அவற்றில் இடர் நிறைந்த புள்ளிக்கணக்கு குண்டுகள் செறித்திருந்த உறைகளாகத்தான் இருக்க வேண்டும். (பகையாரின் நகை பாரீர்! - ந. ச.)

## இறுதித் தாக்குதல்

எதிர் நோக்கியிருந்த படைகளெல்லாம் மே, திங்கள் இடையில் வந்து சேர்ந்தன. படைத்தலைவன் 'அக்னியூ' (Colonel Agnew) (ஆமாம்! நெருப்புத்தான்! தீதான்! தீயன்தான்! - ந.ச.) 21 ஆம் தேதி அன்று படைத் தலைமை ஏற்றான்.

அங்கு வந்து சேர்ந்ததிலிருந்து 24 ஆம் தேதி வரை கோட்டைச் சுவரில் பிளவு உண்டாக்க மிகப் பெரிய முயற்சிகள் எடுக்கப்பட்டன. காண்போருக்கு மிகுந்த வாய்ப்பு நலங்களோடு செயல்பட்டதாகத் தோன்றக்கூடிய விதத்தில் அன்றே அம்முயற்சி செய்து முடிக்கப் பட்டது. எனினும் எதிரிகள் பச்சை முள் மரத்தால் கோட்டைக்குச் செல்லும் எல்லா வழிகளிலும் அரணமைத்துவிட்டமையால் அவை சிறு சிறு தடைகளை அவ்வப்போது உண்டாக்கின. மே 23 ஆம் தேதி காலை, பகலவன் தோன்றும்போது கோட்டையின் தென்மேற்குக் கொத்தளத்தின் மீது எங்களது இரண்டு பீரங்கிப் படையினர் சுடத் தொடங்கினர். எங்களது ஆரவாரிப்புக்கு ஏற்றபடி பீரங்கிப் படையினர் கொத்தளத்தில் முக்

கியமாகத் தென் கோணப் பகுதியை இடித்தனர். மதியத்திற்குள் முற்றுகையிட்ட படையினர் முன்னேறத் தயாராயிருந்தனர். ஆனால் எங்களுடைய பழைய தளபதி, கர்னல் அக்னியூவை வேறொரு பழைய நண்பனின் உதவியுடன் தனிமையில் சந்தித்தான். அவனுடைய முடிவு சிறந்ததாகத் தோன்றியபோதிலும், அதற்கு மாறாக மறுநாள் வரை தாக்குதலைக் காலந்தாழ்த்தும்படி வேண்டிக் கொண்டான். எனவே, எதிரிகள் பிளவைச் சரிசெய்துவிடாதபடி இரவு முழுவதும் துப்பாக்கித் தாக்குதல் நடைபெற்றது. மறுநாள் காலை பாதுகாப்பு அமைப்புகளைத் தவிடுபொடியாக்கத் துப்பாக்கிள் திருப்பப்பட்டன. மதியம் 1 மணிக்குப் பிளவுபட்ட புற அரண் முழுவதும் துண்டிக்கப்பட்டது. கோபுரத் துப்பாக்கிகளைக் (Tower guns) கோட்டையின் பாதி வழிவரை செலுத்திய பின், முற்றுகையிட்ட படையினருக்கு முன்னேறும்படி கட்டளையிடப்பட்டது.

அந்நிலையில் முற்றுகையிடும் படையினர் வலிமையையும் அவர்களுக்கு உடனடியாகத் துணைசெய்யக் காத்திருந்த முழுப் படையின் வலிமையையும் அறிந்த, கோட்டையைப் பாதுகாத்த வீரர்கள் தங்கள் கடமையினின்றும் பின் வாங்கினர். எனினும் அவர்கள் எங்களுடைய திறமை வாய்ந்த வீரர்களைப் புது வலிமையுடன் வரவேற்றனர். (ஓ! - ந.ச.) பிளவு பலத்த காவலுடன் இருந்தமையால் சில மணித்துளிகளில் அரணைக் கடந்துவிட்ட போதிலும் ஏறக்குறைய அரை மணி நேரத்திற்குப்பின் தான் எங்கள் வீரருள் ஒருவன் உச்சியை அடைந்து நிற்க முடிந்தது. அப்போது எதிரிகள் இடிந்த கொத்தளத்தின் பக்கவாட்டிலிருந்து கொண்டு எங்கள் வீரர்கள் மீது சுட்டதன்றி மற்றவர்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டு அரணுக்குள்ளிருந்த இடத்திலேயே தாக்கினர். இந்த நிலையில் சற்றேறக்குறைய 15 மணித்துளிகள் கைகலந்த பின்னர் பிளவின் அருகே இருந்த எதிரிகள் யாவரும் எறிகுண்டுகளாலும், அவர்கள் மீது வீசப்பட்ட குண்டுகளாலும் கொல்லப்பட்டனர். எங்கள் துப்பாக்கித் தொண்டர்கள் பிளவின்மீது ஏறிச் செல்வதில் வெற்றி கண்டனர். அதற்குப்பின் பகைவர் எதிர்ப்பு பயனளிக்கவில்லை என்றாலும் ஈட்டி வீரர்கள் படை ஒன்று எங்கள் துப்பாக்கித் தொண்டர் படைகளைத் தாக்கி அவர்களுள் மூவரைக் கொன்றது.

**திரு. ஹக்சு கூறுகிறார்:**

பிளவின் உச்சியை அடைந்தவுடனே அங்கிருந்து இறங்குவது எந்த விதத்திலும் எளிதாயில்லை. இங்கு காவற் படையினர் பிளவைச் சுற்றிலும் அரணை அல்லது பூமியை ஆழமாகத் தோண்டி வைத்திருந்தனர்.



அந்தப் பள்ளங்களில் பற்றுக் கோடாகப் பிடித்துக் கொண்டு போரிடத் தக்க வாய்ப்புகள் ஒன்றுமே கிடையாது. கீழேயிருந்து காப்பவர்கள் தங்களைக் குனிந்து சுடுபவர்களை ஈட்டிகளால் தாக்கத் தகுந்த பாதுகாப்பான இடங்களைப் பிளவின் ஓரங்களிலேயே வெகு திறமையாக அமைத்துப் பள்ளங்களைக் கட்டியிருந்தனர். (அப்படியா! - ந.ச.) எறிகுண்டு வீரர்கள் இத்தகைய பகைவர் தாக்குதலைப் பெருமளவில் கட்டுப்படுத்திவிட்டதாகக் கருதினர். ஆனால் பக்கங்களிலிருந்து வாயில்களின் வழியாக இந்த இடத்தை இறுதியில் அடைந்தார்கள் என்று நான் எண்ணுகிறேன். எனினும் பக்கவாட்டிலிருந்த வாயில்கள் பலத்த வேலியிடப்பட்டிருந்தன. பிளவின் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் சுவருக்கு ஏற்படும் அழிவைச் செப்பனிட ஈரமண் தொடர்ச்சியாகக் கொடுக்கப்பட்டு வந்தது. (அடே! - ந.ச.)

எதிரிகளுக்குள் பொதுவான பீதி ஒன்று ஏற்பட்டது. அவர்கள் தங்களைத் தாக்குபவர்களிடமிருந்து மிக வேகமாகத் தப்பி ஓடினர். ஆனால் கோட்டையை விட்டு வெளியேறிய உடனே இரண்டு வரிசைகளில் வீரர்களை அணி வகுத்தனர். அப்படியே பின்வாங்கி நெருங்கினர். ஆனால் சிறிதும் அஞ்சவில்லை! (உம் - ந.ச.) எங்கள் குதிரைப் படைகளோ பக்கங்களிலிருந்தும் அவர்களைத் தாக்கி அறுநூறு பேர்களைக் (அம்மாடி! - ந.ச.) கொலை செய்வதில் வெற்றி கண்டனர். எஞ்சியவர்கள் எளிதாகப் பின்வாங்கினர். இறுதியாக இரண்டாயிரம் வீரர்களைக் கொண்ட அணி தப்பிவிட்டது. (அடி சக்கை! - ந.ச.) நானூற்று ஐம்பது இறந்த உடல்கள், இரண்டு எதிரிகளின் உடல்கள் கோட்டையினுள் காணப்பட்டன. இதற்கு முன் நடந்தபோரில் கொல்லப்பட்டவர்களின் உடல்கள் வெளியே கிழக்குப் பக்கத்திலே ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தன.

**திரு. ஹக்சு மேலும் கூறுகிறார்:**

எஞ்சியிருந்த பாளையக்காரர் படை முழுவதும் கோட்டையிலிருந்து போர்க் கருவிகள் அற்றவர்களையும் பெண்களையும் நடுவே அடைத்துப் போர்க்கருவிகள் அணிந்த வீரர்கள் இருபக்கங்களிலும் அணிவகுத்து வர மிகப் பெருமிதம் கலந்த ஒழுங்குமுறையுடன் வெளியேறினர் (மெய்சிலிர்க்கிறது! - ந.ச.). எனினும் இக்கூட்டத்தின் மேல் எங்கள் காலாட்படை பாய்ந்து அழித்தது. ஆனாலும் விரைவிலேயே அப்படை உடைக்கப்பட்டு, திரும்பச் சிதறடிக்கப்பட்டது. 74 வது அணியைச் சேர்ந்த தளபதி ஜில்கிரைஸ்ட் (Gilchrist) 77வது அணியைச் சேர்ந்த தளபதி ஸ்பால்டிங் (Spalding), காம்பெல் (Campbell) 4வது அணியைச் சேர்ந்த தளபதி பிரேசர் (Fraser) ஆகியோர் கொல்லப்பட்டனர். ஸ்காட்சு படை அணியைச் சேர்ந்த தளபதி மக்ளீன் (M'clean) மலாயைச்

(Captain M' Donnell) தலைமையில், எதிரிகளால் கைவிடப்பட்ட, பத்து மைல் தூரத்திலிருந்த தூத்துக்குடி கோட்டை அரனைக் காவல் செய்ய அனுப்பப்பட்டது.

***ஊமைத்துரையின் நினைவுகள் ஜெனரல் வெல்ஷ் கூறுகிறார்:***

நான் ஏற்கனவே இதைப்பற்றிக் குறிப்பிட்டிருந்த போதிலும் நானே அறிந்த, பொதுத் தன்மைக்கு மாறான மனிதத்தன்மை மிகுந்திருந்தவனாகிய ஒருவனைப் பற்றிய நினைவாகச் சில வார்த்தைகள் கூறாமல் இப்பேரச்சம் பொருந்திய நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்புகளை முடிக்க என்னால் இயலவில்லை. (உம்! - ந.ச.) அவன் கட்டபொம்ம நாயக்கனுக்கு நெருங்கின உறவினன். அவன் ஊமை, செவிடும் கூட. ஆங்கிலேயரால் அவன் ஊமையன், ஊமைத் தம்பி என்றும், முஸ்லீம்களால் மூக்கா என்றும், இந்துக்களால் ஊமை என்றும் அழைக்கப்பட்டான். இப்பெயர்கள் எல்லாம் ஒரு பொருளை உணர்த்துபவை. அவன் உயரமானவன்; ஒல்லியான உடம்பு உடையவன்; நலிந்த தோற்றங் கொண்டவன். ஆயினும் குழப்ப காலங்களில் முன் எச்சரிக்கையுடனும் மிக்க மன உறுதியுடனும் இருக்கும் வல்லமை பெற்றவன். (உம்! - ந.ச.) பிறருக்குப் பெருங்குறையாய் இடையூறாயமையக் கூடிய ஊமைத் தன்மையாகிய குறைபாடே; அறியாமையும் மூடபக்தியும் நிறைந்த மக்களின் மனத்தில் அவனை வலிமைமிக்கத் துணைப்படைத் தலைவனாக உயர்த்தியது. (வெள்ளைத் துரையே! ஊமைத் துரையின் உள்ளம் ஊமையும் செவிடும் இல்லையே! - ந.ச.) ஊமை போற்றப்பட்டான். அவனுடைய சிறு அசைவுகள் கூட தேவகட்டளையாக இருந்தது. (பின்? - ந.ச.) ஒவ்வொருவரும் அவன் இட்ட கட்டளையைச் செய்து முடிக்கப் பறந்தனர். அவன் தலைமை வகிக்காத கூட்டம் இல்லை. அவன் பொறுப்பேற்காத எந்தப் படையும் துணிவு நிரம்பிய செயல்களில் ஈடுபடுவதில்லை. அவன் ஆங்கிலேயரைக் குறிப்பிடும் வழக்கம் மிக்க எளிமையானது. சிறிது வைக்கோல் துண்டுகளைச் சேர்த்துத் தனது இடது உள்ளங்கையில் ஒழுங்குபடுத்தி வைத்து அதன்மூலம் ஆங்கிலேயர் படையைக் குறிப்பிடுவான். பிறகு மற்ற செய்கைகளினால் நேரம் முதலியவைகளைக் குறித்துவிட்டு, அவனுடைய மற்றொரு கையைக் குறுக்கே இழுத்து, அவனுடைய வாயினால் விஃறென்ற ஒலியுடன் அவற்றை வீசி எறிந்துவிடுவான். அது தாக்குதலை உணர்த்தும் சுட்டுக் குறியாகும்! (வெட்கமில்லை? - ந.ச.) பொதுவாக அவனே நமது அழிவிற்கான முதல் நிலையான திட்டங்களை வகுப்பவன். எத்தகைய ஒழுங்கற்ற பேராண்மையும் விளைவிக்கக் கூடிய பயன்களை, அவன் எங்கெல்லாம் தோன்றுகிறானோ அங்கெல்லாம் உறுதியாக அடை



வான். ஆனால், இறுதியில் தூக்குமேடை ஏறும் படியான விதி அவனுக்கு ஏற்பட்டது. (அது கிடக்கட்டும்! - ந.ச.) அதற்கு முந்திய ஒவ்வொரு சூழ்நிலையிலும் வியப்பூட்டும் வகையில் அவன் தப்பித்துக் கொண்டிருந்தான்.

'மே 24 ஆம் தேதி கோட்டை அவர்களிடமிருந்து கைப்பற்றப் பட்டவுடன் பகைவனுடைய முழுப்படையும் எங்கள் குதிரைப் படையைத் தொடர்ந்ததால் அது பின் வாங்கிச் சென்றது. ஆனால் ஊமை பாஞ்சாலங்குறிச்சிக்கு ஏறக்குறைய மூன்று மைல் தூரத்தில் உள்ள சிறு கிராமத்தருகில் உடல் முழுவதும் காயங்களுடன் விழுந்து விட்டான். அவர்களை விரட்டிச் சென்ற எங்கள் படை திரும்பி வந்தவுடன், எட்டயபுர வீரர்களை நோக்கி, இரவு முழுவதும் அவர்கள் உயிரை ஒரு பொருட்டாக எண்ணாமல் பகைவரைத் தொடர்ந்து செல்லும்படி படைத்தலைவன் அக்கினியூ கட்டளையிட்டான். எங்களது படைப் பிரிவினர் முடிவில் மகிழ்ச்சியுடன் அன்றைய முன் இரவில் வெளியே புறப்பட்டனர். அப்பொழுது கிராமத்தைச் சேர்ந்த சில பெண்கள் குற்றுயிராய்க் கிடக்கும் வீரர்களுக்குத் தக்க உதவி செய்வதன் பொருட்டு போர் நடந்த இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். கொலை செய்யப்பட்ட உடல் குவியல்களினிடையில் அந்தப் பெண்களில் ஒருத்தியின் மகன் குற்றுயிராய்க் கிடப்பதைக் கண்டனர். அவனைக் கண்டு அழுது அரற்றியபின் அவனைத் தூக்க முயன்றனர். ஆனால் அவனோ தன்னிடத்தில் எஞ்சியிருந்த உயிராற்றலை எல்லாம் ஒன்று கூட்டிப் பின் காணுமாறு கூறினான்: ''ஆ! அம்மா! என்னைச் சாகவிடு; ஆனால் என் அருகில் அவர்-என் சுவாமி. காயம்பட்டுக் கிடக்கிறார். அவர் உயிரைக் காப்பாற்ற முயற்சி செய்,'' சுவாமி என்ற சொல்லுக்குத் தெய்வம் என்று பொருள். அவன் பயன்படுத்திய அச்சொல் அவனிடத்தில் அவர்கள் கொண்டிருந்த பக்தியைப் பற்றிய என் எண்ணத்தை வலுப்படுத்தியது. அந்தப் பெண் உடனே மிக்க அச்சத்துடனும், பக்தியுடனும் இறந்து கொண்டிருந்த மகனுடைய விருப்பத்தை நிறைவேற்ற எண்ணி இரத்தத்தில் மூழ்கிப் புரண்டு கொண்டு, குற்றுயிராய் கிடந்த ஊமையை விரைவில் கண்டு பிடித்தாள். விதிவிலக்காயமைந்த அம் மூதாட்டி உடனே ஊமையைத் தூக்கி, வீட்டிற்கு எடுத்துச் சென்றாள். அங்கே ஊமையின் காயங்களுக்குக் கட்டுகள் போடுவதில் அவர்கள் முனைந்திருந்தனர். அப்போது எட்டயபுரத்து ஆட்கள் (!-ந.ச.) பின் தொடர்ந்து வருவதை அவர்களுடைய திடும் கூச்சலிலிருந்து அறிந்து கொண்டனர். அத்தகைய இக்கட்டான சூழ்நிலைகளைத் தவிர்ப்பதில் பெண்களுக்கு இருக்கும் திறமைக்கு ஈடு இணை எதுவுமே இல்லை. (வெட்கமில்லை? - ந.ச.) அவர்கள் அந்த நேரத்திலேயே ஒரு திட்டம் தீட்டினர். அத்

திட்டம் வெற்றிடைந்தது மட்டுமன்றி மற்ற பல வீரர்களின் உயிர்களையும் கிட்டத்தட்ட காப்பாற்றியது. அவர்கள் அவ்வுடலை ஒரு துணியால் மூடினர். அந்தச் சூழ்நிலைக்கேற்ற விந்தையான புலம்பலை உச்சக்குரலில் எழுப்பினர். எட்டயபுரத்து ஆட்கள் அங்கு சென்றவுடன் அக்கூக்குரலுக்குக் காரணம் வினவினர். ஓர் ஏழைச் சிறுவன் பெரியம்மையால் இறந்து விட்டதாக அறிவிக்கப்பட்டது. இந்த அறிவிப்பு அவ்வீரர்களைத் திருப்பிக் கூடப் பார்க்கவிடாது அக்கிராமத்தை விட்டே ஓடும்படி செய்தது. அதற்குப்பின் அவன் எவ்வாறு காப்பாற்றப்பட்டான் என்பதை என்னால் அறிய இயலவில்லை. (அதுதான் வெள்ளைத் துரையே! ஊமைத்துரை! - ந.ச.) எனினும் ஜூன் திங்கள் 7, 10 ஆம் தேதிகளில் அவனே நேரில் வருகை தந்திருந்தான். அவன் வழக்கம் போல சுறுசுறுப்பாகவே இருந்தான். எங்கள் முற்றுகையின் முடிவில் அவனும் உயிரோடு பிடிக்கப்பட்டான். பாஞ்சாலங் குறிச்சிக்கு எதிரே நாங்கள் நிறுவிய தூக்குமேடையில் வீரமும் ஆனால் தீவினையும் நிறைந்த அவனுடைய உறவினர்களுடன் அவனும் தூக்கிலிடப்பட்டான். (பிணம் உனக்குப் பேயே! மனம் எங்களுக்கு! - ந.ச.) ஒரு காலத்தில் அச்சம் நிறைந்ததாக இருந்த கோட்டையின் எஞ்சிய நினைவாக இன்று உள்ளது, அதன் எதிரில் அமைந்துள்ள எங்களுடைய அறுநூறு தோழர்களுடைய கல்லறைகள் நீங்கலாக, அந்தத் தூக்கு மேடை ஒன்றுதான்.

பாஞ்சாலங்குறிச்சியின் மீது பலமுறை படையெடுத்த போது இறந்த பல அதிகாரிகளின் கல்லறைகளில் வரையப்பட்ட நினைவுக் குறிப்புகள் வருமாறு:-

பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து ஒரு மைல் தூரத்திலுள்ள ஒட்டப்பிடாரம்

1799 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 3 ஆம் தேதி பாஞ்சாலங் குறிச்சியைத் தாக்கிய போது இறந்த வீரர்கள் தளபதிகள் டக்ளசு (Douglas), டார்மியக்சு (Dormieux), காலின்சு (Collnis), பிளேக் (Blake), கன்னர் பின்னி (Gunner Funny) ஆகியோர் நினைவுகளுக்காக.

**பாஞ்சாலங்குறிச்சியில் உள்ள இடுகாட்டில்**

1801 ஆம் ஆண்டு மார்ச் 31 மே 24 ஆம் தேதிகளில் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையில் நடந்த போரில் வீரப்போர் புரிந்து இறந்த வீரர்கள், போர்க் காயங்களினால் இறந்த வீரர்கள் காப்டன் ஜான் காம்பெல் (John Campbell), மாண்புமிகு அரசு அணி 74வது படையைச்



சேர்ந்த தளபதிகள் ஏ. காம்பெல் (A. Campbell), டி. கில்கிரைஸ்டு (D. Gilchrist), பி. ஷாங்க் (P. Shank), மாண்புமிகு அரசு அணி 77 வது படையைச் சேர்ந்த தளபதிகள் ஜே. ஸ்பெல்டிங் (J. Spalding) ஏ. காம்பெல் (A. Campbell), மூன்றாவது அணியின் முதலாவது படையைச் சேர்ந்த தளபதிகள் பிரேசர் (W. Fraser), கே. மங்னால் (K. Mangnall), 9வது அணியின் முதல் படையைச் சேர்ந்த தளபதி சி. டொரியனா (C. Torriano) ஆகியவர்கள் புனித நினைவுகளுக்காக.

**கூடுதலாக**

மாண்புமிகு அரசு அணியில் 74-வது படையைச் சேர்ந்த தளபதி டக்கால்ட் டபிள்யூ. கில்கிரைஸ்ட் (Dougald W. Gilchrist) உடல் இங்கு அடக்கம் செய்யப்பட்டுள்ளது. இந்த இளம் வீரர் 21 வயது நிரம்பாதவர். பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையில் பிளவு உண்டாக்கச் செய்த முற்றுகையில் வெற்றிகிட்டும் நேரத்தில் 1801 ஆம் ஆண்டு மே 24 ஆம் தேதி கொல்லப்பட்டார். அவரது மறைவால் மாண்புமிகு அரசு அணி திறமையும் துணிவுமிக்க பெரிய அதிகாரியை இழந்து விட்டது. சமூகமோ அன்பும் ஆதரவும் நிரம்பிய ஓர் உறுப்பினரை இழந்துவிட்டது.

**பாஞ்சாலங்குறிச்சிக் காப்பியம்**

இறுதி முற்றுகையின் போது நடைபெற்ற நிகழ்ச்சிகள் பாஞ்சாலங் குறிச்சி சிந்து என்ற உள்நாட்டுப் பாடலுக்கான பொருளாக அமைந்தன. இதன் ஆசிரியர் நமச்சிவாயம் என்ற ஒருவர். எங்களிடமிருந்த இந்தியாவைப் பற்றிய வரலாற்றுத் தொடர்புடைய சான்றுகள் எல்லா வற்றையும் விட குறைந்த உண்மைகள் நிரம்பியவை, இந்திய அரசியல் பற்றி எழுதப்பட்ட பாடல்கள் என்று நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன். இங்குக் குறிப்பிட்டுள்ள சிந்துப்பாட்டு இந்தக் கூற்றின் மெய்ம்மையை எடுத்துக் காட்டும் சிறந்த சான்றாகும். (துரையே! உன் வரலாறு குறையற்றதோ? கரைமிக்கதோ-ந.ச.) அது ஆசிரியரின் கற்பனைக்குள் நடைபெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறுகிறது. அச்சிந்து இன்றும் பாடப்பட்டு வருகிறது. சிறப்பாக இறுதிச் சிறைப் பிடிப்பு, பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை வீழ்ச்சி பற்றிய பொறுக்கத்தக்க பிழையற்ற பொதுக் கருத்துக்களை மரபுவழிச் செய்தியாயறிந்து கொண்டிருக்கும் மக்கள் முன்னிலையில் அவ்வப்போது அது நாடகமாக நடிக்கப்பட்டு வருகிறது. (பாட்டும் நாடகமும் அப்போதே - ந.ச.) எனினும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் வெட்கமற்ற முறையில் புனைந்தெழுதப் பட்டிருப்பதை நாங்கள் காண்கிறோம். (உன் வெட்கத்தை நெருப்பில் போடு - ந.ச.) திரு. கிரன்சு (Kearns) அப்பாட்டிலுள்ள ஒவ்வொரு சிந்து

அல்லது காண்டத்திற்கும் பொருள் எழுதியுள்ளார். (அது எங்கே! - ந.ச.) கடைசி சிந்துவின் பொருளை மட்டும் இங்கு குறிப்பிட்டால் அதுவே போதுமானது.

**வெற்றிக் காண்டம்**

வெள்ளை மருது என்ற மறவன் ஒருவன் தலைவனுக்கு உதவி செய்ய இப்போது வந்து சேர்ந்தான். நிலைமை மிக்க இசைகேடாக இருந்தது. தலைவர் அதிக அச்சத்துடன் இருந்தார். கோட்டையிலிருந்தோ அல்லது அவருக்கேற்பட்ட இன்னல்களிலிருந்தோ வெளியேற அவருக்கு வழியே இல்லை. இந்த வெள்ளை மருது எப்படியாயினும் பிரிட்டிஷ் படையை எதிர்ப்பதற்கு முன்வந்தான். அப்போது இருந்த நிலையில் அவன் அச்செயலைத் தான் ஒருவனாகவே செய்வதாக வற்புறுத்தினான். அதேபோன்று (உண்மைக்குப் புறம்பாகவும் கற்பனைக்கும் எட்டாததாகவும் அமைந்த செய்தி) அவன் முன்னேறிச் சென்று பிரிட்டிஷ்காரர்களைத் தாக்கினான். குதிரைப்படையை வெட்டினான். காலாட் படையைக் கலைத்து ஒட்டினான். ஒரு இலட்சம் துப்பாக்கி வீரர்களைச் சிறைப் பிடித்தான். எஞ்சியிருந்த ஒழுங்கற்ற பிரிட்டிஷ் படை பாளையங்கோட்டைக்குத் தப்பி ஓடியது. பிறகு பாளையக்காரன் மகிழ்ச்சியுடனும் மாண்புடனும் நாட்டை ஆட்சி செய்ய விடப்பட்டான் (என்ன துரையே! பொய்! 'ஓ! பிரட்டனே! பிரட்டனே! அலைகளை எல்லாம் ஆளும் பிரட்டனே!' என்று உன் நாட்டுக் கவிஞன் பாடினானே! அது பொய் இல்லையா? உன் நாட்டைவிட்டு இன்னொரு நாட்டை சுரண்ட வந்தாய்! வெட்கம் கெட்டுச் சூழ்ச்சிகள் செய்தாய்! ஒரு தாய் மக்களைப் பிரித்துப் பிரித்து ஆட்டினாய்! ஆண்டாய்! 'குரங்கு நியாயம்' செய்து பின்னர் எல்லாரையும் விழுங்கினாய்! இன்னொரு நாட்டின் உரிமையை மதிக்கத் தெரியாத மிருகம் நீ. சாத்தான் வேதம் ஓதுவது போல 'சத்யம்' என்கிறாய்! 'நீதி' என்கிறாய்! பீரங்கியின் பலத்தால் எங்கள் தாயைத் துகிலுரிய நினைத்த குருடனே! உன் ஆயுத பலம் - ஏன்? உன் ஆகாய விமானப் பலம் கூட எங்கள் - பொக்கைவாய்க் காந்தியின் சிரிப்பில் எரிந்ததே! உலகப் போரெல்லாம் வென்ற உன் இனம் எங்கள் உரிமைப் போரை வெல்லவில்லையே? எங்கள் காந்தி மகான் உன் நாட்டுக் கவர்னர் செனரல் கையாலேயே உன் நாட்டுக் கொடியை இறக்கச் செய்தாரே! என்ன ஆயிற்று உன் பீரங்கிப் பலம்? உன் நாட்டுப் படைபலம்? எல்லாம் எங்கள் நாட்டுப் பண்பு பலத்தின் முன்பு பஞ்சாய்ப் பறந்ததே. பேய்கள் போல் எங்கள் விடுதலை வீரர்களின் உடலைத் தின்றாய்! உன் உடலையும்தான் புழுக்கள் தின்றன. ஆனால் எங்கள் வீரத்தலைவர் ம.பொ.சியின் எழுத்தால் விடுதலை



வீரர்கள் புகழ் அழியாப் புகழ் பெற்று விட்டதே! - ந.ச.)

★

# இயல் - 9

## பாளையக்காரர் போரின் முடிவு கர்நாடகத்தை ஆங்கில அரசிடம் ஒப்படைத்தல்

### போர் சிவகங்கைக்கு மாறுதல்

நாம் இப்போது பாளையக்காரர் போரின் இறுதிக்கட்டம், கட்ட பொம்ம நாயக்கனின் முடிவு, பாஞ்சாலங்குறிச்சி வரலாற்றின் இறுதி முதலியவற்றிற்கு வந்துவிட்டோம். அரசு துருப்புகளின் எல்லா முயற்சி களையும் இதுவரை தாங்கி வந்த (பகைவர் பாராட்டே பாராட்டு ! - ந.ச.) கோட்டை கடைசியில் கைப்பற்றப்பட்டது. பாளையக்காரர்களும் எஞ்சிய அவர்களது தொண்டர்களும் தப்பி விட்டனர். அத்தகைய வலிமை வாய்ந்த எதிரிகள் (வலிமை இருந்து என்ன பயன்? ஒற்றுமை யில்லாமல் போயிற்றே! ந.ச.) இருக்கும்வரை அமைதியை நிலை நாட்டத்தக்க நோக்கமில்லை. மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் பல்வேறு பாளையக்காரர்களால் உதவி பெற்று வாழ்ந்த போர் வீரர்களின் எண்ணிக்கை 22,000 என்றும் அவர்கள் எல்லோரும் ஒரு கண அறிவிப் பில் (அடி! ஆத்தி! - ந.ச.) தங்கள் தலைவர்களைத் தொடர்ந்து எந்தத் தாக்குதலுக்கும் புறப்படத் தயாரென்பதையும் திரு. லூஷிங்டன் மதிப் பிட்டிருந்தார். பயிற்சி பெற்ற 20,000 பாஞ்சாலங்குறிச்சி வீரர்களை எதிர்க்க முடியாது என்பது படைத்தலைவர் எவல்ஷின் மதிப்பீடு. அத்தகைய வீரர்களின் பெரும்பகுதி, பாளையக்காரன் (கட்டபொம்மன் - ந.ச.) அவனது ஊமை உடன்பிறந்தான் உள்பட யாவரும் கோட்டை கைப்பற்றப்பட்டவுடன் வடக்கே சிவகங்கையை நோக்கித் தப்பி விட்டதையும் நாம் கண்டோம். சிவகங்கை உரிமையைக் கைப்பற்றிய பாளையக்காரர்கள் அவர்களை முழுமனதுடன் இரு கை நீட்டி வரவேற்றனர். (கால்டுவெல் தரும் நற்சான்று - ந.ச.) அதற்குப் பின் ஏற் பட்ட நிகழ்ச்சிகள் திருநெல்வேலி வரலாற்றைவிட மதுரை வரலாற் றையே சேர்ந்தது என்று கூடக் கூறலாம். ஆனால் சிவகங்கை நாட்டில்



நடந்த போரைத் தொடர்ந்து கூறாவிடில், திருநெல்வேலியின் இந்த வர லாற்றுத் தொடர்பு பற்றிய செய்திகளைக் கூறுவதில் நேர்மையைக் கடைப் பிடித்தல் இயலாத செயலாகும். (வெள்ளை வரலாற்றாசிரியனுக்கும் இருந்த நேர்மை பாரீர்! - ந.ச.) மேலும் சிவகங்கையும், இராமநாதபுரமும் அக்காலத்தில் திருநெல்வேலியுடன் சேர்ந்திருந்தன (வாதத்திறமும் காணீர்! - ந.ச.) அன்றியும் அவை தென் பாளையக்காரப் பகுதியின் வரி வசூல் அலுவலராக இருந்த திரு. லூஷிங்டனின் ஆணைக்கு உட் பட்டிருந்தன.

பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்றிய ஐந்து நாட்களுக்குப் பின் அதாவது மே மாதம் 28 ஆம் தேதி முழுப்படையும் நாகலாபுரத்தில் முகா மிட்டது. அங்கிருந்து படையின் ஒரு பகுதி கமுதி எனப்படும் கொமரிக்கு (கொச்சை ஆங்கிலத்தில் - ந.ச.) அனுப்பப்பட்டது. ஆர்மன்ஸ் தரைப்படத்தில், கமுதி ஒரு சிறிய ஆனால் கல்லால் கட்டப் பட்ட கோட்டை. இது இராமநாதபுரத்தைச் சேர்ந்தது. இதை எதிரிகள் முற்றுகையிட்டுக் கொண்டிருந்தனர். இது முடிந்ததும் இதன் சுற்றுப் புறத்தில் எதிரிகளின் நடமாட்டத்தைக் கட்டுப்படுத்த ஒரு படை நிறுத் தப்பட்டது.

ஜூன் இரண்டாம் தேதி படைகள் சிவகங்கை நாட்டிலுள்ள திருப்பு வனத்தை அடைந்தன. இங்குதான் எதிரிகள் முதலில் காணப்பட்டனர். அன்றிலிருந்து ஜூலை 14 ஆம் தேதி வரை படைகள் இராமநாதபுரத் திற்குப் படையெடுத்துச் சென்றபோது, அவர்கள் அந்த வழிகளில் தொடர்ந்து எதிரிகளின் தாக்குதலுக்கு உட்பட்டனர். அப்பொழுது நாடு காடாக இருந்தமையால் அதைக் கடப்பது கடினமாயிருந்தது. தங்கள் வழியிலே இரண்டு இடங்களில் எதிரிகளை மிக முயற்சியோடு (உம்! - ந.ச.) வெற்றிகண்டு கடந்து செல்ல வேண்டியதாயிற்று. இதனால் ஐரோப் பியர்கள் உட்படக் குறிப்பிடத்தக்க இழப்பு அவர்களுக்கு ஏற்பட்டது. இராம நாதபுரத்தில் படைத்தலைவன் மார்ட்டினிடமிருந்து தேவையான செய்தி களைத் திரட்டிக் கொள்ளும் வாய்ப்பு படைத்தலைவன் அக்னியூவுக்குக் கிடைத்தது. படைத்தலைவன் மார்ட்டின் போர்ச்சுக்கீசிய ஐரோப்பியன். அவனது பணியின் தொடக்கக் காலத்தில் பல பாளையக்காரர்களின் செயல்களைக் கண்டிருக்கிறான். எனினும், இங்குதான் அரணால் சூழப் பட்ட காளையார்கோவில் கண்டு பிடிக்கப்பட்டது. மருதுகள் இங்குதான் திரும்பி வருவார்களெனவும் எதிர் பார்க்கப்பட்டது. அக்கோட்டையின் தற்காப்பு நிலையைக் காணும்போது பாஞ்சாலங்குறிச்சி நிகழ்ச்சிகள் திரும் பவும் நடைபெறக் கூடுமெனத் தோன்றியது. அந்த இடத்தைச் சேர கிழக்குத் திசையாகச் செல்ல எடுத்துக் கொள்ள வேண்டிய முயற்சிகளும்

துன்பங்களும் மேற்குத் திசையாகச் செல்ல முற்படுவதை விடக் கூடுதலாயிருந்தன. எனவே கிழக்குத் திசையாகச் சென்று அந்த இடத்தை அடையும் எண்ணத்தை விட்டுவிட வேண்டியது இன்றியமையாததாயிற்று. அதன்படி திருப்பத்தூர் அருகிலுள்ள திருக்கடையூருக்கு வடமேற்குத் திசையில் படைகள் சென்றன. அங்கு சென்றவுடன், படைத் தலைவன் ஜேம்சு இன்சு (James Innes) தலைமையில் திண்டுக்கல்லிலிருந்து வந்த படையும் அதனுடன் சேர்ந்து கொண்டது. படைத்தலைவன் ஜேம்சு இன்சைப் படைத்தலைவன் ஜேம்சு என்றே திரு. ஹக்சு வழங்கினார். அந்தப் படை அண்மையில் விருப்பாட்சி பாளையக்காரனையும் அவனைச் சார்ந்தோரையும் அடக்குவதற்காகப் பயன்படுத்தப்பட்டது. இந்தப் படையின் சேர்க்கையால் அப்படை குறைந்தது 7000 பேர் கொண்ட வலிமை வாய்ந்த படையாக மாறியது. அப்படை கிழக்கே அமைந்திருந்த சிறுவயலைத் தாக்க முன்னேறியது.

## மருதுகளும் சிறுவயலும்

சிவகங்கை, இராமநாதபுரபாளையம் அல்லது சமீந்தாரியின் ஒரு பகுதியாக முன்பு விளங்கியது. அதை ஆண்ட மரபினர் மறவர் எனப் பட்டனர். அங்கு மறவர் இனத்தவர் மிகுதியாக இருந்ததால் ஆரம்பகால ஐரோப்பியர்கள் இராமநாதபுரத்தைப் பொதுவாக மறவர் நாடு என்று அழைத்தனர். இராமநாதபுரத்திற்கும் சிவகங்கைக்கும் பிளவு ஏற்பட்ட காலத்தில் சிவகங்கை விடுதலை பெற்ற நாடாயிற்று. இரண்டு மாவட்டங்களும் பெரிய மறவர், சிறிய மறவர் என்ற இரண்டு மறவர் நாடுகள் என ஐரோப்பியர்களால் அழைக்கப்பட்டன. அச்சொல் மறவர் என்றே எழுதப்பட்டு வந்தது. கடந்த நூற்றாண்டின் முற்பகுதியில் அப்பிளவு ஏற்பட்டதாகத் தெரிகிறது. சிவகங்கை மன்னர் தனிப் பரம்பரையைத் தொடங்கிவைத்த அன்றிருந்த, சசிவர்ணத் தேவரை, 1733 ஆம் ஆண்டு தேதியிடப்பட்ட சாசனம் ஒன்று விடுதலை உணர்வுமிக்க மன்னராகக் குறிப்பிடுகிறது. அப்பிரிவு உடன் படிக்கையினாலே ஏற்பட்ட ஒன்று ஆகும். அதன்படி 2/5 பரப்பளவு சிவகங்கைக்கும் எஞ்சிய 3/5 பரப்பளவு இராமநாதபுரத்திற்கும் சேர்ந்தது. மறவர்களின் சாதிப் பட்டம் தேவர் என்பது. ஆனால் இராமநாதபுரத்துத் தலைவன் அவனுடைய மூதாதையரின் தனிப்பட்டப் பெயராகிய சேதுபதி என்ற பட்டத்தால் தன்னை அழைத்துக் கொண்டான். சேதுபதி எனின் இராமனுடைய பாலத்தின் தலைவன் என்பது பொருள். சிவகங்கை பாளையக்காரனின் குடும்பப் பட்டப் பெயர் உடையத்தேவர். ஆனால் அடிக்கடி அவன் நாலுகோட்டைத் தேவர் என்று கூட அழைக்கப்பட்டார். நாலுகோட்டை என்பது அவன் நாட்டில் நாலு கோட்டையும் இருந்ததால் வந்த காரணப் பெயரில்லை. ஆனால்



அவனுடைய பழைய கிராமம், இந்த நாலுகோட்டை என்ற பொருள்படும்படி (தனி) ஒருமைப் பெயராலேயே அழைக்கப்பட்டு வந்தது. இந்தப் பெயரையே 'ஓர்ம்' நெல்லிக்கோட்டை எனக் குறிப்பிடுகிறார். இப் பெயர் மதுரை மாவட்டத்திலுள்ள முழுதும் வேறுபட்ட ஒரு பாளையத்தின் பெயராகிய நிலக்கோட்டை என்பதுடன் குழப்பத்தை (கொச்சை ஆங்கிலப் பெயர்களால் வந்த குழப்பம் ஆங்கிலேயர்க்கே! - ந.ச.) விளைவிக்கிறது. படைத்தலைவன் புல்லர்ட்டனின் (Fullarton) கடிதத்திலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் குறிப்புகள் சிவகங்கையை ஆண்ட ஆட்சியாளர்கள் பலர் காலத்திலும் அது ஆங்கிலயே அரசை எதிர்க்க எவ்வளவு முனைப்போடு இருந்தது என்பதை மெய்ப்பிக்கிறது. (ஓ! நல்லது - ந.ச.)

சிவகங்கை அல்லது சிறிய மறவர் நாடு கிழக்குக் கடற்கரையிலிருந்து மேலூர் மாவட்டம் வரை பரவியிருந்தது. மேற்கே மதுரா; வடக்கே தொண்டை நாடு. நத்தம், கள்ளர் நாடுகட்கும் (Country of Tondiman) தெற்கே பெரிய மறவரின் எல்லைகள் ஆகியவற்றிற்கும் இடைப்பட்ட ஏறக்குறைய 50க்கு 40 சதுர மைல்கள் நீள அகலமுடையது. பொதுவாக அந்த நிலம் நெல் சாகுபடி செய்யப் பயனற்றது. வாய்க்கால்களோ அல்லது செயற்கை நீர்த் தேக்கங்களோ ஏற்பட முடியாத பாலைவனமாக இல்லாமலிருந்தபோதிலும் அதில் முட்களும் புதர்களும் தடையின்றித் தழைத்திருந்தன. காளையார் கோயில் கோட்டையைச் சுற்றிலும் ஏறக்குறைய 40 மைல் சுற்றளவுள்ள காளையார்கோயில் காடுகள் வேலிகளாலும் மற்ற பாதுகாப்புகளாலும் பலப்படுத்தப் பட்டிருந்தது. காட்டின் நடுவிலே அமையப்பெற்ற காளையார்கோயில் படையெடுப்புக்கு அல்லது முற்றுகைக்கு அப்பாற்பட்ட பாதுகாப்புள்ள புகலிடமாகக் கருதப்பட்டது. இந்தக் காடுகளிலும் அதைச் சூழ்ந்த நாடுகளிலும் ஆடுகளும் கால்நடைகளும் நிறைந்திருந்தன. அங்கு வாழும் மக்கள் பலர், கத்திகள், ஈட்டி, குத்தீட்டிகள், துப்பாக்கிகள் முதலிய போர்க் கருவிகள் தாங்கிய 12,000 போர் வீரர்களைப் போர்க்களத்திற்குக் கொண்டு வரத்தக்க திறமை வாய்ந்தவர். அவர்கள் தங்களுடைய அயலார்களான கூலிப்படைகளைவிட நாகரீகமுடையவராக இருந்த போதிலும் (ஓ! - ந.ச.) கலையும் தொழிலும் அவர்களிடையே மிகக் குறைவாகவே வளர்ந்திருந்தன. (அப்படி என்றால்? - ந.ச.) கூடுதலான முன்னேற்றம் அடையக் கூடிய நாடுதான் அது. ஆனால் தற்போது ஆர்க்காட்டு நவாபுக்கு, 1,75,000 ரூபாய் செலுத்தும் அரசருக்குப் பெரும்பாலும் ஐந்து இலட்ச ரூபாய்களுக்கு மேலான வருவாயைத் தந்தது. இந்த அரசர் தேவர் குடும்பத்தைச் சேர்ந்தவர். சிவகங்கை அரசர் பிரிக்கப்படுவதற்கு முன் இருந்த பெரிய மறவர்களின் அரச மரபில் வந்தவர்கள். 1773 இல் அவர்

களது எல்லை ஜெனரல் ஜோசப் ஸ்மித்தால் குறைக்கப்பட்டபொழுது அரசர் கொல்லப்பட்டார். அவருடைய மனைவியும் குழந்தையும் நாட்டிலுள்ள சில முக்கியமானவர்களும் மைசூர் நாட்டிற்குத் தப்பிவிட்டனர். அங்கு அண்மைக்காலப் போர் தொடங்கும்வரை அவர்கள் ஐதர் அலியின் பாதுகாப்பில் வாழ்ந்து வந்தனர். அந்தக் காலத்தில் நாடு ஒரு குத்தகைக்காரனால் நிர்வகிக்கப்பட்டது. அமைதியான காலங்களில் நவாபு மக்மது அலிக்குத் திறை செலுத்துபவர்களாகத் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டனர். அவர்கள் காடுகளும் காப்புகளும் நிலைத்திருக்கத் திண்டாடியபோது, கலகம் வந்தால் அதனால் தங்களுக்கு வரக்கூடிய முதன்மையான வாய்ப்புகள் நிரம்பிய இலாபத்தை எண்ணி அவர்களது பற்றற்ற நிலை அச்ச மூட்டப்பட்டிருக்கலாம்.

1773 ஆம் ஆண்டே இராமநாதபுரத்தின் எல்லைகள் ஜெனரல் ஜோசப் ஸ்மித்தால் குறைக்கப்பட்டது. அந்தக் காலத்திலிருந்து நாடு முழுவதும் ஆங்கிலேயரிடம் ஒப்புவிக்கப்பட்டவரை இராமநாதபுரத்தில் நவாபினது படைகள் இருந்து வந்தன. 1783 இல் படைத்தலைவன் புல்லர்ட்டன் சிவகங்கை மீது படையெடுத்த போது நாட்டின் ஆட்சி பழமையான குடும்பத்தினரிடமிருந்து வலுவில் கைப்பற்றியவர்களிடம் வந்து சேர்ந்தது. 1773 இல் தலைவர் இறந்தவுடனேயே அவனுடைய அமைச்சர்கள் தற்காப்பிற்காக ஐதர் அலியிடம் ஓடினர். அதன்பின் அவன் கர்நாடகத்தின் மீது படையெடுத்தபொழுது அவனுடன் திரும்பி வந்து அவனது ஆணையின் கீழ் நாட்டை ஆட்சி செய்து கம்பெனி, நவாபு ஆகிய இருவர்களுடைய எல்லைகளையும் கொள்ளையடித்துக் கொண்டு இருந்தனர். நவாபுக்கு எதிராகப் பலமுறை ஆயுதந்தாங்கினர். ஆனால் அடிக்கடி வெற்றிகரமாக மன்னிப்பையும் பெற்றனர்.

**படைத் தலைவன் புல்லர்ட்டன் (Fullarton) கூறுகிறார்:**

எஞ்சியிருந்த படைகளுடன் ஆகஸ்டு 4 ஆம் தேதி கிழக்கே இருபது மைல் தொலைவிலுள்ள சிவகங்கைக்குப் படையெடுத்துச் சென்றோம். சிறிய மறவர் நாட்டை ஆண்டு வந்த இரண்டு மருதுகளும் தங்களது குழந்தை அரசருடன் காளையார் கோயில் காட்டுக்குள் விரைவாகத் தப்பிச் சென்று விட்டார். அங்கு 10,000 பேர்களடங்கிய படையைச் சேர்த்தனர் - (காட்டுக்குள்ளா? - ந.ச.) எந்தக் கட்டுப்பாட்டுக்கும் இயங்கித் தங்கள் சொந்த இடத்திற்கு திரும்பிவர ஒப்புக் கொண்டனர். எஞ்சியுள்ள கப்பத் தொகையை உடனே கட்டவேண்டியது அன்றி அவர்களுடைய தலைவர்களிடம் அவர்கள் ஆட்கள் கொள்ளையடித்தப் பொருள்களுக்கு ஈடாக 90,000 ரூபாய் இழப்பு ஈடுகொடுக்கும் படியும் இதற்கு அவர்கள் உடன்படவில்லையானால், உடனே அவர்கள்



காடுகள் மீது படையெடுத்துக் கோட்டையை முற்றுகையிட்டு அவர்களை நாட்டை விட்டே விரட்டி விடுவதாகவும் கூறினேன். இந்துக்கள் காலந்தாழ்த்தும் குணமுடையவராயிருந்தாலும் அவர்கள் ஏறக்குறைய 40,000 ரூபாய்களைச் செலுத்தினர். எஞ்சிய கடன் தொகைக்கு அடமானமும் கொடுத்தார்கள். இந்த உடன்படிக்கை நான்கு நாட்களில் முடிந்து விட்டதால் அச்செய்தியை அனுப்பிவிட்டு அவர்களது சிந்தனையற்ற (பொறுப்பற்ற) போக்கை, 1773 இல் அதே இடத்திற்குப் படையெடுத்துச் சென்ற சூழ்நிலைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து ஓரளவு உளமார்ந்த நிறைவடைந்தேன். அதே நேரத்தில் காளையார் கோயில் கோட்டையைச் சுற்றிலும் அமைந்திருந்த காடு, வேலிகளை நம்பி உடன் படிக்கையில் இந்த அலுவலை முடிக்க எதிர்நோக்கிப் பாதுகாப்பிடத்திலே இருக்கிறோமென்றெண்ணி இருந்த அரசர் அந்த இடம் திடீரென்று தாக்கப்பட்டபோது, அதனால் ஏற்பட்ட தாக்குதலில் (அரசர்) கொல்லப்பட்டார். முன் பதவியாளர் பட்டறிந்த கொடுமைகளை எண்ணிப் பார்க்குங்கால், அவர்களுக்குப் பின் வருபவர் அல்லது அவருடைய அமைச்சருக்கு ஏற்ற தண்டனைக் கடுமையைக் குறைப்பதில் நான் மகிழ்ச்சியடைந்தேன்.

மருதுகளின் இணக்கம் நீடித்து நிற்கவில்லை. 1789 இல் நவாபு அரசுக்கு ஓரளவு பணிவுள்ளவர்களாக்க அவர்களை எதிர்த்துப் படையெடுக்க வேண்டியது தேவையாயிற்று. திடமான எதிர்ப்புக்குப் பின் மருதுகளின் கோட்டையான காளையார்கோயிலைக் கைப்பற்றிய படைத் தலைவன் ஸ்டீவர்டு இந்தப் படையெடுப்புக்குத் தலைமை வகித்தான். அவனுக்கு மேற்குப் புறத்திலிருந்து அதிக எதிர்ப்பு ஏற்பட்டது. ஆனால் தென்புறத்திலோ 1801 பேர் அடங்கிய படை மிக நெருக்கடியான நிலைக்குள்ளாயிற்று.

**மருதுகள்**

அக்காலத்தில் சிவகங்கையை ஆண்ட மருதுகள் உடன் பிறந்தவர்கள். பெரிய மருது என்று பொதுவாக அழைக்கப்படும் வெள்ளை மருது ஒருவர். சின்னமருது மற்றொருவர். அவர்கள் பழமையான பாளையக்காரர் குடும்பத்தைச் சார்ந்தவரும் அல்லர். அவர்களுடைய சாதிப் பிரிவைச் சேர்ந்தவரும் இல்லை. ஆனால்அக்குடும்பத்தினரால் உடன் துணைவராக நியமிக்கப்பட்டவர்கள். பார்வரா என்பது அத்தகைய சாதிப் பிரிவில் உள்ள தாழ்த்தப்பட்டவர்களைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லாகும். இத்தகைய பிரிவினரின் சிறப்புப் பட்டப் பெயர் சேர்வைக்காரர். அவர்கள் பாளையக்கார எசமானர்களுக்குத் தொண்டு செய்யக் கடமைப்பட்டவர்கள். எனவே அக்காலத்திய ஆங்கிலக் கடிதங்களிலும், விவரங்களிலும் அவர்கள் செராகார்ஸ் அதாவது சேர்வைக்காரர்கள் என்று அழைக்கப்

பட்டனரே தவிர தேவர்கள் என்றோ பாளையக்காரர்கள் என்றே குறிப்பிடப்படுவதில்லை.

மருது என்று ஆங்கிலேயரால் எழுதப்பட்ட அப்பெயர் அவர்களின் குடும்பப் பெயரே அன்றி தனிப்பட்ட பெயரில்லை. மருது என்பது ஒரு மரம் (டெர்மாலியா அலாடா), ஒரு மரத்தின் பெயர் எப்படி ஒரு குடும்பத்தின் பெயராயிற்று? இராமநாதபுரம் ஜமீந்தாரியிலுள்ள நயினார் கோயிலில் உள்ள சிவன், மருத மரத்தடியில் இலிங்க வடிகமாகத் தோன்றினார் என்று கருதப்படுகிறது. எனவே அந்த இடத்திலேயே அவர் வணங்கப்படுவதால் அவர் மருதப்பா அல்லது மருதீஸ்வரர் என்று அழைக்கப்பட்டார். சிறுவயல் மக்களுக்கு இது குடும்ப தெய்வமாதலின் அத்தெய்வத்தின் நினைவாக ஒவ்வொரு குடும்பத்தினரும் மருது என்ற பெயரை வைத்துக் கொண்டனர். சேர்வைக்காரன் என்பது சாதிப்பெயர். மருது என்பது குடும்பப் பெயர். இரண்டு தலைவர்களும் மருது என்ற பெயரையே பெற்றிருந்தனர். மூத்தவர் பெரியமருது; இளையவர் சின்ன மருது என்பதே அவர்களிடையே இருந்த ஒரே வேறுபாடு. பெரியமருது நாட்டை ஆளுபவர். சேர்வைக்கார் என்றோ மருது என்றோ குறிப்பிடும் போது அது பெரிய மருதுவையே குறிக்கும். ஆனால் சின்னமருதுவே உண்மையில் நாட்டை ஆளுபவர். பெரியமருது அரசாட்சியை இளைய மருதுவிடம் விட்டு விட்டு வீரவிளையாட்டுகளில் முழுதும் ஈடுபட்டிருந்தார். இங்கு அந்த இரு உடன்பிறந்தவர்களைப் பற்றி வெல்ஷ் பெருமையாக விளக்குவதைக் கூறும் சூழ்நிலையை என்னால் தவிர்க்க இயலவில்லை. அவர்களை வெல்ஷ் அறிந்து அவரது அன்பைப் பாராட்டிய போதிலும் அவரது குடும்ப வரலாற்றைப் பற்றி ஒன்றும் அறியவில்லை என்று தெரிகிறது.

அடிக்கடி குறிக்கப்படும் இரண்டு உடன்பிறந்தவர்களில் மூத்தவன் வெள்ளைமருது என்றழைக்கப்பட்டான். ஆனால் அவனுக்கு நாட்டின் ஆட்சியைப் பொறுத்தவரை ஒன்றும் பொறுப்பில்லை. அவன் ஒரு விளையாட்டு வீரன். வேட்டையாடுவதிலும், துப்பாக்கி சுடுவதிலும், தன்னுடைய முழு காலத்தையும் செலவிட்டு வந்தான். இயல்புக்கு மாறான ஆள் அளவும் வலிமையும் பெற்றவனாதலின் காட்டு விலங்குகளைத் தாக்குவதையே முதன்மையான கேளிக்கையாகக் கொண்டிருந்தான். மேலும் அவன் தன் விரல்களின் உதவியாலேயே சாதாரண ஆர்க்காட்டு ரூபாயை வளைக்கக்கூடிய திறனுடையவன் என்று சொல்லப்படுகிறது. அரசாங்கக் கவனிப்பு, ஆட்சிப் பிணைப்பு இவற்றால் தொல்லையுறாத அவன் அலைந்து திரியும் வாழ்க்கை நடத்தி வந்தான். அவ்வப்போது தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை முதலிய இடங்களிலுள்ள ஐரோப்பிய நண்பர்களைக் கண்டு வந்தான். அவர்களிடையே பெரிய மருது பெரும் மதிப்புக்குள்ளாயினான். யாரேனும் ஒருவர் கேளிக்கையை விரும்பினால் வெள்ளை மருதுவுக்கு ஒரு செய்தி அனுப்பினால் போதும். உடனே இணங்கி அதை நடத்தித் தருவான். அல்லது எவனொருவன் வீரவிளையாட்டில் பங்கெடுத்துக் கொள்கிறானோ அவனை வெள்ளை மருது விளையாட்டு அரங்கிற்கு அழைத்துச் சென்று அவனது வெற்றிக்கு உறுதிகூறி அவனைக் கூர் நோக்குடன் கண்காணிக்கவும் செய்வான். பெரும் புலி தோன்றுமாயின் திறனும் திண்மையுள்ள ஈட்டிவீரர்கள் அதைச் சூழ்ந்து கொள்ளும் சமயம் அவ்விலங்கை எதிர்த்து அடக்குவதற்கு வெள்ளைமருதுவே முதன்மையாக இருப்பான். ஆனால் சிறுவேட்டைகளைப் பெருந் தன்மையுடன் தட்டிக் கழித்து ஆங்கிலேயருக்காக விட்டுக் கொடுப்பான். (ஓ! - ந.ச.) அவர்களோ குறைந்த இடர்களுடன் பன்றி, கடம்பை (பெரியமான்), மான், பட்டாணிப் பறவை முதலியவற்றை அதிகமாக வேட்டையாடுவார்கள். (அப்படியா? - ந.ச.) 1795 ஆம் ஆண்டில் நான் மதுராவில் தங்கியிருந்தபோது இந்தக் கீழ்த்திசை நிம்ராடின் அதிக அன்பையும் ஆதரவையும் பெற்றேன். அப்போது அந்த இடத்தில் நான் புதிய படைத்தலைவனாக இருந்தேன். இதுவே அவனுடைய அக்கறையின்மைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.



வளமை நிறைந்த பரந்த நாட்டை ஆளும் தலைவனாக இருந்தான் சின்ன மருது - அவனது உறைவிடம் சிறுவயல். கருமை நிறமுடையவனாயினும் அழகுடையவன்; நயமுடையவன்; அன்பும் பண்பும் நிறைந்தவன். அணுகுவதற்கு மிக எளியன். அவனது ஒரு சிறு அசைவையே சட்டமாக மதிக்கும் மக்களை ஆட்சி செய்து வந்த போதிலும் அவன் எவ்விதப் பாதுகாவலுமின்றித் திறந்த வெளியிலேயே வாழ்ந்து வந்தான். 1795 ஆம் ஆண்டு பிப்ரவரியில் நான் அவனைச் சந்தித்த போது, உள்ளே வர விரும்பிய ஒவ்வொருவருக்கும் தன் விருப்பமான வரவேற்பும் வழியனுப்பும் இருந்தன. அவ்வாறு வந்து சென்ற ஒவ்வொருவரும் மக்களின் தந்தையான அவனுக்கு எல்லாம் வல்ல இறைவனின் அருள் இருக்கும்படி வேண்டிக் கொண்டனர். அவன் நாட்டின் வழியே மிகச் சாதாரணமாகச் சென்றபோது அவன் எனது நண்பனானான். மதுரையில் நான் தொடர்ந்து தங்கியிருந்த போது அருமையான அரிசி, பழங்கள் முக்கியமாக இந்தியாவின் வேறு எப்பகுதியிலும் நான் கண்டறியாத சுவை மிகுந்த தோல் தடித்த ஆரஞ்சுப் பழங்களையும் அனுப்பி வைக்கத் தவறமாட்டான். ஈட்டி எறியவும், வளைதடி சுழற்றவும் அவனே முதன்முதலில் எனக்குக் கற்றுக் கொடுத்தான். அக்கருவியைத் திறமையாகப் பயன்படுத்துபவர்களால் ஒரு நூறு

மூவடி தொலைவிற்குட்பட்ட எந்தத் தொலைவிற்கும் உறுதியாக எறிய இயலும். எனினும் பின்பு இதே மனிதனை காட்டு விலங்கை விரட்டுவது போலத் துரத்திச் சென்று; கொடுமைக்குள்ளாக்கிச் சாதாரண வேலையாட்களால் பிடிக்கச் செய்தேன். பின்னர் அவன் முறிந்த தொடையுடன் சிறையில் வாடியதைக் காணும்படியான போர்ச் சூழலுக்கும் நான் இலக்கானேன். இறுதியாக, அவனது வீரத் தன்மையுள்ள உடன் பிறந்தானும்; அவ்வீரத்தில் சிறிதும் குறையாத மகனுடனும், அதிகாரிகள், உறவினர்கள் சூழ தூக்குமேடையில் தொங்கியதையும் நான் காணும்படி நேர்ந்தது.

மருதுக்களின் பழமையான கிராமம் சிவகங்கை அன்று. சிறிய நிலம் என்ற பொருள் கொண்ட சிறுவயல் ஆகும். இந்த இடத்தை வெல்ஷ் 'ஷெர்வேலி' என்றும் ஹக்சு 'சிஹர்வெயில்' என்றும் குறிப்பிடு கின்றனர். மருதுக்கள் ஆதிக்கத்தின் உச்சநிலையை அடைந்தபோது சிறு வயல் என்ற பெயரைப் புனிதவேலி என்ற ஸ்ரீதேவி என்று மாற்றுவதற் கான முயற்சிகளை எடுத்தனர். படைத்தலைவன் வெல்ஷ் 'ஷெர்வேலி' என்று எழுத்தால் எழுதக் காரணம் இதுவேயாகவும் இருக்கலாம். அழகும் பெருமையும் அமையக் கட்டப்பட்ட கிராமமாக அதைப் படைத்தலைவன் வெல்ஷ் விவரிக்கிறார். வழிவழியாக வந்த குடும்ப வாரிசுகளும் போர்க்காலத்திலும் போருக்குப் பின்னும் கூட அங்கேயே தொடர்ந்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் மருதப்ப சேர்வைக்காரர்கள் என அழைக்கப்பட்டனர். 1801 இல் நடந்த இறுதிப் போரில் அழகு நிரம்பிய சிறுவயல் ஆங்கிலப்படையினரிடம் அகப்படக் கூடாதென எண்ணி, அந்நகருக்கே தீமூட்டி அழிந்து, திண்மை நிரம்பிய மருதுக்கள் தங்கள் உள்ள உறுதியையும் வீர உணர்வையும் வெளிப்படுத்தினர்.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை கைப்பற்றப்பட்டவுடன் அதன் பாளையக்காரர் சிவகங்கைக்குத் தப்பியோடியது ஏன் என்ற கேள்வி எழலாம். அவன் தப்பியோடக்கூடிய ஆதரவான பாளையம் அது ஒன்றே ஆகும். (வாழ்க சிவகங்கை - ந.ச.) தொண்டைமான் அரசர் எப்பொழுதும் ஆங்கிலேயரின் நெருங்கிய நண்பனாக இருந்தான். இரண்டு ஆண்டு கட்கு முன்பு மூத்தவனை ஆங்கிலேயரிடம் காட்டிக் கொடுத்தான். இராமநாதபுர சேதுபதியும் ஆங்கிலேயர் பக்கமிருந்தான். அவனுக்கு மட்டும் ஆங்கிலேயர் உதவி இல்லாமலிருந்திருப்பின் அவனுடைய எல்லைகளை மருதுக்கள் கைப்பற்றி இருப்பர் (அவ்வளவு ஆற்றல்! - ந.ச.) அவனுடைய சொந்த உறவினர்களிலேயே மூலப்பன் என்ற ஒருவன் அவனுக்கு எதிரியாக இருந்தான். மூலப்பனின் திட்டங்கள் எல்லாவற்றிற்கும் ஆங்கிலேயரின் வலிமையும் விழிப்பும் தடையிட்டுக்



கொண்டிருந்தன. மேலும் தென் மாவட்ட அதிகாரியின் தலைமை இருப் பிடமாக இந்த இராமநாதபுரம் இருந்தது. இராமநாதபுரம் பிரிந்த பின்னரும்கூட இது கலெக்டர் லூஷிங்டனுக்குட்பட்டிருந்தது. அவருடைய முதன்மை உதவியாளர், அதன் நிர்வாகத்தைக் கவனித்து வந்தார். பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர்களும் அவனுடைய துணை சூழ்ச்சிக்காரனாகிய நாகலாபுரம் பாளையக்காரனும் இராமநாதபுரம் எல்லைக்குள் அடிக்கடி புகுந்து கொள்ளையடிக்கும் வழக்கம் உடைய வராக இருந்தனராதலின் அதுவே இராமநாதபுரம் பாளையக்காரனிட மிருந்து உதவியையோ இரக்கத்தையோ பெற முடியாமல் செய்து விட்டது. அந்தக் கொள்ளையடித்தலின் போது நாகலாபுரம் பாளையக் காரனின் உடன்பிறந்தான் செய்த கொடுமைகளுக்காக இரண்டு ஆண்டுகளுக்கு முன் அவன் தூக்கிலிடப்பட்டான். எனவே கட்ட பொம்ம நாயக்கனும் அவனுடைய துணைவர்களும் இராமநாதபுரத்தை அணுகுவதைப் பற்றியே சிந்திக்கமாட்டார்கள். ஆனால் மற்றொரு பக்கம் கட்டபொம்ம நாயக்கன் இடருற்ற நேரத்தில் மருதுக்களின் உதவியை நாடியது இயற்கையே ஆகும். ஏனெனில் மருதுக்களின் துணையாலே அவன் கலகம் செய்யத் தூண்டப்பட்டது முக்கிய காரண மாகும். ஆவணங்களிலிருந்து நாம் அறிவது: சிவகங்கைக்கும் பாஞ் சாலங்குறிச்சிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தை லூஷிங்டன் நன்கு அறிவான். ஆனால் பாஞ்சாலங்குறிச்சி கைப்பற்றப்படும் வரை மருதுக்க ளோடு நடந்த கடிதப் போக்குவரத்தில் தான் அறிந்த செய்தியைப் பற்றி எதுவுமே கண்டு கொள்ளாமலிருந்தான். அந்தச் சூழலிலே நடை முறையில் ஒரு பாளையக்காரர் போரை நடத்தி முடிப்பதே போதுமானது என்று அவன் அறிவுடைமையுடன் முடிவு செய்தான். இந்தச் சூழ்நிலையைப் பற்றி படைத்தலைவன் வெல்ஷோ அல்லது ஹக்சுவோ அறியவில்லை. அன்றியும் மருதுகள் ஏன் ஆங்கில அரசாங்கத்தினரிடம் அவ்வளவு பகைமையையும், அவர்களுடைய எதிரிகளின் நல்வாய்ப்புகளைப் பகிர்ந்து கொள்வதில் அவ்வளவு முனைப்பையும் காட்டினார்கள் என்றும் ஒருவருக்கும் தெரியாது.

தென்பாளையக்காரனின் நிர்வாகத்தை லூஷிங்டன் ஏற்றுக் கொண்டவுடன் அவன் மருதுக்களுக்குச் செய்தி அனுப்பினான். அதில் அக்குடும்பத் தலைவனான சசிவர்ணன் வழியில் தோன்றியவன் என்பதைக் காட்டத்தக்க ஆவணங்களையும், அந்த நாட்டின் உரிமையைப் பெறத்தக்க சான்றுகளையும் தெரிவிக்குமாறு அவன் கூறி யிருந்தான். தான் அந்தக் குடும்பத்தையோ அல்லது சாதியையோ சேர்ந்தவனல்ல. முற்றும் வேறானவன். முறைகேடான வழியில் நாட்டின் உரிமையைக் கைப்பற்றியவன் என்பதை எல்லாம் அறிந்திருந்த

அவனுக்கு, லூஷிங்டன் கேட்ட அத்தகைய ஆவணங்கள் கிடையாது என்பதும், அத்தகைய சான்றுகளைக் காட்ட இயலாது என்பதும் நன்கு தெரிந்திருந்தும் ஆவணங்களைக் காண்பிப்பதாக உறுதி கூறினான். லூஷிங்டனின் இந்தக் கோரிக்கையே அவனுக்கு இடையூறு அண்மையில் இருக்கிறது என்பதை உணர்த்தப் போதுமானதாக இருந்தது. எத்தகைய துணிவும் தகைமையும் அந்த இடையூற்றைப் போக்க வல்லமையற்றது என்ற முடிவுக்கு அவன் வந்திருக்க வேண்டும். எனவே வீரத்துடன், வரும் வினையை வரவேற்க வேண்டும் என்ற சிறந்த கொள்கையைக் கடைப்பிடித்தான். தோற்கடிக்கப்பட்ட பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரனை அவன் அணைத்து ஆதரிக்கவும் இறுதி வரை திண்மையுடன் போரிடுவதற்கும் இதுவே காரணமாகும். அவன் மேற்கொண்ட பல வழிகளில் ஒன்று அவன் மதராசு அரசுக்கு லூஷிங்டனுக்கு எதிராக எழுதிய கடிதமாகும். அதில் நாட்டில் ஏற்படும் குழப்பங்களுக்குக் காரணம் லூஷிங்டனே என்றும் உடனே அவனை மாற்றி அவனுடைய இடத்தில் சிறந்த வேறொரு கலெக்டரை நியமிக்க வேண்டுமென்றும் குறிப்பிட்டிருந்தான்.

மருதுவின் தலைநகரையும் கோட்டையையும் நோக்கிப் படையெடுக்கும் எண்ணத்துடன் இராமநாதபுரத்தை விட்டு ஆங்கிலப்படை சென்றதும் இராமநாதபுரத்திற்கு ஒரு படையை அனுப்பக்கூடிய வாய்ப்பைப் பெற்றான் மருது, அப்படை வட இராமநாதபுரம் தாலுக்காக்களைக் கைப்பற்றி, முற்றுகையிட்டு, இராமநாதபுரத்தையும் கூட அச்சமூட்டிக் கொண்டிருந்தது. கைப்பற்றிய தாலுக்காக்களை முற்றுகை முடியும் வரை தன்னிடத்தில் வைத்திருப்பது நன்மையுடையது என லூஷிங்டன் எண்ணினான். கமுதிக் கோட்டையை ஆங்கிலப்படை சூழ்ந்து மிக வேகமாய்த் தாக்கியும் எண்ணிப்பார்க்க இயலாத முறையில் அக்கோட்டைத் தாக்குதலை எதிர்த்துப் பாதுகாத்து நின்றனர். படைத்தலைவன் மார்ட்டினின் இராமநாதபுரப் படையின் ஒரு குழுவினர் தங்கியிருந்த திருப்பத்தூர் கோட்டை மருதுக்களால் வெற்றி முழக்கத்துடன் கைப்பற்றப்பட்டது.

இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்த போது தொண்டித் துறைமுகம் அல்லது பால்க் நீர் இணைப்பில் சிறிய அளவில் கடற்போர் நடந்து கொண்டிருந்தது. சிவகங்கை ஜமீன்தாரி முழுவதும் உள்நாட்டிலேயே அமைந்திருந்ததால் எல்லைகள் பிரிக்கப்பட்ட போது சிவகங்கைக்கு அதன் கடல் வாணிபத்தின் வாய்ப்புக்கான வெளித்துறைமுகம் ஒன்று கொடுக்கப்பட வேண்டுமென்பதைச் சேனாபதி ஏற்றுக் கொண்டிருந்தார். இது தொண்டியின் துறைமுகப் பட்டினம்; இதைத் தொண்டி என்பர். ஆனால் 'துண்டி' என்பதே சரி, (மேற்குக் கடற்கரையிலும் கூட 'துண்டி' அல்லது 'காடால் துண்து', கிரேக்கர்களின் 'திண்டிஸ்' என்றழைக்கப்படும் துறைமுகம் உண்டு) இத்துறைமுகத்திற்கு சிவகங்கைப் பாளையக்காரனே தலைவன். மருதுக்கள் பல சிறு மரக்கலங்களாகிய தோணிகளைத் தொண்டித் துறைமுகத்திற்கு அனுப்பி, வளைகுடாவில் வந்திறங்கும் அரிசி மூட்டைகளை ஏற்றிச் செல்லும் எல்லாத் தோணிகளையும் பிடிக்கும்படி கட்டளையிட்டான். அவ்வாறு பிடிக்கப்பட்ட அரிசி சிவகங்கை நாட்டிற்குள் அனுப்பப்பட்டது. இந்த அரிசி முற்றுகை இடப்பட்ட அல்லது முற்றுகையிடப்படும் என்று எதிர்நோக்கியிருக்கும் கோட்டைகளுக்குள் இருப்பவர்களுக்கு உணவாகப் பயன்படுத்தப்பட்டது. அதற்குப் பின் லூஷிங்டனின் கட்டளையின் பேரில் பாம்பனில் இருந்த தலைமை ஊழியன் மிகச் சிறந்த காவல் கப்பல்களைக் கட்டுவித்து அதில் படைகளைப் பாதுகாப்புக்காக அமைத்து அப்புதுவிதமான கடல் கொள்ளையைத் தடுக்க அவற்றை வளைகுடாவின் ஓரங்களில் உலாவ விட்டான். அவன் விரைவிலேயே மருதுக்களின் சில தோணிகளைக் கைப்பற்றியும் சிலவற்றைக் கொளுத்தியும் வெற்றி கண்டான். இதனுடைய மற்றொரு நோக்கம் எதிரிகள் கடல் வழியாகத் தப்பி ஓடுவதைத் தடுப்பதேயாகும்.



**காளையார் கோயிலைக் கைப்பற்றல்**

இப்பொழுது மருதுக்களுக்கு எதிராகத் திட்டங்கள் ஆரம்பமாகிறது. படைத்தலைவன் கர்னல் அக்னியூ மருதுக்களுக்கு எதிராகத் தொகுத்த திட்டங்களுக்குத் திரும்புவோம். முதன் முதலில் தாக்குதலுக்கு இலக்கான இடம் சிறுவயல். இது மருதுக்களின் தலைநகரம். தரைப்படத்தில் 'செர்ராவெய்ல்' என்றழைக்கப்பட்டது. ஏறக்குறைய காளையார்கோயிலின் வடக்கே அமைந்திருந்தது. மருதுக்களின் வலிமை உயர்ந்ததும் இந்நகரம் சிறு குறிப்பிற்குத் தகுதிபெற்றது. அதையே அவன் தனது நிலையான இருப்பிடமாக ஆக்கிக் கொண்டான். இங்கு உறுதியான ஊன்றுகோலுக்கு வழி செய்வான் என்றும் கற்பிக்கப் பட்டது. எட்டு அல்லது ஒன்பது மைல்களுக்குட்பட்ட அப்படையெடுப்பு பெருஞ்சாலை சிறப்பாக அமைந்திருந்தபோதிலும், அன்று முழுவதும் தொடர்ந்தது. பொதுவாக 1200 அல்லது 1500 மூவடி அகலமுள்ள துண்டு நாடாக அமைந்திருந்தது. ஒவ்வொரு பக்கத்திலும் உயர்ந்த அடர்ந்த காடுகள் இருந்தன. உட்பக்கம் ஒவ்வொரு இடத்திலும் நீர்நிலைகளின் கரைகள் கட்டப்பட்டிருந்தன. சில கரைகள் குறுக்காக அமைந்திருந்தன. அடர்த்தி மிகுந்த பனங்காடுகள் அல்லது சாதாரண மெலிந்த காட்டு

மரங்கள் நிறைந்த புதர்களும் அமைந்திருந்தன. இவை யாவும் பாளையக்காரனின் ஒழுங்கற்ற போருக்கு மறைவிடமாக உதவியது. எதிரிகள் அதிகமாகப் போர்க்கருவிகளை வைத்திருந்தனர். அவர்களுக்கே உரித்தான விவரங்களுள்ள சிறு துப்பாக்கிகள் பலவற்றைப் பெற்றிருந்தனர். எதிரிகள் பக்கத்திலிருந்து இடைவிடாது நாள் முழுவதும் சுடுதல் நடைபெற்றது. தொலைநோக்குடையவன் நாங்கள் நெருக்கடியான நிலையிலிருப்பதாக முடிவு செய்யக்கூடிய சூழ்நிலை இருந்தது எனினும் நல்வாய்ப்பாக அது வெறும் கூச்சலும் ஒழுங்கற்ற துப்பாக்கிச் சூடுகளுமே தவிர வேறு எந்தவிதமான அச்சமூட்டத்தக்க கெடுதலையும் செய்யவில்லை. பாளையக்காரர்கள் எங்கள் எதிரிலும் நீர்நிலைக் கரைகளிலும் கூட்டமாக இருந்தபோதெல்லாம் அவ்வப்போது நாங்கள் பீரங்கியைப் பயன்படுத்தினோம். எங்களுடைய படை அவர்களை நெருங்கும்போதெல்லாம் அவர்கள் மற்ற முனைக்குப் பின்வாங்கினர். எங்கள் முக்கியப் படைக்கு வடக்கே இடது பக்கத்தில் எதிரிகளின் முக்கிய மறைவிடம் இருந்தது போல் தோன்றியது. ஆதலின் இந்தப் பக்கத்தில் மேஜர் ஷெப்பர்ட், தன்னுடைய படையுடன் நிலையான துணைப் படையாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தான். எங்களுடைய படைக்கருவிகளும், சேமிப்புகளும் மிக அதிகமாக இருந்தமையால் துணிவாண்மையுள்ள எதிரியாக மட்டும் அவர்கள் இருந்திருப்பின் அவர்களுக்கு அவை கவர்ச்சியை உண்டுபண்ணியிருக்கும். அந்திப் பொழுதில் எங்கள் முற்றுகையிடத்தை அடைந்தோம். அங்கு சிறுவயல் பெருநகரம் பெருந்தீக்கிரையாகிக் கொண்டிருந்ததைக் கண்டோம்.

### காளையார் கோவிலுக்குக் காட்டில் ஒரு வழி

சிறுவயல் மக்கள் அவரவர்களுடைய வீடுகளுக்கு அவரவர்கள் கையாலேயே நெருப்பு வைத்துவிட்டுக் காடுகளுக்குத் தப்பி ஓடிவிட்டனர். (என்னே அவர்கள் நாட்டுப்பற்று! - ந.ச.) பெருங்காற்றால் விசிறப்பெற்ற தீ, கொடுமையாகத் தாவி அகலமும் ஒழுங்கும் உடைய தெருக்கள் அமைந்த அழகு நிறைந்த பரந்த கிராமம் (நகரமைப்பிலும் வல்லவர் நம் முன்னோர்! - ந.ச.) முழுவதும் பரவிற்று. மருதுக்களின் அரண்மனை எவ்வித எதிர்ப்புமின்றி எங்கள் துருப்புக்கள் வசமாயின. இது ஜூலை 30 ஆம் தேதி நடைபெற்றது. அடுத்த நாள், கர்நாடகத்திலேயே அடர்வு மிகுந்து (அடி ஆத்தே! - ந.ச.) அணுக இயலாத காடாகிய காளையார்கோயில் (இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்த பழைய பெயர்; கானப்பேர் எயில்) காட்டினூடே வழி உண்டாக்கும் வேலையைப் படைகள் ஆரம்பித்தனர்.

பாளையக்காரர்கள் தங்கள் பகைவர்களை எதிர்க்குங்காலங்களில் தங்கள் கோட்டைகளைச் சுற்றி வலிமையான வகைவகையான அரண்களை மிகத் திறம்படக் கட்டியிருப்பார்கள் என்பது யாவருமறிந்த உண்மை. அன்றியும் அந்த நிலையில் அப்படிப்பட்ட இடங்களை எதிர்ப்பது ஆங்கிலேயருக்கு அளவுமீறி அதிக இழப்பை அளிக்கும். ஆகையால் அத்தகைய வேலைகளை எதிர்த்துத் தாக்குவதைவிட காளையார் கோயிலுக்கு ஒரு புதிய வழியை ஏற்படுத்துவதே சிறந்த முறை என்ற கிளர்ச்சி நிரம்பிய ஒரு நம்பிக்கையே கர்னல் அக்னியூவிற்கு மகிழ்வூட்டியது. காட்டினூடே சாலை அமைப்பது மிகக் கடினமானத் தொடர் வேலையாக இருந்த போதிலும், அவ்வேலை போதுமான கவனிப்புடன் தொடங்கப்பட்டது. எங்கள் படை வீட்டிற்கு எதிரே அமைந்த காட்டின் எல்லையிலிருந்து காளையார் கோயில் கோட்டை வரை சாலையிடத் திட்டமிட்ட தூரம் ஐந்து அல்லது ஆறு மைல்களுக்குக் குறையாமலிருந்தது. இவ்வேலையின் பெரும்பகுதி செய்து முடிக்கப்படும்போது எங்கள் ஆட்களிடையே நோய் பரவிற்று. செய்து முடிக்க வேண்டிய இவ்வேலையின் பெரும்பகுதி நிறைவேறாமல் இருந்தது. ஏனெனில் அவர்கள் தப்பிச் செல்லச் செல்ல ஒவ்வொரு நாள் காலையிலும் திறந்த வெளியிலோ அல்லது அவர்களே அமைத்துக் கொண்ட பாதைகளிலோ வெளிப்பட்டுக் காளையார்கோயிலுக்கு வழி போட்டு முடிக்கும் வேலைகளைப் பின்தொடர்ந்து முன்னேறி வந்ததால் சிறிது காலம் வரை பகைவர்கள் பாதுகாப்பான இடங்களிலிருந்து கொண்டு எங்கள் கூட்டத்தினருக்குப் பல தொல்லைகள் நிரம்பிய எதிர்ப்பை உண்டாக்க எண்ணவில்லை.

ஒவ்வொரு நாளும் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றியும் ஒரு நாட்குறிப்பை ஜெனரல் வெல்ஷ் எழுதியுள்ளார்; (கர்னல் வெல்ஷ் பற்றி என்னுடைய 'மருதிருவர்', 'மருதுபாண்டியர்' நூல்களைப் பார்க்க. - ந.ச.) தொடர்ந்து நான்கு நாட்களாக எரியும் காட்டினூடே வழி உண்டாக்கும் பணி பற்றிய கீழ்க்காணும் செய்திக் குறிப்புகள், நாங்கள் மேற்கொண்ட பணியின் தன்மைகள், அதிலுள்ள தொல்லைகள் பற்றி தெளிவான கருத்தை விளக்கும்.

***ஆகஸ்டு 6.*** வேலை செய்து கொண்டிருந்த எங்களைத் தொடர்ந்து வந்த படைப்பகுதிக்கு மேஜர் கிரஹம் (Major Graham) தலைமை வகித்தான். அவன் முந்திய நாள் வெட்டப்பட்ட பாதையின் முடிவில் பெரிய மண்குவியல்களை அள்ளி எறிந்து உண்டாக்கப்பட்ட கரையைக் கண்டான். ஒரு பெரும் படையே அதன் மறைவிலே தங்கக் கூடிய அளவு பெரிதாக அக்கரை அமைக்கப்பட்டிருந்தது. அங்கு மூன்று தனித்தனி வேலிகளும் போடப்பட்டிருந்தன. வேலிகளிலிருந்து வந்த

தாக்குதல்களைப் பாதையிலிருந்து எதிர்ப்பதற்கு நான்கு துப்பாக்கி வீரர்கள் தேவைப்பட்டனர். இந்த இடத்தில் அவர்கள் மிக உறுதியுடன் போராடினர். பகைவர் நம்முடைய வீரர் பலரைக் காயப்படுத்தினர்; கொன்றனர். எனினும் யாரும் எதிர்க்க முடியாதவாறு வீரத்துடன் நம் வீரர்கள் போரிட்டதால் முடிவில் அவர்களுடைய எதிரிகள் தப்பி ஓடி விட்டனர். (வீரமா? பீரங்கிப் பலமா? எது காரணம்? - ந.ச.) நெருக்க மாகப் பின் தொடர்ந்து விரட்டிச் செல்லாத எல்லா நேரங்களிலும் இறந் தவர்களையும் காயமடைந்தவர்களையும் இழுத்துச் செல்லும் பழக்கம் அவர்களுக்கு என்றும் இருந்தமையால், (அடபாவி! அதுகூட உங் களுக்கு இல்லையா? - ந.ச.) சுற்றுப்புறக் காடுகளில் தோய்ந்திருந்த இரத்தக்கறையை நோக்கி, அவர்களுடைய இழப்பு அதிகமாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. எங்களுக்கு ஏற்பட்ட இழப்பும் அதிகமே. (ஓ! அப்படியா! - ந.ச.) ஆனால் அந்தக் கரை முற்றுகை விடப்பட்டு, கைப்பற்றப்பட்ட பின் வேறெவ்வித எதிர்ப்பு மின்றி எங்கள் வேலை தொடர்ந்தது. மாலைக்குள் 236 மூவடி (கெஜம்) நீளமுள்ள பாதையை அமைத்தோம்.

*ஆகஸ்டு 7.* கொள்ளைக்காகத் தேடிச் சென்ற படைப் பகுதித் தலைவன் டால்ரிம்பிள் (Dalrymple) படை அதிகப்படியான வைக்கோலைக் கைப்பற்றி வந்தது (!-ந.ச.) படைத்தலைவன் எம்லியாட் (Major M'Leed) தலைமையில் வந்த படை ஒரு மணிக்கு மேலாகத் துப்பாக்கி வெடித்துக் கொண்டிருப்பதைக் கேட்டு, படைத் தலைவன் 'லிட்டில்' (Little) ஒரு பகுதிப்படையினருடன் புண்பட்ட வரைக் கொண்டு வருவதற்காக அனுப்பப்பட்டான். ஆனால் அவனோ பக்கக் கரையைத் தவிர வேறு எதுவும் யாரும் கடுமையாகப் புண்பட வில்லை என்ற மன நிறைவான கண்டு பிடிப்போடு வந்து சேர்ந்தான். ஆனால் எதிரிகளோ அவர்களது துப்பாக்கிகளைக் கைப்பற்றிச் சென்றதில் வெற்றி கண்டதன்றிப் புண்பட்டவர்களையும் கொல்லப் பட்டவர்களையும் கூட இழுத்துச் சென்றுவிட்டனர். (ஓ! அது வியப்போ? பெருமைதானே?!-ந.ச.) காடு மிக அடர்த்தியாக இருந்தமையால் படைத் தலைவன் 'கிங்' (King) தலைமையில் வந்த ஒரே ஒரு படை மட்டும் புறப்பக்கப் படையைக் குறிப்பிட்ட காலத்தில் அடைந்தது. படைத் தலைவன் எம்பர்சன் (Major M'Pherson) தலைமையில் எதிர்த் திசையில் அனுப்பப்பட்ட மற்றொரு பிரிவினர் சிறிது நேரம் வரை வந்து சேரவேயில்லை. ஒருவேளை அவர்கள் எதிரிகளைத் தாக்கி அடக்கியும் இருக்கலாம். அதற்கு மேல் எத்தகைய எதிர்ப்பும் எங்களுக்கு ஏற்பட வில்லை. படைப் பிரிவுகள் 350 மூவடி (கெஜம்) தூரப்பாதையை



வெட்டியபின் திரும்பின.

*ஆகஸ்டு 8.* மேஜர் ஷெப்பர்ட் தலைமையில் சென்ற கொள்ளைப் படைப்பகுதி மேலும் போதுமான அளவு வைக்கோல் கொண்டு வந்தனர். துணைப் படைப்பகுதித் தலைவன் 'டால்ரிம்பிள் (Dalrymple) தலைமையில் சென்ற பாதுகாப்புப் படை மறுபடியும் கரை கட்டப் பட்டிருப்பதைக் கண்ணுற்றது. அது அரணிடப்பட்டு காக்கப்பட்டிருந்தது. மறுபடியும் வெற்றிகரமாக அது கைப்பற்றப்பட்டது. படைத்தலைவன் பிலெட்சர் (Fletcher) தலைமையில் சென்ற வலப்படை மட்டும் எதிரியைப் புறமுதுகு காட்டவைத்தது. காட்டின் அடர்வு காரணமாக பக்கப்படை தாக்கப்படவில்லை என்பதை அறிந்து பாதையில் அதிர் வெடி வெடித்தனர். ஆனால் அதனால் எதுவும் இழப்பு நேரவில்லை. பாளையக்காரர்கள் பதுங்கிவிட்டனர். அவர்களுடைய நிலையைப் பார்க்கும்போது எங்களுடைய இழப்பு மிகச் சிறியதே ஆகும். காளையார் கோயில் கோட்டைக்கு நாங்கள் இட்ட பாதையிலிருந்த பாதுகாப்புப் படையினரால் இங்கு கோட்டையைத் தெளிவாகக் காண முடிந்தது. அவர்கள் 500 மூவடி தூரம் பாதை அமைத்தபின் திரும்பிவிட்டனர்.

*ஆகஸ்டு 9* ஆம் தேதியன்று பாதை அமைக்கும் எங்கள் படை மேஜர் ஷெப்பர்ட் தலைமையில் தாக்குமுறைகளில் மாறுதல்களை உண்டு பண்ணிக் கொண்டு எல்லாத் துப்பாக்கிகளையும் வெடித்தனர். பாதையில் ஒருசில குண்டுகளைப் போட்டனர். இந்தத் திட்டத்தின்படி ஓர் உயிரிழப்பு மில்லாமல் கோட்டையைக் கைப்பற்றினார். இத்தகைய வலிமையுள்ள பல இடையூறுகள் காரணமாய் எங்கள் விரைவான வேலை முன்னேற வில்லை. இந்தக் கரை ஏற்கனவே திறந்துவிடப்பட்டு விட்டது. இப் பகுதியைக் கோட்டையைக் காப்பதுபோல் காக்கும்படி எங்களுக்குக் கட்டளையிடப்பட்டது. மாலைக்குள்ளாகப் படைப்பகுதித் தலைவன் 'இன்ஸ்' தலைமையில் வந்த புதுப்படை நாங்கள் அங்கிருந்து வரு வதற்குள் வந்து சேர்ந்தது. 300 மனிதர்களும் 3 துப்பாக்கிகளும் சேர்ந்து கொத்தளங் காக்கச் சிறந்த படையாக ஆயிற்று. அது ஒரு 300 மூவடி சதுரமாகும். அதன் தென்பாகம் காளையார்கோயில் கரையின் மேலிருந்தது. அதற்கு அருகில் எங்களால் வெட்ட இயலாத அளவுக்கு மிகப் பெரிய புளியமரம் ஒன்று இருந்தது. இந்தப் புளியமரமே 'குண்டடிபட்ட புளி' யாக இருக்கலாம். (இதன் படத்தை என்னுடைய 'மருதிருவர்' நூலில் பார்க்கலாம். - ந.ச.) அப்புளிய மரத்திலிருந்து சிறுவயலும் காளையார் கோயிலும் தெளிவாகத் தெரிந்தன.

எங்களைத் தாக்குபவர்களை நாங்கள் காண்பது அரிதாயிருக்கலாம்.

அத்தாக்குதலுக்குப் பதில் தாக்குதல் செய்வதும் அதைவிடக் கடினமாயிருந்தது. (அடே! ந.ச.) எனவே இந்த நிலை மிகவும் அலுப்பும் அவலமும் நிறைந்த பெரும் போராக இருந்தது. எங்களுக்கு நாட்டின் ஒரு கோடியிலிருந்து வர வேண்டிய உணவு சேமிப்புகளும், வேலையாட்கள் கூட்டமும் வந்து சேர்வது மிக அரிதாயிருந்தது. இறுதியில் மொத்தப் படையும் சென்று பாதுகாப்பு அளித்து எங்களுக்குத் தேவையானவற்றைக் கொண்டு வர வேண்டியதாயிற்று.

காட்டுவழியில் பாதையமைத்துக் காளையார்கோயிலை அடையச் செய்ய இந்த அருமுயற்சியில் ஒரு முழு மாதமும் கழிந்தது. ஜெனரல் வெல்ஷ் அதைப் பற்றிக் கூறுவதாவது:

''இன்று ஆகஸ்டு 30 ஆம் தேதி. சிறுவயல் பக்கத்திலிருந்து காளையார் கோயிலை அடையச் செய்த முயற்சிகளைக் கைவிடும்படி தீர்மானிக்கப்பட்டது. அதைக் கேட்டவுடன் எங்கள் வீர நண்பர்கள் பலியின் இடுகாடாய் (ஐயோ! - ந.ச.) அமைந்த அந்த இடத்தைவிட்டுச் செல்ல நாங்கள் ஒருமனதாய்ப் பெரு மகிழ்ச்சி எய்தினோம். எதிர்ப் புறத்திலிருந்து கிடைத்த வசதிகளை நோக்க நாங்கள் ஒரு முழு மாதமும் பட்ட உழைப்பை விட்டுவிட்டுப் போவதால் ஏற்படும் மான இழப்பைக் கூட மறந்து விட்டோம். எங்கள் படைவீடு நோயாளிகள் வீடாயிற்று; பலர் வயிற்றுப் போக்காலும் வயிற்றுக் கடுப்பாலும் துன்பப்பட்டனர். இந்த அசுத்தமான நோயினால் அதிகாரிகளும் வீரர்களும் மாண்டனர். திடநலமுடன் மகிழ்வாக இருந்தவர்கள் கூட மனதில் நோய்க் கலக்க முடையவராய் அத்தகைய படை வீட்டில் தங்கியிருக்க விருப்பமின்றி இருந்தனர். அங்குக் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பசுமையான அடர்ந்த காடுகளே இருந்தன. விடாமல் மறைந்து தங்கித் தாக்கும் கோழைகளால் நாங்கள் எப்பொழுதும் சூழப்பட்டிருந்தோம். ஒவ்வொரு முறையும் அவர்களைத் தாக்கியபோதிலும் அவர்கள் தப்பித்துக் கொண்டு வெற்றியுடன் எங்களை முழுவதும் சூழ்ந்து கொள்வார்கள். எனவே நாங்கள் ஒரு கடிதத்தையும் வெளியிலிருந்து பெற முடிவதில்லை. வெளியே இருக்கும் ஒருவருக்கு அனுப்பவும் முடிவதில்லை. அருகேயிருந்த பாளையங் கோட்டையிலிருந்தே ஒரு மாதமாக எவ்வித செய்தியும் வராதிருந்தது. அவர்களது இருப்பிடத்தைக் கண்டறிய பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஆனால் ஒவ்வொரு முயற்சியும் பயனற்றுப் போயிற்று என்று நான் நம்புகிறேன். எனக்கு நண்பனான பாளையக்காரன் ஒருவனுக்கு முன் பணமாக ஐந்து பகோடாக்களைக் கொடுத்து ஒரு கடிதம் கொடுத்தனுப்பினேன். பாளையக்கார மக்களையும் அந்த நாட்டின் ஒவ்வொரு அங்குலத்தையும் (இடுக்கு முடுக்குகளையும்) அறிந்தவனான அவன், கடிதத்தைக் கொண்டு செல்ல முன்வந்தான். அக்கடிதத்தை உரியவரிடம் சேர்த்த பின் மேலும் ஐந்து பகோடாக்களை அவன் அவர்களிடமிருந்து பெறுவது என்றும், ஆக மொத்தத்தில் நான்கு பவுன் மதிப்புடைய கூலி அவனுக்குச் சேர வேண்டியது எனவும் ஏற்படாயிற்று. ஆனால் அவன் இருட்டியபின் புறப்பட்டும் கூட, எங்கள் தங்குமிடத்திற்குச் சில மைல்களுக்குள்ளேயே கண்டுபிடிக்கப்பட்டுக் கொலை செய்யப்பட்டான் என்று பிறகு நான் அறிந்தேன்.



*செப்டம்பர் 1* ஆம் தேதியன்று வழக்கமான பக்கத்துணையுடன் ஒரு படைப்பகுதி காட்டில் 32 நாட்கள் அரும்பாடு பட்டுச் செய்த பணியை அழிப்பதற்காக அனுப்பப்பட்டது. (ஐயோ! - ந.ச.) அவர்கள் காவல் கோட்டைகளை இடித்தும் அருகிலிருந்த சிறு காடுகளுக்குத் தீமூட்டியும் பாழாக்கினர். வெளிக் காவலுடன் சென்ற அவர்கள் எவ்வித எதிர்ப்புமின்றி தங்குமிடத்தை அடைந்தனர்.

பாதுகாப்பின்றி தாக்குதலுக்கு எளிதாய் மேற்கு - வடக்குப் பாதைகள் இருக்கும் என்று உணர்ந்திருந்தமையால் இப்பொழுது அப்படை சுற்று வழியாகப் படையெடுத்துச் செல்லப் புறப்பட்டது.

இச்சமயத்தில், எங்களுடைய பணிகளுக்கெல்லாம் மிகப் பயனுடைய செல்வாக்கை உண்டாக்கிய ஓர் அறிக்கையால் இக்காலம் குறிப்பிடத் தக்கச் சிறப்புப் பெற்றது.

பாளையக்காரப் பண்ணை வரி தண்டல்காரர் மிக்க ஆராய்ச்சியின் பேரில் பாளையத்திற்கு வாரிசைத் தேடிக் கண்டுபிடித்தார். அரசு ஆணையின் பேரில் இந்த ஆளுக்குப் பாசறையிலேயே பெருமளவில் சடங்குகளோடும் விளம்பரத்தோடும் அவன் நாட்டின் தலைவனாக அவனுக்குப் பதவியேற்பு விழா நடத்தப்பட்டது. அந்தப் பாளையத்தின் சரியான வாரிசினுடைய கடைசி குடும்பத்திலிருந்த உறுப்பினரால் அவன் குழந்தையிலேயே தத்துப் பிள்ளையாக ஏற்றுக் கொள்ளப் பட்டவன். ஆனால் மருதுகள் அவர்களுடைய தொடக்கக் காலத்தில் மிக்க வலிமையுடைய தலைவர்களாக இருந்தமையால் அவன் தன்னுடைய வாரிசுரிமையைப் பெறுவதற்கான நம்பிக்கை எதையும் வளர்த்துக் கொள்ள இயலாத அளவில் இருந்த பாளையக்கார வாரிசு ஆகும். தன்னுடைய எதிர்கால ஆசைகளை எல்லாம் துறந்து உயிர் பிழைக்கத் தப்பி ஓடும்படியான, மிக இக்கட்டான நிலைக்கு நெருக்கப் பட்டான். இப்பொழுது அவனைச் சார்ந்தவர்கள், எப்படியாயினும் அவனுடைய உரிமைகளைப் பெற வேண்டுமென மிக்க ஆர்வத்தோடு அவனை வற்புறுத்தினர். அரசு கூட மிக்க அறிவார்ந்த நீதியுடனும்

காலத்திற்கு ஏற்பவும் அவனை ஏற்றுக் கொள்வதில் அவனைச் சார்ந்தோர் காட்டிய முழு விருப்பதின் அடிப்படையில் முடிவு எடுத்தனர். பொதுவாக அவனுடைய உயர்வு உயர்ந்த மனநிறைவுடன் இருந்த மக்களின் ஆதரவினாலேயே அமைந்தது. (அதுவே உண்மை! இப்படி - இந்நிலையிலேனும் உண்மை சொன்ன அயலவர்க்கு நம் நன்றி! - ந.ச.)

நேரடி வாரிசு இல்லாத இடத்தில் இத்தகைய உயர்நிலை பெற்றவர்கள் 'தண்டல்காரத் தேர்வு வாரிசு' என்று லூஷிங்டனால் அழைக்கப்பட்டார்கள். கடைசி பாளையக்காரரால் அவனுடைய குழந்தை பருவத்தில் தத்துப் பிள்ளையாக ஏற்றுக் கொள்ளப்பட்ட காரணத்தினாலேயே அவன் உரிமைகள் அமைந்துவிடாது. இவனைவிட இன்னும் நெருங்கிய ஒரு 'தண்டல்காரத் தேர்வு வாரிசு' ஒருவனைப் அவன் வெள்ளை மருதுவின் மகளைத் திருமணம் செய்து கொண்டு அவனுடைய குறிக்கோளில், பற்றுடையவனாய் இருந்தான் என்பதற்காக, லூஷிங்டன் அவனைப் பாளையக்கார வாரிசாக ஏற்க மறுத்துவிட்டான். இந்தப் புது ஜமீன்தார் பெர்மாத்தூர் உடையத்தேவர் (சரியாக பவுரவல்லப கௌரவல்லப என்னும் படமாத்தூர் உடையத் தேவர்) என்றும் அழைக்கப்பட்டார். நியமித்தபோதே பாளையக்காரனாக நியமிக்காமல் ஜமீந்தாராகவே நியமித்தனர். இந்தச் செயலில், மற்றொரு இடத்தில் காட்டியது போல, பெயரிலுள்ள வேறுபாடே ஒரு உண்மை வேற்றுமையைக் குறிப்பதாயிருக்கிறது. படைத்தலைவர் வெல்ஷ், உடையதேவனுடைய நிறுவனத்தைப் பற்றி கிளர்ச்சிப் பொருந்திய குறிப்பினைத் தருகிறார். உடனடியாக மருதுக்களிடமிருந்து அதிக எண்ணிக்கையுள்ள வீரர்களைப் பிரித்துவிட்ட இச்செயலின் பயன், லூஷிங்டன் தனது கொள்கையை வெற்றியுடன் நிறுவிய அறிவாற்றலை எடுத்துக் காட்டியது. அவன், அத்தகைய சிவகங்கை ஜமீன்தார் போன்ற வாரிசு உரிமையாகிய உயர்ந்த பெருமையை ஒரு தகாமுறை அரசனுடைய கைகளில் விட்டு வைக்க விரும்பவில்லை. எனினும் இன்றோ அல்லது என்றோ அவன் விரும்பிய அவ்வாறே செய்து முடிக்கத் தக்க ஒரு நடவடிக்கையாக அது இருந்தது.

இந்தச் சூழலில் படைப்பகுதித் தலைவன் அக்னியூ குதிரைப் படையுடன், சில உள்நாட்டுச் செய்திகளைச் சேர்த்துக் கொண்டு இரவில் புறப்பட்டு பேரமல்லியைப் (பிரான்மலை! - ந.ச.) பிடிக்கச் சென்றான். அது எதிர்பாராதத் தாக்குதலாகலின் அதனால் ஏற்பட்ட வியப்பு விலகுமுன் எவ்வித குறிப்பிடத்தக்க நடவடிக்கையும் இல்லாதபடி கோட்டை கையகப்பட்டது. இந்தத் தாக்குதல், உத்தியுடன் சேர்ந்து திட்டமிடப்பட்ட ஒன்று. ஏனெனில் காவல்படை ஏதோ சில மறைவான



காரணங்களுக்காகப் பண்டகசாலைப் பொருள்களைச் சேகரிப்பதற்காகச் சென்றது. அந்நிலையில் எதிரிகளின் சிறுபடைகள் நாங்கள் திருச்சிராப்பள்ளியுடன் கொள்ளும் செய்தித் தொடர்புகள் எல்லாவற்றிற்கும் பல இடையூறுகள் செய்வதாகவும் அறிவிக்கப்பட்டது. அதுவே இந்தப் பயணத்திற்குக் காரணமாகவும் ஆயிற்று. அக்கோட்டையே அழகுள்ள கோயிலையுடையது. அது ஒரு மலையின் உச்சியில் அமைந்திருந்தது; அதையடுத்துக் கீழே சிறு கிராமம் இருந்தது. அது மதிலால் சூழப்பட்டிருந்தது. காவற்படை வீரர்கள் எங்களுடைய நடவடிக்கைகளிலிருந்து கோட்டையைப் பிடிக்க முயற்சிக்கிறார்கள் என்பதை உணர்ந்து மலைக்கு எதிர்ப்புறத்தில் காட்டுக்குள் செல்லும் பின்பாதை வழியாகத் தப்பி ஓடிவிட்டனர். எங்கள் தாக்குதலுக்கு அப்படையின் எதிர்ப்பு நேர்மையானதாயிருந்தது.

பேரமல்லி என்பது (படைஞர் படத்தில் பிரான்மலை) பிரமலை என்று அறிந்து கொள்ள வேண்டும். சரியாகச் சொன்னால் அது பிரான்மலை. அதாவது (பிரான்) விஷ்ணுவுக்கு விருப்பமான ஒரு புனித படிவம். காளையார்கோயில் பெருமைமிக்க சிவன் படிவம் அமைந்துள்ள கோயில். காளை என்பது காளை மாட்டைக் குறிக்கும். அது இங்கு சிவனது ரிஷபம் அல்லது புனித ஊர்தியாகிய காளைமாட்டைக் குறிக்கிறது. இங்குள்ள சிவன், காளை - ஈசுவரன் என்று வணங்கப்படுவான்.

*அக்டோபர் 1* ஆம் தேதி காளையார் கோயிலை மூன்று வேறு திசைகளிலிருந்து குவிந்தாற்போல் சூழ்ந்து தாக்க முழுப்படையும் முன்னேறியது. இந்தப் படைப் பிரிவுகளில் ஒன்று முதல்நாளே புறப்பட்டு காட்டின் ஊடே வெட்டப்பட்ட பாதையில் இருட்டில் மறைந்து மறைந்து காளையார் கோயிலை அடைய வேண்டுமென்ற முயற்சியுடன் சென்றது. மற்ற படைகளுக்கும் குறிப்பிடத்தக்க எதிர்ப்பு இருந்தது. என்றாலும் இறுதியில் வலுவிலே முயன்று கோட்டையை நோக்கிப் படை முன்னேறிற்று. முந்திய நாளிரவு புறப்பட்ட படையின் ஆகூழைப் பற்றி திரு. ஹக்சு கூற்றாலேயே சொல்ல வேண்டும்.

நெருக்கடியான சூழ்நிலையில் சிறு வயலிலிருந்து எங்கள் படையால் அமைக்கப்பட்ட பாதையின் நிலையை ஹக்சே மிகக் கவனத்துடன் கண்காணித்து வந்தார். அவருடைய கூர்மையான அறிவு, அந்த இடம் முழுமையும் காவலின்றியே தற்போது விடப்பட்டிருந்ததால் எங்களது தலைமை இருப்பிடத்திலிருந்து வெகுதூரத்தில் எவ்வித முன் எச்சரிக்கைக்கும் அப்பாற்பட்ட இடத்தில் இருக்கின்றனரா என்று உறுதிப்படுத்துவதில் ஊன்றியிருந்தது. அந்த தூரம் எங்களால் சிந்திக்கத் தகுந்ததுதான். எனினும் சரியாக ஒவ்வொரு இடத்திலும்

எதிரிகள் மறைத்து வைக்கப்பட்டிருப்பார்கள். எனவே படைப்பகுதித் தலைவன் அக்னியூ அந்தத் திசையில் ஒரு சிறு படைப் பகுதியை மட்டும் செல்லக் கட்டளையிட்டான். இந்தப் படை, எங்கள் கூடாரத்தில் தங்கியிருப்பவர்களுக்குக் கூட அதன் நடவடிக்கை தெரியாமலிருக்கு மாறு மறைமுகமாய் இரவில் புறப்பட வேண்டுமென்று ஒழுங்கு செய்யப்பட்டது. ஏனெனில் எங்களைச் சூழ்ந்து பல உள்நாட்டவர் இருக்கின்றனர். அவர்களுள் யார் யார் எங்களுக்காக மறைந்து பணி செய் பவர் என்று தெரியாது. (உம்! - ந.ச.) ஆனால் அப்படை முன்னேறும் போது யாரும் எச்சரிக்கைக் கொடுக்காமலிருக்க கிராமத்தினூடே செல் வதையும் திறமையுடன் தவிர்த்துவிட வேண்டுமென்பதே அவர்கள் எண்ணமும் - ஏன் - அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கட்டளையுமாகும். ஆனால் அப்படை எந்த ஒரு சிறு இடையூறையும் கூடச் சந்திக்க வில்லை. ஒரு மாதத்திற்கு முன்னரே முழுமையாகப் பயன்படாத சிறப் பான அந்தப் பாதையின் முடிவிலிருந்து நாங்கள் வேலை செய்து கொண்டிருந்த போது, அடிக்கடி அதைக் கடந்து வந்து தொந்தரவு செய்து கொண்டிருந்த எதிரிகள் வந்த வழிகள், காளையார் கோயில் மதில்சுவர் வரை திறந்து கிடந்தன. சிறிதும் எதிர்பாராத இடத்தில் எங்களுடைய திடீர் தோற்றம் வியப்பையும் குழப்பத்தையும் கொடுத்ததன்றி அந்த இடத்தையே உடனடியாகக் காலி செய்துவிட்டு ஓடவும், அடுத்துள்ள காட்டிற்குள் வேகமாக ஒவ்வொருவரும் ஓடி ஒளிந்து கொள்ளவும் செய்தது. படைப்பகுதித் தலைவன் அக்னியூ சிறிது நேரம் அவருடைய படையெடுப்பின் போது எதிர்ப்பட்ட எண்ணற்ற இடையூறுகளை எண்ணி விக்கித்து நின்றார்.

**ஜெனரல் வெல்ஷ் கூறுகிறார்:**

படையெடுப்பின் போது வழக்கமான துப்பாக்கிச் சூடுகளும் அதிகக் குழப்பங்களும் இருந்தன. ஆனால் முதல் தடவையாக பக்கங்களை ஊடறுத்துச் சென்றதால் அதைச் சூழ்ந்திருந்த எண்ணற்ற சிறிய வழிகளின் மூலமாக எதிரிகள் தப்பியோட வேண்டியது இன்றியமை யாததாயிற்று. அவர்கள் கோட்டை, எதிரிகளாகிய எங்கள் கையகப் படுவது உறுதி எனத் தெளிவாக எண்ணியிருக்க வேண்டும். அதுவே அவர்களது எதிர்ப்பை வலி குறையச் செய்திருக்க வேண்டும். உள்ளே யிருந்து காளையார் கோயிலுக்குச் செல்லும் ஒவ்வொரு பாதுகாப்பு இடமும் காலியாயிருந்தது. கோயிலைக் கண்டு பிடித்த பின்னர் எங்கள் காவலாளிகள் சுவர்களின் மேல் இருப்பதைக் கண்டு எங்கள் படைத் தலைவன் வெகுவாக மனநிறைவடைந்தான். அங்கு கூடிய நாங்கள் ஒவ்வொருவரும் மகிழ்ச்சியாக இருந்தோம். தொல்லைகள் நிறைந்த



அந்த வேலை முடிவு பெற்றது என்ற எண்ணமே அம்மகிழ்ச்சிக்குக் காரணமாகும்.

மேலும் வெல்ஷ் கூறுவதாவது: "காளையார் கோயில் பெரியது. அழகிய கட்டட அமைப்புள்ளது. ஏறக்குறைய 18 அடி உயரமுள்ள வலிமை வாய்ந்த கல்சுவரால் சூழப்பட்டிருந்தது. ஏறத்தாழ அழிக்கப் பட்ட நிலையிலுள்ள கோட்டையின் ஒரு பகுதியை உடையது அச்சுவர். நாங்கள் ஒரே சமயத்தில் பல வழிகளிலும் தாக்குதல் செய்தமையால் எங்கள் எதிரிகள் மனம் தளர்ந்தனர். அன்று எஞ்சிய நேரத்தில் ஒருவரும் அங்கே காணப்படவில்லை. நாங்கள் இங்கு 21 துப்பாக்கிகள் - அவற்றில் பல அரணில் அமைக்கப்பட்டவை, ஏராளமான சேமிப்புகள் ஆகிய வற்றைக் கண்டோம். அங்கு ஐரோப்பிய மரச்சாமான்கள் பல இருந்தன. அவற்றுள், இரண்டு கடிகாரங்களும் பல பெரிய சுவர்க் கண்ணாடிகளும் இருந்தன. கோட்டை வலுவுள்ளதாய்க் கட்டப்பட்டிருந்தது. அதிக பரப் பளவுடையது. ஆனால் நகரமோ ஓர் அடர்ந்த வேலியால் சூழப் பட்டிருந்தது. இந்நகரம் கோட்டையில் ஒரு முகமாக அமைக்கப் பட்டிருந்தது. அதில் பல அழகான வீடுகள் இருந்தன. அந்த இடம் ஒரு நாளும் மிகப் பலம் வாய்ந்ததாக இருந்ததில்லை. ஆனால் அந்த ஊரில் கிடைத்த செய்திகளெல்லாம் நம்பத் தகுந்தவையாயில்லை. படைக் கூடாரத்தில் இருந்த எந்த ஆங்கிலேயனுக்கும் நாட்டின் நிலையைப் பற்றி ஒன்றும் தெரியாது. சில மாதங்களுக்கு முன்கூட இதன் வழியாகச் சென்றேன். வெள்ளை மருதுவால் அவனுடைய இடமாகிய சிறுவயலில் அவனது விருந்தினனாக உபசரிக்கப்பட்டேன் என்பதை நாணத்துடன் தெரிவித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. (அந்தோ! - ந.ச.) ஆனால் அன்று, அதே இடத்தில் ஒரு பகைவனைவிட இழிந்த நிலையில் (உம்! - ந.ச.) மறுபடியும் நான் நுழைவேன் என்ற எண்ணம் எனக்குச் சிறிதும் இருக்கவில்லை." (என்ன செய்வது! 'தமிழர் ஒரு தற்கொலைப் பட்டாளம்' - டாக்டர் மு.வ.)

***காளையார் கோயில் கைப்பற்றப்பட்ட பின் நடைபெற்ற நிகழ்ச்சிகள்***

ஆயிரத்துத் தொண்ணூற்று ஓராம் ஆண்டு அக்டோபர் முதல் தேதி காளையார் கோயில் கைப்பற்றப்பட்டது.

அன்றிலிருந்து எதிரிகள் நம்பிக்கையை இழந்து போர்க் களத்தில் எல்லா எதிர்ப்புகளையும் கைவிட்டனர். தப்பியோடியவர்களை விரட்டி வேட்டையாடிய விவரங்களை வெல்ஷ் தருகிறார்.

மூன்றாம் தேதி அன்று மங்கலத்தில் ஒரு பெரிய பகைவர் படையைச் சந்திக்கக் காளையார் கோயில் வழியாக மங்கலத்திற்குச் செல்

வதற்கு வேண்டிய கட்டளைகளுடன் படைப்பகுதித் தலைவன் ஷெப்பர்ட் தலைமையில் ஒரு படை, பகலவன் தோற்றத்தின் போது கூடாரத்திலிருந்து கிளம்பியது.

நாங்கள் எவ்வித எதிர்ப்புமின்றி மதியம் இரண்டரை மணிக்கு அங்கு சென்று அக்கிராமத்திற்குப் பின்புறத்தில் பாசறைகளை அமைத்தோம்.

பாசறைக்கு எதிரில் பெரிய நீர்த்தேக்கம் இருந்தது. அதன் கரையில் காவலாளிகளை நிற்க வைத்தோம்.

எங்கள் அருகே வெள்ளைக் கொடியைக் கண்ட கிராம மக்கள் எங்களைக் காண வெளியே வந்தனர். மருது இரண்டாயிரம் ஆட்களுடன் சிறிது முன்வரை அங்கிருந்ததாகவும், ஆனால் பின்னர் காட்டிற்குள் புகுந்துவிட்டதாகவும் அம்மக்கள் கூறினர்.

மாலையில் ஒன்பது கிராமங்களிலிருந்து கிராமத் தலைவர்கள் படைப்பகுதித் தலைவன் ஷெப்பர்டிடமிருந்து நிலவாரக் குத்தகைப் பெற்றுக் கொள்ள ஆவலுடன் வந்தனர்.

காளையார் கோயிலிருந்து இந்த இடம்வரை இருந்த சாலை முழுவதும் காட்டினூடே அமைந்திருந்தது. (பார்க்க: படம் 'மருதிருவர்' - ந.ச.) சில இடங்களில் காடு அடர்த்தியாகவும் இருந்தது. வண்டிகள் செல்லப் போதுமானதாக இல்லாவிடினும் அப்பாதையில் அவ்வப்போது அமைக்கப்பட்ட நொய்மையான முள்வேலிகளை அகற்றிவிட்டால், மற்றெல்லா விதங்களிலும் சிறந்த வழியாகவே இருந்திருக்கும்.

காட்டின் எல்லைப்புறத்தில் ஒரே ஒரு வேலி மட்டும் இருந்தது. அது மங்கலத்திலிருந்து சுமார் ஆறு பர்லாங்கு இருக்கும். இராமநாதபுரத்திலிருந்து வரும் எதிர்ப்பைத் தடுப்பதற்காகவே இவ்வேலி இடப்பட்டது.

எங்கள் வழியைச் செப்பனிடுவோர் ஏறக்குறைய இரண்டு மணி நேரத்தில் அவ்வேலியை அழித்தனர்.

பின்னர் துணையுடன் காளையார் கோயிலுக்குத் திரும்பினர். படைத்தலைவன் அக்னியூ அக்டோபர் மாதம் 4 -ஆம் தேதி சென்னை திரும்பிவிட்டதால் நாங்கள் மறுபடியும் மேஜர் காலின் மெக்காலே தலைமையில் விடப்பட்டோம்.

ஆனால் அக்னியூவிடமிருந்து செய்தி வரும்வரைச் செயலின்றி வறிதே காலத்தைப் போக்கினோம். ஐம்பது கிராமங்களிலிருந்து தலைவர்கள் இன்று நிலவாரக் குத்தகைப் பெற வந்தனர்.



மருதுகள் தங்களுடைய படைகளைக் கலைத்துவிட்டனர் என்றும் சுமார் இருநூறு ஆட்களுடன் சங்கரபதி காட்டுக்குச் சென்று மறைந்திருப்பதாய் அவர்கள் தெரிவித்தனர். இச்செய்தியை நாங்கள் நற்செய்தியாகவே கருதினோம்.

ஏனெனில் அத்தகைய கடினமான நன்மையற்ற போர்கள் செய்வதில் அவ்வளவு அலுப்படைந்திருந்தோம்.

பின்னர் நடந்தவை யாவும் முக்கியமற்றவை. எதிரிகள் மறைந்து வாழ்ந்தனர். எங்கள் குழுக்கள் பல்வேறு காடுகளிலும் எதிரிகளைத் தேடும்படி அனுப்பப்பட்டன.

சிறிது நாட்களுக்குள் மருதுக்கள் அவர்களுடைய குடும்பத்தினர் கட்ட பொம்ம நாயக்கன், தளவாய்ப்பிள்ளை, ஊமைத்துரை முதலியவர்கள் பிடிக்கப்பட்டுத் தூக்கிலிடப்பட்டனர்.

இவர்களுக்குள் சின்னமருதுவின் இளைய மகனான துரைசாமியும், குறைவான குற்றச்சாட்டுகளுடைய தளவாய்ப்பிள்ளை இருவரும் ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டு எழுபது உண்மையுள்ள ஊழியர்கள் துணையுடன் பிரின்ஸ் ஆப் வேல்ஸ் (இதுதான் பினாங்குத் தீவு! - ந.ச.) தீவுக்கு அனுப்பப்பட்டனர்.

தொல்லைகள் நிரம்பிய இந்தப் போர் இவ்வாறாக முடிந்தது. அதில் உயிர் இழப்பு அதிகம். எனினும் இறுதியில் கிடைத்த வெற்றி உயிரோடு மீண்டவர்களுக்குப் பெருமையைத் தந்தது.

இப்படையெடுப்பின் முடிவைப் பற்றிப் பேசும்போது ஜெனரல் வெல்ஷ் அது சிறுமைக்குரியது எனக் குறிப்பிட்டுள்ளார். இவர் இராணுவத் திறனாய்வாளர் நோக்கிலிருந்து அதைப் பற்றிச் சிந்திப்பதால் அப்படிக் கூறியுள்ளார்.

நாகரிகமற்ற அத்தகைய ஓர் எதிரியை வீழ்த்த எடுத்துக் கொண்ட அவ்வளவு காலம், உயிர் பொருள் முதலியவற்றின் இழப்பால் ஆங்கிலப் படை பெருமை பெறவில்லை என்றே அவர் கூறுகிறார். உள்ளூர் மக்கள், அவர்களது பரம்பரை அரசு இவற்றின் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது போரின் பயன்கள் மனநிறைவுடையதாக இருந்தன.

(ஆம்! எதிரியின் இலாபம் சிறிது; இழந்தவன் இழப்போ பெரிது! என்ன இருந்தாலும் கால்டுவெல் வெறும் கத்தி எடுப்பவர் இல்லையே! புத்தி உடையவரும், அல்லவா? - நன்று. - ந.ச.)

இத்தகைய போர்களில் இந்தப் பாளையக்காரப் போரே தனிச்சிறப் புடையதாகி விட்டது.

ஏற்கனவே குறிப்பிட்டபடி மருதுக்களின் நாட்டு எல்லையிலுள்ள ஊரும் கோட்டையுமாகிய திருப்பத்தூரிலுள்ள உயர்ந்த கோட்டையின் மீது மருதுக்கள் தூக்கிலிடப்பட்டனர்.

அந்த மணல்மேடு இன்னும் காணப்படுகிறது. படைத் தலைவன் அக்னியூ சிவகங்கையில் ஒரு படையை நிறுத்தி விட்டுப் பாளையங் கோட்டைக்குத் திரும்பினான். காப்டன் வெல்ஷ் பிரிந்து தூத்துக்குடிக்கு அனுப்பப்பட்டார்.

அங்கு நாடு கடத்தப்பட்ட எதிரிகள் எழுபது பேர்களையும் கப்ப லேற்றும் வேலையை மேற்பார்வையிட்டார்.

அந்தக் குற்றவாளிகளில் சின்னமருதுவின் இளைய மகனும் ஒருவன். வெல்ஷ் தன் நாட்டின் கடமைக்குச் சிறிதும் குறை நேரா வகையில் அச்சிறுவனை மிக அன்புடன் நடத்தினார். (அடே! - ந.ச.)

எட்டு ஆண்டுகட்குப் பின்னர் பினாங்கு சிறையில் பழைய கைதியை வெல்ஷ் சந்தித்தான் என்று குறிப்பிடுவது வியப்புக்குரியது.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை அழிக்கப்பட்டதன்றி அந்த இடம் தரைமட்டமாகவும் ஆக்கப்பட்டது.

மக்கள் மனதிலே கடுமையையும் கொடுமையையும் நிலை நிறுத்த அந்த இடத்தை உழுது பயிரிடச் செய்தனர். அன்றியும் எல்லா நாட்டுப் படங்களிலிருந்தும் கணக்குகளிலிருந்தும் பாஞ்சாலங்குறிச்சி என்ற பெயரையே அகற்றி விடுமாறு கட்டளையிடப்பட்டது. (அப்போ?! - ந.ச.)

அவ்வாறிருந்தும் பின்னர் ஆர்டன்சு நாட்டுப் படத்தில் இந்த இடம் ‘சிதைந்த பாஞ்சாலங்குறிச்சி’ என்று குறிக்கப்பட்டுள்ளது.

ஆனால் பாளையக்காரனும் அவன் உடன் பிறந்தானுமாகிய ஊமைத்துரையும் தூக்கிலிடப்பட்ட பீரங்கிக் கோட்டை மேட்டின் சில அறிகுறிகளும், அதனருகே கடந்த இரண்டு போர்களில் உயிர் துறந்த உயர் அதிகாரிகள், படையினர், கல்லறைகளுடைய அடைப்புமனையும் தவிர அந்த இடத்தைக் குறிக்க இன்று அங்கு வேறு எந்தத் தடையமு மில்லை.

(முதல் தாக்குதலில் இறந்தவர்களின் உடல்கள் ஒட்டப் பிடாரத்திற்கு வெளியே அருகிலேயே இருக்கின்றன. (ஆங்கிலேயன் அழித்த



கோட்டை நம் கலைஞர் - முன்னாள் தமிழக முதல்வர் - முயற்சியால் மீண்டும் எழுப்பப்பட்டுள்ளது போற்றத்தக்கது. - ந.ச.)

படைப்பகுதித் தலைவன் அக்னியூ இல்லாதபோதும் அந்த ஆண்டு இறுதிவரையிலும் கலெக்டராகிய லூஷிங்டன் மிக்க விடா முயற்சியுடனும் விழிப்புடனும் எதிரிகளைத் தேடிப் பிடித்து அவர் களுடைய நண்பர்களையும் உதவியாளர்களையும் கண்டு பிடித்து அடக்கினார்.

இதனால் சிவகங்கை, இராமநாதபுரம், திருநெல்வேலி முதலிய இடங்களிலுள்ளவர்களுக்குப் பாதுகாப்பும் தன்னம்பிக்கையும் ஏற்பட்டன. பின்னர் பிடிபட்ட முக்கிய கலகக்காரன் சிவத்தையா நாயக்கன். இவன் தூக்குத் தண்டனையிலிருந்து தப்பி வந்தபோதிலும் இவனே கலகத் திற்கு உண்மையான மூலக்காரணன் என்று பலர் எண்ணினர்.

நவாபிடமிருந்து கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ஆட்சி மாறியபோது எல்லாருக்கும் பொது மன்னிப்பு வழங்கப்பட்டது. ஆனால் அந்தக் குற்ற மன்னிப்பிலிருந்து இருவர் விலக்களிக்கப்பட்டனர்.

ஒருவர் சிவத்தையா நாயக்கன். அவர் ஸ்ரீவில்லிப்புத்தூர் அருகே கைது செய்யப்பட்டு பலத்த இராணுவப் பாதுகாப்புடன் பாளையங் கோட்டை கோட்டைக்கு கொண்டுவரப் பட்டார்.

மன்னிப்பின்றி விலக்கப்பட்ட மற்றொருவர் குலசேகரப் பட்டினத்தைச் சேர்ந்த மூப்பன். இவ்விருவரும் கைது செய்யப் பட்டார்கள்.

(இவர்களைப் பற்றிய செய்திகள் கொண்ட ஏடுகள் எல்லாம் நம் ஆவணக் களரியில் இருக்கின்றனவோ? எரிந்தனவோ? ஒருபுறம் கோட்டை கட்டி இன்னொரு புறம் கோட்டை விட்டோமோ? - ந.ச.)

மற்றொருவர் தளவாய்ப்பிள்ளை. இவர் அதிகாரிகளை அலைக் கழித்துத் தன்னை விரட்டி வருமாறு செய்து இறுதியில் கைதானார்.

நான்கு நேரி மறவர்கள் தளவாய்ப்பிள்ளைக்கு ஆதரவு காட்டி அவன் பொருட்டும் அவர்கள் பொருட்டும் சிறிது கலகமும் செய்தனர். அதனால் அவர்களை அடக்க நூறு சிப்பாய்களையும் அடக்கிய பின்னர் பணியச் செய்யப் படை ஒன்றையும் அனுப்ப வேண்டிய தேவை ஏற் பட்டது.

இத்தகைய சிறுசிறு கலகக்காரர்கள் இராமநாதபுரம் நாட்டிலுள்ள கமுதிக் கோட்டைக்கு அனுப்பப்பட்டு அங்கு காவலில் வைக்கப்

பட்டனர். முக்கிய கலகக்காரத் தலைவர்கள் சென்னைக்கு கொண்டு வரப்பட்டார்கள்.

லூஷிங்டன் சென்னை அரசுக்கு ஏற்கனவே மேலே குறிப்பிட்டபடி எழுதிய கடிதத்திலிருந்து பின்வருவனவற்றை எடுத்துக் கூறுகிறேன்:

ஜூலை கடைசியில் திருநெல்வேலி மாற்றத்திற்குப்பின் கிராமங்களிலுள்ள பொறுப்புள்ள தலைவர்களாகிய காவல்காரர்கள் நிலை என் அறிவுரைகளைக் கேட்க வேண்டிய நிலைக்கு வந்தது.

பாஞ்சாலங்குறிச்சிக் கலகத்தின்போது அவர்கள் ஒவ்வொரு இடத்திலும் ஏற்பட்ட குழப்பத்தையும் ஊக்கி உதவியளித்து வந்தனர். நாட்டை நீக்கிய பின்னர் அவர்களில் பலர் நாட்டில் தொடர்ந்து திரிய ஆரம்பித்தனர்.

அவர்கள் படைக்கலம் தாங்கிய வீரர்களாய்க் கிராமங்களைச் சூறையாடி, மக்களைத் திருடிக் கொண்டும் மகாசனங்கள் என்னும் பிராமணர்களைக் கலங்கடித்துக் கொண்டும் இருந்தனர். (அடி சக்கை! ஏன்? பாரதி பாடியது போல் அவர்களின் காட்டிக் கொடுக்கும் கலையைக் கண்டு கொண்டனரோ? - ந.ச.)

முக்கிய குடிமக்கள் சர்க்காரிடமிருந்து தங்களுக்கு மன்னிப்புப் பெற்றுத் தருமாறு அச்சுறுத்தி வந்தனர்.

நாட்டின் நலனும் நற்பேறும் இரண்டும் இத்தகைய ஒழுங்கீனங்களை ஒழுங்குபடுத்துவதற்கு ஆன உடனடி நடவடிக்கைகளை எதிர் நோக்கின.

காவல்காரர்கள் திரும்பவும் அவர்களுடைய கிராமங்களுக்குத் திரும்புவதால் எத்தகைய கெடுதலும் உண்டாகாது என நானும் எண்ணியதால் அதன்படி அவர்களில் குறிப்பாக மிகக் கொடிய குற்றவாளிகளைத் தவிர மற்றவர்கள் அவரவர்களின் இடத்திற்கு அமைதியாகத் திரும்பும்படி அழைக்கப்பட்டனர்.

பாளையக்காரர்களுடன் அவர் கொண்டிருந்த நீண்ட நாளைய தொடர்பும், நம்பிக்கையற்ற ஆட்சியால் அவ்வப்போது உண்டான துன்பங்களும் என்னுடைய நோக்கில் அவர்களுக்கு நம்பிக்கையின்மையை உண்டாக்கியது.

ஆனால் அடங்கியவர்களுக்கு அளிக்கப்பட்ட எங்கள் மன்னிப்பின் தன்மையை அவர்களுக்கு விளக்கி உறுதிப்படுத்துவதில் நான் வெற்றி கண்ட பின், அவர்கள் திரும்பினார்கள்.



அந்தக் காலத்திலிருந்து அவர்கள் கடமையைக் கருத்துடன் செய்வதிலிருந்து பிறழச் செய்ய முயன்று வந்த தன்னலமுள்ள (யாருக்கு? - ந.ச.) தளவாய்ப்பிள்ளை செய்த முயற்சிகளையும் பொருட்படுத்தாமல் இருந்தனர்.

ஒழுங்கான ஊதியத்தினால் ஏற்படும் மகிழ்ச்சி அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சலுகைகள் முதலியவை அவர்களுடைய சூறையாடும் நோக்கத்தை மாற்றி அரசுக்குப் பணிந்து தொண்டு செய்யும் ஊழியர்களாக அவர்களை மாற்றியது.

எனவே அவர்கள்மேல் பாளையக்காரர்கள் கொண்ட ஆதிக்கத்தை அழிக்க எதுவும் தேவைப்படவில்லை. உறுதியான தன்னலம் காரணமாக அரசிடம் பாளையக்காரர்களுடைய பிணைப்பைப் பொறுத்த நிலவாரக் குத்தகை அல்லது பேஷ்குஷ் பற்றிய எல்லா உரிமைகளையும் அவர்களிடம் ஒப்புவித்து விடவும் செய்தல் ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை.

இந்த நிலவாரிக் குத்தகையை இயல்பாக அவர்களுடைய ஊதியத்திலிருந்து (ருசும்கள்) கொடுக்க வேண்டுமென்றிருப்பினும் உண்மையில் அவர்கள் அத்தொகையைத் தம் கொள்ளைப் பணத்திலிருந்து பாளையக்காரர்களுக்குச் செலுத்தி வருமாறு கட்டாயப்படுத்தப்பட்டு வந்தனர்.

முழு மாவட்டத்திலும் இருந்து சேர்ந்த தொகை 'எண் 16' இல் காட்டப்பட்டதைப் போன்றது. இத்தகைய கட்டணங்களிலிருந்து அவர்களுக்கு விலக்கு அளிப்பதாக நம்பிக்கையூட்டியுள்ளேன். இதுவே நேர்மையும் அறிவுடைமையுமான செயலென்று உறுதிப்படுத்துவீர்களென நம்புகிறேன்.

பாளையக்காரனின் ஏவலில் இருந்தபோது அவர்கள் பாளையக்காரனின் பெயரைப் பயன்படுத்திக் கொண்டது, அந்தத் தொகையை அக்காலத்தில் மிக எளிதாகப் பெறுவதற்கு முழுமையான வாய்ப்பாக இருந்தது.

ஆனால் தற்போது அவர்கள் காவல் வேலைகளில் இடைவிடாது ஈடுபாட்டுடன் இருக்க வேண்டியதற்கான முயற்சிகள் எடுக்கப்படுவதால், அவர்களுடைய சலுகைகள் அவர்கள் வாழ்க்கைக்குத் தேவையான அளவைவிட இல்லை.

பொதுவாக நீங்கள் அறிந்ததுபோல் காவல்காரர்களால் எனக்கு ஏற்பட்ட மனநிறைவில் நான்குனேரியை சேர்ந்த மறவர் காவல்காரர்களைத்

தவிர்க்க வேண்டியிருந்தது.

அவர்களுடைய நாடறிந்த தீயொழுக்கமும் அவர்கள் நடவடிக்கையின் கொடுமையும் அவர்களைத் திரும்பத் தங்களிடத்திலேயே நிறுத்திக் கொள்ள வேண்டுமென்று நினைப்பவர்களின் மனவெழுச்சியைத் தடுத்து நிறுத்தின.

கம்பெனி அரசின் நீதியை (!-ந.ச.) உணர்த்தி அவர்களிடம் சீர் திருத்தத்தை உண்டாக்குவதற்கான எந்த முயற்சியும் விடப்படவில்லை. ஆனால் அவர்களுடைய இணக்கம் அற்ற மறைந்து வாழும் தன்மை, கலகக்காரர்களுக்குப் பாதுகாப்பு அளித்தல் முதலியவை படைத் தலைவன் அக்னியூவால் தடை செய்யப்பட்டன. அவர்கள் அரசு பக்தி யுடன் புகலடைவதற்கான உறுதி அளிக்க மறுப்பாராயின் கடந்த அக் டோபரில் எழுதிய கடிதத்தில் விளக்கியிருப்பது போன்ற வன்மையான நடவடிக்கைகளை எடுக்க வேண்டிய நெருக்கடி ஏற்படும்.

தான் பெற்ற முதிர்ந்த தேர்வாய்வுகளிலிருந்து அவர்களுடைய பரம்பரைப் பண்புகள், துன்பத்தை விளைவிக்கக் கூடிய கொடிய செயல்கள் எல்லாம் அவர்கள் நாடு கடத்தப்பட்டு கப்பலேற்றப் பட வேண்டிய தண்டனைக்குத் தகுதியுடையவை என்பதைத் தலைவன் அக்னியூ உணர்ந்திருந்தான்.

நாங்குநேரியைச் சேர்ந்த எட்டு முக்கிய காவல்காரர்கள் குற்றத் தீர்ப்பளிக்கப்பட்டு தூத்துக்குடியிலிருந்து அனுப்பப்பட்டனர்.

சாணார்கள் இனத்தவரான பழமையான கிராமக் காவல் உரிமை யாளர்களுடைய கடமைகள் இன்றுவரை மிகத் திறம்பட சரிவரச் செய் யப்பட்டு வருகின்றன.

நம்பிக்கைக்குரிய பாளையக்காரர்கள் அவரவர் செய்த கலகங் களுக்கு ஏற்பத் தகுந்த தண்டனையை அனுபவித்துக் கொண்டிருந்த போது, அரசிடம் நம்பிக்கைக்கு உரியவர்களாக நடந்து கொண்ட பாளையக்காரர்களுக்குப் பரிசளிக்க அரசு மறக்கவில்லை.

சிறப்பாக, பாஞ்சாலங்குறிச்சிக்கு அருகிலிருந்த பாளையக்காரர் களுக்கும் கலகக்காரத் தலைவன் பக்கம் சார்ந்துவிடுவார்களென எதிர் பார்க்கப்பட்ட பாளையக்காரர்களுக்கும் கூட அவ்வாறே பரிசளித்தனர்.

மணியாச்சி பாளையக்காரன் கலகக்காரர்களுடன் சேர மறுத்து விட்டதால் (ஓ! அதனால்தான் பின்னாளில் கலெக்டர் ஆஷ் வீர வாஞ்சியால் அதே மணியாச்சியில் சுட்டுக் கொல்லப்பட்டான்போலும்!



- ந.ச.) அவன் உள்நாட்டிலுள்ளவர்களுடைய மிகப் பெரிய வெறுப்புக்கு ஆளானான். (தெரிகிறதே - இதனால் நம் முன்னோர்களின் நாட்டுப்பற்று! - ந.ச.)

அதனால் போரின் தொடக்கத்தில் பாளையங்கோட்டைக்கு ஓடி அங்கு அடைக்கலம் புகுந்தான். கலெக்டரின் இசைவு பெற்று போர் முடியும் வரை அங்கேயே தங்கியிருந்தான்.

மேலந்தி பாளையக்காரனும் கலகக்காரர்களுடன் சேர மறுத்து இராம நாதபுரத்திற்கு ஓடினான். வரிவசூல் துறை அவனுடைய நடத்தையைச் சிறப்பாகப் புகழ்ந்து பாராட்டியது. **(பின்னே! - ந.ச.)** பாஞ்சாலங்குறிச்சி குடும்பத்தைச் சேர்ந்த இனத்தவனாக அவன் இருந்த போதிலும் **(குலத்தைக் கெடுக்கும் கோடாரி! - ந.ச.)** அக்கலகக் கூட்டத்தில் அவனைச் சேரும்படியாகக் கட்டாயப்படுத்திச் செய்யப்பட்ட சூழ்ச்சிகள் அச்சுறுத்தல்கள் யாவற்றையும் எதிர்த்து நின்றான் என்று அவர்கள் குறிப்பிட்டிருந்தனர்.

கலகக்காரக் கூட்டத்திலிருந்து விலகியிருந்ததற்காக இந்தப் பாளையக்காரர்களுக்குக் கூடுதலான பரிசு அளித்தனர். (வேண்டியது?! - ந.ச.)

போர் முடிந்த பின்னர் பாஞ்சாலங்குறிச்சியின் தென் மாகாணங்கள் இரண்டு மணியாச்சி பாளையக்காரருக்கும் விலக்கப் பட்ட காடல்குடி குளத்தூர் பாளையக்காரர்களின் நிலங்களின் ஒரு பகுதி மேலமந்தை பாளையக்காரருக்கும் பரிசாய் வழங்கப்பட்டன. (குரங்குப் பஞ்சாயத்து - ந.ச.)

பறிமுதல் செய்யப்பட்ட எஸ்டேட்டுகளை ஆறு மாகாணங் களாகப் பிரித்தனர். அந்த ஆறு மாகாணங்களில் நான்கை எட்டைய புரம் பாளையக்காரருக்குத் தாராளமாக **(அடிசக்கை! அதனால்தான் வட்டியும் முதலும் வாங்க அந்த எட்டையபுரத்திலேயே பாரதி பிறந்தார் போலும்! - ந.ச.)** ஏற்கனவே பரிசளித்து விட்டனர்.

கலகக்காரப் பாளையக்காரருக்கு அளிக்கப்பட்ட தண்டனைகளி லிருந்து பணத்தைப் பொறுத்தமட்டில் எந்த வித நன்மையும் அரசுக்கு ஏற்பட்டதாக தோன்றும் நிலையைக் கூடத் தவிர்க்க அரசாங்கம் மிக்க விருப்பமுள்ளதாக இருந்தது. **(என்ன தந்திரம்! ஆரிய இரத்தம்! - ந.ச.)**

எனவே, கலகங் காரணமாக ஒவ்வொரு முறையும் ஒரு பாளையம் பறிமுதல் செய்யப்பட்ட போதும் பாளையத்திலிருந்தோ அல்லது அதன் ஒரு பகுதியிலிருந்து வரும் வருமானத்திலிருந்தோ எந்த ஒரு தொகை

யையும் தனக்காக அரசு ஒதுக்கி வைக்காமல் அந்நிலங்களைப் பகிர்ந்து தன்னிடம் நம்பிக்கையோடு நடந்து கொண்ட அந்தப் பாளையக்காரர்களுக்குப் பரிசளிப்பதற்கு மட்டுமே அவற்றைப் பயன்படுத்தியது. **(கடைத் தேங்காயை எடுத்து? - ந.ச.)**

கலகங்களின் இறுதியில் அரசாங்கத்தால் வெளியிடப்பட்ட அறிக்கையிலிருந்து இத்தகைய நிகழ்ச்சிகளில் அரசினுடைய நிலையான அரசியல் கொள்கை போக்கு இதுதான் என்று அறியலாம்.

### தென்பாண்டித் திருநாடு

**ஆங்கிலேயர் வசம் நாட்டை ஒப்படைத்தல்:** உடன்படிக்கை மூலம் திருநெல்வேலியும் கர்நாடகத்தின் மற்ற பகுதிகளும், அமைதியான முறையில் கிழக்கிந்திய கம்பெனியிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்த உரிமை மாற்றம் ஆட்சியாளர் மாற்றங்களை மட்டுமல்ல; அடிப்படை கொள்கை குறிக்கோள்கள், ஆட்சிமுறை மாற்றங்கள் இவைகள் அன்றியும் காலப்போக்கில் அமைய இருந்த பல்வேறு நன்மைகளுக்கான மாற்றங்களையும் உண்டாக்கின. இந்த உரிமை மாற்றம் 1801 ஆம் ஆண்டு ஜூலை 31 ஆம் தேதி ஏற்பட்டது. அன்றே கம்பெனி சார்பில் நியமிக்கப்பட்ட பிரதிநிதியிடம் எல்லாக் கணக்குகளையும் ஒப்படைத்து விடுமாறு நவாபு திருநெல்வேலியிலுள்ள அவனுடைய முக்கியமான அவில்தாருக்குக் கட்டளையிட்டான். சென்னை அரசு லூஷிங்டனை அவர்களுடைய கலெக்டராய் நியமித்து வருங்காலத்தில் ஆட்சி முறை யாவற்றிற்கும் அவனையே பொறுப்பாக்கியது. லூஷிங்டனின் எண்ணத்தை முழுதும் நிரப்பிய போருக்குப்பின் நடந்த கடமைகளுள் முதன்மையானது சிவகங்கையை நிலைப்படுத்துவதேயாகும். (முக்கிய செய்தி! - ந.ச.)

### ஜார்ஜ் கோட்டை 1801 டிசம்பர் 1 அரசு ஆணை விளம்பரம்

1799 டிசம்பர் 9 ஆம் தேதியிடப்பட்ட அரசு விளம்பரத்தில் ஜார்ஜ் கோட்டை கருத்துரை (ஆலோசனை) மன்றத் தலைவர் மேன்மை தங்கிய எட்வர்ட் கிளைவ் பிரபுவும், அம்மன்றத்தைச் சார்ந்தவரும், பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரரான கட்டபொம்ம நாயக்கன் கலகங்களில், அவனும் அவனுடைய நம்பிக்கைக்குரிய அமைச்சர்கள் இருவருடைய வாழ்வும் இழிவான இறப்பில் முடிந்தது என்பதைத் திருநெல்வேலி மாவட்டப் பாளையக்காரர் அனைவருக்கும் விளம்பரம் செய்தார்.

2. மேலும் பாளையக்காரர்களின் எதிர்கால நிலையைப் பற்றிய வரையறையையும் பாளையக்காரர் நாட்டு நிர்வாக நிகழ்ச்சி முறை, தான் புகுத்த எண்ணியுள்ள அரசு முறை அமைப்பு முதலியவற்றையும் அதே



அரசு விளம்பரத்தில் மன்றத் தலைவர் கவர்னர் அறிவிக்கிறார்.

3. மன்றத் தலைவர் அந்த விளம்பரத்தில் கூறப்பட்டிருந்த நடைமுறைகளைச் செயலாற்ற முற்படுமுன், வெள்ளைமருது சின்னமருது என்னும் சிவகங்கைச் சேர்வைக்காரர்களின் தீய (?-ந.ச.) அறிவுரையால் (முக்கிய செய்தி - ந.ச.) கட்டபொம்ம நாயக்கனின் உடன்பிறந்தானால் ஏவப்பட்டு, அண்மையில் தென் மாவட்டப் பாளையக்காரர்களுக்கு ஏற்பட்ட நிலையைக் கண்கூடாகக் கண்டிருந்தும் அத்தகைய அச்சந்தருகின்ற சான்றுகளைப் புறக்கணிக்கும்படி தூண்டப்பட்டான். அதனால் தன்னுடைய - தன்னைச் சார்ந்தவர்களுடைய மகிழ்வையும் பாதுகாப்பையும் மதிப்பிற்குரிய கம்பெனியின் பொறுப்பில் வைப்பதற்குப் பதிலாக பிரிட்டிஷ் அரசின் வலிமையைப் படைக்கலந்தாங்கி எதிர்த்துப் போராடும் இடர் நிறைந்த தீங்கான செயலில் நம்பிக்கை வைத்து விட்டான்.

4. பாஞ்சாலங்குறிச்சி, விருபாட்சி, சிவகங்கைச் சேர்வைக்காரர்கள் (இரு மருதுகள் - ந.ச.) முதலியவர்களால் தூண்டப்பட்டு, படைக்கலங்கள் தாங்கி, எதிர்ப்புணர்ச்சியுடனிருந்த கலகக்காரர்களை ஒடுக்குவதற்காகப் பிரிட்டிஷ் படைகளைக் கூட்டியபோது மேன்மை தங்கிய மன்றத் தலைவர் கவர்னர் அவர்கள் அத்தகைய கலகக்காரர்களின் ஏமாற்ற அறிவுரைகளின் விளைவுகளை எதிர்நோக்கி அவற்றைத் தென் மாகாணங்களிலிருந்த பாளையக்காரர்களுக்கும் மக்களுக்கும் விளம்பரப்படுத்தினார்.

5. அதே நேரத்தில், மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் பிரிட்டிஷ் படைகளுக்குக் கொடுக்கப்பட்ட இடர்நிறைந்த எதிர்ப்பு, ஏமாற்றப்பட்ட மக்களின் உயிர் இழப்பில் கொண்டு விடப்பட்டதற்காக மிக்க வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார். (முதலைக் கண்ணீர்! - ந.ச.) பிரிட்டிஷ் அரசாங்கத்தினரின் நேர்மையான ஆத்திரத்தைத் தூண்டிவிடுவதனால் ஏற்படும் இடையூறுகளையும், பிரிட்டிஷ் துருப்புகளின் உறுதி, வீரம், ஒழுங்கு இவற்றின் முன் பாளையக்காரர்களின் ஒன்றியவலிமையால் எதிர்க்கும் முயற்சிகளும் பயனற்றவை என்பதை பாளையக்காரர், சேர்வைக்காரர், தென் மாகாணங்களின் மக்கள் முதலியவர்கள் மனதில் பதியுமாறு உணர்த்த வேண்டுவது தன் கடமை என கவர்னர் உணர்ந்தார்.

முயற்சி, கண்காணிப்பு, சுறுசுறுப்பான கம்பெனி பட்டாளங்களைப் பாளையக்காரர்கள் தங்கள் சொந்தக் காடுகளில் ஒளிந்திருந்து ஏமாற்ற முயற்சிப்பதிலுள்ள துன்பங்களைவிடப் பாளையக்காரர்கள் கம

பெனி அரசைப் படைக் கலங்கள் கொண்டு எதிர்ப்பதிலுள்ள துன்பங்கள் பெரிதல்ல என்பதைத் தென் மாநில மக்கள் நேரிலேயே இப்போது கண்டிருக்கிறார்கள்.

6. கலகத்திற்குக் காரணமானவர்கள் அவர்களுடைய காடுகளின் மையங்களிலிருந்து கண்டு பிடிக்கப்பட்டு, வெறுக்கத்தக்க அச்சம் நிரம்பிய குற்றத்திற்கான விசாரணைக்காக அரசாங்கத்தாரால் நிறுவப் பட்ட நீதி மன்றத்திற்குக் கொண்டு வரப்பட்டனர். கலகத்தினால் உண்டாகும் துன்பத்தைப் பற்றி மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்) அவர்களுக்கு அறிவித்திருந்தும் அவருடைய எச்சரிக்கை அறி வுரைகளைப் புறக்கணித்தமையால் அத்தலைவர்களின் மடமையான (யாருக்கு?! - ந.ச.) எதிர்ப்பிற்குத் தக்க குறிப்பிடத்தக்க தண்டனை நீக்க முடியாததாயிற்று. அன்றியும் தவறான நெறியில் சென்ற தலைவர் களின் விருப்புகளாலும், கொலை வாழ்வாலும் அவர்கள் அடைந்த அவல முடிவு, பிரிட்டிஷ் அரசைப் போரில் வென்று விட எண்ணி எதிர்ப்பதனால் ஏற்படும் துன்பத்தை, இறந்த பாளையக்காரர்களின் குடும் பத்தினர் திருநெல்வேலி மக்கள் ஆகியவர்கள் மனத்தில் என்றும் அழியாதவாறு நிலைபெறச் செய்யும் என்று மன்றத் தலைவர் கவர்னர் தான் எதிர்நோக்கியிருந்த ஒரு நல்ல செயலைத் தூண்டினார்.

7. அதே காலத்தில், எதிர்ப்பை உண்டாக்காத கலகங்களுக்கான தகுந்த நேர்மையான தண்டனைகளைப் பற்றி மேன்மை தங்கிய ஆளுநர் (கவர்னர்) சேர்வைக்காரர். பாளையக்காரர், தென் மாகாண மக்கள் இவர்களின் கவனத்திற்குக் கொண்டு வந்தார். இயற்கைக்கு மாறான நீக்க இயலாத இப்போர்க்காலத்தில் பிரிட்டிஷ் அரசிடம் அதைச் சார்ந்திருந்த பலர் காட்டிய உறுதியான பிடிப்பு, பெருமைப் படத்தக்க நம்பிக்கை இவற்றைக் கண்டு, கவர்னர் அவர்கள் உண்மை யான பெருமிதத்துடனும் மனநிறைவுடனும் அவர்களைப் பற்றி நினைவு கூர்ந்தார். (அவமானம்! - ந.ச.) முன் நிகழ்ச்சிபோல, மன்றத் தலைவர், கீழ்ப்படியாமை என்னும் குற்றத்திற்கான தண்டனையை நினைவு கூரத்தக்க முன்மாதிரியாகக் குறித்துக் காட்டும்படி வற்புறுத்தினார். ஆனால், பின்னர் பிரிட்டிஷ் அரசின் புகழ்மிக்க ஆதரவையும் பாது காப்பையும் பெறத் தகுந்த ஊக்கத்தையும் உண்மையையும் உடைய வர்களுடைய பாதுகாப்பு, பொருள், மகிழ்ச்சி இவற்றைப் பெருக்குவதில், தான் மகிழ்ச்சி அடைவதாக மன்றத் தலைவர் கவர்னர் கூறினார். **(என்ன தடை! - ந.ச.)**

8. பிரிட்டிஷ் படைகளின் முன்னேற்றத்தில் ஏற்பட்ட நிலையான வெற்றி 1799 டிசம்பர் 9 ஆம் தேதியிடப்பட்ட அரச விளம்பரத்தில் குறிப்



பிட்டுள்ள கொள்கைகளிலிருந்து எவ்வித விலக்குகளையும் உண்டாக்க வில்லை என்ற செய்தி பாளையக்காரர், சேர்வைக்காரர், தென் மாகாண மக்கள் இவர்களின் கவனத்தினின்றும் தப்பியிருக்க முடியாது. அமைதியை நிலைநாட்டவும் ஒழுங்கான ஆட்சி நடைபெறுவதற்கு மான நிலை உண்டாக்கவும் இன்றியமையாத தேவை கலகத் தலைவர் களைத் தண்டிக்கும்படி ஆளுநரை (கவர்னரை) வற்புறுத்திய போதிலும் கலகம் செய்வதற்காகப் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களைக் கம் பெனியிடமிருந்து அவர் பெற்றிருக்கிறார் என்பதையும் அவர்கள் கவனித்திருக்கக் கூடும். அவ்வாறு பெற்ற நிலங்களின் வருவாயை நன்றியுடன் **(யாருக்கு யார் என்ன நன்றி?! - ந.ச.)** நடந்து கொண்ட பாளையக்காரர்களின் பாளையங்களைச் சீர்திருத்தப் பயன்படுத்தியதைக் கண்டு பிரிட்டிஷ் ஆட்சியினர் தன் மக்கள் மேல் வைத்த நம்பிக்கையைக் கண்டு அவர்கள் மனநிறைவு எய்தியிருப்பார்கள். இந்த மேற்கோள் களிலிருந்து பிரிட்டிஷ் அரசினுடைய கொள்கைகளைச் செயல் படுத்துவதில் மேற்கொண்டுள்ள சில முறைகளை அவர்கள் உய்த் துணர்ந்து கொள்ள இயலும்.

9. இந்த அரசு விளம்பரத்தில் விளக்கப்பட்டிருக்கும் அடிப் படையின் மேல் மேன்மை தங்கிய மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்) தென்னாட்டுப் பாளையங்களில் எதிர் காலத்தில் கலகங்கள் விளைவிக்கக் கூடிய காரணங்களை அடக்கிவிட்டதாகவும், பாளையக் காரர்கள் சேர்வைக்காரர்கள் மற்றும் உள்நாட்டு மக்கள் யாவரும் பிரிட்டிஷ் அரசின் பாதுகாப்பில் நம்பிக்கை கொள்ளலாமென்றும், அவர்கள் எங்களுடைய நாட்டு உரிமைகளையும் அவரவர் முன்னோர்களின் சமயக் கோட்பாடுகளையும் துய்த்து மகிழலாம் என்றும் ஒரு பொருத்த மான நம்பிக்கையை அவர்களிடத்தில் ஊக்குவித்தார்.

10. தென் மாகாணங்களிலுள்ள பாளையக்காரர்கள், சேர்வைக் காரர்களிடமிருந்த படைக்கலங்களினால் ஏற்பட்ட கொடும் விளைவு களைப் போக்கும் எண்ணத்துடனும், பாளையக்காரர்கள் முதலியவர் களுக்கு ஏற்கனவே அறிவிக்கப்பட்டதும், 1799 அக்டோபர் 2 ஆம் தேதி மேஜர் பானர்மனால் வெளியிடப்பட்டதுமான அறிக்கையிலுள்ள கட்டுப் பாடுகளை நடைமுறைக்குக் கொண்டு வரவும், மன்றத்தில் கவர்னர் செய்த உறுதியான முடிவுகளாலும், பிரிட்டிஷ் அரசால் அனுமதிக்கப் பட்டு விதிவிலக்களிக்கப்பட்டவை தவிர மற்ற தீங்கு விளைவிக்கக் கூடிய எல்லாப் படைக் கலங்களின் பயன்களையும் பயிற்சியையும் ஒடுக்க செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் ஆட்சிப் பொறுப்பு கவர்னர் எட்வார்டு லார்ட் கிளைவு அறிவிக்கிறார்.

11. இந்நாள் வரை பாளையக்காரர்களால் அளிக்கப்பட்ட இராணுவத் தொண்டு குறைக்கப்பட்டமையாலும் (காரியம்தான் முடிந்து விட்டதே! - ந.ச.) அதன் விளைவாகக் கம்பெனி பாளையக்காரர்களின் நலனையும் பாதுகாப்பையும் தாங்களே ஏற்றுக் கொண்டமையாலும், துப்பாக்கிகள், தீங்கு விளைவிக்கும் படைக்கலங்கள் முதலியவற்றை வைத்திருத்தல் மக்கள் பாதுகாப்பிற்குத் தேவையற்றதாகி விட்டது. ஆகையால் மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்) அவர்கள், திண்டுக்கல், திருநெல்வேலி, இராமநாதபுரம், சிவகங்கை, மதுரை முதலிய மாவட்டங்களிலுள்ள எல்லாரையும், அவர்கள் பாளையக்காரராயினும், கூலிகளாயினும் அல்லது மற்ற உள்நாட்டு மக்களாயினும் யாராயிருப்பினும் தங்கள் தங்களிடமுள்ள கைத்துப்பாக்கிகள், குழல் துப்பாக்கிகள், ஈட்டிகள் ஆகியவற்றை அந்த மாகாணங்களில் படைகளை ஆணை செய்யும் அதிகாரி - படைத்தலைவன் அக்னியூ அவர்களிடமோ அல்லது அவரால் நியமிக்கப்பட்டவரிடமோ கொடுத்துவிடும்படி உத்தரவிடுகிறார்.

12. மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்) இந்த முடிவைச் செயல்படுத்த உறுதியுடனிருப்பதால் அந்த நாடுகளில் நிலையான அமைதியை நிலவச் செய்யும் தூய உள்ளத்தோடு தொண்டு செய்யும் நோக்கம் தவிர வேறு எந்தக் குறிக்கோளோடும் செயல்படவில்லை. மேன்மை தங்கிய அவர் தலைவர்களோ அல்லது பரம்பரை நிலச் சொந்தக்காரர்களோ எந்த இழிவுக்குள்ளாக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் விலக்கினார். ஆனால் அந்த நாடுகளில் பழக்கத்திலிருந்த படைக்கலப் பறிமுதல், நாட்டில் அமைதியை நிலைநாட்டவும் நல்வாழ்வைச் சீராக்கவும் நீக்க இயலாத தேவைகளாயிருப்பதால் மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்) படைத் தலைவர்கள் தங்கள் மரபுவழி வழக்கமானதும் தற்போது பயனற்றதாகி விட்டதுமான படைக்கல முடைமையை மேற்கூறிய முக்கிய குறிக்கோளை அடைவதற்காக மனமுவந்து தியாகம் செய்ய வேண்டுமென எதிர்பார்க்கிறார்.

16. எட்வர்ட் பிரபு கிளைவ, மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்), அவரைச் சார்ந்தோர் அனைவரும், கடந்த காலத்தில் ஒற்றுமையுடன் பெருமளவில் அச்சம் நிரம்பிய கலகங்கள் செய்தவர்களை முழுவதும் அடக்கிவிட்டமையால் தென் பாளையங்களில் எதிர்காலத்திற்கான நிலையான அமைதிக்கு அடிக்கல் நாட்டிவிட்டமையால், மேலும் இந்த அமைதியான அடிப்படைகளையும் பிரிவினையற்ற நிலையான கம்பெனி ஆட்சியையும் அந்த நாடுகளில் நிலை நாட்ட மன்றத் தலைவர் கடந்த காலக் கலகங்களினால் ஏற்பட்ட தண்டனைகளினால் விளைந்த உள்ளார்ந்த கவலைகளையும் அச்சங்களையும் தென்பாண்டி நாட்டவர்



களாகிய பாளையக்காரர், சேர்வைக்காரர், மற்ற மக்கள் மனத்திலிருந்தும் விலக்க விருப்பம் கொண்டார். (என்ன பரிவு! - ந.ச.) எனவே முன்னே குறிப்பிடப்பட்ட மன்றத் தலைவர் மேன்மை தங்கிய பிரபு கிளைவ், பாஞ்சாலங்குறிச்சியைச் சேர்ந்த வீரபாண்டிய நாயக்கன் மூக்க நாயக்கன் இராமநாதபுரத்தைச் சேர்ந்த மூலப்பன் மற்றும் காவலில் இருப்பவர்கள் எல்லாருக்கும் நாடு கடத்தி - கடல் கடந்து அனுப்பும் தண்டனையை அளிக்க எண்ணியிருப்பதாயும், இவர்களைத் தவிர மற்ற பாளையக்காரர், சேர்வைக்காரர், உள்நாட்டார் எல்லாரும் கலகத்தலைவர்களால் தூண்டப்பட்டுத் துணிகரமான கலகங்கள் செய்தவர்கள் கம்பெனிக்கு எதிராகச் செய்த கொடுமைகளை மன்னித்து மனமார்ந்த நேர்மையான குற்ற மன்னிப்பு வழங்க முனைப்பாயிருப்பதாயும் அறிவித்தார். எனவே பிரிட்டிஷ் ஆட்சியின் வலிமையைப் போதுமான அளவு மக்களுக்கு உணர்த்துவற்காகவே அவர்கள் முன்னிலையில் கலகக்காரர்களுக்கு அளித்த தண்டனையை அவர்களுடன் தொடர்புடையவர்களுக்கு அளிக்காமல் நீக்கிவிடுவதாகவும் ஆளுநர் (கவர்னர்) உறுதியளித்துள்ளார்.

17. தென் பாளையங்களின் மக்களை அவர்களது சூறையாடிக் கலகம் செய்யும் வழக்கங்களிலிருந்து மீட்டு, அமைதிக்கான வழிமுறைகளை அமைத்து, பயிர்த் தொழிலை மேற்கொள்ளச் செய்து நலமே வாழத் தூண்டச் செய்தல் வேண்டுமென்ற நோக்கத்துடன் ஜார்ஜ் கோட்டை மன்றத் தலைவர் ஆளுநர் (கவர்னர்) லார்டு கிளைவ் எல்லாப் பாளையக்காரர்களுக்கும் அவர்கள் பாளையங்களைச் சேர்ந்த எல்லா மக்களுக்கும் பின்வருமாறு அறிக்கை விடுத்தார்: 'ஜமீன்தாரி ஆட்சி முறை அடிப்படையில் பாளையத்தின் தலைவர்களுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு நிலையான வரிவிதிப்பு உண்டாக்க எண்ணியுள்ளது. வரி ஒருமுறை வரையறுக்கப்பட்டதும் எதிர்காலத்தில் மாறுதல்களுக்கு உரியதல்ல. இதன் மூலமாக அவர்கள் தங்கள் பரம்பரை எஸ்டேட்டுகளில் ஜமீன்தார்களாகலாம். அவர்களுக்கு எல்லா இராணுவக் கடமைகளிலிருந்தும் (என்ன கடமை? யாருக்காக?! - ந.ச.) விதிவிலக்கு அளிக்கப்படும். அவர்களுடைய பரம்பரை உடைமைகளுக்கு வரையறுக்கப்பட்ட விளக்கமான சட்டங்களினால் போதுமான பாதுகாப்பளிக்கப்படும். அதன் காரணமாக அரச அதிகாரிகள் அரசாங்க ஒழுங்கு சட்ட முறைகளைச் சீராக்கவும், மக்களுக்கு அவர்களுடைய உடைமைகள் உயிர், அந்தந்த இனத்தைச் சார்ந்தவர்களுடைய சமயப் பழக்கங்கள் எல்லாவற்றையும் காப்பதற்காகச் சட்டங்கள் செய்யப்படும். அச்சட்டங்களை மக்கள் அறிந்து கொள்வதற்காகவும், அரசு அதிகாரிகள் அரசின் புதிய நிபந்தனைகள் ஆணைகள் ஆகியவற்றை அறிந்து அதன்படி செயலாற்றுவதற்காகவும் அவைகள் அச்சடிக்கப்பட்டு வெளியிடப்படும்.

(ஆட்சிக் கவர்னர் ஆணையின் படி)

**கையொப்பம் பி.எம். அக்னியூ,**
இருப்பு: பாளையங்கோட்டை, படைத்தலைவன்.
26-12-1801. ஆணை அதிகாரி - தென் பாளைய மாவட்டங்கள்.

இந்த அறிக்கை திருநெல்வேலி வரலாற்றின் ஒரு காலத்தின் மிகப் பொருத்தமான முடிவாகவும், அதற்கு ஏற்ப மற்றொரு காலத்தின் மிகப் பொருத்தமான தொடக்கமாகவும் அமைந்தது. (அந்தோ! - ந.ச.)

**முடிவுக் குறிப்புகள்**

ஓரளவு ஆங்கில அடிப்படையிலும் ஓரளவு நவாபின் தீங்கான அடக்குமுறையிலும் (ஊட்டிய கைக்கும் உலை! - ந.ச.) நடை பெற்ற ஒரு கலப்பு அரசாட்சி இவ்வாறு ஒரு முடிவை அடைந்தது. பின்னர் முற்றும் ஆங்கில ஆட்சி ஏற்பட்டது. அந்த அரசு தன்னிறைவுடைய தாகவும், அது எவ்வளவு வலிமையுடையதாயிருந்ததோ அதேபோல் நேர்மையுடையதாகவும் இருந்தது. (!-ந.ச.) இந்த மாற்றத்தின் பயன்கள் மிக முக்கியமானவையும் மதிப்புள்ளவையும் ஆகும். 'பாண்டி அரசின் வரலாற்றுக் குறிப்பு' என்ற தனது புத்தகத்தில் பேராசிரியர் வில்சன் ஆங்கில அரசு குறுக்கீடு செய்து அதிகாரத்தை கைப்பற்றியிராவிடில் ஏற்பட்டிருக்கக் கூடிய நிலைமையைக் கருத்தைக் கவர்கின்ற முறையில் எழுதியுள்ளார்.

அறிவும் ஆற்றலும் (ஆதிக்க வெறி? - ந.ச.) நிறைந்த அரசு இடையிட்டு மக்கள் வாழ்வையும் வழக்கங்களையும் நிலைநாட்டியிரா விட்டால், எழில் நிறைந்ததும் உழைப்புத் திறன் மிக்க மக்களை வாழவைக்கும் மிக்க ஈடுபாடு கொள்ளத் தக்க இயற்கை வளமும் பொருந்தியிருந்த தென் காவிரிக் கரையிலிருந்த அழகிய மாவட்டங்கள், மரபுவழிக் கதைகள் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னாலிருந்த பழைய மக்கள் சமுதாயத்தை வருணிப்பது போன்ற அந்நிலைக்கு மாற்றப்பட்டு, மறுபடியும் இராவணன் வழிவந்த அசுரர்களும் அல்லது அனுமன் வழிவந்த குரங்குகளும் நிறைந்த குடியேற்ற நாடாக மாற்றப் பட்டிருக்கக் கூடும். (பாதிரி கால்டுவெல்லின் மனப்பாங்கு பாரீர்! - ந.ச.)

இந்த மாவட்டத்தின் வரலாற்றில் முன்னே கூறப்பட்ட குறிப்பைப் படிப்பவர் மனத்தில் முதலில் எதிரொலிக்கக் கூடிய எண்ணம் இது தான். மற்ற பழைய பாண்டிய நாட்டைப் போல, மனித வாழ்வு தொடங்கிய கால முதல் கி.பி. 1801 வரை இருந்த தென்னிந்தியாவின் எஞ்சிய



பகுதியைப் போலக் கூட திருநெல்வேலியிலும் போர்கள் ஒரு வழக்க மான நிலைமையாகக் காட்சி தந்திருக்கும் என்று ஐயமறக் கூறலாம். தொடக்கத்திலிருந்து எண்பது மாதங்களாகத் தொடர்ந்து ஒரு நாளும் அமைதியைக் காணாத ஒரு மாவட்டம், எண்பது வாரங்களுக்குக் கூட அமைதியைக் காணாத மாவட்டம் - இப்பொழுது ஆழ்ந்த இடையீ டில்லாத எண்பதாண்டு அமைதியை அனுபவித்து மகிழ்ந்தது. இதன் விளைவாக அமைதிக் கலைகள் அனைத்தும் வளர்வதற்கும் முழுமைத் தன்மை போன்ற ஒன்றை அடைவதற்கும் போதுமான காலத்தை எடுத்துக் கொண்டது.

இதுவரை ஏற்பட்ட பல நன்மையுள்ள மாற்றங்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒன்றைப் பாளையக்காரர்களிடமே நாம் காண்கிறோம். பாளையக்காரன் ஜமீன்தாராக மாறினான். அவன் பெயரை மாற்றிக் கொண்டது போலவே தன் பண்பையும் மாற்றிக் கொண்டான். ஒரு காலத்தில் கொந்தளிப்பும் முரட்டுத் தன்மையும் நிறைந்த - தங்கள் தீமையும் துணிவும் நிரம்பிய - செயல்களால் கடந்த நூற்றாண்டின் வரலாற்றை நிரப்பிய தலைவர்களின் வழி வந்த - தோன்றல்கள்தான் இன்றைய அமைதி நிரம்பிய நாயக்க மறவ சமீன்தார்கள் என்பதை யாரும் நம்புவது அரிது. (!-ந.ச.) தற்காலத்திய அமைதியே உருவான நாயக்க குடிகள், தங்கள் கலகக்காரத் தலைவனின் வாய்ச் சொல்லுக்கே தங்கள் உயிரைக் கொடுக்கவோ அல்லது தங்கள் தலைவனின் பகைவனை அழிக்கவோ தயங்காத அன்றைய பாளையக்காரர்களின் கைக்கூலிகளின் (?-ந.ச.) வழி வந்தவர் என்பது உண்மையாயிருக்கக் கூடுமா என்றும் ஒருவர் வினவலாம். வறுமையில் வாடிய (ஆங்கிலேயர் அடிமைகளான பின்னுமா? - ந.ச.) மறவர்களிடையே இந்த மாற்றம் முழுமையான பயன் களை உண்டாக்காமலிருந்திருக்கலாம், ஆனால் அவர்களில் பலர் பாது காப்பான இடத்தில் தங்கள் பரம்பரைத் தொழிலாகிய சிறந்த காவல்காரர் தொழிலை மேற் கொண்டனர். பலர் சிறப்புடைய பயிர்த் தொழிலைச் செய்தனர். இந்த வகுப்பினரைச் சேர்ந்த பலர் ஒரு காலத்தில் நாட்டின் கொடுங்கோலாட்சியராயிருப்பினும் (முன்னுக்குப் பின் முரண்! - ந.ச.) தற்போது மற்ற எந்த வகுப்பினரையும் போலவே சட்டத்திற்கும், நேர்மைக்கும் கட்டுப்பட்டவர்களாகவே இருந்து வருகிறார்கள்.

ஆங்கிலேயர் மாவட்டத்தின் ஆட்சியை ஏற்றதிலிருந்து திருநெல் வேலியில் எல்லாத் துறைகளிலும் வியக்கத்தக்க அளவில் முன்னேற்றம் ஏற்பட்டது. நன்மை பயக்கக் கூடிய மாற்றங்கள் பல இன்னும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. அதிகமான விளைநிலத்தை மறைத்துக் கொண்டும் பரம்பரை பரம்பரையாக வழிப்பறிக்காரர்களின் உறைவிட

மாயும் மறைவிடமாயும் இருந்த நுழைய முடியாத அடர்ந்த காடுகள் ஓரளவு மறைந்தன. அவற்றிற்கு ஈடாகப் பருத்தியும் உணவுத் தானியங்களும் பயிரிடப்பட்டன. தேவையான பொழுதெல்லாம் ஆங்காங்கே நல்ல பாதைகள் போடப்பட்டன. ஆறுகள், நீர்க்கால்களின் மீதும் பாலங்கள் கட்டப்பட்டன.

### ஆங்கிலேய ஆட்சியை ஏற்றுக் கொண்டனர்

பொதிசுமக்கும் மாடுகளுக்குப் பதிலாகப் பெருமளவில் வண்டிகள் ஏற்பட்டன. மூட்டைத் தூக்கிச் செல்லும் வேலைகள் முழுவதும் ஒழிக்கப்பட்டன. முழு மாவட்டப் பகுதியும் இரு முறை அளக்கப்பட்டன. இருமுறை நாட்டுப்படம் வரையப்பட்டது. குற்றஇயல் சாராத வழக்குகளைத் தீர்க்கவும் குற்றங்களைக் குறைக்கவும் ஏற்பட்ட நீதி மன்றங்களும் கச்சேரிகளும் பொறுப்பற்ற பண்டிதர்கள் பாமரப் பாளையக்காரர்கள் அளித்து வந்த அவர்கள் விருப்பப்படியான தீர்ப்புகளைப் போக்கின. நன்றாக ஆராய்ந்தமைந்த சட்ட விதிகள் பழக்கத்தில் புகுத்தப்பட்டன. ஒரு போலீசு படை அமைக்கப்பட்டது. பெயரளவில் கூட கேட்டறியாத நிலையங்கள் - மருத்துவ நிலையங்கள், மருந்து சாலைகள் முதலியவை மக்கள் நெருக்கமுள்ள இடங்களில் நிறுவப்பட்டன. 1877 ஆம் ஆண்டில் ஏற்பட்ட மிகப் பெரிய பஞ்சத்தில் அரசு, இதற்கு முந்திய அரசு மக்களை விட்டு விட்டதுபோல, மக்களை அழியும்படி விடவில்லை. அத்தகைய வறுமைக் காலத்தில் மக்களை இறக்கிவிடுவதைத் தவிர வேறொன்றும் செய்ய இயலாது; ஆனால், அரசே பட்டினிச் சாவிலிருந்து மக்களை எப்படியும் காக்க வேண்டுமென்ற உறுதியுடனிருந்தது. அந்தணர்களும் அதிகாரிகளும் அன்றி ஏழை மக்களிடத்திலும் கல்வி அறிவு வளரத் தொடங்கியது. அஞ்சல் தொடர்பினால் ஏற்பட்ட நன்மைகள் எங்கும் விரிவாக்கப்பட்டன. நம்முடைய காலத்திலே இரயில் பாதை தந்தி முதலிய வியத்தகு செயல்கள் புகுத்தப்பட்டதைக் கண் கூடாகக் காண்கிறோம். உண்மையான நல்லெண்ணத்துடன் குடிகளின் உரிமைகள் மீது தேவையற்ற கட்டுப்பாடுகளைச் சுமத்தும் அரசு ஒவ்வொரு நெருக்கடியிலும் மக்களுக்கு உதவி செய்ததன்றி, அவர்கள் தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்வதற்கும் உதவியது. மக்கள் இதுவரை ஆட்சி செய்யப்படாத வகையில் சிறந்த முறையில் ஆட்சி செய்யப்பட்டதன்றி தற்போது இயன்ற அளவு தங்களையே ஆட்சி செய்து கொள்ள உற்சாகப்படுத்தியது. ஒரு சில வகுப்பினரையும் நல்ல நிலைக்கு உயர்த்த அதிக முயற்சிகள் எடுத்துக் கொண்டது. விரல் விட்டெண்ணக் கூடிய ஐரோப்பியர்களால் ஆட்சி செய்யத் தக்கவாறு அந்த மாவட்டம் கிளர்ச்சியற்ற நிலை அமைதி, நிறைவு இவற்றை மிக



அதிகமாகப் பெற்றிருக்கிறது. மக்கள் தொகை ஏறக்குறைய பதினேழு இலட்சம் ஆகும். ஆனால் மாவட்ட ஆட்சியில் நேரடியாக ஈடுபட்ட ஐரோப்பியர் உள்நாட்டவர் அடங்கிய சிப்பாய்படை ஆணையாளர்களையும் சேர்த்துப்பத்து பேருக்கு அதிகமாக இல்லை: பதினேழு நூறாயிரம் நாட்டு மக்கள் பத்தே ஆங்கிலேயர்கள் தங்களை ஆளும்படி அனுமதித்த வழக்கத்திற்கு மாறான காட்சியை நாங்கள் கண்டோம். (என்ன அவமானம்! - ந.ச.) அல்லது அந்த மக்கள் தங்களை ஆளும்படி விட்டுக் கொடுத்தனர் என்றும் அவர்கள் எங்களுடைய அரசை இதுவரை என்றும் அடைந்திராத சிறந்த ஆட்சியாக உலகத்தில் அந்தக் காலத்தில் சிறப்புடன் விளங்கிய ஆட்சியாக - மிக்க விருப்பத்தோடு ஏற்றுக் கொண்டனர் என்றும் சொல்வதே போதுமானதாக இருக்கும். (இந்த நிலையை மாற்ற வந்த காந்தி மகான் வாழ்க! - ந.ச.) இந்த நிகழ்ச்சி ஒரு வியத்தகு செயல் என்றே அழைக்கப்படலாம். ஆனால் எப்படியாயினும் அது ஒரு சிறப்பான சான்றாய் அமைந்தது. எனவே நீதியும், தன்னலமற்ற பொதுத் தொண்டும் நிரம்பிய கட்டுப்பாடான ஒரு ஆட்சி அதிகப்படியான மக்களின் நம்பிக்கையுள்ள இணக்கத்தையும் உலகத்தின் உயர்ந்த ஆட்சியாளர்களின் பாராட்டுகளையும் பெற்றுத்தரும் என்று நான் நம்புகிறேன். இந்த நாட்டில் பரம்பரை பரம்பரையாக மன்னர்கள் தோன்றினார்கள்; முயற்சி செய்தனர்; ஆனால் முற்றுப் பெறச் செய்ய இயலாது மாண்டு மடிந்தனர். அப்படியானால் என்றும் ஆங்கில ஆட்சியே நிலையுள்ளதாயிருக்குமென்று எதிர்பார்க்கலாமா? எனின் ஒரு வேளை முடியாது. 'என்றும்' என்ற சொல் மிக்க வன்மையுடையது. (உண்மை-தன் நெஞ்சே தன்னைச் சுடும்! - ந.ச.) ஆனால் நான் எச்சரிக்கையோடு இதைப்பற்றி வருவது உரைக்கலாமென்று எண்ணுகிறேன். அவர்கள் ஆட்சி செய்யும்வரை ஆட்சி செய்யும்படியாக இடமளிக்கப்படுவார்கள். மொத்தத்தில் ஆட்சி செய்யும் காலத்து அல்லது குறைந்த அளவு ஆட்சி செய்யப் பெருமுயற்சி எடுக்கும்போது, இதுவரை அவர்கள் தங்கள் சொந்த நலங்களுக்காக மட்டுமல்ல; அல்லது குறிப்பிட்ட ஒரு வகுப்பினருடைய நன்மைகளுக்காக மட்டுமல்ல; ஆனால் நாட்டிலுள்ள எல்லா மக்களின் நன்மைக்காகவே ஆட்சி செய்வார்கள்.

### திருநெல்வேலியிலிருந்து இராமநாதபுரம் பிரிந்ததைப் பற்றிய குறிப்பு

சிவகங்கையுடன் இராமநாதபுரம் சேர்ந்து திருநெல்வேலியின் ஒரு பகுதியாகவே கருதப்படாவிடினும், ஆங்கில ஆட்சியின் கட்டுப்பாடு ஏற்படுத்தப்பட்ட காலத்திலிருந்து 1781 முதல் 1803 வரை நியமிக்கப்பட்ட உரிமை மாற்ற வருவாய்த்துறை மேற்பார்வையாளர் காலம் வரை, ஒரே

அதிகாரியின் கீழ் ஆட்சி நடைபெற வேண்டுமென்ற காரணத்திற்காக அவை எப்பொழுதும் திருநெல்வேலியுடன் இணைந்தே இருந்தன. லூஷிங்டன் மாவட்ட அதிகாரியாக இருந்த காலத்தில் அவருடைய தலைமை உதவியாளர் திரு. பாரிஷ் இராமநாதபுரம் நிகழ்ச்சிகளின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அந்த ஆண்டில் இராமநாதபுரத்தில் நிரந்தர குடியிருப்பு புகுத்தப்பட்டதாலும் அங்கே மாவட்டமுறை நிறுவப்பட்டதாலும், மதுரை, திண்டுக்கல் மாவட்டத்திற்குக் கலெக்டராக நியமிக்கப்பட்ட திரு. கொகரேன் 1803 நவம்பர் 5 ஆம் தேதி நிர்வாகப் பொறுப்பு ஏற்றார். இவ்வாறாக மதுரையுடன் இணைந்த இராமநாதபுரத்திற்கு முதல் மாவட்டத் தலைவராக (கலெக்டராக) பாரிஷ் இருந்தபோது திருநெல்வேலிக்கு மட்டும் முதல் கலெக்டராகக் கொகரேன் இருந்தார். எனினும் அவருடைய அதிகாரம் முழு மாவட்டத்திலும் பரவவில்லை. ஏனெனில் திருநெல்வேலியிலுள்ள பாளையங்கள் அல்லது ஜமீன்தாரிகள் சில ஆண்டுகளுக்கு முன்போலவே இராமநாதபுரத்துடன் தொடர்புள்ளதாக இருந்து வந்தன.

புது அமைப்பில் இராமநாதபுரம் சிறப்பிடம் பெற்றது; வரி வருமானத்துறை கூறுகிறது: சிவகங்கை ஜமீன்தாரி திருநெல்வேலி ஜமீன்தாரிகள், திண்டுக்கல் மதுரை மாவட்டங்கள் அவற்றைச் சார்ந்த பாளையங்கள் யாவும் இராமநாதபுரம் மாவட்டத்துக்குட்பட்டு திரு. ஜி. பாரிஷ் அவர்கள் ஆட்சியில் ஒரு மாவட்ட எல்லை முதல்வர் ஆட்சி எல்லையாக (Collectorate) இருந்தது. சுருக்கமாய் இராமநாதபுரம் திண்டுக்கல், மதுரை மாவட்டங்கள் என்ற சிறு பெயர் பொது வழக்கத்திலிருந்து வந்தது. சில வேளைகளில் இராமநாதபுர மாவட்டம் என்று மட்டும் அழைக்கப்பட்டது. 1808-ல் இராமநாதபுரம் மாவட்டம் ஒழிக்கப்பட்டது. திருநெல்வேலி பாளையங்கள் என்று அழைக்கப்பட்ட இருபத்தொன்பது சிறு ஜமீன்தாரிகள் திருநெல்வேலி மாவட்டத்துடன் இணைக்கப்பட்டன.

# இயல் - 10

## ஆங்கிலேயரிடம் நாடு ஒப்படைக்கப்படுவதற்கு முன் திருநெல்வேலியிலிருந்த இயக்கம் - 1801

### பகுதி 1

**கிறித்து பணி இயக்கம்**

திருநெல்வேலியில் கிறித்து பணி இயக்கம் தொடங்கிய காலம் 1532 என்று குறிக்கப்பட்டுள்ளதெனத் திருநெல்வேலி கடற்கரையில் போர்ச்சுகீசிய குடியேற்ற நாடுகளைப் பற்றிய நம்முடைய குறிப்பில் ஏற்கனவே குறிக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் சில பரவர்களும், பரவர்கள் மீனவர்களின் பிரதிநிதிகளும், அவர்களுடைய முகம்மதிய எதிர்ப்பாளர்களுக்கு எதிராகப் போர்ச்சுகீசியரின் உதவியை நாடி வேண்டுவதற்காகக் கொச்சிக்குச் சென்ற போது, அங்கே கோவா மத குருக்களின் பொதுத்தலைவராக (அதுவரை ஆர்ச் பிஷப்பாகாமல் இருந்த மைக்கேல் வாசு என்பவரால் ஞான நீராட்டு பெற்றனர். அதே மத குரு மற்ற குருக்களுடன் முகமதியர்களைத் துரத்திச் சென்ற கப்பலைத் தொடர்ந்து சென்றார். அந்தப் பணியின் குறிக்கோள் நிறைவேற்றப்பட்டவுடன் பரவர்களின் பிரதிநிதிகள் அவர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கையின் படி கடற்கரையிலுள்ள எல்லாப் பரவர்களுக்கும் ஞானநீராட்டு செய்யத் தொடங்கினர். பரவர்கள் பிரிவைச் சேர்ந்த எல்லாரும் தங்களை மீட்ட போர்ச்சுகீசியரின் சமயத்தைத் தழுவினர். எனினும் இராமநாதபுரம் கடற்கரையை அடுத்துள்ள கிராமங்களிலிருந்தவர்கள் சிலர் சில காரணங்களுக்காக அப்போதும் அடுத்து வந்த 10 ஆண்டுகள் வரையும் அதாவது சேவியர் காலம் வரையும் ஞான நீராட்டு பெறவில்லை. ஞானநீராட்டு அளிக்கப்பட்டவர்கள் அக்காலத்தில் பொதுவாகக் குமரிக் கிறித்தவர்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் 30 கிராமங்களில் வாழ்ந்து வந்தனர். சற்றொப்பப் போற்றத் தக்க எண்ணிக்கையில் 20 ஆயிரம் மக்கள் இருந்தனர். இந்தக் கிராம மக்கள்

கன்னியாகுமரியிலிருந்து இராமேசுவரத் தீவு முனைவரை கடற்கரையோரமாக எல்லா இடங்களிலும் அதைத் தாண்டாது அக்கடற்கரைக்குள்ளாகவே விட்டுவிட்டு பரவலாக அமைந்திருந்த கிராமங்களில் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்து வந்தனர். அப்பகுதி முதலில் குமரிக் கடற்கரை என்று அழைக்கப்பட்டது. பொதுவாக அங்கு நடைபெறும் புகழ்பெற்ற முத்துக் குளியல் காரணமாக 'முத்துக்குளியல் கடற்கரை' அல்லது 'முத்துக் குளியல்' என்றே தனியாகவும் அழைக்கப்பட்டது. உள்நாட்டிலிருந்த ஒரு கிராமமும் இந்த இயக்கத்தில் இணைந்ததாகத் தெரியவில்லை. மேலும் வாசு தொண்டு செய்துவந்த கடற்கரையிலுள்ள மீனவ கிராமங்களில் அவரது சமய போதனை மக்கள் மனதில் ஆழமாகப் பதியவில்லை. அவர் பரவர்களின் இரக்கமுள்ள காப்பாளர் என்று விளக்கப்பட்ட போதிலும் சேவியர் அங்கு வருகை தரும் வரையில் அவர்கள் சமய அறிவு சிறிதும் பெறாமலே இருந்ததாகத் தெரிகிறது.

**சேவியர்**

புகழ் வாய்ந்த சமயத் தலைவர் பிரான்சிஸ் சேவியர். திருநெல்வேலி கடற்கரையிலுள்ள பரவர்களிடையே 1542 ஆம் ஆண்டு இறுதிலே சமய போதனையைத் தொடங்கினார். அங்கு இரண்டு ஆண்டுக் காலமாகப் போதனை செய்து வந்தார். அவர் தனது திட்டமுறையைத் தானே விளக்கியிருக்கிறார். கடற்கரைக்கு அவர் வந்து சேர்ந்தவுடனேயே சமயக் கோட்பாடு, கடவுள் வணக்கம், மரியன்னை பற்றிய வாழ்த்துக்கள், கிறித்துவ வேதத்திலுள்ள பத்துக் கட்டளைகள் முதலியவற்றை இந்நாட்டு மொழியில் மொழி பெயர்த்தார். பின்னர் அந்த மொழி பெயர்ப்பை மனனம் செய்தார். நான்கு திங்கள் இப்பணியில் ஈடுபட்டிருந்தார்கள். அப்போது, அவர் கிறித்துவ கிராமமொன்றில் வாழ்ந்து வந்தார். இவ்வாறு இந்நாட்டு மொழி அறிவுபெற்று இளம் உள்நாட்டு மொழி பெயர்ப்பாளர்களுடன் கோவாவில் பயிற்சி பெற்றார். போர்ச்சுகீசு மொழியும் தமிழ் மொழியும் பேசிப் பயின்றார். பின்னர் கிராமங்களில் தன் மதக் கருத்துகளைப் பரப்பத் தொடங்கினார். கையில் மணியுடன் சென்று ஒவ்வொரு கிராமத்திலும் மக்கள் கூட்டத்தைத் திரட்டி அவர்களுக்குக் கற்பித்து வந்தார்.

இந்து மதத்தின் சார்பும் ஆதரவும் அற்றிருந்த கிழக்குக் கடற்கரையிலுள்ள பரவர்களும் இதற்கு ஈடான முக்குவர் என்றழைக்கப்பட்ட மேற்குக் கடற்கரையிலுள்ள இனமான மீனவர்கள் போன்ற மக்களிடையே, மன வலிமையும் பக்தியுமுடைய சேவியர் இந்தியாவில் வாழ்ந்து வந்த அந்தக் குறுகிய காலம் முழுவதிலும் சாதாரண அடிப்படை வேலைகளையே செய்து வந்தார் என்பதை அறிய வருத்தமாயுள்ளது. அவர் தனது



வலிமையைச் சற்று விரிவாகப் பயன்படுத்தியிருக்கலாம். இருப்பினும் சிறந்த திறமையும் மிகுந்த ஆர்வமும் கொண்டவராக அவர் விளங்கிய போதிலும் அவர் ஒரு கற்றறிந்த மேதையல்லர். இறுதிவரை அவரால் தமிழ்மொழி பேச இயலவில்லை. ஆனால் எப்பொழுதும் மொழி பெயர்ப்பாளர்களின் துணையை நம்பியிருந்ததாகவும் தெரிகிறது. இந்த முறையில் அவருக்குப் பின் வந்த அதே இயக்கத்தைச் சேர்ந்த மற்ற போதகர்களாகிய, தமிழ்நாட்டில் தொண்டு செய்த இத்தாலிய குருமார்கள், **இராபர்டி-நொபிலி, பெஸ்கி,** ஆங்கிலேய மதகுரு **ஸ்டீபன்ஸ்,** இத்தாலிய குரு **அர்னால்டு,** மேற்குக் கடற்கரையில் தொண்டு செய்த ஜெர்மானிய குரு ஹக்ஸ்லேடன் ஆகியவர்களைவிட சேவியர், மதகுரு என்ற முறையில் இந்துக்களிடையே வெற்றிகரமாகத் தம் சமயப் பணி செய்யத் தக்க திறனைக் குறைவாகப் பெற்றவர். ஆனால் மற்றொரு வகையில் கிறித்து பெருமான் வாழ்க்கைச் செய்தி ஏழைகளுக்கே என்ற கிறித்துவ மத தத்துவத்தைக் கிறித்துவே நிரூபித்துள்ளதை மறவாது நினைவு கூர்தலும் வேண்டும். (நம் 'தங்கபஸ்ப' மடாதிபதிகள் தவறாது கவனிக்கவும்! – ந.ச.)

சேவியர் உறுப்பினராயிருந்த உரோமாபுரி ஏசு சபையைச் சார்ந்த அவர் எழுதிய கடிதமொன்றில் அவரது முயற்சிகளைப் பற்றிய விளக்கமான குறிப்பை வரைந்துள்ளார். அக்குறிப்பே அடிக்கடி மேற்கோளாகக் காட்டப்படுகிறது. நான் இங்கு இதன் முடிவைப் பற்றி மட்டும் எடுத்துக் காட்டுகிறேன்.

'இந்தக் கடிதத்திலிருந்து ஏசுவின் அருளுக்காகக் கூடிய மக்கள் கூட்டம் எவ்வளவு பெரியது என்பதை நீங்களே உணரலாம். மக்கள் கூட்டத்தின் நெருக்கடியை அடிக்கடி சமாளிக்க இயலாது ஞானநீராட்டு அளித்து அலுத்த என் கைகள் ஓய்ந்தன. ஒரே ஒரு நாளில் ஒரு கிராமத்தின் மக்கள் அனைவருக்கும் நான் ஞானநீராட்டு அளித்தேன். மேலும் மதக் கோட்பாடு மற்றும் மதச் செய்திகளை அடிக்கடி திரும்பத் திரும்பக் கூறிக் குரலும் தேய்ந்தது; வலிமையும் குறைந்தது.

ஒரு கிராமத்தில் போதுமான அளவு வேலைகளைச் செய்து முடித்ததும் அடுத்த கிராமத்திற்குச் செல்வேன்; இவ்வாறு முப்பது கிராமங்களுக்கும் சென்று வருவேன்' என்று சேவியர் மேலும் கூறுகிறார்.

எல்லா இடங்களுக்கும் சென்று அவ்வாறு பார்வையிட்ட பின்பு, அதே முறையில் என்னுடைய வேலை மறுபடியும் தொடங்கும். ஒவ்வொரு கிராமத்திலும் கிறித்துவ போதனைப் படி ஒன்றை வைத்து வருவேன். விழா நாட்களில் எல்லாரையும் ஒன்று கூட்டும்படிக் கேட்டுக்

கிறித்துவ அடிப்படைத் தத்துவங்களைத் திரும்பத் திரும்பப் பாடும்படிச் செய்வேன், ஒவ்வொரு கிராமத்திலும் தகுதி பெற்ற ஒருவரைத் தலைமை ஏற்கச் செய்வேன். அவர்களுடைய ஊதியத்திற்காக என் வேண்டுகோளின் பேரில் வைசிராய் 4000 பொன் பனாமாக்களை ($3^1/_2$ பொன் பனாமாக்கள் ஒரு ரூபாய்க்குச் சமம்) ஒதுக்கிவைத்துள்ளார். பரவ கிறித்தவர்களுடைய அறியாமையை விட அவர்களுக்கு அக்காலத்தில் இருந்த ஒழுக்கக் குறைவு சேவியர் போன்றவர்க்கு ஒரு பெரிய சோதனையாகவே இருந்திருக்க வேண்டும். அவர் அங்கு தொண்டாற்றத் தொடங்கிய இரண்டு ஆண்டுகட்குப் பின்பு அவரது உதவியாளராகிய புன்னைக்காயலிலிருந்த பிரான்ஸிசு, மான்ஷியன்சுக்கு 1544-ல் எழுதிய கடிதத்தின் கீழ்க்காணும் பகுதிகளே அதற்குப் போதிய சான்றாகும்.

அறிவும் அதிகாரமும் நமக்கு உணர்த்துவது போல மற்ற செய்திகளைத் தொடங்கு முன்னர் போர்ச்சுகீசிய ஆதிக்கத்திற்குட்பட்ட மக்களாகிய இவர்களுக்குள் உள்ள கலகக்காரர்களின் முரண்படும் பிடிவாதப் பண்பை ஒழிக்க அடக்குமுறையைப் பயன்படுத்த வேண்டியது அடிக்கடி தேவையாகும். வைசிராயிடமிருந்து பெற்ற ஒரு அதிகாரியை நான் உன்னிடம் அனுப்புகிறேன். பொதுச் சட்டங்களை மீறிக் 'கள்' என்று அவர்கள் அழைக்கும் மயக்கம்தரும் மதுவை அருந்தி மயக்கத்தில் மூழ்கியிருக்கும் எந்தப் பெண்ணும் 'பணம்' என்று அவர்கள் சொல்லும் தொகையான இரண்டு வெள்ளி பென்சுகள் தண்டம் செலுத்த வேண்டும். தவிர அத்தகைய குற்றம் செய்து மயக்கத்திலிருப்பவர்களுக்கு மூன்று நாட்கள் சிறைத்தண்டனை அளிக்கும் படியும் அவனுக்குக் கட்டளையிட்டேன். எல்லாக் கிராமங்களிலும் இந்தச் சட்டத்தை நீ விரைவாக நடைமுறையில் கொண்டு வரச் செய்தல் வேண்டும். குடித்த எல்லாப் பெண்களுக்கும் தண்டனை விதிக்கும்போது சட்டம் தெரியாதென மன்னிப்புக் கோராதவாறு எல்லாக் கூட்டங்களிலும் இதை விளம்பரப்படுத்துதல் வேண்டும்.

எப்போது உன்னிடம் நான் வரமுடியும் என்று சொல்ல இயலாது. ஆனால் அதுவரை பதங்காட் (பட்டங்காட்டி, பரவர்கள் மற்றும் சில சாதித் தலைவர்களுக்கு அளிக்கப்பட்ட பட்டப்பெயர்)களுடன் சேர்ந்து அவர்களுடைய கெட்ட பழக்க வழக்கங்களைத் திருத்த வேண்டும். அவர்கள் பழைய தீமைகளில் மூழ்கியிருப்பதை நான் பார்த்தேனானால் வைசிராயிடமிருந்து நான் பெற்றுள்ள அதிகாரத்தின் உதவியால் அவர்களைக் கைது செய்து சங்கிலிப் பிணைப்புகளுடன் கொச்சிக்கு அனுப்புவேன் என்று அவர்களிடம் சொல்லுங்கள். அவர்கள் எளிதான தண்டனையுடன் விரைவில் விடுதலை பெற்று வந்துவிடலாமென்ற நம்பிக்கை கொண்டிருக்க வேண்டாமென்று கூறுங்கள். ஏனெனில் புன்னைக்காயலுக்கு என்றும் திரும்பி வராத வகையில் அவர்களைத் தடுப்பதற்கான எல்லா வழிகளையும் எனக்கு அளிக்கப்பட்ட சட்டத்தின் உதவியுடன் மேற்கொள்ள வேண்டுமென்று தீர்மானித்துள்ளேன். இந்த நாட்டுக்கு இழிவைத் தேடித் தரும் கூடுதலான பழிச்செயல்களுக்கும் கொடுமைகளுக்கும் காரணமான குற்றங்குறைகள் யாவும் இவர்களிடம் மட்டுமே அமைந்துள்ளன என்பது தெளிவாகத் தெரிகின்றன.



'மறைவாகச் சிலைகள் செய்தும் செதுக்கியும் வருகின்ற தொழிற்சாலைகளைக் கண்டுபிடிக்கத் தீவிர முயற்சி எடுத்துக் கொள்ளுங்கள்.' (ஐயே! ஐயோ! - ந.ச.)

பரவர்களின் குற்றங்குறைகளைப் பாராட்டாது அவர்களின் நலனுக்காக உழைத்த சேவியரின் ஒரு முகப்பட்ட ஆர்வத்தை வெல்லக் கூடியது ஒன்றுமில்லை. முந்திய இயல்களில் உள்ள போர்ச்சுக்கீசிய குடியேற்ற நாடுகளைப் பற்றிய குறிப்பில் நமக்குப் பல எடுத்துக்காட்டுகள் இருக்கின்றன. சிறப்பாக, படகர்கள் அல்லது நாயக்கர்களிடமிருந்து அவருடைய மக்களைக் காக்க எடுத்துக் கொண்ட துணிவு மிக்க முயற்சிகளுக்கான விளக்கங்கள் பல உள. அவருடைய இந்தக் கடும் பொறுப்பு அவருக்குப் பின் வந்தவர் மேலும் விழுந்தது. ஏனெனில் அவருக்கு அடுத்தபடியாக வந்த **அந்தோணியோ கிரிமினாலிஸ்,** அவரது மக்கள் படகர்களால் தாக்கப்பட்டபோது தானே அவர்களிடையே புகுந்து அவருடைய மக்களின் கூட்டத்தை மறைத்துக் காப்பாற்றிய போது எதிரிகளின் எரிகணைகளுக்கு இலக்காகி இறந்தார் என்று சொல்லப்படுகிறது. இந்நிகழ்ச்சி மணப்பாறையில் நடந்ததாகச் சிலரால் சொல்லப்படுகிறது. பாம்பனுக்கு அருகிலுள்ள வேதாளி என்ற இடத்தில் நடந்ததாக மற்றவர்கள் கூறுகிறார்கள். ஆனால் நான் முன்னே கண்டவாறு, சேவியர் கடற்கரையை விட்டுச் சென்ற எட்டு ஆண்டுகட்குப் பிறகு 1552-ல் போர்ச்சுகீசியர் புன்னைக்காயலில் தோல்வி கண்டனர் என்ற செய்தியிலிருந்து அந்நிகழ்ச்சி புன்னைக்காயலில் நடந்திருக்கலாம் என்ற தெளிவான நம்பத்தகுந்த கூற்று ஒன்று உளது. குற்றவாளிகள் அவர்களுடைய இயக்கத்தின் முதல் தியாகிகள் என்று ஏசு சபைக்காரர்கள் போற்றினர். உண்மையில் அவர் மக்களைக் காக்கும் பணியில் ஒரு மாபெரும் தியாகிதான். ஆனால் அவர் சார்ந்த மத இயக்கத்திற்குத் தியாகியாக முடியாது. அவர் 1562-ல் இறந்ததாகச் சிலரால் கூறப்படுகிறது.

**சேவியருக்குப் பிற்பட்ட காலம்**

சேவியருக்கு அடுத்த நூற்றாண்டில் புகழ்வாய்ந்த இராபர்ட் - டி

- நொபிலி அவர்களால் 1606-ல் மதுரையில் நிறுவப்பட்ட சபையைப் பற்றியும், அவருடைய நடவடிக்கைகள் அவருடைய வியத்தகு செயல் முறை இவற்றால் ஏற்பட்ட சொற்போர்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் ஏசு சங்கத்தைச் சார்ந்தவர்களின் கடிதங்களில் மிகுதியாகக் காணக் கிடக்கின்றன. நெல்சன் அவர்களுடைய 'மதுரை மானுவல்' என்ற புத்தகத்தில் காணக்கூடிய மதுரை இராமநாதபுரம் இவற்றின் அரசியல் நிலை, வரலாறு முதலியவற்றைப் பற்றிய மிகுதியான விளக்கங்களும் அவர்களுடைய கடிதங்களில் காணப்படுகின்றன. ஆனால் திருநெல்வேலி கடற்கரையிலோ அல்லது உள்நாட்டிலோ சங்கத்தின் வளர்ச்சியைப் பற்றித், தீவினைப் பயனாக முழு நூற்றாண்டுச் செய்திகளில் மிகச் சிலவே காணக் கிடக்கின்றன. ஸ்பெயினில் 1604-ல் வெளியான ஒரு புத்தகத்தில் அடங்கியுள்ள கடற்கரையிலிருந்த சபைகளின் நிலைமை பற்றிய செய்திக் குறிப்பு இதற்கு ஒரு முக்கிய விதிவிலக்காகும். அந்தப் புத்தகத்திலிருந்து ஒரு பகுதியை மிக்க அன்புடன் டாக்டர் பர்னல் எனக்குக் குறித்துத் தந்துள்ளார்.

அது கூறுவதாவது: 'அந்தக் காலத்தில் அதாவது 1600-ம் ஆண்டில் ஏசு சங்கத்தின் உறுப்பினர்கள் 17 பாதிரிகளும் 3 சகோதரர்களும் ஆக இருபது போதான் இருந்தனர். மதுரையிலுள்ள நிலக்கிழார்களாகிய நாயகர்களின் இருக்கைகளையும் சேர்த்துக் கடற்கரையினுள் 16, உள்நாட்டிலுள்ள 6 ஆக 22 மதகுருக்களுக்குரிய பிரிவுகளுக்குப் 17 பாதிரியார்களும் பிரித்து அனுப்பப்பட்டனர். இதைத் தவிர மன்னார் தீவில் மற்றவர்கள் இருந்தனர். அந்தக் கடற்கரைப் பகுதி முழுவதிலுமாக மொத்தத்தில் 90,000 மேற்பட்ட கிறித்தவர்கள் இருந்தனர். (கொச்சி பிஷப், பாரெல்லோ அக்கிறித்தவர்களின் எண்ணிக்கை 60,000 மேற்பட்டது எனக் குறிப்பிடுகிறார்) சிறப்பான குடியிருப்புகள் ஏழு தலைமையான இடங்களில் மட்டும் இருந்த போதிலும் தேவைக்கு உகந்தவாறு ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு என மதகுருக்கள், அங்குள்ள எல்லாப் பிரிவுகட்கும், கிறித்தவக் கோயில்களுக்கும் சென்று வந்தனர்.

தூத்துக்குடி சங்கம் தலைமையிருப்பிடம். அங்கு மூன்று பாதிரியார்களும் தீக்கைபெறாத சகோதரர் மூவரும் இருந்தனர். அங்கே தனியே ஒரு மதகுருவும் இரண்டு துணை குருக்களும் இருந்தமையால் அவர்கள் கோயில் பணிகளில் ஈடுபடுவதில்லை. திருவிழாக்கள், சிறப்பாக **என்-செனோரா - டி - லா - நியூவா** (N Senioa De La Niews) போன்றவை மிகுந்த ஆர்வத்துடன் கொண்டாடப்பட்டு வந்தன. அக்கோயில் இன்றும் இப்பெயரால் அழைக்கப்படுகிறது. அதற்குச் சரியான தமிழ்ப்பெயர் **'பனிமய மாதா'**. உறைபனி இடத்தைப் பனித்துளி



பெற்றுள்ளது. (பார்க்க: போர்ச்சுக்கீசியரின் ஆதிக்கத்தில் தூத்துக்குடி) இவ்வாண்டு 1600-ல் 700 பேர்களுக்கு மேற்பட்டவர்கள் நற்கருணை அளிக்கப்பட்டனர். ஹென்றிக் ஹென்றி ரூவஸ் (Henrique Henriques) அங்குள்ள கோயிலிலேயே அடக்கம் செய்யப்பட்டார். பொதுவாக அவர் ஒரு திருத்தொண்டராகவே கருதப்பட்டார். (1570-ல் ஏற்பட்ட பஞ்சத்தில் காப்பு நிலையங்கள் இந்த மதச் சபையினரால் நிறுவப்பட்டன என்பதை நினைவு கூர்தல் வேண்டும்.)

**1600-ஆம் ஆண்டுக்கான புள்ளிக் கணக்கைக் கீழ்க்காணுமாறு அவர் குறிப்பிடுகிறார்:**

கடந்த ஆண்டில் சங்கத்தில் 74 போர்களுக்கும், மனாரில் 300 பேர்களுக்கும், வைப்பாரில் 100 போர்களுக்கும், பிரியபரனில் (இராமநாதபுரத்திலிருக்கும் பெரிய பட்டணம்) 15 பேர்களுக்கும், வேம்பாரில் 100 போர்களுக்கும், மதுரையில் 4 போர்களுக்கும், உள்நாட்டில் 45 போர்களுக்கும் ஞானநீராட்டு அளிக்கப்பட்டது. மொத்தத்தில் மற்ற இடங்களிலுள்ள 50 போர்களையும் சேர்த்து 547 பேர்கள். புதிதாக மதம் மாறுபவர்களைவிட ஏற்கனவே மதம் மாறியவர்களுக்கு மத போதனை செய்வதில்தான் அதிகக் கருத்து செலுத்தப்பட்டது என்றும் அவர் கூறுகிறார்.

அடுத்த குறிப்பு 1640-ல் உள்நாட்டிலுள்ள கயத்தாற்றில் நிறுவப்பட்ட மதச்சபைக் கூட்டமேயாகும். உள்நாட்டில் இதற்கு முன் இதுபோல் மதக் கூட்டங்கள் இருந்திருக்கலாம். ஏனெனில் 1600 இல் உள்நாட்டிலுள்ள 45 பேர்களுக்கு ஞானநீராட்டு கொடுக்கப்பட்டமையால் மதக்கூட்டங்கள் நடைபெற்றிருக்கலாம். ஆனால் இதுதான் ஏட்டில் குறிக்கப்பட்டிருக்கும் முதல் உள்நாட்டு மதக்கூட்டம்.

**கமைய நாயக்கன்பட்டி**

நான் காணும் அடுத்த குறிப்பு 1660-ல் அமைக்கப்பட்ட கமைய நாயக்கன் பட்டி மதக் கூட்டமாகும். அதே ஆண்டில் இறுதியாகப் போர்ச்சுக்கீசியரிடமிருந்து டச்சுக்காரர்களுக்கு மாறிய தூத்துக்குடிக்கு **பால்டென்ஸ்** (Baldens) வருகை தந்தார். சேவியரால் மதமாற்றம் செய்யப்பட்ட பரவர்கள் தொடர்ந்து உறுதியாக அம்மதத்தைக் கடைப்பிடித்து வந்தனர் என்பதை அவர் வாசகங்கள் எடுத்துக் காட்டுகின்றன என்பதும் அதில் காணப்படுகிறது.

எட்டயபுரம் ஜமீன்தாரியிலுள்ள ஒரு கிராமம் கமையநாயக்கன் பட்டி. இந்த இடத்திலுள்ள கிறித்துவக் கோயிலில் பாதுகாத்துவைக்கப் பட்டுள்ள கீழ்க்காணும் கல்வெட்டு அக்காலத்திய சுவைநிரம்பிய நினைவுச்

சின்னமாகும்.

"எண்ணூற்று - அறுபத்தைந்தாம் ஆண்டு. சித்திரை மாதம் 19 ஆம் நாள். நாங்கள் ஜகவீர எட்டப்ப நாயக்கர் அவர்கள் செய்யும் அறிவிப்பு வருமாறு:

'எங்கள் தந்தையார் காலத்தைப்போல. இருபத்தைந்து ஆண்டு கட்குமுன் எங்கள் எல்லையில் உள்ள இந்தக் கடவுளின் தேவாலயமும், உரோமாபுரி குருக்களின் மடமும் தீங்குகளினின்றும் பாதுகாப்பளிக்கப் பட்டிருந்தன. அதே போன்று தற்போது நாங்கள் அதையே தொடர்ந்து செய்ய உறுதி செய்திருப்பதால் இந்தக் கோயிலுக்கு வருகை தந்து குருக் களைக் கண்டு, இக்கல்வெட்டை நாட்டியுள்ளோம். ஆகவே யாரேனும் இந்தத் தேவாலயக் கடவுளுக்கோ அல்லது குருக்களுக்கோ அல்லது அவர்களுடைய சீடர்களுக்கோ தீங்கு செய்வானேயானால் அவன் நமக்குத் தேசத்துரோகியாவது மட்டுமன்றிக் கங்கைக்கரையில் கரும்பசுவையும் பார்ப்பனனையும் கொன்ற பழிக்காளாவான். சந்திர சூரியர் உள்ள காலம் வரை இக்கட்டளையை விதித்துள்ளோம். ஜெகவீர எட்டப்ப நாயக்கர். கடவுள் (எங்களைக்) காப்பாராக."

திருநெல்வேலியில் அக்காலத்திலிருந்த மலபார் அல்லது கொல்லம் நூற்றாண்டில் கணக்கிடப்பட்ட 865 ஆம் ஆண்டு கி.பி.1689-90 ஆண்டுக்குச் சரியானது என்று கணக்கிடப்பட்டது. அந்த ஆண்டு - செப்டம்பரில் தொடங்குகிறது. எனவே அடுத்துவந்த ஆண்டின் முன் பகுதி ஏப்ரல் - மேக்குச் சரியான சித்திரை 1690 ஆம் ஆண்டைச் சேர்ந்தது. மலபார் நூற்றாண்டின் அந்த ஆண்டு 60 ஆண்டு வட்டத்தில் அந்த ஆண்டிற்கு முந்தியதாகக் கல்வெட்டிலுள்ளது. ஆனால், தீவினைப் பயனாக, அந்த ஆண்டு சிதைந்து 'பி' என்ற எழுத்து மட்டும் காணப் படுகிறது. மலபார் ஆண்டு 865க்குச் சரியான 60 ஆண்டு வட்டத்தில் சித்திரையில் ஆரம்பிக்கும் ஆண்டு பிரம்மோதூத என்ற நான்காவது ஆண்டாகும்.

ஜகவீர எட்டப்ப நாயகர் என்பது யாரையும் குறிக்கும் தனிப் பெயரல்ல. ஆனால் அது பாளையக்காரர்கள் அல்லது எட்டயபுரம் ஜமீன் தார்களின் குடும்பப் பட்டப் பெயராகும். இந்தக் கல்வெட்டில் கண்ட பாளையக்காரன் அதாவது 1690-ல் இருந்தவன் பரம்பரை வரலாற்றின் படி ஜகவீர ராமகசிலா எட்டப்ப நாயகன். அவனால் குறிப்பிடப்படும் அவன் தந்தையின் பெயர் ஜகவீரராம எட்டப்ப நாயகன். 1690-ல் ஏற் பட்டதாகக் கூறப்படும் தொல்லைகள் 25 ஆண்டுகட்கு முன்பாக 1665-ல் ஏற்பட்ட தொல்லைகள் ஆகியவை அண்டையிலுள்ள பொது



மக்களால் ஏற்பட்ட தீங்குகளாகத் தோன்றுகின்றன. இந்த இரண்டு சமயங்களிலும் சொல்லப்பட்ட பாளையக்காரர் அந்த எல்லைக்குத் தனி அதிகாரியாக இருந்ததால் அவருடைய உதவியையும் இரக்கத்தையும் கிறித்துவ மதகுருக்களுக்கு நல்கினார்.

முதல் இடையூறு சமயத்திருக்கூட்டம் ஏற்பட்ட உடனே நேர்ந்தது. அண்மையில் போர்ச்சுக்கீசியர், டச்சுக்காரர்களால் தூத்துக்குடியிலிருந்து துரத்தப்பட்டனர். கடற்கரை மதச் சபையைச் சேர்ந்த கிறித்துவ குருமார் களும் உள்நாட்டில் அடைக்கலம் புகவேண்டியிருந்தது. தூத்துக்குடிக்கு அதிக தொலைவில்லாத பாளையக்கார எல்லையிலுள்ள சில மக்கள் மத குருக்களின் ஐரோப்பிய நண்பர்களின் வீழ்ச்சியைப் பயன்படுத்தி அவர்கள் ஊர்களிலிருந்து மதக்குருக்களைத் துரத்துவதற்கு முயற்சி செய்யும்படி இந்நிகழ்ச்சி தூண்டியிருக்கலாம்.

அதற்குப்பின் 1715-இல் அப்போது கமைநாயகன் பட்டியி லிருந்த புகழ்பெற்ற பெஸ்கி அதற்கு மேற்கே சிறிது தள்ளி அமைந் திருந்த பாளையக்காரரின் எல்லைக்குட்பட்ட மக்களின் பகைமையால் பெருங்காயங்களுக்கு ஆளானார் என்றும் அறியப்படுகிறது.

**டச்சுக்காரர்களின் நடத்தை**

1700-ல் மார்ட்டின் பாதிரியாரால் எழுதப்பட்ட கடிதத்திலிருந்து ஏற்கனவே தூத்துக்குடி நகரத்தின் நிலையைப் பற்றி விளக்கமாக ஒரு மேற்கோள் காட்டியுள்ளேன். அதே கடிதத்தில் அந்தக் காலத்தில் டச்சுக் காரர்களிடமிருந்து பரவர்கள் பெற்ற கொடுமையான பட்டறிவுகளைப் பற்றிய சில பிரதிபலிப்புகளை நான் கண்டேன். அந்தக் கடற்கரைக்கு டச்சுக்காரர்கள் அதிகாரிகள் இல்லை எனினும் அப்பகுதி முழுவதும் அவர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டது போன்று இன்றுவரை அடிக்கடி நடந்து கொள்கின்றனர். சிறிது காலத்தில் பரவர்களிடமிருந்து கிறித்துவக் கோயில்களைக் கைப்பற்றி அவற்றைப் பண்டகசாலைகளாக மாற்றினர். குருமார்களின் இல்லங்களில் அவர்களுடைய மூலப்பொருள்களைச் சேமித்து வைத்து வந்தனர். அதனால் குருமார்கள் காடுகளுக்குள் பின் வாங்கும்படி நெருக்கப்பட்டனர். அவர்களுடைய அணிமை தேவைப் படுகின்ற ஒரு காலத்தில், மதகுருவுக்கு உட்பட்ட மக்கள் தொகுதி யினரை விட்டு விலகிச் செல்தல் கூடாது என்பதற்காக அக்குருமார்கள் காடுகளுக்குள் குடிசைகள் கட்டிக் கொண்டனர்.

தற்காலத்தில் பொதுவாக நிலவியிருக்கும் பொறுக்குந் தன் மையை நோக்குங்கால் இந்தச் செய்தி இக்கதையில் அடுத்த பகுதியை யும் இயல்பாகக் கேட்க விரும்பத் தூண்டும் அசாதாரணமாகத் தோன்றுகி

றது. போர்ச்சுக்கீசியரிடமிருந்து டச்சுக்காரர்களால் கைப்பற்றப்பட்ட இரண்டு ஆண்டுகட்குப் பின்னர் 1660-இல் தூத்துக்குடிக்கு வருகை தந்த டச்சு அமைச்சரும் சமயப் பரப்பாளருமாகிய பால்டியஸ் (Baldaeus) அந்த மறுபகுதி பற்றிய செய்திகளை நமக்கு அளிக்கிறார். இந்த எதிர்வாதங்களும் தீவினைப்பயனாக மார்ட்டினின் வாக்கால் உறுதி படுத்தப்படுகிறது. பரவர்களின் குருக்கள் எண்ணிக்கையில் மிகப் பல வாக இருப்பதைக் கண்டதாகப் பால்டியஸ் கூறுகிறார். அவர்கள் சிறப் பாக கோவாவின் சுதேசிகள்.

பாதிரிமார், பரவர்களின் கருத்தை ஈர்க்கச் செய்த அவருடைய ஒவ் வொரு செயலுக்கும் எதிர்செயல் புரியத் தக்கவராயிருந்தனர். அவர் களுக்கு கல்வி பயிலாத பரவர்களிடம் அவ்வளவு செல்வாக்கு இருந்தது. டச்சுக்காரர்கள் இந்தக் குருக்களை நாகப்பட்டினம், தூத்துக்குடி முதலிய நகரங்களிலிருந்து துரத்தினர். ஆனால் அவர்கள் பரவர்களைக் கட்டுப் படுத்துவதற்காக வெகு அருகாமையிலேயே தங்கியிருந்தனர். பால்டியஸ் போர்ச்சுக்கீசிய மொழியில் சொற்பொழிவு செய்தும் கூட அக் கிறித்துவக் கோயில்களுக்குள் அவர்கள் நுழையத் துணியவில்லை. மற்றொரு நிகழ்ச்சியிலிருந்து அவர் குறிப்பிடுவது வருமாறு: ‘டச்சுக் காரர்கள் கோவிலிலிருந்த உருவச்சிலைகளையும் அணிகலன்களையும் அகற்றிக் கோவிலைத் தங்கள் சொந்த வழக்கத்திற்கேற்ப மாற்றியமைத்துக் கொண்டனர். அதனால் பரவர்கள் அதற்குள் நுழையாமல் தெருவிலேயே தங்கள் வழிபாடுகளைச் செய்வதற்கு இயலாதபடி செய்தனர் என்று தெரி கிறது. அதற்குப்பின் டச்சுக்காரர்கள் மிகவும் சகிப்புத்தன்மையுடைவர் களாகித் தாங்களே கோயில்களை எழுப்பினர். தற்போது ஆங்கிலேயர் களால் பயன்படுத்தப்படும் தூத்துக்குடியிலுள்ள கோயில் கட்டப்பட்ட தேதி 1750 ஆகும்.

**பெஸ்கி**

சேவியரின் மதத் தொண்டுகள் தொடங்கிய நிகழ்விடமாக இருந்தது திருநெல்வேலி கடற்கரை. மேலும், சற்றேறக்குறைய 200 ஆண்டுகட்குப் பிறகு அச்சமயத் தொண்டுகள் முடிவுற்ற மற்றொரு நிகழ் விடமாகவும் அது இருந்தது. அன்றியும் ஏசு சங்கத்தைச் சார்ந்த மற்றொரு புகழ்பெற்ற மதகுருவாகிய பெஸ்கியின் வாழ்க்கைத் தொடக்கமும் அங்கேதான் தொடங்கிற்று.

சமயப் பரப்பாளர் என்ற வகையில் பெஸ்கி உரோமன் கத்தோலிக்கக் கோவிலைச் சேர்ந்தவர். அவர் ஒரு சிறந்த தமிழ் அறிஞர்; கவிஞர். எனவே உரோமன் கத்தோலிக்கர்களைப் போலவே சிறப்பாக அவர்களை



விட, பிராட்டஸ்டண்டுகளும் பெஸ்கியின் தொண்டுகளில் ஈடுபாடு கொண்டிருந்தனர். 1840 ஆம் ஆண்டிற்கான சென்னை இலக்கிய ஏட் டில் தமிழிலும் இலத்தீனிலும் கவிதையாகவும் உரைநடையாகவும் பெஸ் கியினுடைய எண்ணற்ற எழுத்தோவியங்கள் பற்றிய பட்டியல்கள் காணப் படுகின்றன. தமிழ் இலக்கிய உலகில் அவர் அடைந்திருந்த பேற்றினைப் பற்றிய கீழ்க்காணும் குறிப்பு ‘திராவிட மொழிகளின் ஒப் பிலக்கணம்’ என்ற நூலின் முன்னுரையிலிருந்து எடுக்கப்பட்டது.

18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அவர்கள் வளர்ச்சியுற்றிருந்த காலத்தில் மட்டுமன்றி தற்காலம் முழுவதிலும் ஒரே காலத்தில் வாழ்ந்த இரு புலவர்களுக்கு விருதுகள் வழங்கப்படல் வேண்டும். ஒருவர் உள் நாட்டுப் புலவர். மற்றவர் அயல்நாட்டுப் புலவர். இரண்டாமவர் இலக் கிய உலகில் இன்றும் உயர் இடத்தைப் பெற்றுள்ள புகழ்பெற்ற பெஸ்கி மற்ற தமிழ்ப் புலவர் போன்று இவர் தமிழரல்ல; ஓர் இத்தாலியர். ஏசு சங் கத்தைச் சார்ந்த சமயத்தைப் பரப்புகின்ற மதகுரு. இவர் தமிழில் புலமைமிக்கவர். சிறப்பாக இலக்கிய மொழி ஆராய்ச்சியில் வல்லவர். அந்த அளவுக்கு வேறு எந்த இந்திய மொழிகளிலும் வேறெந்த ஒரு ஐரோப்பியரும் திறமை பெற்றிருக்கவில்லை. அவருடைய உரைநடை நூல்கள் கொச்சை மொழியாலமைந்தது. சிறப்புடையது எனினும் ஈடு எடுப்பற்ற முதன்மையான மேம்பாடுடையதன்று. ஆனால் அவருடைய இலக்கிய மொழியில் இயற்றப்பட்ட பாடல்கள் இந்துக்களின் உயர்ந்த கருத்துக்களைக் கூறும் நோக்கில் கண்டால் அவை மிகச் சிறந்தவையே. அதிலும் சிறப்பாக அவருடைய புகழ் பெற்ற காவியம் தேம்பாவணி - சமயச் சார்புடைய உயர்ந்த தொடர் காவியம். அது சிந்தா மணியின் அமைப்பை ஒத்தது. அதாவது அது பரந்த உண்மைகளைக் கொண்டது. சிறப்பாக அணி செய்யப்பட்டது. மாறாக ஒருமைப் பண்புடையது. எனவே இரண்டாம் வகை தமிழ்க் கவிஞர்களில் முதன்மை இடத்தை அடையும் பேற்றினை விருப்பு வெறுப்பற்ற தமிழ்நாட்டுக் கவிஞர் களின் விருப்பத்தின் பேரிலேயே அடையலாம் என்பதில் எனக் கொன்றும் ஐயமில்லை. குறள், சிந்தாமணி, இராமாயணம், நாலடியார் இவற்றுள் மூன்று அதிகப்படியானால் நான்கு காவியங்கள் மட்டும் முதலிடத்தைப் பெற்றிருக்கின்றன என்பதை நினைவுக்குக் கொண்டு வரும் போது அத்தகைய மதிப்பு வாய்ந்த பேரிடத்தை ஓர் அயல் நாட்டவர் பெற்றது மிக்க வியப்புக்குரியது என்றே நான் நினைக்கிறேன். தேம்பாவணி அரிய அரசியல் தகுதிகளைப் பெற்றிருப்பினும் வியக்கத் தக்க மொழி வளத்தை எடுத்துக்காட்டிய போதிலும் குறைப்பயனால் அது பழமையின் அதாவது பண்டைத் தமிழ் இலக்கியங்களின் வழக்கத்தை யும் நடையையும் சார்ந்து இருத்தலாகிய குற்றம் உடையதாயிருந்தது.

மேலும் புனித வேதத்தில் நிகழ்ச்சிகளையும் விளக்கங்களையும் இந்துக்கள் சார்புடையதாகவும் வேதத்தில் நிலநூல் விளக்கங்களைக் கூட இந்துக்களின் விருப்பத்திற்கு உகந்தவாறு மாற்றியமைக்க முயன்ற குற்றத்திற்காக அதன் அழகு மிகுதியாகக் குலைக்கப்பட்டுவிட்டது. தற்போது இந்தியாவில் தமிழ் உரைநடை, செய்யுள் இரண்டும் முறையே பெற்றிருக்கும் இடங்களின் வேறுபாடே இதற்குப் போதிய சிறந்த எடுத்துக்காட்டாகும். பெஸ்கியின் செய்யுள்கள் அதிகமாகப் பாராட்டப் படினும் தற்போது வெகு சிலராலேயே அவை படிக்கப்பட்டு வருகின்றன. ஆனால் அவருடைய உரைநடை நூல்கள் குறிப்பாக இலக்கணங்கள், தமிழ், திசைமொழிகள் இவற்றின் அகராதிகள் ஆகியவை மிகவும் போற்றப்படுகின்றன.

**பெஸ்கியின் வாழ்க்கை**

சமயப் பரப்பாளராகவும் தமிழ் அறிஞராகவும் மிகச் சிறப்புற்றிருந்த பெஸ்கியின் பெயரில் அவர் வாழ்க்கையின் நினைவுக் குறிப்புகள் எதுவும் அவருடைய சொந்த ஏசு சமயத்தாராலோ அல்லது நினைவுக் குறிப்பு எழுதக் கூடிய திறன் வாய்ந்த எந்த ஐரோப்பியனாலோ எழுதப்படாதது மிக்க வியப்பளிக்கிறது. அவர் வாழ்க்கையின் பல நிகழ்ச்சிகள் ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆனால் அது பெஸ்கி மறைந்த எழுபது ஆண்டுகட்குப்பின் அவரைப் பற்றி நிலவிய எல்லா விவரங்களையும் சுதேசிகளிடமிருந்து பெற்ற ஒரு கத்தோலிக்க கிறித்தவர் எழுதிய தமிழ் நினைவுக் குறிப்பையே அடிப்படையாகக் கொண்டிருப்பதை நான் கண்டேன். 1796-ன் பாண்டிச்சேரியிலிருந்து சாமிநாதப்பிள்ளை என்பவரால் வெளியிடப்பட்ட மிகச் சிறிய நினைவுக் குறிப்பை இவர் பயன்படுத்தி யிருந்தார். ஆனால் எந்த ஆங்கிலேய ஆவணக் குறிப்புகளையும் அவர் பயன்படுத்தியதாகவே தெரியவில்லை. இங்கு குறிப்பிடப்படும் சுதேசி செயின்ட் ஜார்ஜ் கோட்டை கல்லூரி மேலாளராகப் பணியாற்றிய அ. முத்துசாமிப்பிள்ளையாவார். இவர் 1816லிருந்து 1817 வரை பெஸ்கியின் நூல்களைச் சேகரிப்பதற்காகப் புகழ் பெற்ற தமிழ் அறிஞர் திரு. எல்லிசு அவர்களின் கருத்தின்படி தெற்கே சுற்றுப் பயணத்தை ஏற்றார். அவர் சுற்றுப் பயணத்தின்போது பெஸ்கியின் சீடர்களின் பிள்ளைகளிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் பெஸ்கியின் வாழ்க்கையைப் பற்றிய பல குறிப்புகளைச் சேகரித்ததாகக் கூறினார். (ஆராய்ச்சிக்குச் சுற்றுப் பயணம் எவ்வளவு அடிப்படை! - ந.ச.) கல்லூரி நிர்வாகக் குழுவின் உறுப்பினர் திரு. பாபிங்டன், திரு. கிளார்க்கி - இவர்களின் வேண்டுகோட்களுக்கிணங்க 1822-ல் அவர், நான் குறிப்பிட்ட பெஸ்கியின் வாழ்க்கைக் குறிப்பை வெளியிட்டார். அதில் பெஸ்கியின் நூல்களின்



பட்டியலையும் இன்றியமையாத பகுதிகளிலிருந்து சிலவற்றையும் வெளியிட்டிருந்தார். திரு. எலியட் (தற்போது சர் வால்டர்) விருப்பப்படி இந்தத் தமிழ் நினைவுக்குறிப்பு சுருக்கமாக ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. இதன் ஆசிரியர் வேறு இரு ஆங்கிலேய உரோமன் கத்தோலிக்க மதப் பரப்பாளர்களின் துணையால் ஆங்கிலத்தில் எழுதி சென்னை இலக்கியக் குழுவின் வெளியீட்டில் 1840 ஆம் ஆண்டு ஏப்ரல் இதழில் வெளியிட்டார். இந்த நினைவுக் குறிப்பின் ஆசிரியர் பெஸ்கியின் வாழ்க்கையைப் பற்றிய முக்கிய நிகழ்ச்சிகளைக் கூறும் செய்திகள் எல்லாம் உடன்பாடானது என்று ஏற்றுக் கொள்ளப் போதுமான காரணங்கள் நம்மிடம் இருக்கின்றன. ஆனால் பெஸ்கி இந்தியாவுக்கு வந்தது, அவருடைய மறைவு இவற்றைக் குறிக்கும் தேதிகளில் அவர் வேறு செய்திருப்பதாக உறுதியாகத் தெரிகிறது. எவ்வளவு அறிவுக் கூர்மையுடையவராக இருந்த போதிலும் ஆவணக் குறிப்புகளைக் காணாமலும், அவருடைய குறிக்கோளுக்கு அவற்றைக் கண்டறிவது முக்கியமானது என்று எண்ணாமலும் இருந்த உள்நாட்டவரைப் பொறுத்தவரையில் இத்தவறு ஏற்படுவது இயற்கையேயாகும்.

பின்வரும் தேதிகளுக்கும், மற்ற குறிப்புகளுக்கும், உரோமிலுள்ள ஏசு சபையினருக்கு எழுதப்பட்ட கடிதங்களிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகளுக்கும் உரிய செய்திகளையும் மற்ற ஏற்புடையதான குறிப்புகளையும் திருத்தகு. பால் ரோட்டரி, எஸ்.ஜே. (Paul Rottari S.J) மூலமாக திருத்தகு. என். போகட் (Rev. N. Pouget S. J) வழங்கியதற்கு நான், அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். எனக்குத் தெரிந்த வரையில் அவை இதுவரையிலும் ஆங்கிலத்தில் வெளியிடப் படவில்லை.

கான்ஸ்டன்டைன் பெஸ்கி இத்தாலியிலுள்ள காஸ்டிக்லியன் (Castiglione) என்னுமிடத்தில் 1680 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் எட்டாம் நாள் பிறந்தார். 1698 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 21 ஆம் தேதி தமது பதினெட்டு வயதில் அவர் ஏசு சபையில் சேர்ந்தார்.

அவருடைய நாட்டு வாழ்க்கை வரலாறு ஆசிரியர், 1700 இல் அவர் இந்தியாவுக்கு வந்ததாகக் கூறுகிறார். ஆனால் மதகுரு போகட் அவ்வாறு இருக்க முடியாது என்பதைக் காட்டுகிறார். அவர் ஏசு சபையில் பயிலும் நிலையில் இரண்டு ஆண்டுகளைக் கழித்திருக்க வேண்டும்; பின்னர் நான்கு ஆண்டுகள் சமய சாத்திரங்களைக் கற்பதில் ஈடுபட்டிருத்தல் வேண்டும். ஏசு சபையின் எந்த உறுப்பினரும் இருபத்தைந்து வயதிற்கு முன் மதகுருவாக நியமிக்கப்படுவதில்லை.

எனவே, அவர் 1706 ஆம் ஆண்டிற்கு முன்பாக இந்தியாவுக்குக் கப்பலில் வந்திருக்க முடியாது. அந்தக் காலத்தில் கப்பல் பயணத்திற்குக் குறைந்தது ஆறு மாதங்கள் ஆகும். அவர் கோவாவை அடைந்தவுடன், அக்காலத்து வழக்கப்படி அவர் எந்த மாவட்டத்திற்கு நியமிக்கப் படுகிறாரோ அந்த இடத்தின் மொழியை - தமிழை - அவர் ஓரிரு ஆண்டுகள் அங்கேயே தங்கிக் கற்க வேண்டும் என்று கருதப் பட்டிருத்தல் வேண்டும். ஆகையால் 1710 ஆம் ஆண்டுக்கு முன் அவர் திருநெல்வேலியில் தன்னுடைய சமயத் தொடர்பானப் பணி களைத் தொடங்கவில்லை என்று சொல்லப்படுவது நிகழக்கூடியதே. என்னைப் பொறுத்த வரை அந்த ஆண்டை ஒப்புக் கொண்டு திருநெல் வேலியை அவர் அடைந்த ஆண்டு மிகப் பிற்பட்ட காலமாகக் கொண்டாலும் கூட அது 1708 ஆக இருக்கலாம் என்று குறிக்கப்படலாம். அவர் தமிழ் கற்பதில் ஐந்தாண்டுகள் கழித்ததாகத் தமிழ் வரலாற்று ஆசிரியர் கூறுகிறார். அவரைப் போன்ற சிறந்த அறிஞரொருவர் அவர் வாழ்ந்த காலம் வரை தமிழ் படித்துக் கொண்டிருந்தார் என்று ஐயமின்றி சொல்லப்படலாம். ஒரு சமயப் பரப்பாளராக அவருடைய பணி சரியாக எந்த ஆண்டில் தொடங்கப்பட்டிருந்தாலும் அவருடைய, அப்பணி திரு நெல்வேலியில் தொடங்கியது என்பதிலும், அதேபோலத் தன்னுடைய இறுதி மூச்சை விடுவதற்காகத் திருநெல்வேலிக்கே அவர் வந்தார் என் பதிலும் இப்போது ஐயங்கொள்ள இயலாது.

பிரண்டலின் (Prandolini) திருநெல்வேலியிலுள்ள வடக்கன் குளத்தில் 1714 இல் ஏசு சபையை நிறுவினார். அவர் 1714, 1715, 1716 ஆம் ஆண்டுகளில் பெஸ்கி திருநெல்வேலியிலுள்ள கமையநாயகன் பட்டியில் தங்கியிருந்ததாகவும், அங்கிருந்து கயத்தாற்றிற்கு அடிக்கடி சென்று வந்ததாகவும் கூறுவதைக் குறிப்பிடும் போது நாம் நிகழக் கூடியவை என்று கூறும் நிலையைக் கடந்து, குறிப்பிட்ட சில நிகழ்ச்சி கள் பற்றிக் கூறுவோம். இப்போதிருப்பதைவிட மிக முக்கியமான இட மாக இருந்த கயத்தாறு, பாளையங்கோட்டையிலிருந்து மதுரை செல்லும் பாதையில், பாளையங்கோட்டையிலிருந்து 18 கல் தொலைவில் அமைந்துள்ளது. கமைய நாயக்கன்பட்டி எட்டையபுர ஜமீன்தாரியில் வடகிழக்குப் பக்கத்தில் உள்ளது. பெஸ்கி, குருக்கள் பட்டியில் அந்தணர்களால் கைது செய்யப்பட்டார். அவர்கள் அவரைக் கொலை செய்யும் நேரத்தில், கயத்தாறிலுள்ள கிறித்தவர்களால் காப்பாற்றப் பட்டார். குருக்கள் பட்டி, சங்கரநாயினார்கோயில் வட்டத்தில் உள்ள ஆலங்குளத்திற்கு அருகே உள்ள ஒரு கிராமம். கமையநாயகன் பட்டி யிலிருந்து 1715 ஜனவரி 12 ஆம் தேதியிட்டுச் சங்கத்தின் பொதுத் தலை



வருக்கு பெஸ்கியே எழுதிய கடிதத்தில் இந்த நிகழ்ச்சியைப் பற்றி அவரே குறிப்பிட்டிருக்கிறார். உண்மையில் அந்தணர்கள் அவரைக் கொலை செய்ய எண்ணியிருப்பார்களா என்று நான் ஐயப்பட்டேன். ஆனால், அந்த எல்லாக் கிராமங்களிலுள்ள சுதேசி கிறித்தவர்களிடையே அத்தகைய செய்கை பற்றிய தெளிவான பழங்கதை நிலவுவதை நான் அறிந்தேன். குருக்கள் பட்டி கிராமம் அந்தணர்களுக்குச் சொந்தமானது. அங்குப் பாதி அளவுக்கு அந்தணர்களே வாழ்ந்து வந்தனர். அவர்களின் முன்னோர்கள் பெஸ்கியால் நிறுவப்பட்ட மாதா சிலையை உடைத்தனர். பெஸ்கியையும் அவரால் கிறித்துவராக்கப்பட்ட ஓர் அந்தணரையும் கிரா மத்திலிருந்தே விரட்டினர் என்று சொல்லக் கேள்விப்பட்டதாக அவர் களே ஒப்புக் கொண்டனர். அவரால் நிறுவப்பட்ட மாதாசிலையில் சிதைவு களை அவர்கள் காண்பித்தார்கள். இந்த நிகழ்ச்சிக்கு அடுத்தாற்போல் பெஸ்கி வடக்கே சென்று விட்டதாகத் தெரிகிறது.

முத்துசாமிப்பிள்ளை நினைவுக் குறிப்பிலிருந்து பெஸ்கி அவருடைய பணியைத் திருநெல்வேலியிலேயே முடித்துக் கொண்ட தாகத் தெரிகிறது. ஆனால் திருநெல்வேலியிலேயே அவரது சமய விளம்பர வேலையையும் ஆரம்பித்தாரா என்பது இன்றுவரை தெரிய வில்லை; மதப்பரப்பாளர், வாழ்வின் முதல் ஐந்து ஆண்டுகளுக்கு ஏறக் குறைய முதல் ஏழு ஆண்டுகட்குத் திருநெல்வேலி அவரிடம் உரிமை பாராட்ட முடியும் என்று நாம் இப்போது அறிகிறோம். முக்கியமாக இந்த ஆண்டுகளில் இவரது அற்புதமான தமிழ் அறிவுக்கு இந்த இடம் அடி கோலியமையாலும் அதைவிட வியக்கத் தக்க முறையில் தான் பெற்ற அறிவைப் பயன்படுத்திய திறமையும், இந்த இடத்திலேயே, ஆகையால் திருநெல்வேலி தனது இலக்கியப் புகழ்பெற்ற அறிஞருள் ஒருவரை ஏற்றுக் கொள்ளும் உரிமையுடையது. மாறாக, இந்த உரிமைக்கு ஏற்புடையதாக அவருடைய எந்த நூலும் உரைநடையோ அல்லது செய்யுளோ திருநெல் வேலியிலிருந்து எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. அவருடைய மிகப் பெரிய காவிய நூலாகிய தேம்பாவணி 1726 இல் வெளியிடப்பட்டது. அதற்கான அவருடைய விளக்கம் 1729 இல் சேர்க்கப்பட்டது. வேத வினாவிடை மதபோதகர்கள் பயன்படுத்துவதற்காக இயற்றப் பெற்ற சிறந்த உரைநடை நூலாகிய 'வேதியர் ஒழுக்கம்' 1727 இல் எழுதப்பட்டது.

ஏசு சங்கத்தைச் சேர்ந்த கத்தோலிக்க கிறித்துவர்களிடையே நிலவிய அக்காலத்திய வழக்கப்படி, (தற்போது வழக்கத்திலிருப்பது போலவும்) பெஸ்கி உள்நாட்டுப் பெயரை வைத்துக் கொண்டார். தைரியநாத சுவாமி (யார்) என்பது அப்பெயர். இது அவருடைய கிறித்துவப் பெயராகிய கான் ஸ்டன்டயல் என்பதன் மொழி பெயர்ப்பாகும். தேம்பாவணி வெளியீட்

டிற்குப் பிறகு தற்போது தமிழ்நாட்டு மக்கள் யாவராலும் போற்றப் படுகின்ற பெயரைத் தமிழ்நாட்டின் புலவர்கள் அவருக்குக் கொடுத்த தாக நாம் கேள்விப்படுகிறோம். (மறைமலை அடிகளார் முன்னோடிகள் வாழ்க! - ந.ச.) அப்பெயர் வீரமாமுனிவர் என்பது. அதாவது வீரமாமுனிவர், 'அடியவர்களில் சிறந்தவர்' என்று பொருள்படும். எல்லாவற்றிற்கும் மேலாகச் சிறந்த மேதையான ராபர்ட் - டி - நொபிலிக்கு அவரது சமய அறிவுத் திறனுக்குப் பொருத்தமான 'தத்துவ போதகசாமி'- தத்துவ மருத்துவர் என்ற பெயர் நன்றாகப் பொருந்துவது போன்று இந்தப் பெயர் அவருக்கு அவ்வளவு பொருந்தவில்லை. (ஏனோ?! - ந.ச.)

அவருடைய வாழ்வின் கடைசி நான்கு ஆண்டுகளில் 1736லிருந்து 1740 வரை, பெஸ்கி சந்தாசாகிபின் திவானாகப் பணியாற்றியதாகத் தெரிகிறது. சந்தா சாகிபு சூழ்ச்சியுடன் திருச்சிராப்பள்ளியைப் பிடித்தது, அதன் காரணமாக மதுரைப் பகுதி முழுவதும் அதிகாரம் பெற்ற செயல் அரசியல் வரலாற்றில் நாயக்க வம்சத்தின் முடிவைக் கொண்டுவந்த நிகழ்ச்சியாகக் குறிக்கப்பட்டுள்ளது. இந்தத் திடீர் பேற்றினால் சந்தா சாகிபு நவாபானான். உண்மையில் கர்நாடக நவாபுக்குப் பகையானான். பெஸ்கியின் நாட்டு வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் கூறுகிறார்: 'பெஸ்கி சந்தாசாகிபை நேரில் கண்டு பேசுவதற்குத் தன்னைத் தகுதியுடையவராக்கிக் கொண்ட மூன்று மாதக் காலத்திற்குள் பெர்சியன், இந்துஸ்தானி முதலிய மொழிகளைக் கற்றார். இந்தப் பயன்களாலும் திறமையினாலும் பெரிதும் ஈர்க்கப்பட்ட சந்தா சாகிபு நான்கு கிராமங்களின் வருமானத்தை அவருக்குப் பரிசாக அளித்ததோடு அவரைத் தன்னுடைய திவான் அல்லது தலைமை அமைச்சராக நியமித்துக் கொண்டான். நான் இந்தக் கூற்றிலடங்கியுள்ள உண்மைக் கூறுகளைப் பற்றி ஐயப்பட எந்தக் காரணமும் காணப்படவில்லை. ஐரோப்பாவுக்கு எழுதப்பட்ட ஒரு கடிதத்தில் 1736 இல் சந்தாசாகிபு - பெஸ்கி சந்திப்பு குறிக்கப்பட்டிருக்கும் சூழ்நிலையில் இக்கூற்று உறுதிப்படுகின்றது. 1740 இல் அக்காலத்தில் கர்நாடகத்தின் உண்மை நவாபாக இருந்த (தவுத் டவுஸ்ட்) அலிகானை அவர், வேலூருக்குச் சென்று கண்டார். அவர் ஐரோப்பா நாட்டின் புதுமைப் பொருள்களையும் ஏசு சபையின் பொதுத் தலைவர் உரோமாபுரியிலிருந்து 29 அக்டோபர் 1739 என்று தேதியிட்ட நவாபுக்கு எழுதிய ஒரு கடிதத்தையும் அவருக்கு (நவாபுக்கு) கொடுத்தார்.

சந்தா சாகிபு 1740இல் ராகோஜி பான்ஸ்லே, படாசிஸ் என்ற இரண்டு படைத் தலைவர்களின் கீழ் மராட்டியர்களால் திருச்சிராப் பள்ளியில் முற்றுகையிடப்பட்டான். 1740 மார்ச் மாதத்தில் அவன் கோட்டையை கைவிட்டுச் சரண் அடைந்தான். பின்னர் அவர்களால்



சதாராவுக்குக் கைதியாக அனுப்பப்பட்டான். பெஸ்கி தன்னுடைய தலைவன் சரணடைந்தவுடனே திருச்சிராப்பள்ளியிலிருந்து தப்பி விட்டார் என்று அவர் நாட்டு வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் கூறுகிறார். ஆனால் அந்தச் சமயத்தில் ஐரோப்பியாவுக்கு எழுதப்பட்ட கடிதங்கள், அந்த நிகழ்ச்சிக்கு முன்பே, 1740 இல் மராட்டியர் அங்கு வந்து சேர்ந்த வுடனேயே எல்லாச் சமய வாதிகளும் - தெளிவாக பெஸ்கியும் - இதில் சேர்ந்திருத்தல் வேண்டும்; மராட்டியர் வந்து வயப்படுத்திக் கொண்ட மாவட்டங்களை விட்டுவிட்டு - தெற்கு நோக்கி ஓட வேண்டிய தாயிற்று என்று கூறுகின்றன. சந்தா சாகிபு அடைக்கலம் புகுந்த பிறகு, மராட்டியர்கள் தங்கள் படைத் தலைவர்களில் ஒருவரான மொராரிராவ் என்பவரைத் திருச்சிராப்பள்ளியில் ஆளுநராகவும் அப்பாஜிராவ் என்ற மற்றொருவரை மதுரைக்கும் திருநெல்வேலிக்கும் ஆளுநராகவும் நியமித்தார்கள். எந்த ஆட்சியாளரைப் பற்றியும் கவலைப்படாதப் பாளையக் காரர்கள் தவிர (ஓ?! - ந.ச.) மற்ற முழுநாடும் இப்பொழுது மராட்டியர் வசமாயிற்று. மராட்டியர்கள் இந்துமத வெறியர்கள் (இப்படிச் சொல்லுவது - சொல்லுபவர் - சரியோ? - ந.ச.). மராட்டியர்கள் கையில் சந்தா சாகிபின் திவான் அகப்பட்டிருந்தாலும், அவர்கள் அவன் மேல் அதிகமாகச் சலுகை காட்டியிருக்க மாட்டார்கள். ஆகையால் இயல் பாகவே பெஸ்கி தனக்கேற்பட்ட விரைவான வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தப்பிக்க முயற்சி செய்திருக்கலாம். பெஸ்கி முதலில் மறவர் நாட்டிற்கு அதாவது இராமநாதபுரத்திற்கும், பின் அங்கிருந்து கடற்கரை நாட்டிற்கும் ஓடிவிட்டார் என்று ஐரோப்பாவுக்கு எழுதப்பட்ட கடிதங்கள் கூறுகின்றன. மறவர் நாட்டில் எந்த இடத்தில் அவர் வசித்து வந்தார் என்று சிறிதுகாலம் வரை தெரியவில்லை. ஆனால் அவர் நாட்டு வாழ்க்கை வரலாற்று ஆசிரியரும், அப்போது ஐரோப்பாவுக்கு எழுதப் பட்ட கடிதங்களும் கடற்கரை நாட்டில் எங்கு அவர் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டார் என்ற குறிப்பை ஒரேவிதமாகத் தெரிவிக்கின்றன. இது திருநெல்வேலி கடற்கரையிலுள்ள மணப்பார் (மணப்பாடு) (சரியாக மணல்பாடு, மணல் உப்பங்கழி) என்ற இடமாகும். இது டச்சுக் காரர் வசமிருந்தது. மீன்பிடிக்கும் தொழிலும் வாணிபமும் நடைபெற்ற சிறிய நகரம். ரோமன் கத்தோலிக்கக் கிறித்துவ மக்களையுடையது; பகைமைக்கு அப்பாற்பட்டது. பெஸ்கி 1744 இல் மணப்பார் என்ற அவ்வூரின் மதகுருவாக இருந்தார் என்றும் 1746 இல் அங்கு அவர் இறந்தார் என்றும் நம்பகமாக ஆவணங்களிலிருந்து உறுதியாகிறது. இது அவரது 66வது வயதில் இந்தியாவில் வந்து தங்கிய 40 வது ஆண்டில் நடைபெற்றது. பெஸ்கி கோவாவை விட்டு வந்தபின், வாழ்ந்த முதல் இடம், தமிழ்நாட்டிலுள்ள இடம், மணப்பார் ஆக இருக்கலாம். எனவே

தன்னுடைய முடிவையும் அங்கேயே அடைவதற்கு இயல்பாகவே விரும்பி யிருக்கலாம். மேலும், மணப்பாருக்குச் சொந்தமாகிய டச்சுக்காரர்கள் எப் பொழுதும் ஆங்கிலேயரைத் தழுவியிருக்கின்றவர்களை ஏறத்தாழ எதிர்த்துப் போரிடும் நோக்குமுடையவர்கள். ஆகையால் மராட்டியர்களி டமிருந்து தப்பியோடிவந்த சந்தா சாகிபின் நண்பனைத் தங்கள் பாது காப்பில் ஏற்றுக் கொள்ள விரும்பியும் இருக்கலாம். டச்சுக்காரர்கள் பிராட்டஸ்டண்டுகள் என்பது உண்மையே; எனினும் அந்தக் காலத்தில் அவர்கள் பொறுத்துக் கொள்ளும் தன்மையைக் கற்றிருந்தனர். பெஸ்கி இறந்ததாகச் சொல்லப்படும் மணப்பார் என்பது சரியாக மணப்பாறை என்றும் அது திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ளது என்றும் சிலரால் கரு தப்படுகிறது. என்றாலும் இக்கருத்துக்குச் சான்றுகள் இல்லை. அந்த இடத்திலுள்ள கத்தோலிக்க கிறித்துவ சமயவாதிகள் உட்பட மணப் பாறை மக்களும், பெஸ்கி திருநெல்வேலியிலுள்ள மணப்பாரில் இறந்தார் என்பதை ஏற்றுக் கொள்கின்றனர்.

பெஸ்கி மணப்பாறைக்குச் சென்றபின் நீண்ட நாட்கள் உயிரோ டில்லை. அவர் ஏசு சங்கத்தாருடைய மடம் ஒன்றில் தங்கியிருந்து தெய் வீக நிகழ்ச்சிகளுக்கு அறிவுரை கூறுவதிலும் தன்னுடைய நூல்களைத் தெளிவாகத் திருத்தியமைப்பதிலும் தன் நேரத்தைப் போக்கியதாக அவருடைய வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் கூறுகிறார். அவர் இறந்த சரியான தேதி தெரியவில்லை. ஆனால் அவர் 1746 இல்தான் இறந்தார் என்பது உறுதி. கற்றறிந்த மேதையாகிய, ஏன் மிகப் புகழ் பெற்ற தொடக்க காலத்திய மிகப் பெரிய ஏசு சங்க வாதியாகிய பெஸ்கி அவர் களின் தொண்டு இவ்வாறு அமைதியாக முடிவெய்தியது.

மணப்பாரிலுள்ள கிறித்துவக் கோயிலின் கருவறையில் பெஸ் கியைப் புதைத்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால் கிறித்துவக் கோயில் களின் மிகப் பழமையான அக்கோயில் இன்று முழுவதும் மணலில் புதைந்துபோயிற்று. அங்கு குறைந்தது பதினைந்து அடி மணலாவது அதன்மேல் இருக்கும். அன்றியும் பெஸ்கியின் உடல் புதைக்கப்பட்ட இடத்தைக் குறிக்கக் கல்லறைக்கல் எதுவும் நடப்படவில்லை என்றும் கருவறையில் மற்ற சமயத் தொண்டர்களும் புதைக்கப்பட்டார்கள் என்றும் மக்கள் கூறுகின்றனர். மற்றும் சிலர், இரண்டாவது கோயில் எழுப்பப்பட்ட போது, பழைய கோயில் கருவறையிலிருந்து இரண்டு பகுதி எலும்புகள் எடுக்கப்பட்டன என்றும், அவை பின்னே எழுப்பப் பட்ட கோயில் கருவறையில் புதைக்கப்பட்டன என்றும், ஆனால் அது யாருடையவை என்பதைக் குறிக்க எவ்வித சான்றும் இல்லை என்றும் கூறுகின்றனர். மணப்பாரிலுள்ள மீனவ மக்கள் பெஸ்கி அவ்வளவாகப் போற்றிப் பாராட்டவில்லை என்பதை யார் ஒருவரும் உறுதியாகக் கூற முடியும் என்று நான் நினைக்கிறேன். அவர் புதுமைகள் புரியவந்த தொண்டன் என்று புகழ்பெற முயன்றிருந்தாரானால் அவரது கல்லறை கருத்தோடு பாதுகாக்கப்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை!



**பெஸ்கியின் காலத்திற்குப்பின்**

பெஸ்கியின் மறைவுக்குப் பின் சில ஆண்டுகள் கழித்து உல கெங்கிலுமுள்ள ஏசு சபைத் தொண்டர்களுக்குத் தொல்லைகள் உருவாகத் தொடங்கின. 1755இல் ஐரோப்பாவிலிருந்து ஏசு சபைத் தொண்டர் களுக்குக் கிடைத்த உதவி நின்றுவிட்டன. போப்பாண்டவர் (பாம்பல்) கட்டளைப்படி 1760 இல் கோவாவிலிருந்து ஏசு சபைத் தொண்டர்கள் விசுபனுக்கு நாடு கடத்தப்பட்டார்கள். திருநெல்வேலியிலுள்ள வடக்கன் குளம், தாழை, மணபார், வீரபாண்டியன் பட்டணம் முதலிய இடங்களில் தங்கியிருந்த ஏசு சங்கத் தொண்டர்கள் ஒருவர்பின் ஒருவராக இறக்கவே, அவர்களுடைய இடத்தைக் கோவாவிலிருந்து வந்த உள்நாட்டு மத குருக்கள் நிரப்பினர். 1733 இல் அப்போது இருந்த ஏழாம் போப் ஆண்டவர் ஏசு சபையை ஒழுங்குமுறைப்படி கலைத்துவிட்டார். 1838 இல் மார்ட்டின் பாதிரியாரும் துரங்குவட் பாதிரியாரும் ஆகிய இரண்டு ஏசு சபைக்காரர்களும் தங்கள் பழமையான சங்கத்தைத் திருநெல் வேலியில் மீண்டும் தொடங்குவதற்குப் பாளையங்கோட்டையில் வந்து இறங்கினர்.

‘திருநெல்வேலி எப்பொழுதும் மதுரை ஏசு சபைச் சங்கத்தோடு இணைக்கப்பட்டிருக்கும். 1616லிருந்து 1748 வரை ராபர்ட்-டி-நொபிலி, டிபிரிட்டே, பான்செட், ஆர்லாண்டு முதலிய குருமார்கள் பெயர்களோடு தொடர்புடையதாக இருந்த மதுரையின் வரலாறு மிக்க சுவை நிரம்பியது. பின் குறிப்பிடப்பட்ட ஆண்டில் (1748இல்) இந்தியாவின் கிழக்குப் பகுதியில் 385000 கிறித்தவர்கள் இருந்ததாகக் கணக்கிடப்பட்டது. பின்னர் மேலே கூறியதுபோல, ஏசு சபையார்களை ஒடுக்கும் முயற்சி தொடர்ந்தது. அதன் பயனாக, மதுரை சங்கம் அப்போதைக்கு கலைக்கப் பட்டது. 1831 ஆம் ஆண்டிற்குப் பின் மீட்சியும், ஏசு சபையார் மதுரை வருகையும் ஏற்பட்டன. ஏசு சபை புதியதாகத் திரும்ப தொடங்கப் பட்டது - (சுடுவர்ட்டின் திருநெல்வேலி மானுவல் - பக்கம் 62).

•

# இயல் - 10

## இங்கிலாந்து கோயிலின் சங்கங்கள்

### பகுதி - II

**ஸ்வார்ட்சு (Swartz)**

18 ஆம் நூற்றாண்டின் இறுதிக்கு முன் திருநெல்வேலியில் ஒரு சங்கம் தொடங்கப்பட்டது. ஆனால் அச்சங்கம் செய்யக் கூடிய முன்னேற்றங்களைப் பற்றிய எந்த நல்ல எண்ணத்தையும் உறுதி செய்யக் கூடிய எந்த நிகழ்ச்சியும் ஏற்படவில்லை. முதலில் திருநெல்வேலிச் சங்கம் தஞ்சாவூர் சங்கத்தின் வெறும் கிளையாகவே தோற்றுவிக்கப்பட்டது. இங்கிலாந்து கோயில் சங்கத்தின் தொடர்புடைய திருநெல்வேலித் தொண்டுகளைப் பற்றிய செய்தி முதன் முதலில், திரு. மாணவர்களுக்குரிய (அப்போஸ்தலர்கள்) எளிமையும், தெய்வத் தொண்டும் ஆர்வமும் நிரம்பியவரான புகழ் பெற்ற ஸ்வார்ட்சு நினைவுக் குறிப்புகளில் காணப்படுகிறது. இது 1771 இல் நடைபெற்றது. ஸ்வார்ட்சு அந்த ஆண்டு வெளி வந்த பத்திரிகையில், 'பாளையங்கோட்டை ஒரு கோட்டை. அது திருநெல்வேலியிலுள்ள தலைமையான நகரங்களுள் ஒன்று; நவாபுக்கு உரிமையானது; ஆனால் ஆங்கிலப் பாதுகாப்புப் படையையுடையது' என்று குறிப்பிட்டுள்ளார். அன்று அங்கு ஒருசில கிறித்துவர்கள் இருந்தார்கள் என்று செய்தியைக் குறிப்பிடுகிறார். ஸ்வார்ட்சு முதலில் 1778இல் பாளையங்கோட்டைக்குச் சென்றிருந்தபோது அந்தண விதவை ஒருவரைச் சமய மாற்றம் செய்து திரும்பினார் (எவ்வளவு முக்கியம்! - ந.ச.) 1780 இல் 40 பேர்களடங்கிய பாளையங்கோட்டை கோயில் அடியார் குழு சிறுபட்டியலின் தலைப்பின் அவளுடைய பெயர் (குளோரிண்டா) காணப்படுகிறது. விரைவில் கோட்டைக்குள் ஒரு சிறு கிறித்துவக் கோயிலைத் தானே அமைக்க முயற்சி செய்தாள். பெருந் தன்மையுடைய இரண்டு ஆங்கிலேயர் துணையினால் இச்செயலைச் செவ்வனே செய்து முடித்தாள். (தமிழா! - ந.ச.) திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கே எழுப்பப்பட்ட ஆங்கிலக் கோயில் தொடர்புடைய முதல்



கோயில் இதுவேயாகும். அக்கோயில் 1785 இல் ஸ்வார்ட்சினால் கடவுள் வழிபாட்டிற்கு உரிமையாக்கப்பட்டது. அப்போது அங்கிருந்த சிறு அடியார் குழு மேலும் வளர்ந்திருப்பதைக் கண்டு, அதன் விளைவாகத் தஞ்சாவூரிலிருந்து திறமை மிக்க மத போதகரான சத்திய நாதனை அனுப்பிக் கோயில் பொறுப்பை ஏற்கச் செய்தார்.

**ஜேனிக் (Jaenicke)**

பாளையங்கோட்டை கோயில் அடியவர் குழு வளர்ந்து கொண்டிருந்தாலும் அருகாமையிலுள்ள நாடுகளிலும் அவர்கள் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட வாய்ப்புகளையும் கண்ட ஸ்வார்ட்சு தொடக்க நிலையிலிருந்த அச்சங்கத்தை ஏற்று நடத்த ஓர் ஐரோப்பியத் தொண்டரை நியமிக்க மிக விருப்பம் கொண்டார். ஸ்வார்ட்சின் இந்த விருப்பம் 1791 இல் ஜேனிக் என்ற ஜெர்மானியத் தொண்டரைப் பாளையங்கோட்டைக்கு அனுப்பிவைத்த போது நிறைவேறியது. ஜேனிக் அவரைப் போலவே, ஜெர்மானியர். ஆனாலும் அவரைப் போன்ற ஆங்கில சமயக் குழுவின் தொண்டராக - கிறித்து சமய அறிவைப் பரப்பும் குழுவைச் சேர்ந்தவராக (கிறித்துவ சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்காக அமைக்கப்பட்ட குழுவின் - இந்தியாவின் முன்னோடியாக) இருந்தார். அவர் பாளையங்கோட்டைக்கு வந்து தன்னுடைய சமயப்பணிகளைத் தொடங்கினார். அப்பொழுது, பாளையங்கோட்டையிலும் அதைச் சார்ந்த சுற்றுப் புறங்களிலுமுள்ள உள்நாட்டுக் கிறித்தவர்களின் எண்ணிக்கை 403 ஆக உயர்ந்திருந்தது. இந்தத் தொடக்க காலத்திலேயேகூட, கல்வி புறக்கணிக்கப்படவில்லை. 1784இல் ஸ்வார்ட்சின் வருகையிலிருந்து இன்றுவரை அவர்கள் செய்திருப்பதுபோல - அடியவர் குழுவும் பள்ளிகளும் இணைந்து நடைபோட்டன. பாளையங்கோட்டை மதபோதகர் சத்திய நாதன் இப்பொழுது தஞ்சாவூரில் சமயச் சடங்குகள் நிறைவேற்றப்பட்டு, ஜேனிக்னின் வருகைக்குச் சில மாதங்களுக்கு முன்னே பாளையங்கோட்டைக்குத் திரும்பியிருந்தார். அவர் திறமைமிக்கவர்; அந்த மாவட்டத்தில் தம் தொண்டின் பெருமையை நிலைநாட்டியவர். அவர் திருநெல்வேலியில் நிலையாக இருந்த முதல் உள்நாட்டு (தேசிய) அமைச்சராவார். இவர் மூலமாகவே சாணாரிடையே கிறித்துவ இயக்கம் தொடங்கியது என்று தெரிகிறது. முன் பக்கங்களில் குறிப்பிடப்பட்ட கத்தோலிக்க கிறித்துவர் சங்கத்தைச் சேர்ந்த சேவியர், பெஸ்கி போன்ற மிகப் புகழ்வாய்ந்தவராக இல்லை என்றாலும், தன் அளவில் அக்காலத்தில் திருநெல்வேலியில் இருந்த கிறித்துவ கத்தோலிக்க சங்கத்தைச் சேர்ந்த ஏனையவர்களைக் காட்டிலும் திறமை மிக்கவராகவே விளங்கினார். ஒரு சபையின் அடித்தளத்தை அமைக்கத் தக்கவராய் எல்லாத் துறைக

ளிலும் தகுதியுடையவராய் சமயப்பற்றும், ஆர்வமும் முன்யோசனை மிகுதியும் உடையவராக அவர் விளங்கினார் என்றாலும், குறைப்பயனால் அவர் திருநெல்வேலியில் தங்கியிருந்த காலம் மிகக் குறைந்த காலமாக இருந்தது என்பதை அவருடைய இதழ் (பத்திரிகை)கள் எடுத்துக் காட்டுகின்றன. 1792 ஆம் ஆண்டு ஜனவரி மாதத் தொடக்கத்தில், பாளையங்கோட்டைக்கு வந்து சில மாதங்களே பயணம் செய்தார். திரு. டோரின், 1792 இல் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி, கிழக்கு இந்தியக் கம்பெனியின் சார்பில் நவாபின் வரிகளை வசூல் செய்யும் அலுவலராக அலுவலக ஆணையின் பேரில் அப்போது முதன் முதல் வருகை புரிந்திருந்தார். ஜேனிக், டோரின் குழு களக்காடு, பாபநாசம், இன்னும் மலைத் தொடர்ப் பகுதியிலிருந்த மற்ற இடங்கள், மலைநாட்டிற் புகுந்து செல்வது நீங்கலாக ஏனைய இடங்களைப் பாணா தீர்த்தம் அருவிவரை சென்று கண்டனர். பிப்ரவரி 12 ஆம் தேதி ஜேனிக் குற்றாலத்திற்குச் சென்றார். 25 ஆம் தேதி பாளையங்கோட்டைக்குத் திரும்பினார். மார்ச் முதல் தேதி கொடிய காட்டு மலைக்காய்ச்சலால் பீடிக்கப்பட்டார். அக்குழுவில் பலர் அதே காய்ச்சலால் பீடிக்கப்பட்டனர். அவர்களுள் பலர் இறந்தனர். ஆண்டின் அந்தக் காலத்தில் மலைப்பகுதிகளில் இருப்பது தீமையானது என்பதை அப்போது ஐரோப்பியர்கள் தெளிவாக உணர்ந்திருக்கவில்லை. இன்னும் சில ஆண்டுகளுக்குப் பிறகே (அதாவது 1800 இல்) ஜெனரல் வெல்ஷ், தென்மேற்குப் பருவக் காற்றால் மழை பெய்யும் காலத்தில்தான் அம்மலைகள் ஐரோப்பியர்களுக்கு நலனை விளைவிக்கும் என்ற சிறந்த உண்மையை எடுத்துக்காட்டினார். ஜேனிக் அக்காய்ச்சலுடன் பல மாதங்கள் போராடினார் என்றாலும் அதே சமயத்தில் மனச்சோர்வு இன்றி குறிப்பிடத்தக்க வெற்றியுடன் தன் வேலைகளையும் செய்து கொண்டிருந்தார். அந்த ஆண்டில் தூத்துக்குடி, மணப்பாறை முதலிய இடங்களுக்குச் சென்றார். இந்த இரண்டு இடங்களும் டச்சுக்காரர்களுக்குச் சொந்தமாயிருந்தன. ஒவ்வொரு இடத்திலும் நாட்டு அடியார் குழு மதபோதகரின் கண்காணிப்பில் இருந்ததைக் கண்டார். மணப்பாரிலிருந்த அடியார் குழு அக்காலத்தில் திருநெல்வேலியில் மிகுதியாக வாழ்ந்து வந்த நெசவாளிகளை முக்கியமாகக் கொண்டிருந்தது. அக்காலத்துத் தூத்துக்குடி ஆளுநராக இருந்தவர் திரு. மெக்கான். அவர் ஜேனிக்கிடம் மிகுந்த நட்பு பாராட்டியதுடன் அவருடைய திட்டங்களில் உதவி செய்ய விருப்புடையவராகவும் இருந்தார். காய்ச்சல் தொடர்ந்து, கொடுமை செய்யவே ஜேனிக், 1792 ஆம் ஆண்டின் இறுதியில் திருநெல்வேலியை விட்டு நீங்கிச் சிறிது காலம் தஞ்சாவூருக்குத் திரும்ப வேண்டுவது இன்றியமையாதது என்று உணர்ந்தார். ஓர் ஆண்டும் இரண்டு நாட்களுக்கும் பிறகு தஞ்சாவூரைச் சென்று சேர்ந்தார்.



அன்றிலிருந்து மே 1800 இல் அவர் இறந்த காலம் வரை ஜேனிக் பொதுவாக இராமநாதபுரத்திலே தங்கியிருந்தார். அங்கோ அல்லது தஞ்சாவூரிலோ அவர் ஒரு கோயிலைக் கட்டுவித்தார். அவர் உடல்நிலை ஒத்துழைத்தபோதெல்லாம் அவ்வப்போது பாளையங்கோட்டைக்குச் சென்று வந்தார். ஆனால் அவர் உள்நாட்டு அமைச்சரான சத்திய நாதருடன் தொடர்ந்து கடிதப் போக்கு வைத்துக் கொண்டிருந்தார்.

**சாணார்களைக் கிறித்துவர்களாக மதமாற்றம் செய்யத் தொடங்கல்**

அக்காலத்திய மிக முக்கிய நிகழ்ச்சி, 1797 இல் திருநெல்வேலியிலுள்ள சாணார்களிடையே பிராட்டஸ்டண்ட் கிறித்துவ இயக்கம் தொடங்கப் பெற்றதாகும். இந்த இயக்கம் நேரடியாகவோ மறைமுகமாகவோ மாவட்டத்தின் முன்னேற்றத்திற்கு மிக அதிகமாகப் பயன்பட்டது. (இந்துவின் கருத்திற்கு - ந.ச.) நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் இதையொத்த பல இயக்கங்களுக்கு இது முன்னோடியாகவும் அமைந்தது.

சுந்தரம் என்ற டேவிட் சாணாரில் முதல் சமய போதகராக இருந்தது நீண்ட நாட்களாக அறியப்பட்ட செய்தியாகும். ஆனால் அவர் முதல் சாணார் பிராட்டஸ்டண்டு கிறித்துவர் என்றும், அவர் மூலமாகவே திருநெல்வேலி சாணார்களிடையே கிறித்துவம் புகுத்தப்பட்டது என்றும் நான் உறுதிப்படுத்திக் கொண்டேன். டேவிடினுடைய பிறந்த ஊர் கள்ளங்குடி. அது சாத்தான்குளத்தருகே உள்ள ஒரு சிறிய கிராமம். ஆனால் இளமையில் அவர் தஞ்சாவூர் வரையில் சுற்றி வந்திருக்கிறார். அங்கு அவர் கிறிஸ்தவரானார். திரு. கால்காப் என்பவரால் புனித நீராட்டு பெற்று அறிவுரையும் பெற்றார். 1796 இல் சத்தியநாதன் தனக்கு ஒரு உதவியாளர் தேவை என்று விண்ணப்பித்த காரணத்தால் ஸ்வார்ட்ஸ், டேவிட் அந்த ஊர் அருகாமையைச் சேர்ந்தவர் என்று அறிந்து, அவரை மதபோதகராகப் பாளையங்கோட்டைக்கு அனுப்பி வைத்தார். நான் இறந்து விட்டதாக எண்ணி வருந்தி மறந்துவிட்ட உறவினரைக் காணவும், அவர்களுக்குத் தான் கண்ட கேட்ட வியத்தகு நிகழ்ச்சிகளை எல்லாம் சொல்லிவிட்டு வரவும் டேவிட் சென்ற போது ஜேனிக் பாளையங்கோட்டையிலிருந்தார். அவர் பாளையங்கோட்டைக்குத் திரும்பியபோது தன்னுடன் சிறுவனாகிய மருமகன் ஒருவனை அழைத்து வந்தார். அவனுக்கு ஜேனிக் மதபோதனை செய்தார். இதற்குப் பிறகு டேவிட் அவரது பிறந்த ஊருக்கு அருகாமையிலிருந்த கிராமமாகிய விஜயராமாபுரத்திற்கு அவர் உறவினிடையேயும் சுற்றுச் சூழலில் இருப்பவருக்கும் தொண்டு (இந்துவின் கருத்திற்கு - ந.ச.) செய்யும்படி அனுப்பப்பட்டார். அவ்வப்போது சில தஞ்சாவூர் மதபோதகர்களும்

உதவி செய்து வந்தனர். 1797 மார்ச்சு மாதத்தில் சத்தியநாதனே இந்த இடத்திற்குச் சென்ற போது நான்கு சாணார் குடும்பத்தினர் முறையாக கிறித்துவ மதபோதனை கேட்டு மதபோதகராகிய டேவிட்டின் பாதுகாப்பி லேயே இருந்தனர்.

அடுத்து அவர் அங்கு சென்ற போது, அதே வகுப்பைச் சேர்ந்த மதமாற்றம் பெற்றவர்கள் இன்று கடாட்சபுரம் என்று அழைக்கப்படு மிடத்தில் புனித நீராட்டுப் பெற்றனர். புனித நீராட்டு பெற்ற முதல் சாணார்கள் அவர்களே. அதே ஆண்டில் விஜயராமாபுர மக்களும் புனித நீராட்டுப் பெற்றனர். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், முதல் கிறித்துவ கிராமம் திருநெல்வேலி சபை சார்பில் தோற்றுவிக்கப்பட்டது. விஜயரா மாபுரத்திலுள்ள புதிய கிறித்தவர்கள் அவர்களுடைய கிறித்துவரல்லாத அண்டை அயலாரால் மிகுந்த தொல்லைகளுக்கு உட்பட்டார்கள். அவர்களுடைய சிறு வழிபடும் வீடு இரண்டு முறை அடித்தெறியப் பட்டன. ஒரு மரத்தடியில் கூடி வழிபாடு செய்ய அவர்கள் அனுமதிக்கப் பட்டனர். நாளடைவில் அவ்வாறு இரக்கமின்றி நடத்தப்பட்ட அந்த கிரா மத்தை விட்டே நீங்கிச் செல்ல அவர்கள் முடிவு எடுத்தனர். (இந்துக் களின் சகிப்புத் தன்மை! - ந.ச.) சில மைல்கள் தூரத்தில் அடையாள் கிராமத்தருகே ஒரு சிறு துண்டு நிலத்தை டேவிட் அவர்களுக்காக வாங்கினார். பாளையங்கோட்டையிலுள்ள ஒரு காப்டன் எவரெட் அவர்களிடமிருந்து பெற்ற தனிப்பெரும் உதவியுடன் அங்கு ஒரு கிணற்றை வெட்டினார். சிறு கோவில் ஒன்றைக் கட்டினார். அந்த நிலம் திரு. ஜேனிக் அவர்களின் பெயரில் 1799 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் வாங்கப்பட்டது. இந்தச் சிறிய குடியிருப்பு திருநெல்வேலியில் ஒரு கிறித்துவக் கிராமம் என்றழைக்கும்படியான முதல் இடமாக அமைந்ததால், அந்த இடம் 'முதல்' 'நகரம்' என்ற பொருளில் 'முதலூர்' என்ற பெயர் பெற்றது (எவ்வளவரிய செய்தி - ந.ச.). இந்த நூற்றாண்டின் தொடக் கத்தில் இந்த கிராமத்தின் மக்கள் தொகை இருபத்தெட்டு பேர்களெனக் கணக்கிடப்பட்டது. இப்பொழுது அது 1200க்கும் மேலாக உள்ளது. (மக்கள் பெருக்கக் கணக்குப் பயன்படும் - ந.ச.) திருநெல்வேலி சாணார் களிடையே கிறித்துவ மதத்தைப் பரப்ப ஆரம்பித்த இயக்கத்தைப் பற்றிய சுவையான செய்திகளும், முதலூரை நிறுவியதும் இன்று நினைவுக்கு அப்பாற்பட்ட செய்திகளாக ஆகிவிட்டன. ஜேனிக்கிற்குச் சத்தியநாதனும் மற்றவர்களும் எழுதிய, தஞ்சாவூரிலிருந்து கிடைத்த தமிழ்க் கடிதக் கட்டிலிருந்து நான் இவற்றைக் கண்டுபிடித்தேன். அங்கு நடைபெற்ற ஒவ்வொரு செய்தியையும் அவருக்கு சத்தியநாதன் ஒழுங் காகத் தெரிவித்துக் கொண்டிருக்கின்றார். சத்தியநாதனின் கடிதங்களில் அவருடைய பல கேள்விகளுக்கான விடைகள் நிரம்பியிருப்பதைக்



காணும் போது அவருடைய உடல் அங்கு இல்லையே தவிர உள்ளம் அங்கு நிலைத்திருக்கின்றது என்பதைக் காட்டுவதாகத் தெரிகிறது. இந்தப் புதிய பணித்துறையை அவர் தொலைவிலிருந்து காண்பதற்கே வாய்ப்புகள் இருந்தன எனினும் அன்றைக்கு அது அவர்களுடைய சிறு நிகழ்ச்சிகள் நிறைந்த நாளாகக் கருதப்பட்டாலும், தெற்கே சென்று தன்னுடைய தொண்டுகளை ஆரம்பித்து அவர் வழிகாட்டியதும், அவர் சென்று அறிமுகமான மாவட்டங்கள் பலவற்றுள்ளும் கிறித்துவம் தழைத் தோங்கக் கூடிய மிகுந்த வாய்ப்புகளுடைய இடம் திருநெல்வேலியே என்ற செய்தியும் இன்று உறுதிப்படுத்தப்பட்டதைக் கண்டு அவர் மகிழ்ந்திருக்க வேண்டும்.

1816லிருந்து 1820 வரை பாளையங்கோட்டை குருவாக இருந்த ரெவரண்டு ஜே. ஹோ என்பவரின் முறையீடுகளாலும் முயற்சிகளாலும் அனுப்பப்பட்ட சுவிசேஷத்தை (Gembel) பரப்புவதற்காக வந்த ஏசு சபைத் தொண்டர்களின் வரலாறும், திருநெல்வேலியிலுள்ள ஏசு சபை கோயிலாரால் செய்யப்பட்ட வாய்ப்புகளாலும் பல ஆண்டுகள் புறக் கணிக்கப்பட்ட ஜேனிக் சபை மீண்டும் புதுப்பிக்கப்பட்டது.

ஆனால் வரலாற்றின் இப்பகுதி 1801 இல் மாநிலம் ஆங்கிலே யரிடம் ஒப்படைக்கப்பட்ட தேதிக்கு மிகப் பின்னால் அமைகிறது. ஆனால் அந்தத் தேதியில் இந்த ஆண்டுக் குறிப்புகள் முடிவடைகின்றன.

இப்பொருள் பற்றிக் கூடுதலான செய்திகள் இவ்வாசிரியரின் 'திருநெல்வேலி சபையின் முன் வரலாறு பற்றிய ஆவணங்கள்' என்ற நூலில் காணப்படுகின்றன.

•

நான்காவது கல்வெட்டில் குறிக்கப்பட்டிருக்கும் மன்னார் கோயில், அம்பா சமுத்திரம் வட்டத்திலுள்ள ஒரு சிறு கிராமம்.

சேர்மாதேவி - சரியாக சேரன் - மகா - தேவி மேற்கு அல்லது மலையாள மாநிலத்தின் மன்னனாகிய சேரனால் வணங்கப்பெற்ற பார்வதியாகிய மகாதேவியின் கோயிலாகும். சேர மன்னன் சிற்சில சமயங்களில் அங்கு தங்கியதாக திருவாங்கூர் வரலாற்று ஆசிரியரால் சொல்லப் பட்டுள்ளது.

17ம் நூற்றாண்டுவரை சேரமாதேவி, தென்காசி, களக்காடு, திரிகனன் குடி, வள்ளியூர் முதலிய இடங்களில் திருவாங்கூர் மன்னர் தங்கியிருந்தார், என்ற செய்தியை ஆவணங்களும் கல்வெட்டுக்களும் தெளிவாகத் தெரிவிக்கின்றன - பக்கம் 34.

1382லிருந்து 1444 வரை, 62 ஆண்டுகளாக அரசு செலுத்தி வந்த சேர உதயமார்த்தாண்ட வர்மனின் ஆட்சியைப் பற்றிக் குறிப் பிடும் போது வரலாற்று ஆசிரியர் கூறுகிறார்:

'இந்த மன்னனது ஆட்சிக் காலத்தில் திருநெல்வேலி பக்கத்திலுள்ள தென் கிழக்குத் திருவாங்கூர் உடைமைகளெல்லாம் திரும்பக் கைப் பற்றப்பட்டன. மன்னர் வள்ளியூரிலும் சேரன் மாதேவியிலும் அடிக்கடி தங்கியிருந்தார்.

இந்த அரசனின் அமைதியும் போர் வெறுப்பும் உடைய தன்மையின் விளைவாக கிழக்கிலுள்ள, இவருக்கு அடங்கிய சில தலைவர்கள் கீழ்ப் படியாதிருந்தனர். எனவே தொடர்ந்து போராட்டம் இருந்து வந்தது. பின்னர் மன்னர் திருவனந்தபுரத்தில் தங்கியிருந்த போது ரெட்டியாபுரம் தலைவன் வள்ளியூரை முற்றுகையிட்டான். மன்னனின் மருமகன் இப் போரில் தோற்கடிக்கப்பட்டான். தோல்வியின் இழிவைப் பொறாத மரு மகன் தற்கொலை செய்து கொண்டான்.

'இந்த குலசேகரப் பெருமாள் அளித்த பல மானியங்கள் இந்த இடங்களில் உள்ளன. அவற்றுள் சிலவற்றை முன்பே பார்த்தோம். இது சேரமாதேவி மன்னனுக்கு விருப்புடைய இடம். அதன் பயனாக இம்ம ன்னன் சேர உதயமார்த்தாண்ட வர்மன் என்று அழைக்கப்பட்டான்.

'அவனுடைய ஆட்சிக்காலத்தின் இறுதியில், பாண்டிய மாநிலத்திலுள்ள தலைவர்களின் முறைகேடான செயல்களினால், அரச குடும்பத்தினர் எளயடத்துநாடு கொட்டாரக் கரைக்கு மாற்றப்பட்டனர். வள்ளியூரையும் கிழக்கிலுள்ள ஏனைய உடைமைகளையும் ஆட்சி செய்ய ஓர் ஆளுநர் நியமிக்கப்பட்டார்.



'இந்த அரசர் நீண்ட காலம் வாழ்ந்து 78 ஆம் வயதில் 619 மலையாளம் ஆண்டில் (கி.பி.1444) இறந்தார்' - பக். 95

18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திருவாங்கூர் ஆண்டுக் குறிப்புகள் வரலாற்றுப் புகழ் பெற்றன. அதற்கு முன் வரை, அது ஏறத் தாழக் கற்பனைக் குறிப்புகளாயிருந்தன என்பது தெளிவாகின்றது.

'1458லிருந்து 1680 ஆம் ஆண்டிற்கிடையே, சுமார் இரண்டேகால் நூற்றாண்டுவரை, அரசு புரிந்த மன்னர்களின் பெயர்ப்பட்டியல், அரசுரிமை பெற்ற தேதிகள், அவர்களது ஆட்சிக்காலம் - இவைகள் தவிர அந்த மன்னர்களைப் பற்றிய விளக்கமான குறிப்புகள் எதுவும் காணப் படவில்லை.

**அக்காலத்தில் திருச்சிராப்பள்ளியில் தலைமையிடத்தை அமை த்திருந்த மதுரை நாயக்கரிடம் உதவிக்காக விண்ணப்பித்தல்**

'எட்டு வீட்டில் பிள்ளைமாரும் மாதம்பிமாரும் சேர்ந்து தனது மரு மகனுக்குச் செய்த தொல்லைகளையும் துன்பங்களையும் மன்னன் கூர்ந்து கவனித்து வந்தார். அவர்களுடைய உண்மையற்ற தன்மைக்கும், கலகம் செய்கின்ற நடத்தைக்கும் தண்டிக்க வேண்டுமென உறுதி கொண்டார்.

அரசன், அவனுடைய அறிவுமிக்க மருகனுடன் கலந்து மாநில அதிகாரிகள் சிலருடன் மலையாளம் ஆண்டு 901 (கி.பி. 1726ல்) திருச் சிக்குப் புறப்பட்டுச் சென்றார். மதுரை அரசினிடம் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு அந்த அரசிடம் விடுபட்டிருந்த தொடர்பைப் புதுப் பித்து அதை உறுதிப்படுத்த ஒரு குறிப்பிட்ட தொகையை ஆண்டு தோறும் செலுத்துவதாகவும் கூறி அவர்களுடைய உதவியைப் பெற்றான். அதே சமயத்தில் மாதம்பிமாரையும், மற்ற கலகக்காரத் தலைவர் களையும் தண்டித்து புத்தி புகட்ட ஒரு தகுதிவாய்ந்த படையை அனுப்பும் படி விண்ணப்பித்தார். சிறிது விவாதத்திற்கும், அடிப்படை விசாரணைகளுக்கும் பிறகு, மு. வெங்கடபதி நாயக்கன் தலைமையில் ஓராயிரம் குதிரை வீரரடங்கிய குதிரைப்படையையும் இராகளவியன், சுப்ப ஐயன், அவர்களது குழு உட்பட மற்றவர்களை 50 சிரஸ்தார்க் (சர்தார்கள் (அ) தலைவர்கள்) பொறுப்பில் அனுப்பப்பட்ட படையைப் பெறுவதில் மன்னன் வெற்றி கண்டான்.

திருவாங்கூரில் இப்படை வந்து சேர்ந்தவுடன் மாதம்பிமார் அனை வரும் மற்ற மாறுபாடு கொண்ட படைத் தலைவர்களும் கிளர்ச்சிக்காரர் களும் ஓடிவிட்டனர். அதன் விளைவாக படைக்கு வேலையில்லாது போயிற்று எனினும் அப்படை கிளர்ச்சிக்காரர்களை அச்சுறுத்துவதற்காக

நிறுத்தி வைக்கப்பட்டது. (வரலாறு பக். 109).

காலஞ்சென்ற இராமவர்ம மன்னன் (மலையாளம் ஆண்டு 901இல்) பாண்டியரது (நாயகர்) தலைநகருக்குச் (திருச்சிராப்பள்ளி) செல்லும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். அங்கு பாண்டிய அரசுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு, அதன் வாயிலாக ரூ.3,000 மதிப்புள்ள திறைப் பணத்தை ஆண்டுதோறும் செலுத்துவதாக உறுதி கூறி, குழப்பமிக்க படைத் தலைவர்களையும் பிரபுக்க (robles)ளையும் ஒடுக்குவதற்காக ஆயிரம் குதிரைவீரரும் இரண்டாயிரம் காலாட் படையும் கொண்ட படையை ஆளுநரிடமிருந்து அவர் பெற்றார்.

### திருச்சிராப்பள்ளி துணைப்படை

இத்துணைப்படைக்குத் தேவையான ஊதியமும், ஆண்டுத் திறைப் பணமும், சில மாதங்களாகச் செலுத்தப்படாதிருந்தது. மகா ராஜா அரசுரிமை ஏற்றபொழுது படைக்கான ஊதியத்தையும் திறைப் பணத்தையும் கேட்டபோது தனது தளவாய் ஆறுமுகப் பிள்ளையைக் கேட்குமாறு பணித்தார். தளவாயோ, பணம் செலுத்தக் காலந்தாழ்தின மையால் படைகள் முற்றுகையிட்டுத் திருக்கண்ணங்குடிக்கு அகற்றப் பட்டார். அதற்குப் பிறகு அவர் கோட்டாறு வணிகர்கள், மற்றவர்களிடம் பணத்தைக் கடனாகப் பெற்று நெருங்கிவந்த தேவைகளின் (demands) பெரும்பகுதியைச் சரிகட்டினார். எனினும் தளவாய் திருக் கண்ணங்குடியிலேயே படைகளால் நிறுத்தி வைக்கப்பட்டார்.

இவ்வேளையில் அரசர், தம் படைத்துறைத் தலைவராகிய குமார சுவாமிப் பிள்ளையையும், அவருடைய உதவியாளர் தாணுப்பிள்ளையை யும் அழைத்து மறவரடங்கிய படையையும் சில நூறு குதிரைகளையும் தயாரிக்கவும், கடக்கரை, மந்தரம்புத்தூர், அரம்பாலி, கன்னியாகுமரி இவற்றிற்கிடையே வேலியாக மண்சுவர்களை எழுப்பவும், நுழைவதற்குச் சிறப்பான வாயில்களைக் கட்டி, மறவர் கூட்டங்களையும், குதிரை வீரர் களையும் கொண்டு காவல்புரியும் படியாகவும் ஆணையிட்டார். சில மாத காலத்தில் இந்தத் திட்டங்கள் திறம்படச் செய்யப் பட்டன. திரு வாங்கூர் வெளிநாட்டார் படையெடுப்பிலிருந்து பாதுகாக்கப் பட்டது.

### மறவர் குதிரைப்படை

பிறகு குமாரசாமிப்பிள்ளை ஒரு மறவர் படையுடன் திருக் கண்ணக்குடிக்குச் சென்று தளவாயை விடுத்து வரும்படி பேரரசர் கட்டளையிட்டார். அந்தத் துணிவுமிக்க அலுவலரும், அவ்வேலையை ஊக்கத்துடன் உடனடியாகச் செய்து முடித்தார். பேரரசர் அவர் செய்கை யால் மனநிறைவு பெற்றார். ஏனெனில் இந்தச் செயல் (oxpolit) மூல



மாகத் துன்பம் நிறைந்த இடர்பாடான நிலையிலிருந்து தளவாயை விடு வித்ததன்றித் தன்னை அழுத்தி வந்த கவலையையும் பாதுகாப்புச் சுமையையும் நீக்கிக் கொண்டார்.

பின்னர் பேரரசர் திருச்சிராப்பள்ளிப் .படையைப் பாதுகாப்பாக நீக்கி விடலாமென எண்ணி அந்த நகரத்திற்கு அணிவகுத்துச் செல்ல ஆணையிட்டான். அரசர் பாண்டிய அரசுக்கு அவருடைய முடிவைத் தெரிவித்து, முன்னாள் அரசருடன் செய்து கொண்ட உடன்படிக்கையின் நிபந்தனையிலிருந்து அரசரை விடுவிக்க வேண்டுமென்று ஆளுநரை வேண்டினார்.

'மானியக்காரத் தலைவர்களும் (fenadatory chiefs) பிரபுக் களும், திருச்சிராப்பள்ளி துணைப்படை திரும்பியதும் மறுபடியும் கலகம் செய்யத் தொடங்கினர். அவர்கள் எப்பொழுதும் விடுதலையை வேண்டி இருந்தார்களாதலால் முன்போல அவர்கள் இணைந்து கூட்டுக் கழக இணைப்பு ஒன்றை நிறுவினர். அதில் முன்னாள் அரசருடைய இரண்டு மகன்களும், குஞ்சுத் தம்பிகள் எனப் பெயர் பெற்ற பாபுத்தம்பி, ராமன் தம்பி இருவரும் சேர்ந்தனர். குஞ்சுத்தம்பிகள் அவர்கள் தந்தை காலத்தில் பிரபுக்களிடையே உயர்ந்த நிலையில் இருந்தனர்; அன்று வளமிக்கராய் வாழ்ந்து வந்தனர். ஆனால் அவர்கள் இப்பொழுது நாட்டின் சாதாரண பிரபுக்களுடைய நிலைக்கு இறங்கிவிட்டனர். தங்கள் வீழ்ச்சிக்காக மிகவும் வருந்தினர். கூட்டணி அவர்களுக்கு இறங்கி அரசு ஆணையாளரை அடக்க அவர்களைத் தகுந்த கருவிகள் என்று எண்ணி, தந்தையின் அரியணையை அடைய உரிமைக்குரலெழுப்பும்படி அவர்களைத் தூண்டினர். அவர்களுள் ஒருவராகிய பாபுத்தம்பி போதுமான வசதிக ளைப் பெற்றிருந்தாராகையால், மலையாளம் ஆண்டு 905-ல் (கி.பி. 1730)ல் திருச்சியை நோக்கிச் சென்றார். அங்கு பாண்டியனுடைய ஆளுநரிடம் தன்னுடைய கற்பனைத் துன்பங்களை எடுத்துக் கூறி, மார்த்தாண்ட வர்மன் வலுவில் முறைமையற்று அரசு பெற்றதால் அவ னுடைய அரசு அவருக்குப் பெரிய அநீதி இழைத்துள்ளது என்று கூறி னான். அத்தலைவருடன் தான் அந்த அரசைப் பெற உதவுவதற்காக சில நிபந்தனைகள் விதித்து உடன் படிக்கை செய்து கொண்டான்; தனக்கு வர வேண்டிய திறைப்பணம் வராததாலும், மார்த்தாண்ட வர்ம மகாராஜா துணைப்படையைத் திருப்பியனுப்பி விட்டமையாலும் கோபமடைந்தி ருந்த கவர்னர், பாபு தம்பியின் தவறான முறையீடுகளுக்கு விருப்புடன் செவி சாய்ந்தார்.

கவர்னர் தன்னுடைய பிரதிநிதிகளில் (agent) ஒருவரான அழகப்ப முதலியாரைப் போதுமான எண்ணிக்கையுடைய மனிதருடன் சென்று

தம்பியினுடைய உரிமைகளின் உண்மையினை விசாரிக்கச் செய்தார். இதையறிந்த மகாராஜா மாநில செயலர் இராமஐயனையும் அவரது உதவியாளர் நாராயண ஐயனையும் முதலியாரிடம் அனுப்பி வைத்தார். பாபுத் தம்பியின் உரிமைகள் பற்றிய மோசத்தினையும் கற்பனைப் பண்புகளையும் மெய்ப்பித்தலுக்கான தக்க ஆவணச் சான்று களையும் அவர்களிடம் கொடுத்தனுப்பினார்.

தனது போலியான உரிமைகளை நிலைநாட்டத்தக்க ஆவணச் சான்றுகளைக் காட்ட இயலாது பாபுத்தம்பி திணறியபோது இராமஐயன் தனது பெரியப்பா (uncle)வின் அரசுரிமையைப் பெற மகாராஜாவுக் குள்ள உரிமைகளை முழுமையாக நிரூபித்தான். முதலியார் பாபுத் தம்பியிடம் மிகக் கோபம் கொண்டு, உடனேயே அவனுடைய பொய் யான குற்றச்சாட்டை ஏற்க மறுத்துவிட்டார். நாட்டின் வழக்கப்படி அவனுடைய அரசனிடம் அவன் உண்மையுள்ளவனாகவும் அடங்கிய வனாகவும் இருக்க வேண்டுமென்று எச்சரிக்கப்பட்டார்.

தன்னுடைய படைத்தலைவர்களுக்கு புதுப்பிக்கப்பட்ட கலகம் செய்கின்ற உணர்வைப் பற்றி மகாராஜா முதலியாரிடம் கூறி, அவருடைய படையில் பாதியை அரசருக்கு அனுப்ப வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். அரசனின் இந்த வேண்டுகோளை முதலியார் ஏற்றுக் கொண்டு, பரிசுப் பொருள் சுமைகளோடு திருச்சிராப்பள்ளிக்குத் திரும்பினார்.

மகாராசா குஞ்சுத்தம்பிகள், படைத்தலைவர்கள், பிரபுக்களுடைய ஒழுக்கத்தினால் கோபமடைந்திருந்தாலும், இந்தச் செய்தியில் கருத் தின்றி யிருப்பதுபோல் காட்டிக் கொண்டார். அரசர், திருச்சிராப்பள்ளிப் படையின் வலிமையான உதவி பெற்றிருப்பதால் தன்னுடைய சொந்த மறவர் படைகளுடன், அவருடைய எதிரிகளின் சூழ்ச்சிகளால் அவருடைய அரசின் அமைதி குலைவதற்கு முன்பு சில இன்றியமை யாத அரசியல் அலுவல்களில் அவருடைய சிந்தனையைச் செலுத்தினார்.
- திருவாங்கூர் வரலாறு பக். 115-118.

**திருநெல்வேலி மறவர்களிடமிருந்து பெற்ற உதவி**
**திருநெல்வேலி பாளையக்காரரின் உதவி**

அரசின் மறைவை அறிந்திருந்த போதிலும், சாயன்குளம் படையின் ஆர்வம் முழுதும் சிதறவில்லை. ஏனெனில் இறந்து பட்ட அரசரின் இளையதம்பி அரசு பெற்றதாலும், அவர் உறுதியும், காலம் சென்ற அண்ணனைவிட வீரமும் வாய்ந்தவராகலின், போர் இரட்டிப்பு வலிமை யுடன் தொடர்ந்தது. மகாராசா கொய்லானுக்குச் சென்றபோது தனது



உண்மையான வாரிசையும் அழைத்துச் சென்றமையால் அவ்வாரிசு திரு வாங்கூர் படைக்குப் புதிய வலிமையைப் புகட்டியது. காயன் குளத்துப் படையுடன் போரிட ஒரு சிறப்புப் படை தயாரிக்கப்பட்டது. செயலர் ராம ஐயன் போர்க்களத்திலிருந்த படை போதுமான படைபலம் பெற்றாலன்றி காயன்குளப் படையை எதிர்த்து வெற்றியுடன் போராட இயலாதென்று, திருநெல்வேலிக்குச் சென்றார். பொன்னம் பாண்டியத் தேவர் தலைமை யில் ஒரு மறவர் படையையும், சில பாளையப்பட்டுக் காரரிடமிருந்து (பாளையக்காரர்), ஆயிரம் ஆயுதமணிந்த சிப்பாய்களையும் (mounted sipgs) பெற்று இப்புதிய துணைப்படையைக் கோட்டக்கரை வழியாக மலைப்பாதையில் நடத்திச் சென்றார்.

தளவாயும் தானாதிபதியுமடங்கிய உயர் அதிகாரிகளிடம் கலந் தாலோசித்த பிறகு, இராமஐயன் படையின் தலைமைப் பதவியை ஏற்றான். மறுநாள் நடந்த போரில் அவர் குறிப்பிடத்தக்க வெற்றி பெற்றுப் புகழ்பெற்றார். காயன் குளம்படை முதல் தடவையாகப் போரில் தோல் வியுற்றது. ஆயினும் போர் தொடர்ந்தது. இராமஐயனின் படை சிறுகச் சிறுக வெற்றி பெறத் தொடங்கி, ஒவ்வொரு நாளும் காயன்குளம் எல்லைக்குள் முன்னேறிக் கொண்டிருந்தது.

**திருநெல்வேலியில் ஏற்பட்ட இணைப்புகள் (annexations).**

மலையாளம் ஆண்டு 909 (கி.பி. 1734) இல் மகாராசா, திருநெல் வேலிப் பக்கத்திலுள்ள களக்காடு, கோர்க்குடி, வள்ளியூர் ஆகிய இடங் களும், திருவாங்கூரின் வட எல்லையில் அமைந்துள்ள கோட்டாரக்கரை, பதனபுரம் முதலிய இடங்களையும் இணைத்தார். அந்த எல்லைகளுக்குப் பொறுப்பாயிருந்த வீர கேரளவர்மா மன்னன், திருவாங்கூர் மன்னருக்கு உறவினர். அவர் ஓர் இளவரசியை அரசுரிமை பெற வாரிசாக விட்டு மறைந்தார். மாநிலத்தின் நிர்வாகம், மிக்க தீவினைக்கஞ்சாத சர்வாதிகாரி காரியக்காரரால் நடத்தப்பட்டு வந்தது. நாட்டில் அரசியல் குழப்பங்கள் ஏற்பட்டன. அந்த அமைச்சரை மகாராசா திருவனந்தபுரத்திற்கு வர வழைத்து, திறனற்ற நிர்வாகத்திற்குப் பல சான்றுகளை எடுத்துக்காட்டி, இழிவான நிலையில் நாட்டைவிட்டு விரட்டி விட்டார். நாட்டிற்கு உகந்த நல்ல பொறுப்புடைய தகுதிவாய்ந்த சர்வாதிகாரரை நியமித்தார். மகாராசா சிற்றரசைத் தானே ஏற்று இராணியை அழைத்து திருவனந்த புரத்திற்கு வந்து வாழ வேண்டுமென்றும் இல்லாவிடில் அவனுடைய சொந்த இடமான கொட்டாரக்கரையில் அவள் விருப்பப்படி தங்கி யிருக்கலாமென்றும் கூறினார். ராணி இரண்டாவது வழியை விரும்பி நின்றனள். பக். - 129.

## சந்தா சாகிபு பாடாசாகிபுக்களின் இடையீடு

இந்தச் சமயத்தில் ஆற்காடு நவாப் தோஸ்த் அலிகானின் உறவினர்களாகிய சந்தாசாகிபு, பாடாசாகிபு, தலைமையில் வலிமைமிக்க பல மறவர் கூட்டம் ஆரம்பாலி வாயில் வழியாகத் திருவாங்கூர் எல்லைக்குள் நுழைந்தனர். அவர்கள் நவாபினுடைய மகனுக்கு சிற்றரசு உரிமையைத் தேடுவதற்காக அலைந்து கொண்டிருக்கவும் உள்நாட்டு இளவரசர்களுடைய நாட்டில் தங்களுக்காகக் கொள்ளையிடவும் அனுமதிக்கப் பட்டிருந்தனர். அவர்கள் நாகர்கோவில், சுசீந்திரம், கோட்டாறிலுள்ள செல்வ நகரங்கள் யாவற்றையும் தங்கள் வசப்படுத்தினர். சுசீந்திரத்திலுள்ள கோயில் சிலைகளைக் கொள்ளை அடித்தனர். பெரிய தேரை எரித்தனர். கோயிலிலுள்ள பல சிலைகளைச் சிதைத்தனர். பொதுவாக மொகலாயப் படைவீரர்கள் கடைப்பிடிக்கும் விருப்பமான முறைகளாகிய பல கொடுஞ்செயல்களையும், அழிவுச் செயல்களையும் செய்தனர். தளவாய் இராமய்யன் ஒரு படையுடன் சென்று திருவாங்கூரை விட்டு மறவர்களை ஓட்ட வேண்டுமென்று கட்டளையிடப்பட்டார். ஆனால் நேரில் அப்படையைச் சந்தித்த போது, அவர்கள் குதிரைப்படை மிக்க வலிமையுடையதாயிருந்ததையும் கண்டு, தன்னுடைய சொந்தப் படை, முசல்மான்களுடைய படைக்கு ஈடாகாது என்று கண்டார். எனினும் தளவாய் வஞ்சினம் கூறிப் போரைத் தொடங்கினான். ஆனால் அவருடைய முயற்சிகளெல்லாம் வழக்கமான வெற்றியைப் பெற்றுத் தரவில்லை. தளவாய் எதிரியின் குறிக்கோள் முக்கியமாக பணம் பறிப்பதற்கேயென்று உணரக் காரணங்களை அறிந்தார். இறுதியாக அவர் தன்னுடைய படைக்கு எதிர்ப்பு அளிக்காமலேயே எதிரியின்படை பின்வாங்கும்படி செய்தார். பக்.-138.

## நவாபுடன் (கைகலப்பு) தாக்குதல்

வட திருவாங்கூரில் போர் தொடங்கியிருந்த போது மதுரை திருச்சிராப்பள்ளி முதலிய ஊர்கள் உட்படப் பாண்டிய மாநிலங்களின் அரசியலில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. இறுதியாக அரசு கர்நாடக நவாபின் கையகப்பட்டது. நீண்ட நாட்களாக மகாராசாவின் கவனம் அவருடைய அரசு உள்நாட்டு நிர்வாகத்திலும் வடக்கே எழுந்த கலகக்காரர்களை அடக்கி வைப்பதிலும் திரும்பியிருந்தமையால் வள்ளியூர், களக்காடு முதலிய இடங்கள் உட்பட கிழக்குப் பகுதிகளைக் காப்பதிலும் நிர்வகிப்பதிலும் எடுக்க வேண்டிய முயற்சிகளைக் கைவிட்டுவிட்டார். திருச்சிராப்பள்ளியிலிருந்த நவாபின் கவர்னர் இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக் கொண்டு, மதுரை மாநிலத்திற்குச் செல்லும் அந்த வழியிலமைந்த



நாடுகளைச் சேர்த்துக் கொண்டார். இவ்வாறாக மகாராசா நீண்ட நாட்கள் அந்த இடங்களை அடைய இயலாது போயிற்று.

ம.ஆ. 927(கி.பி. 1752) திருச்சிராப்பள்ளியில் இருந்த நவாபின் வைசிராயான மூடிமையா வலிமைபெற்று சுதந்திரப் படைத் தலைவனாகத் தன்னை ஆக்கிக் கொண்டான். அவன் மிக்க பேராசைக்காரனாக இருந்தமையால் கிராமங்களையும் எல்லைகளையும் போதுமான அளவு பொருள் பெற்றுக் கொண்டு விற்றுவிட்டான். மகாராசா மூடிமையாவின் இச்செயலை அறிந்து தளவாய் இராமஜயனை அவன்வந்து தங்கியிருந்த திருநெல்வேலிக்கு அனுப்பினார். தளவாய் கிழக்கேயிருந்த எல்லைகளில் மகாராஜாவுக்கு இருந்த உரிமைகளை எடுத்துக் கூறினார். கன்னியா குமரிக்கும் களக்காட்டிற்கும் இடையே வள்ளியூர் உட்பட இருந்த சுமார் 30 மைல் பரப்புள்ள இந்த இடத்தை போதுமான மிகுந்த பொருள் கொடுத்து வாங்கிக் கொண்டார். இவ்வாறு திருவாங்கூரார் வாங்கிய மாநிலங்களைக் காக்கத் தளவாய் இராமய்யன் 2000 திருவிதாங்கூர் மகாராஜாவின் படைகளைக் களக்காட்டிலே நிறுத்திவிட்டு திருவனந்தபுரத்திற்குத் திரும்பினார்.

ம.ஆ. 930 (கி.பி.1755) இல் கர்நாடக நவாபான முகமது அலி தனக்குக் கீழ்ப்படியாமலும் தானே பாண்டிய அரசுக்குத் தனித்தலைவன் என்றும் விளம்பரம் செய்து கொண்டிருந்த மூடிமையாவின் உரிமைகளைப் பெற விரும்பினான். எனவே நவாபு தன்னுடைய படைத் தலைவன் மக்புசுகானை அனுப்பி மூடிமையாவை ஒதுக்கிவிட்டான். மக்புசுகானுடன் ஒரு சிறு படை அனுப்பிச் சென்னையிலுள்ள நவாபின் நட்பினராகிய - உறவு நாட்டவராகிய ஆங்கிலேயரிடம், தன் வேலையைச் செய்து முடிக்கவும், அங்குள்ள மக்களை அடிமைப்படுத்துவதற்கும் உதவி செய்ய ஒரு படைப்பகுதியை அனுப்புமாறு கேட்டுக் கொண்டான். மக்புசுகானுக்கு உதவி செய்யும் காரணத்தைக் காட்டி கர்னல் ஹிரான் 500 ஐரோப்பியர்கள் 2000 சுதேசிகளுடன் திருச்சிக்கு அனுப்பப்பட்டான். ஆனால் அவர்கள் செல்லும் வழியில் மதுரையின் வளமிக்க நாடுகளாலாகிய அழகிய, மிகுந்த விளைவைக் கொடுக்கக் கூடிய பாண்டிய அரசின் மீது ஆங்கிலேயரும் ஒரு கண் வைத்திருந்தனர். அவர்கள் களக்காட்டை அடைந்தவுடன் அந்தக் கோட்டையில் தங்கியிருந்த 2000 சிப்பாய்களடங்கிய திருவாங்கூர் படை எச்சரிக்கையடைந்தது. நவாபின் படையோடு ஆங்கிலேயரின் படையும் சேர்ந்து வந்த படைக்குத் தங்களால் ஈடுகொடுக்க இயலாதென்று அவர்கள் கண்டு கொண்டு, கோட்டையையும் களக்காட்டையும் கைவிட்டு விட்டு (துறந்து) தோவளைக்குத் தம் படையுடன் பின்வாங்கினர். மீனம்

பாடத்தில் (ஏப்ரலில்) மக்புசுக்கான் கோட்டையின் பொறுப்பேற்றுக் கொண்டு தன் அதிகாரத்தை அங்கு நிலைநாட்டி, திருநெல்வேலிக்குப் போனான். கர்னல் ஹீரான் ஆங்கிலப் படையோடு திருச்சிராப் பள்ளிக்குத் திரும்பினான்.

தன் தோல்விக்குப் பிறகு திருநெல்வேலிக்கு ஓடிய மூடிமையா பூலித்தேவன் என்ற பாளையக்காரனின் பாதுகாப்பில் அடைக்கலம் புகுந்தான். திருநெல்வேலியிலிருந்து திருச்சிராப்பள்ளிக்கு ஆங்கிலேயத் துருப்புகள் புறப்பட்டவுடன் மகாராசாவிடம் தனக்கு உதவிக்காக விண்ணப்பித்தான். இழந்த களக்காட்டு எல்லையைத் திரும்பக் கைப் பற்றத் தூண்டினான். பூலித்தேவர் நீண்டகாலமாகத் திருவாங்கூரைச் சார்ந்து இருந்தமையால் அவர் தன்னுடைய எதிர்ப்பையும் உதவினார். 2000 காலாட்படையுடன் அதற்குச் சமமான எண்ணிக்கையுள்ள குதிரைப் படையுடனும் ஒரு வலிமைவாய்ந்த படை இளவரசன், மூடிமையா இருவர் துணையுடன் திருவாங்கூருக்கு அனுப்பப்பட்டது. அதிக எதிர்ப்பில்லாமலே களக்காடு கைப்பற்றப்பட்டது. எனினும் மகாராசா அத்தகைய செயல் ஆங்கில அரசைச் சினமுறச் செய்யுமென்று எண்ணி தன் படையைச் சிலகாலம் பின்வாங்கும்படி கட்டளையிட்டார். உரிமையின்றி கைப்பற்றப்பட்ட தனது எல்லைகளைத் திரும்பக் கைப் பற்றிய செயல் ஆங்கிலேயர்களைச் சினமடையச் செய்யவில்லை என் பதை அறிந்து கொள்ளும் வரை தன் எல்லாச் செயல்களையும் தள்ளிப் போட்டுவிட்டார். தொடர்ந்து மகாராசா போதுமான ஒரு படையை காப்டன் டிலானாயின் தலைமையில் பாளையக்காரர் பூலித்தேவர் துணையுடன் முன்னேறக் கட்டளையிட்டான் (redered back). மக் புசுகானின் படை தோற்கடிக்கப்பட்டது. களக்காடு கைப்பற்றப்பட்டது. அதைக் காத்து நின்ற 500 காலாட்படையும் 200 குதிரைப் படையும் சிறைசெய்யப்பட்டனர். இவ்வாறாக களக்காட்டையும் அதற்குரிய எல்லா எல்லைப்புறங்களையும் மகாராசா மறுபடியும் மீட்டார். இப்பொழுது திரு வாங்கூர் அரசு வடக்கே பெரியாற்றிலிருந்து தெற்கே களக்காடு வரைப் பரவி இருந்தது. - பக்கம் 162.

### நவாபுடன் உடன்படிக்கை

முன்னாள் அரசின் ஆட்சியின் போது திருவாங்கூர் பாண்டிய அரசின் கவர்னரிடமிருந்து படையுதவி பெற்றதற்கு ஆண்டுதோறும் ஒரு குறிப் பிட்ட திறை செலுத்துவதாக உறுதி கூறி திருச்சியில் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டதைப் பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளது. ஆனால் தொடர்ந்து கர்நாடக நவாபு அந்த அரசின் நிர்வாகத்தை நேரடியாக ஏற்ற பின்னர், மகாராசா பழைய உடன்படிக்கையை நவாபுடன் புதுப்பித்துக்



கொள்வது அறிவுடைமையாகவும் முன் எச்சரிக்கையாகவும் அமையும் என்று உணர்ந்தார். அதன்படி இன்னும் நலன் தரத்தக்க ஒப்பந்தங்களையும் வரையறைகளையுமுடைய உடன்படிக்கை செய்யப்பட்டது. இந்த உடன் படிக்கையால் தென் இந்தியாவின் மிகப் பெரிய அரசனின் வலிமை வாய்ந்த உதவி திருவாங்கூருக்குக் கிடைத்தது. அதற்காக நவாபுக்கு 6000 ரூபாயும் யானை ஒன்றையும் ஒவ்வொரு ஆண்டும் கொடுக்க வேண்டியிருந்தது. அதற்கு ஈடாக வெளி நாட்டு உள்நாட்டுப் பகைவர் களிடமிருந்து திருவாங்கூரைக் காக்க எல்லா உதவியுமளிப்பதாக நவாபு உறுதி கூறினார். அதனால் தன்னைக் காவல் செய்யவும், பாதுகாக்கவும் வலிமைமிக்க இரண்டு கூட்டாளிகளைத் திருவாங்கூர் பெற்றது. கிழக்கு எல்லையிலே நவாபும் மேற்கே டச்சுக்காரர்களும் அஞ்சன் கோவிலில் ஆங்கிலேய வணிகர்களும் கூடத் தேவை ஏற்பட்டபோது உதவத் தயாராக இருந்தனர். (ப.172)

### மக்புசுகானும் யூசுப்கானும்

கர்நாடக நவாபின் கீழ்ப் பாண்டிய அரசனின் நிர்வாகியாகத் (கவர்னர்) திருச்சிராப்பள்ளியில் தங்கி இருந்த மக்புசுகான் சாகிபு தன் எசமானன் - தலைவனுக்கு எதிராகக் குழப்பம் செய்து திருநெல் வேலியின் மேற்கு எல்லையில் மகாராசாவிற்கு உரிமையான கிழக்குப் பகுதியாகிய களக்காட்டின் மீது படையெடுத்தான். அங்கு தங்கியிருந்தத் திருவாங்கூர் படையைத் தாக்கி ஆரம்பாலி எல்லைக்கு அவர்களை விரட்டி கானுடைய படைகளுடன் அவர்களைத் தொடர்ந்து சென்றான். இதைக் கேள்வியுற்ற மகாராஜா அப்போது திருவனந்தபுரத்தில் தங்கி யிருந்த தம்பி குமரன் செம்பகராமன் பிள்ளை என்ற பெயர் கொண்ட உள்நாட்டுப் படைத் தலைவனை அவனது படையுடன், முற்று கையிட்ட படையை எதிர்த்துச் செல்லக் கட்டளையிட்டார். அவன் உடனே புறப்பட்டான். இந்த வலிமை வாய்ந்த வீரன் எதிரியைச் சந்தித்துச் செய்த போர் கடுமையாகவும் உறுதியுடனும் அமைந்ததால் மகமதியத் தலைவன் ஆரம்பாலி எல்லையிலிருந்து பின்வாங்கும் படியாயிற்று. ஆனால் கான் களக்காட்டைத் தன் வசம் வைத்துக் கொண்டதன்றி செங் கோட்டை மாவட்டம், திருவாங்கூருக்குச் சொந்தமான மற்ற கிழக்கு மாவட்டங்கள் எல்லாவற்றினுடைய உரிமையையும் மேற்கொண்டான்.

மகாராசா இந்தச் செய்தியை நவாபுக்குத் தெரிவித்தார். நவாபோ ஏற்கனவே கீழ்ப்படியாமையும் முரட்டுத்தன்மையும் உடையவனாக இருந்த கானிடம் மிகுந்த வெறுப்புக் கொண்டிருந்தார். அதனால் மக்பு சுகானின் இடத்தில் புதிய ஆளுநரை நியமிக்கும் எண்ணமும் கொண் டிருந்தார். யூசுப்கான் என்ற பெயருடைய மிக்க திறமைவாய்ந்த ஒரு

வனை நியமித்து கலகக்காரனான மக்புசு கானுக்கு அடுத்தவனாக அனுப்பி வைத்தார். யூசுப்கான் திருச்சிராப்பள்ளிக்கு வந்ததும் கீழ்ப்படித லில்லாத (அடக்கமில்லாத) கவர்னரை அடக்குவது மிகுந்த தொல்லை யான செயல் என்பதை அறிந்தான். எனவே மகாராசாவின் உதவியை நாடினான். கர்நாடக நவாபும் சென்னையிலிருந்த கிழக்கிந்திய கம்பெனியும் அதே நேரத்தில் மகாராசாவை கலகக்கார மக்புசுகானை ஒடுக்க யூசுப் கானுடன் ஒத்துழைக்கும்படி கேட்டு கொண்டனர். மகாராசாவும் மகிழ் வோடு அவர்கள் விருப்பத்திற்கு இணங்கினார். அப்போது தோவளாயில் இருந்த தம்பி குமரன் செம்பகராமன் தலைமையிலிருந்த 5000 வீரர்களை யூசுப்கானுடன் சேரும்படியும் கட்டளையிட்டார். கொல்லானிலிருந்து 10000 வீரர்கள் அரியன்காவு கணவாய் வழியாகச் செங்கோட்டைக்கு அனுப்பப்பட்டார்கள்.

இப்பொழுது யூசுப்கான் 20,000 வீரர்களடங்கிய வலிமைவாய்ந்த படைக்குத் தலைவனாயிருந்தமையால் அப்படை வடகரை பாளையக் காரரைத் துரத்துவதற்கு உதவியது. அடுத்து அதுவரை ஏற்றிருந்த நிலையை விட்டு விட்டு மக்புசுகான் ஓடிவிட்டான். யூசுப்கான் தன் உரிமையை நிலைநாட்டினான்.

மகாராசர் உடனடியாக அளித்த உதவிக்கு கைமாறாக யூசுப்கான் அவருக்குரிய கிழக்கு நாடுகளையெல்லாம் திரும்பிக் கொடுத்துவிட்டான். களக்காடு மறுபடியும் மாமன்னருடைய நாட்டின் பகுதியாயிற்று.

எனினும் மகாராசா நீண்ட நாட்களுக்கு களக்காட்டின் உரிமையை வைத்துக் கொள்ளவில்லை. ஏனெனில் அவர் மிக மாறுபட்ட சூழ்நிலை யில் எல்லை நாடுகளின் இந்தப் பகுதியை இழந்துவிட்டார். நவாபினு டைய கவர்னரான யூசுப்கான் இப்பொழுது முந்திய கவர்னரைப் போல எசமானனுக்கு அடங்காமல் நவாபினுடைய அதிகாரத்தை ஆட்டு வதற்கு முயற்சித்துத் தனிப்பட்ட தலைவனாகத் தன்னை அமைத்துக் கொண்டான். இந்தக் குறிக்கோளை நிறைவு செய்து கொள்ள இந்தியா விலிருந்த பிரஞ்சுக் காரர்களிடமிருந்து யூசுப் உதவி பெற்றான்.

ம.ஆ. 937 (கி.பி. 1762இல்) நவாபு, ஆங்கிலேயர் இருவருடைய கூட்டுப்படை யூசுப்புக்கு எதிராக அனுப்பப்பட்டது. யூசுபோ, போருக்குச் செல்கின்ற தன்படைக்கு உதவுமாறு ஏற்கனவே திருவாங்கூர் மகாரா சாவை வேண்டினான். யூசுபின் வசமிருந்த தனிப்பட்ட பாண்டிய மாவட்டங்களைத் தானே வைத்துக் கொள்ள மன்னன் செய்யும் உதவிக்கு ஈடாக திருவாங்கூருக்கு ஒரு காலத்தில் உரிமையுடையதாக இருந்த பாளையங்கோட்டை உட்பட, திருநெல்வேலி நகரத்தின் மேற்கு



எல்லைகள் எல்லாவற்றையும் தருவதாகக் கூறினான். ஆனால் கூறிவுள்ள மகாராசாவோ யூசுப்புக்கு உதவுவதால் அவருக்குக் கிடைக்கக் கூடிய நன்மை எதுவாக இருந்தாலும் அவர் நவாபுடன் செய்து கொண்ட பழைய உடன்படிக்கைக்கு மாறாகச் செல்ல முடியாதென்றும் ஆங்கிலே யருக்கு எதிராகப் போரிட இயலாதென்றும் அறிவித்தார். யூசுப்புக்கு எதிரான கூட்டுப்படைக்குத் துணை செய்ய ஒரு வலிய படையைப் பேரரசர் திருச்சிராப்பள்ளிக்கு அனுப்பினார். எதிரியோ எதிர்ப்பு எவ்விதப் பயனுமளிக்காது என்பதைக் கண்டவுடன் போரைக் கைவிட்டான். கி.பி. 1762இல் நவாபின் ஆணைப்படி தூக்கிலிடப்பட்டான்.

பாண்டிய பேரரசுக்கு உரியதான மலைத் தொடரின் கிழக்குப் பகு தியில் அமைந்திருந்த எல்லா நாடுகளின் உரிமையையும் ஒதுக்கி விடுவது முறை என்று யூசுப்கானுக்குப் பின்னே வந்தவர் கருதினார். அதன்படி களக்காடு மட்டுமின்றி செங்கோட்டையும் திருவாங்கூருக்கு கிழக்கே அமைந்திருந்த எல்லா உடைமையும் நவாபின் ஆட்சிப் பகுதி யோடு இணைக்கப்பட்டது.

**நவாபு உரிமைகளைக் கைப்பற்றுதல்**

மகாராசா மாணிக்கலாலா என்னும் பெயருடைய ஒரு தனிச் செய்தி யாளனைச் சென்னைக்கு அனுப்பினார். நவாபுவின் அலுவலர்கள் சட்ட விரோதமான முறையில் திருவாங்கூரைச் சேர்ந்த பகுதிகளைத் தன் பகுதியோடு இணைத்த அநீதியை எடுத்துச் சொன்னார். ஆனால் அண்மையில் பெற்ற வெற்றியின் களிப்பிலும் யூசுபிற்குக் கிடைத்த தண்டனையின் மகிழ்ச்சியிலும் திளைத்துக் கொண்டிருந்த முசல்மான், மகாராசா அனுப்பிய செய்தியாளனின் கூற்றுக்குச் செவிசாய்க்கவில்லை. எனவே மகாராசா சென்னை ஆளுநரின் எண்ணத்தைக் கேட்க வேண்டிய அவசியத்தில் இருந்தார். களக்காடு மாவட்டம் மற்றும் பிற கிழக்குப் பகுதிகள் மகாராசாவிற்கு உரிமையானவை என்பதை ஒரு காலத்தில் ஏற்றுக் கொண்ட ஆளுநரும் தற்பொழுது தமது கருத்தில் உறுதியற்ற வராக இருந்தார். சுமுகமான பேச்சுவார்த்தைக்குப் பின் செங்கோட்டை கன்னியாகுமரி உள்ளிட்ட திருவாங்கூர்ப் பகுதிகளில் சிலவற்றைத் திருப்பித்தர நவாபு ஒத்துக் கொண்டான்.

**களக்காட்டைப் பெறுதல்**

பன்னெடுங்காலமாகத் திருவாங்கூர்க்கு உரிமையாயிருந்து வந்த களக்காடு மாவட்டத்தைச் சட்டத்திற்குப் புறம்பான முறையில் இணைத்திருப்பது முகம்மதியத் தலைவனுக்கு மனநிறைவை அளிக்க வில்லை. அது அண்மையில் பௌதிமிராகிடமிருந்து விலைக்கு வாங்

கப்பட்டது. அவ்வாறு வாங்கியது அவனுக்குப் பின்வந்த நவாபு, கிழக்கிந்திய கம்பெனி ஆகிய இருவராலும் உறுதி செய்யப்பட்டது. களக்காடு மாவட்டத்தில் முன்னைய ஆண்டுகளில் தண்டிய கொஞ்ச வருமானத்தைக் கேட்டு தற்பொழுது கட்டாயப்படுத்தினான் நவாபு. பின்னர் சென்னை ஆளுநர் திரு. இராபர்ட் பர்ச் தலையீட்டால் ஒரு முடிவு ஏற்பட்டது. இவர் நவாபுக்குத் தொடர்பான செய்திகளை முடித்து வைத்து கி.பி.1765இல் ஒரு மடலுக்குப் பதில் போடும்பொழுது ஆளுநருக்கு எழுதியிருந்தார். அந்த கடிதத்தின் விளைவால் ஆங்கில கம்பெனி சில நடவடிக்கைகளை எடுத்து நவாப்பின் வெற்றிகளைக் கட்டுப்படுத்தியது. கவர்னர் இதற்கு உதவுவதாக உறுதியளித்தார். சாகசியன் மகாராசா கவர்னரின் கருத்தினை அவமதித்தார். இக்குழப்பமான சூழலில் நவாப்பின் நடவடிக்கைகளில் ஈடுபடும் நிலை ஆங்கில கம்பெனிக்கு ஏற்பட்டது.

### களக்காட்டைப் பெறுவதனை விட்டுவிடல்

நவாபுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் முக்கியமான அம்சங்கள் பின் வருவன. களக்காடு தாலுகாவினுடைய அனைத்து உரிமைகளையும் திருவிதாங்கூர் விட்டுவிட வேண்டும். அவருடைய கப்பத் தொகை ரூ. 15,000-க்கும் மேலானது. அவரிடம் இரண்டு லட்சம் ரூபாயை களக்காடு மாவட்டத்தின் தேவைகளுக்காக வேண்டப்பட்டது. நவாபுக்கு எதிராகப் பாளையக்காரர் படை எப்பொழுதும் பயன்படுத்தப்பட மாட்டாது. மகாராசா, நவாபுக்கு உதவியாக மதுரை, திருநெல்வேலி ஆகியவற்றின் மீது படையெடுத்து வரவேண்டும்; நவாப் திருவிதாங்கூருக்கு அதனுடைய அனைத்து உள்நாட்டு போர்களிலும் படை கொடுத்து உதவவேண்டும்.

### பிரிட்டிஷாருக்கு எதிராகத் திருவாங்கூர் தம் படைப்பிரிவை அனுப்புதல்

ஹைதர் அலிகானின் உரிமையற்ற செயல்களைப் பற்றிய அறிக்கைகள் மகாராசாவால் சென்னை கவர்னருக்கும், பம்பாய், வங்காள கவர்னர்களுக்கும் அனுப்பப்பட்டன. இதனால் ஒரு பொதுப் போர் ஹைதருக்கு எதிராக நடந்தது. மதிப்பிற்குரிய கிழக்கிந்திய கம்பெனியரால், மகாராசா படைகளுடன் ஒத்துழைக்குமாறு வேண்டப்பட்டார். மகாராசாவும் அவ்வாறு செய்வதற்கு விருப்பமுடன் இசைவளித்தார். என்றாலும் பலர் செல்வங்களும் சிலர் வாழ்வும் அழிந்ததைத் தவிர்க்க முடியவில்லை.

### ஹைதர் அலிக்கு எதிராகத் திருவாங்கூர் உதவுதல்

கிழக்கிந்திய கம்பெனியாரால் போர் தொடர்ந்து நீட்டிக்கப்பட்டது.



மகாராசா அவர்களை அடக்கி ஆட்படுத்த துணை செய்தார். திருவிதாங்கூரிலுள்ள காலாட்படைகளையும் குதிரைப்படைகளையும் கம்பெனியின் படைப்பிரிவு அதிகாரிகள் மூலம் கல்கத்தா, பாலக்காடு, திருநெல்வேலி போன்ற சேமையிடங்களுக்குக் கொண்டு சென்றனர்.

திருவிதாங்கூரின் வடக்கிலும் கிழக்கிலும் உள்ள எல்லைப் பகுதிகளில் பாதுகாப்பு வேலைகளைத் திறமாகச் செய்தபின்னர் மகாராசா தன் படையின் ஒரு பகுதியைத் தகுதிமிக்க ஒரு அதிகாரியின் தலைமையின் கீழ் கல்கத்தா மேஜர் ஆபிங்டன் கீழுள்ள பம்பாய் படையுடன் பங்கேற்க அனுப்பி வைத்தார். அவரது படைகள் தீரமுடன் போராடிச் சிறந்த முறையில் வெற்றிபெற்றன. திருவாங்கூர் படையின் அடுத்த பகுதியை ஹைதர் அலிக்கு எதிராகப் பிரிட்டிஷ் படையுடன் சேர்ந்து போராட திருநெல்வேலிக்கு அனுப்பினார். அங்கு அப்படை இரண்டு ஆண்டுக்காலம் தங்கியிருந்தது.

### திருநெல்வேலி இராமேஸ்வரம் வழியாக மகாராசா பயணம் செய்தார்

ம.ஆ.959 (கி.பி.1784இல்) மகாராசா மதச்சடங்கு நிகழ்த்தும் பொருட்டும், தம் நாட்டின் பல பகுதிகளையும் திருவாங்கூரின் கிழக்கிலும் மேற்கிலும் உள்ள பகுதிகளையும் பார்வையிடும் பொருட்டும் இராமேஸ்வர யாத்திரையைத் தொடங்கினார். பயண வழியிலுள்ள திருநெல்வேலி, மதுரை மாவட்டப் பகுதிகளையும் பார்வையிடத் திட்டமிட்டார்.

தம் தலயாத்திரையைத் தொடங்குவதற்கு முன்னர் அவர் ஆற்றலாலும், ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனி, ஆற்காடு நவாப் ஆகியோரின் உதவியாலும் சில ஏற்பாடுகளைச் செய்தார். திருநெல்வேலி, மதுரை மாவட்டப் பகுதிகளில் நவாப்பின் ஆட்சியும் பாளையப்பட்டுக்காரர்களின் ஆட்சியும் முரட்டுத்தனமாகவும் சட்டம் ஒழுங்கற்றத் தன்மையிலும் நடைபெற்று வந்தது.

### பாளையக்காரர்களால் ஆபத்து

மகாராசா கிழக்கிந்திய கம்பெனியாரிடமிருந்து சில சிப்பாய்களின் துணையையும், நவாப்பிடமிருந்து சில அதிகாரிகளின் உதவியையும் பெற்றுக் கொண்டார். தம் படைகள் பின்தொடர மகாராசா தோரணையுடனும், துந்துபி, பேரிகை ஆகியவற்றின் முழக்கத்துடனும் புறப்பட்டுச் சென்றார்.

### பொது வேலைகளைத் தேர்ந்தெடுத்தல்

தம் பயணத்தில் திருநெல்வேலி மதுரை மாவட்டங்களில் உள்ள

மக்களின் வசதிக்காக அமைந்த மிக முக்கியமான பயிர்த்தொழில் முறைகள், சாலைகள், பாலங்கள், சத்திரங்கள் ஆகியவற்றைக் கவனமுடன் உன்னிப்பாகப் பார்வையிட்டார். இதுவே இவர் பயணக் குறிக்கோளாக இருந்தது. மிக நலமுடன் இராமேஸ்வரத்தை அடைந்த மகாராசா அங்கே பூஜைகளும் சடங்குகளும் நிகழ்த்திய பின்னர் திரும்பி வந்தார். அவ்வாறு திருவனந்தபுரத்திற்குத் திரும்பிவரும் போதும் அனைத்து இடங்களையும் ஆர்வமுடன் பார்வையிட்டார். அப்பொழுது அவர் பொழுதை வீணாக்கவில்லை. இந்தப் பயணத்தின் மூலம் தென் மாவட்டங்களையும், நாஞ்சில் நாட்டின் சிறப்பினையும் நன்கு அறிந்து கொண்டார்.

### மேஜர் பானர்மேன்

திருவாங்கூருக்கு 1788-1789இல் ஏற்படுத்தப்பட்ட பிரிட்டிஷ் முதல் பிரதிநிதி.

### திப்புவின் புத்தாய்வுத் திட்டம்

தமது செயலறிவாலும், உண்மைத் தன்மையாலும் ஆங்கிலேயரது துணையாலும் மகாராசா சுல்தானிடமிருந்து தூது வராததால் மனத்துணிவு கொண்டா. பிரிட்டிஷ் அதிகாரிமட்டுமே வந்திருந்தார். சென்னை கவர்னரான திரு. ஆர்ச்சிபால்ட் காம்பெலுக்குக் கடிதம் எழுதினார் மகாராசா. அக்கடிதத்தில் தமது அவைக்கு ஒரு அதிகாரி இருந்தால் சுல்தானுடன் தொடர்பு கொண்டு கருத்துகளைப் பகிர்ந்து கொள்ள ஏதுவாக இருக்கும் என்று தெரிவித்திருந்தார். கவர்னரும் மகாராசாவின் முன்னறிவைப் பாராட்டினார். அத்துடன் மேஜர் பானர்மேனை அவரது தங்குமிடமான பாளையங்கோட்டையினின்றும் திருவனந்தபுரம் அரசவைக்குச் சென்று வருமாறு கட்டளையிட்டார்.

### திருவாங்கூரில் அமைந்த முதல் பிரிட்டிஷ் குடியிருப்பு

ஒப்பந்தப்படி காப்டன் ராக்ஸ் திருவாங்கூரின் வடக்கெல்லைக் கருகில் உள்ள ஆய்க்கோட்டையில் கி.பி.1788இல் இரண்டு அதிகாரிகள் தங்குமாறு நியமித்தார். அந்த வேளையில் மகாராசாவிற்கும் சென்னை அரசுக்கும் தொடர்பு அதிகாரியாக ஜார்ஜ் பௌனி கிழக்கிந்தியக் கம்பெனியாரால் திருவாங்கூரில் நியமிக்கப்பட்டார். இவரே மன்னர் அவையில் அமைந்த முதல் அரசு அதிகாரியாகவும் பிரிட்டிஷ் பிரதிநிதியாகவும் கருதப்பட்டார். பௌனி, 1794இல் திருநெல்வேலியில் கலக்டராகப் பணியாற்றினார். மெக்காலே 1800இல் திருவாங்கூரில் தங்கியிருந்தார்.



### 1805இல் புதிய உடன்படிக்கை கையெழுத்திடப்படல்

1805இல் ஜார்ஜ் மேக்டெனால் அவர்களால் திருநெல்வேலியில் இருந்து மகாராசாவை புதிய உடன்படிக்கையில் கையெழுத்து இடும்படி வற்புறுத்தல் வந்தது. மகாராசாவும் சிந்தித்துக் கையெழுத்திட்டார்.

### திருவாங்கூரில் புரட்சி (1809 இல் திருவாங்கூரையும் தங்கும் இடமாக இணைத்துக் கொள்ளல்)

திருவாங்கூரில் கிளர்ச்சி தோன்றிய பிறகு 1808 இல் போர் தொடங்கியது. அங்குள்ள செயலாட்சி குழுவானது பிரிட்டிஷார், தம் நாட்டில் குடியேறுவதை விரும்பவில்லை. திவான் ஆங்கிலேயர்களால் துன்புறுத்தப்பட்டார். அவர் கொச்சி திவானையும் பிரெஞ்சுக்காரர்களையும் உதவிக்கு நாடினார். ஒரு கப்பல் நிறைய பன்னிரெண்டாவது படைப் பிரிவைச் சேர்ந்த முப்பத்தொன்று போர்வீரர்களை ஆலப்புழையில் வைத்தனர். அவர்கள் கரையிலேயே பிடிக்கப்பட்டு, இரண்டிரண்டு பேராகக் கட்டப்பட்டனர். அவர்களின் கழுத்தைச் சுற்றி கட்டப்பட்டிருந்த கற்கள் நீருக்குள் பிடுங்கி எறியப்பட்டன. கொச்சியில் உள்ள குடியிருப்பு தாக்கப்பட்டது. சென்னை கவர்னரான பார்லோ தேவையான நடவடிக்கைகள் எடுத்து கலகக்காரர்களை அடக்கி ஆங்கில அரசுக்கு உரியவற்றை மீட்டுக் கொடுத்தார். அமைதி காக்கப் படை அனுப்பி வைக்கப்பட்டது. திருவிதாங்கூறிலுள்ள சக்திகள் படைகளின் நுழைவினைத் தடுக்க இணைந்து நின்றன. கலகக்காரர்கள் மன்னரால் கைவிடப்பட்டனர். தமது மந்திரிகளால் இத்தவறு நடந்ததென மன்னர் கற்பித்துக் கூறினார். ஆனால் மாநில சக்திகள் ஆங்கிலேயரை முழுமையாக எதிர்த்து நின்றன.

நான் சங்கோனி மேனனிடம் அறிந்த திருவாங்கூர் வரலாற்றினை எழுதுகிறேன்.

### எழுச்சியின் காரணங்கள்

பாப்பத்து மேனன் ஒரு தனித் தூதுவரைக் கொல்லத்துக்கு இரகசியக் கடிதத்துடன் அனுப்பிவைத்தார். அக்கடிதம் வேலுத்தம்பிக்கும், படைத் தலைவனுக்கும் எழுதப்பட்டிருந்தது. அதில் பிரிட்டிஷாரைப் படுகொலை செய்யுமாறும், அதற்கு உதவ கொச்சியிலுள்ள கோட்டைப் பாதுகாப்புப்படை முன்னிற்கும் என்றும் எழுதப்பட்டிருந்தது.

வேலுத்தம்பி, மேனன் ஆகிய இருவரும் செய்த திட்டத்தைக் கண்டு அதிகாரிகள் மிகவும் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். பழிவாங்கும் ஆசையுடன் அத்திட்டத்திற்கு ஒத்துக் கொண்டு நேரம் குறிக்கப்பட்டது.

கர்னல் கார்ஸ்லியால் போருக்கான நடவடிக்கைகளை எடுக்க முடிய வில்லை. 1808இல் அந்தக் கிளர்ச்சி தோன்றியது. இராசாவும் அவரது முக்கிய பணியாட்களும் அவர்கள் அச்சுறுத்தப்பட்டு அடங்கிக் கிடந்த தாகக் கூறினர். கொச்சியில் உள்ள அதிகாரி தங்கள் நடைமுறை, செயல்கள் பாதிக்கப்படுவதை உணர்ந்தார்.

**திவானின் நட்பைத் தேடல்**

திவான் தமது போர் நிலவரத்தில் தமக்கானத் துணையைத் தேட முடிவெடுத்தார். நாயர்களுக்கும் பிற சாதிக்காரர்களுக்கும் புதிய ஆட் களைப் படையில் சேர்க்குமாறு இரகசியமாக ஆணையிட்டார். அரண் களைப் பலப்படுத்தினார். பிரெஞ்சு அதிகாரிக்கும் கள்ளிக்கோட்டை சமாரியருக்கும் உதவ வேண்டி எழுதினார். கொச்சி பாபத்துமேனன் அவர்களால் போருக்கான அனைத்து ஏற்பாடுகளும் செய்து முடிக்கப் பட்டது. ரெசிடெண்ட் இவற்றை அறிந்த போதிலும் வழக்கம் போல் செயலாற்றி வந்தார். மகாராசாவையும் திவானையும் பாக்கிப் பணத்தைக் கட்டுமாறு வற்புறுத்தினார். சென்னை அரசும் மகாராசாவை உடனே பணம் கட்டுமாறு வற்புறுத்தி வந்தது.

**ரெசிடெண்டை படுகொலை செய்யத் திட்டம்**

திவான் இவ்வேளையில் ரெசிடெண்டைப் படுகொலை செய்யத் திட்டமிட்டார். ஆனால் பழம் பாக்கியைக் கட்டிவிடப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டார். ரெசிடெண்ட், பாக்கியைக் கட்ட வேண்டும் அல்லது ஆட்சியை மாற்ற வேண்டும் என்று வற்புறுத்தினார். தான் ஓய்வு பெற விரும்புவதாக நடித்த திவான் மெக்காலேவுக்குக் கடிதம் எழுதி, தாம் கள்ளிக்கோட்டையில் தங்கப் போவதாகவும் அதற்குத் துணை யாகப் பிரிட்டிஷ் படையை அனுப்புமாறும் கேட்டிருந்தார். ஆளுநரின் துணைப்படையை அப்புறப்படுத்த வேண்டும் என்பதுதான் இவரது திட்டமாகும்.

வேலுத்தம்பி ஆலப்புழையிலுள்ள கோட்டைக் காவற்படைக்குக் கொல்லத்திலிருந்து கொச்சி கோட்டையைத் தாக்குமாறும் ஆளுநரைக் கொலை செய்யுமாறும் ஆணை அனுப்பினார். அப்போது செஞ்சு கிருஷ்ண மேனனும் பிரிட்டிஷ் கோட்டைக் காவற்படையைத் தாக்கு மாறு ஏற்பாடு செய்தார்.

**ரெசிடெண்ட் கொலைத் திட்டத்தின் தோல்வி**

சிறப்புப்படையானது மூடிய படகுமூலம் கொல்லம், ஆலப்புழை ஆகியவற்றினின்றும் வைக்கம் பத்மநாப பிள்ளையுடன் புறப்பட்டு ஆலங்



கோட்டில் தங்கியது; பின்னர் கொச்சியை அடைந்தது. நடு இரவில் மெக் காலேவிற்குத் தீ வைத்தான். துப்பாக்கிப் படையின் அறிவிப்பால் வியப் புற்ற மெக்காலே தனது உதவியாளுடன் சமாளித்துக் கொண்டார். செஞ்சு கிருஷ்ண மேனனும் காயமுறாமல் தப்பித்து மெக்காலேவுடன் கப்பலில் சேர்ந்து விட்டார். திருவாங்கூர் சிப்பாய்கள் வீட்டிற்குள் நுழைந்து காவலர்களையும் பிறரையும் கொன்றனர். பொருள் நாசத்தைச் செய்த பின்னர் மெக்காலேவையும் மேனனையும் கண்டு கொள்ள முடியாமல் திரும்பினர்.

மெக்காலேயைக் கொலை செய்யும் முயற்சி தோல்வியுற்றதன் விளைவால் பிற அதிகாரிகளிடமும் பேரச்சம் தோன்றியது. அவர்கள் தங் களைக் காத்துக் கொள்ள முன்னெச்சரிக்கையுடன் இருந்தனர். அவர்கள் கொள்ளையிட்ட பின் மறுநாள் திருவாங்கூருக்குத் திரும்பி வந்தனர். வேலுத்தம்பி இவ்விளைவை முன்னரே அறிந்து ஆலப்புழையை விட்டு விட்டுக் கொல்லம் வந்துவிட்டார். மூன்று ஐரோப்பியப் படை அதி காரிகள், சா்ஜன் ஹியூம், ஒரு பெண் ஆகியோர் இணைந்த ஒரு குழுவும், 12 ஐரோப்பிய வீரர்கள், 33 சிப்பாய்கள் இணைந்த குழுவும் கொல்லத் தினின்றும் கொச்சி சென்று கொண்டிருந்தனர். பாரச் சாலை அருகே வரும் போது அங்கு கம்பெனியாருக்கு எதிரான படைவீரர்கள் பலர் மறைந் திருந்தனர். வேலுத்தம்பிக்குச் செய்தியை அனுப்பித் தாக்குதலுக்கு அனுமதி கேட்டனர். பின்னர் பலவீனமான ஒரு பெண்ணைத் தவிர ஏனையோரை அழித்தொழித்தனர்.

**அரசுக்கு ஆளுநரின் அறிக்கை**

உடனே அறிக்கையொன்று அரசுக்கு அனுப்ப நேரமில்லாததால் 15 ஜனவரி 1809இல் ஒரு பொது அறிக்கையை அனுப்பி வைத்தார், பாலார்ட்.

"சில நாட்களுக்கு முன்னர், நான் திவானுடன் பேரம் பேசினேன். அவரது விருப்பப்படியே முடிவுகள் அமைந்தன. அவர் ஆலப்புழையில் இருந்து திரும்புவதை விரும்பினர். அவரது பாதுகாப்புக்காகக் கட்சியைப் பலவீனப்படுத்தும்படி வேண்டினார். அவரைப் பாதுகாக்க எனது படகு களிலும் பல்லக்குகளிலும் பல்வேறு இடங்களுக்கு எடுத்துச் சென்றேன். ஒரு நடு இரவில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட நாயர்களின் கூட்டம் திவானின் நண்பரான பத்பநாபப்பிள்ளையின் தலைமையில் எனது வீட்டை முற்றுகையிட்டனர்; தப்பிச் செல்ல தடையிட்டனர்; மாளிகையைத் தீயிட்டனர். எதிர்த் தலைவர்களைக் கொலை செய் தனர்; என்னையும் அழிக்க முயன்றனர். ஆனால், வியக்கும்படி தோல் வியுற்றனர். விடியுமுன் திரும்பி விட்டனர். பல ஆவணங்களும் நூல்களும்

அழிக்கப்பட்டன. திவான் வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்கிறார். தனது கோட்டத்தைப் பலப்படுத்தி வருகிறார். நான் தாமதமின்றி படை அனுப்புமாறு கர்னலுக்கு கடிதம் அனுப்பியுள்ளேன். 1808 ஆம் ஆண்டு டிசம்பர் 29 இல் கொல்லத்திலும் இதுபோன்ற தாக்குதல் நடைபெற்றுள்ளது. திவான் கொல்லத்திற்கு வந்து அச்சக்திகளை ஊக்குவித்தார். அவர் பின்னர் கொல்லத்திற்குக் கிழக்கேயுள்ள குண்டரேக்கு வந்து பொது அறிக்கையொன்று விட்டிருக்கிறார். இதனால் திருவாங்கூர்மக்கள் எல்லோரும் பிரிட்டிஷாருக்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ளனர். பலரால் குடியிருப்பு தாக்கப்பட்டுள்ளது. ஆனால் அவர்கள் கர்னல் சால்மரால் தோற்கடிக்கப்பட்டனர். மெக்காலேவைக் கொலை செய்யும் முயற்சி தோற்கடிக்கப்பட்டதால் ஆலங்கோட்டு சர்வாதிகாரிகள் திரும்பவும் வெற்றிபெற முயல்கின்றனர். அவரால் 2000 பேர் படையில் சேர்க்கப்பட்டு கொச்சியில் வைக்கப்பட்டுள்ளனர். கொச்சி மந்திரி பாலத்துமேனனும் 2000 பேர் அடங்கிய படையைத் தயாரித்து நகரைத் தாக்கிடத் தயாராயுள்ளனர். நீதிபதிகளும் கம்பெனி அதிகாரிகளும் தங்கள் அலுவலகங்களை மூடிவிட்டனர். மக்களும் வியாபாரிகளும் கள்ளிக்கோட்டைக்குச் சென்று விட்டனர். இவ்வாறு கம்பெனிக்கு எதிர்ப்பு பரவலாகக் கிளம்பியுள்ளது. கர்னல் கப்பேஷ் வடஎல்லைக்கு வந்ததும் மேஜர் கிவைத் கொச்சியை விட்டுக் கிளம்பியதும் அக்கிளர்ச்சி அடங்கியுள்ளது. கொல்லத்தில் கர்னல் சால்மரின் நடவடிக்கையால் ஜனவரி 18ல் திவானின் சக்திகள் முழுமையாக அடக்கப்பட்டன.

**கிளர்ச்சியில் ஈடுபடாதிருக்குமாறு திருநெல்வேலி மக்கள் சென்னை அரசால் எச்சரிக்கப்படல்**

சென்னை அரசு கீழ்க்கண்ட பொது அறிக்கையைத் திருநெல்வேலி மலபார் மக்களுக்காக வெளியிட்டது:

அறிக்கை: ஜார்ஜ் கோட்டையிலுள்ள மாண்புமிக்க கவர்னர் அறிவித்துக் கொள்வது: திருவாங்கூர் திவான் திருநெல்வேலி மக்களை பிரிட்டிஷ் அரசுக்கு எதிராகத் தூண்டிவிடுகிறார். எனவே, கவர்னர், அவர்களைக் கலந்து கொள்ளாதிருக்கும்படி எச்சரிக்கை செய்கிறார். அப்பகுதி மக்கள் தங்கள் நலனில் அக்கரையுள்ளவர்கள் என்பதிலும் பிரிட்டிஷ் அரசால் பெறும் நன்மைகளைத் தொடர்ந்து அனுபவிக்காமல் இழக்க மாட்டார்கள் என்றும் நம்புகிறார்.

ஜெயின்ட் ஜார்ஜ் கோட்டை,

15 ஜனவரி 1809.



**திருவாங்கூர் மக்களுக்கு சென்னை அரசால் அனுப்பப்பட்ட அறிக்கை.**

அரசு கீழ்க்கண்ட அறிக்கையை 1809 ஆம் ஆண்டு ஜனவரி 17 ஆம் தேதி திருவாங்கூர் மக்களுக்காக வெளியிட்டது.

அறிக்கை: திருவாங்கூர் மக்களுக்குத் தெரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், பல ஆண்டு காலமாக பிரிட்டிஷ் அரசுக்கும் திருவிதாங்கூர் அரசுக்கும் நல்லுறவு உள்ளது. பிரிட்டிஷ் படைகள் திருவாங்கூரைக் காப்பதில் ஈடுபட்டுள்ளது. இப்படையால் திப்பு சுல்தானிடமிருந்து திருவாங்கூர் காப்பாற்றப்பட்டு வருகிறது.

இச்சூழ்நிலைகளில் கலக நிகழ்ச்சிகள் ஏற்படுவது கவர்னருக்கு வியப்பைத் தருகிறது. திருவாங்கூர் படைகளால் பிரிட்டிஷ் அதிகாரி தாக்கப்பட்டுள்ளார். கொல்லத்தில் படுகொலைகள் நிகழ்ந்துள்ளன. இது போன்ற நிகழ்ச்சிகள் திருவாங்கூர் திவானால் உருவாக்கப்படுகிறது என்று கவர்னர் நம்புகிறார். எனவே திவானின் சக்திகள் விரைவில் கவர்னர் அனுப்பும் படையால் ஒடுக்கப்படும். அதனால் நாட்டில் நிம்மதியும் நலமும் நிலைக்கும். அதே நேரத்தில் நாட்டுமக்களிடம் கேட்டுக் கொள்வது என்னவென்றால், தேவையான நேரங்களில் தயக்கமின்றி பிரிட்டிஷ் படையின் உதவியை நாடலாம். பிரிட்டிஷ் அரசுக்குத் திருவாங்கூர் மன்னரைத் திவானிடம் இருந்து காக்க வேண்டும் என்ற எண்ணம் தவிர வேறு இல்லை. எனவே, ஆபத்துக்குரிய சக்திகள் விரைவில் அழிக்கப்பட்டு இரு அரசுகளுக்கும் இடையே நல்லெண்ணமும் நலமும் உருவாக்கப்படும்.

கவர்னர் நாட்டுமக்களை ஒத்துழைக்குமாறு வேண்டிக் கொள்கிறார். பிரிட்டிஷ் படையால் மக்கள் சொத்துக்களும் காக்கப்படும். நாட்டில் பிராமணர்களுக்கும், மத நடவடிக்கைகளுக்கும் இடையூறு ஏற்படாதவண்ணம் கண்காணிக்கப்படும்.

ஜெயின்ட் ஜார்ஜ் கோட்டை,

17 ஜனவரி 1809.

மதிப்பிற்குரிய கவர்னரால் வெளியிடப்பட்டது.

(ஒப்பம்) ....

அரசு தலைமைச் செயலர். (பக்கம் 346)

திருவிதாங்கூர் அதிகாரிகளும், படைகளும் அரசு ஆணைக்காகக் காத்திராமல் கர்னல் தூய லீகர் தலைமையில், திருவிதாங்கூரின் தென்

எல்லையான ஆராம்பொழியைத் தாக்கினர். ஆராம்பொழிக்கோட்டை 1809 ஆம் ஆண்டு பெப்ரவரி 10இல் தாக்கப்பட்டது. வேலுத்தம்பி தளவாய் ஆராம்பொழியினின்றும் தப்பித்து திருவனந்தபுரத்திற்கு ஓடிப் போனார். (பக்கம் 347)

**திருவிதாங்கூர் எல்லை எடுக்கப்படல்**

ஜெனரல் வெல்ஸ் துரையால் திருவிதாங்கூர் எல்லை எடுக்கப் பட்ட போது நடந்த போரையே முக்கியமான போராகக் கருதுகிறோம். ஆங்கில அரசினை வற்புறுத்துவதற்காக மக்கள் கூடினர். கர்னல் செயின்ட் லீகரின் ஆணையால் மேஜர் வெல்ஸ் 1809 ஆம் ஆண்டு பிப்ரவரி 5 ஆம் தேதி ஆராம்பொழியினின்றும் 6 மைல் தொலைவில் கூடாரம் அமைத்தார். திருநெல்வேலி எல்லையில் இந்த ஆராம்பொழி அமைந்துள்ளது. திருவாங்கூரின் நுழைவாயிலாகவும் இக்கணவாய் விளங்குகின்றது.

**எல்லை வருணனை**

உறுதிவாய்ந்த மலைகள் எல்லையாக கோட்டையைப் போல் தெற்கு நோக்கி அமைந்துள்ளது. சில இடங்களில் சிறிய சுவர்களும் புதர்களும் மதில்களாக விளங்குகின்றன.

**வெற்றிகரமான தாக்குதல்**

மேஜர் வெல்ஸ் மதில்களை ஏணி மூலமாகக் கடந்து சென்று தாக்க வேண்டுமென்று திட்டமிட்டார். பிப்ரவரி மாதம் 10 ஆம் தேதி இத்தாக்குதல் நடைபெற்றது. தென்புறக் கோட்டை மதில்களை இரவி லேயே கடந்தனர். என்றாலும் 50 பீரங்கிகளின் மூலம் எதிர்த்துப் போரா டிய பிறகுதான் 10 ஆயிரம் வீரர்களும் உள்ளே புக முடிந்தது. மதிலின் அடிப்பாகத்தை அடைய 6 மணி நேரம் ஆகும் அளவிற்குப் போர் கடுமையாக இருந்தது. வடக்கெல்லையில் திருவாங்கூர் வீரர்கள் தப்பி ஓடினர். மாலைக்கு முன்னர் ஆங்கிலேயர்கள் ஆராம்பொழிக் கோட்டைக்குள் 2 மைல் தொலைவில் கூடாரம் அமைத்தனர்.

**திருவனந்தபுரத்தை நோக்கி முன்னேறுதல்**

17 ஆம் தேதி படை திருவாங்கூரின் தலைநகரான திருவனந்த புரத்தை நோக்கிச் சென்றது. அன்று காலை வேளச்சேரியில் சுசீந்திரம் ஆற்றுக்கு எதிர்கரையில் திருவாங்கூர் படையால் எதிர்க்கப்பட்டனர். அவர்களை அழித்துவிட்டு கோட்டாறு நாகர்கோவில் ஆகியவற்றைக் கைப்பற்றினர். இதுவே இரத்தம் சிந்தி நடத்திய இறுதிப் போராகும். ஆங்கிலேயர் பின்னர் ஓடக்கரை, பத்ம நாபபுரம் போன்ற கோட்டை



களைப் பிடித்தனர். இவர்களின் வரவையறிந்த மகாராசா 140 பீரங்கி களையும் 14,000 வீரர்களையும் கொண்டு ஆங்கிலேயர்க்கு அடி பணிந்தார். ஆங்கில வீரர்களைக் கண்டதும் திவான் தற்கொலை செய்து கொண்டார். அவரது சகோதரர்களும் கூட்டாளிகளும் கொல்லத்தில் 12வது படைப் பிரிவுக்கு முன் தூக்கிலிடப்பட்டனர். கர்னல் மெக்காலே திரும்பிவந்து புதிய திவானை அமைத்து நாட்டில் அமைதியை உருவாக்கினார்.

**திருவாங்கூரில் நடந்த நிகழ்ச்சிகள்**

கொல்லத்திலுள்ள உதவிப்படைகளுக்குத் திட்டங்கள் ஏது மில்லை. கோட்டைக் கதவை அடைத்ததால் உள்நாட்டுக் குழப்பம் உரு வானது. இதனால் ஆங்கிலேயர் எளிதில் வென்றனர். அவர்களின் நிலைமை நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டே போனது. ஆராம் பொழிக் கோட்டை பிடிபட்டதும் தங்கள் நம்பிக்கையை இழந்து விட்டனர். ஜெனரல் வெல்ஸ், எல்லை மிகப் பாதுகாப்பானது என்றும் திப்பு அதனைக் கைப்பற்ற முடியாது என்றும் கருதினார். அதனால் வடக்கெல்லையைக் கவனிக்கத் தவறிவிட்டார்.

**கீழ்க்கண்ட குறிப்புகள் சங்கநேரி மேனனின் வரலாற்றில் உள்ளது**

கர்னல் பின்னர் திருவனந்தபுரம் நோக்கிச் சென்று, பாப்பன் கோட்டில் கூடாரம் அமைத்தார். மகாராசா உன்மணித்தம்பியின் தலைமையில் ஒரு தூதுக்குழுவை அனுப்பி வைத்தார். அத்துடன் மார்த்தாண்டன் ஏர்வையும் சென்றார். வேலுத்தம்பியால் ஏற்பட்ட விரும்பத்தகாத நிகழ்ச்சிகளுக்கு வருத்தம் தெரிவித்து இழப்புகளுக்கு ஈடுசெய்ய விரும்பினர். கர்னல் மெக்காலே மார்ச் 3 ஆம் தேதி வந்தார். போர் இழப்புகளுக்காக 50,000 ரூபாய் கொடுப்பதாக ஒப்புக் கொண்டனர் திருவாங்கூர் குழுவினர்.

உன் மணிதம்பி 1809 ஆம் ஆண்டு மார்ச் 18இல் திவானாக்கப் பட்டார். தளவாயைச் சிறை பிடிக்குமாறு ஆட்களை அனுப்பினார். தளவாய் தலைமறைவாகக் குன்னத்தூர் மாவட்டத்திலுள்ள வள்ளிக் கோட்டை காடுகளில் அலைந்தார். அதிகாரிகள் அங்கு தேடத் தொடங் கியதும் அங்கிருந்து 'மன்முடி'க்கு வந்தார். இவரது வேலையாளைத் தெருவில் கண்ட அதிகாரிகள் வேலுத்தம்பியின் மறைவிடத்தை அறிந்தனர். வேலுத்தம்பி அங்கிருந்து பகவதி கோயிலுக்கு ஓடி ஒளிந்தார். அவருடன் அவர் தம்பி பத்மனாபத்தம்பியும் சென்றார். தன் தம்பியிடம் தன்னைக் கொல்லுமாறு வேண்ட, அவரது தம்பி ஒரே வீச்சில் தலையை வெட்டும்போது அதிகாரிகள் கதவை உடைத்துக் கொண்டு அங்கே

வந்தனர். கைது செய்தனர். வேலுத் தம்பியை இழிவுபடுத்த அவரது பிணத்தைத் தொங்கவிட்டனர். லாட்டு மிண்டே. இச்செயலை மிகவும் கண்டித்தார்.

தளவாயின் தம்பி ஏப்ரல் 10ம் தேதி கொல்லத்தில் 12வது படைப் பிரிவின் முன் தூக்கிலிடப்பட்டார். சர்ஜன் படுகொலையில் தொடர்பு உடையவர் என்று குற்றம் சாட்டப்பட்ட உன்மணித்தம்பியின் உறவினர் அச்சுறுத்தப்பட்டனர். அவரது வீடு தரைமட்டமாக்கப்பட்டு மரங்கள் சாய்க்கப்பட்டன. பிறர் தூத்துக்குடிவரை ஓடிச் சென்று பிழைத்தனர். சிலர் தற்கொலை செய்து கொண்டனர். சிலர் சிறையிலடைக்கப் பட்டனர். பாரசாலை, ஆலப்புழை ஆகிய இடங்களில் ஐரோப்பியர் களைக் கொன்றவர்கள் கண்டுபிடிக்கப்பட்டு அந்தந்த இடங்களில் தூக்கிலிடப்பட்டனர்.

## அரசியல் விளைவுகள்

'ஆட்சிசன் நடவடிக்கைகள்' என்ற நூலில் அரசியல் பொருளாதார விளைவுகள் விளக்கியுரைக்கப்பட்டுள்ளன. இராசா, பிரிட்டிஷ் அரசுக் குரிய செலவினைச் செலுத்தி வந்தார். கொல்லத்தில் பிரிட்டிஷ் படைப் பிரிவு நிறுத்தப்பட்டது. உள்நாட்டு அரசியல் விவகாரங்களிலும் ஆங்கி லேயர் தலையிட்டு வந்தனர். 1811இல் ராசா மாண்டதும் லட்சுமிராணி பட்டத்திற்கு வந்தார். இது இங்குள்ள அரசமரபாகும். இவர் 1814 வரை ஆளும் போது கர்னல் மன்றோ அதிகாரியாக விளங்கினார். ராணியின் மூத்த மகன் ஆண்ட போது பிரிட்டிஷாரின் அதிகாரமும் நடைபெற்று வந்தது.

## செங்கோட்டை

செங்கோட்டையைப் பற்றிய குறிப்புகளையும் இத்துடன் இணைத்துள்ளேன். பிரிட்டிஷ் அரசுக்குக் கர்நாடக நவாபால் 1801 இல் திருநெல்வேலி விட்டுக் கொடுக்கப்பட்ட போது திருவாங்கூரின் ஒரு பகுதியான செங்கோட்டை மாவட்டத்தையும் தன் ஜமீனுக்குள் உரிமை கொண்டாடினார். திருவாங்கூர் இராசாவும் இதனை ஒப்புக் கொண்டு திறை செலுத்தினார்.

திருவாங்கூர் மன்னர் செங்கோட்டையை நவாப்பின் ஜமீனுக்குள் தொடர்ந்து விட்டுவைக்க விரும்பவில்லை. மாதவராவின் கூற்று கீழே தரப்பட்டுள்ளது. கர்நாடக நவாபின் தளபதியான முகமது யூசுப்பின் வெறுப்புக்கு ஆளாகி ஆங்கிலேயர் துணையால் தூக்கிலிடப்பட்டார். திருவாங்கூர் யூசுப்கானுக்கு நட்பாக இருந்ததால் நவாப் பழிவாங்குவதற் காகச் செங்கோட்டையையும் களக்காட்டையும் கர்நாடகத்துடன்



சேர்த்துக் கொண்டார். மானிகபட்டா தூதுவராக ஆங்கிலேயர் துணை யுடன் இவற்றை மீட்க சென்னைக்கு அனுப்பப்பட்டார். நவாப் வெற்றி பெற்றார். 3000 வெள்ளாளக் குடும்பத்தை இழப்பீடாகப் பெற்றார். பின் 8,00,000 ரூபாய் பிரிட்டிஷ் அரசுக்குச் செலுத்தப்பட்டது.

இதனை மேற்கண்ட கூற்றால் அறியலாம். இதனால் இரு பிரிவுக்குள் யார் ஜமீன்தார் என்று போராட்டத்தைக் காணலாம். முகமது யூசுப்கான் 1764இல் தூக்கிலிடப்பட்டார். செங்கோட்டைக்கும் நவாப்புக்கும் உள்ள தொடர்பு 37 ஆண்டுகளாக நீடித்தது.

## பிற்சேர்க்கை - II

### 1810-12ஆம் ஆண்டுகளில் திருநெல்வேலியில் வெள்ளப் பெருக்கும் கொள்ளை நோயும்

1810 ஆம் ஆண்டு டிசம்பர் 6 ஆம் தேதி திருநெல்வேலியில் ஒரு வெள்ளப் பெருக்கு நிகழ்ந்தது. கலெக்டர் ஹீப்ரு (Heburu) அவர்கள் இதனை 'மக்கள் நினைவை விட்டு அகலாத சம்பவம்' என்று குறிப்பிடுகிறார். பல்வேறு இடங்களில் ஆற்றின் கரைகள் உடைபட்டன; குளங்களும் கால்வாய்களும் சேத மடைந்தன; ஆழ்வார் திருநெல்வேலியில் 500 வீடுகள் வெள்ளத்தில் அழிந்து போயின.

1811 ஆம் ஆண்டு மார்ச் மாதம் கலெக்டர் ஓர் அறிக்கை வெளியிட்டார். 'பிப்ரவரி இறுதியில் 100 நாட்கள் கடுமையான மழை பெய்தது' என்று அவ்வறிக்கை கூறுகிறது: அது மழைக்கும் வெள்ளத்திற்கும் உரிய காலமன்று எனவும் அதனால் கடற்கரை மக்களையும் பிற மக்களையும் வெகுவாகப் பாதித்தது எனவும் குறிப்பிடுகிறார் கலெக்டர்.

ஏப்ரல் 6 ஆம் தேதி கலெக்டர் மற்றுமொரு அறிக்கை வெளியிட்டார். பிப்ரவரி, மார்ச், ஏப்ரல் ஆகிய மூன்று மாதங்கள் தொடர்ந்து பெருமழை பெய்ததாகவும் அதனால் கொள்ளை நோய் உருவானதாகவும் அறிக்கை கூறுகிறது. செவ்வமருதூரில் 50 வீடுகளில் கொள்ளை நோய் வந்து ஆளற்றுப் போனதாக கலெக்டரின் உதவியாளர் கூறுகிறார். இன்னொரு ஊரில் பலர் இறந்துவிட சிலர் ஊரைவிட்டே போய்விட்டதாக அறிகிறோம். பல இடங்களில் விளைந்த கதிர்களை அனுப்புவதற்கும் ஆளற்ற நிலை உருவானது.

கொள்ளை நோய்க்கு இருவகைக் காரணங்கள் கூறப்பட்டன ஒன்று, கடற்கரை ஓரத்தில் உள்ள உப்பின் நெடி இந்நோயை உருவாக்கியிருக்க வேண்டும். இரண்டு, திண்டுக்கல், மதுரை, கோவை ஆகிய இடங்களில் முதலில் இந்நோய் உருவாகி பின்னர் இம்மாவட்டத்திற்குப் பரவி வந்திருக்க வேண்டும். பழனிக்குச் சென்ற பக்தர்கள் அங்கேயே மாண்டனர். இந்நோய் மலைகளின் சுற்றுப்புறத்தாலேயே உருவாகியிருக்க வேண்டும் என்பது பொதுமக்களின் கருத்தாகும்.



மருத்துவக் குழு ஒன்று அமைக்கப்பட்டு மாவட்டந்தோறும் கொள்ளை நோயின் நிலை ஆராயப்பட்டது. பவானியில் இக்குழு 1811 ஆம் ஆண்டு மே மாதம் 8 ஆம் தேதி கூடி நோய் தடுக்கவும், நோயினின்றும் பாதுகாப்புப் பெறவும் வழிமுறைகளை ஆராய்ந்தது. மக்கள் மிகவும் ஏழைகளாக மருத்துவக் குழுவின் சிபாரிசுகளை ஏற்றுச் செயல்படுத்த முடியா நிலையில் இருந்தனர். நிலை மட்டத்தினின்றும் உயரமாக வீடுகளைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்றும், கம்பளியால் போர்த்துக் கொண்டு கட்டில்களில் தூங்க வேண்டும் என்றும், சூடு தரும் ஆடைகளையும் செருப்புகளையும் அணிய வேண்டும் என்றும் அதிகாலையில் வெளியே செல்லக் கூடாதென்றும் நல்ல உணவை உண்ண வேண்டும் என்றும் மருத்துவக் குழு கூறியது.

திண்டுக்கல்லில் 9 மாதத்திற்குள் 34,000 பேர் கொள்ளை நோயால் மாண்டனர். சில இடங்களில் 13% மக்களும் சில இடங்களில் 50% மக்களும் மாண்டனர். மதுரையில் 1811, 1812 ஆகிய இரு ஆண்டுகளிலும் கொள்ளை நோய் வெகுவாகப் பாதித்தது. இராமநாதபுரத்தில் 1812 டிசம்பர் முதல் 1813 பிப்ரவரி வரை ஆறில் ஒரு பங்கு மக்கள் கொள்ளை நோயால் மாண்டனர்.

### 1811 இல் வருவாய்த்துறைக்குக் கலெக்டர் ஹீப்ரு எழுதிய கடிதங்கள்

இக்கடிதங்களின் பொருளான கொள்ளைநோய், பிப்ரவரி மாதத்தில் முக்கியத்துவம் பெற்று அனைவரது கவனங்களையும் கவர்ந்தது. இந்நோய் முதலில் ஸ்ரீவில்லிபுத்தூர் மாவட்டத்தில் தோன்றியது. பிறகு தென்புறமாகப் பரவி கடற்கரை ஓரமாகப் பரவியது; பஞ்சமால், களக்காடு ஆகிய தாலுக்காக்களில் பேரழிவு செய்தது. ஒவ்வொரு தாலுகாவிலும் உள்ள நோயின் தன்மையை அறிய ஒரு குழு நிறுவப்பட்டது.

மருத்துவக் குழு இதுபற்றிப் புலனாய்வு செய்தது. விஞ்ஞானத்தின் உதவியால் திருப்திகரமான சுகாதார நடவடிக்கைகளை எடுத்தனர். ஒரு குறிப்பிட்ட கால நிலையே இந்நோய்க்குக் காரணம் என்று கண்டனர். இக்குழு டிசம்பர் இறுதிக்குள் வீடுகள் அழிவுற்ற நிலையையும் கணக்கெடுத்தது. இவ்வழிவு மிகப் பெரியது. மழைக்குப் பின்னர் காலநிலை மோசமாக இருந்தது. பனி, இரவின் முற்பொழுதிலும் விடியலிலும் கடுமையாக இருந்தது. இரவில் வெளிவரும் வெப்பம் வீட்டுக்கு வெளியே உறங்கும் மக்களுக்குக் காய்ச்சலைத் தந்தது. மழையால் மக்கள் வீடுகளை இழந்து உறைவிடமின்றித் துன்பப்பட்டனர். இம்மழை

3 மாதங்கட்குத் தொடர்ந்தது. இதனை எதிர்த்து வாழ்க்கையை அமைக்க முடியாமல் துன்புற்றனர். வீடுகளில் தங்க முடியவில்லை; தானியங்களை உலரவைக்க முடியவில்லை. இம்மழையில் ஏழைகளே, குறிப்பாக குடிசைகளில் வாழும் கள் இறக்குவோர் பெரிதும் பாதிக்கப் பட்டனர். செல்வமிக்கவர்கள் நல்ல வீடுகளில் வசதியுடன் இருந்தனர்.

இதுபோன்ற பல காரணங்களால் மதுரை திண்டுக்கல் போன்ற பல இடங்களில் கொள்ளை நோய் தோன்றிப் பரவியது. திண்டுக்கல் மாவட்டத்திலுள்ள பழனிக்குச் சென்று வந்த பக்தர்களால்தான் இந்நோய் பரவியிருக்க வேண்டும் என்று நம்பினர். ஆரம்பத்தில் இந்த நோய் தடுக்க முடியாதபடி அமைந்தது. ஒரு நாள் இந்நோய் ஒருவரைப் பிடிக்கும் மறுநாள் வலிப்பு ஏற்படும்; பொதுவாக மூன்றாம் நாள் மரணம் ஏற்படும். மரணத்தினின்றும் தப்பித்ததால் ஒன்பது நாள் அல்லது ஒரு மாதத்தில் நோயின் தாக்குதல் அதிகமாக இருக்கும். முதலில் இந்நோய் திரும்ப வரின் பகலில் மட்டுமே இருக்கும். ஆனால் அதற்கு பின் மறு நாளும் திரும்ப வரும். பின்னர் இரத்த வாந்தி ஏற்படும். இவ்வாறு நோயின் தன்மைகள் என்னால் கணிக்கப்பட்டன. இது சரியோ தவறோ மருத்துவர்களின் குறிப்புகளும் இவ்வாறே அமைந்திருந்தது. இவ்விஷ யத்தில் அவர்கள் அக்கறையுடனும் ஆர்வத்துடனும் செயற்பட்டனர்.

இறுதிப் பத்து நாட்களுக்குள் காற்று அடங்கியது. காலச் சூழ் நிலையின் மாறுதல் நோய்க்கு ஒரு மாற்றத்தைத் தருமென்று மக்கள் நம்பினர். நோய் தடுக்கப்பட்டது; கொடூரமான சாவு குறைக்கப்பட்டது. இவ்வாறு நோயால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட மக்களால் தங்கள் அன்றாட வேலைகளைச் சரிவர செய்ய முடியவில்லை. சில குடும்பத்தில் அத்தனை பேரும் நோயால் பாதிக்கப்பட்டனர். காற்று நிலை குறைந் தாலும்கூட நோயின் தன்மை முழுவதும் மாறவில்லை.

இதற்குமுன் இதுபோன்ற நோய்க் கொடுமை நிகழ்ந்துள்ளதா என்று விசாரணை செய்த போது மக்களிடமிருந்து 34 ஆண்டுகளுக்கு முன்னர் இது போல் நிகழ்ந்ததாக அறிந்தேன். ஆனால் இதுபோல அது அவ்வளவு கொடூரமாக இல்லை. ஊர்மியின் 'இந்துஸ்தான் வரலாறு' என்ற நூலின் பழைய பதிப்பில் 201 ஆம் பக்கத்தில் இரண்டாம் பத்தியில் இது பற்றிய குறிப்புண்டு. 1957 ஆம் ஆண்டு மார்ச் மாதம் திருநெல்வேலியில் இரண்டு நாட்களாக மழை பெய்தது. அறுவடை பாதிக்கப்பட்ட, பல குடும்பங்களைக் கொள்ளை நோயால் சாகடித்தது. இரண்டு நாள் மழைக் கொடுமை பெரிதென்றால் 3 மாத மழை நிலையைக் கேட்கவா வேண்டும்.

இந்நோயை முதலில் விவரிப்பதற்கு முன்னர், பிப்ரவரி மாதத்தில்



ஸ்ரீவில்லிப்புத்தூரில் பொதுவாக நோய் தோன்றியுள்ளது என்றுதான் கலெக்டருக்கு அறிக்கை சென்றது. பின்னர் அங்கிருந்து மலை யருகிலுள்ள கிராமங்களுக்கு நோய் பரவியது. மார்ச் 26க்குள் மாவட்டத்தின் அனைத்துப் பகுதிகளிலும் பரவி விட்டது. தாசில்தார் தனது அறிக்கையில் குறிப்பிடும்போது சில கிராமங்களிலும் அறுவடை நடக்காமல் வயல்கள் விடப்பட்டுள்ளன என்றும் பல இடங்களிலும் மக்கள் குடிபெயர்ந்து விட்ட தால் முறையாக வரிவசூல் செய்ய இயலவில்லை என்றும் குறிப் பிடுகின்றார்.

ஸ்ரீவில்லிப்புத்தூரிலிருந்து மலைவழியாக இந்நோய் தென் காசிக்குப் பரவி அங்கும் கடுமையாகப் பாதித்தது. பிப்ரவரி இறுதியிலும் மார்ச் முதலிலும் பல இடங்களில் பரவி வந்தது. நாளொன்றுக்கு 10 அல்லது 15 என்ற விகிதத்தில் இறப்பு நிகழ்ந்தது என்றும் சில கிராமங் களில் மக்கள் குடிபெயர்ந்த மாவட்டத்தை விட்டே விலகிவிட்டனர் என்றும் தாசில்தார் கூறுகிறார். அறுவடை செய்வதற்கு ஆளில்லாமல் வயல்கள் விடப்பட்டுள்ளன. தாலுகாதோறும் மக்கள் தொகை குறைந்து விட்டது.

பிரமதேசபுரத்தில் மக்கள் நவம்பர் மாதத்தில் நோய்ப்பட்டனர். மார்ச் மாதம் வரை இந்நோய் குறைவுபடாமல் இருந்தது. தாசில்தார் தமது அறிக்கையில் பல ஊர்களில் நோய்ப்பட்டோர்களைக் கவனிப்பதற்குக் கூட ஆளில்லாமல் இருந்தது. கடையத்தில் ஆயிரம் மக்களுக்கு மேல் நோயில் மாண்டனர். இங்கு 40 பிராமணக் குடும்பங்கள் இருந்தன. 26 குடும்பங்கள் குடிபெயர்ந்தன. 6 குடும்பம் அழிந்தது. ஏனையோர் இறந்தனர் என்கின்றார்.

சேரன்மாதேவியில் இந்நோய் சிறிது பிந்தி வந்தது. ஏப்ரல் மாதத்தில் இந்நோய் உச்சநிலையை அடைந்தது. மிகப் பெரிய அளவில் மக்கள் நோயால் பாதிக்கப்பட்டாலும் ஏனைய மாவட்டங்களை நோக்க இங்கு குறைவுதான்.

நெல்லையம்பலத்தில் மற்ற மலைப்பிரதேசங்களில் தோன்றியது போல ஆரம்பக் காலங்களில் தோன்றவில்லை. ஏப்ரலில் இந்நோய் அதிக மானதால் மக்கள் பலர் மாண்டனர். திருநெல்வேலி நகரத்தில் நாளொன்றுக்கு 15 முதல் 20 வரை மக்கள் மாண்டனர். வரவர இறப் பின் விகிதம் குறைந்துவிட்டது.

வேடு கிராமம், ஸ்ரீவைகுண்டம், குஸ்குத்தம், ஆழ்வார்திருநகரி ஆகிய இடங்களில் ஏனைய இடங்களைவிட மிகச் சிறிதளவே இந்நோய் பாதித்தது. இங்கு நோய் பரவினாலும் அவை மக்களின் தொழிலைப்

பாதிக்கவில்லை.

ஏற்கனவே குறிப்பிட்டபடி இந்நோய் கடற்கரைப் பகுதியில் தோன்றியது. இதைச் சரியாகக் கணித்து சொல்வதும் கடினம். டிசம்பர் மாதம் இந்நோய் தொடங்கியது. நோய்களினின்றும் பாதுகாக்கும் அளவிற்கு அவ்வீடுகள் அவ்வளவு நன்றாக இல்லை. கள் இறக்குவோரின் குடிசைகள் கடுமையாகப் பாதிக்கப்பட்டன. உப்பளங்கள் பல பொங்கி வடிந்து நாசமாயின. குமரி முனை வரை கடற்கரைப் பகுதிகள் பேரழிவுக்குள்ளாயின. களக்காட்டில் மலைப்பகுதிகளில் காய்ச்சல் கடுமையாக இருந்தது; தாசில்தார், தமது பணியாட்களும் நோயால் மாண்டதாகக் குறிப்பிடுகின்றார். பஞ்சமகால் தாலுகாவிலும் அதிக பாதிப்புகள் நிகழ்ந்துள்ளன. இந்நோய் திருவாங்கூரினின்றும் இங்கு வந்து இங்குள்ள கால நிலையால் அதிக அளவில் பரவிப் பேரழிவினைச் செய்துவிட்டது.

சங்கரன் கோயில் தாலுகாவில் மக்கள் நோயால் பெரிதும் பாதிக்கப்பட்டனர். ஏப்ரல் முடிவு வரை இங்கு நோயின் தாக்கமும் இறப்பின் விகிதமும் குறைவாகவே இருந்தது. இம்மாதம் 22 ஆம் தேதி நோயின் பாதிப்பு அதிகமானதால் மிகுதியான மக்கள் மாண்டனர்.

மேற்கண்ட குறிப்புகள் நோயின் தன்மை இம்மாவட்டத்தின் பல் வேறு பகுதிகளில் எவ்வாறு அமைந்தது என்பதற்குச் சான்றுகளாகும். இவை பொதுத்துறை அதிகாரிகளால் திரட்டப்பட்ட குறிப்புகளாகும். இவை ஏறக்குறைய முறையாகத் திரட்டப்பட்ட உண்மைகளாக இருக்கும். இப்பேரழிவுக்குட்பட்டவர்களைப் பற்றிக் கணக்கெடுக்கப் பெருமுயற்சிகள் செய்யப்பட்டன. இந்நாட்டு மக்களின் இயல்புப்படி பொதுமக்கள் சரியான புள்ளிவிவரங்களைப் பெறும்படி ஒத்துழைக்கவில்லை. நோய் தணியும் வரை பல மக்களை ஊரைவிட்டே ஒதுங்கியிருக்கும்படி செய்தது. மருத்துவக் குழு இதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தது.

★

# பிற்சேர்க்கை - III

## திருநெல்வேலி மாவட்ட நூலாசிரியர்கள்

பாண்டியநாடும் அதன் தலைநகரான மதுரையும் நூலாசிரியர்களைப் பேரளவில் பெற்றுள்ளன. இவர்களில் பெரும்பாலோர் புலவர்களாக விளங்கி இலக்கியங்கள் பலவற்றைப் படைத்துள்ளனர். தமிழ் இலக்கிய வட்டாரத்தில் மதுரையிலுள்ள சங்கம் புகழ்பெற்றுள்ளது. இச்சங்கம் கல்வி நிறுவனமாக இல்லாமல், புலவர் கூட்டமாக விளங்கியது. தங்களுக்குத் தெரிந்த தரமான இலக்கியங்களைத் திறனாய்வு செய்தனர். இங்குள்ள சங்கப் பலகை திறமான புலவர்களுக்கு வியக்கத்தக்க அளவில் விரிந்து இடம் கொடுக்கும் தன்மையுடையது. சங்கம் என்னும் வடமொழிப் பெயர், லத்தீன் மொழி தரும் 'கூட்டம்', கற்றோர் குழு' என்னும் பொருளையே தருகின்றது. மூன்று சங்கங்கள் வெவ்வேறு காலங்களில் இருந்ததாகவும், மூன்றாவது சங்கத்தில் திருவள்ளுவர் வாழ்ந்ததாகவும் மரபு வழியில் கூறுவர். நாலடியாரும் இங்கு வாழ்ந்ததாக ஒப்புக் கொண்டுள்ளனர். வள்ளுவர் என்னும் பறைச்சாதியில் தோன்றிய திருவள்ளுவர் புலவர்களுள் இளவரசனாகத் திகழ்கிறார். இவர் பறையராக இருந்தாலும் சங்கப் பலகையில் இடம் பெற்றது வியப்புக் குரியதே. இக்கதையின் உண்மை ஒப்புக் கொள்ள முடியாததாக விளங்குகின்றது. திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த புலவர்களைப் பற்றி எழுதும் நமக்கு இச்சர்ச்சை தேவையற்றதுதான். அகத்தியர் மலையைக் கொண்டிருப்பதால் திருநெல்வேலி பெருமை கொள்ளுகின்றது. இம்மலையில் அகத்திய முனிவர் 'தென் முனி' என்ற பெயருடன் வாழ்ந்து, தமிழ் இலக்கணமும், மருத்துவமும், இரசவாதமும் எழுதினார். இவற்றிற்குச் சரியான சான்றுகள் இல்லாவிட்டாலும் இவை உண்மையெனக் கருதப்படுகின்றது.

திருநெல்வேலி மாவட்டத்தினின்று தகுதிவாய்ந்த இலக்கியங்கள் பல புலவர்களால் இயற்றப்பட்டிருப்பினும், தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பான இடம் பெறும் வகையில் நால்வர் விளங்குகின்றனர்.

**நம்மாழ்வார்**

பெரிய சிற்றிலக்கியம் அல்லது திருவாய்மொழி என்பது வைஷ்ண இலக்கியத்தின் பழமையான முதன்மையானப் பகுதியாகக் கருதப்படுகிறது. இதில் மொத்தமாக 4000 பாடல்கள் உள்ளன. இவற்றில் 1000 பாடல்கள் திருநெல்வேலியை சார்ந்துள்ளன. நம்மாழ்வார் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். வைஷ்ட் அத்வைதம் அல்லது ஸ்ரீவைஷ்ணவம் என்ற அமைப்பை நிறுவிய இராமானுச ஆச்சாரியாவின் சீடர். இத்தகைய பார்ப்பன ஆதரவாளர்கள் தமிழ்நாட்டில் 'அய்யங்கார்' என்று அழைக்கப்பட்டனர். நம்மாழ்வாரின் காலத்தை கணிக்க முடியவில்லை. ஆனால் இவரது குருவான இராமானுசர் 12 ஆம் நூற்றாண்டின் இடையில் வாழ்ந்தார். நம்மாழ்வாரின் பெயரால் இங்கு ஆழ்வார் திருநகரி என்ற ஊர் உள்ளது. இது 'ஆழ்வார் திருநெல்வேலி' என்றும் அழைக்கப்படும். இவ்வூரின் பழைய பெயர் 'குறுங்கை' அல்லது 'குறுங்காபுரி' என்பதாகும். கல்வெட்டில் இதன் பெயர் 'தென்கரை' என்று குறிக்கப்படுகின்றது. ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரியின் தென்புறம் உள்ளது. இதுவும் ஆழ்வார்களின் புனித நகராகத் திகழ்கின்றது. 5600 மக்கள் உள்ள இந்நகரம் வைணவத் தலங்களுள் ஒன்று. ஆழ்வாரின் இயற் பெயர் சடகோபராகும். இது வைணவர்களிடம் தற்போது பொதுப் பெயராக விளங்குகின்றது. இவரது தந்தை கலிமாறன் பாண்டிய மன்னர்களின் வழித்தோன்றலாகும். மாறன் என்பதற்குப் பாண்டியன் என்று பொருள். நம்மாழ்வார் என்பதற்கு நமது ஆழ்வார் என்று பொருள். பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராக இருப்பினும் இவரது பாடல்கள் பெரிய திருவாய் மொழியில் நான்கில் ஒரு பங்காகும்.

**மகாபாரத மொழி பெயர்ப்பு**

திருநெல்வேலி மாவட்டத்தில் மகாபாரத மொழி பெயர்ப்பானது ஸ்ரீவில்லிபுத்தூரில் வைணவ பிராமணரான சாவபௌன அய்யங்காரால் எழுதப்பட்டது. பிறந்த ஊரால் இவர் வில்லிபுத்தூரார் என்று அழைக்கப்பட்டார். இக்காப்பியம் புகழ் பெற்ற போது இவ்வூர் திரு. ஸ்ரீ என்னும் அடையைப் பெற்றது. இப்போது 'ஸ்ரீ' என்ற அடை விலக்கப்படுமானால் பெயர் முழுமையாகாது. இப்புலவர் ஆழ்வார் என்று மதிப்புடன் அழைக்கப்படுவார். இராமாயணம் எழுதிய கம்பருக்கும் ஆழ்வார் என்ற பெயர் உண்டு. காவிய அழகில் வில்லிபாரதம் கம்பராமாயணத்தோடும், சிந்தாமணி, குறள் போன்றவற்றோடும் ஒப்புமையுடையது. இதனுடைய ஒரு பகுதி பல்கலைக் கழக மாணவர்களுக்குப் பாடப் பகுதியாக அமைக்கப்பட்டுள்ளது.

இப்புலவரின் காலம் தெரிந்து கொள்ள முடியாமல் உள்ளது.



ஆனால் இது மிகத் தொன்மைக் காலத்ததாகக் கருதப்படவில்லை. இவர் 200 அல்லது 300 ஆண்டுகளுக்கு முன்னவராக இருக்கலாம் எனப் பண்டிதர்கள் கருதுகின்றனர். மதுரையில் நாயக்கர்கள் ஆட்சி நடைபெற்ற போது இவர் வாழ்ந்திருக்கலாம். வில்லிபுத்தூர் என்பதற்கு வில்லுக்காரர்களின் புதிய ஊர் என்று பொருள். இது பற்றிப் பல புராணக்கதைகள் உள. இங்கு புகழ்பெற்ற வைணவக் கோயில் இருப்பதால் ஸ்ரீ என்னும் அடை பெற்று விளங்குகிறது இவ்வூர். இது ஆழ்வார் திருநகரிக்கு இணையான மதிப்புடைய ஊராகும். இவ்வூரில் திருமலை நாயக்கருக்கு ஒரு அரண்மனை உண்டு. இது இன்றும் உள்ளது. அரசு ஆவணங்களில் இவ்வூர் நாச்சியார் கோயில் என்று குறிப்பிடப்படுகின்றது. இங்கு 14000 மக்கள் வாழ்ந்ததாகவும் குறிப்பு உண்டு.

**பரிமேலழகர்**

திருநெல்வேலியைச் சார்ந்த பரிமேலழகர் குறளுக்கு உரை எழுதியதின் மூலம் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறந்ததொரு இடத்தைப் பெற்றுள்ளார். தன் நிலையில் உரையாசிரியராக விளங்கினாலும் இவ்வகையில் இவர் முதன்மையாக விளங்குகின்றார். இலக்கியங்களுள் திருக்குறள் சிறந்து விளங்குவது போன்று உரைகளுள் பரிமேலழகர் உரை சிறந்து விளங்குகின்றது எனத் தமிழ் மக்கள் கருதுகின்றனர். இவரது காலமும் தெரிந்து கொள்ள முடியவில்லை. இவர் திருநெல்வேலியின் வடபகுதியில் உள்ள கரிசல் காட்டில் வாழ்ந்ததாக நம்பப்படுகின்றார். இவரை ஒரு பிராமணராக வடக்குப் பகுதியில் குறிப்பிடுகின்றனர். சிலர் சாணார் அல்லாதவராக இருப்பினும் இவரைச் சாணராகக் கருதுகின்றனர். சிலர் இவரைப் பிராமணரும் அல்லர் சாணாரும் அல்லர் வெள்ளாளர் என்று கருதுகின்றனர்.

**நீதிநெறி விளக்கம்**

திருநெல்வேலி மாவட்டத்தில் மிக அண்மையில் வெளியான நூல் நீதிநெறி விளக்கமாகும். இந்நூல் நீதியைப் போதிப்பனவாக திருக்குறள் நாலடியார் போன்ற இலக்கியங்களை ஒத்து விளங்குகின்றன. இப்பாடலடிகள் தமக்கென ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. ஆனால் சில அடிகள் தகுதியிலும் தனித் தன்மையிலும் உயர்ந்து விளங்குகின்றன. பல்கலைக்கழகத் தேர்வுகளுக்கு இது பயன் படுத்தப்படுகின்றது. இந்நூலாசிரியர் சைவ மதத்தினர், வேளாளச் சாதியினர் குமரகுருபர தம்புரான் என்று அழைக்கப்பட்டார். தம்புரான் என்பது சைவ மடத்தின் தலைநகர் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றது. இவர் இந்த மதத்தின் மடத் தலைவராக இல்லாவிடினும் மதிப்பிற்குரியவராக

வழக்கம் உண்டு எனக் கருத இடமுள்ளது. இதில் மண்டையோடானது கழுத்துப் பகுதியிலே இருந்தது. என்றாலும் தோள்பட்டைப் பகுதி எவ்வாறு தாழிக்குள் நுழையும் என்று வியப்பாக உள்ளது. இவ்வெலும்புகள் வெளியே எடுக்கப்படும் போது நொறுங்கிவிடுகின்றன. எதுவுமே பாதுகாக்கப்படவில்லை. ஆனால் பெரியவரின் மண்டையோடும், பற்களும் கிடைத்துள்ளன. டாக்டர் பிரைசர்ஜன் (Fry Surgeon) தன்னுடைய ஆய்வின் மூலம் திருவிதாங்கூரிலிருந்து கூறுகிறார்: அரைக்கும் பற்களும், முன் பற்களும் தானியங்கயும், மற்ற வகை உணவுகளையும் புசித்ததால் சிதைந்து போன நிலையில் கிடைத்துள்ளன. நான் கண்ட வேறு சில தாழிகளிலும் இது போன்ற நைந்துபோன பற்களைக் கண்டேன். இதனால் பிணம் எரிக்கப்படாமல் புதைக்கப்பட்டது எனக் கருதலாம்.

இத்தாழிகளில் மனித எலும்புகளுடன் சில சிறிய மட்பாண்டங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. சில இடங்களில் தாழிகளின் வெளிப்புறங்களில் சிறிய மட்பாண்டங்கள் அடுக்கப்பட்டுள்ளன. அனைத்து மட்பாத்திரங்களும் நாகரிகமிக்கனவாக உள்ளன. டாக்டர் ஹண்டி (Dr. Huntei) இதை ஆராய்ந்துள்ளார். எனக்கு இப்பாண்டங்கள் பளபளப்பாக்கப் பட்டவையாகத் தோன்றுகின்றன. அதிகப்படியாக இந்த மட்பாண்டங்கள் கருப்பு வண்ணத்தில் உள்ளன.

ஒரு தகட்டுப் பாளத்துடன் 5 சிறிய மட்பாண்டங்கள் கிடைத்த போது அவற்றை அங்குள்ள மக்களிடம் காட்டினேன். அவர்கள் அதனை எண்ணெய்க் கலயத்துடன் ஒப்பிட்டுரைத்தனர். அப்பாண்டங்களின் பயனை அறிந்து கொள்ள முடியவில்லை. தற்போது இதுபோன்ற பாண்டங்கள் வெங்கலத்தால் செய்யப்படுகின்றன. தாழியில் இது போன்ற பாத்திரங்கள் வெங்கலத்தில் வைக்கப்படுவதற்குக் காரணம் இறந்தபின்னரும் ஆவி வாழ்ந்து உண்பதும் பருகுவதும் உண்டு என்று நம்பிக்கை கொள்வதுதான். தாழியின் வாயில் தேங்காய் அளவுள்ள வட்டமான கல்லால் மூடப்பட்டுள்ளது.

**பிறப்பிடக் கொள்கைகள்**

அக்காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு இக்கல்லறை அடக்கத்தின் பயனும் முறைகளும் தெரிந்திருக்கவில்லை. அவர்களுக்குப் பௌத்தர்களையும் ஜைனர்களையும் அறிந்து கொள்ள முடியவில்லை. இங்குள்ள மக்களிடம் ஒரு புராணக்கதை வழக்கில் உள்ளது. தாழிகளைப் புதைக்கும் வழக்கமுடைய மக்கள் இக்கதையும் உண்மையானவை என நம்புகின்றனர். ஆனால் எனக்கு இது அவர்களின் அறியாமையைக் காட்டுகின்றது. திரேதாயுகத்தில் இலட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு



முன்னர் மக்கள் நீண்டகாலம் உயிர் வாழ்ந்தனர் என்றும் அவர்களுக்கு இறப்பில்லை என்றும் நம்பினர். ஆனால் வயது ஆகஆக உருவம் குறுகிக் கொண்டே போகும் - மிகவும் குறுகிப் போனவுடன் மக்கள் அவர்களை மாடக்குழிகளில் வைத்திருப்பர். அவர்களுடன் ஒரு விளக்கும் பொருத்திவைக்கப்பட்டிருக்கும். பிறகு முதியவர்கள் துன்புற்றால் அவர்களை ஜாடிக்குள் வைத்த சிறிய பாத்திரங்களில் உணவும் நீரும் வைத்து ஊருக்கருகில் புதைத்துவிடுவர். இத்தகைய பழங்கதைகளை மக்கள் பேசி வருகின்றனர்.

**பெயர்களைப் பற்றிய பொருள் விளக்கங்கள்**

இத்தாழிகளுக்குத் தமிழில் வழங்கப்படும் பெயர் அதன் தொன்மை நிலை குறித்து தெளிவான விளக்கத்தைத் தரவில்லை. இப்பெயர் இத்தாழியின் அமைப்பை விளக்குகின்றது. தமிழகராதி இதனை முதுமக்கடாலி என்று குறிப்பிடுகின்றது. பொது மக்கள் இதனை முதுமக்கள் தாழி என்று குறிப்பிடுகின்றனர். இரண்டுக்கும் ஒரே பொருள் தான். தாழி என்றால் கொதிப்பிற்குரிய பெரிய ஜாடி என்று பொருள். ஜாடிக்குள் வைத்திருக்கும் முதுமக்கள் சிலவேளைகளில் ஜாடியின் வெப்பம் தாங்கமுடியாமல் வெளியே வந்து ஜாடிக்குள் அமர்வதாகச் சிலர் கூறுவர். 'மதோன் மத்தா' என்றால் பித்துப் பிடித்து என்று பொருள். ஆனால் தமிழில் மிகப் பெரிய என்ற பொருளிலும் இச்சொல் கையாளப் படுகின்றது. இதனைப் பஞ்சதந்திரக் கதையின் தமிழ் வடிவத்தில் காணலாம். சரியாகத் தமிழ் பேசுபவர்களைவிட பொதுமக்களின் பேச்சுத் தமிழில் வழங்கும் பெரிய என்ற பொருளே பொருத்தமாகத் தோன்றுகிறது.

**புதைக்கப்பட்ட மக்கள் பிக்மிக்கள் அல்ல**

தாழிகளில் புதைக்கப்பட்ட மக்கள் யாரென்ற ஐயம் இன்னும் தீர்க்கப்பட வில்லை. ஆனால் தாழிகளின் அமைப்பையும், அதனுள்ளிருந்த பொருட்களையும் கொண்டு ஒருவாறு கணக்கிட முடியும். எனவே, இவ்வாறு புதைக்கப்பட்டவர்கள் பிக்மிக்கள் அல்ல என்றும், ஆனால் அவர்களைப் போன்ற அளவுடையவர்கள் என்ற முடிவுக்கும் வரலாம். மண்டையோடும் தற்போதுள்ள மக்களுடன் ஒப்பிடக்கூடியவை. பற்களும் தானியங்களை உண்ணும் மக்களின் பற்களைப் போன்றே சிதைந்துள்ளன. ஸ்டுவர்ட் அவர்களால் திறக்கப்பட்ட ஆதித்த நல்லூர் தாழியில் சாமை கண்டு பிடிக்கப்பட்டது. ஆனால் அதில் தானியம் மறைந்து உமிமட்டுமே எஞ்சியுள்ளது. இதே இடத்தில் என்னால் திறக்கப்பட்ட தாழியில் ஒரு சிறிய செம்பு வளையல் கிடைத்தது. செம்பு

இதற்காகத் தற்போது பயன்படுத்தப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

### மதத்தால் இந்துக்கள் அல்ல

அறியாமையுள்ள மக்கள் கிராமங்களில் வாழ்ந்திருக்கின்றனர். இவர்களின் தாழிகள் அங்கொங்றும் இங்கொன்றுமாக இல்லாமல் அதிக அளவில் நெருக்கமாக இடுகாடுபோல் கிடைத்துள்ளன. இப்பகுதியில் கிடைத்துள்ள மட்பாண்டங்களையும் இரும்புக் கருவிகளையும் ஆயு தங்களையும் காணும் போது இங்கு வாழ்ந்த மக்கள் நாகரிக மிக்கவர் என்ற முடிவுக்கு வரலாம். இன்று இதன் சுற்று வட்டாரத்தில் வாழ்கின்ற மக்களைப் போன்றே அன்றைய மக்களும் வாழ்ந்திருக்கின்றனர். இம் மக்கள் யார்? எங்கிருந்து வந்தார்கள்? ஏன் மறைந்தார்கள்? என்ற ஐயங் களுக்கு இன்னும் முடிவில்லை. இவர்கள் பிராமணீய இந்துக்கள் அல்ல என்பது என் கருத்து. ஏனென்றால் ஆரியர்கள் அறியப்படாததற்கு முன்னரே இம்மக்கள் இங்கு வாழ்ந்துள்ளனர். இதனால் இத்தாழிகள் கிறித்தவ சகாப்தத்தைவிட பழமையானவை என்ற கருத்தினைக் கொள்ள முடிகின்றது.

திருநெல்வேலி, மதுரை, திருவாங்கூரிலுள்ள வடக்கு தெற்குப் பகுதிகள் ஆகியவற்றில் கண்டெடுக்கப்பட்ட தாழிகள் இப்பகுதியின் வரலாற்றில் பல புதிய உண்மைகளைத் தந்துள்ளன. மற்ற பகுதிகளில் கிடைத்துள்ள தாழிகளை அறிந்து கொள்ளவும் ஆர்வமுடையவனாய் இருக்கிறேன்.

•

## பிற்சேர்க்கை – V

### கொற்கையிலும் காயலிலும் புதை பொருள் ஆய்வு

பல இடங்களில் ஆய்வு செய்ததில் இணக்கமான முடிவுகளைத் தொகுத்து 1877 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 'இந்தியன் ஆண்டிகுயரில்' வெளிவந்த கட்டுரையை மேற்கோள் காட்டுகிறேன்.

### கொற்கையை அடையாளம் கண்டது

பல ஆண்டுகளுக்கு முன்னொரு நாள் கொற்கையைப் பார்வை யிடச் சென்றேன். அதுவொரு அவசரப் பயணமாக இருப்பினும் கூட அங்கு அறிந்ததை வைத்து ஒரு முடிவுக்கு வருகிறேன். தற்போது இவ் விடம் குறிப்பிடத்தக்கதன்று. என்றாலும் இது கிரேக்கர்களால் பெரிதும் போற்றப்பட்டது. கிறித்துவின் பிறப்புக்குப் பின்னர் கிரேக்கர்கள் இங்கு முத்துக்களை வாங்கினர். பல ஆண்டுகளுக்கு முன்னர் இது முத்து வணி கத்தின் தலைமையிடமாக விளங்கியது. கோடி எனப்படும் இராமேசுவரத் துடனும் கன்னியாகுமரியுடனும் இது வணிகத் தொடர்புடையது. இதனை மக்கள் மன்னர் வளைகுடா என்று குறிப்பிட்டனர். வணிகர்கள் கொற்கையைச் 'சங்கின் தொட்டில்' என்று குறிப்பிடுவர். இங்கு சேர சோழ பாண்டியர்கள் சகோதரர்களாகப் பிறந்தார்கள். பிறகு மூவரும் மூன்று சாம்ராஜ்யங்களை உருவாக்கினர். பாண்டியர்கள் முதலில் கொற் கையைத் தலைநகராகக் கொண்டனர். பின்னரே மதுரையைத் தலைந கராகக் கொண்டனர். கொற்கை என்பதற்குப் படைகளின் கூடாரம் எனப் பொருள்.

**காயல்:** கொற்கைக்கும் கடலுக்கும் இடையில் பழைய காயல் உள்ளது. இதனை மார்க்கோபோலோ ஒரு முக்கிய நகரம் என்றும் கிழக்குக் கடலின் துறைமுகம் என்றும் குறிப்பிடுகின்றார். இவ்விடங்கள் ஒரே காலத்தில் ஆய்வு செய்யப்பட்டது. இரண்டும் தாமிரபரணியின் கரை வெளியில் உள. கடலிலிருந்து கொற்கையும் காயலும் முறையே 5, 2 மைல் தூரத்தில் உள. கொற்கை, கடல் வாணிகத்திற்கும் ஏற்றவகையில் இயற்கை அமைப்புடன் விளங்குகின்றது. காயல் சீனா, அரேபியா போன்ற நாடுகளுடன் வாணிகம் செய்தது என்பதை இங்கு கிடைத்துள்ள

உடைந்த மட்பாண்டங்கள் மூலம் அறியலாம்.

### இரு இடங்களிலிருந்தும் கடல் பின்வாங்கல்

காலமாற்றத்தால், காயல் கடலைவிட்டு விலகிவிட்டது. போர்த்துக்கீசியர்கள் தூத்துக்குடியில் குடியமர்ந்தனர். தூத்துக்குடிதான் திருநெல்வேலி மாவட்டத்தில் தலைமைத் துறைமுகமாகும். இங்குத் துறைமுகத்தின் அருகில் ஆறில்லை. காயலைப் போன்று கொற்கை அவ்வளவு சிறப்பான வாணிகத்தளமாக இல்லாவிட்டாலும் ஒரு காலத்தில் அதற்கு இணையாக விளங்கியது எனலாம். இதனை இங்கு கிடைத்துள்ள மட்பாண்டங்களால் அறியலாம். கொற்கையில் பரவலாக இவை கிடைத்தாலும் இதன் அருகிலுள்ள அக்கசாலையில் அதிகம் கிடைத்துள்ளன.

### கொற்கையில் புதை பொருளாய்வு

இங்கு ஆய்வு நடந்த போது நான் கோவிலின் சுவரைக் கண்டேன். 12 கூலிகள் மூலம் 4 நாட்கள் இங்கு தோண்டும் வேலை நடைபெற்றது. ஆர்வத்துடனும் மகிழ்ச்சியுடனும் இவ்வேலை எனது உதவியாளின் மேற்பார்வையில் நிகழ்ந்தது. இம்மாவட்டத்துக் கலெக்டர் எனக்கு ஒரு வேலையாளை மக்களிடமிருந்து தொல்லை வராமல் பார்த்துக் கொள்ள அனுப்பினார். அவர்கள் விரும்பாவிட்டாலும் பயன் மூலம் கிடைக்கும் பொருளின் பட்டியலை அனுப்பி வைத்தேன்.

### கொற்கையின் புவியியல்

கொற்கையில் கிடைத்துள்ள பழமைச் சின்னங்களைவிடப் புவியியல் அமைப்பே வியப்புக்குரியது. இது தாமிரபரணி கரையில் உள்ளது. இது மிகப் பள்ளமான கடற்கரைப் பகுதியாகும். ஆற்று வண்டலால் மேல் பகுதி களிமண் படிந்துள்ளது. ஆழ்கடல் சங்குகளும் படிந்துள்ளன. உழவுத் தொழிலுக்குப் பயன்படாத நிலமாகவும் விளங்குகின்றது. மாறமங்கலத்தின் சாலையில் நடக்கையில் சங்குகள் காலைக் குத்துவதுண்டு. இந்நில அடுக்கின் ஆழம் சராசரி ஆறு அடிக்குமேல் இராது. குளத்தின் ஆழம் 3 அடிக்கு மேல் இராது. உப்புக் கற்களும் ஏராளமாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. உடைபடாத சிப்பிகளும் இப்பரப்பில் நிறைந்துள்ளன. பல விநோதமான சிப்பிகளும் பழைய கடற்கரைப் படுகையில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

### சிப்பிகளின் அண்மைக்காலத் தோற்றம்

இங்கு கிடைத்துள்ள சிப்பிகள் சில மிக அண்மைக்காலத்தில் உயிர் வாழ்ந்தது போன்று தோற்றமளிக்கின்றன. இங்கு மக்கள் ஏறக்



குறைய 2500 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்திருக்க வேண்டும். இதற்கு பல ஆண்டுகளுக்கு முன்னரே இந்நிலப் படிவு ஏற்பட்டிருக்க வேண்டும்.

### கிரேக்கச் சுவடுகள் இல்லை

காயல் போன்ற இடங்களில் எனக்குக் கிரேக்கச் சுவடுகள் கிடைத்தது. கொற்கையை அகழ்வாய்வு செய்யும்போது நான் கிரேக்க அடையாளங்களை எதிர்பார்த்தேன். எனக்கு ஏமாற்றமே கிடைத்தது. முன்னைய நிலமட்டம் தற்போது உள்ளதைவிட 8 அடிக்குக் கீழே இருந்தது. நிலத்தைத் தோண்டி எடுக்கும்போது மனித குடியிருப்புகளும் மட்பாண்டங்களும் கிடைத்தன. எதுவும் தமிழர்களுடையதாக இல்லை. இரண்டு சிங்கள செப்புக் காசுகள் கண்டெடுக்கப்பட்டன. ஆனால் கல்வெட்டு எழுத்துக்கள் தெளிவற்று மங்கியுள்ளன.

### புத்தர் சிலைகள்

அமர்ந்த நிலையிலுள்ள புத்தர் சிலைகள், ஒன்று ஊரினுள்ளும் மற்றொன்று வயல்வெளியிலும் கிடைத்துள்ளன. பிறமதக் கடவுளாக இருப்பினும் இங்கு வணங்கப்பட்டிருக்கின்றனர். இவ்வாறு வெளியே எடுத்த சிலையிலும் ஒருவர் மாலையிட்டு வழிபட்டார்.

### முதுமக்கள் தாழி

இங்கே மூன்று முதுமக்கள் தாழிகள் கண்டெடுக்கப்பட்டன. இங்குள்ள மக்கட்கு இதுபற்றிய அறிவு எதுவுமில்லை. ஐரோப்பியர்கள் இங்கு முன்னாளில் வாழ்ந்த இனம் அழிந்திருக்க வேண்டும் என்று நம்புகின்றனர். இதற்கு வேறு சான்றுகள் கிடைக்கவில்லை. சாதாரண பாண்டங்களை விட இத்தாழிகள் சிறப்பான முறையில் செய்யப்பட்டுள்ளன. இதனுள் கிடைத்த பிற பாத்திரங்கள் அழகாக உருவாக்கப்பட்டுள்ளன.

### வியப்பூட்டும் மனித எலும்புகள்

இரு தாழிகளில் எலும்புகள் இல்லை. ஆனால் எலும்புத் துகள்களும் மண்டையோடும் கிடைத்தன. இங்கு வாழ்ந்த மக்களின் பழக்கத்தை இது காட்டுகின்றது. மண்டையோடுகளில் உப்புக் கற்கள் நிறைத்துவைக்கப்பட்டிருந்தன. இங்குள்ள மக்கள் இதனை வியப்புடன் வேடிக்கை பார்த்தனர். எனது கூடாரத்திற்கு ஒரு பெண் வந்து பார்த்துச் சென்றது விந்தையானது.

### காயலில் புதை பொருளாய்வு

நான் பழைய காயலை இருமுறை பார்வையிட்டேன். ஒரு நாள்

ஒன்பது இடங்களில் நிலத்தைத் தோண்டிப் பார்த்தேன். மூன்று அடிக்குக் கீழே வீட்டின் தளம் தென்பட்டது. முக்கியமான எதுவும் கிட்டவில்லை. ஒரு நாளுக்குரிய மிகச் சிறிய வேலை இது. ஆனால் ஒரு மாதமாக வேலை நடந்தது. அங்குள்ள முழுப் பரப்பையும் ஆராய்ந்ததன் மூலம் எனக்கு மார்க்கோபோலோவும், முகமதிய வரலாற்றாசிரியனும் வணிகத் தொடர்பாகக் கூறியது உண்மையென்பது புலனாகின்றது.

### சீன அரேபிய மட்பாண்டங்கள்

அரேபியா சீனா போன்ற நாடுகளிலிருந்து மட்பாண்டங்கள் தருவிக்கப்பட்டதாக மார்க்கோபோலோ குறிப்பிடுகின்றார். திறந்த வெளிகளில் உடைந்த சீன அரேபிய பாண்டங்களைச் சேகரித்தனர். ஒரு வண்டி நிறைந்த பாண்டங்கள் கிடைக்குமெனினும் மாடுகளின் குளம்புப் பட்டும் ஏர்க்கால் பட்டும் அவை நொறுங்கின. எனவே, பாண்டங்கள் முழு வடிவில் கிடைக்காமல் போயின. பழைய காயலில் தற்போது லெப்பைகளும் ரோமன் கத்தோலிக்க மீனவர்களும் குடியிருக்கின்றனர்.

### குருட்டு நம்பிக்கை வாய்ந்த அச்சங்கள்

ஐரோப்பியர்கள் இங்குள்ள பழமையான பொருட்களை அகழ்வாய்வு செய்யும்போது இங்கு வாழும் மக்கள் அவற்றை பழமையாகக் கருதுவது இல்லை. மறைந்துள்ள பொருட்களை வெளிக் கொணருவது பெருமுயற்சியாகும். புதைந்துள்ள பெருஞ்செல்வங்களைக் கெட்ட ஆவிகள் காத்து வருவதாகவும், அவற்றை வெளியே எடுத்தால் அவை சினமுற்று ஊரையே அழித்துவிடும் என்றும் அச்சமுற்றனர். கோவில் அருகில் தோண்டமாட்டேன் என்று அவர்களுக்கு உறுதியளித்தேன். ஆறுமுக மங்கலத்திலுள்ள எனது நண்பர் சில ஆண்டுகளுக்கு முன்னர் பேய்களோடு சண்டையிட்ட கதையைக் கூறுவர். அவர் முன்பு திருநெல்வேலி கலெக்டருக்கு உதவியாளராக இருந்தார். முதல் நாள் அகழ்வாய்வுக்குப் பின்னர் இரவு அவர் கனவில் ஒரு பெண்பேய் வந்து மிரட்டியது. காலையில் விழித்தபோது கால்கள் இரண்டு கழுத்தைப் பின்னிக் கொண்டன; விடுவிக்க முடியவில்லை. இக்கதையை அவர் என்னிடம் சொல்லாமல் என் உதவியாளரிடம் சொன்னார்.

### அகழ்வாய்வில் வியப்புக்குரிய நிகழ்ச்சி

பல ஆண்டுகளுக்கு முன்னர் திருநெல்வேலி கலெக்டர் ஒருவர் புதையல் ஒன்றைத் தோண்டியெடுக்க முனைந்தார். அப்புதையல் பேய்களால் காக்கப்படுவதாக நம்பினர். அவர் பலரால் எச்சரிக்கப்பட்டும் ஐரோப்பியர் என்பதால் அதைப்பற்றி கவலைப்படவில்லை. முதல் நாள் வேலை முடிந்ததும் தனது கூடாரத்தில் இரவில் படுத்திருந்தார். காலையில் அவர்தம் பங்களாவின் பல மைல்களுக்கு அப்பாலுள்ள பாளையங்கோட்டையில் படுத்திருந்தார். அவரது கூடாரம் ஆற்றங்கரையில் வீசியெறியப்பட்டிருந்தது. அகழ்வாய்வு நடந்ததற்கான சுவடுகள் ஏதுமில்லை.



### அரேபிய காசுகள் கண்டெடுக்கப்படல்

சில ஆண்டுகளுக்கு முன்னர் முகமதிய தங்கக் காசுகள் திருநெல்வேலி மாவட்டத்துக் காயலின் அருகிலுள்ள சாலையில் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றில் ஒன்றைத் தவிர ஏனையவை அரேபிய நாணயங்கள். அவை கி.பி.13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. அரேபிய வணிகர்கள் இந்தியாவிற்கு வந்த போது மார்க்கோபோலோ வருவதற்கு முன்னர் 1272 இல் கொண்டு வந்தனர். புதுக்கோட்டையினின்றும் திருச்செந்தூருக்குச் சாலைபோடும் போது கூலிகளால் இவை கண்டுபிடிக்கப்பட்டன. அவ்விடம் தென் திருப்பேரிக்கும் அருகில் உள்ளது. அதன் அருகில் உள்ள நகரம் ஆழ்வார் திருநகரியாகும். காயல், காயல் பட்டினம், குலசேகரப்பட்டினம் போன்ற இடங்களில் அரேபியர்கள் தங்கியிருந்து வணிகம் செய்தனர். இங்குள்ள புதையல்கள் மக்களால் கள்ளருக்கும் கலகங்களுக்கும் பயந்து புதைத்துவிட்டு பின்னர் எடுக்காமல் விட்டவையாகும். இம்மக்கள் தங்கள் உயிருடன் உடமையான செல்வங்களையும் இழந்திருக்கின்றனர்.

1873இல் கலெக்டரால் வருமானத்துறைக்கு எழுதப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றேன். 1872 ஆம் ஆண்டு டிசம்பர் 25 இல் ஸ்ரீவைகுண்டம் அணைக்கட்டுத் திட்டத்தின் கீழ் கால்வாய் வெட்டிக் கொண்டிருந்த தொழிலாளர்கள் செப்புக்குடம் நிறைந்த தங்க நாணயங்களைக் கண்டெடுத்தனர். அச்செப்புக் குடம் ஆறு படி அளவு கொண்டது.

2. அப்புதையலின் மதிப்பு ஒரு இலட்சம் ரூபாய் ஆகும்.
3. தொழிலாளர்கள் முதலில் மறைக்க முயன்றனர். பின்னர் அது வெளியாகிவிட்டது. தாசில்தார் போய் 8000 ரூபாய் மதிப்புடைய நாணயங்களை மீட்டார். இதனை ஒரு சிறுமி தன் வீட்டினின்றும் சட்டியில் வைத்து எடுத்து மறைத்து ஓடினாள். அலுவலர்களுக்கு முன் விழுந்து சட்டி உடைந்து காசுகள் சிதறிவிட்டன.
4. ஏனையவை புதைக்கப்பட்டன. புதைத்த சுவடுகளும் அழிந்து விட்டன ஒரு காவல்காரர் 900 ரூபாய் மதிப்புள்ள காசுகளைத் தன் பங்குக்காக வைத்திருந்தார்.

5. நான் சட்டத்தின் மூலமாக அவற்றை மீட்க முனைந்தேன். முடிய வில்லை. உரிமை வழக்கு மன்றத்தில் மீட்கப்பட்ட நாணயங்கள் பாதுகாக்கப்பட்டன. வழக்கு முடிவில் அப்புதையல் கண் டெடுக்கப்பட்டவர்க்கே உரியது என்று தீர்ப்பு வந்தது.

6. அப்புதையல் கடற்கரையில் ஆழ்வார் திருநகரியினின்றும் 15 மைல் தூரத்தில் தாமிரபரணிக் கரையில் புதைக்கப்பட்டிருந்தது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் இது காயலில் புதைக்கப் பட்டிருக்க வேண்டும்.

7. அனைத்துக் காசுகளும் அரபியாவினுடையது. ஒன்று ஐரோப்பிய காசு. கி.பி.1236ஐச் சார்ந்தது. ஒன்றில் முகமதிய ஆண்டு 71 என்றும், மற்றொன்றில் முகமதிய சுல்தான் சலாவுதீன் உருவமும் பதிக்கப்பட்டிருந்தது.

**காசுகளின் வருணனை கீழே தரப்பட்டுள்ளது:**

மொத்தக் காசுகளின் எண்ணிக்கை 31 ஆகும். எழுத்துக்கள் அரேபி கூபிக். ஒன்று பீட்டர் ஆப் அராகன் காசு. இது 1276 ஆம் ஆண்டைச் சார்ந்தது. ஏனையவை 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. சில காசுகளின் காலம் ஐயத்துக்குரியவை என்றாலும் அவை 13 ஆம் நூற்றாண்டிற்கும் பிந்தியவைதான்.

Delhi

hydrabad